இல்லை   ( NOTHING ) JANUARY 2017



குறைபட்ட புலன்களால்
அறியமுற்படும் எனக்குத்தான்
நிறம் ருசி , வாசனை , சப்தம்
என்ற பேதங்களே தவிர
அறியப்படும் பொருளுக்கு இல்லை
இனிபபும் , கசப்பும்
குளிர்ச்சியும் உஷ்ணமும்
பச்சையும் , சிவப்பும்
என்னுடைய அபிப்பிராயங்களே தவிர
உண்மையானவை இல்லை
வெளிச்சம் , வெப்பம்
நிறம், உருவம் , இயக்கம் . . . . .
இன்னும் பொருட்களின்
மற்றெல்லாக் குணங்களும்
என் குறைபட்ட புலன்களால் அறிகிறேன்
புலனறிவுக்கு அப்பால்
அப்பொருட்கள் பொருட்களே இல்லை
சக்தியும் , பொருளும் ,
அணுவும் , அண்டமும்
இப்பிரபஞ்சமும்
என் மனத்தின் படைப்பு
என் மனோவிகாரத்தைக் களைந்து விட்டால் . . . . . .
இப்பிரபஞ்சமே இல்லை
இல்லை இல்லை
வணக்கத்திற்குரியவனைத் தவிர
எதுவும் இல்லை இல்லை

ரஹ்மத் ராஜகுமாரன்

+919486909903 /// 9360181033

கால வெளி ( Time space ) 29-01-2017




பொருட்கள்
அவற்றின் தோற்றத்தைப் போல்
இருப்பதில்லை
ஒன்றாக சேர வேண்டிய பகுதிகள்
ஒன்றாக சேர மறுக்கின்றன
தொடங்கங்களே
முடிவுகளாக ஆகின்றன
முடிந்த இடத்தில் அதுவாகவே
தொடங்கியும் விடுகின்றன
அறிவியல் கோட்பாடுகளை
ஒன்றாக சேர்க்கும் போது
மடமையே மிஞ்சுகிறது
வெறுமையான வெளி
வெறுமையானதாக இல்லை
கருந்துளைகள்
கறுப்பாக இருப்பதில்லை
அனைத்தையும்
ஒரு விளக்கத்திற்குள்
கொண்டு வரும் முயற்சி
துண்டாகிப் போன
காட்சியை தருகிறது
அண்டவெளி
பார்க்கும் இடமெல்லாம்
அன்னியமாக இருக்கிறது
நாலரை ஒளியாண்டு தூரத்திலுள்ள
நட்சத்திரங்கள்
நாலரை வருடங்களுக்கு முன்னாலுள்ள
நிலையை இப்போது தருகிறது
" இப்பொழுது " என்ற வார்த்தைக்கு
விளக்கமே இல்லாமல் போகிறது
முக்காலத்தில் நாம்
எக்காலத்திலிருக்கிறோம் என்பதை
வெட்ட வெளியில்
யார் சொல்ல முடியும் ?
காலம்
வெளியாகிக கொண்டிருக்கிறது
வெளி
காலமாகிக் கொண்டிருக்கிறது
இதில்
நீங்கள் நானும்
எங்கே யார் தேடுவது ?

ரஹ்மத் ராஜகுமாரன்

## புத்தகங்கள்



என்னுடைய புத்தகங்கள்
எனக்கு எப்போது
அறிமுகமாயின ?
மறுபடியும்
வேதாளம் முறுங்கை மரத்தில்
ஏறிக் கொண்டதாக
அம்புலிமாமா சொன்னார்
எங்கிருந்தோ
இரும்புக்கை மாயாவி
என்று ஒற்றை இரும்புக் கரம்
முத்து காமிக்ஸ்
புத்தகத்திலிருந்து
பறந்து வந்தது
சங்கர்லாலை தமிழ்வாணன்
அறிமுகப்படுத்திய போது
எங்க வீட்டு ஆட்டுக்குட்டி
காணாமல் போய் இருந்தது
துப்புத் துலக்க
சங்கர்லால் கூட வே வந்தார்
ஆட்டுக்குட்டி கிடைத்தது
" இன்னொரு செருப்பு எங்கே "
தேடியும் கிடைக்கவில்லை
கதை புத்தகத்திற்கு
படிக்க வீட்டில் தடை விதித்தபோது
"கடல்புறா"வையும்
"யவனராணி" யையும்
வீட்டு மொட்டை மாடியில்
யாருக்கும் தெரியாமல்
சண்டிலியன் எனக்கு மட்டும்
அறிமுகப்படுத்தினார்
பாலகுமாரன்
"மெரினா பூக்கள்" யை தந்து
இளமையையும் காதலையும்
இதமாகச் சொன்னார்
இறுதியில் அவர் ஞானி ஆனார்
நாங்களும் பாதி ஞானிகளாக்கப்பட்டோம்
அறிவியலை அழகாகச்
சொன்னார் சுஜாதா
விஞ்ஞான விதிகள்
காலேஜ் புத்தகத்திலிருந்து
"கணையாழி "க்கு கடத்தி வந்தார்
"நைலான் கயிற் "றை
இலக்கியத்தில்
இன்னும் கட்டிக் கொண்டுதான்
இருக்கிறேன்
இப்போ நிறைய
ஆங்கிலப் புத்தகங்கள்
நிறைய துப்பாக்கிகளையும்
நிறைய பயங்களையும்
நிறைய வியப்பையும் தந்தாலும்
தமிழ்வாணின் சங்கர்லாலையும்
சுஜாதாவின் கணேஷ்-வசந்த் தையும்
மறக்க முடியலை
இமாம் கஸ்லாலியை
தமிழராக்கியவர்
அப்துல் வஹாப் அவர்களையே சாரும்
இப்போ
புகாரி, முஸ்லீம் போன்ற கிதாபுகள்
இரவோடு இரவாக
எப்போ எனக்கு
விஞ்ஞானப் புத்தகங்களாக
ஆல்பர்ட் ஐன்ஸ்டீன், நியூட்டன்
ஹிப்போக்கேட்ஸ், ஆர்க்கிமிடிஸ்
அலெக்ஸிஸ் காரெல் போன்ற
விஞ்ஞானிகள்
மாற்றிக் கொடுத்து விட்டு போய் விட்டார்கள்
....... இப்படித்தான்
அறிமுகமான நிறைய புத்தகங்கள்
எனக்கு உருமாறி போயின
விஞ்ஞானமாய் ..,
✎ரஹ்மத் ராஜகுமாரன்

(பேஸ்புக் பதிவுகள் குறித்து ...)..



பேஸ்புக்கில் எழுதுவதற்கு ஓர் ஆர்வம் என்னுள் எப்போதுமே துளிர் விட்டுக் கொண்டே இருக்கிறது ! அது எனக்கு மட்டும்தானா ?
தெரியவில்லை .
அது மாத இதழ்களுக்கு கட்டுரைகள் எழுதுவதைக் காட்டிலும் முகநூலில் பதிவுகள் எழுதுவதில் எனக்கு ஒரு சௌகரியமும் இனம் புரியாத ஓர் ஆர்வமும் இருந்து கொண்டே இருக்கிறது !
முக நூலின் பதிவு அது எழுதியதும் அது கணப் பொழுதில் உலகெங்கும் விரைந்து பறந்து , அதன் பரிணாமம் விதைத்ததும் முளைத்து , பூத்து, குலுங்கி, காயாகி ,அந்த உடனேயே பழமாகி ,உண்ணவும் படுகிறது என்பது போல.....அதாவது Like , com , share . . என்று எங்கிருந்தோ பறந்து வந்து பதிவை வீரியமாய் விரிந்திருக்கச் செய்கிறது .
நேற்று பெய்த மழையில் இன்று முளைத்த காளான்கள் அல்ல முகநூல் பதிவுகள் ; நேற்று பெய்த மழையில் நேற்றே முளைத்த காளான்கள்தான் இந்த முகநூல் பதிவுகள் .
அந்த அளவுக்கு பதிவுகள் குறித்து கருத்துக்கள் மின்னல் வேகத்தில் குவிய ஆரம்பிக்கிறது.
இதேயே மாத இதழ்களில் எழுதும் போது ஒரு கட்டுரையைப் பற்றிய விமர்சனம் அடுத்த மாத இதழில் வாசகர் கடிதத்தில் ஓரிருவர் மட்டும் கருத்துச் சொல்லியோ அல்லது அந்த ஓரிருவர் சொன்ன கருத்துக் கூட இதழ்களின் இடம் பற்றாக்குறையால் போடாமல் கூட போய் விடக் கூடிய நிலை வரலாம் .
எழுத்தாளனுக்கு தன் படைப்புக் குறித்து கருத்துக்கள் தேவையாக இருக்கிறது . அது அவன் உண்ணும் ஊண் போல , அது அவனுள் பல மாற்றங்களை தருவித்து , வேறு பல தளத்திற்கு அவனைப் பறந்து போகச் செய்கிறது . எனவே உங்கள் இந்த கருத்து தேவை அடுத்தப் பதிவுக்கு சேவையாகக் கூட அது இருக்கலாம் .
நண்பர்கள் கொடுக்கும் உற்சாகம் என் உடல் பலத்தின் தகுதியையும் மீறி செய்த ஆய்வுகள் அத்தனையுமே அந்த உடனேயே உங்களுக்கு கொடுக்கும் ஆர்வம் என்னுள் இயற்கையாகவே இறக்கை கட்டி பறக்க ஆரம்பிக்கிறது . இதற்காகவே ஊமையாக இருக்கும் நண்பர்கள் வாய் பேச வேண்டும் என்ற வரத்தை இறைவனிடம் வேண்டிக் கொண்டே இருப்பேன்.
என் பதிவுகளை பார்வையிடும் உங்களின் பொன்னான நேரத்தையும் கருத்தில் கொண்டும், உங்களை வந்தடையும் மின் கற்றை அலைகள் இறைவனின் அர்ஷையயும் தொடும் என்ற இறை அச்சத்தாலும் பயனுள்ள தகவலை மட்டுமே தந்துதவ வேண்டும் என்று எனக்குள் எழுதப்படாத சுயக் கட்டுப்பாட்டு விதிகளை எனக்கு நானே விதித்திருக்கிறேன் .
அநேக பதிப்பகத்தார்கள் என் கட்டுரைகளைப் பார்த்து விட்டு ., ...
" மாத இதழ்களிலோ , பேஸ்புக்கிலோ வெளிவராத ஆய்வுக் கட்டுரைகளாக இருந்தால் , பதிப்பிக்கிறோம் "
என்னால் அது முடியவில்லை. அப்படி ஒரு தொடர் " யுத்தங்களின் யுக்திகள் "
என்று இதுவரை உலகில் நடந்த யுத்தங்களில் மனித உரிமை எவ்வாறெல்லாம் மீறப்பட்டது என்பதை சொல்லி , இஸ்லாமிய யுத்தங்களில் மனித உரிமை எவ்வாறெல்லாம் பாதுகாக்கப்பட்டதென்பதை 30 பதிவுக்கும் மேல் எழுதி ....
பதிப்பகத்தார்கள் "யுத்தங்கள் , சண்டைகள் இல்லாமல் எழுதி தர முடியுமா ?"
"உங்களுக்கு இஷ்டப்பட்ட தலைப்பை முதலிலேயே நீங்கள் சொல்லி இருக்கலாமே ..?"

" நான் எழுத்தாளன் அதுவும் ஆய்வு எழுத்தாளன் , நான் ஒன்றும் புத்தக வியாபாரி அல்ல , பேரம் பேசி எழுத்தை விற்க ... "
என் ஆய்வுகள் அல்குர்ஆனின் அறிவியல் குறித்து மட்டும் அல்லாமல், வரலாறு ,ஆன்மீகம் , கவிதைகள் என்று எண்ணற்ற பல துறைகளை என்னுள் விதைத்ததில் வலைதளத்தின் பெரும் பங்கை நன்றிப் பெருக்குடன் நினைவு கூறுகிறேன் .
செய்த ஆய்வை தமிழ் கூறும் நல்லுலவுக்கு எடுத்து சொல்ல வைத்த முகநூல் நிறுவனர் மார்க்கிற்கும் மறக்காமல் நன்றி சொல்ல கடமைப்பட்டிருக்கிறேன் .
இப் புனிதப் பணியை என்னுள்ளிருந்து சதா ஆர்வமூட்டும் என் சற்குரு
செய்யதினா அஹ்லே பைத் சுபைர் தங்கள் ஜலாலில் புஹாரி அவர்களையும் நன்றிப் பெருக்கால் நினைவு கூறுகிறேன் .
எனக்குள் ரூஹையும் ஊதி , எனக்கு எல்லாம் தந்து , என் இல்ஹாமில் சதா என்னுடன் தொடர்பு கொண்டேயிருக்கும் இறை பெரியோனுக்கும் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன் !

ரஹ்மத் ராஜகுமாரன்

மலக்குமார்கள் 16-01-2017




இப் படைப்பைப் பற்றி அநேக நண்பர்கள் அடிக்கடி கேள்வி கேட்பது உண்டு
1 அவர்கள் படைக்கப்பட்டவர்கள்
2 அவர்களுக்கு என்று குறிப்பிட்ட பண்புகள் உண்டு
3 அவர்களுக்கு உருவம் உண்டு
4 அவர்களுக்கு கடமைகள் உண்டு அவர்கள் செயல்படுவார்கள்
5 அவர்களுக்கு பெயர்கள் உண்டு வயதும் உண்டு
6 அவர்களின் எண்ணிக்கை
7 அவர்கள் எங்கே இருக்கிறார்கள் ?
8 அவர்களுக்கு மரணம் உண்டு
9 அவர்களுக்கு இறக்கைகள் உண்டு அதி வேகத்தில் பறப்பார்கள்
10 அவர்கள் அழகானவர்களும் உண்டு
. . பார்க்க பயங்கரமானவர்களும் உண்டு
11 அவர்களுக்கு நிறங்கள் உண்டு
12 அவர்கள் பிரமாண்டமான தோற்றம் மற்றும் பலசாலிகள்
13 அவர்கள் ஆண் பெண் தன்மை இல்லாததவர்கள
14 அவர்கள் உண்ண மாட்டார்கள்
உறங்க மாட்டார்கள் ஓயவும் மாட்டார்கள்
15 அவர்கள் வடிவங்கள் மாறுவர்கள
16 அவர்கள் கண்ணியமானவர்கள்
17 அவர்கள் வெட்க உணர்வு உள்ளவர்கள்
18 அவர்கள் எப்போதும் வணக்கசாலிகள்
19 அவர்கள் எழுத்தாளர்கள் உள்ளத்தில் உள்ளதையும் எழுதும் விநோத எழுத்தாளர்கள்
20 அவர்கள் மனிதர்களைப் பாதுகாக்கிறார்கள உயிரையும பறிப்பார்கள் மண்ணறையில் விசாரிப்பார்கள்
21 மூமின்களுக்காக யுத்தம் செய்வார்கள்
இப்படி எத்தனையோ விஷயங்கள் குறித்து மலக்குமார்களைப் பற்றி இன்னும் சொல்ல வேண்டியது இருந்தாலும் பத்து போஸ்ட் இவர்களைப் பற்றி சொல்லலாம் என நினைக்கிறேன் அவ்வப்போது அறிவியலையும் கலந்து ஆய்வு செய்து சொல்ல நினைக்கிறேன் இன்ஷா அல்லாஹ் அதி சீக்கிரத்தில் வருவார்கள்

மலக்குமார்கள்-2  20-01-2017
மலக்குகள் ஒளியினால் படைக்கப்பட்டார்கள்
ஆயிஷா ரலி முஸ்லிம் 5722
குர்ஆனில் ஒளியினால் படைக்கப்பட்டதாக சேதி எதுவும் இல்லை
சரி ஒளியைப் பற்றி " கண்ணுக்குத் தெரியாத ஒளிக் கூட்டங்கள் " எனற என்னுடைய போஸ்ட் 12 jan 17 நீங்கள் பார்த்து தெரிந்து கொண்டால் சுலபமாக இருக்கும்
ஒளி ஒரு செகண்ட்க்கு (விரலால் ஒரு சொடக்கு போடுங்கள் இதுதான் ஒரு செகண்ட் ) மூன்று லட்சம் கி மீ அல்லது
1,86,282 மைல் பறக்கிறது
எல்லா ஒளிகளின் வேகம் இந்த பிரபஞ்சமெங்கும் மாறால் இருக்கிறது
மண் கையில் எடுத்து பிசைந்து உருவம் செய்ய முடியும் ஆதமைப் படைத்தது அப்படிதானே அதெப்படி ஒளியிலிருந்து மலக்குகளைப் படைக்க முடியும் ?
விஞ்ஞானம் நிரூபிக்கிறது முடியும் என்று
ஃபோட்டான் என்ற துகள்களால்தான் ஒளி உருவாக்கப்பட்டிருக்கிறது ஃபோட்டான் என்பது ஒரு சிறிய ஒளித்துணுக்கு எலக்ட்ரான் புரேரட்டான் போன்ற துகள் அல்ல . சின்னதொரு சக்திப் பொட்டலம்
இந்த சக்திப் பொட்டலத்தைக் கொண்டுதான் மலக்குமார்களை இறைவன் படைத்திருக்க வேண்டும்
ஒளி அலையை ஆங்ஸ்ட்ராம் யூனிட் கணக்கில் அளக்கப்படுகிறது
ஆங்ஸ்ட்ராம் யூனிட் என்பது ஒரு மீட்டரில் ஆயிரம் கோடி பாகம்
நீங்கள் போட்டிருக்கும் சிவப்பு கலர் (சுமார் 6500 ஆங்ஸ் ) சட்டை அந்தாளு போட்டிருக்கும் நீலக்கலர் சட்டை 4500 ஆங்ஸ் யூனிட்
இப்போதைக்கு இவ்வளவு போதும் என நினைக்கிறேன் இன்னும் தெளிவாகச் சொன்னால் குழப்பம் ஏற்படலாம்
மலக்குமார்கள் ஒளியினால் அதுவும் நம் கண்ணுக்குத் தெரியாத ஒளியில் படைக்கப்பட்டிருக்கிறார்கள்

**Rahmath Rajakumaran**

ஒளியியல் பாடம் படித்தவர்கள் ஒளியின் வேகம் , ஒளி வளையாது ஆனால் சூரியன் போன்ற சக்தி பிறப்பிடத்தில் ஒளி வளையும் இது பற்றி com கொடுத்தால் எனக்கு கொஞ்சம் சௌகரியமாக இருக்கும் அடுத்தடுத்து போக ஈஸி

**Rahmath Rajakumaran**

சக்தியின் பிறப்பிடத்தில் ஒளி வளைவது மலக்குகள் இறைவனுக்கு ஸூஜுது செய்து துதிப்பதற்கு உவமை காட்டவும் மற்ற இடங்களில் எங்குமே ஒளியாது

**Rahmath Rajakumaran**

அல்லாஹ்வுக்கு மலக்குகள் ஸுஜுது செய்கிறார்கள்

திருக்குர்ஆன் 16 49

நிச்சயமாக ஃபஜ்ர் தொழுகையானது மலக்குகள் கலந்துகொள்ளும் தொழுகையாகும்

திருக்குர்ஆன் 17 : 78

**Rahmath Rajakumaran**
மலக்குமார்கள் அல்லாஹ்வின் அர்ஷின் ஒளியில் இருந்து படைக்கப்பட்டார்கள்
மகிமையும் மகத்துவமும் மிக்க ஒலியிலிருந்து (நூருல் இஜ்ஜா ) படைக்கப்பட்டார்கள்
அல்மலாஇகத்துல் முகர்ரபீன்

மலக்குமார்கள் 3
மலக்குமார்கள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள் என்பதை விஞ்ஞான பூர்வமாக போஸ்ட் 2 ல் பார்த்தோம்
ஒளியின் வேகம் நொடிக்கு 3 லட்சம் கி மீ
நிஜப்பிரபஞ்சத்தில் ஒளியின் வேகத்தை மிஞ்ச முடியாது என்பது ஐன்ஸ்டீன் சார்பியல்படி நிரூபிக்கப்பட்டது
ஒளி வேகத்தை மிஞ்சும் போது மிஞ்சும் துகளின் எடையும் அளவும் கற்பனை எண்களாகிறது
அப்படி மிஞ்சுவதாக வைத்துக் கொண்டால் இன்னொரு பிரபஞ்த்தில் சாத்தியமாகலாம் என்று 1967 ல் கொலம்பியா பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த ஜெரால்ட் ஃபெயின்பர்க் என்கிற விஞ்ஞான குறிப்பிடுகிறார்
நம் பிரபஞ்சத்திற்கு எதிர் பிரபஞ்சம் இருக்கலாம் இங்கு "டாக்கியான்" உலவ முடியும் ( டாக்கியான் என்றால் கிரேக்கத்தில் அதி வேகம் )
இந்த பிரபஞ்சத்தில் எல்லா துகள்களுமே ஒளியின் வேகத்திற்கு அப்பாலிதான் இருக்கும் ரொம்ப ரொம்ப அவசர உலகம் இங்கே விதிகள் எல்லாம் தலைகீழாக இருக்கும் புவி ஈர்ப்பாற்றல் கிடையாது புவி தள்ளுவிசை நம் பூமியின் சின்னச்சின்ன காய்கள் மிகப்பெரியதாக இருக்கும்
சித்ரத்துல் முன்தஹா என்கிற இடத்தில் சாதாரண இலந்தைப் பழம் பெரிய கூஜா மாதிரியும் அதன் இலைகள் யானையின் காதுகள் போல் பெரியதாக இருக்கிறது
ஹதீஸ் . . முஸ்லிம்
ரஹ்மத் ராஜகுமாரன்
கேரளா பாடூரிலிருந்து

**Rahmath Rajakumaran**
மலக்குமார்கள் இரண்டிரண்டு மும்மூன்று நான்கு நான்கு இறக்கைகள் இருக்கின்றன அவன் நாடினால் தன் படைப்பில் பின்னும் அதிகரிப்பான்
திருக்குர்ஆன் 35 : 01
சித்ரத்துல் முன்தஹா வில் ஜிப்ரீல் அலை அவர்களுக்கு 600 இறக்கைகள் இருந்தன

மலக்குமார்கள்4 (நிறங்கள்)
முதன்முதலில் நபிஸல் அவர்கள் ஜிப்ரீல் அலை அவர்களை பச்சை நிறத்தில் அடிவானத்தையே அடைத்தவாறு நிற்கக் கண்டார்கள் . புகாரி 3233 4858
ஜிப்ரீல் அலை அவர்கள் 600 இறக்கைகளுடன் வானத்தின் கடைக் கோடியை அடைத்துக் கொண்டிருந்தது அவரின் வண்ணமயமான இறக்கைகளிலிருந்து முத்துக்களும் பவளங்களும் உதிர்ந்து கொண்டே இருந்தன . . . . . முஸ்னது அஹமது 3748
முன்கர் மற்றும் நகீர் ஆகிய இருவரும் கருநீல நிறம் கொண்டவர்கள்
திர்மிதீ 1071

மலக்குமார்கள் 5 (எப்போது படைக்கப்பட்டார்கள்)
அபூஹுரைரா ரலி அவர்கள் கூறுகிறார்கள்
அல்லாஹ் சனிக்கிழமை மண்ணைப் படைத்தான் அதில் மலைகளை ஞாயிற்றுக் கிழமை படைத்தான் மரங்களை திங்கட் கிழமைப் படைத்தான் அவனுக்கு வெறுப்பானவைகளை செவ்வாய்க் கிழமை படைத்தான் ஒளியை புதன் கிழமைப் படைத்தான் வியாழக்கிழமை பிற உயிரினங்களைப் படைத்து பூமியில் பரவச் செய்தான் வெள்ளிக்கிழமை அஸர் மற்றும் இரவுக்கு மத்தியில் ஆதமைப் படைத்தான்
ஸஹீஹ் முஸ்லிம் 4997
புதன் கிழமை ஒளி படைக்கப்பட்ட பிறகு மலக்குகள் படைக்கப்பட்டிருக்கலாம்

மலக்குமார்கள் 6 (எண்ணிக்கை)

நரகத்தின் காவலாளிகளாக மலக்குகளையே தவிர யாரையும் ஏற்படுத்தவில்லை நிராகரிப்பவர்களைச் சோதிப்பதற்காகவே இவர்களின் எண்ணிக்கையை (பத்தொன்பதாக) ஏற்படுத்தினோம்
திருக்குர்ஆன் 74 : 31
மேற்கண்ட வசனம் இறக்கப்பட்டதும் அபூஜஹல் இதைக் கேலி செய்து "முஹம்மதிற்கு வெறும் 19 உதவியாளர்கள்தாம் " என்றான்
அப்போது இன்னொரு வசனத்தை அல்லாஹ் இறக்கினான்
(நபியே) உம்முடைய இறைவனின் படைகளை அவனைத் தவிர எவரும் அறியமாட்டார்கள்
திருக்குர்ஆன் 74 : 31
நரகத்தின் பிரமாண்டம் மட்டுமல்ல அதை இழுக்கின்ற மலக்குகளின் பிரம்மாண்ட தோற்றத்தையும் எண்ணிக்கையையும் நினைத்து மலைத்துப்போவோம்
நபிஸல் அவர்கள் கூறினார்கள் மறுமை நாளில் நரகம் 70,000 சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு இழுத்து வரப்படும் ஒவ்வொரு சங்கிலியுடனும் 70,000 மலக்குகள் இழுத்து வருவார்கள்
முஸ்லிம் 5464
அதாவது நரகத்தை இழுத்து வர மட்டும் 49 மில்லியன் மலக்குகள் இருப்பார்கள்

மலக்குமார்களின் வயது 7

நபிஸல் அவர்கள் மகள் பாத்திமா ரலி அவர்களின் வீட்டில் இருக்கையில் வானவர் ஜிப்ரீல் அலை அவர்கள் வருகை தருகிறார்கள்
உடனே பாத்திமா ரலி அவர்கள் ஜிப்ரீல் அலை அவர்களைப் பார்த்து ,"வாருங்கள் சிறிய தந்தையாரே . ! அஸ்ஸலாமு அலைக்கும் என்கிறார்கள்
ஜிப்ரீல் அலை அவர்கள் பதில் ஸலாம் சொல்லாமல் தன்னைப் பார்த்து சிறிய தந்தையார் என்று பாத்திமா ரலி அவர்கள் சொன்னது குறித்து யோசிக்கையில் நபிஸல் அவர்கள் வருகிறார்கள் "என்ன விஷயம் ? " என வினவுகிறார்கள் உடனே ஜிப்ரீல் அலை அவர்கள் விபரம் சொல்கிறார்கள்
அது கேட்டு நபிஸல் அவர்கள் , ஜிப்ரீல் அலை அவர்களிடம் " ஜிப்ரீலே நீர் எனக்கு வயதால் மூத்தவர் என்பதற்கு என்ன அதிசயத்தை தெரிந்திருக்கிறீர் ?" என்று கேட்கிறார்கள்
அதற்கு ஜிப்ரீல் அலை அவர்கள் "வடபுறத்தில் ஒரு நட்சத்திரம் உதயமாகி 70,000 வருஷம் மறையாமலிருந்து , பின்னர் 70,000 வருஷம் மறைந்து போகும் இவ்விதமாக 70,000 தடவை கண்டு இருக்கிறேன் " என்று சொன்னார்கள்
அதற்கு நபிஸல் அவர்கள் ஜிப்ரீல் அலை அவர்களிடம் " இப்போது அந்த நட்சத்திரத்தைக் கண்டால் அடையாளம் காட்ட முடியுமா ? " என்றார்கள்
" முடியும் " என்றார்கள் ஜிப்ரீல் அலை அவர்கள்
உடனே நபிஸல் அவர்கள் தங்கள் தலைப்பாகையைக் கழற்றி கையில் வைத்துக்கொண்டு தன் தலையை காண்பிக்கிறார்கள் அந்தத் தலையின் உச்சியில் அந்த நட்சத்திரம் இலங்கிக் கொண்டிருக்கிறது உடனே ஜிப்ரீல் அலை அவர்கள் ஆவேசமாக நபிஸல் அவர்களைக் கட்டி அணைத்து முத்தமிட்டு " தாஜுல் அன்பியா முஹம்மது ஸல் என்கிறார்கள்
பிறகு ஜிப்ரீல் அலை அவர்கள் நபிஸல் அவர்களிடம் " இந்த நட்சத்திரத்தில் மூன்று அடையாளங்கள் இருந்தது என்றும் ஒன்று அந்த நட்சத்திரத்தின் தலையில் தாஜ் என்னும் தொப்பியும் இரண்டு காதில் இரண்டு முத்துக் கவச குண்டலமும் கழுத்தில் இரத்தின பதக்கமும் இருந்தது " என்று சொன்னார்கள்
உடனே நபிஸல் அவர்கள் " தலையில் இருந்த தாஜ் என்பது "அலி ரலி " அவர்கள் கழுத்தில் இருந்த இரத்தன பதக்கம் பீபி பாத்திமா ரலி அவர்கள் என்றும் காதில் இருந்த இரண்டு முத்துக் கவச குண்டலம் இமாம் அசன் ரலி அவர்கள் இமாம் ஹுசைன் ரலி அவர்கள் என்று நபிஸல் அவர்கள் சொன்னார்கள் அது கேட்டு ஜிப்ரீல் அலை அவர்கள் நபிஸல் அவர்களைக் கண்ணியப்படுத்தினார்கள்
ஆதாரம்
இரத்தின மஹம்மது காரண சரித்திரம் பக்கம் 13 _ 15 அச்சு 1946

மலக்குமார்கள் 8 (வடிவம் மாறுவார்கள் )

 

மலக்குமார்கள் மனித வடிவத்தில் மாறுவார்கள்
நபிஸல் அவர்கள் தோழர்களுடன் அமர்ந்திருந்த போது வெண்மை ஆடையுடன் கருத்த தலைமுடியுடன் ஒருவர் வந்தார் நபியவர்களின் அருகே நெருக்கமாக அமர்ந்து " முஹம்மதே ! இஸ்லாம் பற்றி சொல்லுங்கள் என்றார் நபிஸல் அவர்கள் பதில் அளித்தார்கள் தொடர்ந்து கேள்விகள் கேட்க பதில் சொல்லப்பட்டது பின்னர் போய்விட்டார்
நபித்தோழர்களிடம் வந்தவர் ஜிப்ரீல் உங்களுக்கு உங்கள் மார்க்கத்தை கற்றுத் தர வந்தார் என்று அறிவித்தார்கள்
புகாரி 50 , 4777 முஸ்லிம் 15
நபித்தோழர்களில் திஹ்யா இப்னு அல்கல்பீ மிக அழகானவர்கள் ஜிப்ரீல் அலை அவர்கள் இந் நபித்தோழர் உருவில் அடிக்கடி வந்துள்ளார்கள்
ஆயிஷா ரலி கூறுகிறார்கள்

ஒரு முறை நபிஸல் அவர்கள் குதிரையின் முகத்தில் கையை வைத்தவர்களாக ஒரு மனிதரிடம் பேசிக்கொண்டிருந்தார்கள் பின்னர் என் அருகில் வந்த போது அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே ! திஹ்யா அல்கல்பீ உடைய குதிரையின் முகத்தில் கை வைத்து அவரிடம் பேசிக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன் என்றேன் அவர்கள் நீ பார்த்தாயா ? என ஆச்சர்யத்துடன் கேட்டார்கள் நான்
" ஆம் " என்றேன் அப்போது நபியவர்கள்
"அவர் ஜிப்ரீல் " ஆவார்கள்
முஸ்னது அஹ்மத் 24506
இதைப் போன்று உம்மு சலமா ரலி அவர்களும் நபித்தோழர் திஹ்யா ரலி அவர்களின் உருவிலேயே பார்த்தாக
புகாரி 4980
மர்யம் அலை அவர்கள் வீட்டின் கிழக்கு
புற அறையில் ( குளிப்பதற்காக ) இருந்த சமயம் ஜிப்ரீல் அலை அவர்களை மனித ரூபத்தில் பார்த்ததாக .
திருக்குர்ஆன்
19 : 17
நபி இப்ராஹீம் அலை அவர்களின் விருந்தாளியாக மலக்குமார்களை பார்த்தாக திருக்குர்ஆன் 51 : 24 _ 28
நபி லூத் அலை அஅவர்களிடமும் விருந்தாளிகளாக மலக்குமார்களைக் கண்டதாக திருக்குர்ஆன் 11 : 77

31 வருடங்கள் காட்டிலேயே தவம் இருந்த ஆரிபு நாயகம் என்னும்
ரிபாஃயி நாயகத்தை ஒரு வெள்ளிக்கிழமை பின்னிரவில் தனந்திருந்து யோக நிலையில் இருந்தபோது மலக்கு சம்சயீல் தோன்றி விண்ணகப் பயணத்திற்கு அழைத்துச் சென்றார
ஆதாரம் : ரகசிய ஞானி ஆரிபு நாயகம் . . . . ஜே . எம் .சாலி

**மலக்குமார்கள் 9 (ஆண் பெண் தன்மை இல்லாதவர்கள் ) 27-01-2017**

மனிதன் மண்ணிலிருந்து படைக்கப்பட்டதாலும் அவனின் துணை அவனின் எலும்பிலிருந்து படைக்கப்பட்டதாலும் அவனுக்கு மண்ணாசை இருந்தது பெண்ணாசை இருந்தது மண்ணிலிருந்து கிடைத்த பொன் மீது ஆசை கொண்ட அவனுக்கு பொன்னாசை இருந்தது பொன் கொண்டு வாங்கப்படும் மற்ற சொத்துக்கள் அத்தனை மீது பேராசை இருந்தது
மண்ணிலிருந்த விளைந்த உணவு மீது ஆசைகொண்டு உண்டான் அதில் விளைந்த பொருட்களிலிருந்து ஆடை தயாரித்து அதை உடுக்க ஆசை கொண்டான் . . . . . இப்படியே மண்ணிலிருந்து படைக்கப்பட்ட மனிதன் மண் சார்ந்த அத்தனை வஸ்துகள் மீது ஆசை கொண்டான்
ஆனால் மலக்குமார்கள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள் அவர்களுக்கு மண் சார்ந்த அத்தனை வஸ்துகளும் தேவையற்று இருந்தது
நம்முடைய ஆண்களையும் பெண்களையும் ஒருசேராக பார்த்தனர் இனபால் அவர்களிடம் இல்லாததால் அவர்களுக்கு கணவன் மனைவி குடும்ப உறவுகள் இல்லாது இருந்தனர் இதனால் ஏற்படும் சிற்றின்பங்களிலிருந்து தூரமாக இருந்தனர் இதனால்தான் மரியம் அலை அவர்கள் கன்னிப் பெண்ணாக தனித்து தன் வீட்டின் ஒதுக்குப் புறத்தில் குளிக்கும இடத்தில் ஜிப்ரீல் அலை போக முடிந்தது ஒரு ஆண் உருவம் கொண்டு மறைவான இடத்தில் அதுவும் குளிக்கும் போது சந்திக்க உடனே அவர்கள் " நிச்சயமாக நான் உங்களிடமிருந்து என்னைப் பாதுகாக்க அளவற்ற அருளாளனிடம் பிரார்த்தனை செய்கிறேன் குர்ஆன் (19: 16 எனவே இவர்கள் பால் இன உறவுக்கு அப்பாற்பட்டவர்கள்
அடுத்து நபி இப்ராஹீம் அலை அவர்கள் கொடுத்த உணவை உண்ணவில்லை
குர்ஆன் 51 : 24_30)
மலக்குமார்களுக்கு உணவு உண்ணாததால் உண்ட மயக்கம் இல்லை இதனால் அவர்கள் சோர்வடைவதில்லை
குர்ஆன் ( 21 : 19_20)
அவர்கள் கண்ணிமைகள் படைக்கப்படததாலும் சோர்வடையாததாலும் அவர்கள் உறங்குவதில்லை குர்ஆன் ( 41 : 38)
. . . . இப்படி ஒரு வித்தியாசமான மனித கற்பனைக்கும் அப்பாற்பட்ட ஒர படைப்பினங்கள் இந்த மலக்குமார்கள்

மலக்குமார்கள் 10 (மரணம்)

பூமியிலுள்ள அனைத்தும் அழிந்தே போகும் மிக்க கண்ணியமும் பெருமையும் தங்கிய உம் இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும்
திருக்குர்ஆன் 55 : 26, 27 28 : 88

ஸூர் ஊதப்பட்டால் வானங்களில் இருப்பவர்களும் பூமியில் இருப்பவர்களும் அல்லாஹ் நாடியவர்களைத் தவிர அனைவரும் மடிந்து வீழ்வார்கள்
மறுமுறை ஸூர் ஊதப்பட்டால் உடனே அவர்கள் அனைவரும் உயிர் பெற்று பார்ப்பவர்களாக எழுந்து நிற்பார்கள்
திருக்குர்ஆன் 39 : 68
படைக்கப்பட்டவர்கள் அத்தனை பேரும் மரணிப்பார்கள் இறுதியில் மரணத்தின்
மலக்கும் மரணிப்பார என்பதாக இமாம் இப்னு கஸீர் ரஹ் கூறுகிறர்கள் மேலும் இமாம் அவர்கள் "இறந்த பின் முதலில் உயிர் கொடுத்து எழுப்படுபவர் இஸ்ராஃபில்தான் மீண்டும் ஸூரை ஊதும்படி அவருக்கு அல்லாஹ் கட்டளை இடுவான்
தஃப்சீர் இப்னு கஸீர் 7/116

மலக்குமார்கள் 11 (ஹாரூத் மாரூத்)



நபி இத்ரீஸ் அலை அவர்கள் காலத்தில் மனிதர்களின் கெட்ட அமல்கள் வானத்தில் போவதை மலக்குமார்களில் இருவர் கண்டு மனிதர்களை கேவலமாகப் பார்த்தனர் அதற்கு இறைவன் அம்மலக்கு இருவரிடம் " மனிதர்களுக்குக் கொடுத்திருக்கிற ஷஹ்வத் என்னும் இச்சையை உங்களுக்குக் கொடுத்தால் நீங்களும் கேவலமாக நடந்து கொள்வீர்கள் எனக் கூறியதோடு அவர்களுக்கு ஷஹ்வத் இச்சையை அவர்களின் மனதினில் புகுத்தினான்
இவ்விருவரும் பூமிக்கு வந்தார்கள ஜுஹ்ரா என்ற பெண்ணின் அழகைக் கண்டு அவளிடம் தகாத செயலுக்கு அழைக்க அவள் விக்கிர ஆராதனை செய்தால் மட்டுமே நான் உங்களுக்கு இணங்குவேன் என்ற கூறி அவர்களுக்கு மதுவைப் புகட்டியதும் போதை தலைக்கு ஏறி என்ன செய்வது என்று தெரியாமல் சிலையை கும்மிட்டார்கள அவளைக் கொண்டாடினார்கள் இதனைக் கண்ட மனிதனை கொலையும் செய்தார்கள் இதனால் வானத்திற்கு பறந்து செல்லும் இஸ்முவையும் மறந்தார்கள இறைவனிடம் மன்றாடினார்கள் இறைவன் அவர்களை மன்னிக்க இரண்டு வழியில் ஒன்றை தேர்ந்தெடுக்கச் சொன்னான் இம்மையில் வேதனை அல்லது மறுமை வேதனை
இம்மை வேதனைக் காட்டிலும் மறுமை வேதனை மிகக் கடுமையானது என்று இம்மை வேதனையைத் தேர்ந்தெடுக்க இவ்விரும் பாபிலோன் நகரில் ஒரு மலைக் குகையில் தலைகீழாக தூக்கப்பட்டு அவர்களுடைய நாவுக்கும் ஓடும் தண்ணீருக்கும் இடையில் நான்கு விரல் இடைவெளிதான் இருப்பதாக சொல்லப்படுகிறது
. . . . . . . இதெல்லாம் யூதர்களின் கட்டுக் கதை என்று சிலர் கூறுகின்றனர் யூதர்களின் கட்டுக்கதை என்றால் இமாம்கள் தங்களுடைய எப்படி தங்களுடைய தஃப்ஸீர்களில் சேர்த்து இருக்கிறார்களே என்றும் சிலர் வாதிக்கிறார்கள்
ஆதாரம் : தஃப்ஸீர் ஹமீத்
மலக்குமார்களைக் கொண்டு மனிதர்களை இறைவன் தண்டிக்கிறான் உதாரணமாக
லூத்தே ! நிச்சயமாக நாங்கள் உங்கள் இறைவனால் அனுப்பப்பட்ட தூதர்களாவோம் குர்ஆன் (11 : 81) என்று கூறி ஆணோடு ஆண் புணர்ச்சி செய்யும் அச் சமுதாய மக்கள் வாழ்ந்த 5 பெரும் நகரங்களை தலைகீழாக புரட்டி அவ்விடம் இன்று சாக்கடலாக ஆக்கவில்லையா ? இது இறைவனால் அம்மக்களுக்கு வந்த சோதனை இப்படித்தான் ஹாரூத் மாரூத் என்ற மலக்குகள் பாபிலோன் மக்களுக்கு வந்த சோதனையாக சூனியத்தைக் மக்களுக்குக் கற்றுக் கொடுக்க வந்தவர்கள் அந்த சூனியத்தை கற்றுக் கொண்டு கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் பிரிவினை சூனியம் கற்றவர்கள் செய்தார்கள் குர்ஆன் (2 : 102) இந்தமட்டில்தான் இவ்விரு மலக்குகளை நாம் பார்க்க வேண்டுமே தவிர அவர்கள் செய்த காரியத்தைப் பார்க்க கூடாது என்று சிலர் வாதிக்கிறார்கள்
ஆனாலும் மலக்குமார்கள் கண்ணியமானவர்கள் என்ற பார்வை நமக்கு எப்போதும் இருக்க வேண்டும்

**Rahmath Rajakumaran**
அலி ரலி அவர்கள் கூறினார்கள் " நான் நபிஸல் அவர்களிடம் , இறைவன் எத்தனை பேரின் முகங்களை மாற்றியமைத்து பூமியில் உலாவ விட்டான் ?
13 பேர் அதில் ஒருத்தி ஜுஹ்றா இவள் ஓர் அரசிளங்குமரி இவள் ஹரூத்தையும் மாரூத்தையும் தன் மிக மிஞ்சிய அழகால் தன் வசப்படுத்தி போஸ்ட்டில் சொன்ன அத்தனை செய்ய சொல்லி வற்புறுத்தினாள்
மலக்குமார்களிடமிருந்து விண்வெளி கடவுச் சொல்லான இஸ்முவைக் கற்று விண்வெளிக்கு பறந்தாள்
பின் அவள் நட்சத்திரமாக மாறினாள்
ஆதாரம் நபிமார்கள் வாழ்க்கை வரலாறு அப்துற் றஹீம்

ஜின்கள் ( Geine ) 1 02—02-2017



1500 கோடி வருடங்களுக்கு முன் நம்ம ஆகாய கங்கை என்னும் பிரபஞ்சம் படைக்கப்பட்டது ஆங்கிலத்தில் மெட்டா கேலக்ஸி நம்ம பால்வீதியில் மட்டும் கோடான கோடி நட்சத்திரங்கள் சூரியன்
கள் படைக்கப்பட்டன பின நமது பூமி இன்று இரவில் இருந்து 450 கோடி வருடங்களுக்கு முன்தான் படைக்கப்பட்டது
அப்போது பூமி நெருப்பாக கழன்று கொண்டிருந்து அப்போதுதான் அந்த நெருப்பில் வாழக் கூடிய ஒரு படைப்பாக நெருப்பையும் வெப்பக் காற்றையும் கொண்டு ஜின் படைக்கப்பட்டது
மனிதனை மண்ணையைக் கொண்டும் அதில் நீரைக் கொண்டு குழைத்து மனிதன் படைக்கப்பட்டான் அந்த மனிதன் தன் சந்ததியைப் படைக்க விந்து என்ற நீரை பெண்ணின் கருப்பப்பையில் செலுத்தினான்
ஆனால் ஜின் வர்க்கம் நெருப்பும் காற்று கலந்த கலவையால் படைக்கப்பட்டதால் ஆண் ஜின் தன் சந்ததியைப் பெருக்க பெண் ஜின்னின் கருப்பப்பையில் காற்றை செலுத்தின இதனால் கர்ப்பம் ஏற்பட்டது

ஜின்கள் 2 ( கண்ணுக்குத் தெரியாத படைப்பு )
பேதகமைந்த காய்ந்த களி மண்ணில் மனிதனையும் அதற்கு முன்பே நெருப்பின் கடும் வெப்பத்திலிருந்து ஜின்களைப் படைத்திருந்தோம்
திருக்குர்ஆன் 15 : 26 27
நாம் ஜின்களையும் மனிதர்களையும் எனக்கு அடிபணிந்து வணங்குவதற்காகவேயன்றி வேறு எதற்காகவும் படைக்கவில்லை திருக்குர்ஆன் 15 : 56
ஜின்கள் நெருப்பில் படைக்கப்பட்டதால் அந்த நெருப்பின் வெளிச்சம் நம் கண்களுக்குத் தெரியுமா என்றால் தெரியாது
காரணம் நம் கண்கள் 0.00004 cm இருந்து 0.00007 cm வரைதான் பார்க்க முடியும்
ஜின்கள் இந்த வரையறைக்கு மேலாகவோ அல்லது கீழாகவோ படைக்கப்பட்டு இருக்கலாம்
நம் கண்களுக்கு ஜின் தெரியவில்லை ஆனால் ஜின்களின் கண்களுக்கு நாம் தெளிவாக தெரிகிறோம்
ஜின்கள் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறது என்பதாக குர்ஆனில் அல்லாஹ்
நிச்சயமாக ( இப்லீஸ் ) அவனும் அவன் கூட்டத்தாரும் உங்களைக் கவனத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள் ஆனால் நீங்கள் அவர்களைப் பார்க்க முடியாது
மெய்யாகவே நாம் சைத்தான்களை நம்பிக்கை இல்லாதவர்களின் நண்பர்களாக்கி விட்டோம்
திருக்குர்ஆன் 7 : 27
ரஹ்மத் ராஜகுமாரன்
**Rahmath Rajakumaran**
ஒரு பெண்ணோடு ஒரு ஆண் தனித்து இருக்கும் போது கூடவே சைத்தானும் இருக்கிறான்
அந்த சந்தர்ப்பங்களில் அவனின் உச்சக் கட்ட வேலை மிகவும் துரிதமாக இருக்கும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்

ஜின்கள் 3 ( ஜின் =நெருப்பு = நரகம் )



ஜின்கள் நெருப்பில் படைக்கப்பட்டிருப்பதால் நரகமும் நெருப்பில் படைக்கப்பட்டிருப்பதால் ஜின்களை நரகத்தின் நெருப்பு தீண்டாதா ? என்ற கேள்வி நண்பர் ஒருவர் கேட்டார்
மனிதனை மண்ணில் படைக்கப்பட்டதால் அவன் இறந்த உடம்பை மண் தீண்டாமலா இருந்தது மண்ணோடு மண்ணாக மக்க வைக்கவில்லை ?
ஒளிவீச்சி, நெருப்பு ,கதிர் வீச்சி, அலைகள் இவையெல்லாம் சூரியனின் வெள்ளோளியில் இருக்கிறது இது பற்றிய விபரம் மலக்குமார்கள் தொடரில் சொல்லி இருக்கிறேன் இப்போதும் சொல்கிறேன்
சூரியனின் ஒளியில் நாம் பார்க்கக் கூடிய வைலட் v ,இன்டிகோ I , புளு B , கிரீன் G , எல்லோ Y , ஆரஞ்சு O , ரெட் R இவைகள் நாம் பார்க்கும் 0.00004 cm இருந்து 0.00007 cm வரை நம்மால் பார்க்க முடியும்
வைலட் நிறத்திற்கு மேலே அல்ட்ரா வைவட் , எக்ஸ்ரே கதிர், காமா கதிர், காஸ்மிக் கதிர் , இன்னும் அறியப்படாத கதிர்களும் உள்ளன
அதைப்போலவே ரெட் நிறத்திற்கு கீழே இன்ஃபரா ரெட் , மின் பொறி , ராடார் கதிர்கள், டெலிவிஷன் , குட்டையான ரேடியோ அலை , ரேடியோ அலை , நீளமான ரேடியோ அலை , இன்னும் அறியப்படாத கதிர் . . . . . .
இவைகளில் ஏதோ நெருப்புக்கதிரில் ஜின்கள் படைக்கப்பட்டிருக்கலாம்
" ஜின்களையும் மனிதர்களையும் கொண்டு நிச்சயமாக நரகத்தை நிரப்புவேன்
திருக்குர்ஆன் 11 : 119
"ஜின்களைக் கொடிய உஷ்ணமுள்ள நெருப்பிலிருந்து படைத்தோம் "
திருக்குர்ஆன் 15 : 27
நரகின் எரிபொருளாக குர்ஆனில் இன்னொரு இடத்தில்
" மனிதர்களும் கற்களும் இரையாகின்ற நரக நெருப்புக்குப் பயந்து கொள்ளுங்கள் "
திருக்குர்ஆன் 2 : 24
இந்த வசனத்தில் குறிப்பிடப்படும் கற்கள் கந்தகக் கற்கள் என்று அக்கால விஞ்ஞானத்தின்படி சொல்லப்பட்டிருந்தாலும் கந்தக கற்கள் சொற்ப காலமே வெப்பத்தை தரக்கூடியது ஆனால் யூரேனிய கற்கள் யுக யுகங்களாக நெருப்பைக் கொட்டக்கூடியது அட, அதன் சாம்பலிருந்து வெளிப்படும் கதிர் வீச்சு லட்சக்கணக்கான வருடங்களுக்கு இருந்து கொண்டே இருக்கும் நரக வாசிகள் என்றென்றும் யுக யுகங்களாக அதில் இருப்பதாக இறைவன் குறிப்பிடுகிறான்
சில நரகங்களின் நெருப்பு விநோத தன்மையைக் கொண்டது
" நபியே ! ஹுதமா என்றால் என்னவென்று நீங்கள் அறிவீர்களா ? அதுதான் அல்லாஹ் உடைய கட்டளையால் எரிக்கப்பட்ட நெருப்பு
அது உடல்களில் பட்டவுடன் உள்ளங்களில் பாய்ந்து விடும் நெருப்பு
திருக்குர்ஆன் 104 : 5_9
அநேகமாக இந்த நரகத்தின் நெருப்பு அணுகதிர் வீச்சியின் நெருப்பாக இருக்கலாம்
யுரேனியத்தின் கதிர் வீச்சு இழக்க 704 மில்லியன் வருடங்கள் ஆகும்
எனவே ஜின்கள் நெருப்பில் படைக்கப்பட்டிருந்தாலும் யுரேனியம் போன்ற அணுசக்தி வெளிப்படுத்தும் கதிர் வீச்சு கொண்ட நெருப்பு நரகத்தில் இருக்கலாம் எனவே ஜின்களுக்கும கொடிய வேதனை தரக்கூடியே நெருப்பு அதைப் படைக்கப்பட்ட நெருப்பைக் காட்டிலும் கொடிய நெருப்பு நரகத்தில் உண்டு

ஜின்கள் 4 ( மற்ற வேதங்களில் ஜின்களைப் பற்றி ) 05-02-2017



ஜின் என்னும் அரபிச் சொல்லானது ' ஜன்னா' என்னும் மூலச் சொல்லிருந்து வந்தது மறைவானது என்று பொருள்படும்
இறைவிசுவாசமற்ற ஜின்களை சைத்தான்கள் என்று குறிப்பிடப்படுகிறது
பேய் பிசாசு தீய ஆவி என்பன பற்றிய நம்பிக்கையானது ஜின்களை விட சற்று வித்தியாசமானது
"ஆவி உலகம் நம் ஆழ்மனதை திறக்க உதவும் அபாயத் திறவுகோல் ஆகும் " என்று ஹியூலின் கேசி என்ற பிரபல மனோதத்துவ அறிஞர் கூறுகிறார்
பைபிள் கூறுவது " ஆவிகளில் நல்லவைகளும் உண்டு தீயவைகளும் உண்டு என்கிறது
இதையே குர்ஆனில் " ( அந்த ஜின் கூறிற்று )
நிச்சயமாக நம்மில் நல்லோரும் இருக்கின்றனர் அப்படி அல்லாதவர்களும் நம்மில் இருக்கின்றனர் நாம் பல்வேறு வழிகளை அடைந்தவர்களாகவும் இருந்தோம்"
திருக்குர்ஆன் ( 72 : 11)
பைபிள் தொடர்ந்து கூறுவது
தீய ஆவிகள் (சைத்தான் ஜின்கள் ) ஊமைத் தன்மையை உண்டாக்கும் (மத் 9 : 32_33)
குருட்டுத் தன்மையை உருவாக்கும்( மத் 12 : 22)
பைத்தியம் பிடிக்கச் செய்யும் ( லூக் 8 : 26_ 35)
தற்கொலை வெறியை கிளப்பும்
( மாற்கு 9 : 18 )
இயற்கைக்கு மீறிய பலத்தை அளிக்கும் ( லூக் 8 : 29 )
சரீர குறைபாடுகளையும் உருபுத்திரிபுகளையும் சுமத்தும் ( லூக் 13 : 11)
அவைகள் ஒருமுறை ஒரு மானிட சரீரத்தின் மேல் கட்டுப்பாட்டை கொண்டு வந்தவுடனே அவைகளுக்குத் தங்கள் விருப்பம் போல் அந்த சரீரத்தில் வந்து போய் கொண்டிருக்க முடியும் ( லூக் 11 : 24_26 )
பேய்களுக்கு குறி சொல்லும் சக்தி உண்டு
( அப்போஸ் 16 : 16 _18 )
இடிபாடுகளுக்கு இடையில் கல்லறைகளில் , பாலைவனங்களில் வாழ்கின்றன ( யேவி 16)
ஆவி ஜின்களுக்கு தனித்தன்மை உள்ளது இயேசு அவர்களோடு அளவளாவினார் கேள்விகள் கேட்டார் மறுமொழியும் பெற்றார் (லூக் 8 : 26)
சாதாரண புத்தி கூர்மையிலும் அதிக அளவில் அவை திறமை வாய்ந்தவை என்று பைபிள் கூறுகிறது
" ஒரு ஜின் கூட்டம் என்னை நோக்கி வந்தது நான் அவர்களிடத்தில் குர்ஆனை எடுத்துரைத்தேன் அவைகள் அதை ஏற்றுக் கொண்டு நேர்வழி எது ? வழிகேடு எது ? என்று எங்களுக்கு காண்பிக்குமாறு கூறின
பின் எங்களுக்குரியு ஆகாரம் எது ? என்று கேட்டது
அல்லாஹ்வின் பெயர் கூறி அறுக்கப்பட்ட கால்நடைகளின் எலும்புகள் இறைச்சியுடன் கூடியது உங்களுடைய ஆகாரமாகும் கால்நடைகளின் விட்டைகள் உங்கள் கால்நடைகளின் ஆகாரம் ஆகும் என்று கூறினேன் என்று நபிஸல் அவர்கள் கூறினார்கள்
இப்னு மஸ்வூத் ரலி . _ முஸ்லிம்

ஜின்கள் 5 (உருமாற்றம்) 06-02-2017

கழுதை , பெண் , கருப்பு நாய் போன்றவை தொழும்போது குறுக்கே சென்றால் தொழுகை முறிந்துவிடும் என்று நபிஸல் அவர்கள் கூறியதாக அபூதர் ரலி அவர்கள் கூறினார்கள்
" அபூதரே ! கருப்பு நாய்க்கும் சிவப்பு நாய்க்கும் என்ன வேறுபாடுகள் ? என்று நான் கேட்ட போது அவர்கள் கூறினார்கள் " என் சகோதரர் மகனே ! நானும் நபிஸல் அவர்களிடம் இவ்வாறே கேட்டேன் அதற்கு அவர்கள் கூறினார்கள் கருப்பு நாய் சைத்தான் ஆகும் " என்றார்கள்
நூல் : முஸ்லிம்
"(சைத்தான்) அவன் பூனை உருவில் என் முன் காட்சி தருவான் " என்று நபிஸல் அவர்கள் கூறினார்கள்

நூல் : ஃபத்ஹுல் பாரி
அபூஸயீத் அல்குத்ரீ ரலி அவர்கள் அறிவிக்கிறார்கள் " மதீனாவில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட ஜின் கூட்டம் இருக்கிறது , எவராவது உங்கள் வீடுகளில் ஏதாவது பாம்பைக் கண்டால் இங்கிருந்து சென்று விடும்படி மூன்று முறைச் சொல்லுங்கள் அதன் பின் அவைகளில் எதையாவது காண்பீர்களானால் கொல்லுங்கள். ஏனெனில் அது சைத்தான் (ஜின் ) ஆகும் " என்று கூறினார்கள்
நூல் : முஸ்லிம்
அனஸ் இப்னு மாலிக் ரலி அவர்கள் அறிவிக்கிறார்கள் : " நாங்கள் அறியாமைக் காலத்தில் மந்திரித்து வந்தோம் அல்லாஹ்வின் தூதரே ! இதுபற்றி என்ன கருதுகின்றீர்கள் " என்று நபிஸல் அவர்களிடம் கேட்டோம் அதற்கு நபிஸல் அவர்கள் கூறினார்கள் " நீங்கள் மந்திரிக்கும் சொற்களை எனக்கு ஓதிக் காட்டுங்கள் இணைவைக்கும் முறையில் இல்லாத வார்த்தைகளால் மந்திரிப்பது குற்றமில்லை " என்று கூறினார்கள்
நூல் : முஸ்லிம்

**Rahmath Rajakumaran**
""ஷைத்தான் என் தொழுகையையும் ஓதுதலையும் குழப்பிக் குறுக்கிடுகிறான் " என்று நபிஸல் அவர்களிடம் நான் கூறினேன் அதற்கு நபிஸல் அவர்கள் " அவன் கின்ஸப் என்ற ஷைத்தானாவான் அந்த நிலையை நீர் உணர்ந்தால் அவனை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடி உமது இடதுபுறம் மூன்று தடவை துப்பு " எனறார்கள் நான் அவ்வாறு செய்தேன் அதை என்னை விட்டும் அஅல்லாஹ் நீக்கி விட்டான் என்று உஸ்மான் பின் அபில் ஆஸ் ரலி அவர்கள் அறிவிக்கிறார்கள்
நூல் முஸ்லிம்

ஜின்கள் 6 ( உருமாறிய ஜின்கள் )08-02-2017



ஈஸா இப்னு ஹுரைத் ரலி கூறுகிறார்கள்
நான் அப்துல்லாஹிப்னு மஸ்ஊத் ரலி அவர்களுடன் இருந்தேன் அப்போது ஒரு மனிதர் வந்து , " நாங்கள் பயணம் செய்தோம் வழியில் காயமடைந்த ஒரு பாம்பு இரத்தத்தில் தோய்ந்து துடித்துக்கொண்டிருந்து பின் இறந்தது எங்களில் ஒருவர் தம் தலைப்பாகையை கிழித்து அப்பாம்பின் மீது சுற்றி அதனை அடக்கம் செய்தார்
அதன் பின் நாங்கள் இரவில் ஓர் இடத்தில் தங்கியிருக்கும் போதுஅழகானஇருபெண்கள் வந்தனர் அவர்கள் ஜின் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று பின்னர் அறிந்து கொண்டோம்
" அந்த பாம்பை அடக்கம் செய்த உங்கள் தோழர் யார் ? "என்று கேட்டனர் நாங்கள் அந்த தோழரைக் காட்டினோம்
அந்த பெண்கள் " அந்த பாம்பாக மரணித்தவர் நபிஸல் அவர்கள் திருக்குர்ஆன் ஓதுவதை செவியேற்றியவர்களில் கடைசியானர் ஜின்களில் காஃபிர்களுக்கும் , முஸ்லிம்களுக்கும் சண்டை நடந்தது இவர் வெட்டுப்பட்டார் அவரை அடக்கம் செய்தமைக்காக நீங்கள் அதற்குரிய பிரதிபலனை விரும்புவீர்களாயின் உங்களுக்கு நாங்கள் பிரதிபலனை கொடுக்க வே வந்தோம் என்றனர்
அதற்கு நாங்கள் " இல்லை அதனை நாங்கள் அல்லாஹ்வுக்காக செய்தோம் " என்றோம் நல்லது செய்தீர்கள் என்று கூறி விட்டு சென்று மறைந்தனர்
பாம்பை துணியால் சுற்றி அடக்கம் செய்த நபித்தோழர் ஆயிஷா சித்தீக்கா ரலி அவர்கள் மீது அவதூறு கூறிய நிகழ்ச்சியில் தொடர்பு கொண்ட ஸஃப்வானுப்னு மிஃதல் ரலி ஆவார்கள்
பாம்பு ரூபத்தில இறந்த அந்த ஜின் பெயர் அம்ருப்னு கபிர் என்பதாககும்

ஜின்கள் 9

ஒரு தடவை நபிஸல் அவர்கள் நபித்தோழர்களை நோக்கி " இஃப்ரீத் என்ற ஜின் என்னுடைய தொழுகையைக் கெடுப்பதற்காக என் மீது வைகறையில் காரி உமிழ்ந்தான் இறைவன் எனக்கு அவன் மீது ஆற்றல் அளித்தான்

அவனை எட்டிப் பிடித்துக்கொண்டேன் அவனை நீங்களெல்லாம் பார்க்கும் வண்ணம் இங்குள்ள தூண்களில் ஒன்றில் கட்டிப் போட எண்ணினேன்

அப்போது சுலைமான் அலை அவர்கள் இறைவனிடத்தில் செய்த இறைஞ்சுதல் என் நினைவுக்கு வந்கது எனவே அவனை விட்டு விட்டேன் என்று கூறினார்கள்

அந்த இஃப்ரீத் ஜின் பூனையின வடிவில் வந்தது என்று கூறினார்கள்

ஆதாரம் நபிமார்கள் வரலாறு அப்துற் றகீம்

குர்ஆனில் இஃப்ரீத் ஜின் பற்றி

قَالَ عِفْرِيْتٌ مِّنَ الْجِنِّ اَنَا اٰتِيْكَ بِهٖ قَبْلَ اَنْ تَقُوْمَ مِنْ مَّقَامِكَ وَاِنِّىْ عَلَيْهِ لَقَوِىٌّ اَمِيْنٌ ﴿27:39﴾

27:39. ஜின்களில் (பலம் பொருந்திய ஓர்) இஃப்ரீத் கூறிற்று; நீங்கள் உங்கள் இடத்திலிருந்து எழுந்திருப்பதற்கு முன் அதை நான் உங்களிடம் கொண்டு வந்து விடுவேன்; நிச்சயமாக நான் அதற்கு சக்தியுள்ளவனாகவும், நம்பிக்கைக்கு உரியவனாகவும் இருக்கிறேன்.”

ஜின்கள் தொடருக்குப் பின்
மனித உடல் உறுப்புகள் பற்றி
குர்ஆன் விஞ்ஞானத் தொடர்

ஜின்கள் 10 (ஜோதிடக் கலை)
ஜின்களுக்கு விண்ணகம் மண்ணகம் இரண்டு மண்டலங்களிலும் சஞ்சரிக்கக் கூடிய வலிமையை இறைவன் கொடுத்திருந்தான்
மலக்குமார்களை பூமி உள்ள காரியங்களை நிர்வாகம் செய்ய இறைவன் பணித்திருந்தான இதனால் மலக்குமார்கள் இது பற்றி பேசிய செயல்பாடு திட்டங்களை ஜின்களில் சைத்தானகள் ஒட்டுக் கேட்டு தன்னையே கடவுளாக வணங்கிக் கொண்டிருப்பவர்களிடம் சொல்லும் அதை கூடுதல் குறைவு செய்து ஜோதிடர்கள் அதை மக்களிடம் விற்பார்கள
""திருட்டுத்தனமாக ஒட்டுக் கேட்கும் ஷைத்தானைத் தவிர : அப்போது பிரகாசமான தீப்பந்தம் அந்த சைத்தானை விரட்டி பின் தொடரும் "
திருக்குர்ஆன் 15 18

ஜின் 11 (ஜின் செய்த ஆட்சி)



நபி சுலைமான் அலை அவர்கள் பவுனவகு என்ற அரசன் மீது படையெடுத்து அவனோடு யுத்தம் செய்யும் போது அவன் மரணிக்கச் செய்து அவனது அழகு மகளை திருமணம் செய்தார்கள்

அவள் தன் தந்தையை நினைத்து அழுது தன் தந்தையைப் போன்று சிலை செய்து கேட்டாள் அதை மறைவிடத்தில் வைத்து வணங்கவும் செய்தாள் இதன் காரணமாக இறைவன் சுலைமான் அலை அவர்களை சோதிக்க ஆரம்பித்தான்

நபியவர்களின் மோதிரம் கடற்கரையில் காணாமல் போனது அதை ஒரு மீன் விழுங்கியது அவர்களின் உருவம் மாறியது

இந்த நேரத்தில் இறைவன் சகுற என்ற ஜின்னுக்கு சுலைமான் அலை அவர்களின் உருவம் கொடுத்தான் சகுற ஜின் நபியவர்கள் மாதிரி உடையணிந்தது அவர்கள் மாதிரியே முகப்பாவம் செய்து அதே மாதிரி அபிநயமும் செய்ததது எல்லோருமே நபி சுலைமான் அலைதான் என்று நம்பினார்கள் நபியவர்களின் அரியணையில் அவர்களைப் போலவே அமர்களமாக அமர்ந்தது ஆட்சியும் செய்தது

உருமாறிய சுலைமான் அலை அவர்களை யாருக்குமே தெரியவில்லை பல சோதனைகள் தொடர்ந்து நபியவர்களைக் கஷ்டப்படுத்தியது

இதற்குள் சகுற ஜின்னுக்கு ஆட்சி செய்ய தெரியவில்லை பறவைகள் ஊர்வன மொழிகள் தெரியவில்லை அரச சபையில் பேசத் தெரியவில்லை இதனால் குடிமக்கள் மன்னர் மீது சந்தேகம் கொண்டனர்

இதற்குள் சுலைமான் அலை அவர்கள் ஒரு மீனவனிடம் தினக் கூலிக்கு சேர்ந்து கூலியாக மீனைக் கொடுக்க அந்த மீனை அறுத்து சமைக்கும் போது அதன் வயிற்றில் அவர்களின் மோதிரம் இருக்க அதை அணிந்ததும் அவர்களுக்கு பழைய உருவம் கிடைத்தது பின் தன் அரண்மனைக்கு வந்ததும் நபியவர்களின் கம்பீரம் மற்றும அவர்களின் தோரணையின் சகுற ஜின்னின் அரச வேடம் வெளுத்தது

மீண்டும் சுலைமான் அலை அவர்கள் ஆட்சி தொடர்ந்து

ஆதாரம் அப்துற் றஹீம் எழுதிய நபிமார்கள் வரலாறு பாகம்**2** பக் **522**

ரோமங்கள் 1          FEB  12   2017




நம் தலையில் உள்ள ஒரு முடி எத்தனை முறை விழுந்து முளைக்கும் ?
இரண்டிலிருந்து நான்கு வருடங்களுக்கு ஒரு முறை . எனவே மொத்தம் நீங்கள் 100 வருடங்கள் வாழ்ந்தால் அதிகப்படியாக 50 முறை விழுந்து முளைக்கும் ஒரு மாதத்திற்கு ஒன்றேகால் சென்டி மீட்டர் வளர்கிறது
எல்லா ரோமங்களும் ஃபாலிக்கிள்ஸ் என்று சொல்லக்கூடிய நுட்பமான பாக்கெட்டுகளிலிருந்து வளர்கின்றன
ஃபாலிக்கிள் வட்டமாக இருந்தால் ரோமம் நீட்டமாக வளரும் . முட்டை வடிவில் இருந்தால் ரோமம் நெளியும் சுருளும்
மனக்கவலையினால் தலையில் நரை விழும்! என்கிறார்களே . . . . கவலைக்கும் தலைமுடிக்கும் ஏன் முடிச்சுப் போடுகிறார்கள் ?
ஆரோக்கியம் , வம்சவழி சூழ்நிலை கவலை போன்ற காரணங்களால் முடி நரைக்கிறது
முடியின் கால்களில் மெலனின் என்னும் சமாசாரம் சப்ளை தீர்ந்துவிடுவதால் நரை வருகிறது
தலைமுடி சாதாரணமாக இரண்டிலிருந்து நான்கு வருஷம் வளர்கிறது அதன்பின் இரண்டு மூன்று மாதம் சும்மா இருந்துவிட்டு உதிர்கிறது புது கேசம் வளர்கிறது இப்படி தினம் 50 லிருந்து 100 முடிகளை இழக்கிறோம்
பொதுவாக நரைமுடிகளைக் கறுப்பு முடிகள் மறைத்திருக்கும் அதிர்ச்சி தரும் ஒரு சம்பவம் நிகழும் போது சிலருக்கு " டெலோஜென் எஃப்லுவியம் ( Telogen Effluvium ) என்னும் விளைவினால் சட்டென்று ஒரு நாளைக்கு 300 முடி கொட்டிவிட மறைந்திருக்கும் நரைமுடிகள் எல்லாம் பொசுக்கென்று தெரிய ஆரம்பித்து விடும்
"நீங்கள் இதனை நிராகரித்துவிட்டால் எவ்வாறு நீங்கள் ( நம்முடைய பிடியிலிருந்து)
தப்பித்துக் கொள்வீரகள் ?
நாம் பிடிக்கும் அந்நாளில் திடுக்கம் சிறு குழந்தைகளையும் நரைத்தவர்களாக ஆக்கிவிடும் "
திருக்குர்ஆன் 73 : 17
ரோமங்கள் 2




"கரு கரு வென்றிருந்த முடி ஏன் செம்பட்டையாச்சி ?" என்று பெண்களிடம் கேட்டுப் பாருங்கள்

இந்த பகுதியில் உள்ள தண்ணீர் சரி இல்லை எனபார்கள்

அவளுடைய கணவரிடம் கேட்டுப்பாருங்கள் " "உங்க முடி ஏன் கொட்டிப் போச்சு ? "

" நம்ம ஊர் தாமிரபரணியில் குளிச்சேன் முடி நிறைய இருந்திச்சி இப்போ சென்னை வாழ்க்கை அதுதான் வழுக்கையாச்சி " என்று அண்ணனும் தண்ணீரைத்தான் சொல்வார்

இவர்கள் இப்படி கூறுவதில் உண்மை இருக்கிறது என்று அண்மையில்

அமெரிக்காவில் நடந்த ஆராய்ச்சிகள் கூறுகின்றன

" மனித முடியிலுள்ள நீர் மூலக் கூறுகள் அவன் வசிக்கும் இடத்தின் குடிநீர் மூலக்கூறுகளோடு ஒத்துப் போகிறது " என்பதே

"குறிப்பாக குடிநீரிலுள்ள ஹைட்ரஜன் , ஆக்ஸிஜன் மூலக்கூறுகளுக்கும் தலை முடிக்கும் தொடர்பு இருக்கிறது " என்கிறார்கள்

முடியின் வேதியல் அமைப்பைக் கொண்டு நீங்கள் மதுரை சேர்ந்தவரா ? அப்படி என்றால் வைகையாற்றின் நீரின் மூலக் கூறுகளும் கோவை என்றால் சிறுவாணி ஆற்றின் மூலக்கூறுகளும் திருநெல்வேலி என்றால் தாமிரபரணி அட, ராமநாத புரம் இப்போ என்ன சொல்றது . . . அங்குள்ள கிணற்றின் நீரின் மூலக்கூறுகள் முடியில் இருக்கும்

சரி இந்த கண்டுபிடிப்பால் என்ன நடக்கும் ?

எங்கோ கொலை செய்து அந்த பிணத்தை பெரிய சூட்கேஸில் வைத்து ரயிலில் ஏற்றி அனுப்பி விட்டால் பிரச்சனை முடிஞ்சது என்று இருக்க முடியாது முடி காட்டிக்கொடுத்துவிடும்

பிணம் திரும்ப வீட்டிற்கு வரும் .

தண்ணீர் மட்டும் அல்லாமல் சுற்றுச் சூழலில் உள்ள வேதியல் தன்மைகளையும் முடி கிரகித்துக் கொள்ளும்

அப்படிதான் பிரான்சு நாட்டு நெப்போலியனை கைது செய்து ஆப்பிரிக்க பக்கத்தில் இருக்கும் செயிண்ட் ஹெலீனா சிறையில் தனிமையில் அடைத்தார்கள் அவனை நேரடியாக கொலை செய்ய முடியவில்லை யோசித்தரர்கள்

அவனுடைய சிறையில் பெயிண்ட் அடித்து சுத்தம் செய்தார்கள் அதிலிருந்து 3 மாதத்தில் நெப்போலின் இறந்தான் பாவம் , ஜாக்குலின் மீது தீராத காதல் கொண்டிருந்தான் அவனின் காதல் கடிதங்கள் அப்பப்பா சொக்கி விடுவீரகள் அதற்கு தனியா ரகசியமாக போஸ்ட் போடனும்

கொஞ்ச வருடங்களுக்கு முன் அவனுடைய முடியை பரிசோதித்ததில் ஆர்சானிக் விஷம் கலந்திருந்து அன்றைக்கு அவனுடைய சிறையை சோதித்ததில் பெயிண்டுடன் ஆர்சானிக் விஷம் கலக்கப்பட்டிருந்தது

கவலை, மன அழுத்தம் செய்கிற பெரும் பாவம் . உண்ணும் உணவு , குடிக்கும் பானம் வாழ்வின் சூழ்நிலை . . . இப்படி ஏகப்பட்ட சமாசாரங்கள் முடியில் பதிந்து கொள்கிறது

இதனால்தானே என்னவோ . . . . குர்ஆனில்

" அவர்களுடைய உச்சி முடியையும் கால்களையும் பிடித்து இழுத்து நரகத்தில் எறியப்படும் "

திருக்குர்ஆன் 55 : 41

**Rahmath Rajakumaran**
83. 'நபி(ஸல்) அவர்கள் தங்களின் இறுதி ஹஜ்ஜின்போது மினாவில் நின்றிருந்தார்கள். மக்கள் அவர்களிடம் கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தனர். அப்போது ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து 'நான் மார்க்கச் சட்டங்கள் அறிந்தவனல்ல. எனவே, மினாவில் குர்பானி கொடுப்பதற்கு முன் என் தலைமுடியைக் களைந்து விட்டேன்' என்றார். அதற்கவர்கள் 'பரவாயில்லை; நீர் இப்போது குர்பானி கொடுக்கலாம்' என்றார்கள். அப்போது இன்னொருவர் நான் அறியாதவன் எனவே, கல் எறிவதற்கு முன்பே நான் குர்பானி கொடுத்து விட்டேன்' என்றார். அதற்கு நபியவர்கள் 'பரவாயில்லை; எறிந்து கொள்ளும்!' என்றார்கள். முந்தியோ பிந்தியோ செய்துவிட்டதாகக் கேட்கப்பட்ட போதெல்லாம் 'பரவாயில்லை! செய்து கொள்ளுங்கள்' என்றே பதில் கூறிக் கொண்டிருந்தார்கள்'என அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 3. கல்வியின் சிறப்பு

உயிரின் ரகசியம் 13-02-2017




நமது உடல் டி என ஏ என்ற டி _ ஆக்ஸி ரிப்போ நியூக்ளிக் ஆஸிட் ஒரு நீளமான சங்கிலி போன்ற சிறிய கூட்டணுக்களால் ஆனது கண்ணால் பார்க்க முடியாது அதன் அமைப்பை சாமர்த்தியமாக மறைமுகமாக கண்டறிந்திருக்கிறார்கள் அது முறுக்கப்பட்ட நூலேணி

இந்த கூட்டணு A _ அடினைன் T_தயோமைன் C _ சைட்டோசைன் G_ குவானின் என்ற கூட்டணுக்களானது இந்த நான்கு புரதங்கள் சேர்ந்துதான் நம் உடலின் உறுப்புகள் உருவாக்கப்படுகிறது

இந்த புரதங்களை A T C G என்று குறிப்பிடப்பட்டுள்ளது ஒவ்வொரு உறுப்புகளும் அது செய்யப்படும் குறிப்புகள் இந்த 4 புரதங்களை 4 எழுத்துகள் என்று வைத்துக்கொண்டு ஆய்வு செய்யும் போது அவை 3 எழுத்துக்கள் அடங்கிய ஒவ்வொரு வார்த்தைகள் அதாவது ATG CAG TCA GTC இப்படி நம் உடல் முழுவதும் ஒவ்வொரு உறுப்புகளும் நான்கு எழுத்துக்களைக் கொண்டு 3 எழுத்து வார்த்தைகள் அடங்கிய 300 கோடி வார்த்தைகள் உருவாக்கப்பட்டு உள்ளது

இந்த புரத எழுத்துக்கள் அடங்கிய புத்தகம் லட்சமோ லட்ச பக்கங்களைக் கொண்டது அதில் நாம் கொஞ்ச பக்கங்களை படித்திருக்கிறோம் படித்ததிலிருந்து தெரிந்து கொண்டது நம் உடலிலுள்ள ஒவ்வொரு புரத செல்லும் சருமம் தசை வயிறு ஈரல் இதயம் நரம்பு முடி என்று அதை உருவாக்கிய விதம் பற்றி எழுதி வைக்கப்பட்டிருக்கின்றன

சமையல் செய்வது எப்படி என்று புத்தகம் எழுதி சமையலுக்குரிய பொருட்களையும் வைத்து கிச்சன் ரெடி . நாம் பார்க்கும் போது தானாகவே சமையல் சமைப்படும் போது சமைப்பது யார் ?

இப்படித்தான் நம் உடல் உருவாக்கப்படுகிறது இதில் எங்கேயோ ஒரு இடத்தில் உயிர் உள்ளது

நம் உடல் புத்தகத்தை நீங்கள் பார்வையிட

www.ncbi.nim.nih.gov

உங்களுக்குள்ளாகவும் பல அத்தாட்சிகள் இருக்கின்றன அவைகளை நீங்கள் ஆழ்ந்து கவனித்து பார்க்க வேண்டாமா . . ?

குர்ஆன் 51 : 21

ரோமங்கள் 3



நாம் பெற்றிருக்கும் முடி நமது மூதாதையர்கள் நமக்குக் கொடுத்தது

முடி ஒருவருக்கொருவர் நீளம் அடர்த்தி நிறம் அதன் குறுக்கு வெட்டுத் தோற்றம் போன்றவற்றில் வேறுபடுகிறது இதை வைத்து முடி மூன்று வகைப்படுகிறது

முதல் வகை குட்டையாகவும் சுருண்டும் கடிகார வில் போல் காணப்படும் . அதை நீட்டினாலும் சுருண்டு கொள்ளும் . கிட்டத்தட்ட கிட்னி வடிவில் இருக்கும் . இதன் குறுக்கு வெட்டுத் தோற்றம் மைக்ரோஸ்கோபில் ஆராய்ந்துப் பார்த்தால் நீள் அரை வட்டமாக அதாவது கிட்னி ஷேப்பில் இருக்கும் இதை கம்பள அமைப்பு (Wooly) முடி எனலாம்

ஆப்பிரிக்க நாடுகளில் காணலாம்

ஹஜரத் பிலால் ரலி அவர்களின் முடி இந்த அமைப்பில் இருந்திருக்கலாம்

" பின்னர் அங்கே கடும் சுருள் முடி கொண்ட வலக் கண் குருடான மனிதன் ஒருவன் இருந்தான் " இவன் யார் ? என்றேன் "இவன்தான் அல்மஸீஹுத் தஜ்ஜால் " என்ற பதிலளிக்கப்பட்டது

நபிஸல் அவர்கள் கூறியதாக முஸ்லிம் பாகம் 1 ஹதீஸ் 273

இரண்டாவது வகை எந்த வளைவும் நெளிவும் இல்லாமல் நீளமாக முரட்டுத்தனமாக நேர்கோடு போல் சொர சொரப்பாக இருக்கும் இதன் குறுக்கு வெட்டுத் தோற்றம் வட்டவடிமாக இருக்கிறது நிறம் எப்போதும் கருப்பாகவே இருக்கும்

சீனர்களுக்கும் மங்கோலியர்களுக்கும் மற்றும் அமெரிக்க இந்தியர்களுக்கும் அமைந்துள்ளது

மூன்றாவது வகை முடி அலை அலையாக நெளிந்தும் சுருண்டும் மென்மையாகவும் பட்டுப்போல் மிருதுவாகவும் இருக்கும் மைக்ரோஸ்கோப்பில் இதன் குறுக்கு வெட்டுத் தோற்றம் நீள் வட்டமாக இருக்கிறது

இது ஐரோப்பிய மக்களிடம் காணப்படுகிறது

மாநிறத்தில் மனிதர் ஒருவர் இருந்தார் அவரது தலைமுடி அவருடைய தோள்களுக்கிடையே தொங்கிக் கொண்டிருந்தது படிய வாரப்பட்ட தொங்கலான முடியுடையவராக அவர் இருந்தார் நான் " இவர் யார் ? என்று கேட்டேன் " மர்யமின் மைந்தர் மஸீஹ் ஈசா என்று பதிலளிக்கப்பட்டது என்ற நபிஸல் அவர்கள் கூறினார்கள்

முஸ்லிம் ஹதீஸ் 274

ரோமங்கள் 4
முடிநரைப்பதற்கும்உதிர்வதற்கும் பலகாரணங்கள்
சொல்லப்படுகிறது முடியின் வேர்ப்பகுதியில் அமைந்திருக்கும் நிறமி செல்கள் மற்ற செல்களோடு வளர்ந்து முடியின் பகுதியாகிறது ஆனால் அவை மேல் நோக்கி வளர்ந்ததும் இந்த நிறமி செல்கள் நிறமிகளை முடியில் இருக்கும் செல்களுக்கு மாற்றி விட்டு அழிந்து போகிறது
முடியின் செல்கள் சிறிது மஞ்சள் கலந்த பழுப்பு நிறமாகவே இருக்கும் இவை தவிடு நிறததிலிருந்து ஆரம்பித்து மை கருப்பு வரையில் வகை வகையாகக் காணப்படுகிறது
ஆராய்ச்சியாளர்கள் இந்த முடியின் நிறமும் நரைக்கும் பருவமும் அந்தத் தனிப்பட்ட மனிதரின் "ஜீன்" அமைப்பைப் பொருத்தது
வியாதி அதிர்ச்சி வயோதிகத்தில் நரம்பில் ஏற்படும் இரத்த ஓட்டத்தின் குறைவு இந்தக் காரணங்களால் முடிகளில் பதிந்துள்ள நிறமிகளை அழித்து வெண்மைத் தன்மையைக் கொடுப்பதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர்
" அவர் ( ஜகரிய்யா ) தன் இறைவனைத் தாழ்ந்த குரலில் அழைத்து , என் இறைவனே ! நிச்சயமாக என் எலும்புகள் பலவீனமாகிவிட்டன என் தலையும் நரைத்து விட்டது என் இறைவனே ! இதுவரையில் நான் உன்னிடத்தில் கேட்டதில் எதுமே தடுக்கப்படவில்லை . நிச்சயமாக நான் எனக்குப் பின்னர் என் உரிமையாளனைப் பற்றிப் பயப்படுகிறேன் என்னுடைய மனைவியோ மலடாகி விட்டாள் ஆகவே உன் புறத்திலிருந்து எனக்கு பாதுகாவலனை ( ஒரு பிள்ளையை ) வழங்குவாயாக !
திருக்குர்ஆன் ( 19 : 3,4,5 )
ரஹ்மத் ராஜகுமாரன்

ரோமங்கள் 5
தலையில் உள்ள தோலின் தடித்த பகுதியில் வளரும் மயிர்கற்றைகளின் தொகுப்பே காண்டா மிருகத்தின் கொம்பு ஆகும்
யானைகளைக் கூட வலிய சென்று தாக்கும் துணிவையும் வலிமையையும் காண்டா மிருகங்களுக்கு இந்த ரோமக் கொம்பே கொடுத்துள்ளது அப்படிபட்ட வலிமை வாய்ந்தது இந்த மயிர்க் கொம்பு சில காண்டா மிருகங்களுக்கு இரட்டைக் கொம்பு உண்டு
இவ்வளவு வலிமை வாய்ந்த ரோமக் கொம்பிறகு விஷத்தை முறிக்கும் ஆற்றல் இருப்பது நிரூபிக்கப்பட்டுள்ளது
சீனர்கள் ஆப்பிரிக்கள் காண்ட மிருகத்தின்
விடிக் கொம்பை வைத்து மாந்திரிகம் செய்ய பயன்படுத்தி
இதைப் போல் யானையின் முடி சில ஆபரணங்கள் செய்வதில் பெருமளவு பயன்படுகிறது
ஆனால் குர்ஆனில் ஆடு ஒட்டகத்தின் ரோமங்களின் பயன்பாட்டை குறிப்பிடுகிறான்
திருக்குர்ஆன் 16 : 80
உங்களுக்கு எளிதாக இருக்கும் (ஆடு மாடு ஒட்டகை போன்ற கால்நடைகளின் தோல்களிலிருந்தும் வீடுகளை ) உங்களுக்கு ஆக்கினான்
வெள்ளாட்டின் உரோமங்கள் ஒட்டகையின் உரோமங்கள் செம்மறியாட்டின் உரோமங்கள் ஆகியவற்றிலிருந்தும் உங்களுக்கு ஆடைகளையும் குறிப்பிட்ட காலம் வரை அவற்றின் சுகத்தையும் அமைத்துத் தந்திருக்கிறான்
திருக்குர்ஆன் 16 : 80




மனித மூளை 1

குழந்தைக்கு முத்தம் தருவது, அதேமுத்தம் மனைவிக்குத்

தரும்போதுவித்தியாசப்படுத்துவது ,நம் உடல் உஷ்ணம் 98 டிக்ரி பாரன் ஹைட்டுக்கு அருகில் வைப்பது , கம்பிமேல் நம்மில் சிலர் நடப்பது , "உப்புமாவில் ஒரே உப்பு . . . எடு அந்த பால்கோவா நல்லா இருக்கிறது "என்று தித்திப்பு உணர்வது ,

" நாங்களா இஷ்டப்பட்டுதான் கூவத்தூரில் இருக்கிறோம் . . ச்சே . ச்சே அவங் சொல்றது பொய் " என்று முகத்தில் பயத்தை மறைத்து பேசுவது ,

நல்லது கெட்டது குற்றம் பாவம் என்பதையெல்லாம் தீர்மானிப்பது , 10 பேர் ஒரு வேலையை 8 நாட்களில் செய்தால் 8 பேர் 2 வேலை எத்தனை நாட்களில் செய்வார்கள் ? என்று கணக்கு போடுவது

" அட , நாளைக்கு ஆளுநர் கண்டிப்பாக MLA களை கூப்பிடுவார் என்று வருங்காலத்தைக் கணிப்பது , செக்ஸ் உணர்ச்சி , தியானம் தாய்பாசம் . . . . . . இவை அனைத்துக்கும் காரணம் ஒரு இரண்டு எழுத்துச் சமாசாரம் "மூளை"

ஏன் , இந்த பாராவை எழுதியதும் மூளைதான் அர்த்தம் பண்ணிக் கொண்டதும் மூளைதான்

மூளை ஸ்பைனல் கார்டு என்னும் முதுகுத் தண்டியிலிருந்து முளைக்கிறது

முட்டைகோஸ் தண்டிலிருந்து மடிப்பு மடிப்பாக இலைகள் வளர்வது போல் அல்லது காலிஃபுளோவர் மாதிரி கொத்தா சொர சொரப்பா இப்படித்தான் மூளை இதை முன் மூளை நடு மூளை பின் மூளை என்று பிரித்திருக்கிறார்கள்

முன் மூளையில்தான் சிந்தனை, தந்திரம் , நல்ல ஆய்வு , கேப்மாறித்தனம் , சூழ்ச்சி , ஆக நல்லது கெட்டது போன்றவை இங்கே இருந்துதான் யோசிக்கப்படுகிறது அதனால் என்னவோ குர்ஆனில் அல்லாஹ் :

" நிச்சயமாக நான் என்னுடைய காரியங்கள் அனைத்தையும் என்னையும் உங்களையும் படைத்துப் பாதுகாப்பவனாகிய அல்லாஹ்விடமே ஒப்படைத்து விட்டேன் ஒவ்வொரு உயிருள்ளவைகளின் முன் உச்சிக் குடுமியையும் அவனே பிடித்துக்கொண்டிருக்கிறான் . . . .

திருக்குர்ஆன் 11 : 56

ஆலமீன் ( உலகங்கள் ) 16-02-2017




மெட்டா கேலக்ஸி என்னும் ஆகாய கங்கை பால்வீதியில் சூரியன் என்னும் ஒரு நடுத்தர நட்சத்திரச் சுற்றி வரும் 9 கோள்களில் சூரியனிலிருந்து மூன்றாவதாக சூரியனைச் சுற்றிவரும் " பூமி " என்கிற நம்முடைய உயிர் கிரகத்திற்கு , . . . . .
"சித்ரத்துல் முன்தஹா " என்ற பூமியை விட பல மடங்கு பெரிய கிரகத்தில் இறக்கைகளுடைய ஜீவன்கள் வாழக்கூடிய இந்த சி.முன்தஹா கிரகத்தில் . . 600 இறக்கைகள் உடைய ஜிப்ரீல் என்கிற வானவர் மூலமாக 70,000 திரைகளுக்கு அப்பாலுள்ள இறைவனால் , ஒளி பொருந்திய திருக்குர்ஆன் என்கிற வேதம் இறை ஒளியின் முதல் படைப்பான நபிஸல் அவர்களுக்கு லைலத்துல் கதிர் என்ற ஒளி பொருந்திய ஓர்இரவில் அருளப்பட்டது .
இவ்வேதம் எங்கிருந்து யாரால் அருளப்பட்டதோ அங்கே , அவனை தரிசிக்க
இறக்கைகள் இல்லாத நபிஸல் அவர்களுக்கு இறக்கையுடன் பறக்கக் கூடிய ஒரு வாகனம் ஒன்றை அது கழுதை விட பெரியதும் கோவேறு கழுதை விட சிறியதுமான புராக் என்னும், விலங்கு பாதி பறவை பாதியுமான ஒரு ஜீவன் மூலம் 7 வானம் தாண்டி , சித்ரத்துல் முன்தகா என்ற கிரகத்தின் வழியாக " அர்ஷ் " என்னும் இறைதளத்தில் இறைவனை தரிசித்து 50 வேளைவணக்க வழிபாட்டை பெற்று, வரும் வழியில் இன்னொரு தளத்திலோ அல்லது இன்னொரு கிரகத்திலோ நபி மூஸா அலை அவர்கள் 50 வேளை வணக்க வழிபாட்டையை குறைத்துக் கேட்க திரும்பத் திரும்ப அனுப்பி கடைசியில் 5 வேளையாக குறைக்கப்பட அந்த தொழுகை கொண்டு வந்து இந்த பூமியில் நடைமுறைப்படுத்தப்படுகிறது .
இந்த சம்பவத்தில் எத்தனை எத்தனை உலகங்கள் மாறுபட்ட வேறுபட்ட ஜீவராசிகள் எப்போதுமே பறந்து கொண்டிருக்கும் வானவர் ஜிப்ரீல் (அலை) , பூமியில் எப்போதோ வாழ்ந்து மரணித்த நபி மூஸா அலை அவர்கள் . . வேறு ஒரு வானத்தின் கிரகத்தில் நிதர்சனமாக நிகழ்காலத்தில் இரு நபிமார்களும் பேசிக்கொள்கிறார்கள். . . .
நவீன விஞ்ஞானத்தால் கற்பனை செய்து பார்க்க முடியாத நிகழ்ச்சிகள் இதெல்லாம் இஸ்லாம் மிக சர்வ சாதாரணமாக கூறுகிறது . .
ஆனால் வேற்று கிரகத்தைப் பற்றி யூதர்களும் கிறிஸ்தவர்களும்தான் நிறைய பேசுகிறார்கள் , நிறைய எழுதுகிறார்கள் . நிறைய சினிமா எடுக்கிறார்கள். இஸ்லாம் வேற்றுகிரக சிந்தனையில் எத்தனை பின்னடை பெற்று இருக்கிறது என்பதை நினைத்தால் வருத்தமாக இருக்கிறது .அவர்களுக்கு கற்பனையான வேற்று கிரக விஷயங்கள் நமக்கு நபி (ஸல்) அவர்களால் நிதர்சன உண்மையாக ஆதாரத்தோடு தந்திருக்கிறார்கள். இருந்தும் என்ன பயன் ?
"" ஆலமீன் " (உலகங்கள் ) என்ற வார்த்தையை நாம் எந்த மாதிரி விளங்கி இருக்கிறோம் ? உலகங்கள் வேற்று கிரகங்களைப் பற்றி நமக்கு சொல்லப்பட்ட குர்ஆனையும், ஹதீஸ்களையும் பட்டுத் துணியில் கட்டி எட்டா உயரத்தில் வைத்து விட்டு யூதர் , கிருஸ்துவர் , நெருப்பு வணங்கிகள் சொல்லக் கூடிய கற்பனை வேற்றுக் கிரகத்தைப் பற்றி ராப்பகலாக படித்து படித்து வியக்குகிறோம் .
நம் கையில் வெண்ணெய்யை வைத்துக் கொண்டு நெய்யுக்கு அலைகிறோம் . நம் வேதம் சொல்லிய வேற்று கிரகத்தைப் பற்றி நம் பாராமுகமாக இருக்கிறோம் .

இன்றைய இளைய சமுதாயத்திற்கு என்ன விளக்கம் கொடுக்கப்போகிறோம் ? தொழுகையில் தொப்பியை போடாவா ? கழற்றவா ? ஆட்காட்டி விரலை நீட்டவா ? மடக்கவா ? ஆட்டவா ? என்ற சில்லரைத் தனமான சித்தாந்திற்கே வேதமும் ஹதீஸும் பயன்படுகிறதே தவிர வேற்று கிரகத்தைப் பற்றிய ஞானம் .......?
நான் முதல் வானம் போனேன், நபி ஆதமைப் பார்த்தேன் இரண்டாம் வானம் போனேன் நபி ஈஸாவையும் , நபி எஹ்யாவையும் பார்த்தேன் .இப்படியாக நபிமார்களை ஏழு வானம் பார்த்தேன் . அங்கோர் கஃபா பைத்துல் மஹ்மூரில் நபி இப்ராஹிம் (அலை) அவர்களைப் பார்த்தேன் என்று நபி (ஸல்) சொன்னது பால் வீதி பால் வீதியாக பயணித்தைப் பற்றி பக்கம் பக்கமாக சொன்னதைப் பற்றி ..... இதேயே யூதருடைய நபியோ, கிருஸ்துவருடைய நபியோ சொல்லி இருந்தால் எத்தனை ஞானம் பெற்றிப்பார்கள் .எத்தனை கிதாபுகளை எழுதி அடுக்கி இருப்பார்கள். ஆனால் .....
நம்மில் பலருக்கும் வேற்றுகிரமும் தெரியவில்லை , பால் வீதியும் புரியவில்லை . ஆனாலும் அறிவார்ந்த வேதத்தை மட்டும் பெற்றிருக்கிறோம் .
ர ரா

மனித மூளை 2



மூளையைத் தெரிந்து கொள்ளவதற்கு முன் அதன் நரம்புகளை தெரிந்து கொள்ள வேண்டும்
ஆதாரமாக முதுகுத் தண்டில் ஓடும் ஸ்பைனல் கார்டு, மூளைக்குச் செய்திப் போக்குவரத்துக்கான ஜீவநதி சுமார் ஒன்றறை அடி (46 cm ) நீளமுள்ள இந்த நரம்பு கயிறு மூளையின் அடிப்பாகத்திலிருந்து ஆரம்பித்து கீழே இறங்குகிறது அது முதுகெலும்புக்குள் பத்திரமாக வைக்கப்பட்டு இருக்கிறது ( இந்த விஷயத்தை கவனத்தில் வைக்கவும் )
இதிலிருந்து அங்கங்கே கிளைகள் போல நரம்புகள் பிரிந்து , உடம்பின் சகல பாகங்களுக்கும் கனெக்ஷன் போகிறது
இதிலிருந்து 31 ஜோடிகள் பிரிந்து கடைசியில் குதிரைவால் மாதிரி வெளிவரும்
மூளையிலிருந்து வரும் செய்திகளை பிடரியிலிருந்து ஆரம்பிக்கும் இந்த நரம்புகள் வழியே அந்த புலன்களுக்கு கொண்டு செல்கிறது
கையைத் தூக்கு , அவ வர்ற கண்ணைச் சிமிட்டு , நெருங்கிப் போ , இன்னும் போ , இந்த செயல்பாடுகளுக்கு மோட்டார் நரம்புகள் பயன்படுகிறது
கிட்டே நெருங்கியதும் இதயம் படபடக்கிறது கொஞ்சம் வியர்க்கிறது ரத்த சப்ளை அதிகமாகி வயிற்றில் பட்டுப் பூச்சிகள் ஊருற மாதிரி . . . இதெல்லாம் ஆட்டானமஸ் நரம்புகள் செயல்படுத்துகிறது
ஏனப்பா , இப்ப எவள் வந்தால் என்ன . ? நீ என்ன வம்சம் ? இந்த சின்ன விஷயத்தில் போய் உன் கண்ணியத்தை இழந்து விடாதே ! . . போ இரண்டு நிமிஷம் கண்ணைப் பொத்தி உன்னை நிதானப்படுத்து . . . சரியா ஆகிவிடுவே . . இன்னும் ஒரு நிமிஷம் இதய படபடப்பு குறைஞ்தா ? அவ்வளவுதான் அப்படி திரும்பி வந்து விடு வந்து விடு . . . இந்த வேலைகளை ஸிம்பத்தட்டிக் என்ற நரம்புகள் கட்டுப்படுத்துகிறது
ஆக இந்த நரம்புகள் பிடரியில் ஆரம்பித்து கை கால் விரல்களின் நுனி வரை சென்றடைகிறது
இதனால்தானோ என்னவோ குர்ஆனில் இறைவன் . . . . .

" இவர்களுடைய உள்ளங்களில் நாம் திகிலை உண்டு பண்ணுவோம் நீங்கள் அவர்களுடைய பிடரிகளின் மேல் வெட்டுங்கள் அவர்களை கணுக்கணுவாகத் துண்டித்து விடுங்கள் ' என்று அறிவித்ததை நினைத்துப் பாருங்கள் "
திருக்குர்ஆன் 8 : 12
ரஹ்மத் ராஜகுமாரன்

## மனித மூளை 3




மூளையின் அடியில் பிட்யூட்டரி
சுரப்பி உள்ளது (Pituitary gland) உள்ளது இதனை நெற்றியில் ஒளிரும் நீல நிற விளக்கு என்கிறார்கள் இது பட்டாணி சைஸ்க்கு இருக்கிறது இதற்குள்ளும் இரண்டு சுரப்பி உள்ளது உங்கள் வளர்ச்சி ஆண் - பெண் பிரத்தியேகங்கள் ,இரவு சாப்பாட்டை சக்தியாக மாற்றி நடுநிசியில் உங்கள் பிரத்யேக இயக்கத்திற்கு உதவுகிறது
இந்த சுரப்பி குறைவாக சுரந்தால் குள்ளர்களும் அதிகமாக சுரந்தால் ராட்சதர்களும் உண்டாகிறார்கள் மூத்திரம் பெய்வது , தாய்ப்பால் சுரப்பது இந்த மாதிரியான காரியங்களை செய்கிறது எங்கிருந்து எங்கே கட்டுப்படுத்துகிறது பாருங்கள் !
அடுத்து மூளைத் தண்டின் பின் பக்கத்தில் புடைத்தது போல இருப்பது பினியல் சுரப்பி
(Pineal gland ) இது ரொம்பவும் வித்தியாசமானது இதை மூன்றாவது கண் என்கிறார்கள் கண்களுக்கும் இதற்கும் கனெக்ஷன் இருக்கிறது கண்ணை மூடும்போது சாந்தமாக இருக்கிறது திறந்ததும் சிலிர்த்துக் கொள்கிறது இது மனிதனாய் மனிதனுக்குள் மறைந்திருக்கிறது என்கிறார்கள் அது எப்படி என்று என்னிடம் கேட்காதீர்கள்
இதுவே உடலியல் கடிகாரமாக இயங்கிக் கொண்டு இருக்கிறது இது இரவு 9 மணிக்கு சுரக்கிறது இது சூரிய சந்திர மற்றும் நட்சத்திரங்களின் ஒளியுடன் தொடர்பு உடையது
ஆன்மீக முன்னேற்றத்திற்கு இதுவே பாலமாக அமைகிறது தியானம் திக்ரு போன்றவற்றில் ஈடுபடும் போது இது வலிமைப் பெறுகிறது இதன் வளர்ச்சி அதிகமானால் மறைவான சேதிகள் கண்களுக்கு தெரியும் என்கிறார்கள்
இதனுள் மிக மிக சிறிய வெற்றிடம் இருக்கிறது இதைத்தான் கல்ப் என்று சொல்கிறார்களோ எனக்குத் தெரியவில்லை
குர்ஆனில்
பிடரி நரம்பை விட பக்கத்தில் இருக்கிறான்
திருக்குர்ஆன் 50 : 16
அந்த இடம் இதுதானா ? என்பது இன்னும் சிந்தனைக்குரியதாக இன்னும் இருக்கிறது
மொத்தத்தில் பினியல் சுரப்பி விஞ்ஞானத்தையும் மெஞ்ஞானத்தையும் இணைக்கும் ஒரு கடவுச் சொல்லாக எனக்குப்படுகிறது . . . உங்களுக்கு ?







வயிறு 1

ரெனே என்ற பிரஞ்சுக்காரர் சின்னப் பஞ்சு உருண்டையை நூலில் கட்டி ஒரு பறவையின் வயிற்றுக்குள் செலுத்தி கொஞ்ச நேரம் கழித்து பஞ்சை வெளியே எடுத்தார் பறவை சாப்பிட்ட உணவுகளோடு சம்பந்தமே இல்லாத பல ரசாயனத் திரவங்கள் அந்தப் பஞ்சு உருண்டையில் இருந்தது அந்த ரசாயனத் திரவத்தை அவர் மாமிசத் துண்டுகள் மீது பிழிந்து பார்த்தார் கெட்டியான மாமிசம் குழை குழைந்து போனது

ஜீரணத்திற்காக வயிறுகளில் உற்பத்தியாகும் அமிலம் அந்த உணவை சக்தியாக மாற்றுவதற்கு கொஞ்ச நேரத்திலேயே கழிவாக மாற்றி அந்த உணவே இல்லாமல் செய்துவிடுகிறது உடனே அடுத்தடுத்து ஜீரணமாகி இன்னும் உணவு எங்கே ? என்று கேட்டுக் கொண்டே இருக்கிறது

இதை இறைவன் நரகின் வயிறு பற்றி கூறும் போது . . .

" அந்நாளில் நரகத்தை நோக்கி " உன்னுடைய வயிறு நிறைந்து விட்டதா ? என்று நாம் கேட்போம் அதற்கு அது " இன்னும் ஏதும் இருக்கின்றதா ? என்று கேட்கும்

திருக்குர்ஆன் 50 : 30

ஒரு சாண் வயிற்றுக்கே மனிதன் படும்பாடு அப்பாடா . . . முடியலே . . நரகத்தின் வயிற்றை கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள் . .

வயிறு 2

1895 ம் ஆண்டு , நியூயார்க நகரில் டாம் என்ற ஒன்பது வயதுச் சிறுவன் குளிர் பானம் குடித்தான் அவ்வளவு தான் தொண்டையிலிருந்து வயிற்றுக்கு உணவைக் கொண்டு செல்லும் Esophagus என்ற உணவுக்குழாய் மோசமாகப் பழுதடைந்தது !

காரணம் குளிர்பான பாட்டிலில் குளிர்பானத்திற்குப் பதிலாக நிரம்பி இருந்தது ஆசிட் !

சிறுவனை மருத்துவமனைக்குக் கொண்டு போனார்கள் உணவுக்குழாய் ஆசிட்டால் துண்டு துண்டாகி சிதைந்து போனது இதனால் மாற்று உணவுக்குழாய் தொண்டைக்கும் இரப்பைக்கும பொருத்துவது என்று டாக்டர்கள் முடிவு செய்து ஆப்ரேஷனும் தொடங்கியது

ஆபரேஷன் டேபிளில் இரப்பையோடு செயற்கையான உணவுக் குழாயை இணைத்துவிட்டு உணவுக்குழாயின் இன்னொரு முனையைத் தொண்டையோடு இணைக்க டாக்டர்கள் முயற்சி செய்த சமயம் . . . . டாமின் நிலை மோசமானது !

டாக்டர்கள் அதோடு ஆபரேஷனை முடித்துக் கொண்டார்கள் சில நாட்களில் டாம் குணமானான் ஆனால் உணவை மென்று விழுங்க முடியாது அதற்குப் பதிலாக டாக்டர்கள் வயிற்றில் புதிதாகப் பொருத்திய உணவுக் குழாயில்தான் அவன் உணவை அவனே மென்று துப்ப வேண்டும்

ஸ்டிவர்ட் , ஹோரோல்ட் என்ற இரண்டு டாக்டர்கள் சிகிச்சை அளித்தார்கள் அவனது உணவுக் குழாயை தொண்டையோடு சேர்க்க பலவாறு முயற்சி செய்தார்கள் முடியாவில்லை

டாம் 53 வயதில் மண்வெட்டியை எடுத்து வேலை செய்யும் போது அவனது செயற்கை உணவுக்குழாய் பழதுபட்டது டாம் இறந்தான்

இப்படி விநோதமான பல ஆராய்ச்சிகள் வயிற்றில் செய்யப்பட்டு ஆய்வுகள் இன்னும் தொடர்ந்து கொண்டே இருக்கிறது !

டாமாவது ஆசிட் குடித்தால் உணவுக்குழாய் துண்டு துண்டானது இதனால் இரப்பையில் ஆசிட் போகாமல் தடுக்கப்பட்டு இரப்பை துண்டு துண்டாகாமல் பாதுகாக்கப்பட்டது

ஆனால் குர்ஆனில் கொதிக்கும் நீருக்கே குடல் துண்டு துண்டானது பற்றி . . .

. . . " பரிசுத்தமான ருசி மாறாத பாலாறுகள் இருக்கின்றன திராட்சை ரச ஆறுகளும் இருக்கின்றன அதை குடிப்பவர்களுக்குப் பேரின்பமளிக்கக் கூடியது தெளிவான தேனாறுகளும் இருக்கின்றன . . . . . . . இத்தகைய இன்பங்களை அனுபவிப்பவனுக்கும் நரகத்தில் என்றென்றுமே தங்கியிருந்து கொதிக்கும் நீர் புகட்டப்பட்டு குடல்களெல்லாம் துண்டு துண்டாகி விடக்கூடிய நரகவாசி ஒப்பாக முடியுமா ?

திருக்குர்ஆன் 47 : 15

வயிறு 3



நமது வயிற்றின் இரப்பையில் Gastrin என்று ஒரு சுரப்பி இருக்கிறது இதுதான் அமிலங்கள் சுரக்கும் Parietal cell களைத் தூண்டி விடுகிறது

காரம் சாப்பிட்டால் சிலருக்கு அமிலம் அதிகமாக சுரக்கும் வேறு சிலருக்கு புளிப்பு சாப்பிட்டால் அமிலம் அதிகமாக சுரக்கும் இன்னும் சிலருக்கு எண்ணெய் ! இதில் எது அதிகம் சாப்பிட்டால் வயிற்று வலி வருகிறதோ அதை தவிர்க்க வேண்டும்

இரப்பையில் அமிலம் சுரப்பதற்கு இன்னொரு முக்கிய காரணம் மனசு !

ஆம் மனசுக்கும் அமிலத்தின் சுரப்பிகளுக்கும் வேகஸ் நரம்பு (Vagus Nerve)

என்ற ஒரு பாலம் உண்டு டென்ஷன் கவலை போன்றவற்றால் மனசு பாதிக்கப்படும் போதெல்லாம் இரப்பையில் அமிலம் அளவுக்கு அதிகமாக சுரந்து வயிற்றில் நெருப்பு பற்றிக் கொண்டதோ என்று எண்ணத்தோன்றும் அளவுக்கு அமிலம் சுரக்கும்

பொய் பித்தலாட்டம் ஏமாற்றுதல் இதனால் நாம் பிடிபட்டுவிடுவமோ என்ற பயம் அந்த நேரத்தில் வயிற்றில் ஒரு பந்து சுழற மாதிரி இருக்குமே அதுதான் அமிலம் சுரக்கிறது என்று தெரிந்து கொள்ள வேண்டும்

Hurry, Worry , Curry இந்த மூன்றும் வயிற்றில் அமிலம் சுரக்க வைக்கிறது

ஆக மனசு படாத பாடு போதெல்லாம் அமிலங்கள் மழையாக வயிற்றில் பொழியும்

இப்படி நிறைய காரணங்களால் அமிலம் வயிற்றில் அதிகமாக சுரக்கும்

குர்ஆனில் அல்லாஹ்

" எவர்கள் அநாதைகளின் பொருள்களை அநியாயமாக விழுங்குகிறார்களோ அவர்கள் தங்கள் வயிற்றில் நிச்சயமாக நெருப்பையே கொட்டிக் கொள்கிறார்கள் பின்னர் (மறுமையில்) கொழுந்துவிட்டெரியும் நெருப்பில் புகுவார்கள்"

திருக்குர்ஆன் 4 : 10

"எவர்கள் வேதத்தில் அல்லாஹ் இறக்கியவை மறைத்துவிட்டு அதற்கு விலையாகச் சொற்பத் தொகையைப் பெற்றுக் கொள்கின்றனரோ அவர்கள் நிச்சயமாக தங்கள் வயிற்றில் நெருப்பையே நிரப்பிக் கொள்கின்றார்கள்

திருக்குர்ஆன் 2 : 174

வயிறு 4



தொப்பை ஏன் விழுகிறது ? வயிற்றில் எது தொப்பையாக ஆகிறது ?
ஒரே வார்த்தையில் சொல்லப்போனால் கொழுப்புத்தான் காரணம் நாம் உட்கொள்ளும் வெண்ணெய் இறைச்சியில் பொறித்தது பாயா தலைக்கறி போன்ற வஸ்துகளில் இருக்கும் கொழுப்புச் சத்து !' இதையெல்லாம் நிறுத்திவிட்டால் உடனே தொப்பை "ஜிக்கோ" என்று போய்விடும் என்று எண்ணினால் அது தப்பு கொழுப்பில் இருக்கும் ட்ரைகிளிஸ்ரைட்ஸ் என்கிற சமாசாரம் நம்முடைய செல்களில் பரவுகின்றன இந்தப் பரவலைச் சில ஹார்மோன்கள் கட்டுப்படுத்துகின்றன உடம்பில் இந்தக் கொழுப்புச் சத்து அடிபோஸைட்ஸ் என்னும் வகை செல்கள் மூலம் பல பாகங்களில் சேர்த்து வைக்கப்படுகிறது
" நகத்தையுடைய அனைத்தையும் யூதர்களுக்கு நாம் ஹராமாக்கியிருந்தோம் ஆடு மாடு ஆகியவற்றின் முதுகுகளிலோ அல்லது வயிறுகளிலோ அல்லது எலும்புகளுடன் கலந்தோ இருக்கும் கொழுப்பைத் தவிர மற்ற அவற்றின் கொழுப்பையும் ஹராமாக்கினோம் அவர்கள் அக்கிரமம் செயத காரணத்திற்காக அவர்களுக்கு இதனை நாம் கூலியாகக் கொடுத்தோம் நிச்சயமாக நாம் உண்மையே கூறுகிறோம்
திருக்குர்ஆன் 6 : 146
உணவுப் பழக்கங்களே அதிக காரணம் ஏகப்பட்ட சர்க்கரை போட்டு காபி டீ ஏகப்பட்ட ஸ்வீட் சாக்லேட் தேவைக்கு அதிகமான சாப்பாடு ராத்திரி 12 மணிக்கு அன்ன ஃபிஷியலாக திடீர் 'பஃபே' இதெல்லாம் காரணம் !
இன்னொரு விஷயம் . . . கவலை அதனால் டென்ஷன், குடி (ஸாம்போன் ஓல்ட் இருக்கா ?) தேகப் பயிற்சி குறைவு , நாற்காலியை விட்டு நகராத வியாபாரிகள் ஏகப்பட்ட பார்ட்டியில் ஒரே தீவனத்திலே கவனம் , இவர்களுக்கெல்லாம் உடம்பில் உள்ள கொழுப்புச் சத்து எரிக்கப்படாமலே லேயர் லேயராகச் சருமத்தின் இடைவெளியில் நீக்கமற நிறைந்து தொப்பை எந்த அளவுக்கும் குறையாமல் மேலும் மேலும் கூடிக்கொண்டே போகிறது !
" நபிஸல் அவர்கள் மிஹ்ராஜின் போது ,
வட்டி வாங்கி வந்தவர்களையும் பார்தார்கள் அவர்களது வயிறு மிகப்பெரியதாக இருந்ததால் அவர்கள் தங்களது இடங்களில் இருந்து எந்தப் பக்கமும் திரும்ப சக்தியற்றவர்களாக இருந்தனர் ஃபிர்அவ்னின் குடும்பத்தாரை நரகத்தில் கொண்டு வரப்படும்போது அவர்கள் இந்த வட்டிக்காரர்களை கடந்து செல்வார்கள் அப்போது நகர முடியாமல் இருக்கும் இவர்களை மிதித்தவர்களாகச் செல்வார்கள் " _ ஹதீஸ்
VAITHIYER MALIK

சித்தர்கள் காட்டிய எட்டு 8 வடிவ நடை பயிற்சி

======================================================
ஒருவர் தினமும் 30முதல் 60 நிமிடங்கள் நடைப்பயிற்சி
மேற்கொள்வதால் ஆரோக்கியம் மேம்படும், பல்வேறு நோய்களிலிருந்து பாதுகாத்துக் கொள்ளலாம். நடைப்பயிற்சி சாதாரணமாக செய்யாமல் எட்டு வடிவத்தில் நடப்பது மிகமிகச் சிறந்ததாகும்.

பயிற்சியும் செய்முறையும்
மேற்படி படத்தில் இருப்பது போல் 6 அடி அகலம் மற்றும் 8 முதல் 12 அடி நீளம் அளவில் தரையில் எட்டு ஒன்று வரைந்து கொள்ளவும். அதை வடக்கு தெற்கு முகமாக வரைந்து கொள்ளவும். படத்தில் உள்ளது போல் அம்பு குறியிட்டு காட்டியது போல் பாதையில் "1" குறியில் இருந்து ஆரம்பித்து "5" வரை சென்று மீண்டும் "1" வர வேண்டும்.
நடக்கும் பொழுது மிகவும் வேகமாகவோ அல்லது மிகவும் மெதுவாகவோ நடக்கலாகாது. மிகவும் இயல்பாக நடக்க வேண்டும்.
தினமும் காலையும் மாலையும் 15 – 30 நிமிடங்கள் நடப்பது
மிகச்சிறப்பு. நடக்கவேண்டிய நேரம் காலை அல்லது
மாலை மணி 5 – 6 (am or pm). வெளியே செல்ல
முடியாதவர்கள், வீட்டுக்குள் நடக்கலாம். நல்லமுறையில் பயன்பெற,
இந்த பயிற்சியை இடைவிடாது
குறைந்தது 21 நாட்கள் செய்ய வேண்டும்.
நடைப்பயிற்சி முடியும்வரை மௌனமாக நடக்க வேண்டும்.
மனதிற்குள் மந்திரம் ஜெபித்தபடி நடக்கலாம்.
முத்திரைகள் செய்ய தெரிந்திருந்தால் பிரான
முத்திரையில் நடக்கலாம்.
இப்பயிற்சியை தெற்கிலிருந்து வடக்கு நோக்கி
அல்லது வடக்கிலிருந்து தெற்கு நோக்கி செய்ய
வேண்டும். 15 வது நிமிட முடிவில் இருநாசித்துவாரங்களின்
மூலம் உள்ளிழுக்கப்பட்ட முழு மூச்சுக்காற்றையும் உணரலாம். பின்னர்
நடைப்பயிற்சியானது மேலும் 15 நிமிட நேரம் தொடர
வேண்டும். இதற்கிடைப்பட்ட நேரத்தில்
மார்புச்சளி தானாகவே வெளியே காரி உமிழ்வதாலோ அல்லது கரைந்து இறங்குவதை உணரலாம்.
பலன்கள்
இந்த பயிற்சியை காலை மாலை 1 மணிநேரம்
செய்து வந்தால் உள்ளங்கை விரல்கள் ரத்த
ஓட்டத்தினால் சிவந்திருப்பதை உணரலாம். 70வயது
50 வயதாக குறையும். முதுமை இளமையாகும்.. சர்க்கரை வியாதி குறைந்து முற்றிலும் குணமடையும். குளிர்ச்சியினால் ஏற்படும் தலைவலி, மலச்சிக்கல்
தீரும்.
முழுமையாக சுவாசிக்கப்படும் மூச்சுக்காற்றால் 5 கிலோ பிராண வாயு உள்ளே சென்று மார்புச்சளி நீக்கப்படுகிறது.
இரண்டு நாசிகளும் முழுமையாக சுவாசிப்பதால் நாசியில் உண்டாகும்
சளியிலிருந்து நிவாரணம் கிடைக்கிறது.
கண்பார்வை அதிகரிக்கும், ஆரம்பநிலை கண்ணாடி
அணிவது தவிர்க்கப்படுகிறது. மற்றவர்களுக்கு
மூக்குக்கண்ணாடியின் பாயிண்ட் அதிகமாகாமல்
பாதுகாக்கப்படுகிறது.
செவிகளின் கேட்கும் திறன் அதிகரிக்கிறது. உடலினுள் அதிகப்படியான 5 கிலோ பிராண வாயுவால் உடல் சக்தி பெறுகிறது.
காலையிலும் மாலையிலும் 1 மணிநேரம் இந்த பயிற்சியை செய்து வந்தால் (ஹெர்னியா) குடலிறக்கநோய் குணமாகும்.
அளவான நடைப்பயிற்சியால் இரத்த அழுத்தம்
குறைக்கப்படுகிறது.
இரண்டுவேளை 30 நிமிடம் செய்தால், பாத வெடிப்பு, வலி, மூட்டு வலிகள் மறைந்து விடுகின்றன. முதியோரும், நடக்க இயலாதோறும், பிறர் உதவியுடன் சக்கரவண்டியின் மூலம் செய்து பயன் அடையலாம்.
தினமும் 'எட்டு' நடைப்பயிற்சி செய்வதால் நாம் ஆரோக்கியமாக வாழ முடியும். உடல் பருமன், இரத்த அழுத்தம், இதய நோய், ஆஸ்துமா, கண் நோய்கள், மூக்கடைப்பு, தூக்கமின்மை, மூட்டுவலி, முதுகுவலி, மன இறுக்கம், போன்ற கொடிய நோய்கள்கூட மெல்ல மெல்ல பூரணமாக குணமாகி விடுகின்றன. நல்ல
முறையில் பயன்பெற, இந்த பயிற்சியை இடைவிடாது
குறைந்தது 21 நாட்கள் செய்ய வேண்டும்


தோல் 1

சதைப் பிண்டத்தின் போர்வை தோல் , மனித உடலில் பெரிய உறுப்பு தோல்தான் சசராசரி மனித தோலின் பரப்பளவு 20 சதுர அடி தோலின் கனம் 2 மில்லி மீட்டர்தான் உள்ளங்கை பாதம் பிட்டம் போன்ற இடங்களில் இது இன்னும் கொஞ்சம் அதிகமாக இருக்கும்
உடைகளில் உள்ளாடை மேலாடை என்று இருப்பது போல் நமது தோலிலும் புறத்தோல் அகத்தோல் என்று இரு வகை உண்டு
அகத்தோலுக்கு கீழே வியர்வை சுரப்பி வாசனை சுரப்பி எண்ணெய் சுரப்பி மற்றும் மிக முக்கியமான வலி உள்வாங்கிகள் (pain Receptors) என்று தோல் சார்பு உறுப்புகள் (Appendages) உள்ளன
இந்த தோல் சார்பு உறுப்புகள் நமக்கு செய்யும் பணிவிடைகள் கொஞ்சம் நஞ்சம் அல்ல: இறைவன் நமது உடலை எப்படியெல்லாம் பாதுகாக்கின்றான் என்பதற்கு தோல் மிகச் சிறந்த ஓர் அத்தாட்சியாகும்
தோல் நமது சதையின் போர்வை மட்டும் அல்ல நமது வடிவத்திற்கும் பளபளப்பைக் கூட்டி அழகு ஊட்டுவதும் இந்த தோல்தான்
" திட்டமாக நாம் மனிதனை மிக்க மேலான வடிவத்தில் படைத்தோம்
திருக்குர்ஆன் 95 : 04
இந்த தோலை ரப்பர் பொம்மை மாதிரி நினைத்துக் கொண்டு ஆப்பிரிக்க கறுப்பர் மைக்கேல் ஜாக்சன் செய்து கொண்ட பல்வேறு வெள்ளை நிறம் மாற்றி ஆபரேஷன்கள் மூலம் உலகுக்கு பிரபலமான விஷயம்தான் " காஸ்மெடிக் சர்ஜரி ". இந்த நிற மாற்றி ஆப்ரேஷன்கள்தான் அவரது உயிருக்கு உலையானது என்பது பெரிய சேதி.
முகத்தை கத்தியால் வரிவரியாகக் கீறிக் கொண்டு தோலை தடிக்கச் செய்து கொள்ளும் ஆப்பிரிக்க பழங்குடியினர் இதுதான் அழகு என்று சொல்லிக் கொள்கிறார்கள்
தமிழக தென்மாவட்ட கிராமங்களில் உள்ள ஜாக்கெட் போடாத அம்மணிகளுக்கு , காது துவாரத்தை கிரிக்கெட் பந்து நுழையும் அளவுக்குப் பெரிதாக்கி கொள்வது இதுதான் அழகு என்று சொல்லிக் கொள்கிறார்கள் .
. . . . இத்தனைக்கும் வளைந்து கொடுப்பது தோல்தான்

தோல் 2




அகத்தோலுக்கு அடியில் வியர்வை சுரப்பி (Sweat Glands ) மிகவும் சுவராசியமானது இதுதான் உடம்பிற்குள் இருக்கும் ஏர்கூலர் வெயில் சூடாகும்போதெல்லாம் இந்த சுரப்பிதான் வியர்வையை உடம்புக்கு வெளியே அனுப்புகிறது இதனால் நம் உடம்பில் இருக்கும் தேவை இல்லாத நீரை வெளியேற்றி சிறுநீரகத்திற்கு இது நிறைய உதவி செய்கிறது ஆனால் மழை காலத்தில் இது சிறநீரகத்திற்கு உதவ முடிவதில்லை அதனால் சிறுநீரகம் ஓவர் டைம் எடுக்கிறது மழை காலத்தில் அடிக்கடி உச்சா போவது இதனால்தான்

அடுத்து எண்ணெய் சுரப்பி ( Sebaceous Glands ) இந்த சுரப்பி மட்டும் இல்லாவிட்டால் உடம்பில் எண்ணெய்ப் பசையே இருக்காது உடம்பு முழுவதும் பாளம்பாளமாக வெடித்துவிடும் பார்தீர்களா அல்லாஹ்வுடைய ஏற்பாட்டை : ஆணோ பெண்ணோ பருவ வயதைக் கடக்கும் போது முகப்பரு வருவதற்கு இந்த சுரப்பிதான் காரணம்

அடுத்து வாசனை சுரப்பி ( scent Glands )

இந்த சுரப்பினால்தான் மனித இனம் அழியாமல் இருப்பதற்கு இந்த வாசனை சுரப்பி பெரும் சேவை செய்கிறது ! அதாவது ஆண் பெண்ணுக்கு " இன உணர்ச்சி " தூண்ட இந்த வாசனை சுரப்பிதான் முக்கிய காரணியாகும் இது அங்குள் , இன விருத்தி உறுப்பு என்று இரண்டு இடங்களில் மட்டும்தான் உள்ளது உடலுறவின் போது இந்த வாசனை வெளிப்பட்டு மேலும் மேலும் மோகம் கொள்ளச் செய்து வெற்றிகரமாக காரியத்தை நிறைவேற்றி விடுகிறது

ஆடு மாடு மான் போன்ற பாலூட்டி இன வகைகள் அந்த இடத்தையே கமகமக்கச் செய்து காரியத்தை முடித்துக் கொள்கிறது

எல்லா மனிதர்களிடம் ஒவ்வொரு வாசனை சாதாரண நேரங்களில் கூட வெளிப்பட்டுக் கொண்டே இருக்கும் உதாரணமாக நபிஸல் அவர்களிடம் கஸ்தூரி வாடையும் இறை நேச வலிமார்களிடம் சாம்பிராணி மற்றும் பூ வாடைகளும் எப்போதும் கமகமத்துக் கொண்டே இருக்கும்

நபிஸல் அவர்கள் இருந்த இடத்திற்கு யாரேனும் வந்தால் கஸ்தூரி வாடையை முகர்ந்து கொண்டே " இங்கு நபிஸல் அவர்கள் வந்திருந்தார்களா .....? என்று கேட்பார்கள்

நபி யாகூப் அலை அவர்களுக்கு தன் மகன் ் யூசுஃப் அலை சிறு வயதிலேயே அவர்களின் வாடை ரொம்பவும் பரிச்சயம் தன் மகன் சிறு வயதில் காணாமல் போய் சுமார் 25 வருடங்களுக்கு பிறகு யூசுஃப் அலை அவர்களின் சட்டையை அவரின் சகோதரர்கள் கொண்டு வரும்போது கண் தெரியாமல் இருந்த யாகூப் அலை அவர்களால் தூரத்தில் இருந்து சட்டையின் வாடையை நுகர்ந்து கொண்டு ,

" இதோ யூசுஃபுடைய வாடையை நிச்சயமாக நான் நுகர்கிறேன் இதனால் என்னை நீங்கள் பைத்தியக்காரரென்று எண்ணாமலிருக்க வேண்டுமே என்றார் "

திருக்குர்ஆன் 12 : 94

ரஹ்மத் ராஜகுமாரன்

தோல் 3 26-02-2017




தோல் உள்வாங்கிகள்( Pain Receptors ) தோலின் அடிப்பகுதியில் அமைந்துள்ளது என்பதை அறிந்தோம் உடலில் ஏற்படும் வலியை உணரும் தன்மை மனித மூளையில்தான் உள்ளது என்று விஞ்ஞானிகள் ஆரம்பத்தில் நம்பினர் ஆனால் அண்மைகால கண்டுபிடிப்புகள் வலி உள்வாங்கிகள் தோலில் அமைந்திருப்பதால்தான் ஒரு மனிதன் வலியை உணர்கிறான் என்று நிரூபித்துள்ளன இந்த வலி வாங்கிகள் இல்லையெனில் உடலில் ஏற்படும் வலியை உணர்ந்திட இயலாது

தீக்காயங்களால் துன்பறும் ஒரு நோயாளியைப் பரிசோதனை செய்யும் மருத்துவர் அந்நோயாளின் தீக்காயத்தின் அளவை கண்டறிய ஒரு குண்டூசியால் குத்திப் பார்க்கிறார் . நோயாளி வலியை உணரும் பட்சத்தில் தீக்காயங்கள் மேலோட்டமானவைதான் . வலி உள்வாங்கிகள் பழுதுபட்டு வலி உணராமல் இருக்கும் பட்சத்தில் அந்தத் தீக்காயம் ஆழமாக ஏற்பட்டுள்ளது என்றும் வலி உள்வாங்கிகள் முற்றிலும் அழிக்கப்பட்டுள்ளன என்பதையும் சுட்டிக் காட்டிவிடுகின்றன

திருக்குர்ஆன் மனிதனின் தோலில்தான் வலி உள்வாங்கிகள் அமைக்கப்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டுகிறது

" எவர் நம்முடைய இவ்வேத வசனங்களை நிராகரிக்கிறார்களோ அவர்களை நிச்சயமாக நாம் மறுமையில் நரகத்தில் சேர்த்துவிடுவோம் அவர்கள் வேதனையைச் சதா அனுபவிப்பதற்காக அவர்களுடைய தோல் கருகி விடும்போதெல்லாம் மற்றொரு புதிய தோலை மாற்றிக் கொண்டே இருப்போம் நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தோனும் ஞானமுடையோனுமாக இருக்கிறான்
திருக்குர்ஆன் 4 :56
தாய்லாந்தில் உள்ள சியாமாய் பல்கலைக் கழகத்தில் உடற்கூறு துறையின் தலைவராக இருப்பவர் பேராசிரியர் தகாடட் தெஜாஸன் என்பவர் இவர் தோலின் உள்ள வலி உள்வாங்கிகள் குறித்து நீண்ட நெடுங்காலமாக ஆய்வு மேற்கொண்டவர்
1400 வருடங்களுக்கு முன்பே இந்த அறிவியல் உண்மை திருக்குர்ஆனில் இடம் பெற்றுள்ளதை அவரால் ஆரம்பத்தில் நம்பவே முடியவில்லை மேல் குறிப்பிட்ட இந்த திருக்குர்ஆன் வசனத்தின் மொழிபெயர்ப்பை உண்மையைக் கண்டறியும் நோக்கோடு அவர் சரி பார்த்தார்
இந்த மிகத் துல்லியமான அறிவியல் பேருண்மையை திருக்குர்ஆன் என்னும் கருத்துப் பெட்டகத்தில் உட்பொதிந்து கிடப்பதைக் கண்ட பேராசிரியர் ஆச்சரியப்பட்டார் இந்த இறை வசனம் அவருடைய உள்ளத்தில் தன்தாக்கத்தைப் பதிவு செய்துவிட்டது
சவுதியின் தலைநகர் ரியாதில் திருக்குர்ஆன் மற்றும் நபிமொழியின் அறிவியல் அத்தாட்சிகள் எனும் தலைப்பில் நடைபெற்ற எட்டாவது சவதி மருத்துவ மாநாட்டில் கலந்து கொண்ட பேராசிரியர் தெஜாஸன் இஸ்லாத்தை ஏற்றார்
அல்ஹம்துல்லாஹ் !
ரஹ்மத் ராஜகுமாரன்

தோல் 6



நம் தோலுக்கு நிறம் எங்கிருந்து வருகிறது ?
சராசரியாக இரண்டு மில்லி மீட்டர் தடிப்புக் கொண்ட தோலில் எபிடெர்மிஸ் , டெர்மிஸ் , ஹைப்போ டெர்மிஸ் என்று 3பகுதிகள் உண்டு
எபிடெர்மிஸ் பகுதியிலேயே மேல் பகுதி , கண்ணாடிப் பகுதி , துகள் பகுதி , உயிர்ப்பகுதி என்று நிறைய மினிப் பகுதிகள் உண்டு !
இங்கேதான் நான் சிவப்பு நீ கறுப்பு என்ற நிறங்களின் சூட்சமம் புதைந்திருக்கிறது
மேல் பகுதி மெல்லியதாகவும் அதற்கு கீழே இருக்கும் கண்ணாடிப் பகுதி தெளிவாகவும் இருந்தால் , வெளியிலே இருந்து வருகிற வெளிச்சம் , தோலின் மேல் பகுதி வழியாகச் சுலபமாக நுழைந்து கண்ணாடிப் பகுதியில் பட்டுப் பிரகாசமாகப் பிரதிபலிக்கும் இதுதான் நம் பாஷையில் சிவப்புத் தோல் !
ஒருவர்க்குத் தோலின் மேல் பகுதி தடிப்பாகவும் கண்ணாடிப் பகுதி தெளிவில்லாமலும் இருந்தால் கறுப்பு !
சரி மங்கோலியர்கள் மஞ்சள் நிறத்தில் இருக்கிறார்களே அது எப்படி ?
தோலின் டெர்மிஸ் பகுதியில் வண்ணச் சிற்றறைகள் ( pigment cells ) என்ற ஒரு சமாசாரம் உண்டு ! தோல் நிறத்திற்கு இதுவும் ஒரு காரணம் இவற்றின் தன்மைக்குத் தகுந்தபடியும் தோலின் நிறம் அதாவது _ ஆளின் நிறம் மாறுபடுகிறது
" வானங்களையும் பூமியையும் படைத்திருப்பதிலும் உங்களுடைய மொழிகளும் நிறங்களும் வெவ்வேறாக இருப்பதும் அவனுடைய அத்தாட்சிகள் உள்ளவையாகும் இதிலும் கல்விமான்களுக்கு நிச்சயமாக பல அத்தாட்சிகள் இருக்கின்றன
திருக்குர்ஆன் 30 : 22
ரஹ்மத் ராஜகுமாரன்

கண்கள் 1



விஞ்ஞானத்தனமாக கண்ணைப் பற்றி சொல்வதாக இருந்தால் கண் என்பது "உயிருள்ள காமிரா"" சரியா ?
" இருகயல் இணை விழியே . . எனை இடர் செய்தவையே . . . " என்று இளங்கோ அடிகள் மாதிரி ஒரு துறவியையே பெருமுச்சுவிட வைத்த உறுப்பு _ "கண் !" அதுவும் சரியா ?
உன் மேல ஒரு கண்ணு . . . தில்லாலங்கடியோ _ என்று ஏங்குகிறது ஒரு தமிழ் சினிமாப்பாட்டு
கண்ணைப் பார்த்து காதல் கொள்பவர்கள்
" கண்தான் இதயத்தில் நுழைவதற்கான வாசல் "என்பவர்கள் சிலர் கண் போன போக்கிலே கால் போகலாமா ? என்று ஒரு பாட்டும் எழுதி வைப்பார்கள்
நண்பர் வீட்டில் அவரது தனியறையில் என்னை உட்கார வைத்து இசையைப் பற்றி அவர் சேகரித்து வைத்தவைகளை என்னிடம் வீடியோ போட்டு அதற்கு விளக்கம் சொல்லிக் கொண்டிருந்தார் ரொம்ப கலையை ரசிப்பவர் என்பதற்கு ஆதாரமாக ஓஸோ ரஜினீஸின் பெரிய படத்தை மாட்டி இருந்தார் நான் "இது எதற்கு "என்ற கேள்விக்குறியுடன் கேட்டதற்கு " இவர் கண்ணில் ஒளி தெரிகிறதா ? என்று என்னிடம் கேட்டார் ""பெரிய அகல கண்கள் கொஞ்சம் ஈர்க்கும் காந்த கண்கள் " என்று அவரே வர்ணித்தார்
நடிகை ஜஸ்வர்யாவின் குளோஸப் போட்டோவை பெரியதாக வைத்திருந்தார் . . கேட்டதற்கு எவ்வளவு அழகான கண்கள் பார்த்தீர்களா இறைவனின் படைப்பை ? என்று சொல்லிவிட்டு "உண்மையில் இறைவன் மனித உறுப்புகளில் கண்ணை ரொம்ப ரசிப்பவன் தெரியுமா உங்களுக்கு என்றார் நானும் ஆச்சரியத்தில் . ." எப்படி ? "
என்றேன் அவரே . .
" அணி அணியாகப் போடப்பட்ட கட்டில்களில் உள்ள பஞ்சணைகளில் மீது சாய்ந்தவண்ணமாக இருப்பார்கள் நாம் அவர்களுக்கு ஹுருல்ஈன் என்னும் கண்ணழகிகளாகிய கன்னிப் பெண்களை திருமணம் செய்து வைப்போம் "
திருக்குர்ஆன் 52 : 20
. . இப்படி கண்ணின் ரசிகர்கள் ஏராளம் . ( அப்போது நண்பருக்கு திருமணம் ஆகவில்லை )
இவைத்தவிர எதிராளியின் கண்ணைப் பார்த்தே " பார்ட்டி நிஜம் சொல்கிறானா , அல்லது புளுகுகிறானா ? என்று தெரிந்து கொள்ளும் கில்லாடிகளும் உண்டு
" அவர்களுடைய கண்களும் அவர்களுடைய தோல்களும் அவைகள் செய்தவைகளைப் பற்றி சாட்சி கூறும்
திருக்குர்ஆன் 41 : 20
ரஹ்மத் ராஜகுமாரன்

கண்கள் 2




கண்ணின் ஆச்சரியங்கள் , அதன் லென்ஸில் இருந்துதான் துவங்குகின்றன
புரதம் நிரம்பிய ஓவல் வடிவக் குட்டியூண்டு உறையான லென்ஸைச் சுற்றி தசைகள் உள்ளன . மிகவும் உறுதியான இந்தத் தசைகள் கடுமையான உழைப்பாளிகள் .
இவை கொட்டிப்படும்போது லென்ஸ் பருத்து , பக்கத்திலிருக்கும் பொருட்களைப் பார்க்க உதவுகிறது . தசைகள் ரிலாக்ஸ் ஆகும்போது தட்டையாகிவிடும் லென்ஸ் , தூரத்தில் இருக்கும் பொருட்களைச் சுலபமாகப் பார்க்கிறது ஒரே லென்ஸ் குவி / குழி லென்ஸாக மாறுவது அற்புதமான விஷயம்
இந்த அமைப்பை நானோ முறையில் கூட தயாரிக்க முடியாது காரணம் கண்ணிலிருந்து எடுக்கப்படும் பிம்பத்தைப் பற்றிய சேதி மூளைக்குப் போய் அது இதுதான் என்று தெரியப்படுத்தும் வேகம் ஒளியின் வேகமான நொடிக்கு 3 லட்சம் கிமீ வேகத்தை விட அதிகமாக இருக்கிறது என்பதை நவீன மருத்துவ விஞ்ஞானம் கூறுகிறது இதனால் செயற்கை கண் விஷயத்தில் விஞ்ஞானம் தோற்று போய் இருக்கிறது
இதைப் பற்றி குர்ஆனில் அல்லாஹ்
" நாம் அவனுக்கு இரண்டு கண்களை ஆக்கவில்லையா ? "
திருக்குர்ஆன் 90 : 09
இரண்டு கண்களால் ஒரு பொருளை பார்க்கும் போது ஒரு கண் பார்கப்படும் பொருளின் முப்பரிணமத்தையும் மற்றொரு கண் பொருளின் தூரத்தையும் கணக்கிட்டு ஒரே நேரத்தில் ஒரே செய்தியாக மூளைக்கு போய்வருகிறது அதுவும் ஒளியின் வேகத்தைத் தாண்டி இது இன்னுமொரு அற்புதம்
கண்கள் 3

நிறம் பிரித்துப் பார்க்கும் திறன் மனிதனுக்கும் சிம்பன்ஸி குரங்கும், வண்ணத்துப்பூச்சி, மற்றும் மிகச் சில பறவை இனங்களுக்கும் மட்டுமே கிடைத்திருக்கும் வரம் மற்ற உயிரினங்களெல்லாம் இந்த உலகை அந்தக் கால எம்.கே.டி பாகவதர் படம் மாதிரி கறுப்பு - வெள்ளையில் தான் பார்க்கின்றன நிறம் பிரித்து உணர உதவும் செல்கள் சரியாகச் செயல்படவில்லை என்றால் மனிதர்களாலும் சரியாக கலர் பார்க்க முடியாது இந்தச் செய்கள் ஓரளவு செயலிழுந்திருக்கும்போது சில கலர்கள் கண்ணுக்குத் தெரியாத நிலையை ' நிறக் குருடு " (colour Blindness) என்கிறோம்
இது ஒரு வகையில் கண்களுக்கு இறைவன் போட்ட வண்ணங்கள் தெரியாத ஒரு வகை திரை என்றுதான் வல்லுநர் குறிப்பிடுகின்றனர்
"அவர்கள் பார்வைகளின் மீதும் திரையிடப்பட்டுவிட்டது"
திருக்குர்ஆன் O2 : 07

கண்கள் 4




விலங்குகள் பூச்சிகளின் கண்கள் ஆச்சரியங்கள் நிறைந்த உலகம் |
ஈ, தேனீ போன்றவற்றுக்கு இரண்டு பெரிய காம்பௌண்ட் கண்கள் உள்ளன இந்தக் கண்களுக்கு குட்டி குட்டியாக 20,000 லென்ஸ்கள் வரை உண்டு
வேறு சில ஜீவராசிகளுக்கு, இது போன்ற காம் பௌண்ட் கண்கள் தவிர ஆயுத எழுத்துப் போல் அமைந்த மூன்று எளிய கண்களும் உண்டு உதாரணம் நண்டு
சிலந்தி பூச்சிகளுக்கு எட்டு கண்கள்!
காம்பௌண்ட் கண் என்பதில் ஃபோகஸ் செய்யும் திறமை கிடையாது நாம் தூரத்து நட்சத்திரத்தைப் பார்த்து விட்டு மடியிலுள்ள புத்தகத்தின் வரிகளை உடனே நம்மால் படிக்க முடியும் இதுதான் நம் கண்கள் செய்யும் ஃபோகஸ் ஆனால் காம் பௌண்ட் கண்களால் பக்கத்திலிருக்கும் பொருட்களைத்தான் மட்டும்தான் பார்க்க முடியும ஆனால் ஏராளமான லென்ஸ்கள் இருப்பதால், பூச்சிகளால் சிறு அசைவைக் கூட மின்னல் வேகத்தில் உணர்ந்து விடும்
இரவில் வேட்டைக்குப் புறப்படும் விலங்குகளுக்கும் . ராத்திரியில் ரவுண்ட் - அப் போகும் ஆந்தைக்கும் கண்களும், பாப்பாவும் மகா பெரிசாக இருக்கும் மங்கலான ஒளியிலும் கும்மிருட்டிலும் இவற்றால் பார்க்க முடியுவதன் ரகசியம் இதுதான்
ஆனால் மனிதனால் அத்தன கும்மிருட்டில் அவனால் ஒரு அடி எடுத்து வைக்க முடியாது என்பதை குர்ஆனில் அல்லாஹ்
"மின்னல் இவர்களின் பார்வைக்களைப் பறிக்கப் பார்க்கின்றது இது இவர்களுக்கு வெளிச்சம் தரும் போதெல்லாம் அந்த வெளிச்சத்தில் நடக்க விரும்புகிறார்கள் ஆனால் அந்த அம்மின்னல் மறைந்து அவர்களை இருள் சூழந்து கொண்டால் வழி தெரியாது திகைத்து நின்று விடுகிறார்கள்"
திருக்குர்ஆன் 2 : 20



கண்கள் 5

பைனாகுலர்.டெலஸ்கோப் எதுவும் இல்லாமல் வெறும் கண்களால் எவ்வளவு தூரம் பார்க்க முடியும்?
இதோ இருக்கிற சாந்தி அல்வா கடை கொஞ்சம் தள்ளியிருக்கிற த.மு பில்டிங் இன்னும் கொஞ்சம் தள்ளியிருக்கிற திருநெல்வேலி ரயில்வே ஸ்டேஷன் ... இதெல்லாம் எந்த உபகர்ணங்களும் இல்லாமல் நாம் நிம்மதியாகப் பார்க்கலாம்
கன்னியாகுமரி பீச்சுக்குப் போய் விடுவோம் சரியா? இப்போது கடலுக்கு அருகில் நின்று கொண்டு பாருங்கள் வானமும் சமுத்திரம் சேருகிறதல்லவா ? Horizon - அது சுமார் இரண்டரை மைல் தூரம்
நீங்கள் உயரத்துக்குப் போகப் போக இன்னும் தொலைவு பார்க்கலாம் -
பூமி உருண்டை என்பதால் 20 அடி உயரத்தில் இருந்து உங்களால் பார்க்க முடியும் தூரம் 6 மைல்
300 அடி உயரமாடியிலிருந்து நீங்கள் பார்பது 23 மைல்.
3500 அடி உயர மலை உச்சியிலிருந்து நீங்கள் பார்க்கிறீர்களா ?
Horizon காட்சி தருவது 80 மைல் தொலைவு
16000 அடி உயரத்திலிருந்து ( விமானத்தில் இருந்து) சுமார் 165 மைல் தொலைவு பார்க்க முடியும் . Horizontal ஆக இப்படி |
நீங்கள் சும்மா அண்ணாந்து பார்த்து விட்டால் கதையே வேறு .... சுமார் இரண்டு லட் சத்து நாற்பதாயிரம் மைல் தொலைவில் உள்ள சந்திரனைப் பார்க்க முடியும். -அதோ, அந்த நட்சத்திரம்.? அது கோடிக்கணக்கான மைல் தொலைவு யாஅல்லாஹ் - அது ஒளியாண்டில் அதன் தூரத்தைச் சொல்ல வேண்டும்- -
அதற்காக ரொம்பவும் அலட்டிக் கொள்ள வேண்டாம்... காரணம் உங்கள் பார்வையின் சக்தி, நீங்கள் பார்க்கிற வஸ்துவிலிருந்து வரும் ஒளியைப் பொறுத்தது. ;
நடுவில் இருக்கும் மீடியத்தைப் பொறுத்தது
வெளிச்சமில்லாவிட்டால் தடவ வேண்டியதுதான்!
லண்டன் பனிப்படலம் சூழ்ந்து கொள்ளும் போது பகல் 12 மணிக்கு நீங்கள் பிடிக்கும் சிகரெட் முனையே உங்கள் கண்களுக்குத் தெரியாது'இதற்கு என்ன சொல்ல... ?
1961 ஆண்டு அமெரிக்க நாஸா விண்வெளி வீரர்கள் வானவெளியில் சென்று அங்கிருந்து பூமியைப் பார்த்த பொழுது. அந்த வானவெளிப் வீரரகளுக்கு ஏற்பட்ட அனுபவம் என்ன தெரியுமா ?
அந்த விண்வெளி வீரர்கள் ஒரு மயக்க நிலையே இருந்ததாம
இதே தகவலை சர்வதேச விண்வெளியில் மையத்தில் தங்கி இருந்த சுனிதா வில்லியம் ஸுக்கும் இருந்தது விண்வெளியிலிருந்து எங்கு பார்த்தாலும் ஒரே இருட்டாக இருக்கும் யூமி மட்டும் ஒரு நீல நிறப் பந்து மாதிரி காட்சி அளிக்கும் இந்த பூமியின் படம் ஒரு புறம் வெளிச்சமாகவும் அதற்கு கீழ்புறம் இருளாகவும் நடுவில் நீல நிறம்" -அட டா ..... கண்கொள்ளாக் காட்சி இதைத்தான் அல்லாஹ் குர்ஆனில்
" வானத்தின் யாதொரு வாசலை இவர்களுக்கு நாம் திறந்துவிட்டு, அதில் பகல் நேரத்திலே இவர்கள் ஏறியபோதிலும் விசுவாசங் கொள்ள மாட்டார்கள்
எனினுமஅவர்கள் வானத்தில் ஏறிய பின்னரும், "எங்களுடைய கண்கள் மயங்கி விட்டன, நாங்கள் சூனியத்திற்குள்ளாகி விட்டோம்" - என்றே கூறுவார்கள்
திருக்குர்ஆன 15 : 14, 15

கண்கள் 6



6/6, 6/12 இப்படி கண்ணின் பார்வை ஆற்றவை அளக்கிறார்களே, அது எப்படி?
6/6 என்பது நார்மல், அதாவது ஆறு மீட்டர் தூரத்தில் உள்ள எழுத்துக்களை ஆறு மீட்டர் லேயே உங்களால் படிக்க முடியும் என்பதைக் குறிக்கிறது
6/12 என்பது கண் பார்வையில் ஆற்றல் குறைவு,
மற்ற பேர், அதாவது கண்ணில் கோளாறு இல்லாமல் நார்மலாக இருப்பவர்கள் 12 மீட்டரில படிக்க முடிவதைப் படிக்க இவர்கள் ஆறு மீட்டர் கிட்டப் போய் படிக்க வேண்டும் - அல்லது இவர்கள் ஆறு மீட்டரில் படிப்பதை மற்ற பேர் 12 மீட்டரில் படிக்க வேண்டும்
இதைப் போல் 6/36 என்று அதிகரித்துக் கொண்டு போய் 6/66 எல்லாம் பகலில் வெள்ளை பசு மாடு போவது கூட தெரியாது
இப்போதெல்லாம் நல்ல கண் பார்வை 20/20 என்கிறார்கள். ஏதுக்கும் ஒரு நடை போய் உங்க கண்ணை டெஸ்ட் பண்ணிட்டீங்கனா
உங்க பார்வை எவ்வளவு என்பதை வைத்து உங்க உணவில் கீரை சேர்க்க வேண்டிய அவசியம் புரியும் .
மருத்துவ விஞ்ஞானம் கண் பார்வைக்குரிய லென்ஸ் மூலம் பார்க்கப்படும் பொருளின் உருப் பெருக்கத்தால் பார்வை மேன்படுத்தப்படுகிறது. ஆனால் இறைவன் தான் நாடியதை செயல்படுத்த மனிதர்களின் எண்ணிக்கையை மனிதர்களுக்கு குறைத்து காண்பிக்கும் யுக்தியை மனித கண்களுக்கு ஏற்படுத்த முடியும் என்பதற்கு கீழ்க்கண்ட குர்ஆனின் வசனம் .
" அவர்களும் நீங்களும் சந்தித்துக் கொண்ட சுயத்தில், அவர்களுடைய எண்ணிக்கையை உங்கள் கண்களுக்குக் குறைத்தும் உங்களுடைய தொகையை அவர்களுடைய கண்களுக்கு குறைத்தும் காண்பித்ததெல்லாம் அல்லாஹ் முடிவு செய்த காரியம் நடைபெற்று (அவர்களை அழித்து)த் தீருவதற்காகத்தான் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள் அல்லாஹ்விடமே எல்லா காரியங்களும் சென்று முடிவடைகின்றன"
திருக்குர்ஆன் 8 : 44
இதென்ன கண்களுக்கு இப்படியொரு கண்கட்டி வித்தை இயல்பை அவன் மட்டுமே வழங்க முடியும்.

கண்கள் 7

இரண்டு கண்கள் இருப்பதனால் ஒரு பொருளின் முப்பரிமாணத் தோற்றம் தெரிகிறது மூன்று கண்கள் இருந்தால் நான்காவது பரிமாணமான காலம் அதாவது எதிர்காலம் நம் கண்ணுக்குத் தெரியுமா ?
நான்காவது பரிமாணமான காலம் தெரியாது. காரணம் காலத்தில் பயணம் செய்ய ரிலேட்டிலிட்டி விதி தடை விதிக்கிறது.
பரமசிவனுக்கு மூன்றாவது கண் இருப்பதும் , திபெத்தியன் லாமாக்கள் செல்லும்.Third Eye என்பதும் இரண்டுமே உருவங்களே
திரிகால ஞானம் என்பது விரும்பத்தக்கது அல்ல என்பதுதாகத்தான் தத்துவஞானிகள் கருதுகின்றனர் காரணம் கடந்த காலம் விட்டுப் போனது அதை அப்படியே விட்டு விடலாம் இல்லையேனில் அதன் தப்புகளைத் திரும்பத் திரும்பச் செய்வோம்
அப்புறமாக எதிர்காலம் தெரிந்து விட்டால் வாழ்க்கை சுவாரஸ்யமற்றதாகிப் போய் விடும்
ஆடு மாடு ஒட்டகம் போன்றவற்றிற்கு கண்கள் பக்கவாட்டில்தான் இருக்கிறது காரணம் இந்த இனங்களுக்கு ஆபத்து எந்தப் பக்கத்திலிருந்தும் வரலாம்

ஆனால் புலி சிங்கம் போன்றவற்றிற்கு கண்கள் முன்னாடி இருப்பதால் இந்த மிருகங்களுக்கு ஆபத்து குறைவு .
இப்போது முதுகில் ஒரு கண் இருந்தால் நல்லது எனத் தோன்றுகிறதாம் மனிதனுக்கு அவ்வளவு துரோகம் நடக்கிறது
ஒரு சமயம் நபி (ஸல்) அவர்கள் லுஹர் தொழுகைக்கு இமாமாக நின்ற போது நபித்தோழர்களைப் பார்த்து, "நீங்கள் வரிசை ஒழுங்காக கடைபிடியுங்கள் நீங்கள் உங்களுக்கு முன்னாடி எப்படி தெளிவாக பார்க்க முடிகிறதோ அதுபோல் எனக்கு பின்னால் பிடரியுள்ள கண்ணால் உங்களை தெளிவாக பார்க்க முடிகிறது" என்றார்கள்
நபி (ஸல்) அவர்களுக்கு முக்கண் இருந்ததால்தான் எதிர்காலத்தைப் பற்றி முன்னறிவிப்பு செய்ய முடிந்ததோ என்று எண்ணத் தோன்றுகிறது

கண்கள் 8



மனிதன் அடிக்கடி கண் சிமிட்டுவது ஏன்?
கண்கள் காற்றில் உலர்ந்து போகாமலிருக்க இரண்டு வகையான ஈரம் தேவைப்படுகின்றது. கண் இமைகள்தான் நம் வைப்பார்கள். அவற்றின் விளிம்பில் 20-லிருந்து 30 வரை சுரப்பிகள் உள்ளன கண் சிமிட்டும் போதெல்லாம் கண் விழியே இவற்றின் மூலம் கண்நீரால்அலம்புகின்றன
அழுது கண்ணீர் விடும் போது கண் விழி மேல் இருக்கும் சுரப்பிகளிலிருந்து கண்ணீர் சப்ளை ஆகிறது இவற்றை அழுது ஓய்ந்த பின் நீக்கவும் கண் சிமிட்டல் தேவைப்படுகிறது
கண்ணில் தூசு படிந்தால் நீக்கவும் சிமிட்டல் பயன்படுகிறது
கவலைகள் சோகங்கள் பயங்கள் சில சம்பவங்களோடு கூடிய ஆனந்தங்கள் சில உணர்ச்சிபூர்வமான நிகழ்வுகள் இப்படி பட்ட சுந்தர்ப்பங்களில் கண்களில் தாரை தாரையாக கண்ணீர் வடியும் இந்த கண்ணீர் கண் இமைகளைத் தாண்டி கட்டுப்படுத்த முடியாமல் பீறிட்டு வெளிவரும்
"இத்தகையவர்கள் பலர் நம்முடைய தூதர் மீது அருளப்பட்டவைகளை செவியுற்றால், உண்மையை அவர்கள் உணர்வதன் காரணமாக அவர்களின் கண்கள் தாரை தாரையாக கண்ணீர் வடிப்பதைக் காண்பீர்கள் அன்றி "எங்கள் இறைவனே இவ்வேதத்தை நாங்கள் நம்பிக்கைக் கொண்டோம் ஆகவே இவ்வேதம் உண்மையானதென சாட்சி கூறுபவர்களுடன் எங்களையும் நீ பதிவு செய்து கொள்வாயாக" என்றும் பிரார்த்தித்துக் கூறுகின்றனர்
திருக்குர்ஆன் 5 : 83
ரஹ்மத் ராஜா குமாரன்
(சென்னையிலிருந்து )

**Rahmath Rajakumaran**
கண்ணீர் - எங்கிருந்து எப்படி வருகிறது?
கண்ணீர் ஒரு உப்பு நீர் இது கண்ணுக்கு மேலாக நம் கண்ணில் படாத மாதிரி மறைவாக லாக்சிமல் கிளாண்ட் (Lachrymal Gland) என்று ஒரு சுரப்பி, இதுதான் கண்ணீர் நதியின் மூலம் இந்தச் சுரப்பி சுரக்கிற லாக்ரிமா (லத்தீன் மொழியில் கண்ணீர்) என்ற திரவம்தான் நம் நெஞ்சை நெருட வைக்கும் கண்ணீர்
தாள முடியாத ஸ்மெல்(வெங்காயம் அம்மோனியா புகை)வகையறாக்கள், சோகம் அதீத மகிழ்ச்சி, பயம் இவையெல்லாம் இந்தச் சுரப்பியைத் தூண்டி விட்டு கண்ணீரை வரவழைப்பவை
பொதுவாக விழிக்கோலத்தில் தூசு பட்டால் அலம்பி விடுவது தான் இந்தச் சுரப்பியின் வேலை. அதனால் அபூர்வமாகத்தான் இது இயங்கும் இது தொடர்ந்து இயங்கிக் கொண்டே இருந்தால் வெள்ளம்தான் ___.
ரொம்பக் காலமாக இந்தச் சுரப்பியை பெண்கள் ஆதிகாலத்தில் சினிமா போவதற்கும் இக்காலத்தில் நகை வாங்குவதற்கும், புடவை வாங்குவதற்கும் TV சீரியல்களுக்கும் உபயோகிக்கிறார்கள்

கண்கள் : 9   MARCH 05 2017

பிறவியிலேயே பார்வை இழந்தவர்களுக்கும் , அதிக வருடங்கள் பார்வை இழந்தவர்களுக்கும் நினைவாற்றல் அதிகமாக இருக்கும் என்பதாக மருத்துவ விஞ்ஞானம் கூறுகிறது

நம்மை விட அதிகமாகவே நினைவாற்றல் இருக்கிறது சில சமயம் நம் நினைவாற்றலைக காட்சிகள் கவனம் கலைக்கும். அவர்களுக்கு தொடுகை, வாசனை, குரல்கள், ருசி, போன்ற நான்கு புலன் உணர்வுகள் மிகவும் தீட்டப்பட்டிருப்பதால், அவை சார்ந்த நினைவாற்றல் வேறு வடிவத்தில் இருக்கும்

கண்ணும், காதும் பிறவியிலேயே பாதிக்கப்பட்ட ஹெலன் கெல்லரின் வாழ்க்கை வரலாற்றைப் படித்துப் பாருங்கள் ஆச்சரியப்பட்டுப் போவீர்கள்

நபி யாகூப் (அலை) அவர்களிடமிருந்து சிறுவர் பருவத்தில் நபி யூசுப் (அலை) அவர்கள் பிரிக்கப்பட்டதும் அழுது அழுது

யாகூப் (அலை) அவர்களின் கண்கள் பார்வையை இழந்து விட்டது

இறுதியில் யூசுப் (அலை) சகோதரர்கள் யூசுப் அவர்கள் கொடுத்த சட்டையை வாங்கிக் கொண்டு வருகிறார்கள் இதுபற்றி குர்ஆனில்

"நீங்கள் என்னுடைய இந்தச் சட்டையைக் கொண்டு போய் என் தந்தை முகத்தில் போடுங்கள் அதனால் அவர் இழந்த பார்வையை அடைந்து விடுவார் _ _

அவர்களின் ஒட்டக வாகனங்கள் எகிப்திலிருந்து பிரியவே அவர்களின் தந்தை "இதோ யூசுபுடைய வாடையை நிச்சயமாக நான் நுகர்கிறேன் இதனால் என்னை நீங்கள் பைத்தியக்காரனென்று எண்ணாமலிருக்க வேண்டுமே " என்றார்

திருக்குர்ஆன் 12 : 93, 94

பார்வையற்றவர்களின் நினைவாற்றலை அல்லாஹ் எப்படி வழங்கி இருக்கிறான் பார்த்தீர்களா - ?

ரஹ்மத் ராஜகுமாரன்

(சென்னையிலிருந்து)

கண்கள் 10



கண்களைப் பற்றி சில ஆச்சரியங்களை சொல்லிவிடுகிறேன்
இந்தியாவில் மட்டும் ஒரு கோடியே இருபது லட்சம் பேர் பார்வையற்றவர்களாக இருக்கிறார்கள் பார்வை பறிப் போவதற்கு பல காரணங்கள் இருக்கின்றன முக்கியமானது காடராக்ட்
இந்தியாவில் இந்த நோயினால் 96 லட்சம் பேர் தங்கள் பார்வையை பறி கொடுத்திருக்கிறார்கள்
கண்ணில் சனத அல்லது தோல் போன்ற வளர்ச்சிதான் காடராக்ட் என்று பரவலாக நம்புகிறார்கள் இது உண்மையிலை
நம் கண்ணில் இருக்கிற லென்ஸ் கண்ணாடிபோல் இருக்க வேண்டும் அப்போது ஒளி ஊடுருவ முடியும் அந்த கண்ணாடி போன்ற லென்ஸ் மெள்ள மெள்ளத் தெளிவு குறைந்து பழுப்பு நிறத்திற்கு மாறிவிடுவது தான் கட்ராக்ட்
இந்த லென்ஸ் ஏன் கலராகிறது? என்பது தான் மருத்துவ விஞ்ஞானத்திற்கு தெரியவில்லை ஆப்ரேஷன் மூலமாக இதனை நீக்க முடியும்
சுமார் மூவாயிரம் வருஷங்களுக்கு முன்பே இந்திய முனிவர் ஒருவர் காடராக்ட் ஆபரேஷன் செய்திருக்கிறார் அதைப் பற்றிய விவரங்களை எழுதி வைத்துவிட்டுப் போயிருக்கிறார் என்பது ஆச்சரியதாமாக இருக்கிறதல்லவா?
அந்த முனிவர் பெயர் சுஸ்ருதா

கண்கள் 12



ஞானிகளின் அகக் கண்ணால் தேடியது கிடைத்தது நாமும் தேடுகிறோம் ஆனால் கிடைப்பதில்லை காரணம் நாம் எதைத் தேடுகிறோமோ அது "உள்ளே" இருக்கிறது நாமோn வெளியே தேடுகிறோம்
ஆன்மீகத் தேடல் ஒரு வித்தியாசமான கண்ணாமூச்சி இங்கே தேடுபவரும் நாமே > ஒளிந்திருப்பதும் நாமே - இது நமக்குத் தெரிவதில்லை ஆம் ---- நம்மைத்தான் நாம் தேடுகிறோம் நாம் நம்மை வெளியில் தேடுகிறோம். அதனால்தான் நமக்கு நாம் கிடைப்பதில்லை
நாம் நமக்குள்ளே ஒளிந்திருக்கிறோம் இதை அறிவதே தண்டுபிடிப்பு ஆன்மீக உலகில் 'தேடல்" என்பது தவறான வார்த்தை காணாமல் போன பொருளைத்தான் தேட வேண்டும் நாம்தான் காணாமல் போகவில்லையே. _ ஆனால் நம்மை நாம்" "காணாமல் " _ இருக்கிறோம் நம்மை நாம் 'கண்டு கொள்வதோ " - ஞானம் _ கவிக்கோ
இதையே ஞான மாமேதை தக்கலை பீர் முஹம்மது (வலி) அவர்கள்

"விண்ணொளி காண வேண்டின்
மெய்யிறை யருளி னாலே
கண்ணொளி யுருகச் சேர்த்துக்
கருத்தொளி நடுவில் நோக்கிப்
பொன்னொளி மேவும் வாசிப்
பொருள்ரச மருந்தி மேலாற்
தன்னொளி கண்டு ஞானத்
தானவ னாக லாமே - .. -
" இவர்களின் புறக்கண்கள் குருடாகவில்லை
எனினும் அகக்கண்கள் குருடானவர்கள் "
திருக்குர்ஆன் 22 : 46

காதுகள் 2



"காது, மூக்கு, தொண்டை " இந்த மூன்றையுமே ஒரே பிரிவில் (ENT) வைத்திருகக என்ன காரணம்?
இந்த மூன்றுமே ஒன்றோடொன்று தொடர்புள்ளவை காது சரியாக கேட்பதற்குத் தொண்டையும் ஒரு வகையில் உதவி செய்கிறது. காதுக்குள் அழுத்தத்தைச் சமச்சீராக வைத்திருப்பதற்கு தொண்டையின் ஒத்துழைப்பு அவசியம் தொண்டை யில் இருந்து புரையேறி ஒற்றை சோற்றுப் பருக்கை மூக்கு வழியே வருது இதனால்தான்
தவிர, இந்த மூன்றையுமே காற்றை அடிப்படியாகக் கொண்டு இயங்கும்
இதனால்தான் இறைவன் கண் மீது முத்திரை இதயங்களின் மீது முத்திரை என்று சொன்னவன் வாய் மீது நாக்கு மீது என்று தனித்தனியாக சொல்லாமல் இவை வாயும் நாக்கும் (தொண்டை) உள்ளடக்கி காதின் மீது முத்திரை வைத்தால் அது காதையும், வாயையும் வாய்க்குள் இருக்கும் நாக்கையும் , நாக்கை இயக்கும் தொண்டையும் சேர்த்து ஒரே முத்திரையாக காதில் வைத்தால் போதும் என்றெண்ணிதான் குர்ஆனில் அல்லாஹ் -
"நிச்சயமாக இவர்கள் மறுமையை விட இவ்வுலக வாழ்க்கையின் மீதான நேசம் கொண்டவர்களாக இருக்கிறார்கள்
நிச்சயமாக நிராகரிக்கும் இத்தகைய மக்களை அல்லாஹ் நேரான வழியில் செலுத்தமாட்டான்
இத்தகையவர்களின் இதயங்களின் மீதும் , காதுகள் மீதும் , கண்கள் மீதும் அல்லாஹ் முத்திரையிட்டு விட்டான் இவர்கள்தாம் தங்கள் தீய முடிவை உணர்ந்து கொள்ளாதவர்கள்
திருக்குர்ஆன் 16 : 107, 108
காது மூக்கு, தொண்டை மூன்றும் ஒன்றுக்கொன்று அருகாமைந்திருப்பது அடுத்த காரணம், கொஞ்ச காலம் முன்பு வரை கண்கூட இந்தப் பிரிவில்தான் இடம் பெற்றிருந்தது கண் மருத்துவத்தின் அதிவேக வளர்ச்சியால்

அது பிரிந்து போய காடராக்ட், ரெடினாபதி என்று தனித்தனி பிரிவுகள் வந்து தனித்தனி ஸ்பெஷலிஸ்ட்டுகள் வந்து கண்னை மட்டும் தனியே கழற்றி கொண்டு போய் தனிமருத்துவமாக்கி விட்ட ர்கள்
இனிமேல் காது, மூக்கு, தொண்டை கூட தனித்தனியாக பிரியும் அதில் வலது காதுக்கு ஒரு ஸ்பெஷலிஸ்ட்' இடது காதுக்கு ஒரு ஸ்பெஷலிஸ்ட் என்று வரும் காலம் தொலைவில் இல்லை
ஆனால் இறைவன் மேற்கண்ட வசனத்தில் இதயம், காது, கண் என்று மூன்றையும் சேர்த்து சொல்வதில் இருந்து வேறொரு உண்மை இருக்குமோ என்று நம்மை சிந்திக்க வைக்கிறது |
உங்களுக்கு இது பற்றி ஏதாவது தெரிந்தால் நானும் நண்பர்களும் தெரிந்து கொள்வோம்

மம்மிகளின் தொழில் நுட்பத்தை தாண்டிய இறைவனின் அத்தாட்சிகள் 10-03-2017



எகிப்து 'மம்மி"களை 4000 வருஷங்களாக கெடாமல் வைத்திருக்க, அக்கால எகிப்தியர்கள் கையாண்ட ரசாயனம் அல்லது மூலிகைகள் பற்றி விஞ்ஞானம் கண்டுப்பிடித்திருக்கிறார்களா ?
ஏறக்குறைய கண்டுப்பிடித்தார்கள் ..... மனதை கொஞ்சம் திடப்படுத்திக் கொள்ளுங்கள் ...... அவர்கள் பதப்படுத்திய முறையைச் சொல்றேன்
முதலில் பிணத்தை ஒரு மேஜைமேல் வைத்து மூக்கு வழியாக குழாய் மெல்லிய ஊசி இவைகளை உள்ளே விட்டு மூளையை கலக்கி கெட்டி திரவமானதும் குழாய் வழியாக உறிஞ்சி வெளியே எடுத்து விடுவார்கள்
அப்புறமாக உடலில் இடது பக்கம் கீறி, குடல் சமச்சாரங்களை நீக்குகிறார்கள்
இதயத்தை விட்டு வைக்கிறார்கள் காரணம் உங்களுக்குத் தெரிந்தால் எங்களுக்கு செல்லுங்கள் மற்ற உறுப்புகளைத் தனித்தனியாக ஜாடிகளில் எடுத்து வைத்து திருப்பி எழுப்பப்படும் போது அவற்றை கடவுள் பயன்படுத்திக் கொள்வார் இதனால் டயம் மிச்சம்
அதன் பின் "நோட்ரான் " (Natron) என்கிற ரசாயனப் பொருளை (உப்பு , சோடியம் -பை - கார்பனேட், சோடியம் சல்பேட் சேர்த்து) சின்னச் சின்ன பார்சலாகக் கட்டி, உடலுக்குள் திணித்து, திணித்து, வெளியே இதே நேட்ரானை ஆலீவ் ஆயில் கலந்து பாடியைச் சுற்றி வைக்கிறார்கள
பாடி உலர்ந்ததும் அதைக் குளிப்பாட்டி, ரெக்ஸின் தடவி, துணியால் ஓட்டைகளை அடைத்து .....ம் - .. மம்மி ரெடி' இத்தனையும் செய்தால்தான் எகிப்தின் உஷ்ணத்தைச் சமாளித்து , 4 ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் அப்படியே இருக்கிறது'
- ... ஆனால் இத்தனை விஞ்ஞான ஆர்ப்பாட்டங்கள் எதுவும் இல்லாமல் மிகச் சாதாரணமாக ஒரு பிணம் பாதுக்கப்படுகிறது அதுவும் வெளி உலகம் தினம் தினம் பார்க்கும்படியாக அதுவும் பாதுகாக்கப்படுகிறது என்றால் அது ஃபிர்அவ்னின் உடல் மட்டுமே |
அக்கால விஞுஞானம் முதல் எக்கால விஞ்ஞானத்தையும் வியப்பில் ஆழ்த்தக்கூடிய ஒரு பிணமாக ஃபிர்அவ்னின் உடல் பாதுகாக்கப்படுகிறது
"பாதுகாப்பு" என்பது திருடர்களிடமிருந்து மட்டும் அல்ல இயற்கையின் சூழ்நிலை, உடல் திசுக்களின் அழிவு ... -இத்தனையில் இருந்துதான் பாதுகாக்கப்படுகிறது என்று அர்த்தம்
" எனினும் உனக்குப்(ஃ்பிர்அவ்னுக்கு) பின்னுள்ளவர்களுக்கு ஓர் அத்தாட்சியாக இன்றைய தினம் நாம் உம் உடலைப் பாதுகாப்போம். நிச்சயமாக மக்களில் பெரும்பாலோர் நம் அத்தாட்சிகளைப் பற்றி அலட்சியமாக இருக்கிறார்கள்
திருக்குர்ஆன் 10 : 92
கவனிக்கவும் "இன்றைய தினம் "
ரஹ்மத் ராஜகுமாரன்
(நாகூரிலிருந்து)

விஷப்பரீட்சை 12-03-2017

கலஹாரி பாலைவனத்தில் புதர் வாழ் மனிதர்கள் ஒரு வகை மரவட்டையின் உடலிலிருந்து அரிய வகை விஷப் பொருளை தயாரித்து மிருகங்களை கொல்வதற்கு பயன் படுத்துகிறார்கள்

மத்திய ஆப்பிரிக்கா பிக்மி மனிதர்கள் சிவப்பு எறும்பிலிலிருந்து விஷம் எடுத்து மிருகங்களை வேட்டையாடுகிறார்கள் எதிரிகளுக்கும் இதே விஷம்தான்

மலேயாவில் பனை ஓலையில் செய்த சின்னச் சின்ன ஊது அம்புகள் சுமார் 50, 60 மீட்டர் கூடப் பாயும் அந்த அம்பில் உபாஸ் மரத்தின் கோந்தை அம்புமுனையில் தடவப்பட்டு எதிரியை கொல்லுகிறார்கள்

செவ்விந்தியர்கள் காட்டுத் தவளையிடமிருந்து விஷத்தை எடுத்துப் பயன்படுத்துகிறார்கள்

"லெஸிதினேஸ்" என்னும் விஷம் தசை நார்களை ஸ்தம்பிக்கச் செய்யும் விஷம் நாகபாம்புகளிடம் இருந்து எடுக்கப்படுகிறது

கைபர் வெற்றியில் நபி(ஸல்) அவர்கள் முழு நிம்மதி அடைந்தார்கள்

அப்போது ஸல்லாம் இப்னு மிஷ்கம் என்பவனின் மனைவி ஜைனப் பின்த் ஹாரிஸ் என்பவள் நபி (ஸல்) அவர்களை விருந்துக்கு அழைத்து ஆட்டின் முன் சப்பையில் விஷம் ஏற்றினாள்

நபி (ஸல்) அவர்கள் ஒரு துண்டை எடுத்து கடித்ததும் துப்பி விட்டார்கள் "இந்த மாமிசம் தன்னில் விஷமேற்றப்பட்டுள்ளதாக என்னிடம் கூறுகிறது" என்றார்கள்

அதற்குள் நபித்தோழர் பிஷ்ர் இப்னு பரா(ரலி) அவர்கள் சாப்பிட்டார். அந்த விஷம் அவரது உடலில் கலந்து அவர் மரணித்துவிட்டார்

அந்த பெண்மணியை விசாரித்ததில், "நீங்கள் அரசராக இருந்தால் உங்களைக் கொல்வதில் எங்களுக்கு நிம்மதி , நீங்கள் இறைத்தூதராக இருந்தால், உண்மை உங்களுக்கு எப்படியும் தெரிந்துவிடும் அதனால்தான் அவ்வாறு செய்தேன் என்றாள்

நபி (ஸல்) அவர்கள் அவளை மன்னித்து விட்டார்கள்

பாம்பின் விஷத்திலிருந்து எடுக்கப்படும் ஸீரம், பாம்புக்கடிக்கு மாற்று மருந்து பாம்பின் விஷத்திலிருந்து தயாரித்த ரிஸர்பின் போன்ற மருந்துகள் ரத்த அழுத்தத்தைக் கட்டுப்படுத்த உதவும்

நல்ல பாம்பின் விஷம், ந்யூரோபாக்ஸின் வகையைச் சேர்ந்தது

கட்டு விரியன் பாம்பு விஷத்தில் ஹீமோபாக்ஸின் உள்ளது

ஹார்ட் அட்டாக், ஸ்ட்ரோக் போன்றவற்றிற்கு பாம்பு விஷம் பயன்படுகிறது

அளவில் குறைந்தால் நஞ்சும் அமுதமாகும்

**Rahmath Rajakumaran**

கிமு 4ஆம் நூற்றாண்டில் பர்சிய ராணி ஒருத்தி தன் மருமகனை விஷம் வைத்து கொன்றிருக்கிறாள்

மித்திரதாத்தஸ் என்னும் ஆசியா மைனர் பிரதேச இளவரசன் தன் தாயை பதவி நீக்க 80,000 பேரை விஷம் வைத்து கொன்றான்

ஓப்பியம், பாலடோனா, ஹெம் லாக் , ஸ்டரா மொனியம் இந்த நான்கையும் கலந்து ஒரு பாததிரத்தில் மூடி வைத்து 3 நாளைக்குப் பிறகு கொல்ல வேண்டிய ஆளின் படுக்கைக்கு கீழே மூடியை திறந்து வைத்தால் விடியற்காலைக்குள் பிணம் ரெடி

எலும்புகள் 1




மனித உறுப்புகள் தொடரில் மனித எலும்பு ஒரு இன்ஜினீயரிங் அதிசயம்
அது ஒரு செங்கலை விட முப்பது மடங்கு அதிகம் லோடு தாங்கக் கூடியது தொடை எலும்பு மட்டும் 3800 பவுண்ட் எடையை தாங் கும்
இவ்வளவு உறுதியான எலும்பு கொடுத்தும் நாம் அவ்வப்போது அதை உடைத்துக் கொள்கிறோம் பொதுவாக நவீன காலத்தில் மோட்டார் வாகன விபத்தில்தான் அதிகமாக எலும்புகள் முறிகின்றன என்று ஆய்வறிக்கை கூறுகிறது
எலும்பில் லேசான விரிசல் என்றால் " "இன்ஃப்ராக்ஷன் "என்பார்கள் எலும்பு உடைந்திருந்தால் "ஸிம்பிள் ஃப்ராக்ச்சர் " எலும்பு பல இடங்களில் உடைந்திருந்தால், " "காம்பவுண்டு ஃப்ராக்ச்சர் " என்று வகைப்படுத்தி இருக்கிறார்கள்
உடைந்த எலும்பை ரிப்பேர் செய்வது உடைந்த பீங்கான் கோப்பையை ரிப்பேர் செய்வது போலாகும் -ஒரு வித்தியாசம் கோந்து எதுவும் தேவையில்லை, கோந்தை எலும்பில் உள்ள டிஷ்யூ செல்களே எலும்பின் டிஷ்யூக்கு இந்த மாதிரி தனக்குத்தானே உண்டாக்கி கொள்ளும் சக்தி இருக்கிறது இது இயற்கையின் மாபெரும் விந்தை '
எலும்பு விரியும் போது அல்லது முறியும் போது அந்த இடத்தைச் சுற்றி உறைந்த இரத்தம், லிம் ஃப் என்ற ஒரு வஸ்து இதெல்லாம் சுற்றிச் சூழ்ந்து கொள்கிறது
ஒரு சில மணி நேரங்களில் புது டிஷ்யூ செல்கள் பிறக்கின்றன உடனே படபடவென்று கால்ஷியம் நிரப்பிக் கொண்டு மூன்று அல்லது நான்கு தினங்களில் ஒருமித்து உடைந்த இடத்தைப் பூசி மெழுகி விடுகிறது மேலும் மேலும் கால்ஷியம் சேர்ந்து கொள்ள அந்த இடம் பலப்படுத்தப்படுகிறது ஒரு சில மாதங்களில் நார்மலாகிவிடும் உடைந்த இடத்தை பிளாஸ்டர் போட்டு அடாமல் அசங்காமல் வைத்திருந்தாலே போதும் மற்றதைத்தானே பார்த்துக் கொள்கிறது
எலும்பின் இந்த செயல்பாட்டை போர் காலத்தில் இராணுவம் செயல்பாடு மாதிரி இதனை வர்ணிக்கலாம் இருந்தாலும் இராணுவத்தை விட பல மடங்கு வேகத்தில் எலும்பு டிஷ்யூ செயல்படுவதாகவே மருத்துவ விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்
மனிதனை மண்ணிலிருந்து படைத்து அவனது துணைவியை எலும்பிலிருந்து இறைவன் படைத்தான் என்று குர்ஆன் கூறிக் கொள்வதில் கூட எலும்பிலிருந்தும் உயிர் உருவாக்கும் பெற முடியும் என்கிற விஞ்ஞானத்தனம் இருக்கிறது என்பதை நம்மால் சிந்திக்க முடிகிறது
அடுத்து
"இறந்து உக்கி மண்ணோடு மண்ணாக மக்கிப் போன அவனுடைய எலும்புகளை நாம் ஒன்று சேர்க்க மாட்டோம் என்று மனிதன் எண்ணிக் கொண்டு இருக்கின்றானா?
திருக்குர்ஆன் 75 : 03
மக்கிப் போன எலும்புகள் பற்றி
23.35, 23 : 82 36 : 78 , 37 : 16 , 37:53 , 56 : 47
79 : 11 , 86 : 07
ஆகிய வசனங்கள் பேசுகின்றன

காலத்தின் பதிவுகள்



பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த உயிரினங்கள் மலைப்பாறைகளில் கல் படிவங்களாகவோ வேதிப் பொருட்களாகவோ மாறி இருப்பது பாறைப் படிவங்கள் (Fossils ) எனப்படுகின்றன
இனவ செடி கொடிகள் கடல் வாழ் உயிரினங்கள், பறவைகள், மனிதர்கள் எனப் பலவாகவும் இருக்கலாம் ஏன் டைனோசர் என்று சொல்லப்படும் அழிந்து விட்ட உயிரினம் கூட இந்த படிவ வடிவில் காணப்படுகிறது
ஆப்பிரிக்க காட்டில் ஒரு பெண்ணின் எலும்புக் கூடும், அவள் அணிந்திருந்த கடல்ிசிப்பிகளான கழுத்து மணியும், அதே காதணியும் கிடைத்திருக்கிறது இந்தப் பெண் கிட்டத்தட்ட முப்பது ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த பெண் என்பதையும் கண்டுபிடித்தின்கிறார்கள்
கி.பி 1700 வரை விஞ்ஞானிகள் இந்தப் படிவுகளைப் பற்றி அதிகம் சிந்திக்கவில்லை இந்த துறை சார்ந்த ஆய்வை முதலில் ஆரம்பித்தவர் "பேரன் ஜார்ஜ் குவியர் என்ற பிரஞ்சு விஞ்ஞானி ஆவார்
பாரிஸ் நகர ஆற்றுப்படுக்கையில் இவர் ஆய்வு செய்த போது யானைகள் காண்டாமிருகங்களின் எலும்புக்கூடுகள் வேறு பல எலும்புக்கூடுகளையும் கண்டு பிடித்தார் அவர் கண்டுபிடித்த போது அங்கு அந்த உயிரினங்கள் அந்த இடத்தில் காணப்பட வில்லை
விஞ்ஞானம் கண்டு பிடித்த இந்த உண்மைகளை சிறிது தற்பனையும் கலந்து தான் "ஜூராஸிக் பாரக் " என்ற பிரம்மாண்ட திரைபடம் உருவாகியது
"பூமியில் நீங்கள் பிரயாணம் செய்து, அல்லாஹ் எவ்வாறு முந்திய படைப்பைத் துவங்கிப் பின்னர் பிந்திய படைப்பை எவ்வாறு உண்டு Pண்ணுகிறான் என்பதைப் பாருங்கள் : நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருட் சுள் மீதும் பேராற்றலுள்ளவன்" என்று நபியே நீர் கூறுவீராக!"
திருக்குர்ஆன் 29 : 20

மூக்கு 1



நமது உடலின் ஒவ்வொரு பாகத்துக்கும் இருக்கும் பிரத்தியேக முக்கியத்துவம் மூக்கிற்கும் உண்டு
நாம் உயிர் வாழத் தேவையான ஆக்ஸிஜனை உடலுக்குள் செலுத்தும் மிகப்பெரிய பொறுப்பை மூக்கு வகிக்கிறது
இரண்டு சென்டி மீட்டர் அளவுக்குள் உள்ள மூக்கின் ஒருபகுதியால் பத்தாயிரம் வகையான வாசனைகளை அறிய முடியும் என்பது எவ்வளவு வியப்பான விஷயம்
அடிப்படையில் மூக்கு ஏழு வகையான வாசனைகளை நுகரக் கூடியதாக மூக்கின் நரம்புகள் வடிவமைக்கப்பட்டுள்ளது

கற்பூர வாசனை பெப்பர் மிண்ட் வாசனை மலர்களின் வாசனை மஸ்க் என்னும் அரபு நாட்டு அத்தர் வாசனை ஈதர் அல்லது பெட்ரோல் வாசனை அழுகிய முட்டை வாசனை காட்டமான அமில வாசனை இந்த ஏழு வாகனைகளின் கலப்புகளால் நம்மால் .பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட வாசனைகளை உணர முடிகிறது
இந்த பத்தாயிரம் வாசனைகளில் .......
மரம் எரிவது, இலை எரிவது முடி எரிவது
கூவம் என்னும் சாக்கடை மீன நாற்றம் வாய் துர்நாற்றம் சேவிங் சோப் கருவாடு வியர்வை மல்லிகை .......

**Vaitiyar Malick**
உங்கள் மூக்கு உங்களின் குணாதிசயங்களைப் பற்றி என்ன சொல்கிறது என்று தெரியுமா?
நீங்கள் தும்மும் விதம் மரபணு ரீதியாக இருக்கலாம் என்பது உண்மையான தகவலாகும். நீங்கள் மிக சத்தமாக அல்லது அமைதியாக அல்லது மிதமான முறையில் தும்மலாம். தும்மல் என்பது முப்பெருநரம்பில் அரிப்பு ஏற்பட தொடங்கும் போது உண்டாகும். அதே போல் சளி உங்கள் நோய் எதிர்ப்பு அமைப்பை மேம்படுத்தும் என்பதும் ஒரு அற்புதமான தகவலாகும். நீங்கள் உங்கள் மூக்கை விரும்பினாலும் சரி, வெறுத்தாலும் சரி, மூக்கைப் பற்றிய அற்புதமான தகவல்களை நம்பித் தான் ஆக வேண்டும்.
மூக்கு என்பது மனித முகத்தில் மிக முக்கியமான, பார்த்தவுடன் முதலில் தென்படுகிற ஒரு உறுப்பாகும். மூக்கின் வடிவம் உங்கள் குணாதிசயங்களை கூட குறிக்கும். பல்வேறு வடிவங்கள் நாசி எலும்புகள், கீழ் பக்கவாட்டு குருத்தெலும்புகள் மற்றும் மேல்பக்கவாட்டு குருத்தெலும்புகள் ஆகியவற்றின் நிலைகள் தான் மூக்கின் வடிவத்தை தீர்மானிக்கிறது.
இந்த மூன்று பகுதிகளின் ஏதேனும் கலவை அல்லது வேறுபாடுகள், தனித்துவமான மூக்கின் வடிவத்தை உருவாக்கும். பொதுவாக இனத்தின் அடிப்படையிலும் இது அமையும். ஜர்னல் ஆஃப் க்ரேனியோஃபேஷியல் சர்ஜெரியில் நடத்தப்பட்ட சமீபத்திய சர்வேயின் படி, 14 மனித மூக்கின் வடிவங்கள் கண்டு கொள்ளப்பட்டது. அதே போல் இஸ்ரேல் நாட்டை சேர்ந்த ரசாயன பொறியியல் பேராசியரான ஆபிரகாம் தமிர், பி.எச்.டி., 1793 மூக்குகளின் படங்களை சர்வே செய்துள்ளார்.

காலம் . . . 2




சம்பவங்கள் இல்லை என்றால் காலமும் இல்லை என்பது விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் உடைய விஞ்ஞான கோட்பாடு
ஆசியா மைனான் மேற்கு கரையில் உள்ள ஸர்மீர்னாவுக்கு 50 மைல் தெற்கே உள்ள இபிஸியஸ் ( Ephesus) நகரத்தில் மகஸல்மீனா எம்லீகா ஸப்பீதா மர்தூனஸ் யப்யூனஸ் கஷ்பைத் தூனஸ் ஆகிய 7 வாலிபர்கள் சுமார் 20 வயது இவர்கள் ஏக இறைவனை வழிபட்டு வந்தனர்
கிபி 249 முதல் கிபி 251 வரை ஆட்சி புரிந்த டிஷியஸ் ( Decius ) என்ற மன்னன் சிலை வணங்க வேண்டி வற்புறுத்த வாலிபர்கள் ஜோர்டான் பக்கம் உள்ள ஒரு மலை குகையினுல் மறைந்து கொண்டனர்
சிறிது நேரத்தில் அவர்களுக்கு தூக்கம் ஆட்கொண்டது கூடவே அவர்கள் கூட்டிச் சென்ற நாயும் அவர்களுடனே இருந்தது
ஆழ்ந்த உறக்கத்திற்குப் பிறகு அவர்களுக்கு சாப்பிட உணவு வேண்டி நகரில் ஒருவர் போய் வாங்க சென்ற போது அவர் கொடுத்த காசு 300 வருடங்களுக்கு முந்தையது எனவே உணவு கொடுக்க கடைக்காரர் மறுத்தார் அந்த ஒரு வாலிபர் கொண்டு வந்த காசு பழங்கால புதையலை எடுத்து இருப்பார் எண்ணி அவரை பின் தொடர அவர் மீண்டும் குகைக்குள் சென்று மறைந்து கொண்டு குகையின் வாயிலை பெரிய பாறாங்கல்லைக் கொண்டு மூடிக்கொண்டார்
அவர்கள் தங்கள் குகையில் 300 வருடங்களுடன் மேலும் ஒன்பது அதிமாக்கி 309 வருடங்கள் தங்கினார்கள்

குர்ஆன் 18 : 25
வந்தவர்கள் அரசனுக்கு தெரியப்படுத்த அவர்கள் 300 வருடங்களுக்கு முன் வாழ்ந்தவர்கள் என்றும் அவர்களின் பெயர்களை அக்குகையின் வாயில் பதித்தனர்
சரி விஷயத்திற்கு வருவோம்
வாலிபர்களின் வயது சுமார் 20 அவர்கள் உறங்கியது 300 வருடங்கள் குகை விட்டு வெளியே வந்த போது அவர் 320 வயதுக்காராக வராமல் 20 வயது உடையவராக வந்தார் என்றால் உறங்கி 300 வருடங்கள் என்னவானது ?
விஞ்ஞானக் கூற்றுப்படி சம்பவம் இல்லை என்றால் காலமும் இல்லை

காலம் . . 6



"காலம் " என்று தனிப்பட்ட ஒன்று கிடையாது
பொருள்களின் நிறத்தையும் உருவத்தையும் எவ்வாறு நம் மனதின் உணர்வாக நாம் கருதுகிறோமோ, அதே மாதிரியான மன உணர்வுதான் காலமும் , பரந்த வெளியும் என்கிறது விஞ்ஞானம்
அப்படி என்றால் . . . . . பரந்த வெளியை நாம் உணர்வது எப்போது ? அப்பரந்த வெளியில் உள்ள பொருட்களின் அமைப்பை நாம் உணரும் போது தானே அப்பரந்த வெளியையும் உணர்கிறோம்
அதே வகையில் பொருட்களில் ஏற்படும் நிகழ்ச்சிகளை வரிசைப் பிரகாரம் அளிக்க முற்படும் போதுதான் நாம் காலத்தை உணர்கிறோம்
பொருட்கள் அடங்கிய உள்ள அண்டமே இப்பரந்த வெளி . . . பொருட்களில் ஏற்படும் நிகழ்ச்சிக் குறிப்புகள் காலப் பிரமானத்தால் கணக்கிடப்படுகின்றது
ஆகையால் பரந்த வெளியும் காலமும் பொருட்களின் அடிப்படையில் எழுந்தவை
பொருட்களைப் பற்றி உணர்வு மனத்தால் உண்டாகிறது ஆகவே பொருளின் அடிப்படையில் எழுந்த பரந்த வெளியும் காலமும் மனத்தின் உணர்வால் உண்டாகின்றன
அணுவும் அண்டமும் பொருளும் பிரபஞ்சமும் காலமும் வெளியும் மனத்தின் உணர்வால் எழுந்த மகத்தானதொரு மாய மாளிகை !
இதனால் இறைவன் நபி உஜைர் அலை அவர்களிடம் நூறு ஆண்டுகள் வரையில் மரணிக்கச் செய்து பின்னர் அவரை உயிர்ப்பித்து " இந்நிலையில் நீங்கள் எவ்வளவு காலம் இருந்தீர்கள் " ?
எனக்கேட்க அதற்கு அவர் " ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் இருந்தேன் " குர்ஆன் 2 : 259
இதைப் போன்றே குகைத் தோழர்களை இறைவன் 300 வருட உறக்கத்தில் இருந்து எழுப்பி எவ்வளவு காலம் நித்திரையில் இருந்தீர் ? என்று அவர்களில் ஒருவர் மற்றவரிடம் கேட்க
ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் . . . . குர்ஆன் 18 : 19

விசாரணைக் காலம் நிலைபெறும் நாளில் குற்றவாளிகள் தாங்கள் இவ்வுலகில் ஒரு நாழிகையைத் தவிர அதிக நாட்கள் தங்கி இருககவில்லை என்று சத்தியம் செய்வார்கள் . . குர்ஆன் 30 : 55
இந்த காலம் என்கிற மாயை நம்மால் அறிந்து கொள்ள முடியாது புலன்களின் அறிவால் கட்டுப்படுத்தப்பட்ட நம்து மனத்தின் உணர்வுக்கு அப்பால் சென்று விட்டால் அணுவும் இல்லை அண்டமும் இல்லை பொருளும் இல்லை இப்பரந்த வெளியும் இல்லை இப்பிரபஞ்சமும் இல்லை காலமும் இல்லை
அதனால்தான் காலம் என்று தனிப்பட்ட ஒன்று கிடையாது
காலத்தின் மீது சத்தியமாக . குர்ஆன் 103 : 01
காலத்தைப் பற்றிய ஞானம் அல்லாஹ்விடமே விடப்பட்டுள்ளது ஆகவே அதைப் பற்றி நான் ஒன்றும் கூறுவதற்கில்லை என்று நபியே நீர் கூறுவீராக . . . . குர்ஆன் 41 : 47

காலம் . . 9



நபிஸல் அவர்களின் மிஹ்ராஜ் என்னும் விண்வெளிப் பயணம்
ஒளியின் வேகத்தில் பயணிக்கிறவர்களுக்கு உடலில் சில மாற்றங்கள் ஏற்படும் என்று ஐன்ஸ்டீன் கூறுகிறார்
உங்கள் எடை கொஞ்சம் கூடும் அதனால் உங்கள் இதயம் கொஞ்சம் அதிகமாக வேலை செய்ய வேண்டும்
உங்கள் வாட்ச் ஸ்லோவாக ஓடும் ஆறடி உயரம் மூன்றடியாக குறையும் இந்த மாதிரியான
செயல்பாடுகளுக்கு லோரன்ஸியன் கண்டராக்ஷன் என்பார்கள் நம்புவதற்கு கஷ்டமாக இருக்கிறதா . ?
நம்பித்தான் ஆக வேண்டும்
ஒளியின் வேகத்திற்கு பைமெஸான் துகளை உள்ளாக்கியதில் மேற்கண்ட அத்தனை நிகழ்வுகளும் நடந்தது .
இது விஞ்ஞானத்தால் நிரூபிக்கப்பட்ட உண்மை
சரி விஷயத்திற்கு வருவோம்
இறைவன் ஒவ்வொரு படைப்பையும் ஒவ்வொரு பொருளைக் கொண்டு படைத்தான்
மனிதனை படைக்க மண்ணைப் பயன்படுத்தி உள்ளான்
ஜின்களைப் படைக்க நெருப்பை பயன்படுத்தி உள்ளான்
மலக்கு என்னும் வானவர்களைப் படைக்க ஒளியைப் பயன்படுத்தி உள்ளான்
வானவர்களை ஒளியால் படைத்த போது அவர்கள் பயன்படுத்தும் வானங்களான புராக் என்னும் மிருக
வாகனத்தையும் இறைவன் ஒளியால் படைத்திருப்பான்
காரணம் . . . . . . . . .
புராக் என்னும் மிருக வாகனம் தன் பார்வை எட்டிய தூரத்தில் அது தன் குளம்பை எடுத்து வைக்கும் ( அதாவது
ஒளியின் வேகம் ஒரு விநாடிக்கு 3 லட்சம் கிமீ )
எனவேதான் புராக் வாகனமும் ஒளியினால் படைக்கப்பட்டிருக்க
கிறது . ( நூல் முஸ்லிம் 234 )
புராக் வாகனத்தை ஓட்டி வந்தவர் வானவர்களின் தலைவர் ஜிப்ரீல் அலை அவர்கள் அவர்கள் மலக்கு
என்பதால் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள்
விண்ணுலகிற்கு பயணப்படுபவர்கள் நபிஸல் அவர்கள் நபிஸல் அவர்களை அல்லாஹ்வுடைய நூர் என்னும்
பிரகாச ஒளியிலிருந்து படைக்கப்பட்டவர்கள் . . . . அதற்கு என்ன ஆதாரம் . . ?
ஒரு சமயம் ஆயிஷா ரலி அவர்கள் நூலை ஊசியில் கோர்ப்பதற்கு சிரமப்படும் போது நபிஸல் அவர்கள் தன்
பக்கம் வர அவர்களின் வெளிச்சத்தில் நூலை கோர்த்தாக ஹதீஸ்களில் உள்ளது
நபிஸல் அவர்களின் நிழல் பூமியில் விழாது காரணம் ஒளிக்கு ஏது நிழல் ? இதுவும் ஹதீஸ்களில் உள்ளது
ஒளியின வேகத்தில் பயணிக்கும் போது உயரம் குறையும் எடை கூடும் இதயம் அதிகமாக துடிக்கும் இதற்கு
லோரன்ஸியன் கண்டராக் ஷன் ஏற்படாம் இருக்க நபிஸல் அவர்களுக்கு இருதய அறுவை சிகிச்சையை
ஜிப்ரீல் அலை அவர்கள் செய்கிறார்கள்
இந்த அறுவை சிகிச்சை சிறு வயது பிராயத்திலும் நடைபெற்றது
ஆக விண்வெளி பயணத்திற்குரிய எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டு நபிஸல் அவர்கள மிஹ்ராஜ் பயணம்
இரவு இஷா தொழுகைக்குப் பிறகு இரவில் படுத்திருக்கும் அவர்களை அழைத்துச் செல்லப்படுகிறார்கள்
இதுபற்றி நபிஸல் அவர்கள் சொல்லும் போது எனது படுக்கையின் சூடு ஆறுவதற்குள் நடந்து முடிந்தது
இந்தப் பயணம் ஓரிரு நிமிடங்களில் நடந்திருக்கிறது இதுவே ஒரு நாள் பயணமாக இருந்திருந்தால் பூமியில்
அனந்த கோடி வருடங்கள் ஆகி இருக்கும் இது பற்றி முன்னால் நாம பேசி இருக்கிறோம்
விண்வெளி பயணப் பாதையைப் பற்றி விஞ்ஞான பூர்வமாக இன்ஷா அல்லாஹ் நாளை

காலம் 12



நபிஸல் அவர்களின் மிஹ்ராஜ் என்னும் விண்வெளிப் பயணம்

கனடா தேசத்தில் முதுகலைப் பட்டம் பெற்ற ஹரீந்தர் சந்து என்ற சீக்கியர் தனது இணைய தளத்தில் Life after Death ல் நிறைய ஆய்வுகள் செய்து விவரிக்கிறார்

ஆற்றலை ஆக்கவோ அழிக்கவோ முடியாது ஆனால் ஒன்றை இன்னொன்றாக மாற்ற இயலும் இது ஆற்றல் மாறாக் கோட்பாடு எனும் விதி . . . . இவ்வாறே அறிவு என்பதையும் ஓர் ஆற்றலாக் கொண்டால் அதுவும் அழிவதில்ல ஆன்மாவும் அவ்வாறே அழிவதில்லை

நம் பிரபஞ்சத்திலுள்ள கருந்துளை என்பது அறிவின் மொத்த உறைவிடமாகவோ அல்லது தேவலோகமாகவோ கருதப்பட இடமுண்டு விஞ்ஞானத்தால் அறுதி இட முடியாத விஷயங்களில் இதுவும் ஒன்று

ஞான ஜோதி சம்மங்கி எழுதிய . மரணம் . . . மறுமை . முக்தி எனும் ஆய்வு நூலில் . . . . . பிரபஞ்சத்திலுள்ள கருந்துளைச் சுற்றி நான்கு வளையங்கள் உள்ளன

ஊர்வன பறப்பன இவற்றோடு தீய எண்ணங்களால் தீய காரியங்களையே செய்த மனித ஆத்மாக்கள் யாவும் முதல் வளையத்தை அடைகிறது

நல்லதும் கெட்டதும் கலந்து ஓரளவு மனிதத் தன்மையோடு வாழ்ந்த ஆன்மாக்கள் இரண்டாவது வளையத்தையும் அடைகிறது

நல்ல எண்ணங்களுக்கு மட்டுமே இடம் கொடுத்து நல்ல செயல்களால் மட்டுமே வாழ்ந்தார்களின் ஆன்மாக்கள் மரணத்திற்குப் பிறகு மூன்றாவது வளையத்தை அடைகிறது

வணக்க வழிபாடு தியானம் பிறருக்காகவே வாழ்ந்த புனித ஆன்மாக்கள் மரணத்திற்குப் பிறகு நான்காவது வளையத்தை அடைகிறது

யோக நெறிகளான தியானத்தில் முதிர்ந்து முக்தி அடைந்து சமாதி நிலையை அடைந்த பூரண யோகியரின் ஆன்மாக்கள் உடலை நீர்த்ததும் நேராக இந்த கருந்துளைக்குள்ளே நுழைந்து அதில் சங்கமாகி விடுகின்றன என்பதாக கருந்துளையின் அமைப்பையும் அதன் பயன்பாட்டையும் குறிப்பிட்டுள்ளார்

ஸஹீஹ் முஸ்லிம் பாகம் 1 பக்கம் 211 ல் . . . . வான எல்லையில் உள்ள இலந்தை மரம் என்கிற சித்ரத்துல் முன்தஹா பற்றிய குறிப்பில மேற்கண்ட அத்தனை விஷயங்களை உண்மைப்படுத்தி நம்மை வியக்கச் செய்கிறது

சித்ரத்துல் முன்தஹா என்பது வான எல்லையில் உள்ள ஓர் இடத்தின் பெயர் ( வான் கருந்துளையின் மறுபக்கமா ? ) ' சித்ரத் ' என்பதற்கு இலந்தை மரம் ( jujube ) என்று பொருள்

முன்தஹா 'என்றால் இறுதியானது என்று பொருள் இறுதி எல்லையில் உள்ள இலந்தை மரம் என்று பொருள் விரியும்

வான எல்லையில் உள்ள பிரம்மாண்டமான இந்த மரத்தின் இலைகள் ஒவ்வொன்றும் யானையின் காதுகளைப் போன்றும் பழங்கள் பெரிய கூஜாவைப் போன்றும் இருக்கும்

6 வது வானத்தில் இதன் வேர் உள்ளது 7 வது வானத்திற்கும் மேல் வரை இம்மரம் நெடிதுயர்ந்து உள்ளது பொன் வண்டுகள் அந்த மரத்தை மொய்த்துக் கொண்டிருக்கிறது அந்த மரம் பல வண்ணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது அதன் அழகை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை

பூமியில் உள்ளவர்கள் புரியும் செயல்கள் பற்றிய குறிப்பு இங்குதான் செல்கிறது

பூமியில் கைப்பற்றப்படும் உயிர்களும் இங்கேதான் வந்து சேர்கின்றன

இதற்கு மேலிருந்து வரும் இறைக் கட்டளைகள் இங்குதான் முதலில் இறங்குகின்றன

வானவர்களின் அறிவு இந்த இடத்தோடு முற்றுப் பெறுவதாலேயே இதற்கு எல்லை
(முன்தஹா ) எனும் பெயர் வந்தது
இங்கிருந்து 4 ஆறுகள் ஓடுகின்றன இரண்டு உள் நோக்கி பாயும் சல்சபீல் மற்றும் கவ்ஸர் ஆகிய சுவனத்தின் ஆறுகள்
மற்றது இரண்டும் வெளியே பாயும் நைல் மற்றும் யூப்ரடீஸ் நதிகளாகும்
சித்ரத்துல் முன்தஹா வழியே நபிஸல் அவர்களின் விண்ணுலக பயணம் நடந்தது
சித்ரத்துல் முன்தஹா கருந்துளையின் மறுபக்கமா ?
அழகிய பாதைகள் உடைய வானத்தின் சத்தியமாக
குர்ஆன் 51 : 07

காலம் 12



நபிஸல் அவர்களின் மிஹ்ராஜ் என்னும் விண்வெளிப் பயணம்
கனடா தேசத்தில் முதுகலைப் பட்டம் பெற்ற ஹரீந்தர் சந்து என்ற சீக்கியர் தனது இணைய தளத்தில் Life after Death ல் நிறைய ஆய்வுகள் செய்து விவரிக்கிறார்
ஆற்றலை ஆக்கவோ அழிக்கவோ முடியாது ஆனால் ஒன்றை இன்னொன்றாக மாற்ற இயலும் இது ஆற்றல் மாறாக் கோட்பாடு எனும் விதி . . . . இவ்வாறே அறிவு என்பதையும் ஓர் ஆற்றலாக் கொண்டால் அதுவும் அழிவதில்ல ஆன்மாவும் அவ்வாறே அழிவதில்லை
நம் பிரபஞ்சத்திலுள்ள கருந்துளை என்பது அறிவின் மொத்த உறைவிடமாகவோ அல்லது தேவலோகமாகவோ கருதப்பட இடமுண்டு விஞ்ஞானத்தால் அறுதி இட முடியாத விஷயங்களில் இதுவும் ஒன்று
ஞான ஜோதி சம்மங்கி எழுதிய . மரணம் . . . மறுமை . முக்தி எனும் ஆய்வு நூலில் . . . . . பிரபஞ்சத்திலுள்ள கருந்துளைச் சுற்றி நான்கு வளையங்கள் உள்ளன
ஊர்வன பறப்பன இவற்றோடு தீய எண்ணங்களால் தீய காரியங்களையே செய்த மனித ஆத்மாக்கள் யாவும் முதல் வளையத்தை அடைகிறது
நல்லதும் கெட்டதும் கலந்து ஓரளவு மனிதத் தன்மையோடு வாழ்ந்த ஆன்மாக்கள் இரண்டாவது வளையத்தையும் அடைகிறது
நல்ல எண்ணங்களுக்கு மட்டுமே இடம் கொடுத்து நல்ல செயல்களால் மட்டுமே வாழ்ந்தார்களின் ஆன்மாக்கள் மரணத்திற்குப் பிறகு மூன்றாவது வளையத்தை அடைகிறது
வணக்க வழிபாடு தியானம் பிறருக்காகவே வாழ்ந்த புனித ஆன்மாக்கள் மரணத்திற்குப் பிறகு நான்காவது வளையத்தை அடைகிறது
யோக நெறிகளான தியானத்தில் முதிர்ந்து முக்தி அடைந்து சமாதி நிலையை அடைந்த பூரண யோகியரின் ஆன்மாக்கள் உடலை நீர்த்ததும் நேராக இந்த கருந்துளைக்குள்ளே நுழைந்து அதில் சங்கமாகி விடுகின்றன என்பதாக கருந்துளையின் அமைப்பையும் அதன் பயன்பாட்டையும் குறிப்பிட்டுள்ளார்
ஸஹீஹ் முஸ்லிம் பாகம் 1 பக்கம் 211 ல் . . . . வான எல்லையில் உள்ள இலந்தை மரம் என்கிற சித்ரத்துல் முன்தஹா பற்றிய குறிப்பில மேற்கண்ட அத்தனை விஷயங்களை உண்மைப்படுத்தி நம்மை வியக்கச் செய்கிறது
சித்ரத்துல் முன்தஹா என்பது வான எல்லையில் உள்ள ஓர் இடத்தின் பெயர் ( வான் கருந்துளையின் மறுபக்கமா ? ) ' சித்ரத் ' என்பதற்கு இலந்தை மரம் ( jujube ) என்று பொருள்
முன்தஹா 'என்றால் இறுதியானது என்று பொருள் இறுதி எல்லையில் உள்ள இலந்தை மரம் என்று பொருள் விரியும்

வான எல்லையில் உள்ள பிரம்மாண்டமான இந்த மரத்தின் இலைகள் ஒவ்வொன்றும் யானையின் காதுகளைப் போன்றும் பழங்கள் பெரிய கூஜாவைப் போன்றும் இருக்கும்
6 வது வானத்தில் இதன் வேர் உள்ளது 7 வது வானத்திற்கும் மேல் வரை இம்மரம் நெடிதுயர்ந்து உள்ளது
பொன் வண்டுகள் அந்த மரத்தை மொய்த்துக் கொண்டிருக்கிறது அந்த மரம் பல வண்ணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது அதன் அழகை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை
பூமியில் உள்ளவர்கள் புரியும் செயல்கள் பற்றிய குறிப்பு இங்குதான் செல்கிறது
பூமியில் கைப்பற்றப்படும் உயிர்களும் இங்கேதான் வந்து சேர்கின்றன
இதற்கு மேலிருந்து வரும் இறைக் கட்டளைகள் இங்குதான் முதலில் இறங்குகின்றன
வானவர்களின் அறிவு இந்த இடத்தோடு முற்றுப் பெறுவதாலேயே இதற்கு எல்லை (முன்தஹா ) எனும் பெயர் வந்தது
இங்கிருந்து 4 ஆறுகள் ஓடுகின்றன இரண்டு உள் நோக்கி பாயும் சல்சபீல் மற்றும் கவ்ஸர் ஆகிய சுவனத்தின் ஆறுகள்
மற்றது இரண்டும் வெளியே பாயும் நைல் மற்றும் யூப்ரடீஸ் நதிகளாகும்
சித்ரத்துல் முன்தஹா வழியே நபிஸல் அவர்களின் விண்ணுலக பயணம் நடந்தது
சித்ரத்துல் முன்தஹா கருந்துளையின் மறுபக்கமா ?
அழகிய பாதைகள் உடைய வானத்தின் சத்தியமாக
குர்ஆன் 51 : 07

காலம் . . . 13



நபிஸல் அவர்களின் மிஹ்ராஜ்
என்னும் விண்ணுலக பயணம்
கால எந்திரம் அதாவது நிகழ் காலத்தில் இருந்து எதிர் காலத்தில் பயணிப்பது அல்லது நிகழ் காலத்தில் இருந்து கடந்த காலத்திற்குள் பயணிப்பது போன்ற அறிவியல் புனைக் கதையில் எழுதலாம் ஆனால் விஞ்ஞானம் ஏற்றுக் கொள்ளவில்லை கால எந்திர வாகனத்தை ஆனால் இறைவன் அப்படி ஒரு வாகனத்தை நபிஸல் அவர்களுக்கு வழங்கினான்
புரியலையா ?
புரியும்படி சொல்றேன் இரவு படித்துக் கொண்டிருக்கிறேன் என் மனைவி கண்ணாடி டம்ளரில் பால் கொண்டு வந்து என் டேபிளின் ஓரத்தில் வைக்க புக் எடுக்கும் போது பால் கீழே விழுந்து கண்ணாடி டம்ளர் உடைந்து பால் சிந்தியது
இதையெல்லாம் மகன் மூஸல்
செல்லில வீடியோ எடுக்கிறான்
எனக்கு அதே பால் வேண்டும் அதேகண்ணாடி டம்ளரில் சாத்தியமா . . . ? வீடியோவை ரீவைண்டிங்கில் சினிமாத் தனத்தில் தான் சும்மா செய்து காட்ட முடியும் நிஜத்தில் அல்ல .
காலம் கடந்தது கடந்ததுதான் என்கிறது விஞ்ஞானம் ஆனால் . . . . . . . . நபிஸல் அவர்களுக்கு காலமும் கட்டுப்பட்டது
நபிஸல் அவர்கள் அலீ ரலி மடியில் படுத்து உறங்கி விட்டார்கள்
அலீ ரலி அவர்களின் அஸர் வஃக்து தொழுகை களா ஆகிவிடக் நேரத்தில் நபிஸல் கண் விழிக்க . . தன்னுடைய தொழுகை களா ஆகிவிடுமா . . என்று நபிஸல் அவர்களிடம் கேட்க
நபிஸல் அவர்கள் சூரியனை மறையாமல் பின்னோக்கச் சொன்னார்கள்
காலம் கடக்கவில்லை
அதாவது நிகழ் காலத்தில் இருந்து கடந்த காலத்திற்குள் உலகமே பயணத்தது
நபிஸல் அவர்களின் விண்ணுலப் பயணம் பூமியின் சுழற்சிக்கு எதிரா இருந்தது காரணம் பூமியில் இருந்து வானிற்கு கிளம்பியதும் பூமியில

மூஸா அலை அவர்கள் உரத்த குரலில் தல்பியா சொல்லிக் கொண்டு அல் அஸ்ரக் பள்ளத்தாக்கில் உள்ள மலையிலிருந்து இறங்கி வந்து கொண்டிருப்பதை இப்போதும் நான் காண்பதைப் போனறு உள்ளது என நபிஸல் அவர்கள் கூறினார்கள்
( முஸ்லிம் 268 )
அடுத்து ஹர்ஷா மலைக் குன்றிலிருந்து நபி யூனுஸ் பின் மத்தா அலை சிகப்பு நிற ஒட்டகையில் கண்டேன் என்றார்கள் ( முஸ்லிம் 268 )
அடுத்து நபி ஈஸா அலை அவர்களை நடுத்தர உயரமும் சிவப்பு வெண்மை உடையவர்களாக தொங்கலான தலைமுடியுடன் கண்டேன் (முஸ்லிம் 267 )
அல் அஸ்ரக் பள்ளத்தாக்கு சிரியா பக்கம் உள்ளது
ஹர்ஷா மலை சிரியா - மதீனா சாலையில அல் ஜுஹ் ஃபாவுக்கு அருகில் உள்ளது
நபிஸல் அவர்களின் பயணம் நிகழ்காலத்திலிருந்து கடந்து காலம் வழியாக நடந்தது இதனால் கடந்த காலத்தில் வாழ்ந்த நபிமார்களை இப்போது காண்பது போல் நபிஸல் அவர்கள் காண்கிறார்கள்

காலம் 14




வயோதிகமான ஓர் இறைநேசரை வெள்ளிக்கிழமை சந்திக்க கிள்ரு அலை அவர்கள் வருவது அந் நாட்டு மன்னவருக்கு தெரிய வருகிறது மன்னருக்கு கிள்ரு அலை அவர்களை சந்திக்க ஆவல்
உத்தரவு கிடைக்கிறது
மன்னர் கிள்ரு அலை அவர்களிடம் அற்புதமான விஷயங்களைப் பற்றி சொல்லுங்கள் என்று கேட்க
ஒரு சமயம் இந்த ஊரிலிருந்து வெளியே ஒரு தோட்டத்தைப் பார்த்தேன் அங்கு ஒருவர் . .
" யாத்ரிகரே இங்கே வாரும் என்று கூறி ஒரு பெட்டி திராட்ச பழம் கொடுத்தார்
என்ன விலை ? என்று கேட்க
விலையேதும் இல்லை இங்கு
உள்ள பாதுஷா வழிப் போக்கருக்கு கொடுக்கச் சொன்னார்
அதே தோட்டத்தின் மறுகோடியில் இனிப்பு வழஙகபபட்டது விலையேதும் இல்லாமல் . . . . அவரும் இவர் சொன்ன மாதிரி பாதுஷா கொடுக்க சொன்னதாக சொன்னார்
500 வருடங்களுக்குப் பிறகு இதே வழியே கிள்ரு அலை வரும்போது தோட்டம இல்லை ஆனால் பெரிய நதி ஓடுகிறது தோட்டம் பற்றி விசாரித்த போது அப்படி ஒரு தோட்டம் எங்களுடைய மூதாதையர்கள் கூட சொல்வே இல்லை
பின் 500 வருடங்களுக்குப் பிறகு அவ்வழியே கிள்று அலை அவர்கள் வரும் போது அந்த நதி இல்லை வெறும் காடுதான் இருந்தது நதி பற்றி யாருக்கும் தெரியவில்லை
பின் 500 வருடங்களுக்குப் பிறகு வந்த போது . . . அதே தோட்டம் அதே திராட்சை பழம் மற்றும் அதே தோட்டத்தின் மறு கோடி இனிப்பு
என்ன விலை . ? என்று கேட்க
"போப்பா . . நேற்றுதானே சொன்னேன் பாதுஷா வழிப்போக்கற்கு ஒரு பெட்டி பழம் விலை இல்லை
அதே மாதிரி இனிப்பும் வழஙகப்பட்டது . .
கிள்ரு அலை அவர்கள் அந்த மன்னரிடம் எனக்கு 1500 வருடங்கள் ஆகியிருக்கிறது
ஆனால் அந்த தோட்டக்காரர்களுக்கு ஒரே ஒரு நாள்தான் ஆகி இருக்கிறது
ஆதாரம் . :மல் ஃபூழாத்தே ஃபகீஹுல் உம்மத் பாகம் 1 பக் 67
இதே சேதியை விஞ்ஞானம் ஏற்றுக்கொள்கிறது
இது பற்றிய விஞ்ஞானம் இன்ஷா அல்லாஹ் பிற்பாடு சொல்றேன்

காலம் . 15

கிள்ரு அலை அவர்கள் கூறுவது பூமியின் நிலப் பரப்பு அடிக்கடி மாற்றியமைக்கப்படுகிறது
இதையே விஞ்ஞானமும் பல நிகழ்வகளை சுட்டிக் காட்டுகிறது

வட அமெரிக்காவில் டகோட்டா என்ற மாகாணத்துக்கும் கடலுக்கும துளிக் கூட சம்பந்தமே இல்லை அங்குள்ள மணல் படுக்கையில் 7 கோடி ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ராட்சச கடல் ஆமையின் ஓடு மற்றும் எலும்புகள் எடுக்கப்பட்டிருக்கின்றன
சீனாவில் உள்ள உரும்கி என்ற நகரில் 2 மீட்டர் ஆழத்தில் 6 செ மீ முதல் 20 செமீ வரையிலான மீன்களின் புதைபடிவங்கள கிடைத்துள்ளது இந்த நகரத்திற்கும் கடலுக்கும துளி கூட சம்பந்தமே இல்லை
இந்நகரம் பசிபிக் கடலில் இருந்து 2500 கிமீ மேற்கிலும் . ஆர்டிக் கடலிலிருந்து 3400 கிமீ தெற்கிலும் அட்லாண்டிக் கடலிலிருந்து 6900 கிமீ கிழக்கிலும் இந்தியப் பெருங் கடலிலிருந்து 2200 கிமீ வடக்கிலும் உள்ளது
அதைப்போல் கற்கால மனிதர்கள் நடந்த தரைப் பகுதி கடலுக்குள் இருக்கிறது
இப்போது கூட பூகம்பத்தால் சிந்து நதி தன் வழித்தடத்தை மாற்றி இருக்கிறது
சரஸ்வதி என்ற நதி இந்த பூமியில் காணாமல் போய்விட்டது
. . . . . . . . . இப்படி எத்தனையோ இடம் மாறிப் போன தடங்கள் தடயமே இல்லாமல் போய் இருக்கிறது
எத்தனையோ கடலின் தரைப்பகுதிகள் கடல் மட்டத்தை விட உயர்ந்து தீவுகளாக பரிமாணித்துள்ளது
. . . . . இன்னும் காலம் கனியும

காலம் 16



சூஃபியிஸத்தின் தலைவர் ஹளரத் ஜுனைதுல் பாக்தாதி ரஹ் அவர்களின் சீடர் ஒருவர் குளிப்பதற்காக தஜ்லா நதிக்கு வருகிறார்
அந் நேரம் சுபுஹ் தொழுகைக்கு சற்று முந்தைய நேரம்
ஆடைகளை களைந்து ஆற்றின் ஓரத்தில் வைத்து விட்டு நதியில் இறங்கி ஓரே ஒரு முங்குதான் போட்டார் . . . . . . அவ்வளவுதான் அவர் கண்டம் விட்டு கண்டமோ அல்லது இந்த பிரபஞ்சத்தின் வேறு ஏதோ ஒரு கிரகத்தின் நதியிலோ குளித்தவாறு வெளியே வருகிறார் அங்கு ரொம்ப காலம் அங்குள்ள மக்களோடு மக்களாக வாழ்ந்து வருகிறார்
. . . . . . ஒரு நாள் அங்குள்ள நதியில் யதார்த்தமாக குளிக்கிறார் அந்த நதியில் ஒரே ஒரு முங்கு போட்டார் . . . . . . அவ்வளவுதான் மீண்டும் தஜ்லா நதியில் ஆற்றில் நின்று கொண்டு இருக்கிறார் . . . ஆச்சரியம் அதே சுபுஹ் நேரம் இன்னும் சுபுஹ் தொழுகை நடைபெறவில்லை களைந்து வைத்த துணி கூட அங்கு அதே இடத்தில் அப்படியே இருக்கிறது . . . . துணி உடுத்துக் கொண்டு சுபுஹ் தொழுகையில் கலந்து கொள்கிறார்
இதைப்பற்றி தனது ஷைகான ஜுனைதுல் பக்தாதி ரஹ் அவர்களிடம் கூறிய போது சில சமயம் ரொம்ப அதிகமாக வணக்க வழிபாடுகளில் ஈடுபட நினைக்கும் சாதாரண சாதகருக்கு பல காலம் வணங்கும் பாக்கியத்தை இப்படியும் இறைவன் வழங்குகின்றான்
இது சாத்தியமா ? என்றால் விஞ்ஞானத்தின் பதில் . . . . சாத்தியமே . . . . இன்ஷா அல்லாஹ் நாளை இதற்குரிய விஞ்ஞானத்தின விளக்கம்

காலம் 17




கிள்ரு அலை அவர்கள் பார்த்த தோட்டக்காரன்களுக்கு ஒரு நாள் என்பது 1500 வருடங்கள் உள்ளடக்கிய பொழுது
ஜுனைதுல் பக்தாதியின் சீடருக்கு ஒரு சில நிமிடப் பொழுது பல வருடங்களை உள்ளடக்கியது
விஞ்ஞானம் இந்த மாதிரி காரிய நிகழ்வுகளுக்கு சில காரணங்களைக் கூறுகிறது
எங்கும் விரிந்த அண்ட வெளியில் சதா சர்வ கால்மும் வெற்றிடத்தில் அணுவுக்குள் அணுவின் நுண் துகள் தோன்றி மறைந்தபடி உள்ளன
ஒன்றுமே இல்லாத சூனியத்தில் இருந்து திடீரென்று ஒரு துகளும் உடன் எதிர் துகளும் ஜோடியாக ஒரே இடத்தில் தோன்றி ஒன்றுடன் ஒன்று கலந்தும் பின் ஒன்றை ஒன்று வெட்டிக் கொண்டும் ஒன்றுமே இல்லாமல் ஆகிறது
அவனே வானங்களையும் பூமியையும் முன் மாதிரி இன்றியே படைத்தான் அவன் எதைப் படைக்கக் கருதினாலும் அதனை ஆகுக எனக் கூறிய மாத்திரத்தில் உடனே அது ஆகிவிடுகிறது
( படைப்பதற்கு எந்த மூலப் பொருளும் தேவை இல்லை )
குர்ஆன் 2 : 117
இப்படி சமநிலையை காப்பாற்றியபடி உள்ளன இந்த சம நிலையில் புழுத் துளை என்று ஒன்று ஏற்படுகிறது
புழுத்துளை என்பது சுருங்கி விரியக் கூடிய புழுயின் அமைப்பை உடையது
புழுத் துளை என்பது ஒரு விதமான பிரபஞ்ச குறுக்கு வழி அதாவது பூமியில் ஓர் இடத்தை குறுக்கு வழியில் அடைவது போல காலத்திலும் ஒரு குறுக்கு வழி உண்டு காலத்தின் குறுக்கு வழிதான் இந்த புழுத் துளை ஆகும்
இந்த புழுத்துளை வழியாக இன்னொரு காலத்திற்குள் பிரவேசிக்கலாம்
அப்படி பிரவேசிக்கும் போது முன்பொரு காலத்தில் வாழ்ந்த மக்களோடு நீங்கள் வாழலாம்
ஒரு சமயம் உங்கள் பாட்டனாரைக் கூடப் பார்க்கலாம்
ஹதீஸ் முஸ்லிம் இடம் பெற்ற
சம்பவம்
நபி ஈஸா அலை அவர்களை உயிருடன் இரண்டாம் வானத்திற்கு உயர்த்தி அங்கு நபி யஹ்யா அலை அவர்களுடன் பிரவேசிக்க செய்தது கூட புழுத்துளையின் தத்துவத்தை இறைவன் பயன்படுத்தி இருக்கலாம்
இந்த மாதிரி விநோதமான விஞ்ஞானத்திற்கு ( Exotic matter )
என்ற ஒரு வஸ்து உள்ளது இது தேவலோகத் துகள் உண்மையில் பொருள் அல்ல ஒரு விதமான சக்தி அது .
அதாவது எதிர்மறையான சூன்ய சக்தி
இன்றைய அணு பௌதிக கோட்பாடாகிய குவாண்டம் இயல்பியலின்படி வெற்றிடத்திலும் கூட எதுவும் உண்டாகலாம்
இது போன்ற சம்பவங்கள் பிரபஞ்சத்தின் அடித்தளமான காரண காரிய விதியையே மீறுவது போல இருந்தாலும் ஐன்ஸ்டீன் சார்பியல் தத்துவப்படி இது சாத்தியம் என்கிறது விஞ்ஞானம்
ஜுனைதுல் பாக்தாதி ரஹ் அவர்களின் சீடர் இந்த புழுத்துளை வழியாக பயணம் செய்து காலம் காலமாக வாழ்ந்து பின் இவ்வுலகின் பழைய இடத்தில் ஒரு சில நிமிடங்களில் அவதானித்திருக்கலாம்

மூக்கு 3  21-03-2017

பேச்சுக்கும், மூக்குக்கும் சம்பந்தம் இருக்கிறது என்று சொன்னால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும் ஜலதோஷம் பிடித்து மூக்கு அடைத்துக் கொள்ளும் சமயங்களில் நீங்கள் ஏன் சரியாகப் பேசச் சிரமப்படுகிறீர்கள் என்று யோசித்தால் அந்த உண்மை விளங்கும் நாம் எழுப்பும் ஒலிக்குச் சரியான வடிவம் கொடுக்க தொண்டையின் குரல் வளையம் மட்டும் போதாது மூக்கும் அதிலுள்ள சைனஸ் அறைகளும் கூட முக்கியம்தான் இவை யெல்லலாம் சேர்ந்துதான் நாம் எழுப்பும் ஒலிக்குச் சரியான அதிர்வுகள் தந்து இனிமையைச் சேர்க்கின்றன

மூக்கை அழுததிப் பிடித்துக் கொண்டு ங, ஞ, ந , ம, போன்ற எழுத்துக்களை உச்சரித்துப் பாருங்கள் அவற்றின் ஒலிவடிவம் சரியாகவே வெளிவராது மூக்கு அறுபட்டாலோ அல்லது சிதைக்கப்பட்டாலோ ஒலி சரியாக வராது காரணம் மூக்கின்ஒத்துழைப்பு இல்லாமைதான் அதற்குக் காரணம்

மேலும் முகத்திலுள்ள அங்கங்களில் முக்கு பிரதானமானது என்பதாகப் பார்த்தோம்

மூக்கில் பழுதேற்பட்டால் அதனை மறைத்துக் கொண்டு வெளியில் செல்ல முடியாது எவரும் குறிப்பாக பார்க்கக் கூடிய அங்கமாக அது இருக்கிறது

எனவே கௌரவம் அகௌரவம் ஆகியவற்றை பகிரங்கப்படுத்துவதற்கு மூக்கு சிலேடையாகக் கூறப்படுகிறது ஒருவருக்கு இழிவு ஏற்பட்டால் " மூக்கு போய் விட்டது. மூக்கு அறுபட்டுவிட்டது" என்று கூறுவது எங்கும் வழக்கமாக இருக்கிறது

இதன்படி பத்ருப் போரில் வலீதுக்கு மூக்கிங் காயமேற்பட்டு, அதன் அடையாளம் அவன் மரணமடையும் வரை இருந்ததென வரலாறு கூறுகிறது

"நம்முடைய வசனங்கள் அவனுக்கு ஓதிக்காண்பிக்கப்பட்டால் இது முன்னுள்ளோரின் கட்டுக் கதைகள் என்று கூறுகின்றான்

(என்றென்றும் இருக்கக் கூடியவாறும் அனைவரும் . அறியக்கூடிய வாரும்) அவனுடைய மூக்கில் அதி சீக்கிரத்தில் ஒரு அடையாளமிடுவோம்

திருக்குர்ஆன் 68 : 15, 16

ஒரு முறை அபூபக்கர் (ரலி ) அவர்களை கல் நெஞ்சக்காரர்கள் கடுமையாக அடித்து மிதித்தார்கள்

உத்பா அவர்களை செருப்பால் அடித்து அவர்களின் முகத்தை செருப்பைக் கொண்டு தேய்த்து மூக்கை சிதைத்தான் இதனால் அவர்களின் மூக்கு அடையாளம் தெரியாத அளவு ஆகி விட்டது.
தைம் கோத்திரத்தார்கள் அபூபக்கர் (ரலி) அவர்கள் இறந்து விட்டதாக எண்ணி ஒரு துணியில் சுற்றிக் கொண்டு வீட்டிற்கு வந்து சிதைந்த மூக்கை சேர்த்து வைத்து வைத்தியம் செய்தனர்

மூக்கு 4




மூக்கின் இன்னொரு பயன் கண்ணீருக்கான கழுவுநீர் கால்வாயாக செயல்படுகிறது. விழியோரம் இருக்கும் ஒரு துளை மூக்கோடு தொடர்பு கொண்டிக்கிறது. துக்கத்தால் கண்ணீர் பெருகும்போது அதன் ஒரு பகுதி மூக்கு வழியாகவும் வெளியேறுகிறது.

துக்க வீடுகளில் கூடி அழும் பெண்கள் அடிக்கடி மூக்கை சிந்தியபடி இருப்பார்கள் அவர்கள் சிந்துவது சளி அல்ல..... இப்படி வெளியேறுவது கண்ணீர்தான்

சுவாசத்துக்கு மூக்கின் பங்களிப்பு வெளியே உள்ள காற்றை உடலுக்குள் செலுத்துவது மட்டுமல்ல அந்த காற்றை ஒரு இயந்திரம் போல தூய்மைப்படுத்தி கற்றே குளிர்வித்த பின்னரே செலுத்துகிறது மூக்கின் முனைப்பாகத்தில் உள்ள மயிரிழைகள்தான் இந்தக் காற்றை வடிகட்டும் முதல் நிலை ஃபில்டலராக யெல்படுகிறது

இதை அடுத்து உள்ளே சுரந்தபடி இருக்கும் திரவம் சளி இந்தக் காற்றை குளிர்வித்து கிட்டத்தட்ட ஒரு ஏர்கண்டிஷனர் போல உடலுககு இதமான வெப்ப நிலைக்கு அதைக் கொண்டு வருகிறது

வெளிக் காற்றின் வெப்பநிலை எக்குத் தப்பாக இருந்து அது அப்படியே உள்ளே போனால் கண்டிப்பாக நுரையீரல் பாதிக்கப்படும்

இந்தக் குளிர்விக்கும் செயலுக்காக மட்டும் ஒரு நாளைக்கு நம் மூக்கில் ஒரு லிட்டர் அளவுக்குச சளி திரவம் சுரந்து கொண்டிருக்கிறது என்பதை நீங்கள் நம்ப வேண்டும்

இந்தத் திரவத்தில் லைசோஸைம் என்ற என்ஸைமுக்குச் சில வகை கிருமிகளை அண்டவிடாமல் நம் உடலுக்கே ஒரு காவலனாகவும் இருக்கிறது

எலும்புகள் - 5 (விலா எலும்பு )




எலும்புகள் தொடரில் முக்கியமான விலா எலும்பு விட்டு போனது
மார்பு கூட்டில் உள்ளவை பன்னிரண்டு ஜோடி விலா எலும்புகள் ஒன்று போல் மற்றொன்று கிடையாது
அளவிலும் சரி, அமைந்துள்ள கோணத்திலும் சரி, இவற்றில் பத்து ஜோடி தான் நம் மார்புப் பகுதி செயல்பட உதவுகின்றன கீழ்ப் பகுதிலுள்ள மீதி இரண்டும் ஒப்புக்குச் சப்பாணி இவற்றை "ஃப்ளோட்டிங் ரிபஸ் " (Floating Ribs) என்கிறார்கள்
இதனால்தான் என்னவோ ஆதம் (அலை) அவர்களின் வலது புற ஒருகோணலான விலா எலும்பை எடுத்து அவரது மனைவி ஹவ்வா (அலை) அவர்களைப் படைத்ததாக குறிப்பிடுகின்றான்
ஆனால் பர்னபாஸ் சுவிசேஷத்தில் அவர்களின் இடது புறத்தின் இருதயத்திற்கு மிக அண்மையில் உள்ள ஒரு கோணலான எலும்பு என்று குறிப்பிடுகிறது.
ஆக விலா எலும்பு தொடரினுள்ள ஒரு கோணலான எலும்பிலிருந்து பெண் படைக்கப்பட்டாள் என்பது உண்மை
விலா எலும்பு பற்றி நாம் பேசும் போது சிந்திக்க தக்க ஒரு வசனம் நம் ஞாபகத்திறகு வருகிறது
" மனிதன் தான் எதனால் படைக்கப்பட்டிருக்கின்றான் என்பதைச் சிறிது கவனிக்கவும்
குதித்து வெளிப்படும் ஒரு துளி நீரைக் கொண்டே படைக்கப்பட்டான்
அது, முதுகந்தண்டுக்கும் நெஞ்சுக்கும் மத்தியிலிருந்து வெளிப்படுகிறது
திருக்குர்ஆன் 86 : 05 முதல் 07 வரை
முதுகந்தண்டும் நெஞ்சு எலும்பும் விலா தொடரின் எலும்புகள்தான்
இப்போது ஹவ்வா (அலை) அவர்களின் படைப்பு விலா எலும்பு ,மனிதன் இனப்பெருக்கத்திற்கு பயன்படுத்தும் விந்து வெளிப்படும் "மூலம் " விலா எலும்பு தொடர்
இந்த இரண்டையும் ஒரு சேராக சிந்தியுங்கள் தெளிவு கிடைக்கும்
ஃபாரான்ஸிக் சயின்ஸ்
குற்றம் சம்பந்தப்பட்ட விஞ்ஞானம்
இஸ்ரேவேளர்களில் பணக்காரரான ஒரு வயோதிகர் இருந்தார் அவருடைய சிறிய தகப்பனாரின் புதல்வர்கள் அவரது சொத்துக் வாரிசுரிமை கொண்டாடி அந்த சொத்துக்களை அடைய பேராசையின் காரணமாக அவரை கொலை செய்து பக்கத்தில் உள்ள ஊரில் கொண்டு போய் பிணத்தை போட்டு விட்டு பக்கத்து ஊர்க் காரர்கள் இதற்குரிய நஷ்டத்தையும் தர வேண்டும் என்று நபி மூசா அலை இடம் வழக்கு வந்தது
பாவம் பக்கத்து ஊரார் பதறி அடித்து மறுத்தனர் இறந்த கொலையாளிக்கும் தங்களுக்கும் தொடர்பு இல்லை என்பதாக கூறினார்கள்
நபி மூசா அலை அவர்கள் இறைவனிடம் வேண்டவே அல்லாஹ்
நீங்கள் ஒரு மாட்டை அறுத்து அதில் ஒரு பாகத்தைக் கொண்டு கொலையுண்டவரின் மீது அடியுங்கள் என நாம் கூறினோம் அவ்வாறு அடித்தவுடன் இறந்தவர் உயிர் பெற்று எழுந்து கொலையாளியை அறிவித்தார்
. . . . . . . . குர்ஆன் 2 : 73
அறுக்கப்பட்ட மாட்டின் ஒரு மாமிச துண்டு (நாக்கு )கொலையுண்ட மனிதனை எப்படி உயிர்பிக்க வைத்தது என்ற உண்மை விஞ்ஞான உலகிற்கு இன்னும் தெரியவில்லை தெரிய வரும் போது எத்தனையோ குற்றவாளி எளிதாக சட்டத்தில் சிக்குவார்கள்
வான்மறை சொல்லும் இந்த விஞ்ஞானங்கள் இன்னும் வையகத்திற்கே வரவில்லையே .

எலும்புகள் 6

( விலா எலும்பு 2 )



மார்பு கூட்டில் 12 ஜோடிகளில் கடைசி இரண்டு ஜோடி வயிற்றின் பின் தசைகளுக்கு இவை இரண்டும் ஒரு அரவணைப்பாக உள்ளன

விலா எலும்புகளும் அவற்றைச் சார்ந்த தசைளும் எப்போதும் இயல்பாக அசைய முடிவதற்கு முக்கியக் காரணம் அவற்றுக்குப் பின்புறம ஒற்றைதூணாக நின்று ஆதரவளிக்கும் மேல் முதுகு எலும்புத் தொடர் தான்.

விலா எலும்புகளுடன் மூச்சு விடும் போதெல்லாம் ஒரு முக்கியத் தசைச்சுவரும் மேலும் கீழுமாக அசைந்து கொண்டே இருக்கிறது மார்புக் கூட்டையும் வயிற்றுப் பகுதியையும் பிரிக்கும் இந்தச் தசைச்சுவரின் பெயர் "உதரவிதானம் " (Diaphrgm ) பாலூட்டிகளுக்கு மட்டுமே உள்ள இந்தத் தசைச்சுவர் மனிதனுக்கு மிக நன்றாக வளர்ச்சி அடைந்திருக்கிறது இந்த இடத்தில் அடிப்பட்டால் கடும் வலி ஏற்படும் அடிப்பட்ட அந்தப் பகுதியை தொட்டாலே துடிதுடித்துப் போவார்கள் மரண வலி அவஸ்தை அந்த இடத்தில் .........

"தங்கத்தையும் , வெள்ளியையும் சேகரித்து வைத்துக் கொண்டு அதனை அல்லாஹ்வுடைய பாதையில் செலவு செய்யா திருக்கின்றனரோ அவர்களுக்கும் நபியே நீங்கள் துன்புறுத்தும் வேதனையை நற்செய்தியாக கூறுங்கள்

(தங்கம், வெள்ளியாகிய) அவற்றை நரக நெருப்பில் பழுக்கக் காய்ச்சி அவற்றைக் கொண்டு அவர்களுடைய நெற்றிகளிலும் அவர்களுடைய விலாக்களிலும் அவர்களுடைய முதுகுகளிலும் சூடிட்டு "உங்களுக்காக நீங்கள் சேகரித்து வைத்திருந்தவை இவைகள்தான் . ஆகவே நீங்கள் சேகரித்து வைத்திருந்த இவற்றை சுவைத்துப் பாருங்கள் " என்று கூறப்படும் நாளை நபியே நீங்கள் அவர்களுக்கு ஞாபகமூட்டுங்கள்

திருக்குர்ஆன் 9 : 34, 35

உதரவிதானத்தில் அடிபட்டாலே மிகக் கடுமையான வலி எப்போதும் இருந்து கொண்டே இருக்கும் காரணம் மூச்சு விடும் போதெல்லாம் அந்த தசை இயங்கும் இயங்கினால்தான் மூச்சு விட முடியும்

அந்த தசை சூடு போட்டால் - ...... அதுவும் இரும்பை விட வெள்ளி அதிக வெப்பத்தை உள்வாங்கும் வெள்ளியைக் காட்டிலும் தங்கத்தின் வெப்பம் உள்வாங்கல் மிக அதிகம் இதனைக் கொண்டு விலாப்புறத்திலுள்ள உதரவிதானத்தில் குடுபோட்டால் ....... அல்லாஹ்தான் பாதுகாக்க வேண்டும்

அரசியல்வாதிகளின் தங்க , வெள்ளி இருப்புகளைப் பேப்பரில் படித்திருப்பீர்கள் அதுவும் அவர்கள் குறைத்துக்காட்டும் கணக்கு .

வேறென்ன சொல்ல...

ஏழு குடல்கள் |




ஏழு கடலைப் பற்றி கேள்வி பட்டிக்கிறோம் அதென்ன ஏழு குடல்கள்
"இறை நம்பிக்கையாளன் ஒரே குடலில் உண்பார். இறை மறுப்பாளரோ ஏழு குடல்களிலும் உண்பார் " முஸ்லீம் 4185
நபி (ஸல்) அவர்களிடம் இறை மறுப்பாளர் ஒருவர் விருந்தாளியாக வந்து தங்கினார் அவருக்கு ஒரு ஆட்டிலிருந்து பால் கறநது கொடுக்கும்படி உத்திரவிட்டார்கள் அவ்வாறே ஒரு ஆட்டிலிருந்து பால் கறந்து கொடுக்கப்பட்டது அவர் அந்தப் பாலை வேகமாகப் பருகினார்
பிறகு மற்றொர் ஆட்டின் பால் கறக்கப்பட்டது அதையும் பருகினார் பிறகு மீண்டும் ஓர் ஆட்டின் பால் கறக்கப்பட்டது. அதையும் பருகினார் அவ்வாறே ஏழு ஆடுகளிலிருந்து கறக்கப்பட்டப் பாலை முழுமையாக அந்த ஒரு விருந்தாளியே பருகினார்
மறு நாள் காலையில் அவர் இஸ்லாத்தைத் தழுவினார் அப்போது ஓர் ஆட்டில் பால் கறந்து அவருக்கு வழங்கும்படி நபி (ஸல்) அவர்கள் உத்திர விட ,அவர் அந்தப் பாவைப் பருகினார் .மற்றொர் ஆட்டில் பால் கறந்து கொடுக்கும்படி உத்தரவிட்ட போது அவரால் முழுவதுமாகப் பருக முடியவில்லை
முஸ்லீம் 4189
இந்த ஹதீஸ்க்கு பல்வேறு விளக்கங்கள் அளிக்கப்பட்டுள்ளது உண்மையான இறை நம்பிக்கையாளர். இறைக்கட்டளையை மதித்து ஹலால், ஹராமைப் பேணி அனுமதிக்கப்பட்ட உணவுகளை மட்டுமே உண்பார் இறைமறுப்பாளனோ தன் மனம் விரும்பும் எதையும் எந்த விதிவிலக்கோ இல்லாமல் புசிப்பான் என்பது ஒரு விளக்கம்.
அனுமதிக்கப்பட்ட உணவு வகைகளே ஆயினும் உண்மையான இறை நம்பிக்கையாளர் அளவோடுதான் உண்பார் அப்போதுதான் இறைவணக்க வழிபாடுகளில் ஈடுபடவும் அதிகம் உண்பதால் ஏற்படும் உடல் உபாதைகளின் விளைவுகளிலிருந்து தம்மைத் தற்காத்துக் கொள்ளவும் அவருக்கு வசதியாக இருக்கும் இறை மறுப்பாளனின் நிலை அவ்வாறன்று என்பது மற்றொரு விளக்கம் இதன்படி ஒரு குடல் அல்லது ஏழு குடல்கள் என்பதெல்லாம் குறியீடாகவே அமையும் என்று ஹதீஸ்கலைவிற்பன்னர்கள் கூறுகிறார்கள்
இருப்பினும் நபி மொழியாக " ஏழு குடல்." என்ற சொற்றொடரை நபி (ஸல்) அவர்கள் ஒரு குறியீடாக பயன்படுத்தவில்லை உண்மையில் நமது குடலின் பாகங்களும் ஏழு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அறிவியல் ரீதியாக நிருபிக்கப்பட்டிருக்கிறது என்பது தான் வியப்பான விஷயம்

ஏழு குடல் 2

கடிக்கவே முடியாத மைசூர் பாகு, மெல்லவே முடியாத மாமிசம் முழுமையாக வேகாத அரிசிப் பிரியாணி - - - - - என்று பலதரப்பட்ட உணவு வகைகளைத் தினம் தினம் நாம் வயிற்றுக்குள் தள்ளிக் கொண்டே இருக்கிறோம் வயிறு நிரம்ப உண்ட பிறகு எதிர்பாராமல் நம்முன் 200 ML க்கும் மேலான பாயத்தையும் உள்ளே தள்ளி ....... அடடா, நமது வயிறு எப்படி சமாளிக்கிறது ?
ஒரு மினி தொழிற்சாலை மாதிரி உணவு வகைகளை உடைக்கிறது , குழைக்கிறது, அதிலிருந்து சக்தியை உறிஞ்சி எடுத்துக் கொண்டு சக்கையை கழிவுப் பொருளாக வெளியே தள்ளுகிறது
சக்தியைப் பிரித்தெடுத்தல் ரத்தக்குழாய் களுக்கும் உடம்பிலிருககும் செல்களுக்கும் அனுப்பும் வேலைகளை செய்வது பெருங்குடல் (Large Intestine )மற்றும் சிறு குடல் (small Intestine ) பிரிக்கிறார்கள்
சிறுகுடலை , முன் சிறுகுடல் (Duodenum ) நம் சிறு குடல் ( JeJunum ) கடைச் சிறுகுடல் (Lieum) என்று 3 பகுதிகளாக பிரிக்கிறார்கள்
பெருங்குடலை குடல்வால் (Blind Gut) வளைவுப் பெருங்குடல் ( colon ) குறுங்குடல்
மலக்குடல் (Rectum ) என்று 4 பகுதிகளாக பிரிக்கிறார்கள் ஆக குடலை 7 பகுதிகளாக பிரிக்கப்படுகிறது
குடலைப் பற்றிய இந்த ஆய்வை 18ம் நூற்றாண்டின் கடைசியில்தான் ஆய்வுகள் பல செய்து உலகம் கண்டது ஆனால் நபி (ஸல்) அவர்கள் "ஏழுகுடல் " என்ற சொற்றொடரை ஒரு குறியீடாக 6 ஆம் நூற்றாண்டிலேயே பயன்படுத்தியுள்ளார்கள்

இதயம் 1



இந்த வார்த்தையை உச்சரிக்கும் போதே மயிலிறகால் வருடி விட்டது போன்ற மென்மையான ஓர் உணர்வு ஏற்படும் டீன் ஏஜ் இளசுகள் என்றால் கேட்கவே வேண்டாம் அவர்களுக்குள் மிகப் பெரிய ரசாயன மாற்றமே நிகழ்ந்து, முகத்தில் சந்தோஷம் படர்ந்து விடும் அப்பேற்பட்ட மனித உறுப்பு இதயம். இதை எந்தக் கவிஞர்களும் தன் கவிதைக்குள் சொல்லாமல் விட்டதே இல்லை.
ஏன் திருக்குர்ஆனின் இதயமே சூரத்துல் யாஸீன் என்று நபி (ஸல்) அவர்கள் யாஸீனை இதயத்திற்கு உவமானமாக்கி இருக்கிறார்களே. அது உண்மையும் கூட இது பற்றி திருக்குர்ஆனின் ரகசியங்களில் (FB) என் போஸ்ட்டில் பார்க்கவும்.
ஓர் இளைஞர் தனக்கு நெஞ்சுவலி என்று டாக்டரிடம் வருவார் டாக்டரும் ஸ்டெதாஸ்கோப் எடுத்து இதயத்துக்கு நேராக வைப்பார். கூட வந்திருக்கும் நண்பர் சட்டென்று "டாக்டர் சார், அவனிடம் இதயத்தைத் தேடாதீர்கள் அது அவனிடம் இல்லை. யாரோ ஒரு கள்ளி ஒருத்தி ஏற்கனேவே அதைத் திருடிச் சென்று விட்டாள்' என்று குறும்புத் தனமாக கூறுவார்
இதயம் என்ன திருடும் ஒரு பொருளா?
அல்லது இதயத்தை உடலை விட்டு தனியே பிரிக்க முடியுமா ? நிறைய பார்ப்போம்
இப்படி மனதுக்கும் உணர்வுக்கும் இருப்பிடமாக அந்தக் காலத்திலிருந்தே இதயத்தையே குறித்து பேசி வந்திருக்கிறார்கள் இதயம் என்ன அப்படிப்பட்ட ஒரு பகுதியா?
பழி ஓரிடம், பாவம் ஒரிடம் என்பார்களே அதற்கு நூறு சதவிகித சரியான உதாரணம் இது. உண்மையில் உணர்வு, சிந்தனை, காதல் கள்ளத்தனம் இப்படி எல்லாவற்றுக்கும் தளபதியாக இருப்பது மூளைதான். மனம் என்று குறியீடாகச் சொல்லப்படுவது மூளையைத்தான் ,அப்படி இருக்க, இந்தப் பெருமைகள் எல்லாம் இதயத்துக்கு எப்படி வந்தது ?
உடல் இயக்கத்தின் மகாராஜா இதயம்தான் இதன் துடிப்பில்லாமல் உடலில் ஓர் அணுவும் அசையாது என்பதால் எல்லாவற்றையும் இதயத்துக்கே சமர்ப்பித்திருக்க வேண்டும் என்று நினைக்கிறன் சரியா?
இறைவன் கூட
"நிச்சயமாக அவர் (ஜிப்ரயீல்) இதனை (குர்ஆனை) அல்லாஹ்வின் கட்டளைப்படியே உம் இதயத்தில் இறக்கி வைக்கிறார்"
திருக்குர்ஆன் 2 : 97
"எங்கள் இறைவனே! நீ எங்களுக்கு நேர்வழியைக் காட்டிய பின் எங்கள் இதயங்களை அதிலிருந்து தவறுமாறு செய்து விடாதே "
திருக்குர்ஆன் 3 : 08
மனிதனுக்கு இரண்டு கண், இரண்டு காது இரண்டு காது இரண்டு கால் இரண்டு கிட்னி என்றிருக்கும் போது ஏன் இரண்டு இதயங்கள்
இல்லை..?
கொஞ்சம் யோசித்து சொல்லுங்களேன்.

இதயம் 2



ஏன் இரண்டு இதயங்கள் படைக்கப்படவில்லை ? படைக்கப்படவில்லை தான் ஆனால் இரண்டு இதயத்துக்கான செயல்பாடு ஓர் இதயத்திலேயே இருக்கின்றது அதனால்தான் இரண்டு இதயங்கள் படைக்கப்படவில்லை

பிளட் பிரஷர் சரியில்லை; இதயத்துக்கே ரத்த சப்ளை இல்லை என்றாலும் இதயம் மெள்ள மெள்ளப் பெரிதாகி 25 சதவிகிதம் வரை மோசமாவதைச் சமாளிக்கிறது இது எப்படி என்பது மருத்துவ விஞ்ஞானத்திற்கே விளங்காத புதிரான புதிர்.

ரத்த குழாய்களுக்கு collateral என்ற மாற்றுப் பாய்ச்சல் அமைக்கிறது அதனால் மனிதனுக்கு ஒண்ணே முக்கால் இதயம் என்று சொல்லலாம்

டைனோசர் காலத்தில் டைனோசரை விட பெரிதாக மிக நீண்ட கழுததுக் கொண்ட "பா ரோ லாரஸ் " என்கிற அழிந்து போன மிருக

இனத்துக்கு 25 அடி கழுத்து மூளைக்கு ரத்தம் அனுப்ப அதற்கு ஓர் இதயம் போதாது அதற்கு

ரிலே ரேஸ் போல எட்டு இதயம் தேவைப்பட்டிருக்கும் என்றும் கணிக்கிறார்கள் ஆராய்ச்சியாளார்கள்

இந்த ரத்த ஓட்டப் பிரச்சனையால்தான் கால்வாக்கில் அந்த மிருகமே அழிந்து போயிருக்கும் அதாவது மூளைக்கு முழு ரத்தம் போகவில்லை செங்குத்ததாக நிமிர்ந்து நின்றாலே அந்த மிருகத்துக்கு பலவீனமும் மயக்கமும் வந்திருக்க வேண்டும்.

காட்டுக்கே ராஜாவாக மதிக்கப்படும் சிங்கத்திற்கு இதயம் மிகவும் சிறியது

ஒட்டக சிவிங்கியின் கழுத்து ரொம்ப நீளம் எனவே அதன் தலைக்கு இரத்தம் சப்ளை செய்ய இரண்டு இதயம் படைக்கப்பட்டுள்ளது

மற்றப்படி இரண்டு இதயம் கொண்ட எந்த மனிதரையும் இறைவன் படைக்க வில்லை என்று விஞ்ஞான ரீதியாக உடல் உறுப்புகளாக கொடுக்கப்படவில்லை.

மனிதர்கள் தன் வாயால் இரண்டு விதமாக பேசும் போது இரண்டு உள்ளங்களால் பேசுகிறார்கள் எனவே இரண்டு இதயங்களால் படைக்கப்படவில்லை என்பதற்காக குர்ஆனில் அல்லாஹ்

"எம் மனிதருடைய நெஞ்சிலும் இரண்டு இதயங்களை அல்லாஹ் அமைக்கவில்லை"

திருக்குர்ஆன் 33 : 04

ஒவ்வொருவரும் தன் வலது கை ஐந்து விரல்களை நன்றாக பொத்திக் கொண்டு பாருங்கள் அந்த அளவு சையில் தான் அவரவர் இதயம் இருக்கிறது.

ரஹ்மத் ராஜகுமாரன்

இதயம் 3   13-4-2017




நுரையீரல் ரத்த ஓட்டம் என்பது சிறிய ரத்த ஓட்டம் உடலமைப்பு முழுவதும் சார்ந்த ரத்த ஓட்டம் பெரிய ரத்த ஓட்டம் என்று உடலில் இரண்டு விதமான ரத்த ஓட்டங்கள் உள்ளன என்பதைச் சொன்னது "ஹார்வி " என்ற உடற்கூறு அறிவியலாளர்

அத்தோடு மட்டுமல்ல இவை இரண்டும் தனித்தனி ரத்த ஓட்டங்களும் இல்லை இணையான ரத்த ஓட்டங்களும் இல்லை. இரண்டுமே தொடர் ரத்த ஓட்டமாகவே உள்ளன என்று அறிந்தவர் ஹார்வி

உடலில் ரத்தம் எப்போதும் நிற்காமல் ஓடிக்கொண்டே இருப்பதற்குக் காரணம் - இதயத்தின் விசை இயக்கச் சக்தியே

(pumping action) என்பது ஹார்வியின் கண்டு படிப்புகளில் சிறப்பு அம்சம் இதனால்தான்

ஹார்லியை இத்துறையின் தந்தை (Father of cardiology )என்று அழைக்கப்படுகிறார்.

இதயத்தைப் பற்றி சுருக்கமாக....... -

கரு உருவாகி நான்காவது வாரத்தில் தொடங்கும் இந்த இதய பம்பின் இயக்கம் நம் உயிர் மூச்சு உள்ளவரை தொடர்ந்து கொண்டே இருக்கிறது சற்றும் ஓய்வெடுக்காமல் ° .......

இதயத்துடிப்பின் வேகமும் நம்மை பிரமிக்க வைக்கிறது ஒரு நிமிடத்திற்கு சராசரியாக 72 முறை சுருங்கி விரிகிறது

இதயம் விரிவது என்பது, இதயம் விரிந்து உடலின் எல்லாப் பாகங்களிலிருந்து வரும் அசுத்த ரத்தத்தை வலது பக்கத்திலும் நுரையீரலிலிருந்து வரும் சுத்த ரத்தத்தை இடதுப் பக்கத்திலும் உள் வாங்குவது, சுருங்குவது என்பது இப்படி உள்வாங்கியதை பம்பிங் செய்வது

சுருங்குவதற்கு 0.3 விநாடிகளும் விரிவதற்கு 0.5 விநாடிகளும் எடுத்துக் கொள்கிறது இதயம் . ஆக ஒருமுறை சுருங்கி விரிய அதாவது துடிப்பதற்கு 0.8 விநாடிகள் ஆகின்றன.

இதயம் ஒரு முறை பம்ப் செய்வது 70 மில்லி லிட்டர் இரத்தம் ஒரு நிமிடத்திறகு சுமார் ஐந்து லிட்டர் ஒரு நாளைக்கு 7200 லிட்டர் (நமது உடலில் உள்ள மொத்த ரத்தத்தின் அளவு தாசரியாக 5 லிட்டர் இதுவே திரும்பத் திரும்ப பம்ப் செய்யப்படுகிறது.)

இதயம் பம்ப் செய்யும் ரத்தம் உடலில் எத்தனை மைல் தூரத்திற்கு பயணம் செய்கிறது தெரியுமா?

உங்களால் அறுபதாயிரம் மைல் தூரத்தைக் கற்பனை செய்ய முடிகிறதா?

பூமியிலிருந்து நிலாவின் தூரத்தில் கால் பங்கு உலகின் மிக நீண்ட நதியான நைல் நதியின் நீளத்தைப் போல் கிட்டத்தட்ட பதினைந்து மடங்கு எங்களூர் மேலப்பாளைத்திலிருந்து நியூயார்க் உள்ள தூரத்தில் ஒன்பது மடங்கு

இந்த அறுபதாயிரம் மைல் தூரத்தைக் கடக்க ரத்தம் எடுத்துக் கொள்ளும் நேரம் ஒரே ஒரு நிமிடம்தான நம் உடலில் இருக்கும் ஐந்து லிட்டர் ரத்தம சராசரியாக ஒரே ஒரு நிமிடத்தில் சுற்றி முடிக்கிறது என்றால் இந்த இதய பம்பின் எத்தனை ஹார்ஸ் பவர் வேகத்தில் செலுத்த வேண்டியது இருக்கும் கொஞ்சம் சிந்தியுங்கள் உலகில் உள்ள எல்லா பொறியியல் வல்லுநர்களும் ஒன்று கூடி தங்கள் ஆயுட்காலம் முழுவதும் செலவிட்டாலும் இப்படி ஒரு பம்ப் பை உருவாக்கவே முடியாது இந்த பம்பு இயங்கும் போது "லப் ட்ப் " சப்தம் தவிர வேறு எந்த சப்தமும் எதுவுமில்லை இது எவ்வளவு பெரிய வியப்பான விஷயம்

இதயம் பம்ப் செய்யும் ரத்தம் இத்தனை மைல் தூரம் நம் உடலில் பயணிக்கிறது நம் உடலில் உள்ள சகல ரத்த நாளங்களையும் தொடர்ச்சியாக இணைத்தால் அது அறுபதாயிரம் மைல் நீளம் வரும். இத்தனை அற்புத இதயத்தை இறைவன் நமக்கு வழங்கி நம்மிடம் அவன் எதிர்ப்பார்ப்பது பற்றி அவன் குர்ஆனில் ........

"உங்கள் மாதாக்களின் வயிறுகளிலிருந்து நீங்கள் ஒன்றுமே அறியாதவர்களாக இருந்த நிலையில் உங்களை அல்லாஹ் வெளிப்படுத்துகிறான். அன்றியும் உங்களுக்கு செவிப்புலனையும், பார்வைகளையும், இதயங்களையும் நீங்கள் நன்றி செலுத்தும் பொருட்டு அவனே அமைத்தான் "

திருக்குர்ஆன் 16 : 78

இதயம் 4




ஹார்ட் அட்டாக் மற்ற எந்த இதய நோய்களை விடவும் சாதாரண பாமரன் வரை பயப்படுவது "ஹார்ட் அட்டாக் " என்னும் மாரடைப்பு நோய்க்குத்தான்
நூற்றில் பத்து சதவிகிதம் பேர் திடீர் திடீரென்று ஹார்ட் அட்டாக்கினால் இறக்கிறார்கள் என்று ஒரு மருத்துவ புள்ளி விபரம்
கிராமத்தில் வசிப்பவர்களை விட நகரத்தில் வசிப்பவர்கள்களுக்கு ஹார்ட் அட்டாக் அதிகமாக ஏற்படுவதாக அதே புள்ளி விபரம் தெரிவிக்கிறது.
கிராம வாழ்க்கையின் அமைதியும் கடிகார வேகத்தில் எதையும் டென்ஷனாக்கிக் கொண்டு இயந்திர கதியில் ஓடும் நகர வாழ்க்கையின் வேகமும்தான் இங்கு கவனிக்க வேண்டியவை
அசுரத்தினமான வேக வாழ்க்கை ஹார்ட் அட்டாக்கை சுலபமாக கொண்டு வருகிறது இதனால்தான் ஹார்ட் அட்டாக்கை price of Industrialisation அதாவது நாடு தொழில் மயமாவதன் விலை என்று வர்ணிக்கிறார்கள்
18 ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஜான் ஹண்டர் என்னும் ஆங்கிலேய மருத்துவர் மிகவும் கோபப்படுவராக இருந்தார் இவரைச் சுற்றியுள்ள மருத்துவர்களின் மீது ஏகமாக கோபப்படுவார் ஏதோ ஒரு நோய் பற்றி இவர் செய்த ஆராய்ச்சிக் கட்டுரையைச் சமர்பித்த போது சம்பந்தப்பட்ட மருத்துவ நிபுணர் குழு ஜான் ஹன்டரின் ஆராய்ச்சி மீது ஏகப்பட்ட வீணான கேள்விகளுக்கு விளக்கம் கேட்டு கேட்டு அவரை கோபத்தின் உச்சத்திற்கு ஆளாக்கினார்கள் எல்லாவற்றிற்கு பதிலை சொல்லிவிட்டு மனம் நொடிந்து அடுத்த நிமிடம் இறந்தும் போனார்
டென்ஷன், கோபம், மனச்சுமை , யாருக்குமே தெரியாது என்றெண்ணி செய்த துரோகம் , பழிவாங்க துடிக்கும் வெறி , எந்நேரமும் எதிரியை வீழ்த்த வேண்டி செய்யும் சூழ்ச்சி == இது போன்ற குணங்கள் இதயத்தை ரொம்பவும் அதிகமாக பாதிப்புக்குள்ளாக்கி தன்னையறியாமலேயே பயப்படும்படியாகவும் செய்து விடுகிறது.
இவ்வுலக வாழ்க்கையில் அநேகர் குரோத மனப்பான்மையிலேயே வாழ்கிறர்கள் சமயம் கிடைக்கும் பொழுதெல்லாம் அதனை வெளிப்படுத்தி தங்கள் கோப வெறியை வெளிக்காட்டிக் கொள்கிறார்கள்

இதனால் மிக அதிகமாக வெளியே தெரியாமல் பாதிப்படைவது இதயம்தான் என்பதை அவர்கள் உணர்வதில்லை.
இதனால்தான் குர்ஆனில் இறைவன் சுவனவாசிகளைப் பற்றி கூறும் போது ... -
"எவர்கள் நம்பிக்கைக் கொண்டு நற்காரியங்களை செய்கின்றார்களோ அவர்களில் ஒருவரையும் அவரது சக்தியின் அளவுக்கதிமாக நாம் நிர்ப்பந்தப்பதே இல்லை இத்தகையவர்கள் சுவனவாசிகள் அதில் அவர்கள் என்றென்றும் தங்கிவிடுவார்கள்.
அன்றி இவ்வுலகில் ஒருவரைப் பற்றி மற்றொருவருக்கு இருந்த குரோதத்தையும் அவர்களுடைய இதயங்களிலிருந்து நீக்கி விடுவோம் (ஆகவே ஒருவருக்கொருவர் மிக நெருங்கிய தோழர்களாகி விடுவார்கள்)
திருக்குர்ஆன் 7 : 42, 43

ஆண் இன உறுப்பு



"தம் இரண்டு தொடைகளுக்கிடையே உள்ள இன உறுப்பிற்கும் தம் இரண்டு தாடைகளுக்கிடையே உள்ள ( நாவிற்கும்) என்னிடம் உத்தரவாதம் அளிப்பவருக்காக நான் சொர்க்கத்திற்கு உத்தரவாதம் அளிக்கிறேன் " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸா இதீ (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்
ஆதாரம் புகாரி : 6807
இன்றைய ஆராய்ச்சிகளின்படி ஆண் உறுப்புக்கு மேலை வரும் போது அதற்குள் ரத்த ஓட்டம் அதிகரிக்கிறது இதைக் கட்டுப்படுத்துவது மூளையும் மைய நரம்பு மண்டல மும்தான் . இதைப் பலர் ஆராய்ந்திருக்கிறார்கள் விரைப்பில் வரும் கோளாறுகளை ஆராய " எரக்டைல் டிஸ்ஃபங்ஷன் " என்று ஓர் இயலே இருக்கிறது இந்த இயல்தான் வயாகரா போன்ற மருந்துகளை கொண்டு குறையாத விரைப்பை ஏற்படுத்த முடியும் என்பதை கண்டு பிடித்திருக்கிறது
சாதாரண தினங்களில் மனிதன் தன் மற்ற வேலைகளைக் கவனித்துக் கொண்டிருக்கையில் செக்ஸ் தேவையில்லை அப்போது ஆணுறுப்புக்கு ரத்தம் உபரியாகப் போகாமல் "சிம்பத்தட்டிக் நெர்வ்ஸ் சிஸ்டம்" கட்டுப்படுத்தி விடுகிறது. அதனால் "அது" காற்றடிக்காத நேரத்து கொடி போல் தாழ்ந்து இருக்கிறது
ஆணுறுப்பின் நடத்தை இரண்டு விதக் கட்டுப்பாடுகளுககு உட்பட்டது
ஒரு நரம்பு அமைப்பு அதன் விறைப்புத் தடுக்கிறது
மற்றொரு நரம்பு அமைப்பு விறைப்பை ஏற்படுத்துகிறது. இது வியப்பான விஷயம்
மூளையிலோ, ஏதாவது ஒரு இன்ப ஞாபகத்திலோ , வாசனையாலோ , ( மல்லிகை) ஏதாவது ஒரு காதல் எண்ணத்தாலோ ... தொடுதல். கையாளுதல் , அதைத் தொந்தரவு செய்தல், இப்படி ஏதாவது உட்படுத்தப்படும் போது எங்கிருந்தும் சிக்னல் வரலாம். நரம்பு மண்டலம் இதற்கான ந்யூரோ ட்ரான்ஸ்மிட் டர்களை சிக்னல் வந்ததும் அவிழ்த்து விடுகிறது . நைட்ரிக் ஆக்சைடு, அசிடைல்கோலைன் , டோப்பாமைன் போன்றவை முக்கியம் இதனால் ஆணுறுப்புக்குப் போகும் ரத்தக் குழாய்கள் பெரிதாகின்றன அதிக ரத்தம் பாய்கிறது அதில் இருக்கும் பஞ்சுத்தனமான அறைகள் எல்லாம் ரத்தத்தால் நிரம்புகின்றன இதனால அதன்ு உள் அறைகள் பெரிதாகி ரத்தக் குழாய்களை மூடிலிடுகின்றன உள்ளே ரத்தம் நிரம்பி விடுதலை பெறாமல் தேங்கி விட _ முட்டிக்கொண்டு ஆணுறுப்பு பெரிதாகிறது
நவீன அறிவியல் ஆராய்ச்சிப்படி இதைக் கட்டுப்படுத்தும் இடத்தை மிக துல்லியமாக கண்டுபிடித்துள்ளார்கள்
நரம்பு மண்டலத்தில் முதுகுத்தண்டில் டி12 க்கும் எஸ் 3 க்கும் இடையே வெர்டிப்ராவில் ஓர் இடம் இருக்கிறது அந்த இடத்தில் தொட்டால் "டடாங" என்று எழுந்து நிற்கும் .
இத்தனை விரைப்புத் தேவையா ?
பூச்சிகள், சிறு சிறு முக்கோண வடிவில் வலையைப் பின்னி அதற்குள் தங்களின் விந்து வை சேர்ப்பிக்கும் அப்புறம்தான் ஸ்பூன் சைஸிலிருக்கும் தன் காலை உபயோகித்து அதைக் கொஞ்சம் கொஞ்சமாக அள்ளி தள்ளிக் கொண்டு வந்த 'பெண் " உறுப்பில் சேர்க்கும் எவ்வளவு கஷ்டம் தெரியுமா ?

தாவரங்கள் இனச் சேர்க்கைக்கு தங்களது பூக்களுக்கு அதிகமாக நிறம் மணம் கொடுத்து பூச்சியையும் வண்டையையும் தன் பக்கம் இழுத்து பூக்களில் தேனை லஞ்சமாக கொத்து அதன் மீது தேனையை தடவி அதில் மகரந்த தூள்களை ஒட்டும்படி செய்து பக்கத்து தாவரத்தின் பூக்களில் சூல் பைக்குள் தூவி விட வேண்டும் என்னா ஒ துன்பம் ஜோடிச்சு இருக்கணும் வண்டு வரணும் அப்பத்தான் கதையே நடக்கும் பல்லி மாதிரி லுக் உடைய "நியூட்" உட்பட சில முதுகெலும்பற்ற பிராணிகள் தங்கள் ஜோடிகளைக் கண்டு பிடித்து அழைத்து வந்து ஏற்கனவே தனது விந்துவை பத்திரப் படுத்தி வைத்திருந்த அந்த விந்துவை பெண்ணுக்குள் செலுத்துகின்றன. அதுவரை வேறு ஒரு ஆண் வராமல் இருக்க வேண்டும் வந்தால் சண்டை .... அப்புறம் சேர்த்து வைத்த விந்து வீணாகி ... .உஸ் அப்பாடா.... -. ரொம்ப கஷ்டம் .... -ச் சே
பவளப்பாறை மாதிரி சில கடல் உயிரினங்கள் ஒரே நேரத்தில் தங்கள் விந்து அல்லது சினை முட்டையை கடலிலேயே ரிலீஸ் செய்து அவை ஒன்றோடொன்று சேரும்படி இயற்கைதான் செய்கின்றன.
ஆனால் இது மாதிரி கஷ்டங்கள் எதுவுமின்றி விந்துவை கரெக்ட்டாகப் போய் உரிய இடத்தில் சேர்ந்திடுமா ? என்று சந்தேகத்திற்கு இடமில்லாமல் நடநது கொள்ளக் கூடியவை மனிதன், குரங்கு , மாடு மாதிரி பாலூட்டி வகையறாதான் எதற்கு வம்பு என்று கர்ப்பப்பை வரையிலுமே விந்துவை பாதுகாப்பாகக் கொண்டு போய்ச் சேர்க்க ஆணுறுப்புக்கு நீளம் விரைப்பு தேவையாக இருக்கிறது கூடவே ஆண் பெண் இருபாலருக்கும் இரண்டுக்கும் பிடித்த விட்ட மாதிரி ஒரு சுகம் மைண்ட் ப்ரீ ...... உஸ்- -.ஸ்
"நீங்கள் செலுத்தும் இந்திரியத்தைக் கவனித்தீர்களா ?
அதனை (சிசுவாக ) நீங்கள் படைக்கின்றீர்களா ? அல்லது நாம் படைக்கின்றோமா ?
திருக்குர்ஆன் 56 : 58 , 59

பெண் இன உறுப்பு



இந்த உலகில் உங்களைப் பிரமிக்கத் தூண்டும் அதிசயம் எது ? என்று கண்ணதாசனிடம் கேட்கப்பட்டது "சக்தி வாய்ந்த மைக்ராஸ்கோப் மூலம் மட்டுமே கண்ணுக்குத் தெரியும் ஒரு புள்ளி - ஒரு துளி விந்து ஆறடி உயரமுள்ள மனித னாக உருமாறும் விஷயம்தான் என்னைப் பொறுத்தவரை மாபெரும் அதிசயம் "
சிலிர்த்துப் போய் பதில் சொன்னார் கண்ணதாசன்
கண்ணதாசன் மட்டுமா ? பூவுக்குள் ஒளிந்திருக்கும் கனிக்கூட் டம் அதிசயம் என்று வைரமுத்தும் வியந்த விஷயம் இந்த ஜனனத் தொழிற்சாலை என்னும் படைப்பு விஷயம்தான்
ஆண் - பெண் உடலுறவில் உச்சக்கட்டத்தில் ஆண் வெளியேற்றும் விந்துதான் இந்த ஜனனத் தொழிற்சாலையின் வேலையை ரிப்பன் வெட்டி திறந்து வைக்கிறது. ஒரு முறை ஆண் வெளியேற்றும் விந்தில் 30 கோடி விந்தணுக்கள் ( யப்பா.... - எல்லா உயிரணுவுமே மனிதனாக முடிந்தால். ஒரே தடவையில் கால்வாசி சீனாவே உருவாகிவிடும் ) இருக்கின்றன.
இது கர்ப்பப்பை வரை சென்று பத்திரமாக "சுமை"யை இறக்கி விட்டு வருவதற்கு வழி செயது கொடுக்கும் வகையில்தான் விரிந்து கொடுக்கும் சதைப் பகுதிகளுடன் கூடியது தான் இந்த பெண்ணுறுப்பு இதன் அமைப்பு ஆண் இன உறுப்பின் அத்தனை நீளத்திற்கும் தடிமனுக்கும், வலுவாக நாலாபுறம் திமிரும் போது அதையும் அட்ஜஸ்ட் செய்து கொள்ளும் வகையில் தான் பெண்ணுறுப்பு பெண்களுக்கு அமைந்திருக்கிறது இது எப்படி என்று எண்ணி மாளாத பொழுதே விஞ்ஞானத்திறகு இல்லை "
பெண்ணுறுப்பின் நீளம் ஒவ்வொரு பெண்ணுக்கும் மாறுபடும் சுமாராக 8 செ.மீ அகலம் 3 செ.மீ இத்தனை சின்ன துளைதான் அப்புறம் ஆச்சரியமாக அகல விரிந்து பத்து மாதம் ஆன குழந்தைக்கு வழிவிடுகிறது இது எப்படி முடிகிறது என்பது விஞ்ஞானத்தின் வியப்பான விஷயம்
பெண்ணுறுப்பினுள்ள கருப்பை பார்ப்பதற்கு கருஞ்சிவப்பு நிறமான ஒரு பேரிக்காயைப் போல மேல்புறம்படுத்தும் கீழ்புறம் சிறுத்தும் இருக்கும் இந்த வீட்டில்தான் கண்ணுக்குத் தெரியாத புள்ளியாக இருக்கும் கரு முழுக் குழந்தையாக உருவெடுக்கும் அதிசயம் நடக்கிறது.
கர்ப்பப்பையின் இரண்டு பக்கமும் சினைப் பைகள் பாதாம் பருப்பு சைஸில் இருக்கும் குழந்தை உருவாவதற்கு மிக முக்கியமான சினை முட்டையை மாதம் ஒன்று என்ற கணக்கில் உருவாக்கி அனுப்பி வைக்கிறது இதை இயற்கையே தேர்வு செய்து அனுப்புகிறது இது இரண்டாவது வியப்பான விஷயம்

ஃபெலோப்பியன் என்றும் இரு கருக் குழாய்கள் இது நோட்டுப் புத்தகம் தைக்கும் நூலின்பருமனில்இருக்கும்.இந்தக்குழாயகளுக்குஉள்ளேதான்பெண்ணின்சினைமுடயோடுஆணின் உயிர்ணு சேர்ந்து கரு உருவாகும் அற்புதம் நடக்கிறது இரண்டு குழாயில் ஒன்று பாதிக்கப்பட்டால் இன்னொரு குழாய் வழியாக விந்தணு செல்லும்
செர்விக்ஸ் என்பது கர்ப்பப்பையின் கழுத்துப்
பகுதி கோழி முட்டையின் வெள்ளைக்கரு போல இங்கே சுரக்கும் ஒரு திரவம் பெண் களுக்கு செக்ஸி இருக்கும் ஈடுபாட்டை அதிகப்படுத்துவதோடு விந்து உயிரணுக்கள் வழுக்கிக் கொண்டு கர்ப்பப்பையை நோக்கி வேகமாக உள்ளே செல்ல வசதியும் செய்து தருகிறது. டபுள் ஆக் ஷன்
இந்த பெண்ணுறுப்பினுள்ளேயுள்ள கர்ப்பையில்தான் கரு உருவாகி அவயவங்கள் பொருத்தி அழகான கோலத்தில்தான் நீங்களும் நானும் இருந்து வெளியே வந்தோம்.
"மனிதனே ' உன்னை சிருஷ்டித்து மேலான விதத்தில் உருவகித்து , மிகக ஒழுங்காக உன்னை அமைத்த மிக்க கண்ணியமுள்ள உனது இறைவனைப் பற்றி உன்னை மயக்கிவிட்டது எது ? அவனே தான் விரும்பிய (மிக்க அழகான) கோலத்தில் உன்னை (உன்னுடைய அவயவங்களைப்) பொருத்தினான் "
திருக்குர்ஆன் 82 : 6 முதல் 8 வரை

இஸ்லாம் முழுமைப் பெற்றுவிட்டது சந்தேகமில்லை
ஆனால் இஸ்லாத்தை மனிதர்கள் பெற்றுக் கொள்வதில் கூடுதல் குறைவு உண்டு
மெஞ்ஞானிகளும் விஞ்ஞானிகளும்தான் "உண்மை" மிக நெருக்கமாக தருசிக்கிறார்கள்
" உண்மை" இவ்வுலகில் அனந்த கோடியாய் பரிணாமித்திருக்கிறது
அவரவர் தேடிக் கொண்ட அளவே அதைப் பெற்றுக்கொள்ள முடியும் இஸ்லாமும் அதே மாதிரி தான

நோய்கள் குறித்து விஞ்ஞான விளக்கமும் குர்ஆன் மருத்துவம்

தலைவலி 1



தலைவலி மூன்று வகைப்படும்

| சமூக மனவியல் காரணங்களால் டென்ஷன், அயர்வு , எரிச்சலூட்டும் நிகழ்ச்சி இதனால் தலைவலி எட்டு வயதுக்கு முன்பாக வரும் தலைவலி கண் கோளாறு காரணமாக இருக்கலாம் 8 - 20 வயது வரை சைனஸ் ரத்த அழுத்தம் சிறுநீரகக் கோளாறு இதனால் தலைவலி வரலாம்

2 கண்ணில் அழுத்தம் பல் வலி மூக்கடைப்பு சிலவகை உணவு, மருந்து வகை தூக்க இன்மை சினிமா TV அறையில காற்றோட்டமே இன்றி சிகரெட் குடித்தல் செவிப்பறை கிழியும்படியான சத்தம் கம்யூட்டர் மானிட்டரை பார்த்துக் கொண்டே இருப்பது

3 தலையில் அடிபடுதல் மூளையில் ரத்தக் கசிவு மூளையில் டியூமர் கட்டி இவையெல்லாம் பயங்கரமான தலைவலி வரும்

இதுவே ரத்தக்குழாய் சுருங்கியோ விரிந்தோ தலை வலி வரும் இது ஒற்றைத் தலைவலி (Migraine) இது தலை வலியில் கிங்

இது போன்ற தலை வலியில் அறிஞர் பெர்னார்ட் ஷா பாதிக்கப் பட்டிருக்கும் போது ஆர்டிக் முனையைக் கண்டுபிடித்த

"நான் சென் " வந்தார்

" ஆர்டிக் வடக்கே இருந்தால் என்ன தெற்கே இருந்தால் என்ன அலற வைக்கும் தலைவலியை தீர்க்க வழி இல்லை ஆர்டிக்கை கண்டுபிடித்தாராம் ஆர்டிக் போங்கள் சார் என்று எரிச்சல்பட்டு விலகி போனார் பெர்னாட்ஷா.

ரோமாபுரியின் அரசரான சீஸர் தமக்கு நீங்காத தலைவலி என்று உமர் (ரலி) அவர்களிடம் முறையிட்டார் அவர்கள் தொப்பி ஒன்றைத் தயாரித்து அவருக்கு அனுப்பினார் அதனை அவர் தம் தலையில் அணியும் போதெல்லாம் தலைவலி போய்விடும் இது குறித்து அவருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது அந்த தொப்பியைப் பிரித்துப் பார்த்தார் அதில் "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்" என்ற சொற்றொடர் மட்டும் அதில் காணப்பட்டது

| ) தலைவலியுள்ளவர் ஒரு காகிதத்தில் பிஸ்மில்லாஹ் ஹிர்ரஹ்மானிர் ரஹீம் யை 21 தடவை எழுதி அணிந்து கொள்ள வேண்டும்

2) "வமா முஹம்மதுன் ...... குதிலன் கலப்தும் ' என்கிற குர்ஆன் வசனம் (3 : 144) யை நாளொன்றுக்கு 10 தடவை 10 நாளைக்கு ஓதியவரின் தலைவலி நீங்கும்

3 ) சூரா அத்தகாஸுர் அத்தியாயம் 102 "பேராசை" என்ற சூராவை அஸருக்குப் பின் தலையில் ஓதி ஊதினால் குணமாகும்
தலைவலி 2




ஒற்றைத் தலைவலி மிகவும் ஆராய்ச்சி செய்யப்பட்டு ஏகப்பட்ட மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்ட தலைவலி இருந்தாலும் ஆயிரம் காரணங்களில் ஒன்று டாய்லெட் போவதில் பிரச்சனை இருந்தாலும் இது வரும்

ஒற்றைத் தலைவலியின் காரெக்டரும் மிகவும் வித்தியாசமானது அலறித் துடிக்கும் அளவு தலைவலி ஏற்படுவதோடு , கண் பார்வைத் திறனும் மாறுபாடுவதால் நோயாளியின் கண் முன் விந்தையான, விசித்திரமான காட்சிகள் எல்லாம் தெரியக் கூடும்

அடியேனுக்கும் அடிக்கடி அதன் அவஸ்தையில் சிக்கி உள்ளேன் சிலருககு கலர் கலராக மார்டன் ஆர்ட்ஸ் தெரிகிறது

இந்த மாதிரி மாயக் காட்சிகள் கண் முன் தெரிவதைப் பார்த்து எல்லோரும் பயந்தும், விரக்தியாகிப் போயும் பேசாமல் இருக்க " லூயிஸ் கரோல் " ( 1832 - 1898) என்கிற எழுத்தாளர் மட்டும் வித்தியாசப்பட்டார்.ஒற்றைத் தலைவலியின போது தனக்குத் தோன்றும் விந்தையான காட்சிகளை வைத்து "அதிசய உலகில் ஆலிஸ் (Alice in Wonder Land ) " என்று குழந்தைகளுக்குப் பிடித்தமான ஒரு நாவலையே எழுதிவிட்டார் உலகமெங்கும் கோடி கோடியாய் விற்ற புத்தகம்

தற்போது இந்த நாவல் மனோதத்துவ நிபுணர்களும் .கணித வல்லுநர்களும் புதிய புதிய அர்த்தங்களைக் காண்கிறார்கள் விஞ்ஞானிகள் விளங்கிக் கொள்ள முடியாத நிறைய சமன்பாடுகளுக்கு ரொம்பவும் சுளுவாக அர்த்தம் கிடைக்கிறது

உதாரணமாக ஐன்ஸ்டைன் இந்த பிரபஞ்சமும் " வளைந்த விண்வெளி" தான் என்று நிருபித்தார்

சரி, இந்த வளைத்த விண்வெளிக்கு வெளியே என்ன என்று கேட்டிக்கிறார்கள் "ஒன்றுமே கிடையாது" என்றார்

"அந்த ஒன்றுமே கிடையாது " கூட விண்வெளி தானே " என்று விதண்டவாதம் பண்ண "அது வந்து ..... அ.... விண்வெளி"

இந்த கஷ்டமான கோட்பாட்டை

லூயி கரால் எழுதிய ஆலிஸ் இன் ஒண்டர் லாண்ட்-ல் ஒரு பூனை வருகிறது மரத்தில் உட்கார்ந்து கொண்டு சிறுமி ஆலிஸைப் பார்த்துப் பல்லிளிக்கிறது அடிக்கடி மறைந்து போய் திடுதிப்பென்று தோன்றுகிறது

"இந்த மாதிரி படக் படக்கென்று தோன்றி மறையாமல் இருந்தாயானால் நல்லது , ., என்றாள் ஆலிஸ்

"சரி" என்கிறது பூனை .இந்த முறை மெல்ல மெல்ல மறைகிறது முதலில் வாலில் ஆரம்பித்துக் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து போய், கடைசியில் அந்த இளிப்பு வரை வந்து பூனையின் மற்றதெல்லாம் மறைந்து போன பிற்படும் அந்த இளிப்பு மட்டும் - - சிரிப்பு மட்டும் கொஞ்ச நேரம் மிச்சமிருக்க,

சிரிக்காத பூனையை நான் அடிக்கடிப் பார்த்திருக்கிறேன் .ஆனால் பூனையில்லாத வெறும் சிரிப்பை நான் பார்த்ததே இல்லை ரொம்ப விநோதம் இதுதான் " என்கிறாள் ஆலீஸ்

ஐன்ஸ்டைனின் " வெளி இல்லாத வெளி" கூட இந்த வகையில் "பூனை இல்லாத வெறும் புன்னகை' .தான் என்கிறார்கள் வெட்ட வெளியைப் பற்றி கோட்பாட்டிற்கு விளக்கம் கிடைத்து விட்டதாக துள்ளி துள்ளி குதித்து சந்தோஷப்பட்டார்களாம் விஞ்ஞானிகள்

ஏதாவது புரிகிறதா?

ஒற்றைத் தலைவலிக்கும் மூளையில் பிரதிப் பலிக்கப்படும் பிம்பங்கள் நிகழ்ச்சிகளுக்கும் தொடர்பு இருக்கிறது இது மட்டும்தான் இப்போதைக்கு சொல்ல முடிகிறது

"ஒருநாள் இப்ராஹீம் (அலை) தம் ஆட்டுக் கிடைகளின் நடுவே வீற்றிகுக்கும் பொழுது ஒரு வானவர் மனித உருவில் வந்து

"ஸுப்பூஹுன் குத்தூஸுன் ரப்புனா வரப்புல் மலாயிக்கத்தி வர்ரூஹ் (துதிக்கப்பட்டோன், தூயோன் எங்கள் இறைவன் அவன் வானவர்களுக்கும் ஆன்மாக்களுக்கும இறைவன் ) என்று கூறி மறைந்து போனார் வானவர்

நபியவர்கள் சத்தமாக "அதை நீர் திரும்ப கூறுங்கள் மந்தை ஆட்டில் பாதியை உமக்குக் கொடுக்கிறேன் என்கிறர்கள்

அவர் மீண்டும் அவ்விதம் ஓதி மறைய ,

மீண்டும் நீர் ஓதும் மறுபாதியையும நபியவர்கள் தருவதாக கூற

வானவரும் தோன்றி அதை ஓத சந்தோஷப்பட்ட நபியவர்கள் மீண்டும் அதை ஓதச் சொல்லி தம்மையே அவருக்கு அடிமையாக்கி கொள்வதாகக் கூறினார்கள் நபியவர்கள்

இது இறைவனுக்கு ரொம்பவும் பிடித்துப் போய் தன்னுடைய "கலீல் "(நண்பர் ) என்ற பட்டத்தை வழங்கினான்.

இதிலும் ஏதாவது புரிகிறதா ?

ஒற்றைத் தலைவலி மற்றும் மூளை சுறுசுறுப்படைய மேற்கண்டதை அடிக்கடி ஓதவும்

சிறுநீரகக் கற்கள்



நம் நாட்டில் 12% பேர்கள் இதனால் பாதிக்கப்பட்டுள்ளனர் சாப்பாட்டில் உள்ள கல்லுக்கும் இதற்கும் சம்பந்தமே இல்லை.

தஞ்சாவூர் பெரம்பலூர் அரியலூர் ஜெயங்கொண்டம் போன்ற பகுதியில் நிலத்தடி நீரில் இயற்கையாக கால்சியம் அதிகம் இதனால் சிறுநீரகக் கற்கள் (சி. நீ .க)

உருவாக நிறைய ஜான்ஸஸ் இருக்கு

சிலர் அதிகமாகப் பால் ஜஸ்கிரீம் வெண்ணெய் பாஸ்ட் புட் புரோட்டீன் அதிகமுள்ள உணவு போன்றவை சிநீக

உருவாக்கலாம்.

3 வகை டிசைன்களில் கற்கள்

உருவாகின்றன

1 ) வட்டமும் சதுரமுமாகப் பெண்கள் கழுத்தில் அணிகிற கிரிஸ்டல் கல் மாதிரி

2) பூ ஜாடியில் வைக்கப்படுகிற பூ மாதிரி

3) மான் கொம்பு கல் (Stag Horn) இந்தக் கல் ரொம்பவும் வேதனைப்படுத்தும்

இந்த கற்களில் 4 வகை வேதியல் குணங்கள் உண்டு.

| ) கால்ஷியம் , கால்ஷியம் ஆக்ஸலேட், மற்றும் கால்ஷியம் பாஸ்பேட் கற்கள்

இந்தக் கற்கள் புரோட்டீன் உணவு , தக்காளி ஸ்ட்ராபெர்ரி சாக்லெட, டீ. பசலைக் கீரை இவைகளால் வருகிறது சிறுநீர் வெளியேறாமல் பல மணி நேரம் அடக்கி வைத்தால் கால்சியம் பாஸ்பேட் கற்கள் 20 உருவாகிறது

2) யூரிக் ஆஸிட் கற்கள் இது எக்ஸ்ரேயில் தெரியாது மூட்டு வலி பெருவிரல் வீக்கம் ஆர்த்ரைடிஸ் போன்ற வியாதிகள் இருந்தால் இறைச்சி அதிகம் சாப்பிட்டாலும், கேன்சர் சிகிச்சை எடுத்தாலும் இந்த வகை சி.நீ.க இருப்பதன் அறிகுறி செவ்வக கிரிஸ்டல்களாக வெளியேறும் மேலும் இந்தக் கல் கணையம் ,கல்லீரல், மூளை சிறுநீரகம் போன்ற இடங்களிலும் வரலாம்

3) சிஸ்டீன் இது குழந்தைகளுக்கு வரக்கூடிய சி. நீ .க யூரினரி இன்ஃபெக்ஷன் பரம்பரை போன்றவைகளால் இது வரலாம்

4) இன்ஃபெக் ஷன் வகை இது ரொம்பவும் அபாயகரமானது இது நிரந்தரமாக சிறுநீரகச் செயலிழப்புக்கு வழி வகுக்கும் இது பெண்களை குறிவைக்கும்

சிறுநீரில் யூரியா அதிகம் இருந்தால் இந்த

சிநீக உள்ளது உடனே டாக்டரைப் பார்க்கவும்

எண்டாஸ்கோபி முறையில் ஒரு சிறு துவாரமிட்டு கருவிகளை உள்ளே செலுத்தி கல்லைத் துகள் துகளாக்கி சிறு நீரோடு

வெளியேறச் செய்வது ஒரு வகை

துவாரத்தில் ஒரு குழாய் செருகி கல்லையே ஒரு கருவியின் மூலமாக எடுப்பது இன்னொரு வகை.

ஒலி அலைகளைச் செலுத்தி கல்லை துகள் துகளாக உடைப்பது மூன்றாவது வகை. இந்த ஒலிகள் நம் காதுக்கு கேட்காத ஒலி அலை

இந்த சிகிச்சைக்கு "லித்தோட்ரிப்ஸி " என்று பெயர்

தொண்டையில் தைராய்டு பக்கத்தில் இருப்பது பாரா தைராய்டு இதில் சுரக்கும் அதிகப்படியான ஹார்மோன் எலும்பிலிருந்து கால்சியத்தை கரைத்து கரைத்து சிறுநீரகத்திற்கு அனுப்ப கல் உருவாகிவிடும் இந்தக் கல் உருவாகக் காரணமான திருடனைமருவத்துவர்கள் வெளியே தேடுவார்கள் இந்த திருடன் உள்ளுக்குள்ளே இருக்கும்

"பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம், வ புஸ்ஸத்தில் ஜிபாலு பஸ்ஸா ஃபகா னதது ஹபா அன் முப்தா " அடிக்கடி ஓதவும்

விளக்கம்

மலைகள் மோதிக் கொண்டு தூள் தூளாகப் பறந்து விடும் அவை வானத்தில் துகள் துகளாக பறநது விடும் குர்ஆன் 56 : 5, 6

"வ ஹுமிலத்தில் அர்ளுவல் ஜிபாலு ஃபதுக்கத்தா தக் கத்தன் வாஹிதா "

எழுதி குடிக்கலாம்

விளக்கம்

"பூமியும், மலைகளும் தூக்கி எறியப்பட்டு ஒன்றோடொன்று மோதி பலமாக அடிக்கப்பட்டால் "

குர்ஆன் 69 : 14

மிதக்கும்படி கப்பலுக்குக் கட்டளை 1



ஒரு நாணயத்தை தண்ணீரில் போட்டால் முழ்கி விடுகிறது ஆனால் பிரமாண்டமான கப்பல் தண்ணீரில் மிதக்கிறது அது எப்படி?
ஒரு பொருள் தண்ணீரில் மிதப்பதற்கு 3 விஞ்ஞான விதிகளை ஆர்க்கிமிடிஸ் என்ற விஞ்ஞானி தொகுத்தார்
1 ) மிதக்கும் ஒரு பொருளின் எடை அப்பொருளால் வெளியேற்றப்பட்ட திரவத்தின் எடைக்குச் சமமாக இருக்கும்
2 ) மிதக்கும் ஒரு பொருளின் ஈர்ப்பு மையம், அப்பொருளால் வெளியேற்றப்பட்ட திரவத்தின் ஈர்ப்பு மையம் இவ்விரண்டும் ஓர் செங்குத்துக் கோட்டில் அமையும்
3) மிதக்கும் பொருளின் அடர்த்தி அது எந்தப்பாய்மத்தில் மிதக்கிறதோ அந்த பாய்மத்தின் அடர்த்தியினை விட குறைவாக இருக்கும்

கப்பல் தண்ணீரில் இருக்கும் போது அதன் உடற் பகுதி ஓரளவு தண்ணீரில் அமிழ்ந்திருப்பதைப் பார்த்திருப்பீர்கள்
அதாவது கப்பலின் எடைக்குச் சமமான தண்ணீர் கடலில் இடம் பெயரும்
1000 டன் எடையுள்ள கப்பலின் உடற் பகுதி அதே அளவு எடையுள்ள தண்ணீரை இடம்பெயரச் செய்யும் இதை" ஒரு கப்பலின் வெளியேற்றும் திறன் " என்று குறிப்பிடுகிறார்கள்
தண்ணீரில் இயற்கையாகவே உள்ள அழுத்தம் கப்பலின் உடற் பகுதி மீது செலுத்தப்படுகிறது அதே நேரம் கப்பலின் எடையும் தண்ணீரை அழுதத்துகிறது இந்த இரண்டு அழுத்தங்களும் சமநிலைலையை ஏற்படுத்தும் வகையில் கப்பல்கள் வடிவமைக்கப்படுகின்றன
அதே மாதிரி ஒவ்வொரு கப்பலிலும், படகிலும் அதற்கான கொள்ளளவு உண்டு இதையும் வடிவமைக்கும் போது கணக்கில் கொள்ள வேண்டும்
முதன்முதலாக நபி நூஹ் (அலை) அவர்களை இறைவன் கப்பலை கட்டுமாறு சொன்னான் கப்பல் என்றதும் அவரால் அதை நினைத்துப் பார்க்க முடியவில்லை உடனே இறைவன் சேவலின் நெஞ்சைப் போல் கப்பலை கட்டுமாறு அல்லாஹ் அறிவித்தான்
மேலே சொல்லப்பட்ட மிதக்கும் விதிகளைத்தான் அல்லாஹ் தன் கட்டளை என்பதாக குர் ஆனில்
"(நபியே ) நீங்கள் பார்க்கவில்லையா ? நிச்சயமாக அல்லாஹ் பூமியிலுள்ள அனைத்தையும் உங்களுக்கு வசப்படுத்திக் கொடுக்கின்றான் கப்பல் அவனுடைய கட்டளைப்படி கடலில் செல்கிறது "
திருக்குர்ஆன் 22 : 65
"கட்டளை" என்பது மிதத்தலின் விதிகள் என்பதை நீங்கள் உணர்ந்து கொள்ள முடிகிறதா ?

மிதக்கும்படி கப்பலுக்கு கட்டளை 2



(வரம்பு மீறவும் பின் வரம்புக்குள் அடங்கவும் கடலுக்கு கட்டளை)

கடலின் ஆழம் அதிகரிக்க அதிகரிக்க அழுத்தமும் அதிகரிக்கிறது 10 மீட்டர் ஆழத்தில் ஒரு பொருள் கடல் நீரில் முழ்கி இருந்தால் அதன் மீது ஒரு கிலோ கிராம் எடை கூடுதலாக செலுத்தப்படுகிறது

கடல் நீரில் நீச்சலடிக்கும் ஒரு வீரர் 50 கிலோ எடை கொண்டவராக இருந்தால் 20 மீட்டர் ஆழத்தில் அவர் முழ்கும் போது அவருடைய எடை 60 கிலோவாக மாறிவிடும் இதற்கு காரணம் கடல் நீரின் அழுத்தம்தான்

ஆழம் அதிகரிக்க அதிகரிக்க கடல் நீரின் அழுத்தமும் வெவ்வேறு விகிதங்களில் அதிகரித்துக் கொண்டே செல்கிறது அது போல் நீரில் உள்ள பொருள்களும் மிக அதிகமான அழுத்தத்திற்கு உள்ளாகின்றன.

உதாரணமாக நீங்கள் காபி குடிக்கின்ற கண்ணாடி டம்ளரைக் கடலில் ஐந்து கிலோமீட்டர் ஆழத்துக்கு எடுத்துச் சென்றால்

அது உடைந்து நொறுங்கிவிடும் காரணம் கடலில் அழுத்தம் அப்படி

கொஞ்சம் பயமா இருக்கிறதல்லவா ?

கடல் நீரில் ஈர்ப்பு விசை அதிகரித்து அதிகரித்து முலக்கூறுகளின் தீவிர அழுத்தம் காரணமாகத் தண்ணீர் மிக அதிக அழுத்தம் உள்ளதாக மாறிவிடுகிறது

இந்த கடல் நீரின் அழுந்தம் என்பது சாதாரண விஷியம் இல்லை இவ்வாறு தண்ணீர் அழுத்தப்பட்டு நிற்பதால்தான் உலகம் பாதுகாப்பாக இருந்து வருகிறது ஒரு வேளை தண்ணீரின் ஈர்ப்பு விசையிலிருந்து விடுபட்டு முழு கன அளவை அடைந்தால் ,கடல்நீர்மட்டம்

உலக அளவில் பல மீட்டர் உயர்ந்து விடும். பல லட்சம் சதுர கிலோமீட்டர் பரப்பளவு நிலப்பரப்பு நீரில் முழ்கி விடும்

அப்படி ஒரு நிகழ்ச்சி இப்புவியில் நடந்தேறி இருக்கிறதா என்றால் ஆம் நடந்தேறி இருக்கிறது .

நபி நூஹ் (அலை) அவர்களின் காலத்தில் வெள்ளப்பெருக்கு ஏற்படுவதற்கு அந்த நேரத்தில் தண்ணீர் ஈர்ப்பு விசையிலிருந்து விடுபட்டு முமு கன அளவு அடைந்திருக்கலாம் இதனால் கடல் நீர்மட்டம் உயர ஆரம்பித்திருக்கலாம் இதனால்தான் வெள்ளப்பெருக்கு ஏற்படுவதற்கு முன்னே,

" (நபி நூஹ்வுக்கு வஹ்யி அறிவிக்கப்பட்டது) "முன்னர் நம்பிக்கை கொண்டவர்களைத் தவிர இனி உங்களுடைய மக்களில் ஒருவரும் நிச்சயமாக, நம்பிக்கை கொள்ள மாட்டார்கள் ஆதலால் அவர்களுடைய செயலைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர் நாம் அறிவிக்குமாறு நம்முடைய கண் முன்பாக ஒரு கப்பலை நீங்கள் செய்யுங்கள்

திருக் குர்ஆன் 11 : 36, 37

கப்பல் கட்டி முடிக்கப்பட்டது நாளும் குறிக்கப்பட்டது ஒரு மங்களகரமான நாளில் உலகின் முதல் கப்பல் வெள்ளப்பெருக்கில் தன் பயணம் தொடங்கியது

தண்ணீர் ஈர்ப்பு விசையிலிருந்து விடுபட்டு கடல் நீர்மட்டம் 'சும்மா ஜிவ்வுன்னு ' உயர ஆரம்பித்தது ஜூதி என்னும் ஆரராத் மலை (Ararat mount) உயரம் வரை உயர்ந்தது

அரராத் மலை துருக்கியின் கிழக்கில் வான் (VAN) என்னும் ஏரிக்குத் தென் மேற்கே உள்ள எரிமலை முகடுதான் ஆரராத் எனப்படுகிறது இதை துருக்கி மொழியில் "அக்ரிடேகி " என்பார்கள் இதன் உயரம் 16, 853 அடி அல்லது 5.137 கி.மீ உயரம் மலை. கடல் மட்டம் இந்த மலை உயரம் உயர்ந்தது

"கொஞ்சம் நினைச்சப் பார்க்க பயமாக இருக்கா ..... அது "

உசிலை மைந்தன்

க்காக ஆதாரம்

(அல் முன்ஜித் தஃப்சீர் மாஜித் மற்றும்

பிரிட்டானிக்கா கலைக் களஞ்சியம்)

" பின்னர் பூமியே i நீ உன் தண்ணீரை விழுங்கி விடு வானமே... ! (மழை பொழிவதை) நிறுத்திக் கொள் என்று "கட்டளை" ப் பிறப்பிக்கப்படவே தண்ணீர் வற்றி விட்டது

திருக்குர்ஆன் 11 : 44

மீண்டும் கட்டளைப் பிறப்பிக்க தண்ணீர் தனக்குரிய இயல்பான குணமான ஈர்ப்பு விசையை மீண்டும் பெற்றுக் கொண்டது அதாவது கடலுக்குள் தண்ணீர் அடங்கிக் கொண்டது அடேட ....

நீங்கள் இப்போது இறை கட்டளையை விஞ்ஞான ரீதியில் புரிந்து கொண்டீர்களா ?

## □கறுப்பு பெட்டிகளும் மலக்குமார்களும்



I953 ல் நடந்த விமான விபத்தில் தன் தந்தையை இழந்த "டேவிட் வாரன்"என்ற ஆஸ்திரேலியாக்காரர் விமான விபத்துக்குறிய காரணம் தெரியாமல் போக இனி காரணம் தெரிந்தே ஆக வேண்டும் என்ற அந்த முனைப்புடன் அவர் கண்டு பிடித்ததுதான் விமான கறுப்புப் பெட்டி

முதல் முதலில் புகைப்படக் கடுதாசி உள்ளடக்கிய பதிவுகள் செய்யப்பட்டதால் இவை கறுப்பு நிறத்தில் இருந்தது. இப்பொழுது விமானம் விபத்துக்குள்ளாகி எவ்வளவு தூரத்தில் இருந்தும் தன்னை தனிமைப்படுத்திக் கொள்ளும்படியான ஆரஞ்ச் நிறத்தில் வடிவமைக்கப்படுகிறது

விமான விபத்தில் இறந்தவர்களின் உடலங்களை எடுப்பதற்கு முன்னர் தேடப்படுவது கறுப்பு பெட்டியைத் தான்.

கறுப்பு பெட்டிகள் இரண்டு பயன்படுத்தப் படுகிறது. இவைகள் விமானம் விபத்துக்குள்ளாகும் போது அதிகம் சேதப்படாத இடமான விமான வால் பகுதியில் பொருத்தப்படுகின்றன.

இதில் முதல்பாக்ஸில் CVR (cockpit voice Recorder) எனப்படுகிறது இது குரல் , விமானப்பகுதிக்குள் நடக்கும் அத்தனை உரையாடல்களையும் பதிவு செய்யும் மற்றும் விமானத்தின் ஒலி . தொடர்ச்சியாக இரண்டு மணி நேர சுழற்சி முறையில் பதிவு செய்யப்படுகிறது

இரண்டாவது பெட்டி - DFDR (Digital Flight Data Recorder ) எனப்படும் இது விமானத்தின் தொழில் நுட்பத் தரவு (Data ) களைப் பதிவு செய்யும் இது தொடர்ச்சியாக 25 மணி நேரப் பதிவுகளை மேற்கொள்ளும் இது விமான வேகம் பறப்பு உயரம் இயந்திரத்தின் நிலைபாடு தானியங்கி விமானி நிலை மற்றும் தொழில்நுட்பத் தரவுகளையும் பதிவு செய்யும்

இந்த இரண்டு கறுப்பு பெட்டிகளின் தரவுகள் தனித்தனியாக csmu (crash survivable memory unit ) பதிவு செய்யப்படுகிறது

விமான விபத்தின் போது நடந்த எல்லா விபரங்களும் ஒன்று விடாமல் இரண்டு கறுப்புப் பெட்டிகளிலும் பதிவு செய்யப்பட்டு விபத்தின் காரணம் அறியப்படுகிறது

"வலது புறத்தில் ஒருவரும் இடதுபுறத்தில் ஒருவருமாக இருவர் (அவன் செய்யும் செயலைக் ) குறிப்பெடுத்துக் கொண்டிருக்கின்றனர் "

திருக்குர்ஆன் 50 : 17

"அவர்கள் (தங்கள் மனதில்) மறைத்து வைத்திருப்பதும் அல்லது இரகசியமாகப் பேசிக் கொள்வதும் நமக்கு எட்டாது என்று அவர்கள் எண்ணிக் கொண்டிடுக்கின்றனரா ? அன்று அவர்களிடத்தில் இருக்கும் நம்முடைய மலக்குகள் ஒவ்வொன்றையும் பதிவு செய்து கொண்டே வருகின்றனர் "

திருக்குர்ஆன் 43 : 80

"ஒவ்வொரு மனிதனின் செயலைப் பற்றி(விரிவான தினசரிக் குறிப்பை அவனுடைய கழுத்தில் மாட்டியிருக்கிறோம் மறுமை நாளில் அதனன அவனுக்கு ஒரு புத்தகமாக எடுத்துக் கொடுப்போம் அவன் அதனை விரித்துப் பார்ப்பான் "

திருக்குர்ஆன் 17 : 13

"அவர்கள் (மலக்குமார்கள் ) கண்ணியமான எழுத்தாளர்கள்

திருக்குர்ஆன் 82 : '11

சிலந்தியும் அதன் வலையும்  17-04-2017



சிலந்திப் பூச்சியா ? என்றால்... ...." இல்லை" என்கின்றனர் விஞ்சானிகள் பூச்சி இனம் இல்லாமல் வேறு என்ன ?
அது ஒரு ஜந்து எட்டுக் கால், எட்டுக் கண் உள்ள ஒரு ஜந்து இறக்கை கிடையாது உடல் இரண்டே இரண்டு பாகம் தான். நூலிழையில் தொங்கி கொண்டு எவ்வளவு பெரிய பள்ளத்தையும் ஈஸியாக கடக்கும் கைதேர்ந்த ஒரு திருடனைப் போல .அப்போ இது என்ன பூச்சி இனமா? ஜந்துதான்
மேலும் சிலந்தி ஆச்சரியமான பிறவிதான் எந்த சீதோஷண நிலையிலும் வாழும். மேலும் தரையில், நீரில், ஏன் வானில் கூட வாழும் . சுமார் 3 இன்ச்சிலிருந்து கண்ணுக்கே தெரியாத அளவு சின்ன சிலந்திகள் கூட உள்ளன. ஒரு வருடம் தண்ணியே இல்லாத காட்டில் விட்டால் கூட பிழைத்துக் கொள்ளும்
"தரான்டுலா "என்னும் சிலந்தி 15 வருடம் உயிர் வாழும் மற்ற சிலந்திகள் ஒரு வருடம் பெரிய பெரிய சாதனைகளை செய்து விட்டு வரலாற்றில் இடம் கேட்காமலே இறந்து விடும்
சிலந்தி நூலில் பல வகை உண்டு ஒட்டிக் கொள்ளும் நூல் இது இரைகளைப் பிடிப்பதற்கென்ற ஸ்பெஷல. சிலந்தி வலைக்குக் குறுக்கே அமைக்கப்படும் நூல் கொஞ்சம் வலுவாக இருக்க வேண்டும் இதற்காக அமைக்கப்படும் நூல் ஒட்டாத வகை .இதோடு முட்டை யிடும் போது அதைப் பாதுகாக்கச் சுருட்டப்படும் நூல் பஞ்சு மெத்தைப் போல் இருக்க வேண்டும் அதே நேரத்தில் நார் நகராகவும் இருக்க வேண்டும்
உலகிலேயே மிகப் பெரிய சிலந்தி வலையை விஞ்ஞானிகள் மடகாஸ்கா தீவில் அதுவும் ஒரு ஆற்றின் குறுக்கே 82 அடி அகலத்தில் நம்ம ஊர் 2 பஸ்கள் போய் வரும் அளவுக்கு பெரிய வலை அதுவும் ஒரே ஒரு சிலரதிதான் பின்னி தள்ளி இருக்கிறது. திருவாளரான அந்த சிலந்தியை யாரும் பாராட்டவில்லை
சிலந்தி தன் அடிவயிற்றுப் பகுதியில் இருக்கும் 7 வகையான சுரப்பிகளிலிருந்து மிக நுட்பமான துவாரங்கள் மூலம் நூலிழையை வெளிப்படுத்துகிறது
"பைபுரோனிக் ,என்ற புரத நார் கொண்டு ஒரு சில நூலை பின்னுகிறது என்றாலும் பல நூல் இழைகள் இதுவரையில் உலகில் கண்டுபிடிக்கப்பட்ட தனிமங்கள் 92 தான் அதையும் தாண்டி உள்ள தனிமங்களால் தன் வலை பின்னுகிறது .இது வேறு எந்த கிரகத்திலுள்ள தனிமங்களோ தெரியவில்லை என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர்
மனிதர்கள் சாதாரணமாக 10 செ.மீ தூரத்தில் உள்ளதை தெளிவாகப் பார்க்கக் கூடிய ஒரு பொருளின் தடிப்பு 25 மைக்ரான்கள் ஆனால் சிலந்தி வலை நூலின் தடிப்பு இந்த நுண்ணிய அளவை விட 100 மடங்கு நுட்பமானது 0.15 மைக்ரோன்தான் இதை எந்த கம்யூட்டர் கொண்டு வடிவமைக்க முடியாது . நானோ தொழில்நுட்பத்தாலும் டிசைனை நினைத்துப் பார்க்க முடியாது
வலை மீது ஒளி பட்டு பிரதிப்பலிக்கிறது இருந்தாலும் அதே பருமனுடைய உருக்கு இழைகளை விட உறுதி வாய்ந்தது செயற்கை இழையான நைலான் நார்களை விடவும் அதிக இழுவைத் தன்மை கொண்டது
ஒரு பேச்சிக்கு ° .........சிலந்தி இழையை ஒரு பென்சில் தடிமன் அளவுக்கு சிலந்தி உருவாக்க முடிந்தால் அந்த இழைக் கொண்டு பறந்து கொண்டிருக்கும் போயிங் 747 ரக விமானத்தைக் கூட இழுத்து நிறுத்தி விட முடியும்
"அல்லாஹ்வையன்றி (மற்றவைகளைத் தங்களுக்கு ) பாதுகாவலர்களாக எடுத்துக் கொண்டவர்களின் உதாரணம் நூலாம் பூச்சி கட்டிய வீட்டை (த் தாங்கள் வசிக்க எடுத்துக் கொண்டவர்களின் உதாரணத்தை) ஒத்திருக்கின்றது வீடுகளில் எல்லாம் மிகக பலவீனமானது நிச்சயமாக நூலாம் பூச்சியின் வீடுதான் அவர்கள் அறிந்து கொள்ள வேண்டுமே
திருக்குர்ஆன் 29 : 41
ரஹ்மத் ராஜகுமாரன்
சிலந்தியின் பலவீனமான நூலிழை பென்சில் கனத்தில் இருந்தால் பறக்கும் விமானத்தை தடுத்து நிறுத்த முடியும் என்றால் _ _ _ .. இறைவனின் பலமான படைப்புகள் எத்தனை வலுவாக இருக்க முடியும் என்பதை சற்று சிந்தியுங்கள் வல்ல ரஹ்மானின் வல்லமையை உணர முடியும்

ரோபோ




ரோபாட் (Robot) என்பது செக் மொழியிலிருந்து வந்த வார்த்தை காரல் சாப் பெக் (Karel Capek) என்பவர் எழுதிய நாடகத்தில் இருந்து புறப்பட்டு உலகப் பொது வார்த்தையாகி விட்டது Robota என்றால் செக் மொழியில் "வேலை " என்று பொருள்

மனிதர்களை இயந்திரங்களாகப் பயன்படுத்துவதற்குப் பதில் இயந்திரங்களை எளிய மனிதச் செயல்களாகச் செய்ய வைப்பதுதான் ரோபாட் இயலின் பிரதானமான குறிக்கோள்

ஒரு இளம் பெண்ணை "ஒரு நாளைக்கு 8 மணி நேரம் ஒரு விளக்கையேப் பார்த்துக் கொண்டு இரு ; விளக்கு எரியும் போதெல்லாம் பெல்டில் வரும் பொருளை பொறுக்கி எடு " என்று பணிப்பது ஒரு தொழிற்சாலையில் சாதாரணமாக சந்திக் கூடிய வேலை இந்த பணியில் அந்தப் பெண்ணுக்கு சலிப்பு வரலாம் விளக்கையே பார்த்துக் கொண்டிருந்தால் தலைவலி வரலாம் இடையே ஒரு செல்போன் கால் வந்தால் மொத்த வேலையும் பாழாகிப் போகலாம் இந்த வேலைகளுக்கெல்லாம் ரோபோ சிறப்பானது அது 24 மணி நேரமும் வேலை செய்யும் சலிப்பும் வராது தலைவலியும் வராது செல்போனில் எந்த காலும் வராது

இண்டஸ்ட்ரியல் ரோபாட்டுகள் தொழிற்சாலைகளில் கடினமான காரியங்களை முகஞ் சுளிக்காமல் செய்கின்றன ரசாயன விஷவாயுக்களை அவைப் பொருட்படுத்தாது. திரும்ப திரும்ப ஒரு காரியத்தை சலிப்பில்லாமல் செய்யும் திருகும் ,பற்ற வைக்கும் ,அடிக்கும, வெட்டும் எல்லாமே சொன்னதைச் செய்யும் ரோபோட்கள் . சங்கம் அமைக்காது, கொடி தூக்கி ரோட்டை மறியல் செய்து பஸ்ஸை எல்லாம் உடைக்காது இந்த ரோபோட்களுக்கெல்லாம் புத்தி கிடையாது புரோக்கிராமில் என்ன சொல்லி இருக்கிறதோ அதன்படி செய்யும் அது போகும் பாதையில் ஒரு குழந்தை தவிழ்ந்து வந்தால் மிதத்திவிட்டு குனிந்து கூட பார்க்காமல் போகும் இதையே ஒரு பையன் அந்த வேலையை செய்தால் "பாப்பாவை தூக்கி ஓரமாக வைத்துவிட்டு ஒரு முத்தமும் கொடுத்து விட்டு போவான் இதுதான் வித்தியாயம்

ரோபோக்களைப் பற்றி நிறைய பயம் உலகமெங்கும் இருக்கிறது எந்திரன் ,டெமன் ஸீட் (Demon seed) போன்ற திரைபடங்கள் ரோபாட் ஒரு பெண்ணின் மேல் ஆசை கொண்டு அதனுடன் பழகி ,டெமன் ஸீட் திரைப்படத்தில் பிள்ளை கூட பெற்றுக் கொள்வது இந்த மாதிரி கதையை சொல்லி பயமுறுத்தி இருக்கிறார்கள்

இவையெல்லாம் அர்த்தமற்ற பயங்கள் ரோபோக்கு என்ன சொல்லி புரோகிராம் எழுதி இருக்கிறமோ அதை சிறப்பாக செய்யும் அந்த புரோகிராமில் தப்பு ஏற்பட்டால் கைக்குழந்தையைத் தூக்கி குப்பைத்தொட்டில் போட்டால் யாரை திட்டுவது யார் மேல் கேஸ் போடுவது ?

அப்படித்தான் 1982-ல் ஜப்பானில் ரோபாட் அருகில் ஒரு தொழிலாளி வேலை செய்து கொண்டிருக்கும் போது அவன் கழுத்தை பிடித்து திருகி தூரப் போட்டுவிட்டு தன் பணியை எப்போதும் போல் சாதாரணமாக செய்து கொண்டிருந்தது மற்றப்படி எல்லாம் நலமே .

"அதற்கு இறைவன் "நீங்கள் ( மூஸா) வந்த பின்னர் நாம் உங்களுடைய மக்களை ஒரு சோதனைக்குள்ளாக்கிவிட்டோம் "ஸாமிரீ என்பவன் அவர்களை வழி கெடுத்து விட்டான்" என்று கூறினான் மூஸா தம் மக்களிடம் வந்து விசாரித்த போது

நாங்கள் சுமந்து கொண்டு வந்த நகைகளை (நெருப்பில் எரியும்படி நிர்ப்பந்திக்கப்பட்டு நாங்களும் எறிந்தோம் ஸாமிரீயும் எறிந்தான்)

பின்னர் அவன் ஒரு காளைக் கன்றின் சிலையை வெளியாக்கினான் அதற்குக் காளை மாட்டின் சப்தத்தைப் போல சப்தமும் இருந்தது (இதைக் கண்ட) சிலர் இது தான் உங்களுக்கும் மூஸாவுக்கும் இறைவனாகும் இதனை மறந்து விட்டு ( மூஸா மலைக்குச் சென்று) விட்டார் என்று கூறினார்கள்

திருக்குர்ஆன் 20 : 85 முதல் 89 வரை

ரோபோ பற்றி மூஸா நபி காலத்திலேயே ஸாமிரீ என்பவன் சிந்தித்திருக்கிறான் என்பதுதான் இந்த பதிவின் மையக் கருத்து

ரோபோவுக்குள் சூப்பர் சும்ப்யூட்டர் புகுத்தி ரோபோவையும் நம்மை மாதிரி சிந்திக்க செய்தால் என்ன..முடியாது. காரணம் நாம் கற்றுக் கொள்ளும் விதத்தை நம்மால் அறுதியிட முடியவில்லை சரியாக நாமே நம்மை விவரிக்க முடியவில்லை

எளிய விதிகளுக்குள் அகப்படுவது நமமுடைய ஒரு சில திறமைகள் மட்டுமே "
மேலும் திறமைகள் மட்டுமே அறிவல்ல ; அறிவு என்பது பேச்சு | சிரிப்பு, கவிதை, சித்திரம், கலை , சாகசம், அரசியல், பாசாங்கு, பொய் கலந்த மெய், நடனம், இரவு நேர ஊடல், சங்கீதம் ... என்று எத்தனையோ இருக்கிறது .
இதெல்லாம் போய் ரோபோவுக்கு சொல்லி கொடுக்க இன்னும் ஒரு நூற்றாண்டு காலம் ஆகலாம் அதுவரைக்கும் இந்த ரோபோவை நாம மேய்ப்போம்
அந்த மாதிரி ரோபோ வந்தால் அது நம்மை மேய்க்கும் என்ன சரியா

மாஜிக்



இரவு நேரம் கங்கை நதியில் ஏற்றிய விளக்குகள் மிதந்து செல்வதைப் பார்த்தப் படி கரையில் அமர்ந்திருக்கிறார்கள் மக்கள். திடீரென்று ஓர் உருவம் தன்னை கவனிக்கச் சொல்கிறது . அடுத்த சில நொடிகளில் கங்கை முழுவதும் தீபங்கள் ஒளி வீசியபடி மிதந்து என்கின்றன இதைச் செய்த மேஜிக் கலைஞர் டைனமோ என்றழைக்கப்படும் ஸ்டீவன் ஃபரேன் என்ற இங்கிலாந்து நாட்டுக்காரர் இந்த நிகழ்ச்சியை ஹிஸ்டரி TV ஒளிப்பரப்புகிறது.
அறைக்குள் இருக்கும் ஒரு காகிதப் பட்டாம்பூச்சியை எடுத்து ஊதுகிறார் டைனமோ அறை முழுவதும் ஏராளமான பட்டாம் பூக்கள் தங்கள் சிறகுகளை அடித்துப் பறக்கின்றன
இங்கிலாந்தில் உள்ள தேம்ஸ் நதியின் மேல் நடந்து செல்கிறார் டைனமோ
வாய் குறுகிய பாட்டிலுக்குள் செல்போனை வைத்து விடுகிறார் டைனமோ
ஓடி வரும் தண்ணீரை அப்படியே பனிக்கட்டியாக மாற்றி விடுகிறார்
இரண்டு மீன்கள் உள்ள வாளியை கவிழ்த்தால் நூற்றுக்கணக்கான மீன்கள் துள்ளிக் குதிக்கின்றன
கைகளை நீட்டியபடி அந்தரத்தில் நிற்கிறார்
ஒரே நேரத்தில் ஒரு நம்பரிலிருந்து எல்லோருக்கும் தொலைபேசி அழைப்புகள் வரச் செய்கிறார் .
ஒரு புத்தகத்தில் நாம் நினைக்கும் சில வார்த்தைகளை அப்படியே சொல்கிறார்
சீட்டுக்கட்டுகளில் ஏராளமான வித்தைகளை செய்கிறார் டைனமோ.
இந்த மாதிரி மாஜிக்குகள் விஞ்ஞானத்தின் அடிப்படையில் செய்யப்படுகின்றன (உ-ம்)
ஒரு தட்டில் மெழுகுவர்த்தியை எரியவிட்டு பல காசுகளை தட்டில் போட்டு பின் கண்ணாடி டம்ளரிலுள்ள கறுப்பு மை கலந்த தண்ணீரை விட்டதும் காசு மறைந்து விடுகிறது பின்பு எரியும் மெழுகுவர்த்தியை அதே கண்ணாடி டம்பளரால் மூடியதும் கொஞ்ச நேரத்தில் கண்ணாடி டம்ளரில் உள்ள ஆக்ஸிஜன் எரிந்து தீர்ந்ததும் டம்ளரின் உள்ளே வெற்றிடம் ஏற்பட்டு வெளியே உள்ள கறுப்பு நீர் வெற்றிடத்தை நிரப்புவதற்காக கண்ணாடி டம்ளருக்குள் போகிறது தட்டில் போட்ட காசு தெளிவாக தெரிகிறது பின் டம்ளரை ஒரு புறமாக சரிக்க தண்ணீர் வெளியேறுகிறது
சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை நேரம் போவது தெரியாம பார்க்கிற நிகழ்ச்சி மாஜிக்
உண்மையில் மாஜிக் என்பது கண்கட்டி வித்தைகள் என்று பலராலும் சொல்லப்பட்டாலும் எல்லா மாஜிக்கும் அப்படி இல்லை
பார்வை குறைபாடி இல்லாத ஒரு மனிதனுடைய கண்ணின் விழித்திரையில் ஒரு காட்சி தோன்றி அது விழித்திரையில் பதிவதற்கும் இன்னொரு காட்சி தோன்றி பதிவதற்கும் 1 / 16 செகண்ட்ஸ் அதாவது 0.0625 நொடி நேரம் தேவை
ஆக மாஜிக் என்பது நம் கண்ணினுடைய விழித்திரையில் ஒரு காடசியைத் தோற்றுவித்து அது பதிந்தவுடன் மற்ற காட்சி தோன்றுவதற்குள் நடக்கும் மாயையன்னு சொல்லாம் அந்த குறிப்பிட்ட கண நேரத்துக்குள் செய்யப்படும் சிறு கண்ணைக் கட்டும் செயல்தான் நாம் ஒரு மணி நேரம் இருந்து பார்த்து கைதட்டும் அளவிற்கு பாராட்டைப் பெறுகின்றது
நாம் இப்படி சொன்னாலும் செய்பவனுக்குத் தான் தெரியும் அதன் கஷ்டம் அவன் செய்யும்போது ஒரு சின்ன தவறு விட்டாலும் அது பெரிசாக தெரிந்துவிடும் ஆக எல்லாவற்றுக்கும் கடின பயிற்சி அவசியம்

ஃபிர்அவ்னின் அரச சபையில் சூனியம் செய்பவர்களை அழைத்து நபி மூஸா (அலை) அவர்களை மந்திர வித்தைகளில் ஜெயிக்கும்படி ஃபிர்அவ்ன் வேண்டி இருந்தான் அவர்களும் வந்திருந்தனர்
"" (சூனியம் செய்ய வந்த) அவர்கள் மூஸாவை நோக்கி "சூனியத்தை நீங்கள் எறிகின்றீர்களா? அல்லது முதலாவதாக நாங்கள் எறியவா ? என்று கேட்பார்கள்
அதற்கவர் நீங்களே எறியுங்கள் என்று கூறினார் அவர்கள் எறியவே ,எறிந்த அவர்களுடைய கயிறுகளும் அவர்களுடைய தடிகளும் அவர்களுடைய சூனியத்தின் காரணமாக மெய்யாகவே அவை ( பாம்புகளாகி) ஓடுவது போல் இவருக்குத் தோன்றின
ஆகவே மூஸா தன் மனதில் பயத்தை உணர்ந்தார்
(அச்சமயம் நாம் அவரை நோக்கி) "நீங்கள் பயப்படாதீர்கள் நிச்சயமாக நீங்கள்தான் உயர்ந்தவர் " என்று கூறினோம்.
அன்றி உங்களது வலது கையில் இருப்பதை நீங்கள் எறியுங்கள்' அவர்கள் செய்த சூனியங்கள் அனைத்தையும் அது விழுங்கி விடும். அவர்கள் செய்ததெல்லாம் சூனியக்காரர்களின் வெறும் சூழ்ச்சியன்றி உண்மை அல்ல சூனியக்காரர்கள் எங்கிருந்து வந்தபோதிலும் வெற்றி பெறவே மாட்டர்கள்"ஂ என்று கூறினோம்
(மூஸா தன் தடியை எறியவே அது பெரியதொரு பாம்பாகி அவர்கள் செய்திருந்த சூனியங்கள் அனைத்தையும் விழுங்கி விட்டது இதனை கண்ணுற்ற )
அச்சூனியக்காரர்கள் சிரம் பணிந்தவர்களாக வீழ்த்தப்பட்டு " நாங்களும் மூஸா ஹாரூன் (ஆகிய இங் விருவருடைய இறைவனை நம்பிக்கை கொண்டோம் " என்று கூறினார்கள்
இதைக் கண்ட பிர்அவ்ன் "நான் உங்களுக்கு அனுமதியளிப்பதற்கு முன்னரே நீங்கள் அவரை நம்பிக்கை கொண்டு விட்டீர்கள நிச்சயமாக அவர்தாம் உங்களுக்குச் சூனியத்தைக் கற்று கொடுத்த உங்களுடைய தலைவராயிருக்கும் போல் தோன்றுகிறது எனவே உங்களுடைய மாறு கை மாறு காலை வெட்டிப் பேரீச்ச மரத்தின் வேர்களில் நிச்சயமாக உங்களை கழுவேற்றி விடுவேன்
திருக்குர்ஆன் 20 : 65 முதல் 71 வரை

**Rahmath Rajakumaran**

மேற்கண்ட டைனமோ மாஜிக்கில் விஞ்ஞானத்தின் சூழ்ச்சி இருக்கிறது என்பது மட்டும் தெரிகிறது அது எப்படி என்ன என்பது பற்றி எனக்குத் தெரியாது

புரியாத புதிர்கள் 1 APRIL 2017



ஜான் இர்விங் பென்ட்லே மருத்துவராக யு.எஸ் பென்ஸில்வேனியாவில் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர் டிச5, 1966 தன்னுடைய 90 வயதில் வீட்டின் டாய்லெட் பக்கம் முழுமையாக எரிந்து சாம்பலாக கிடந்தார் அவரது மண்டையோடு மற்றும் தோல் சதை எதுவும் இல்லாமல் கருதிப் போய் இருந்தது இடது கால் மட்டும் இரண்டு அடி தூரத்தில் பிய்த்து எடுத்த மாதிரி கருகாமல் கிடந்தது
அவருடைய வாக்கிங் ஸ்டிக் கூட கருகி கோணலாக கிடந்தது அதன் நுனியிலுள்ள ரப்பர் துளி கூட உருகவில்லை இது என்ன நெருப்பு ? தெரியவில்லை
1951-ல் ப்ளோரிடாவில் 67 வயது மேரி ரீஸர்
கால், விரல்கள் எதுவும் மிச்சமில்லாமல் முழுமையாக எரிந்திருந்தார் ஆனால் அவர் எழுதிக் கொண்டிருந்த பேப்பர் ,கழுத்தில் சுற்றி இருந்த மப்ளர் கருகாமல் அப்படியே இருந்தன
1731 ல் இத்தாலியில் லெஸினா என்னும் பணக்கார பெண் இரவு படுத்திருககும் போது படுக்கையில் எரிகிறார் அவரது உடல் மொத்தமாக எரிந்து சாம்பலாகிறது அவர் படுத்திருந்த கட்டில் போர்வை தலையணை எதுவும் எரியவில்லை

1890 மே 12 ல் அமெரிக்க மாஸெச்சூஸெட்ஸ் மாநிலத்தில் வீட்டில் உள்ளவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே தோட்டத்தில் என் பாட்டி எரிகிறர் என்று பேரன் கத்த எல்லோருமே பார்க்கிறார்கள் சாதாரண மஞ்சள் நிற நெருப்பு அல்ல நீல நிற நெருப்பில் எரிகிறர் அந்த நெருப்பு வெளியிலிருந்து வந்த நெருப்பு அல்ல அவள் வயிற்றிலிருந்து வந்த நெருப்பு என்பதை எல்லோரும் பார்க்கிறார்கள்
1950 அக்டோபர் மாதம் லண்டன் கிளப் ஒன்றில் 19 வயதான அழகிய பெண் தன் காதலுடன் நடனமாடிக் கொண்டிருக்கும் போது அவள் வயிற்றில் இருந்து தீ திடீரென்று தீப்பற்றி எரிகிறாள்
கட்டிட கான்டிராக்டர் ஒருவர் இத்தாலியில் காரில் போய் கொண்டிருக்கும் போது காரிலே எரிகிறர் அதுவும் நீல நிற சுவாலை ஆனால் காரோ காரிலுள்ள எந்த பொருளும் நெருப்பில் துளிக் கூட பாதிக்கவில்லை ரோட்டில் அநேகர் பார்த்திருக்கிறார்கள்
மேற்கு லண்டனில் வீதியில் சென்று கொண்டிருந்த இளைஞன் இதுபோல நீல நிற நெருப்பில் எரிகிறான் மக்கள் பார்த்திருக்கிறார்கள் அதுவும் சில நிமிடங்களில் எல்லாம் முடிந்து போகிறது
இந்த மாதிரி நெருப்பு மரணங்கள் 300க்கும் மேல் நடந்திருக்கிறது மின்சார மயானங்களில் கூட 600 டிகிரி சென்டிகிரேட் வெப்பத்திற்கு உடல் எரிய குறைந்தது 1 மணி நேரமாகிறது எலும்புகளும் கூட எரிய வைக்க 600 டிகிரி நெருப்பு 8 மணி நேரத்திற்கு வேண்டும் செலவு கூடும் என்ன .....செய்வா ?
உடம்பிலிருந்து தானாக ஒரு காரணமும் இல்லாமல் பற்றிக் கொண்டு எரியும் நீல நிற ஜுவாலைக்கு இப்போது " spontaneous human combustion "என்று விஞ்ஞான உலகம் பெயரிட்டிருக்கிறது
உடலை போஸ்ட் மார்ட்டம் பண்ணி தகவல் சேகரிக்க முடியாதபடி நீல நிற நெருப்பு செய்து விடுகிறது சாதாரணமாக நெருப்பு மஞ்சள் நிறத்தில் சுமார் 400 450 டிகிரியில் எரியும் இதனால் உடல் பாகம் மிச்சம் மீதி இருக்கும் ஆய்வு செய்வதறகு கொஞ்சம் தோதுவாக இருக்கும் இது என்ன நீல தீ ?
நெருப்பில் நிறைய வகையைப் பற்றி. குர்ஆனில் இறைவன் குறிப்பிடுகிறான்
சாம்பிளுக்கு
"ஹுதமா " என்ன என்பதை உமக்கு அறிவித்தது எது ?
அது எரிந்து கொண்டிருக்கும் அல்லாஹ்வின் நெருப்பாகும்
அது உடலில் பட்டதும் இதயங்களில் பாயும்
நிச்சயமாக அது அவர்களைச் சூழ்ந்து மூடப்படும்
நரகத்திலுள்ள உயர்ந்த கம்பங்களில் அவர்கள் கட்டப்பட்டு அதன் வாயில்களும் மூடப்படும்
திருக்குர்ஆன் 104 : 5 முதல் 9 வரை
புரியாத புதிர்கள் 2



கிரோக்க சக்கரவர்த்தி மாவீரன் அலெக்ஸாந்தர் (கி.மு.322-ல்) பொனீஷிய

நாட்டின் டைர் நகரத்தின் மீது போர் தொடுத்தார்.

டைர் வீரர்கள் அலெக்ஸாந்தரின் படையைக் கடுமையாக எதிர்த்தார்கள் . கிரேக்கப் படை சற்று நம்பிக்கையிழந்த போது, அலெக்சாந்தருக்குக் கனவு வந்தது அதில் ஒரு தங்கக் கேடயத்தின் மீது satyr (குட்டிக் சாத்தான் மாதிரி) தாண்டவமாடுவது போன்ற காட்சி விரிந்தது.

அலெக்ஸாந்தருக்குக் கவலை ஏற்பட்டது ."கனவுகளை விளக்குபவர்" என்று பெயர் பெற்ற அரிஸ்டாந்தரை வரவழைத்து கனவைச் சொல்ல, அவர் அலெக்லாந்தரிடம் "கவலைப்பட வேண்டாம் அரசே , இது ரொம்பவும் நல்ல கனவு இறைவனின் சொல் விளையாட்டு இது

Satyros என்பதைப் பிரித்துப் பார்க்க வேண்டும் .Sa + Tyros அதாவது Sa என்றால் உன்னுடையது. டைர் நகரம் உன்னுடையது எடுத்துக் கொள் " என்பதே கனவின் அர்த்தம். என்றார்

உற்சாகமாக நம்பிக்கைப் பிறந்து, மீண்டும் தாக்குதல் நடத்தி, மறு நாள் டைர் நகரைக் கைப்பற்றினார் அலெக்ஸாந்தர்

ஆகவே, கனவுகளின் அர்த்தத்தைப் புத்திசாலித்தனமாகப் புரிந்து கொள்வது முக்கியம் நாமாக நேரடி அர்த்தம் எடுத்துக் கொள்ளக் கூடாது

" உண்மைக் கனவுகள் நபித்துவத்தின் 46 பங்குகளில் ஒரு பங்காகும் - -ஹதீஸ்,

புத்தக தினத்திற்காக






என்னுடைய புத்தகங்கள்
எனக்கு எப்போது
அறிமுகமாயின ?
மறுபடியும்
வேதாளம் முறுங்கை மரத்தில்
ஏறிக் கொண்டதாக
அம்புலிமாமா சொன்னார்
எங்கிருந்தோ
இரும்புக்கை மாயாவி
என்று ஒற்றை இரும்புக் கரம்
முத்து காமிக்ஸ்
புத்தகத்திலிருந்து
பறந்து வந்தது
சங்கர்லாலை தமிழ்வாணன்
அறிமுகப்படுத்திய போது
எங்க வீட்டு ஆட்டுக்குட்டி
காணாமல் போய் இருந்தது
துப்புத் துலக்க
சங்கர்லால் கூட வே வந்தார்
ஆட்டுக்குட்டி கிடைத்தது
" இன்னொரு செருப்பு எங்கே "
தேடியும் கிடைக்கவில்லை
கதை புத்தகத்திற்கு
படிக்க வீட்டில் தடை விதித்தபோது
"கடல்புறா"வையும்
"யவனராணி" யையும்
வீட்டு மொட்டை மாடியில்
யாருக்கும் தெரியாமல்
சண்டிலியன் எனக்கு மட்டும்
அறிமுகப்படுத்தினார்
பாலகுமாரன்
"மெரினா பூக்கள்" யை தந்து

இளமையையும் காதலையும்
இதமாகச் சொன்னார்
இறுதியில் அவர் ஞானி ஆனார்
நாங்களும் பாதி ஞானிகளாக்கப்பட்டோம்
அறிவியலை அழகாகச்
சொன்னார் சுஜாதா
விஞ்ஞான விதிகள்
காலேஜ் புத்தகத்திலிருந்து
"கணையாழி "க்கு கடத்தி வந்தார்
"நைலான் கயிற் "றை
இலக்கியத்தில்
இன்னும் கட்டிக் கொண்டுதான்
இருக்கிறேன்
இப்போ நிறைய
ஆங்கிலப் புத்தகங்கள்
நிறைய துப்பாக்கிகளையும்
நிறைய பயங்களையும்
நிறைய வியப்பையும் தந்தாலும்
தமிழ்வாணின் சங்கர்லாலையும்
சுஜாதாவின் கணேஷ்-வசந்த் தையும்
மறக்க முடியலை
இமாம் கஸ்லாலியை
தமிழராக்கியவர்
அப்துல் வஹாப் அவர்களையே சாரும்
இப்போ
புகாரி, முஸ்லீம் போன்ற கிதாபுகள்
இரவோடு இரவாக
எப்போ எனக்கு
விஞ்ஞானப் புத்தகங்களாக
ஆல்பர்ட் ஐன்ஸ்டீன், நியூட்டன்
ஹிப்போக்கேட்ஸ், ஆர்க்கிமிடிஸ்
அலெக்ஸிஸ் காரெல் போன்ற
விஞ்ஞானிகள்
மாற்றிக் கொடுத்து விட்டு போய் விட்டார்கள்
....... இப்படித்தான்
அறிமுகமான நிறைய புத்தகங்கள்
எனக்கு உருமாறி போயின
விஞ்ஞானமாய் ..,



சூஃபியாக்கள் 1

"சூஃபி " என்ற வார்த்தை அரபி மொழியில் உள்ளது. இது "சூஃபிஸம்" என்ற ஆங்கில வார்த்தையாகி உலகமெங்கும் பரவலாக பயன்படுத்தப்படுகிறது அரபியில் "தஸவ்வுஃப்" என்ற சொல்லிலும் "சூஃப்" இருக்கிறது.
ஒரு நபிமொழியில்
"சூஃபி களுடைய குரலைக் கேட்டும் அவர்களுடைய பிரார்த்தனைகளுக்கு "ஆமீன்" (அப்படியே ஆகட்டும் இறைவா ) என்று சொல்லாதவர்கள் இறைவன் முன்னிலையில் கவனக்குறைவானவர்களாக பதிவு செய்யப்படுவார்கள்" என்பதாக 11 ம் நூற்றாண்டைச் சேர்ந்த அல் ஹுஜ் வீரி என்ற மாபெரும் சூஃபி தன்னுடைய கிதாபான
° கஷ்ஃபுல் மஹ்ஜூப் "( திரைக்குப் பின்னால் தெரியும் காட்சி) யில் குறிப்பிட்டுள்ளார்கள்
சூஃபித்துவத்தின் அடிப்படையும் இஸ்லாத்தின் அடிப்படையும் ஒன்றுதான் அதன் பெயர் "தவ்ஹீது "ஏகத்துவம் என்றும், இறைவனின் ஒருமை என்றும் இது மொழி பெயர்க்கப்படுகிறது . இஸ்லாத்தின் உயிரான விஷயமும் இதுதான்
ஒன்று என்று பொருள்படும் "வாஹிது " "அஹது " ஆகிய வேர்ச்சொற்களில் இருந்து "தவ்ஹீது " வருகிறது "அஹது " என்ற சொல்லுக்கு "ஒன்று" என்ற பொருள் சரிதான் என்றாலும் "பிரிக்க முடியாத ஒன்றே ஒன்று " என்பது தான் மிகச் சரி.
தவ்ஹீத்தின் அடிப்படையில் பார்த்தால் எல்லாமே மாயைதான், ஏனெனில் தனியாக வும் எல்லையுள்ளதாகவும் தெரிவதெல்லாமே எல்லையற்ற ஒன்றின் இருப்பில் தெரிபவைதான்.
"எங்கு திருப்பினாலும் தெரிவது இறைவனின் திருமுகமே. நிச்சயமாக இறைவன் எல்லையற்றவன், மிகப் பெரியவன், எல்லாம் அறிந்தவன் என்கிறது திருமறை (2:115)
இந்த மாய முகம் நமக்குத் தெரியவில்லை ஆனால் அதனை சூஃபியாக்கள் கண்டும் பேசியும் ,ஈசல்கள் போல் அதில் வெந்தும் சுகிக்கிறார்கள் இதை விட வேறு என்ன சொல்ல அவர்களைப் பற்றி ..,,
இறைவா ..
"எனக்கு நீ வெளிப்படுத்திக் காட்டிய உண்மையை இந்த மக்களுக்கும் வெளிப்படுத்தியிருந்தால் எனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்காது "
இறைவா....
"இந்த மக்களுக்கு எந்த உண்மையை நீ மறைத்தாயோ அந்த உண்மையை எனக்கு நீ மறைத்திருந்தாலும் எனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்காது" என்று
"அனல் ஹக் " (நானே உண்மை) என்றுரைத்து மரண தண்டனைப் பெற்ற மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்

ஞூஃபியாக்கள் 2   26-04-2017



ஒரு நாள் ஜலாலூதீன் ரூமி (ரஹ் ) அவர்கள் பள்ளியில் மாணவர்களுக்கு கல்வி போதித்துக் கொண்டிருந்தார்கள்
அங்கு காட்டு வாழ் மனிதரைப் போன்று ஒருவர் வந்து , " இஃது என்ன ? " என்று வினவினார்.
"இதைப் பற்றியெல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது சும்மா இரும்" என்றார் மௌலானா ரூமி சற்று வெறுப்போடு
அவ்வளவுதான் ,வந்த மனிதர் அங்கிருந்த நூல்களெல்லாம் அள்ளி பக்கத்திலுள்ள தண்ணீர் தொட்டியில் போட்டு தண்ணீரில் முழ்கடித்துவிட்டார்கள்
அது கண்ட ரூமி அவர்களும் அவர்களின் மாணவர்களும் அலறி துடித்து விட்டனர். அந்த நூல்களெல்லாம் பல வருடம் ரூமி ஆய்வு செய்து எழுதிய கிதாபுகள்
அப்பொழுது அந்த மனிதர் அமைதியாக அந்த தண்ணீர் தொட்டிக்குள் கையை விட்டு அத்தனை நூல்களையும் வெளியே எடுத்தார்
என்ன வியப்பு "அந் நூல்களெல்லாம் தண்ணீரில் நனையாது எப்படி இருந்தோ அப்படியே இருந்தன அதைப் பார்த்த ரூமி அவர்கள் அவரிடம் "இது என்ன? என்று வினவ,
" இதைப் பற்றியெல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது சும்மா இரும்" என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு வெருண்டோடினார் அந்த மனிதர்.
இப்பொழுதுதான் " வந்த மனிதர் சாமான்யரல்லர் .தாம் கற்ற கல்வி வேறு, அவர் கற்ற கல்வி வேறு " என்ற உண்மையை மௌலானா ரூமி ( ரஹ்) அவர்கள் உணர்ந்து வந்த மனிதர் ஷம்சுத் தப்ரேஸ்(ரஹ்) அவர்கள் என்பதை தெரிந்து கொண்டு,
அவரை பின் தொடர்ந்து ரூமி அவர்கள் ஓடிக் கண்டு பிடித்து அவர்களிடம் பிழை பொறுத்தருளுமாறு வேண்டி அவர்களின் ஆன்மீக மாணவராகி அதற்குப் பிறகே ரூமி அவர்கள் உலகப் பிரசித்துப் பெற்ற மாபெரும் கருத்துப் பெட்டகமான "மஸ்னவி " யை உலகுக்கு தந்தார்கள்
தண்ணீரில் ஒரு பொருளைப் போட்டால் நனையும் அதெப்படி நனையாமல் இருந்தது என்றெல்லாம் நம் மனம் எண்ணத் தோன்றும்
ஆனால் இந்த உலகினில் எதிரும் புதிருமான விஷயங்களில் ஞூஃபியாக்கள் மிக அழகாக கையாளுகிறார்கள் என்பதை ,ஜென் கவிதை ஒன்று சொல்லித் தருகிறது
"அந்திப் பொழுதினிலே
சேவல் அறிவிக்கின்றது
வைகறையை -
நடு நிசியினிலே -
பளிச்சிடும் சூரியனை "
கவிதை புரிகிறதா ? .......
இதை ஞூஃபியாக்களால் தான் உணர முடியும் ,
நாம் கவிதையை படிக்கத்தான் முடியும்
ரஹ்மத் ராஜகுமாரன்
ஆதார நூல்கள்
அப்துற் றஹீம் எழுதிய "வலிமார்கள் வரலாறு"
ஜென் கவிதைத் தொகுப்பு

எவ்வாறு நபிமார்கள் " வஹீ " மூலம் இறைவனிடமிருந்து ஆன்மீக அறிவைப் பெற்றனரோ , அதே போன்று சூஃபியாக்கள்" இல்ஹாம் " மூலம் இறைவனிடமிருந்து ஆன்மீக அறிவைப் பெறுகிறார்கள்
இதனையே பாயஸீத் பிஸ்தாமீ (ரஹ்) அவர்கள் "நீங்களெல்லாம் இறக்கக்கூடிய மனிதர்களிடமிருந்து அறிவைப் பெறுகின்றீர்கள் நாங்களோ பிறப்பில்லா
இறைவனிடமிருந்து அறிவைப் பெறுகின்றோம் " என்று கூறியுள்ளார்கள்

சூஃபியாக்கள் 3



நபிமார்கள் ஆரம்பத்தில் ஆடு மேய்ப்பவர்களாக இருந்திருக்கின்றனர் ஈஸா (அலை) அவர்களுக்கு "நல்ல மேய்ப்பாளர் " என்ற பட்டம் உண்டு
ஆதம் (அலை) உழவுத் தொழிலும் இத்ரீஸ் (அலை) தையல் தொழிலும் செய்துள்ளனர்
நபித்தோழர்களில் அபூபக்கர் (ரலி) அவர்கள் துணி வியாபாரியாகவும் ஜைது (ரலி) ,பிலால் (ரலி) போன்றவர்கள் அடிமைகளாக இருந்தனர் அபூதர் (ரலி) ஆரம்பத்தில் வழிபறி கொள்ளைக்காரர்களாக இருந்தார்கள்
சூஃபி ஜூனைதுல் பக்தாதி அரசாங்க மல்யுத்த வீரராக இருந்தார்கள். சூஃபி ஷெய்கு அஹ்மது இப்னு ஷாபாத் திருடராக இருந்தார் சூஃபி இப்ராஹீம் இப்னு அத்ஹம் பல்க் நாட்டின் மன்னராக இருந்தார்கள்
பத்திரகிரியாரும் குறுநில மன்னராக இருந்தார்கள்
உலகப் புகழ்பெற்ற சூஃபி ஞானி முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானியின் ஞானகுருவான ஹம்மாத் ஷெய்கு (ரஹ் ) அவர்கள் தள்ளுவண்டியில் குளிர்பானங்களை வைத்து விற்கும் வியாபாரியாக இருந்தார்கள்
"அதெப்படி உங்கள் குளிர்பானங்களில் மட்டும் ஈக்கள் மொய்க்கவில்லையே ? "என்று கேட்க
" நெருப்பில் ஈ மொய்க்குமா ?
அனுமதிக்கப்பட்ட வழியில் சம்பாதித்த பணத்தில் வாங்கப்பட்ட பொருள்களையே "நெருப்பு " என்று சொன்னார்கள்
உலகப் புகழ் பெற்ற இஸ்லாமிய பெண் சூஃபியான ராபியா பஸ்ரி (ரஹ்) பஸ்ரா நகரின் ஒரு விபச்சார விடுதியில் தான் பணியாற்றிக் கொண்டிருந்தார்கள்
இவர்களை சந்திக்கும் ஆண்களின் மனங்களில் மிகப் பெரிய தொரு மாற்றத்தை ஏற்படுத்தினார்கள் விபச்சாரம் புரிய உள்ளே சென்றவர்கள் மானிடப் பிறப்பின் சாரத்தை புரிந்து கொண்டவர்களாக ஞானிகளாகவே வெளியேறினார்கள்
பின்பு அந்த விடுதியை விட்டு வெளியேறி மார்க்கப் பணியாற்றினார்கள்
ஒரு நாள் யூப்ரடீஸ் நதிக்கரையில் உட்கார்ந்திருந்தார்கள் அங்கு ஹஸன் பஸ்ரி (ரஹ்) அவர்கள் ஆற்றுத் தண்ணீரில் தொழுகை விரிப்பை விரித்து ,அம்மையாரை நோக்கி " வாருங்கள் நதியின் மீது இரண்டு ரக்அத் தொழுகை தொழுங்கள்" என்றார்கள்
ஆனால் , அம்மையார் தமது தொழுகை விரிப்பை ஆகாயத்தில் விரித்து .ஹஸன் பஸ்ரியை நோக்கி "வாருங்கள் ஆகாயத்தில் இரண்டு ரத்அத் தொழுது கொள்ளுங்கள்
என்றார்கள்
தொடர்ந்து அவர்கள் "நீங்கள நதியில் செய்த வேலையை ஒரு சிறு மீன் நதியில் செய்யும்

நான் ஆகாயத்தில் செய்த வேலையை அற்பமான ஓர் ஈ ஆகாயத்தில் செய்யும் ஆனால் உண்மையான அசல் வேலை இந்த இரண்டு வேலைகளுக்கும் புறம்பானது என்பதை நீங்கள் அறிவீர்களா ?
சூஃபி களின் சாரம் எப்போதுமே வெளித்தோற்றத்தில் இருந்ததில்லை .அவர்கள் இந்த உலகில் இருந்துகொண்டே இந்த உலகை சேராதவர்களாக வாழ்கிறார்கள் இவர்களின் பக்தி வைதீக பக்தி அல்ல; பிரேம பக்தி அதாவது திரைகளை விலக்கி விட்டு நேரடியாக பார்ப்பவர்கள் சூஃபியாக்கள்

**Rahmath Rajakumaran**
'ரையோகான் என்னும் ஜென் குரு மலையடிவாரத்தில் ஒரு சின்ன குடிசையில் ரொம்பவும் எளிய வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தார்.
ஒரு நாள் சாயங்காலம் அவர் வெளியே போயிருந்த போது குடிசைக்கு திருடன் வந்தான்
திருடத்தான் எதுவும் இல்லை. ரையோகான் வீடு திரும்பிய போது திருடனைப் பார்த்தார்.
"நீ ரொம்ப தூரம் கடந்து இங்கே திருட வந்திருக்கிறாய். வெறுங் கையோடு நீ போகக் கூடாது இதோ என் ஆடைகளை என் பரிசாகவே நீ எடுத்துச் செல் " என்றார்
திருடன் சற்றே ஆச்சரியப்பட்டு அவர் ஆடைகளை எடுத்துக் கொண்டு நழுவி ஓடினான்.
குரு, உடம்பில் ஒட்டு உடை ஏதும் இல்லாமல் மேலே வானத்தில் முழு நிலவைப் பார்த்துக் கொண்டிருந்தார் . "
"பாவம் அவன் : இந்த அழகான நிலவை அவனுக்குக் கொடுத்திருக்கலாம் " என்றார்

சூஃபியாக்கள் 4
சூஃபிஸம் இஸ்லாத்தில் இல்லாததா ? இந்தப் பதிவைப் படித்தப் பின் நீங்கள் சொல்லுங்கள்
சூஃபிஸம் என்பது ஒரு புதுமைக்குப் பெயரல்ல, ஒதுங்கி நிற்பதற்கு ¡
சூஃபிஸம் என்பது ஒரு பாவகாரியத்துக்குப் பெயரல்ல. அதை விட்டும் விலகி ஓடுவதற்கு |
சூஃபிஸம் என்பது எட்டாக்கனி அல்ல: சீச்சீ இந்தப் Uழம் புளிக்கும் என்று கூறுவதற்கு '
சூஃபிஸம் என்பது அனைவரும் அவசியம் செயல்படுத்த வேண்டிய ஒரு அரும் தவம்
பத்து கட்டளைக் கொடுத்து நபி மூஸா (அலை) அவர்களை யூத சமுதாயத்திற்கு அனுப்பி வைத்தான்
அதைப் போன்று 4 கட்டளைக் கொண்டு நபி (ஸல்) அவர்களை இஸ்லாமிய சமுதாயத்திற்கு அனுப்பி வைத்திருக்கிறான்
முதல் கட்டளை அல்குர்ஆனை பொருள் அறிந்தோ அறியாமலோ ஒத வைப்பது
2 - வது கட்டளை அவர்களை தூய்மைப்படுத்துவது
3-வது கட்டளை அல்குர்ஆனின் பதவுரை தெளிவுரையை அவர்களுக்குக் கற்றுத் தருவது
4-வது கட்டளை நபிமொழி என்ற ஹிக்மத்தைக் கற்றுத் தருவது.
இந்த 4 கட்டளைகளை 2 : 129 , 2 : 151 , 62 : 2
இந்த மூன்று வசனங்களும் ஊர்ஜிதம் செய்கின்றன (வசனங்களை நீங்களே பார்வையிட்டுக் கொள்ளுங்கள் )
இந்த 4 கட்டளைகளில் இடம்பெற்றுள்ள " "தஸ்கியத் " என்பதுதான் காலப்போக்கில் சூஃபிஸம் என்று பெயர் கொண்டு சூட்டப்படுகிறது
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் சிறு வயதில் நபி(ஸல்) அவர்களுக்கு சேவகம் செய்த போது அவர்களை துஆ செய்தார்கள்
இதனால் திருககுர்ஆனின் விளக்கவுரையை பரப்பும் பணியை மேற்கொண்டார்கள்
அபூஹுரைரா (ரலி) அவர்களை மேலாடையை விரிக்கச் சொல்லி அதில் தனது இரு கரங்களினால் மானசீகமாக எதையோ மூன்று முறை அள்ளிப் போட்டு அதை நெஞ்சோடு அணைத்துக் கொள்ளச் சொன்னார்கள் அவ்வாறு செய்திலிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் நபிமொழியின் நினைவு பெட்டகமாகவே மாறிவிட்டார்கள்
ஸைது பின் தாபித் (ரலி) அவர்களுக்கு பத்ரு கைதிகளில் ஒருவரைக் கொண்டு அரபி எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்து அல்குர்ஆனை பதிவு செய்து வைக்கும் பணியை அவர்களிடம் ஒப்படைத்தார்கள்
"நான் ஞானத்தின் பட்டணம் அலி அதன் தலைவாயில் " என்று நவின்று அலி (ரலி) அவர்களை " தஸ்கியத்" என்ற கலையின் ஆசானாக அறிமுகம் செய்து வைத்தார்கள் அலி (ரலி) அவர்களின் வழித் தோன்றல்கள் குறிப்பாக அசன் (ரலி) , ஹுஸைன் (ரலி) மற்றும் அவர்களின் சந்ததிகளின் வாயிலாக தஸ்கியத் என்னும் சூஃபிஸம் போதிக்கப்பட்டு வந்துள்ளது இறை நேசர்களில் பெருவாரியானவர்கள் அசன் (ரலி) ஹுஸைன் (ரலி) இவர்களின் வழித்தோன்றல்களாகவே இருக்கிறர்கள்
இப்போது நீங்கள் சொல்லுங்கள் "சூஃபிஸம் எங்கிருந்து ஆரம்பிக்கிறது ? சூஃபிஸம் இஸ்லாத்தில் இல்லாததா
நாம் பஸ்ஸில் ஏறியவுடன் சன்னல் சீட்டை தான் தேடி உர்க்காருவோம் எதற்காக என்றால் அப்போதுதான் நாம் வெளியே பார்க்க முடியும். நாம் பஸ்ஸில் எப்போதுமே உள்ளே பார்ப்பேதே இல்லை.

இதுபோலத்தான் நாம் நம் உள் முகம் பார்ப்பேதே இல்லை அப்படி பார்த்தால் பார்க்க தெரிந்தால் நம் உயிரின் ஓசை கேட்கும், நம் மனதின் வெளிச்சம் இருல் தெரியும், நமது ஆன்மாவின் அகமியம் புரியும். அகத்தில் ஞானம் பிரகாசிக்கும்.
இதுவே சூட்சுமத்தை உணர்த்தும் சூஃபி ஞானிகளின் வழியாகும். இந்த வழியே எழுதி படிக்க முடியாத திரை மறை சூட்சும் .

சூஃபியாக்கள் 5



ஹஜரத் புஹ்லூல் தானா (ரஹ்) அவர்கள் ஒரு நிறைவான (மஜ் தூப்) தீவிர இறை நேசராக இருந்தார்கள்
கலீஃபா ஹாரூன் ரஷீத் காலத்தில் பாக்தாத்தில் இருந்து வந்தார்கள்
ஒரு நாள் மாலை அந்தி சாயும் நேரத்தில் கலீஃபா ஹாரூன் ரஷீத் தன் மனைவி ஜுபைதா காத்தானுடன் டைகரீஸ் நதி (தஜ்லா நதி) நதிக்கரையோரம் உலாவச் சென்றார் அங்கு புஹ்லூல் தானா (ரஹ்) அவர்கள் ஈரமான ஆற்று மண்ணில் மணல் வீடுகள் கட்டிக் கொண்டு இருந்தார்கள்
அதைப் பார்த்த ஜூபைதா "பாபா , தாங்கள் என்ன செய்து கொண்டிடுக்கிறீர்கள் ? "
"நான் சுவனத்தில் வீடு கட்டிக் கொண்டிருக்கிறேன்."
" இந்த வீடுகளைத் தாங்கள் விற்பனை செய்வீர்களா ? "
. "ஆமாம் ' ஒரு வீட்டின் விலை உமது கழுத்தில் கிடக்கும் முத்துமாலை "
உடனே ஜூபைதா முத்துமாலையை கழற்றிக் பாபாவிடம் கொடுத்து விட்டார்.
புஹ்லூல் மாலையை வாங்கிக் கொண்டு "செல்லுங்கள் இதுதான் உம்முடைய சுவனமாளிகை' " என்றார்கள்
இதைப் பார்த்துக் கொண்டிருந்த கணவர் ஹாரூன் ரஷீத் தன் மனைவியிடம் "ஒரு மஜ்தூபிடம் விலை மதிப்பற்ற உன்னுடைய முத்து மாயையை கொடுத்து விட்டாயே நீ ஒரு சரியான முட்டாளாக இருக்கிறாய் " என்று சற்று கோபப்பட்டார்
அன்று இரவு உறக்கத்தில் கலீஃபா ஹாருன் ஒரு கனவு கண்டார் சொர்க்கத்தில் அவர் உலாவிக் கொண்டிருக்கும் போது மிக உயரமான அழகான முத்துக்களால் ஆன ஒரு மாளிகையைக் கண்டார் அதன் அழகில் அவர் அப்படியே சொக்கி நின்று விட்டார் அதன் வாயிலில் "ஜூபைதா காத்தூன் " என்று பொறிக்கப்பட்டிருந்தது
ஹாரூன் , அட நம்ம மனைவியின் மாளிகைதானே என்று உள்ளே நுழைய முயற்சிக்கும் போது ஒரு வானவர் அவரைத் தடுத்து " இது ஜூபைதா காத்தூனுடைய மாளிகை நேற்றுதான் தம்முடைய முத்துமாலையை விலையாகக் கொடுத்து வாங்கிக்கிறார் அவர் இதனுள் நுழையாதவரை வேறு யாருக்கும் நுழைய அனுமதி இல்லை" என்றார்
ஹாரூன் ரஷீத் திடுக்கிட்டு எழுந்து டைக்ரீஸ் நதிக் கரைக்கு விரைந்தார் அங்கு புஹ்லூல் தானா அவர்கள் நிறைய வீடுகளைக் கட்டிக் கொண்டிருந்தார் ஹாரூன் அவரிடம் "பாபா எனக்கும் ஒரு வீடு தாருங்கள் அதற்குரிய தொகையைக் கொண்டு வந்திருக்கிறேன் என்றார்.
புஹ்லூல் புன்னகைத்தபடி "சுவனத்தில் எவர்கள் முத்து மாளிகையைக் காணவில்லையோ அவர்களுக்கே நாம் இந்த வீடுகளை விற்பனை செய்வோம் எவர்கள் சுவனத்து முத்து மாளிகையைக் கனவில் கண்டார்களோ அவர்களுக்கு நாம் ஒருபோதும் இந்த வீடுகளை விற்பதில்லை எனக் கூறி விட்டு சென்று விட்டார்.
"விண்ணிலும் மண்ணிலும் வலிமார்களுக்கு எந்த தடையும் கிடையாது .அவர்கள் விரும்பினால் (மரணத்திற்குப் பின்னரும்) தம் சொந்த உடலுடன் இப்பூமிக்கு வர முடியும்
- கௌதுல் அஃலம் அப்துல் காதிர் ஜிலானி.

சூஃபியாக்கள் 6


தஸ்தகீர் (ரஹ்) இவர்களது இயற்பெயர் "சையது ஷாஹ் குலாம் தஸ்தகீர் சாவி " ஈரானிலுள்ள "சவா '' என்ற ஊரில் பிறந்தார்கள் அதனால் சாவி
இவர்களை சென்னை திருவல்லிக்கேணியில் உள்ள வாலாஜா மஸ்ஜிதைத் திறந்து வைப்பதற்காக "நவாப் முஹம்மது அலி வாலாஜா அழைத்து வந்த போது, கிப்லா சரியாக அமையவில்லை என்று தஸ்தகீர் அவர்கள் கூறினார்கள்
ஆனால் நவாப் அதை மறுத்து சரியாகத்தான் உள்ளது என்று கூறிய போது இவர்கள் தனது தலைப்பாகையை கழற்றி நவாப் தலையில் வைத்தபோது கிப்லா தவறாக இருப்பதை நவாப் தெளிவாக உணர்ந்தார்
ஒரு முறை இவர்களின் மாணவர்கள் 4 பேர் இவர்களிடம் வந்து மனிதனின் நிலை பற்றி கேட்டார்கள்
அதற்கு "நான் மரணித்த பின் எனக்கு ஜனாஸா தொழுகை யார் தொழ வைக்கிறாரோ அவர்களிடம இந்த கேள்வியை கேளுங்கள் என்று கூறினார்கள்
அவ்வாறே சில காலம் சென்ற பின் இவர்கள் மரணித்த பின் ஜனாஸா வாலாஜா பள்ளிக்கு கொண்டு வரப்பட்டு யார் தொழ வைப்பது என்று பிரச்சனையாக இருந்தது
அப்போது திடீரென்று ஒரு மனிதர் தனது முகத்தை மறைத்தவாறு முக்காடு போட்டு வந்து தொழவைத்து , துஆ ஓதி முடித்த பின்பு மேற்கு பக்கம் சென்றார்கள்
அப்போது மாணவர்கள் அந்த மனிதரிடம்
அந்த கேள்வியை கேட்க சென்ற போது அங்கு இருந்த அதே தஸ்தகீர் (ரஹ்) அவர்களைப் பார்த்து மயக்க முற்று விழுந்தார்கள்
இவர்களுடைய அடக்கஸ்தலம் கிருஷ்ணாம் பேட்டையில் டாக்டர் .நடேசன் சாலையில் உள்ளது
மாணவர்கள் கேடக நினைத்த கேள்வி "மனிதனின் நிலை"
"விண்ணிலும் மண்ணிலும் வலிமார்களுக்குத் தடை என்பது கிடையாது
அவர்கள் விரும்பினால் மரணத்திற்குப் பின்னரும் தம் சொந்த உடம்புடன் இப்பூமிக்கு வர முடியும் "
- தௌதுல் அஃலம் அப்துல் காதிர் ஜிலானி

சூஃபியாக்கள் 7



சையிது மூஸா ஷா காதிரி (ரஹ்)
இவர்கள் எந்தக் காலத்தைச் சேர்ந்தவர்கள் ,எங்கிருந்து வந்தவர்கள் என்பது சரியாக யாருக்கும் தெரியவில்லை ..
பின்னே எப்படி இவ்வுலகிற்கு அறிமுகமானார்கள் ?
சொல்றேன். ரொம்பவும் விசித்திரமான சேதி அது.
கிழக்கிந்திய கம்பெனி ஆட்சியின் போது இப்பகுதியில் கட்டாந் தரையில் சாலை அமைக்கத் தோண்டப்பட்ட போது இவர்களின் உடல் தென்பட்டது. ஆங்கிலேயர்கள் ஆச்சர்யப்பட்டுப் போனார்கள்
அவர்களது உடல் எத்தனையோ வருடங்களுக்கு முன் அடக்கப் பெற்றிருந்தாலும் அவர்களது உடலில் நாடித்துடிப்பு ரொம்பவும் சீராக இயங்கிக் கொண்டிருந்தது இந்தச் செய்திக் குறிப்பு செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் உள்ளது என்று கூறப்படுகிறது

1911 ல் இப்பகுதியில் ட்ராம்வே போடப்பட்ட போது, இவர்களின் அடக்கவிடத்தை அப்புறப்படுத்த கோடாரியால் உடைத்தபோது இரத்தம் பீரிட்டு வந்தது அதுவும் சூடான இளம் ரத்தம் . உடனே அடக்கஸ்தலத்தை மேலும் உடைக்காமல் அப்படியே மூடிவிட்டார்கள் காலையில் உயர் அதிகாரி கள் பார்வையிட வந்த போது மொத்த அடக்கஸ்தலமே சற்று சாய்வாக இடம் மாறிக் கொண்டது .
"ரோடு போட இடம் போதுமா ?"
" நமது சாலிஹான மூமின்களுக்கு நமது பரிசுத்த ஜீவனைக் கொண்டு திட்டமாக நாம் ஜீவிக்கச் செய்கிறோம் "
- அல் குர்ஆன்
" அடங்கிய நிலையில் அடக்கம் என்பது உண்மையான அடக்கமாகாது : இயக்க நிலையிலும் அடக்கமாக இருக்கும்போதுதான் விண்ணையும், மண்ணையும் நிறைக்கின்ற ஆன்மீகலயம் தோன்றும் "
ஆதார நூல் :
Ts' ai - Ken t'an T. Leggett "A First zen Reader page 229

சூஃபியாக்கள் 8
நபிமார்களுக்கு "நுபுவத் " எப்படியோ அதைப் போன்றே வலிமார்களுக்கு " விலாயத் " என்னும் பட்டத்தை இறைவன்வழங்குகிறான்.
இந்த விலாயத் இறையச்சத்துடன் மிகச் சாதாரணமாக வாழ்ந்த மனிதர்களுக்கும் இறைவன் வழங்கி இருக்கின்றான் என்பதற்கு அத்தாட்சியாக ஒரு சம்பவம்
வங்கதேசம் ரங்க்பூர் மாவட்டம் கஷ்மார்கா என்ற கிராமத்தைச் சேர்ந்த 105 வயது மூதாட்டி ஆயிஷா காத்தூன் அவர்கள் மிகச் சாதாரண எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்கள் 1997 ஆம் ஆண்டு இறந்து போனார்கள் 6 வருடம் கழித்து அதாவது 2003 ஆம் ஆண்டு மீண்டும் உடல் தோண்டியெடுக்கப்பட்டு மீண்டும் இறுதிச் சடங்குகள் செய்து ஊர்வலமாய் கொண்டு போய் வேறொரு இடத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது
காரணம் ? சொல்றேன் .
அந்த மூதாட்டியின் மூத்த மகனுக்கு 6 வருடங்கள் கழித்து (2003-ல்) ஓர் இரவில் கனவு வந்தது. கனவில் அம்மா . "மகனே நான் அடங்கப் பெற்றிருக்கும் இடத்தில் ஆறு உடைப்பெடுத்து ஓடப் போகிறது அதனால் என்னை உடனே மாற்று என்று உத்தரவு போட்டுவிட்டு மறைந்தார்கள் .
தன் இரண்டு தம்பிகளிடம் கனவு பற்றிச் சொல்ல ஓடோடி போனார் அண்ணன். தம்பி களுக்கு ஒரே ஆச்சரியம் "அண்ணே ...... சொன்னால் நம்ப மாட்டீர்கள் எங்கள் கனவிலும் அம்மா வந்து இதையேச் சொன்னார்கள் நாங்கள் இருவரும் இது பற்றி உங்களிடம் சொல்வதற்காக வந்து கொண்டிருக்கிறோம் " என்றனர்
மூவருமே ஆச்சரியப்பட்டு போனார்கள் அந்த உடனே அம்மா அடங்கப்பட்ட மசூதிக்குச் சென்று அங்கிருந்த தலைவர்களிடமும் மற்றும் ஊர்த் தலைவர்களிடமும் விஷயத்தைக் கூறினார்கள் விஷயம் ஊரெங்கும் பரவியது தலைவர்களும் அவர்களது விருப்பத்திற்கு ஒப்புக் கொண்டனர்
நாள் குறிக்கப்பட்டது
ஆற்றோரமாக இருந்த மூதாட்டியின் மண்ணறையை மதச் சம்பிரதாய சடங்கு களுடன் 30.08.2003 சனிக்கிழமை தோண்டப்பட்டது மொத்த கூட்டமும் அந்தக் சின்னக் கிராமத்தைச் சுற்றி வளைத்தது கபரைத் தோண்டிப் பார்த்த போது மிகப்பெரும் ஆச்சரியம் மூதாட்டியின் உடலில் எந்த மாற்றமும் இல்லை 6 ஆண்டுகளுக்கு முன்பு எப்படி புதைக்கப்பட்ட போது இருந்ததோ, அதைப் போலவே இருந்தது
அவரது மகன்கள், மதத்தலைவர்கள் , மக்கள் முன்னிலையில் உடல் வெளியே எடுக்கப்பட்டது. மீண்டும் இறுதிச் சடங்கு நடைபெற்றது இரண்டாவது முறையாக இறுதி ஊர்வலம் (மெதுவாக அட ,மெதுவாக போங்கப்பா ) நடந்தது.
பாதுகாப்பான இடத்தில் உள்ள கல்லறையில் அவரது உடல் இரண்டாவது முறையாக புதைக்கப்பட்டது ஆதாரம் 04 -09-2003 தினமலர் நகர்வலம் என்ற பதிவில் இச்செய்தி வெளியாகி உள்ளது.
"முஷ்ரிக்குடன் போர் செய்து வெட்டப்பட்டு ஷஹீதானாலும் சரி , தம்முடைய நப்ஸுடன் ஆத்மார்த்தமாகப் போர் செய்து அதை வெட்டி வீழ்த்தினாலும் சரி இரண்டுமே பீஸபீல்தான் "
என்று முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் எழுதிய மெய்ஞ்ஞான சொரூபர் பாகம் 1 ல் பக்கம் 137-ல் பதிவு செய்யப்பட்டுள்ளது.



பக்காதிலிருந்து 40 மைல் தொலைவில் ஸல்மான் ஃபார்ஸி | ரலி) அவர்களின் அடக்கஸ்தலம் உள்ளது இதன் காரணமாக அந்த ஊருக்கே "ஸல்மான் பாக்" என்றழைக்கப்படுகிறது இதன் பழைய பெயர் மதாயின் அங்கிருந்து இரண்டு பர்லாங்கு தொலைவில் "ஹஜ்ரத் ஹுதைபதுல் யமான் (ரலி) , " "ஹஜரத் ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி) " ஆகிய இரு நபித்தோழர்களின் கபறு தஜ்லா நதி யின் கரையில அடக்கப்பட்டுள்ளது பக்கத்தில் தஜ்லாந்தி ஓடுவதால் வெள்ளம் வரும் போது தண்ணீர் இரு கறுகளிலும் ஊடுருவி வெளியாகிறது.
இந்நிலையில் முதலாம் பைசல் மன்னர் மற்றும் இராக் தலைமை முஃப்தீ (நீதிபதி) ஆகியோர் தனித்தனியாக கண்ட கனவில் மேற்படி இருநபித் தோழர்கள் தோன்றி "எங்களின் கப்றுகளை இடம் மாற்றங்கள் " என்று கூறினார்கள்
தேதி குறிக்கப்பட்டு எல்லா நாட்டு மதத்தினர் கள் வெளிநாட்டு தூதுவர்கள் என சுமார் 5 இலட்சத்திற்கும் அதிகமானோர் கூடினார்கள்
ஹிஜ்ரி 1350 துல்ஹஜ் கடைசியில் 1932 வருஷம் ஏப்ரல் மாதம் ஒரு திங்கட் கிழமை பகல் 12 மணிக்கு மேற்கண்ட எல்லோர் முன்னிலையிலும் புனித உடல்கள் கிரேன் மூலம் வெளியே கொண்டு வரப்பட்டது மன்னர் பைசல், தலைமை முஃப்தி, துருக்கி அமைச்சர் முக்தார் பட்டத்து இளவரசர் பாரூக் ஆகியோர் புனித உடல்களை மிக மரியாதையுடன் சுமந்து வந்து கண்ணாடி பேழைகளில் வைத்தார்கள்
கஃபன் துணி மட்டுமல்ல அவர்களின் தாடி முடி உட்பட நல்ல நிலையில் இருந்தது
பொதுவாக இறந்ததும் 6 மணி நேரத்திற்குள் கண் பார்க்கும் சக்தியை முழுமையாக இழக்கும் ஆனால் இருவரின் கண்களும் ஒளி வீசிக்கொண்டிருந்ததைக் கண்ட ஜெர்மன் கண் டாக்டர் அந்த உடனே தலைமை முஃப்தியின் கரம் பற்றி இஸ்லாத்திற்கு ஏற்கிறார் இவரைத் தொடர்ந்து நிறைய பேர்கள் நபித்தோழர்களின் உடலின் முன்பு இஸ்லாத்தில் கூட்டம் கூட்டமாக நுழைகிறார்கள்
மக்களின் பார்வைக்காக உடல்களின் கபனை விலக்கி பொதுமக்கள் பார்வைக்கு திறந்து வைக்கப்பட்டது பெண்களும் ஜியாரத்திற்கு அனுமதி அளித்தனர்
உலக நாட்டு தூதுவர்கள் மன்னர்கள் உலமாக்கள் தங்களின் தோளின் மீது சுமந்து செல்ல ... -விமானங்கள் மூலம் பூக்களை வழி நெடுக வாரி இறைத்தன
சுமார் 4 மணி நேரம் நடந்தே புனித உடலை சுமந்து கொண்டு செல்ல லட்சபோ லட்சம் மக்கள் பார்வையிட "சல்மான் பாக்" இடத்தை அடைந்தது "அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் தக்பீர" முழக்கம் விண்ணை பிளந்தது
உயிருள்ள இரு தியாகிகளின் புனித உடல்கள் ஹஜரத் சல்மான் பார்ஸி (ரலி) அவர்களின் பக்கத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது
பக்தாத் திரையரங்ககுகளில் இந்த நிகழ்வுகள் தொடர்ந்து காட்டப்பட்டு ....வெளியில் வரும் யாத்திரிகர்கள் பார்த்து செல்ல அனுமதிக்கப்பட்டது
இந்த நிகழ்ச்சியைப் பார்த்த அநேகர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டே இருந்தனர்
தகவல் : மஆரிஃப் மாத இதழ் ஜனவரி 1979 ஆஜம்கட் உ.பி
ஆதாரம : ஏக் - ஆலம் - தாரீக் (ஓர் உலக வரலாறு)

 சூஃபியாக்கள் 10

ஒரு நாள் அன்னை உம்மு பர்வா அடுப்பினில் பெரும் விறகுக்கட்டை களோடு சிறு சிறு சுள்ளிகளையும் வைத்து நெருப்பு மூட்டியதைக் கண்ட 6 வயது பாலகர் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடியதைக் கண்ட தாயார் பதறிப் போய் பசியால் வடிகிறானோ என்றெண்ணி வாரி முத்தமிட்டு "மகனே , . இன்னும் சொற்ப நேரத்தில் சமையல் முடிந்துவிடும் அழாதே " என்ற போது ,
"பசிக்காக அழவில்லையம்மா ..... தாங்கள் அடுப்பிலே பெரும் விறகுக்கட்டைகளோடு சிறு சிறு சுள்ளிகளையும் வைத்து நெருப்பு மூட்டியதைக் கண்டதும் மறுமையில் இவ்வாறுதானே பாவம் புரிந்த பெரிய மனிதர்களுடன் பாவமிழைத்த சின்னஞ் சிறார்களையும் இறைவன் நரக நெருப்பில் தள்ளுவான் என்ற எண்ணம் என் உள்ளத்தில் மிகைத்துவிட்டது நானும் அச்சிறுவர்களில் ஒருவனாக ஆகிவிடக் கூடாதே என் என் குலையெல்லாம் நடுங்கியது அதன் காரணமாக என்னை அறியாமல் என் கண்கள் அழுதன என்றனர்
உடனே அந்த தாய் "மகனே அழாதே அளப்பெரும் அருளாளனாகிய அல்லாஹ் உன்னை கவனம் புகச் செய்வான்' என்றார்
அந்த சிறுவர்தான் இமாம் ஜாபர் சாதிக் (ரஹ்) அவர்கள்

சூஃபியாக்கள் 11



(ராபியாத்துல் பஸரீயா)
கி.பி. 717 ல் ஹ்ஜ்ரி 95ல ஈராக் பஸராவில்
"கைஸ்பின் அதீ " என்ற குடும்பத்தில் பிறந்ததால் ராபியத்துல் அதவியா என்றும், ராபியத்துல் கைஸியா என்றும் பஸராவில் வாழ்ந்து வந்ததால் ராபியத்துல் பஸ்ரியா என்றும் அழைக்கப்படுகிறார்கள் குடும்பத்தில் நான்காவது பிறந்ததால் "ராபியா " என்று பெயர் சூட்டினார்கள்
மரியம் (அலை) போன்று அதிகமான வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டதன் காரணமாக "இரண்டாவது மர்யம் சித்திகா" என்றும் அழைக்கப்பட்டார்கள்
இவர்களிடம் உறங்க பாயொன்று இருந்தது. ஒரு செங்கல்தான் இவர்களின் தலையணை
தொழும் போது கப்ன் துணி இவர்களுடனே இருக்கும் .கப்ன் துணியை எப்போதும் சுமந்து கொண்டே இருப்பார்கள்
ராபியத்துல் பஸ்ரி தமது இளமைக் காலம் முதல் இறைக் காதலிலேயே கழித்தனர்
குடும்ப வாழ்க்கையில் இச்சை இல்லாது இருந்தனர் பார்க்க ரொம்பவும் அழகாக இருப்பார்கள்." பஸ்ரா நகரின் ஆபரணம்" என்று வர்ணிக்கப்பட்ட அழகு அவரின் அழகு
இதனை அறிந்த பஸ்ரா ஆளுநர் தம்மை மணந்து கொள்ளும் படி கேட்டுக் கொண்டார்
அதற்கு ராபியாத்துல் பஸ்ரி அவரிடம் :
"உலகினை விரும்புவோன் ஆணும் பெண்ணுமல்லாத அலி ஆவான்
மறு உலகில் சுவர்க்கத்தை விரும்புவோன் பெண்ணாவான்.
அல்லாஹ்வையே விரும்புவன் ஆணாவான்
என்னை விரும்பி வந்த நீர் உலகினை விரும்புவோரானால், நீர் அலி , நான் பெண் அலியும் பெண்ணும் திருமணம் செய்ய முடியாது
நீர் மறு உலகை விரும்புவோராயின் நீரும் பெண். நானும் பெண் .பெண்ணுடன் பெண் திருமணம் செய்ய முடியாது

நீர் அல்லாஹ்வையே விரும்புவீராயின் நீரும் ஆண் தெய்வீகக் காதலிலே இருந்து அல்லாஹ்வை மட்டுமே விரும்புகின்றேன் ஆதலினால் நானும் ஆண் ஒரு ஆடவன் இன்னொரு ஆடவனை எவ்வாறு திருமணம் செய்ய முடியும் ?
மணம் முடிக்கவந்தவர் மனம் மாறிப் போனார்
ராபியத்துல பஸ்ரி யாரையுமே வாழ்நாளில் திருமணம் செய்தது இல்லை'
பெண் சூஃபி கவிஞர்களில் இவரே முதன்மையானவர்
இறைக் காதலில் இவர்கள் பாடிய கவிதைகள் நம்மை மெய்சிலிர்க்கச் செய்கிறது
இந்த கவிதையின் வார்த்தை பிரயேகத்தை இவர்களைத் தவிர யாராலும் உச்சரிக்க ஏன் நினைத்துக் கூட பார்க்க முடியாது
"விழிகள் அமைதியை நாடுகின்றன
நட்சத்திரங்கள் மூடிக் கொள்ளுன்றன
சன்னமாக இருக்கிறது.
அதனதன் கூடுகளில் இருக்கும்
பறவைகளின் ஒலிகள்.
அலைகளின் வாழும் அசுரர்களின்
சப்தங்களும்.
மாற்றங்கள் அறியாத மிகப் பெரியவன் நீ
நிலை மாறாத சமன் நீ
மறைந்து விடாத அழிவின்மையும் நீ .
அரசர்களின் கதவுகள் இப்போது
தாழிடப்பட்டி டுக்கின்றன,
அவற்றைப் படையினர்
பாதுகாத்துக் கொண்டிருக்கின்றார்கள்
உன்னத் தேடி வருபவர்களுக்காக
உனது கதவுகள் திறந்தே இருக்கின்றன
எனது இறைவா
இப்போது எல்லோரும் அவரவர்
காதலர்களுடன் தனித்து இருக்கிறார்கள்
நானும் உன்னுடன் தனித்திருக்கிறேன்
நரகம் பற்றிய பயத்தில்
உன்னை வணங்கினால்
என்னை நரகத்தில் தீயிலிடு .
சுவர்க்கத்தின் ஆசையில்
உன்னை வணங்கினால்
சுவர்க்கத்தில் வைத்து என்னைப்
பூட்டி விடு.
உன்னை உனக்காக மட்டுமே
வணங்குவேனென்றால்
உனது முடிவில்லாத அழகை
எனக்கு மறைத்து விடாதே..
ஒரு கையில் விளக்கையும்
மற்றொரு கையில் ஒரு
வாளித் தண்ணீரையும்
வைத்துக் கொண்டிருக்கிறேன்
சுவர்க்கத்தைத் தீயிலிட்டு,
நரகத்தின் தீயை
அணைக்கப் போகிறேன்
இறைவனை நோக்கிப் பயணிப்பவர்கள்
திரை விலக்கி
உண்மையைப் பார்க்கட்டும்
நான் இறைவனை
நேசித்துக் கொண்டிருக்கிறேன்
சாத்தானை வெறுக்கும் அளவுக்கு
என்னிடம் நேரம் இல்லை
யாரையாவது திறக்கச் சொல்லி மன்றாடி
எவ்வளவு காலம்தான் திறந்த கதவை
தட்டிக் கொண்டிருப்பாய் ?

ஸூஃபியாக்கள் 12



(ஜுபைதா ஹாத்தூன்)
பாக்தாத்தின் அப்பாஸிய கலீபாக்களின் வரலாற்றில் ஹாரூன் ரஷீதின் மனைவி ஜுபைதா ஹாத்தூன் அவர்கள் இறைநேச செல்வர்கள் மீது மிகுந்த மரியாதை கொண்டவராக திகழ்ந்தார் புஹ்லூல் தானா (ரஹ்) அவர்களை சுத்தித்து சுவனத்தின் மாளிகையை விலைக்கு வாங்கியவர்
ஜுபைதா அம்மையார் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டிக்செல்லும் போது மாதவிடாய் வருகிற நாளாய் இருந்தது இதனால் மிகுந்த கவலையடைந்த ஜுபைதா அவர்கள் , நாயனே... என்னுடைய கர்ப்பப்பையில் இருக்கிற இரத்தத்தை இச் சமயத்தில் நீ தடை செய்திடுவாயானால் உன்னுடைய கஃபாவை நாடி ஹஜ்ஜு செய்ய வருகிறவர்களுக்கு உதவியாக பாக்தாத் டைக்கிரிஸ் நதி (தஜ்லா நதி) தண்ணீரை நான் கொண்டு வந்து சேர்ப்பேன்" என்று நிய்யத்து செய்தார்கள்
அக்காலத்திய பொறியியல் நிபுணர்களைக் கலந்தாலோசித்து ஏறத்தாழ 1600 மைல் பூமியை தோண்டி கால்வாய் அமைத்து கால்வாயைக் கொண்டு வந்தார் "ஐனு ஜுபைதா " "ஜூபைதா கால்வாய் " என்றே பெயரிடப்பட்டு அழைத்து வந்தனர்.
இப்போது சவூதி அரசாங்கத்தினர் தண்ணீருக்கு ஏராளமான வசதிகளை செய்து விட்டதால் அன் கால்வாய் மூடப்பட்டுவிட்டது
ஜூபைதா ஹாத்தூன் மரணமான பிறகு ஒரு பெரிய சூஃபி அம்மையாரைக் கனவில் கண்டார்.
அம்மையார் சுவனபதியில் உலாவிக் கொண்டிருந்தார் அவரிடம் அந்த சூஃபி "ஜுபைதா அவர்களே. - கால்வாய் அமைத்தற்காக இறைவன் உமக்கு இந்த உயர்பதவியைத் தந்தானோ ? என்று கேட்டார்
அதற்கு ஜுபைதா " இல்லை - கால்வாயை அமைத்தற்காக எனக்கு இங்கு எந்தப் பலனையும் தரவில்லை ' நிலையான புகழ் பெற வேண்டும் என்பதற்காக கால்வாயை அமைத்தாய் அவ்வாறே உலகத்தில் நீ புகழ் பெற்று விட்டாய்" என என்னிடம் தெரிவிக்கப்பட்டது
மிகச் சாதாரண ஒரு நற்செயலுக்காக இறைவன் என்னை மன்னித்து இவ்வுயர் பதவியை வழங்கினான் அந்த மிகச் சாதாரண நல் வினை எது தெரியுமா ?
ஒரு முறை நாய் ஒன்று காயம் அடைந்து கடும் வெய்யில் தாகத்தால் தவித்துக் கொண்டிருந்தது கடும் நாவறட்சியால் அதன் நாக்கு வெளியே தொங்கிக் கொண்டிருந்தது
அந்நாய் தண்ணீரைத் தேடிச் செல்ல முடியாத நிலையில் அதன் காயம் இருந்தது
நான் அதற்குத் தண்ணீர் புகட்டினேன் .இறைவனின் திருப்பதிக்காகவே தூய எண்ணத்துடன் செய்தேன் என்றார்கள்

ஸூஃபியாக்கள் 13



அடர்ந்த காட்டின் நடுவே ஒரு கூடாரம் அதில் அழுக்கடைந்த முரட்டு கம்பளியை சுற்றிக் கொண்டு கழுத்தில் பெரிய ஜபமாலை, கையில் மற்றொரு ஜபமாலை விரல்களுக்கு இடையே நகர்ந்து கொண்டு உதடு முணுமுணுக்க அரை கண்ணறக்கத்தில் பெரிய தவஞானி கோலம்
"அடடே , கள்வர்கள் நிறைந்த காடாமே ., தெரியாம இந்த வியாபாரிகள் கூட்டத்தில் வந்து மாட்டிக் கொண்டேமே அதோ வழிப்பறி கொள்ளையர்கள் வந்து விட்டார்களே" என்று பெரும் பொருளுடைய

வியாபாரி ஒருவர் பெரும் பொருளை எடுத்துக் கொண்டு கொள்ளையர் கூட்டத்திற்கு தெரியாமல் தப்பி ஓடி மேற்கண்ட கூடாரத்திறகுள் நுழைகிறார்
அதே தவஞானி அதே ஜப மாலை உச்சாடனமாக உதடுகள் முணுமுணுக்கிறது
"பெரியவரே - நான் ஒரு வியாபாரி இந்த காட்டில் கொள்ளையர்கள் எங்கள் வியாபாரி கூட்டத்தினரை சூழ்ந்து கொண்டனர் அவர்களுக்குத் தெரியாமல் தப்பி வந்திருக்கி றேன் என் பெரும் பொருளை தாங்கள்தான் அவர்களிடமிருந்து காப்பாற்றி தரணும். "
"அதே அந்த மூலையில் போட்டுப் போ" என்ற சப்தம்
"சரி இந்த தவஞானி பார்த்துக் கொள்வார்"
கூடாரத்தை விட்டு வெளியேறியதும் , அதே கொள்ளையர் கூட்டம் கூடாரத்தை நோக்கி வந்ததும் பதறி அடித்து கூடாரத்தின் பின் பக்கம் வியாபாரி மறைந்து கொள்ள கொள்ளையர்கள் தாங்கள் கொள்ளையடித்த பொருட்களை அதே தவஞானியின் முன்னே குவிக்கிறார்கள்
அவர் தரம் பார்த்து பிரிக்கிறார் இதைக் கண்ட வியாபாரி ,அட டா கொள்ளையர் கூட்டத்திலிருந்து தப்பி அதன் தலைவனிடம் அல்லவா மாட்டிக் கொண்டோம் பொருள் போனால் போகுது உயிர் பிழைத்தால் போதும் என்று தப்பியோட நினைக்கையில் - ...
"வியாபாரியே உள்ளே வா "என்றதும் நெஞ்சம் படப் படக்க வியாபாரி உள்ளே செல்ல "அதோ இருக்கிற உன் பொருளை சரி பார்த்து விட்டு கொண்டு செல் , இனி இந்தக் காட்டில் எங்களைத் தவிர வேறு எந்த கொள்ளை கூட்டமும் இல்லை தாங்கள் தாரா மாக பயமில்லாமல் போகலாம் " என்றார் கொள்ளைக் கூட்டத்தின் தலைவரான அந்த வேடம் தறித்த தவஞானி
இந்த தவ ஞானி வேடம் தறித்தவ இவர் ஒரு நாள் , தன் காதலியைப் பார்ப்பதற்காக மதிலின் மீது ஏறிய பொழுது அவ்வழியே சென்ற வியாபாரி கூட்டத்தில் உள்ள காரி ஒருவர் குர்ஆனை எப்போதுமே சப்தமாக ஓதிக் கொண்டு பயணம் செய்பவர்.
பொய் தவ வேடம் அணிந்த கொள்ளையர் தலைவரின் காதில் காரி
அவர் ஓதிய குர்ஆன் வசனமான
"நம்பிக்கை கொண்டவர்களின் உள்ளங்கள் அல்லாஹ்வை நினைத்தும், அவன் இறக்கி வைத்த சத்திய (வசன)ங்களைக் கவனித்தும் பயப்படக் கூடிய நேரம் (இன்னும்) வரவில்லையா ? " குர்ஆன( 57 : 16 )
என்றதும் கொள்ளையர் தலைவரின் உச்சியைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கியது .
"யா அல்லாஹ் அந்த நேரம் இதோ இப்போதே வந்துவிட்டது" என்று அலறினார்
அந்த நிமிடமே மிகப் பெரிய உண்மையான சூஃபி ஞானி இந்த உலகத்திற்குக் கிடைத்தார் அவர் பெயர்தான் " புலைல் இப்னு இயால் (ரஹ்) அவர்கள்
சூஃபியாக்கள் 14

அடர்ந்த காடு ,நடுவில் சின்ன குடில் ,அதில் ஓர் இளைஞர் சதா இறைவனின் படைப்புகளிலிருந்து அவனை விளங்க முற்படும் தவத்தில் கரைந்து கொண்டிருந்தார்
ஓர் அசாரீ ... "நபி (ஸல்) அவர்களின் வழிமுறையைப் பின்பற்றி இல்லறத்தை தொடர வேண்டாமா ?"
உடனே அந்த இளைஞர் காடு விட்டு நாட்டின் உள்ளே நுழைகிறார்
எதிரே ஒரு பல்லக்கு அதன் திரைச் சீலை விலக, அதிலிருந்த அரசிளங்குமரியை நம்ம இளைஞர் கண்ணில் பட அந்த அழகில் தன்னை மறந்து பல்லக்கு பின் செல்ல அது அரண்மனைக்குள் செல்கிறது

வாயிற் காவலன் இவரைத் தடுத்து நிறுத்த இளைஞர் எத்தனிக்க ,அரசருக்கு விஷயம் தெரிய ,அரண்மனைக்குள்ளே பயங்கர தாக்குததால் சுய நினைவை இழக்கிறார் இளைஞர், விழித்ததும் மறுபடி அரண்மனை நோக்கி புறப்பட பின் தாக்கப்பட இப்படியே தொடர்கிறது

தான் பார்த்த அந்த ராஜ குமரியை நான் மணந்தாக வேண்டும் என்று இறைவனிடம் மன்றாட அவளைப் பார்த்த இடத்திலே அமர்ந்து இறைவனோடு தர்க்கம் செய்ய...

கொஞ்ச நேரத்தில் அரண்மனை காவலர்கள் ஒரு பிணத்தை புதைப்பதற்கு எடுத்துச் செல்ல , விசாரித்ததில் அரசிளங் குமரி சற்று முன் இறந்து போனாள் "

அவளை அடக்கம் செய்த பின் அரண்மனை காவலர்களிடம் அவள் மரணம் பற்றி விசாரிக்கிறார் நம்ம இளைஞர், "ராஜகுமரியை ஓர் இளைஞன் நேசித்ததையும் மன்னர் கண்டிக்கும் போது அந்த இளைஞர் இறந்து போனதாக இளவரசி கேள்விப்பட்டதும் ,தன் அழகால் ஓர் உயிர் பறிபோனது குறித்து அதிர்ச்சியடைந்து மரணித்தாள் " என்பதாக கூறுகிறான் காவலாளி

உடனே இருட்டும் வேளையில் அந்த கப்ரை தோண்டி அவளது உடலை வெளியே எடுத்து விட்டு கபரை முன்போல் அமைத்து விட்டு அவளது உடலோடு காட்டிலுள்ள தன் குடிலில் உடலை சாத்தி விட்டு அதன் முன் ஒரு விளக்கை எரியவிடுகிறார்

இருட்டில் காட்டுவழியில்பயணிப்பவர்களுக்கு குடிதண்ணீர் தேவை ஏற்பட விளக்கு எறிந்த குடிலுக்குள் வருகிறார்கள்

அந்த இளைஞரோ அரண்மனைக் காவலாளிகள் தன்னைத் தேடி வந்து விட்டதாக எண்ணி குடியலை விட்டு வெளியே வந்து அதன் இடுக்கு வழியே பார்க்கிறார்

வந்த பயணிகளில் ஒருவர் மருத்துவர் பெண்ணின் கை நாடிப் பார்த்ததும்

"இந்தப் பெண் இறக்கவில்லை அதிர்ச்சியில் தான் மயக்கமுற்றிக்கிறார"ு என்று அவளது நெஞ்சை தட்டி பின் பச்சிலை சாற்றை வாயில் ஊற்ற பெண் மயக்கம் தெளிகிறாள்

அந்த இளைஞர் குடிலுகள் வந்து அத்தனை விபரம் சொல்ல அரசிளங் குமரி அப்போதுதான் அந்த இளைஞரை முதன்முதலாக பார்க்கிறாள் தன்னை விரும்பி தனக்காகவே வாழ்ந்து தனக்காக உயிரை பணயமாக்கி பாடுபட்டதையும் பின் மண்ணோடு மண்ணாக மக்கவிடாமல் தனக்கு உயிர் பிச்சை கொடுத்த அந்த இளைஞரையே வந்த பயணிகள் சாட்சியாக்கி திருமணம் செய்து கொள்கிறாள்

அரண்மனை குடும்பத்தார்களுக்கு தன் மகள் இறந்ததாகவே இருக்கட்டும் என்று தானே அத்தனை பேர் களுக்கும் சொல்லி விடுகிறாள்

காட்டில் வாழ்வு தொடர்கிறது

இல்லற வாழ்க்கையில் முத்து ஒன்று அவளுக்குள் விளைய ஆரம்பிக்கிறது

ஹஜ்ஜுப்பயணம் மேற்கொண்டு கஃபா வந்து சேர அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்கிறது நபி இப்ராஹீம் (அலை) ஞாபகமாக குழந்தைக்கு " இப்ராஹீம் " பெயர் சூட்டப்படுகிறது

மறுபடியும் இல்வாழ்க்கை காட்டிலே தொடர்ந்தாலும் தன் அன்பு மகனுக்கு குர்ஆன் போதிக்க நாட்டினுள்ள மதரஸாவில் காலையில் விட்டு விட்டு மாலையில் காட்டிற்கு கூட்டிச் செல்ல இப்படியே தொடர்கிறது

மதரஸா உஸ்தாத் ஒரு முறை அரசரை சந்தித்து "உங்கள் மகளுக்கு அரண்மனையில் வைத்து குர்ஆன் போதித்தேன் .அவள் மரணமடைந்தாள். மிகுந்த வருத்தம். இருப்பினும் உங்கள் மகள் சாயலில் அச்சு அசலாக ஒரு ஆண் குழந்தை என்னிடம் குர்ஆன் ஓத வருகிறது அக்குழந்தையைப் பார்க்கும் பொழுதெல்லாம் ராஜகுமாரியின் நினைவு வருகிறது என்றதும்

அரசர் குழநதையை மதரஸாவில் பார்த்ததும் தன் அரண்மனைக்கு தூக்கி வருகிறார்

மாலையில் அந்த இளைஞருக்கு சேதி சொல்லப்படுகிறது அரண்மனைக்கு ஓடோடி வருகிறார் அரசர் இளைஞரைப் பார்த்ததும் "எங்கோ உங்களைப் பார்த்து இருக்கிறேனே" என்று சொல்ல ,

ஆமாம் உங்கள் மகளை மணம் முடிகக வந்த அதே இளைஞன்தான் நான் " என்கிறார்

உடனே அரசர் தன் மகள் மரணத்ததைப் பற்றி சொல்ல ,

இளைஞர் "இல்லை அவள் இறக்கவில்லை , நான் அவளைத் தோண்டி எடுத்து திருமணம் செய்து கொண்டேன் இதோ உங்கள் பேரன்"

என்றதும்

அரசரும் குடும்பத்தாரும் காட்டிற்கு ஓடோடி வருகிறரர்கள் அங்கே மகள் ஏகப்பட்ட கிளிசலும் ஒட்டுமாய் ஆடை உடுத்தி இறைவனை சதா வணங்கி வருபவளாக காண்கிறார்கள்

அரசர் அரண்மனைக்கு அழைக்க, " நான் உங்களைப் பொறுத்தவரை இறந்து போன மகள் என் கணவரைப் பொறுத்தவரை அவரே மீட்டெடுத்த மனைவி இந்த தவ வாழ்வு இந்த காட்டில் நிம்மதியாக இருக்கிறது என்று வர மறுத்து விடுகிறாள்

அரசர் தன் பேரனை அரண்மனைக்கு கொண்டு செல்ல அழுது அழுது அனுமதி கேட்க " நீங்கள் எப்போது வேண்டுமானாலும் அரண்மனையில் உங்கள் பிள்ளையைப் பார்க்கலாம் " என்று உறுதி மொழி கொடுத்து தன் பேரனை அரண்மனைக்கு கொண்டு வந்து ராஜகுமரானாக வளர்க்கிறார்

அந்த தவ இளைஞர் தன் குழந்தைப் பார்க்கும் பொழுதெல்லாம் " யா அல்லாஹ் என் குழந்தை அரண்மனையிலேயே வளர்ந்தாலும் இறுதியில் உன்னுடைய ராஜரிஷியாக ஆக்கி விடுவாயாக " என்று துஆ செய்யாத நாளே இல்லை
அந்த தவ இளைஞர் பெயர்
."அத்ஹம் இப்னு மன்சூர் (ரஹ்) இவர் உமர் (ரலி) அவர்களின் வழித்தோன்றல்
அந்த குழந்தையின் பெயர்
" இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்)
ரஹ்மத் ராஜகுமாரன்

இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) 15

பல்க் நாட்டின் அரியாசனத்தில் அரசோச்சிக் கொண்டிருந்தார்கள் சுல்தான் இப்ராஹீம் இப்னு அத்ஹம் ஒருவர் கையில்பெட்டிபடுக்கையுடன்திடீரென அரண்மனைக்குள் நுழைந்து எதையோ தேட அப்போது சுல்தான் இப்ராஹீம் அவர்கள் : "யார் நீ ? எங்கே வந்தாய் ? இங்கு என்ன தேடுகிறாய் ?"
."இந்தச் சத்திரத்தில் ஒரு நாள் தங்கி விட்டு செல்லாமென்று வந்தேன்."
இந்த அங்குள்ளவர்களையும் சுல்தான் அவர்களையும் கோபப்பட வைத்தது வந்தவர் சொன்ன வார்த்தை .
" என்ன சத்திரமா இது ? இது என் அரண்மனை . தெரியாதா உனக்கு ?"
" என்ன இது சத்திரமில்லையா ? அவ்விதமாயின் இங்கு உமக்கு முன் எவர் வாழ்ந்தார் ? "
" என் பாட்டனார் "
"அவருக்கு முன் ? "
" என் பாட்டானாரின் தந்தை "
"அவருககு முன் ? "
சுல்தான் இப்ராஹீம் சற்று சிந்திக்க ஆரம்பித்தார்
" இப்படி வந்தவரெல்லாம் தங்கிவிட்டு போனால் இது சத்திரமில்லாமல் என்ன இது ?"
சுல்தான் இப்ராஹீம் நிலை குலைந்து போனார்
ஓரிரவு சுல்தான் படுத்து தூங்கிக் கொண்டிருந்தார் உப்பரிக்க மேல் தளத்தில்
ஆள் நடமாடுவதுப் போன்று சத்தம் கேட்க சுல்தான்அதட்டிக் கேட்டார்
"யார் அங்கே ? "
" எல்லாம் உமக்கு அறிமுகமானவர்தான் வேறு யாருமில்லை "
"யாராக இருந்தால் என்ன அர்த்த ராத்தியில் உப்பரிகை மொட்டை மாடியில் என்ன வேலை ? " .
" என் ஒட்டகம் காணாமற் போய்விட்டது அதனை இங்குத் தேடிக் கொண்டுள்ளேன்"
அக்கேட்டு சுல்தான் இப்ராஹீம் அவர்களுக்கு கடும் கோபம்
" காணாமல் போன உன் ஒட்டகம் என் உப்பரிகையின் மேல் முகட்டிலா மேய வந்தது, நீர் இங்கு வந்து தேடுவதற்கு ?"
"மறதியாளரே ! நீர் என்ன பொற் கட்டிலின் மேல் விரிக்கப்பட்ட மலர் மஞ்சத்தின் மீது படுத்துக் கொண்டு இறைவனைத் தேடிக் கொண்டிருக்கும் பொழுது நான் மட்டும் என் காணாமற் போன ஒட்டகையை இங்கு வந்து தேடக்கூடாதா ? "
சுல்தான் இப்ராஹீம் அவர்கள் ஒப்பரிகைப் பார்த்த போது ஒரு ஆள் இறங்கிப் போய் வதைக் கண்டு பின்னால் ஓடி சென்று அவரை எட்டிப் பிடித்து ..... நீங்கள் யார் ? என்றுக் கேட்டார்
" கிள்று என் பெயர் கிள்று " கூறிவிட்டு போய்க் கொண்டிருந்தார்
சுல்தானுக்கு ஒரு வித மயக்கம் வந்தது
இன்னொரு நாள் இரவு சுல்தான் தூக்கம் ஆட்கொள்ள சோர்வுற்று மஞ்சம் வர, ,, மஞ்சத்தை விரித்து, அதன் மீது மலர் தூவி வைத்த பணிப் பெண் அதன் மீது ஒய்யாரமாக தூங்கிக் கொண்டிருந்தாள்
அன்றைக்கு அவளுக்கு ஓர் ஆசை எத்தனையோ வருடம் மலர் தூவும் இந்த மஞ்சத்தில் இன்று சொற்ப நேரம் படுத்தால் என்ன எண்ணி படுத்த போது மஞ்சத்தின் சுகம் அவளை மயக்கி விட்டது.
சுல்தான் இப்ராஹிம்க்கு அடங்காச்சினம் சவுக்கையால அவளை அடிக்க ஆரம்பித்தார் அவள் முதலில் அலறி அடித்து அழ, பின் சிரிக்க ஆரம்பித்தாள் காரணம் கேட்க
"சிறிது நேரம் இந்த மலர் மஞ்சத்தில் படுத்தறக்கு இத்தனை சவுக்கு அடி என்றால் எத்தனையோ காலம் படுத்தற்கு இறைவன் தாங்களுக்கு இறைவன் எத்தனை பெரிய தண்டனை வழங்குவான் ?
என்றெண்ணினேன்.
இந்த வாாத்தைகள் சுல்தான் மனதில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது
இந்த மாற்றம் அரச பதவியை துறந்து சாதாரண வழிப்போக்கனாய் காட்டிற்குள்ளே போகச் செய்தது
அவர் இப்போது " இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ் ) பல்க் நாட்டின் சுல்தானாக இல்லை

இவருடைய தகப்பனார் அத்ஹம் இப்னு மன்சூருடைய துஆ கபூலானது
ஆம் இப்போது சுல்தான் இப்ராஹீம் ராஜரிஷி
இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்)
RAHMATH RAJAKUMARAN இப்ராஹீம் இப்னு அத்ஹம் ஒரு தோட்டக் காவலாளியாக பணியாற்றினார்
ஒரு நாள் தோட்டத்தை பார்வையிட வந்த தோட்டத்தின் எசமான் அவர்களை நோக்கி, "நல்ல இனிப்பான மாதுளையைப் பறித்து கொண்டு வா " என்று கூறினார்
மாதுளம் பழம் பறித்து வர அது புளிப்பாக இருக்கிறது மற்றொன்று பறித்து வா
இப்படியாக 10 பழத்திற்கு மேல் பறித்து கொடுத்தும் ஒன்று கூட இனிப்பாக இல்லை
நீ இந்த தோட்டத்தில் எத்தனை வருடங்கள் காவல்காரனாக இருக்கிறாய் ? எது புளிமாதுளை ? எது இனிப்பு மாதுளை என்பது கூட உனக்குத் தெரியவில்லையே ? என்று எரிச்சலுடன் கூற
அதற்கு அமைதியாக " தாங்கள் என்னை நியமித்திருப்பது தோட்டத்தைக் காவற் காக்கவே யன்றி இங்குப் பழுக்கும் பழங்களை ஒவ்வொன்றாகப் பறித்துத் தின்று முசி பார்க்கவல்லவே, " என்று கூறினார்
அது கேட்ட தோட்ட எசமான்
"நீ என்ன பெரிய இப்ராஹீம் இப்னு அத்ஹம் மாதிரி பேசுற ?
அதற்கு எந்த பதிலும் கூறவில்லை... இதற்கு மேல் இங்கிருந்தால் தன்னை கண்டு கொள்வார் என்றெண்ணி , தாம் வேலையிலிருந்து விலகிக் கொள்வதாகக் கூறியதும்
"இல்லை நீரே தொடர்ந்து இங்கு வேலை பாரும் சம்பளம் உயர்வாக தருகிறேன"ு என்றார்
"எதற்காக சம்பள உயர்வு ?
"உம்முடைய நேர்மைக்காக "
" உழைப்புக்கு ஊதியம் பெறுவதே நியாயம் .நேர்மைக்காக ஊதியம் பெறுவது நியாயமன்று . நேர்மையை ஒருபோதும் விலை பேசாதீர்"
மறுகணமே அந்த வேலையை விட்டுப் பிரிந்தார்கள்
பின்புதான் தெரிந்து தோட்ட எசமானுக்கு தம்மிடம் வேலை பார்த்தது இப்ராஹீம் இப்னு அத்ஹம் என்று

சூஃபியாக்கள் 16



ஸர்மத் ஷஹீது (ரஹ்)
இவர் ஈரானில் யூதராக பிறந்தார்கள் பின் கிறிஸ்தவர்களாக மாறினார்கள் இறை சிந்தனையில் ஆழ்ந்தவர்களாக தாரா ஷிகோவின் நட்பு கிடைத்தது பின் இஸ்லாத்தை தழுவினார்கள்
தொடக்கத்தில் யூதர்களாகவும் கிறிஸ்தவர்களாகவும் இருந்ததால் அந்த நண்பர்களையெல்லாம் சந்தித்து இஸ்லாத்தின் உன்னதம் பற்றி பேச ஆரம்பித்தார்கள் அவர்களிடம் திருக்கலிமா தான் மூல மந்திரம் என்பதையும் அதன் உள்ளார்ந்த பொருள் ரகசியத்தையும் யூத கிற்ஸ்தவ நண்பர்களுக்கு எடுத்துச் சொன்னதை அவர்களில் சிலர் ஸர்மத் (ரஹ்) சொல்லாததையும் சொன்னதாக இட்டுக்கட்டி முஸ்லீம்களிடம் பரப்பினர்கள்
இதற்கிடையில் தாரா ஷிகோவை கொலை செய்தனர் இதனால் இவர்கள் தன்னிலை மறந்து சிறிய ஓட்டுக் கோமனத்துடன் சுற்றித் திரிய ஆரம்பித்தார்கள் சில நேரங்களில் அதுவும் இல்லாமல் இருந்தார்கள் எவரும் துணிக் கொடுத்தால் அதனை சற்று நேரம் அணிந்து விட்டு தூக்கி எறிந்து விடுவார்கள் சில நேரங்களில் திருக்கலிமாவின் சீரிய ரகசியத்தை வெளிப்படுத்தி பகிரங்கமாக பேச ஆரம்பித்தார்கள்
இவர்களுக்கு கலிமாவே தெரியாது என்று இவர்களின் விரோதிகள் செய்த புகார் மீது இவரைக் திருக்கலிமாவைச் சொல்லுமாறு மார்க்க விற்பன்னர்கள் மற்றும் ஆலீம்கள் வற்புறுத்த அவர்கள் " லாயிலாஹ " என்று கூறி இதற்குரிய விஷயத்தை மட்டும்தான் உங்களிடம் சொல்லி வந்திருக்கிறேன இதற்கே இத்தனை வருடங்கள் ஆகி விட்டது மேற்கொண்டு நான் என்ன சொல்ல வேண்டியது இருக்கிறது என்று அவர்கள் வாய் முணுமுணுத்தார்கள்
மார்க்க விற்பன்னர் இவர்களிடம் "இதற்கு மேற்கொண்டு நீங்கள் கலிமா சொல்ல முடியாதா ?" என்று மிரட்டினர்
ஆனால் " இல்லல்லாஹ்" கூறவில்லை ஏனென்றால் இவர்கள் " வாயிலாஹ " என்ற ஆரம்ப பாடத்தில்தான் தான் இருப்பதாக கூறுகிறார்கள் என்பதை கூடியிருந்த சபையோர் முன்னிலையில் ஆலீம்கள் கூறினார்கள்

அதற்கு ஸர்மத் (ரஹ்) அவர்களும் ஒத்துக் கொண்டார்கள் எனவே இவர்களை கொலை செய்ய "பத்வா " கொடுத்தார்கள் அப்போது ஸர்மத் (ரஹ்) அவர்களின் முகத்தில்
புன்முறுவல் பூத்தது கூடவே மணமும் கமிழ்ந்தது
எனவே இவர்களை கண்டம் துண்டமாக வெட்ட வேண்டும் என்று வெட்டிய போது "இல்லல்லாஹ்" மூன்று முறை மொழிந்து விட்டு திருக் கலிமா "லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மரஸூல்லாஹ் " என்று கூறியவாறு தனது வலது கையின் கலிமா விரலை உயர்த்தி சொன்னபோது , அந்த வலக்கரத்தை துண்டாக்கினார்கள்
ஸர்மத் (ரஹ்) அவர்களின் அடக்கஸ்தலம் டில்லி ஜாமிஆ மஸ்ஜிதின் வாசலில் உள்ளது

சூஃபியாக்கள் 17



ஷைகு அலீ அரபி முர்ஸிய்யாயில் 50 வயதில் குழந்தை இல்லையே என்ற கவலையில் இருந்தார்கள்
மஜ்தூப் நிலையில் உள்ள ஒரு சூஃபி "முர்ஸிய்யாவில் உட்கார்ந்து கொண்டு குழந்தை தேட வேண்டாம் பக்தாத்தில் கௌதுல் ஆலம் முஹ்யீத்தீன் அப்துல் காதரிடம் குழந்தையை வாங்கிக் கொள்ளவும், " என்ற கூற பாக்தாத் பயணம் அவர்களை சந்தித்து குழந்தை பாக்கியம் கேட்க, அவர்கள் " உம் விதிப் பலகையில் மகப் பேறு எழுதப்படவில்லையே " என்று கூற
" இதை கேட்கவா இத்தனை தூரம் பயணம் செய்து வந்தேன். என்று வருத்தப்பட ,
"கவலைப்படாதீர். என்னுடைய விதியில் எனக்கு ஒரு குழந்தை என் முகுகந்தண்டில் இன்னும் பாக்கியுள்ளது அதனை நாம் உமக் குத் தருகிறோம் நீர் என் பின்னே வந்து என் முதுகோடு உம் முதுகை வைத்து உரசுவீராக " என்று கூறினார்
அவ்விதம் செய்து, "பிறக்கும் குழந்தைக்கு முஹம்மது முஹ்யித்தீன் எனப் பெயரிடுவீராக! அவர் தம் காலத்தில் குத்புஸ் ஸமானாக விளங்குவார்
ஹிஜ்ரி 560 ரமலான் பிறை 27 திங்கள் இரவு கி பி 1165 ஆகஸ்ட் 7 ல் பிறந்தார்கள் முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள்.
இவர்கள் கணக்கற்ற கராமத் களை செதுள்ளார்கள் அதை குறிப்பிட இத்தளம் போதாது.
முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் எழுதிய 'புத்தூஹாத்துல் மக்கிய்யா" வில் தாம் ஆன்மீக முறையில் நபி இப்ராஹீம் (அலை) அவர்களைச் சந்தித்து
திருக்குர்ஆனை அவர்களிடம் ஓதிக் காட்டியதையும், நபி மூஸா (அலை) அவர்களைச் சாதித்து அவர்களின் கரங்களில் பாவ மன்னிப்பு செய்ததையும், நபி (ஸல்) அவர்களை சந்தித்ததையும் குறிப்பிட்டுள்ளார்கள்
560 அத்தியாயங்கள் அடங்கிய இந்நூல் "இது நான் சுயமாக சிந்தித்து எழுதியதில்லை தெய்வீக உதிப்பின் மூலமே எழுதியுள்ளேன் எழுதப்பட்டுள்ள அனைத்தையும், இறைவன், உதிப்பின் அமரர்கள் மூலம் எனக்குத் தெரியப்படுத்தி அதன் மூலம் எழுதியுள்ளதாகவும் குறிப்பிடுகிறாார்கள்
"புத்தூஹாத்துல் மக்கிய்யா" வை மட்டும் எழுதாதிருந்திருப்பின் , நெருப்பில் இட்டுக் கொளுத்தப்பட்டிருப்பேன் என்றும் அக்கிதா பில் குறிப்பிடுகிறார்கள்
கிபி 1229 ல் "புஸூஸூல் ஹிகம் " என்ற நூலை எழுதி முடித்தார்கள் . இந்நூல் எழுதுவதற்கு நபி (ஸல் ) அவர்கள் தம் கையிலே ஒரு நூலை வைத்துக் கொண்டு , " நான் கூறுவதை எழுதுக : அதனை உலகிற்கு வெளிப்படுத்துக ' அதனால் மக்கள் பயனடையட்டும் என்று கூறி அதிலுள்ள செய்திகளைத் தமக்குக் கனவில் எடுத்துரைத்தாக அதன் முகவுரையில் குறிப்பிடுகிறார்கள்
இவற்றைத் தவிர "புத்தூஹாத்துல் மதனிய்யா ,கீமியா அல் ஸஆதத் முதலான 300க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார்கள்
"ஹில்யத்துல் அப்தால் " என்ற நூலை ஒரு மணி நேரத்தில் அவர்கள் எழுதியுள்ளார்கள்
இவர்களுடைய ஆன்மீக மாணவர் ஸத்ருதீன் அவர்கள் இவர்களைப் பற்றி குறிப்பிடும் போது , " எங்கள் ஷைகு, நபிமார்களுடையவும், முற்காலத்து இறை நேசச் செல்வர்களுடைய ஆன்மாக்களுடன் தொடர்பு கொண்டிருந்தனர் இதனை மூன்று வழியில் பெற்றனர்
1 ) இவ்வுலகிற்கு அவர்களின் ஆன்மாக்களை வரவழைத்து, அவர்கள் இவ்வுலகில் வாழ்ந்த உருவில் அவர்களைக் காண்பர்
2) அவர்களைக் கனவில் தரிசிப்பார்கள்
3) தாங்கள், தங்களின் சட உடலை நீத்து அந்த ஆத்மாக்களை சந்திபார்கள்
திருக்குர்ஆனுக்கு விளக்கவுரை 15 பாகங்களுக்கு எழுதிய முடிக்கவும் அவர்களுக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டது
இதனால் தன் மாணவரை வைத்து தான் சொல்ல சொல்ல மாணவர் எழுதிக் கொண்டு இருந்தார்

சூரா கஃபு - வில் 65 வசனத்திற்கு விளக்கம் சொல்லிக் கொண்டு இருக்கும் போது
" இவ்விருவரும் அங்கு வந்த போது அவ்விடத்தில் நம் அடியாரில் ஒருவரைக் கண்டார்கள் அவர் மீது நாம் அருள் புரிந்து நமக்குச் சொந்தமானதொரு ஞானத்தையும் நாம் அவருக்குக் கற்பித்திருந்தோம் "
திருக்குர்ஆன் 18 : 65
இவ் வசனத்திற்கு விளக்கம் சொல்லிக் கொண்டு இருக்கும் போதே உயிர் பிரிந்தது
கி.பி 1240 நவம்பர் 16 வெள்ளிக்கிழமை
ஹிஜ்ரி 638 ரபீஉல் ஆகிர் பிறை 28
சூஃபியாக்கள் 18


உஸ்மான் ஹாரூனி (ரஹ்)
இவர்கள் குராஸான் நாட்டில் ஹாரூன் ஊரில் ஹிஜ்ரி 530-ல் பிறந்தார்கள்
இவர்கள் பகல் ஒரு குர்ஆனையும் இரவில் ஒரு குர்ஆனையும் ஓதி முடிப்பார்கள்
வயது நிரம்ப ஒரு போதும் உணவு உண்ட தில்லை
இவர்களின் ஆன்மீக சற்குரு ஹாஜி ஷரீஃப் ஸிந்தனி ( ரஹ்) ஆவார்கள்
உஸ்மான் ஹாரூனி (ரஹ்) தொடர்ந்து 70 ஆண்டுகளாக நோன்பு நோற்றார்கள் ஐந்து நாட்கள் ஆன போதிலும் நோன்பு திறக்காது இருப்பார்கள்
பக்தாத் அருகில் " ரே "என்ற ஊரில் தீ வணங்குபவர்கள் பெரிய நெருப்பு குண்டம் வளர்த்து தீயை வணங்கிக் கொண்டிருந்தனர்
அவர்களிடம் சென்று
' தீயை ஏன் வணங்குகின்றீர்கள் ? என்று கேட்க ,
"அது எங்களுக்கு மோட்ச சாம்ராஜ்ஜியத்தைத் தரும் " என்றனர்
மோட்ச சாம்ராஜ்ஜியத்தை பெற்றுத் தரக்கூடியது உங்களது கையை சுட்டெரிக்குமா?
"அது எப்படி சுட்டெரிக்காமல் இருக்கும் நெருப்பின் இயல்பே சுட்டெரிப்பது தானே"
உஸ்மான் ஹாரூனி யக் ஷா என்னுபவரின் கையிலுள்ள குழந்தையைப் பிடிங்கிக் கொண்டு நெருப்பினுள் புகுந்தார்கள் இதனைக் கண்ணுற்ற மக்கள் பதறியடித்து கூப்பாடு போட்டார்கள்
நான்கு மணி நேரத்திற்குப் பிறகு குழந்தையுடன் வெளியில் வந்தார்கள்
குழந்தையை வாரி முத்தமிட்டு "என்ன நடந்தது என்று கேட்க "அப்பெரியாருடன் சுவனப் பூங்காவில் சுற்றித் திரிந்தேன் என்றது.
அத்தனை பேரும் இஸ்லாத்தைத் தழுவினர்
"எவனிடத்தில் மூன்று குணங்கள் இருக்கிறதோ அவனை அல்லாஹ் நேசிக்கின்றான்.
1 ) கடல் போன்ற கொடை
2) கதிரவன் போன்ற கருணை
3 ) பூமியைப் போன்ற பணிவு
இயற்கை வஸ்துக்களில் பொதிந்து உள்ள இறைவனின் குணங்களை சொல்லி சொல்லிக் காட்டுவார்கள்
உஸ்மான் ஹாரூனி (ரஹ்) அவர்களுக்கு ஏராளமான ஆன்மீக மாணவர்கள் இருந்தாலும் 4 பேருக்கு மட்டுமே "கிலாபத் "
கொடுத்தார்கள்
,
1) காஜா முயீனுத்தீன் சிஷ்தி (ரஹ்)
2) நஜ்மூத்தீன் ஸக்ரா (ரஹ்)
3) ஷைகு ஸஃ தி லங்கோச்சி (ரஹ்)

4) ஷைகு முஹம்மது துர்க் (ரஹ்)
இதில் காஜா முயீனுத்தீன் (ரஹ்) அவர்கள் மட்டும் 20 வருட காலம் இவர்களுடன் இருந்தார்கள்
பாக்தாத்தில் ஒரு முறை தனியாக தியானத்தில் ஈடுபட்டிருந்தார்கள்
விடிந்ததும் காஜா முயீனத்தின் (ரஹ்) அவர்களை அழைத்து "இதோ எழுதிக் கொள்" என்று மள மள என்று சொல்ல அது 18 அத்தியாயங்கள் வந்தது அதுவே
"அனீசு அர்வாஹ் " என்ற மெஞ்ஞான ரகசியங்கள் பொதிந்த புனித நாலாகும்
இறை இல்லமான கஃபாவை விட்டு பிரியாமல் அங்கேயே இருந்து ஹிஜ்ரி 607 ஆம் ஆண்டு ஷவ்வால் பிறை 6ல் இயற்கை எய்தினார்கள் அவர்களை "ஜன்னத்துல் முஅல்லா" வில் நல்லடக்கம் செய்யப்பட்டது

சூஃபியாக்கள் 19 11-05-2017



ஒரு பயணக் குழு "ரே " நாட்டின் பாலைவனத்தை கடந்து செல்கிறது அக்குழுவில் இளவல் பார்ப்பதற்கு மிக அழகு இல்லை இல்லை பேரழகு வாய்ந்த இளைஞர் பெயர் "யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்) " இவரது பேரழகுப் பற்றிஅந்நாட்டு இளவரசிக்கு சேதி கிடைக்க சந்திக்க ஓடோடி வருகிறாள்
இளவரசியை கண்ணுற்ற இளைஞர் விபரம் கேட்கிறார் தங்களை விரும்புவதாகவும் திருமணம் செய்து கொள்ள வந்ததாகவும் கூற , அடுத்த கணம் அவளிட மிருந்து தப்பி இறைவனே .. என்னைக் காப்பாற்று என்று அலறிக் கொண்டு ஓடுகிறார்
அன்று இரவு கனவில் அரசரென ஒருவர் வீற்றிருக்க அவரைச் சுற்றி வானவர்கள் இருக்க . வானவர்களிடம் விபரம் கேட்க வந்திருப்பது நபி யூசுப் (அலை) அவர்கள் யூசுப் இப்னு ஹுஸைனை காண வந்திருப்பதாக சொல்லப்படுகிறது
நபி யூசுப் (அலை) அவர்கள் இவர்களைக் கட்டி தழுவி "நீங்கள் இளவரசியிடமிருந்து தப்பியதை .நான் ஜூலைகாவிடம் இருந்து தப்பியதைப் போன்று இருந்தது . இதனால் இறைவன் பெருமைபட்டு உங்களை இறை நேசராக தேர்ந்தெடுத்துள்ளான் நீர் இக்காலத்தின் குத்பான "துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவரிடம் சென்று இஸ்முல் அஃலத்தை தெரிந்து கொள்ளுங்கள் " என்று கனவு வந்தது
எகிப்திற்கு வந்து கன்னூன் மிஸ்ரி(ரஹ்) அவர்களைச் சந்தித்து விபரம் சொல்ல அவர்கள் ஒரு பெட்டியைக் கொடுத்து இன்ன இடத்தில் பெரியவர் ஒருவரிடம் கொடுக்கச் சொல்ல , கொண்டு செல்லும் வழியில் , பெட்டிக்குள் ஏதோ ஒன்று ஆடுவது போன்றும் நடமாடுவது போன்றும் இருந்தது
அந்தப் பெரியாரை சந்திக்கும் இடமும் பக்கத்தில் வந்தது பெட்டியை திறக்கவா வேண்டாமா என்ற மனப் பேராட்டத்தின் இறுதியில் பெட்டியை திறந்து விடுகிறார்கள்
பெட்டியில் இருந்து ஒரு சுண்டெலி துள்ளிக் குதித்து தப்பி ஓடியது . "ஆஹா பெரிய தப்பை செய்து விட்டோமோ என்றெண்ணி அந்தப் பெயரியவரிடம் பெட்டியைக் கொடுத்து விபரம் சொல்ல .....
"உம்முடைய மனம் உம்மிடம் கட்டுப்படாமல் இருப்பதால் உம் பொறுமையை சோதிக்கவே துன்னூன் ஒரு சுண்டெலியைத் தந்தார் 'ஒரு சுண்டெலியைப் பத்திரமாகப் பாதுகாக்கத் தெரியாத நீர் எவ்வாறு இஸ்முல் அஃலத்தை பத்திரமாகப் பாதுகாப்பீர் ? "அந்த பெரியார் திருப்பி துன்னூன் (ரஹ்) அவர்களிடம் அனுப்பி வைத்தார்
யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் திரும்ப துன்னூன்(ரஹ்) அவர்களைச் சந்திக்க அவர்கள் 3 உபதேசங்களைச் செய்தார்கள்
1) படித்ததை மறந்து விடு , எழுதி வைத்ததை அழித்து விடு (ஓஸோ தன் " வெற்றுக் கோப்பை " என்கிற தத்துவத்தை இங்கிருந்துதான் கற்றுக் கொண்டாரோ என்னவோ ) இதனால் உம் அகப்பார்வையில் உள்ள திரை அகற்றப்பட்டு விடும்
2) என்னையும் என் பெயரையும் மறந்து விட வேண்டும் என் ஆசான் இவ்வாறு என்னிடம் கூறினார் எனப் பிறரிடம் எடுத்துரைப்பதே ஒரு விதத் தற்புகழ்ச்சியாகும்.

3) நீர் மக்களுக்கு தொண்டு செய்து அவர்களிடமிருந்து ஞானத்தைக் கற்றுக் கொள் . இது இறைப் பொறுத்தைப் பெற்றுத் தரும்
யூசுப் இப்னு ஹுசைன் (ரஹ்) அவர்கள் நெடுங்காலமாக இத்தனையும் செயலாற்றி வெற்றிப் பெற்றார்கள்

ஸூஃபியாக்கள் 20



"வலி " என்னும் பதம்"'வலா" என்ற மூலத்திலிருந்து பிறந்தமையால் அப்பதத்திற்கு சமீபம் , சாட்சியம் என்று பொருள்படும்
" மனிதன் எனது இரகசியம். நான் அவனது இரகசியம் "
ஸூஃபியாக்களுக்கு சில அபிர்தமான சக்திகள் எவ்வாறு கிடைக்கப்பெற்றனர் ?
மனிதனை தன்னுடைய பிரதிநிதியாக்கி உலகிலுள்ள எல்லாக் காரியங்களையும் அவன் வசம் ஒப்படைத்து அவனைத் தனக்கும் தன்னுடைய சிருஷ்டிக்களுக்கும் இடையே நடுமையாய் நிறுத்தி, சிருஷ்டிகள் இறைவனுடைய தஜல்லியைக் கொண்டு கரிந்து போகாமல் காப்பாற்றக் கூடிய திரையாக ஆக்கி இருப்பதால், மானிடன் இறைவனுடைய உலூஹிய்யத்துடைய தஜல்லியில் வெளியாகி விட்டான்.
உலூஹிய்யதுடைய தஜல்லியில் வெளியான மனிதன் இறைவனிடத்தில் சொந்தமான சில பதவிகளை மனிதன் கேட்காமலே அல்லாஹ் கொடுத்து விடுகிறான் அவனும் பெறுக் கொள்கிறான
சில ஸூஃபியாக்களுக்கு தனகக " வலி " தன்மை இருப்பது தெரியாமல் கூட இருந்திருக்கிறது
நாம் பார்த்த வங்காளத்தைச் சேர்ந்தஆயிஷா காத்தூன் அப்படித்தான் இருந்திருக்கிறார்
(ஸூஃபியாக்கள் 8 பதிவைப் பார்க்கவும் )
இப்பதவியை பெற்ற மனிதன் உலகத்தார் அனைவருக்கும் " ரஹ்மத் "தாகி விடுவான் இப்படிபட்ட மனிதனே "அவுலிய்யா "அல்லது "ஸூஃபியாகி" என்றும் இறைவனது " கலீபா " என்றுமாகி விடுகிறான்
" என்னுடைய உம்மத்துகளில் நாற்பது நபர்கள் நபி இப்ராஹீம் (அலை) அவர்களுடைய இருதயத்தை உடையவர்களாய் என்றும் இருந்தே வருவர் இறைவன் இந்த நபர்களைக் கொண்டே பூலோகத்தில் வாழ்பவர்களுக்கு பிணிகளைப் போக்குவான் அவர்களுக்காக மழையைப் பொழியச் செய்வான் அவர்களைக் கொண்டுதான் பூலோகத்தில் உள்ளவர்களுக்கு உதவிகள் புரியப்படும் " என்பதாய் நபி (ஸல்) கூறியுள்ளதாக ஹதீஸ் தபறானீயில் காணக் கிடைக்கிறது
" (நபியே) உங்கள் இறைவன் நிழலை எவ்வாறு நீட்டுகிறான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா.? அவன் நாடியிருந்தால் அதனை ஒரே நிலையில் வைத்திருக்க முடியும் சூரியனை நிழலுக்கு வழிகாட்டியாக நாம்தான். ஆக்கினோம்
திருக்குர்ஆன் 25 : 45
" 'இவ்வளவு பெரிய ) பூமியை நாம் உங்களுக்கு விரிப்பாக அமைக்கவில்லையா?
அதில் மலைகளை முளைகளாக ஆக்க வில்லையா ?
திருக்குர்ஆன் 78 : 6, 7
இவை அவுலியாக்களைப் பற்றி குறிப்பே ஆகும் இத்தகைய மெய்யடியார்களையே இறைவன் "நிழல்" (ளில்லு) என்றும் .மலை (ஜிபால் ) என்றும் வருணித்துள்ளான்
ஆதாரம் :
(ரூஹூல் பயான் 4 வது பாகம் 199 வது பக்கத்திலும், 10வது பாகம் 293 வது பக்கத்திலும் பார்க்க)

"அவுலியாக்களுடைய முந்தானையைப் பற்றிப் பிடிப்பதில் பயம் வேண்டாம் ஏனெனில் நபி நூஹ் (அலை) அவர்களோடிருக்கையில் வெள்ளத்தைப் பற்றிய பயம் எதற்கு ? "
ஆகவே அல்லாஹ் அன்பியாக்களைக் கொண்டு அன்று நடத்தியவற்றை இன்று அவுலியா க்களைக் கொண்டு நடத்துகின்றான் அவர்களை முன்னிட்டே உலகமும் நிலை பெற்றிருக்கின்றது
ஆகையால் "அவுலியாக்களை அறிவது - அல்லாஹ்வை அறிவதை விட மிகக் கடினமானது
ரூஹூல் பயான் பாகம் 9 Uக்கம் 531
ரூஹூல் பயான் பாகம் 10 பக்கம் 9
"நிச்சயமாக அல்லாஹ் உடைய அவுலியாக்களுக்கு பயமென்பதும் இல்லை கவலையென்பதுமில்லை"
திருக்குர்ஆன் 10 : 62

ஐம்பெரும் சக்திகள் 17-05-2017
நீர் ,நிலம் , நெருப்பு, காற்று, ஆகாயம் - ஆகியவை கொண்ட பஞ்ச பூதங்களின் தொடர் இன்ஷா அல்லாஹ் ஆரம்பிக்க உள்ளேன்
விஞ்ஞானமும் மெஞ்ஞானமும் கலந்த கலவையாக குர்ஆன் போதிக்கும் அறிவியலை பொது ஜனங்களும் புரிந்து கொள்ளும்படியான ஆய்வுகளை பதிவுகளாக பதிக்க உள்ளேன்
நண்பர்கள் நீங்களும் அதிகப்படியான அவைகளைப் பற்றிய பின்னூட்டமிட்டு இன்ஷா அல்லாஹ் நீங்களும் நானும் இதனைப் பற்றி நிறைய சேதிகளை மக்களுக்கு தெரிவிப்போம்

ஐம்பெரும் சக்திகள் - ( நீர் 1 )

("அவர்கள் வசித்திருக்கும் ) பூமியை அதன் ஓரங்களிலிருந்து நாம் ( படிப்படியாகக் ) குறைத்து வருவதை அவர்கள் காணவில்லையா ?
திருக்குர்ஆன் (13:41)
மேலே உள்ள குர்ஆன் வசனம்தான் இப்போதைய உலகத்தையே பயமுறுத்திக் கொண்டிருக்கிறது .
தமிழ்நாட்டில் காவிரி பூம்பட்டினத்தையும், மகாபலிபுரத்தின் சில கோயில்கள் கடல் உள்வாங்கிக் கொண்டது
இந்தியாவும் இலங்கையும் ஒரே நிலப்பரப்பாக இருந்தது இப்போது இலங்கை தனித்தீவு அங்கே சிறிசேனை இங்கே மோடி
பம்பாயில் விஸ்தீரணமான காடுகள் கடலில் முழ்கி விட்டதாகக் கருதப்படுகிறது
ஆசியாவும், அமெரிக்காவும் ஒரே நிலப்பரப்பாக ஒரு காலத்தில் இருந்தது இப்போது பேரிஸ் ஜலசந்தி இப்போது அதை துண்டித்து இரு கண்டங்களாக மாற்றிவிட்டது
இந்த இரண்டு கண்டங்களுக்கான இடைவெளி இருப்பது 30 மைல்களுக்கும் குறைவு கடலில் ஏற்படக்கூடிய ஒரு சிறு மாறுதல் நாளையே கூட இந்த இரண்டு கண்டங்களையும் ஒரே நிலப்பரப்பாக ஆகிவிடக் கூடும்.
அந்த நிலப்பரப்பு எந்த கண்டத்திற்கு சொந்தம் என்ற பங்காளி சண்டையோ வாய்கால் தகராறோ வரலாம்
சுபத்திரா , ஜாவா , போர்னியோ ஆகிய தீவுகள் ஒரு காலத்தில் ஒரே நிலப்பரப்பாக இருந்தது
ஆங்கில கால்வாயும், வட கடலும் பெருங்காடாக இருந்தன . இப்பொழுது ஜெர்மனியில் ஓடிக்கொண்டிருக்கும் ரைன் நதி அந்தக் காட்டின் வழியாக ஓடி காட்டை செழுப்பாக்கி வைத்திருந்தது
இப்போது அந்தப் பகுதி முற்றிலுமாக கடலில் அமிழ்ந்து விட்டது
"கருங்கடல் "என்று அழைக்கப்படும் கடல் பகுதி துருக்கிக்கும் , ரஷ்யாவுக்கு இடையே பெரிய ஏரியாக இருந்தது .அந்த ஏரி நீர் நல்ல குடிநீராகத் திகழ்ந்தது இப்போது அந்த ஏரி கடலில் முழ்கடிக்கப்பட்டு விட்டது . (குடிநீர் போச்சே )
இந்த பூமியின் நிலப்பரப்பு 27 % கடல் பரப்பு 73 % குர்ஆனில் "அல் பஹ்ரு " வார்த்தை 33 இடங்களிலும் , நிலப்பரப்பை குறிக்கும் "அல்பர்ரு " என்ற வார்த்தை 12 இடங்களிலும் அல்லாஹ் பயன்படுத்தி உள்ளான் இரண்டின் மொத்தம் (33+12 ) = 45

அதாவது கடலின் சதவீதம் =
33/45 x 100 % = 73.333%
நிலத்தின் சதவீதம் =
12/45 X 100 % = 26,666%
சர்ட்டிலைட் மூலம் கடல் பரப்பையும் நிலப்பரப்பையும் துல்லியமாக கணக்கெடுத் தில் தெரிய வந்தது

**Vaitiyar Malick**

உள்ளே இருக்கும் அற்புதங்கள்....
இந்த பதிவை படிக்கும் முன் செய்ய வேண்டியவை ..
முதலில் நீங்கள் தளர்வு நிலையில் இருக்க வேண்டும் மற்றும் உங்களுக்குள் இருக்கும் கருத்துகளை சிந்தித்து கொண்டு படிக்க வேண்டாம். திறந்த மன நிலையில் படியுங்கள்....
எதை நாம் பிரபஞ்சம் என்று அழைக்கின்றோமோ அது ஒரே மகாசக்தியின் வெளிபாடுதான்.
நம்மை கட்டுபாட்டுக்குள் வைத்திருக்கும் அதே சக்திதான் நம்மை சுற்றி உள்ள அணைத்து உயிரையும் அதன் கட்டுபாட்டுக்குள் வைத்திருகிறது...
உங்கள் உடலில் என்ன நடக்கிறதோ அதே சுழற்சி தான் விலங்குகளுக்கும் தாவரங்களுக்கும் நிகழ்கிறது...
நம்மை இழுத்து செல்லும் அனைத்துமே அந்த மகாசக்தி தான்....
அதுதான் பஞ்ச பூதங்கள் நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம்...
யார் ஒருவர் இந்த பஞ்ச பூதத்தை சரியாக கையாளுகிறாரோ அவர் வாழ்வின் கற்பனை செய்து பார்க்க முடியாத அளவுக்கு வாழ்வார்....
இந்த இயற்கை தான் இந்த உடல்
1.) நிலம் (எலும்பு,மாமிசம்,தோல்,நரம்பு,)
2.) நீர் (உமிழ்நீர்,சிறுநீர்,வியர்வை,இரத்தம்,விந்து,)
3.) காற்று (சுவாசம்,வாயு)
4.) ஆகாயம் ( மனதின் எண்ணங்கள், பகுத்தறிவு )
5.) நெருப்பு (பசி,தூக்கம்,தாகம்,உடலுறவு)
ஆரோக்ய வாழ்வுக்கு பாரம்பரிய வாழ்க்கைமுறை அவசியம் என்பதை அனைவருக்கும் தெரியப்படுத்தி ஆரோக்ய பாரதத்தை உறுவாக்குவோம்.....!

**Vaitiyar Malick**

புற அமுதம் பிரபஞ்ச சக்திகள் முழுவதும் அடங்கிய வஸ்து ஒன்று இவ்வுலகில் இருப்பதாக ஞானிகள் கூறுகின்றனர் இதையே அண்டம் orpic egg என்கின்றனர் இப்பொருளாகிய அண்டம் ஞானிகளால் பரிபாஷை கரவு மொழியால் மறைக்கப்பட்டுள்ளது இவ்வண்டப் பொருளைக் கொண்டு அமுரி என்ற புறஅமுதம் தயாரிக்கின்றனர் இதை alkahest என்றும்water of life என்றும் அழைக்கின்றனர் ஞானிகளின் பாதரசம் ஆகிய இப்புற அமுதம் உடலின் ஆறு ஆதாரங்களையும் தொண்ணுற்றாறு தத்துவங்களையும் கசடு நீங்கி சுத்த தேகம் ஆக்குவதாக ஞானிகள் பகர்கின்ரனர் இக்தே அமுரி எனப்படுகிறது இந்த அமுரியாகிய புறஅமுதம் துணையின்றி இரசவாதம் சித்தி ஆகாது
Dr.KuppusamySiddha mgpt: நமது மெய்ப்பொருள் பூமியை ஒப்பிடத் தக்கதாக உள்ளது.பூமிப்பொருளில் அல்லது பூமியில் நீரும் நிலமும் இரண்டாக இருந்தாலும் ,இரண்டும் சேர்ந்து பூமி என்ற ஒரே பொருளாக உள்ளது.அப்படிப்பட்ட ஒரு சிறந்த பாத்திரமாக உள்ளது பூமி.ஏனெனில் அந்த பாத்திரத்திற்குள்ளிருந்து நீரானது ஆவியாகி போய்விடாமல் பூமியிலேயே இருக்கிறது.ஈர்ப்பு விசையை உடைத்துக் கொண்டு நீராவி வெளியேருவதில்லை.அப்படிப்பட்ட சிறந்த பாத்திரமாக இருக்கும் பொருளை ஒரு பூமி வடிவ பாத்திரத்தில் எடுக்க வேண்டும். அப்போதுதான் அது சரியாக வரும்.பூமி பாத்திரம் எப்போதும் வெப்பத்தால் ஒருபோதும் உடைந்துபோவதில்லைஅல்லவா. ஆகவே நமது செய்முறை இயற்கையை பின்பற்றுவதாக இருக்க வேண்டும்.பூமியிலிருந்து , ஒருபோதும் நீரோ ,நிலமோ பூமிக்கு வெளியே எடுக்கப்படுவதில்லை.பூமிக்கு உள்ளேயே வாலை வடிக்கப்படுகிறது.அதனால் மண் போஷிக்கப்படுகிறது.அதனாலேயே விதைகள் பெருக்கமடைகின்றன.இந்த இயற்கை விதியையே நாமும் பின்பற்ற வேண்டும்.இல்லை எனில் தவறான பாதையில் சென்றுவிடுவோம்.
Dr.KuppusamySiddha mgpt: பூமிக்கு வெளியே இருந்து பார்த்தால் அது ஒன்றாகவும்,பூமிக்கு உள்ளே (வந்து ) பார்த்தால் நீரும்,நிலமுமாக இரண்டாக உள்ளது புரியும்.அது போல்தான் முட்டையும் வெளியே பார்க்க ஒரு பொருளானாலும் உள்ளே இரண்டாக உள்ளது காண்க.இந்த இரண்டையும் பிரித்து பின் சேர்ப்பதே செய்முறை என்பதை புரிந்துகொள்ளுங்கள்.
ஆகவே பூமியைப் போன்ற வட்ட வடிவமான அந்த அண்டக்கல்லைத் தேடுங்கள்.

**Vaitiyar Malick**

வான் சிறப்பு
திருவள்ளுவர் இறை வணக்கத்திற்கு அடுத்து வான் சிறப்பு என்ற அதிகாரத்தை வைத்துள்ளார்.இது ஏன் அவ்வாறு வைக்கப்பட்டுள்ளது என ஆய்வு செய்ய வேண்டும்.
உலகிற்கு ஆதியாய் அறிவாய் உயிராய் இருப்பது இறை தான் அது கற்பம் என்பர் சித்தர்.இதனை அகரம் என்றனர்.இது வானில் இருந்து மழையாகி வருகிறது.
அந்த நீருக்கு இருப்பிடம் கடல் என்பதால் அறவாழி என்றார்.உலகிற்கு உயிர் வழங்கி வாழச் செய்வது. மழைச் சிறப்பு என்றோ நீர்ச் சிறப்பு என்றோ மாரிச்சிறப்பு என்றோ குறிக்கவில்லை.
மாறாக வான் சிறப்பு என்றது ஏன்?
இதனை வேறு வகையில் காணலாம்

செய் நன்றி பற்றிக் கூறும் போது
"செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானக மும் ஆற்றலறிது."
இதில் வானம் என்று குறித்துள்ளார்.
இவர் சித்தர் மரபு ஆனதால் "ஆதி உப்பு விண்ணிலே" என்பதற்கிணங்க வான என்றே குறித்தார்.
"வானின்று வழங்கி வருதலால் தான்
அமிர்தம் என்றுணரற் பாற்று"
உலகம் வானால் வாழ்கிறது எனில் மழை என்பது குறிப்பால் பெறப்படும் பொருள்.அமிழ்தம் என்பதையும் குறிப்பாக நோக்கவும்.
உணவும் அமுதம் பாலும் அமுதம் .அவை குறித்த காலம் உயிருக்கு ஆதாரமாகி நிற்பது.ஆனால் நீடூழி வாழ அமிர்தம் வேண்டும்.அதனைக் குறிப்பது நீரை
மழையை அமிர்தம் என்றார் ஏன் என சிந்திக்கவேண்டும்.
சித்தர்கள் நீர் மழை கங்கை அமிர்தம் என்பர்.அதை குறிப்பாக அறியும் விதமாக பாடல் உள்ளது.
"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு
துப்பாய தூவும் மழை"
இங்கு மழை என்றார்.உணவு ஆகி உணவை உண்டாக்கி தானே உணவு ஆகியது.
கருணாகர சாமி
"ஏட்டுச் சுரக்காய் என இங்கெடுத்து யாம் கூறோம் கூட்டுக் கறிக்காகுமிதனால் குடும்பம் எல்லாம்.பிழைத்திடுமே"
வள்ளலார்
"வல்லார்க்கும் மாட்டார்க்கும்
வரமளிக்கும் வரமே"என்றார்.
வரம் அளிப்பதும் வரம் ஆவதும் ஒன்றே என்பது;உணவு ஆவதும் உணவு ஆக்குவதும் ஒன்றே.மருந்தும் விருந்தும் ஆவது ஒன்றே அது போன்றது தான்.
அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் எனில் அண்டத்தில் கிரகம் நட்சத்திரம் உண்டு.ஐம்பூதம் உண்டு.பிண்டத்திலும் அப்படித்தான்.எனவே வான் என்று வெளியைக் குறித்தாலும் வான் சித்தர் பொருளும் என குறிக்கின்றனர்.

**Vaitiyar Malick**
கனநீர்
நவீன விஞ்ஞானம் நீண்ட காலம் வரை அணுவைப் பிரிக்க முடியாது என்றே கூறி வந்தது. ரூதர் போர்டு எனற விஞ்ஞானி அணுவைப் பிளக்க முடியும் என்று கூறினார். பின்னர் பல்வேறு கட்ட ஆய்வுகளுக்குப் பிறகு அணுவில் மூன்று துகள்கள் உள்ளன என்பதைக் கண்டறிந்தனர். அவை நியூட்ரான், எலக்ட்ரான், புரோட்டான் என்பவை ஆகும். அணுவைப் பிளக்க ஒருவகை கனநீர் என்பதைக் கையாளுகிறார்கள். அந்த கன நீரைப்பற்றி பார்க்கலாம்.
சாதாரணத் தண்ணீரில் 2 நீரக வாயு அணுக்களும் 1பிராண வாயு அணுவும் சேர்ந்த ஒரு கூட்டுப் பொருள் நீர் ($H2O$) ஆகும். இதன் அணு எடை 1 ஆகும். சாதரண நீரில் உள்ள நீரக வாயுக்கு (ஹைட்ரஜன்) பதில் கன நீரக வாயு (கன ஹைட்ரஜன்) இருப்பின் அது கன நீர் எனப்படும். இதை வேதியல் ஆய்வுக் கூடங்களில் தயாரிக்கிறார்கள். எனவே கன நீர் என்பது நீரக வாயுவும் (ஹைட்ரஜன்) பிராணவாயுவும் (ஆக்ஸிஜன்) கூடி உண்டான சேர்மம் ஆகும். கனநீரில் உள்ள நீரகவாயுவும் (ஹைட்ரஜன்) மற்றும் பிராணவாயு (ஆக்ஸிஜன் ) ஆகியவற்றின் தன்மைகளைப் (ஐசோடோப்புகளைப்) பொறுத்து விஞ்ஞானிகள் இதுவரை ஆறுவகை கணநீரை உருவாக்கி இருக்கிறார்கள். அவற்றின் குறியூடுகள் பின்வருமாறு,
H - O 16 -D
H - O17 -D
H - O18 -D
D - O 16 -D
D - O 17 -D
D - O 18 -D
இந்தக் குறியீடுகள் அனைத்தும் கன நீரின் குறியீடுகள் ஆகும்.
கனநீரின் அனைத்து பொதிக மாறலிகளும் (தன்மை) சாதாரண நீரின் பொதிக மாறலிகளை விட அதிகமாகும்.
பொதுவாக கனநீரை D2O என்ற குறியீடுகளால் குறிப்பிடுகிறார்கள். அதாவது நீரக அணுவின் ஒரு புரோட்டானும் ஒரு நியூட்ரானும் சேர்ந்தால் அந்த அணுவின் எடை 2 ஆகும். இப்படி அணுஎடை 2 ஆக உள்ள வாயுவை அணுஎடை 3 ஆக (H3O) ஆக மாற்றும்போது அதை டியூட்டிரியம் (Duetrium) என்பர். இந்த டியூட்டிரியம் அணுக்களாலான தண்ணீரைத்தான் கனநீர் என்று நவீன அறிவியலார் அழைக்கிறார்கள்.
இது அணு உலையில் மட்டமாக்கியாகப் (Moderator) பயன்படுகிறது.
கனநீர் ஹைட்ரஜனை ஆயத்தமாக்கப் பயன்படுகிறது.
கனநீர் உயிர்த் திசுக்களைப் பாதிக்கும் திறன் உடையது.
பொருட்கள் கரையும் தன்மையும் கனநீரில் 15% குறைவாகவே உள்ளது.
கனநீர் நிறமற்ற மணமற்ற சுவையற்ற நீர்மம் ஆகும்.
நவீன விஞ்ஞானம் அணுவின் சக்திகளை வெப்பத்தைப் பயன்படுத்தி வெப்ப வீரியமாக பிளப்பதால் அது அழிவையே தருகிறது. இதற்கு ஜப்பான் மீது போடப்பட்ட அணுகுண்டுகளைச் சொல்லலாம். ஆக்கப் பூர்வ பணியாக அணு மின்சாரம் தயாரித்தாலும் அதனால் ஏற்படும் பின்விளைவுகள் விபரீதமாகவே உள்ளது. அணு உலையைச் சுற்றி வாழும் மக்களும் பயத்துடனேயே வாழ வேண்டி உள்ளது.

தற்பொது இந்திய நவீன விஞ்ஞானிகள் யுரேனியம் மற்றும் புளுட்டேனிய கனநீருக்குப் பதிலாக பயத்தமாவு , சர்க்கரை மற்றும் நெய் ஆகியவற்றைச் சேர்த்து நொதிக்க வைத்து பயித்தலாடு என்னும் கனநீரை தயாரிக்கிறார்கள்.
பயித்தலாடுவின் சிற்பி என்று போற்றப்படும் விஞ்ஞானி ராஜா ராமண்ணா என்பவர் ஆவார். இது கெடுதலை உணடு பண்ணாது என்று கூறியுள்ளார்கள்.

**Vaitiyar Malick**
உலகில் விடைகாண முடியாத பல்வேறு அதிசயங்களும், ஆச்சரியங்கமும் இயற்கையிலேயே அமைந்துள்ளன. அதில் ஒன்று தான் தான்சானியா நாட்டில் உள்ள நேட்ரான் ஏரி ( lake natron tanzania) . உலகின் ஆபத்தாக அறியப்படும் இந்த ஏரியின் தண்ணீரை எந்த விலங்கு பயன்படுத்தினாலும் அது கல்லாக மாறிவிடும். பார்ப்பதற்கு மிகவும் மிகவும் அமைதியாக இருக்கும் இந்த ஏரி தன்னுள் இத்தனை கொடிய ஆபத்தை மறைத்து வைத்திருப்பதற்கு முக்கிய காரணம் அந்த ஏரியில் இயற்கையாகவே கலந்திருக்கும் இரசாயண கலவைதான் என்கிறார்கள் விஞ்ஞானிகள். குறிப்பாக இந்த ஏரியில் எப்பொழுதும் இந்த நீரிலுள்ள p.h (hydrogon ion பி+) என்னும் அமிலத்தின் அளவு 9 முதல் 10.5 வரை அதிகப்படியாக இருக்கிறதாம். இதனால் தான் இந்த ஏரியில் விழும் அனைத்தும் அந்த அமிலத்தினால் எகிப்திய மம்மிபோல பாதுகாக்கப்பட்டு விடுகிறது. அது கல்லாக மாறிய தோற்றத்தைக் கொடுக்கிறது என்று கூறியுள்ளார்கள்.இப்போது இந்த ஏரிக்கு அருகில் யாரும் செல்ல முடியாத வகையில் கம்பிவேலி அமைத்து பாதுகாத்து வருகிறார்கள்.
இதன்மூலம் உலகில் உயிர்களை கல்லாக மாற்றும் நீர் உள்ளது என்பது புலனாகிறது. அதனால் சித்தர்கள் காலத்தில் தமிழகத்திலும் இத்தகைய தன்மை கொண்ட நீர்கள் சிறிய அளவுகளில் இருந்து இருக்கலாம். அவை கால ஓட்டத்தில் மறைந்து போயிருக்கும் என்றே நம்ப வேண்டியுள்ளது.

**Vaitiyar Malick**
1.இந்த நீரை மனிதர், மிருகம், பறவை ஆகியவைகள் குடித்தால் கல்லாய் போகும்.
2.வெயில் காலத்தில் உதகநீர் மட்டும் வற்றாது. அந்த நீரில் மரத்தின் இலை, குச்சி எது விழுந்தாலும் கல்லாய் போகும்.
3. இதை கையில் எடுக்க கூடாது
என்று கூறியுள்ளார்கள்.
சித்தர்கள் கூறிய இந்த உதகநீர் பற்றிய விபரங்களைப் படித்தால் ஆச்சரியமாக இருக்கும் அல்லது இது ஒரு கற்பனை என்றே தோன்றும்.உலகில் எந்த நீராவது மரக்குச்சியை கல்லாக மாற்றுமா? அப்படி ஒருநீர் உலகில் உள்ளதா? என்ற கேள்வி எழும். இத்தகையநீர் தற்போது தமிழகத்தில் உள்ளது என்று கூறவோ அல்லது முன்பு இருந்தது என்று கூறவோ எந்த ஒரு ஆதாரமும் இதுவரை கிடைத்ததில்லை. சித்தர் இலக்கியங்களில் மட்டுமே உதகநீர் பற்றிய குறிப்புகளை காணமுடிகிறது. நவீன விஞ்ஞானிகள் இந்த தன்மை கொண்ட நீரைப்பற்றி கூறிய கருத்துக்களையும், இப்போது இத்தன்மை கொண்டநீர் உள்ள இடம் பற்றியும் காணலாம்.

**Vaitiyar Malick**
சித்தர்கள் கண்ட உதகநீர்
தமிழ்நாட்டில் வாழ்ந்த மெய்ஞானிகளை சித்தர்கள் என்கிறோம். அவர்கள்பத்து வகையான உதகநீர்களைப்பற்றி குறிப்பிட்டுள்ளார்கள்.
முதலில் உதகநீர் என்றால் என்ன? என்று பார்க்கலாம்.
இடியானது மலையில் விழுந்தால் மலை வெடித்து பிளந்து இடி உள்ளே போகிறது. இது இடியின் வேகத்திற்கு ஏற்ப ஆழம் செல்லும். அந்த இடத்தில் இடியின் தாக்கத்தால் பாறையானது மணல் போல மாறும். அதோடு இடியின் மூலம் வந்த உப்பும் கலந்து இருக்கும். இதில் மழை பெய்யும்போது இந்த உப்பு மழைநீரோடு கலந்து பாறையில் உள்ள பிளவுகள் வழியாக கசிந்து வெளியேறி பக்கத்தில் இருக்கின்ற பள்ளத்தில் தேங்கும். இந்த நீரே உதகநீர் எனப்படும். உதகநீர் கனமானது, ஆகையால் அது கீழே இருக்கும். அதன் மேல் மழை பெய்தாலும் மழை நீர்தான் வழிந்து செல்லுமே தவிர உதகநீர் செல்லாது. எனவே உதகநீர் அப்படியே தேங்கி இருக்கும். இது பிசுபிசுப்பாகவும், குழகுழப்பாகவும் இருக்கும். இதுவே இதன் அடையாளம்.
1.சணவேதி உதகநீர்
2.நாள்வேதி உதகநீர்
3.இருநாள்வேதி உதகநீர்
4. திரிநாள்வேதி உதகநீர்
5. பஞ்சவேதகதி உதகநீர்
6. சப்தவேதி உதகநீர்
7.தசவேதி உதகநீர்
8.மாதவேதி உதகநீர்
9.மண்டலவேதி உதகநீர்
10. அறுபதுநாள்வேதி உதகநீர்
இப்படி பத்துவகை உதக நீர்களைப் பற்றி கூறிஉள்ளார்கள்.இதன் பொதுவான தன்மை பற்றி சித்தர்கள் சொன்ன விபரங்களைப் பார்க்கலாம்.

**Vaitiyar Malick**

நவீன விஞ்ஞானிகள் அந்த மூலப் பொருளை அணு என்று குறிப்பிட்டு அதை புரோட்டான், நியூட்ரான், எலக்ட்ரான் என்று பெயரிட்டுள்ளார்கள். மொத்தத்தில் உலகில் உள்ள அனைத்து மதங்களும் மனிதனின் வாழ்வை வளமாக்கும் அந்த மூலப் பொருளையே கடவுள் எனப் பெயரிட்டழைக்கின்றனர். ஆக இறை என்று அழைக்கப்படும் பொருள் ஒன்று. அதை அனுபவித்தவர்கள் அதற்கு கூறிய விளக்கவுரையின் புரிதல் அடிப்படையிலேயே பல மதங்கள் தோன்றியுள்ளன. செம்பொருள் எனப்படும் மெய்ப் பொருளை அனுபவித்த ஞானிகள் அந்த முழு பொருளுக்கு தங்களுக்கு பிடித்தமான பெயரை வைத்தார்கள். அந்த அடிப்படையில்தான் கடவுளுக்கு பல பெயர்கள் வழங்கலாயிற்று. காலப்போக்கில் ஒவ்வொரு பெயரிலும் ஒரு மதம் ஊருவாகி இன்று உன்மதம் பெரியதா? அல்லது என் மதம் பெரியதா? என்ற போட்டி ஏற்பட்டு மத வெறியர்களாக மக்கள் மாறி விட்டார்கள். கடவுளாக உருவகப்படுத்தி ஞானிகள் கூறிய நல்வழிகளை கடைபிடித்து, இறை நிலை அடைய முயற்சிக்காமல் வெறும் வெளி பக்தி வேசங்களில் மூழ்கி அஞ்ஞானிகளாக நோய்வாய்ப் பட்டு இறக்கின்றனர். இந்த நிலை மாறி உலகில் பிறந்த எல்லா மனிதர்களும் ஞானியாக வேண்டும் என்ற நல்லெண்ண அடிப்படையில் சித்தர்கள் தம் அனுபவங்களை பல நூல்கள் வாயிலாக நமக்கு விட்டு சென்றுள்ளார்கள். அந்த நூல்களைப்படித்து நோயின்றி நீடித்த ஆயுளோடு பரம் பொருளை அடைய முயல வேண்டும். அதற்கான வழிமுறைகளை தனித்தனி தகவல்களாக சித்தர்கள் நூல்களில் பல இடங்களில் தெளிவாகவும் விளக்கமாகவும் கூறியுள்ளார்கள். அதில் எனக்கு புரிந்து நான் அனுபவித்த கருத்துகளை பூநீர் என்று தனி தலைப்பிலும், உப்பு தயாரித்தலை தனி தலைப்பிலும் விளக்கியிருந்தேன். அதோடு தொடர்புடைய அடுத்த பொருளான நாதநீர் பற்றி சித்தர்களும், ஞானிகளும் கூறியுள்ளவற்றை விளக்கமாக சித்தர்கள் மற்றும் ஞானிகளின் நூல் துணையோடு பார்க்கலாம்.

"பழுதில்லை பழுதில்லை மூன்றெழுத்தை
ஆரென்று கேட்டாலுஞ் சொல்லிடாதே."

:- மகிலன் ஐயாவின் பதிவில் இருந்து

**Vaitiyar Malick**

நாதநீர் (ஞானிகளின் கந்தகம்):

ஆயுள் நீட்டும் ஆய்வுக் கலை என்று அழைக்கப்படும் சித்தர் மெய்ஞானக்கலைக்கு பயன்படும் மூலப் பொருளை சித்தர்கள் பூநீர் அல்லது ஏகவஸ்து என்று சிறப்பு பெயரிட்டு அழைக்கின்றனர். சித்தர்களால் அந்த முதல் மூலப் பொருள் நீர் அல்லது அப்பு என்று தெளிவாக கூறியுள்ள போதிலும் ஆய்வாளர்களில் சிலர் இயற்கையில் கிடைக்கும் கெட்டியான பொருளை எடுத்து ஆய்வு செய்கின்றனர். அத்தகைய பொருளை எடுத்து ஆய்வு செய்பவர்கள் சித்தர் நூல்களை ஒன்றிரண்டாக மேலோட்டமாக படித்தவர்கள் என்றே எண்ணத் தோன்றுகிறது. என்னிடம் சந்தேகம் கேட்கும் நண்பர்களிடம் சித்தர் நூல்களைப் படியுங்கள் என்று கூறினால் ஒருவர்கூட படித்ததாக தெரியவில்லை.சித்தர் நூல்களை நண்பர்கள் படித்தாலும் படிக்கா விட்டாலும் எனக்கு தெரிந்ததை உங்களோடு பகிர்ந்து சித்தர் கலையின்மீது ஆர்வத்தை தூண்டவேண்டும் என்பதற்காகவே நான் தொடர்ந்து என்னுடைய அனுபவங்களை பதிவிட்டு வருகிறேன். அந்த அடிப்படையில் முதலில் பூநீர் பற்றியும், உப்பு பற்றியும் விபரங்களைப் பதிவிட்டிருந்தேன். இனி அதோடு தொடர்புடைய அடுத்த விசயங்களைப் பார்க்கலாம்.

"அப்புவை அறியாமலு மாந்த ரெல்லாம்
அப்பனே புலத்தியனே மாண்டு போனார்."

(அக. அந்தரங்க தீட்சாவிதி)

:- மகிலன் ஐயாவின் பதிவில் இருந்து

**Vaitiyar Malick**

மெய்ஞானக் கலைக்கு பயன்படும் முதல் பொருளான பூநீரை மூன்று பொருளாக பிரிக்க வேண்டும் என்று சித்தர்கள் கூறியுள்ளார்கள். பலர் மூன்று தனித்தனி பொருட்களை எடுத்து ஒன்றாக்க வேண்டும் என்ற கொள்கை அடிப்படையில் ஆய்வு மேற்கொண்டுள்ளனர். நமக்கு அதைப்பற்றி கவலையில்லை. நான் ஒரு பொருளை சித்தர்களின் கோட்பாடுபடி மூன்றாக பிரித்து பின் சித்தர்கள் கூறிய அளவுபடி மீண்டும் ஒன்றாக இணைக்க வேண்டும் என்ற அடிப்படையில் செயல்படுகிறேன். இதை மையமாக வைத்தே என்னுடைய குருவின் வழிகாட்டுதல் படி ஆய்வு மேற்கொள்கிறேன். அதனால்தான் என்னுடைய ஆய்வுக் கருத்துகளை பதிவிடும் போது என்னுடைய கருத்தாக பதிவிடாமல் சித்தர்கள் மற்றும் ஞானிகள் கூறிய செய்முறை கருத்துகளை அப்படியே பதிவிடுகிறேன். நான் புதிதாக எந்த ஆய்வையும் மேற்கொள்ளவில்லை. சித்தர்கள் மற்றும் ஞானிகள் கூறிய மனித நலம் காக்கும் மருந்து பற்றிய ஆய்வு விபரங்களை அறிந்து பயன்படுத்த முயல்கிறேன். அதில் ஏற்பட்ட தோல்விகளையும் பதிவிடுகிறேன். சித்தர்கள் கூறும் சரியான செய்முறை விபரங்களையும் பதிவிடுகிறேன்.

இதனடிப்படையில் முப்பு ஆய்வு கலையில் வரும் மூலப் பொருளான பூநீரை மூன்று தனித்தனி கூறுகளாக பிரிக்க வேண்டும். அதைப்பற்றி சற்று விளக்கமாக இப்போது பார்க்கலாம். அந்த மூன்றையும் எழுத்தாக குறிப்பிடும் போது அ, உ, ம என்றும்; அந்த முப்பிரிவு பதத்தை முலப்பொருளை வழங்கும் அமுத கலச ஒப்பீட்டில் கூறும்போது அதற்கு ஒரு கரத்தை கொடுத்து அகரம், உகரம், மகரம் என்றும்; அதை பஞ்ச பூதத்தன்மையோடு ஒப்பிட்டு கூறும்போது நிலம், நீர், நெருப்பு என்றும்; மருந்தாக கூறும்போது இரசம், கெந்தகம், உப்பு என்றும்; இரசம், வீரம், பூரம் என்றும்; அந்த முதல்பொருளை சிவமாக உருவகம் கொள்ளும்போது சிவம், சக்தி, கங்கை என்றும்; அதை கிருஷ்ணனாக பாவிக்கும் போது கிருஷ்ணன், பாமா, ருக்குமணி என்றும் இந்தியாவில் குறிப்பிடுகிறார்கள். இதையே மேலை நாட்டினர் இந்த மூலப்பொருளை ஆண்டிமணி என்று குறிப்பிட்டு அதை இரசம், கெந்தகம், உப்பு என மூன்றாக பிரிக்க வேண்டும் என்று கூறுகின்றனர்; அதையே கிறிஸ்து என்று கூறும்போது பிதா, சுதன், பரிசுத்த ஆவி அல்லது தந்தை, மகன், தூய ஆவி என்று அழைக்கின்றனர். இதை இஸ்லாம் மதம் அலிஃப், லாம், மீம் என்று குறிப்பிடுகிறது. இந்த மூன்று பதத்தையும் குரான் தனித்தனி எழுத்துகள் (abbreviated letters) என்றே குறிப்பிடுகிறது. இந்த வார்த்தைகள் குரானில் 29 முறை கூறப்பட்டுள்ளது.

இதைப்பற்றி குரான் கூடுதல் விளக்கவுரையில் 'இந்த மூன்று எழுத்தின் இரகசியப் பொருளை இறைவன்தான் நன்கறிந்தவன்' என்று கூறப்பட்டுள்ளது.
:- மகிலன் ஐயா அவர்களின் பதிவில் இருந்து

**Vaitiyar Malick**

நாம் பெரும்பாலும் நதியின் மூலமே தண்ணீரைப் பெறுகிறோம் . நதியின் பிறப்பிடம் சோலைக்காடுகள் . புல்வெளிகள் , பசுமைமாறாக் காடுகள் ஒருங்கிணைந்து காணப்படுவது சோலைக்காடுகள். இந்த வகைக் காடுகள்
கடல் மட்டத்தில் இருந்து 1,800 மீட்டர் மற்றும் அதற்கு மேலான உயரத்தில்
காணப்படுகிறது. சோலைக்காடுகளின் தட்பவெப்ப நிலை , தனித்துவமான மண் அமைப்புகளை செயற்கையாக உருவாக்க முடியாததால் இந்த வகை காடுகள் தொல்லுயிர் படிமங்கள் என அழைக்கப்படுகின்றன . தமிழகத்தில் நீலகிரி ,கொடைக்கானல் , ஆனை மலை, அகத்திய மலை மற்றும் மேகமலை ஆகிய பகுதியில் மட்டுமே சோலைக் காடுகள் அரிதாக காணப்படுகின்றன .
மழைக்காலங்களில் ஏற்படும் அதிகப்படியான மழைப்பொழிவால் பெறப்படும் நீர்வளம் சோலைக் காடுகளின் புல்வெளிக்கு அடியில் உள்ள பஞ்சு போன்ற அடிப்பரப்பில் சேமிக்கப்படுகிறது . இது தாவர இலைகளால் அமைக்கப்பெற்ற ஓர் அடுக்கு . இந்த அடுக்கில் சேமிக்கப்பட்ட தண்ணீரானது , சிறிது சிறிதாக வெளியேற்றப்பட்டு சிறு சிறு ஓடைகளாக, மிகப்பெரிய அருவிகளாக , ஆறுகளாக உருமாறுகின்றன . இந்த காடுகளில் அதிகப்படியான தாவர இனங்களும், ரோடோடென்ரான், ரோடோமிர்ட்ஸ் , இம்பேஸியன்ஸ், எக்ஸாகம் உள்ளிட்ட சில தாவர இனங்களும் காணப்படுகின்றன . விலங்குகளில் மரத்தவளை, வரையாடு , யானை , பாம்புகள் , கருமந்தி , தேவாங்கு , மாற அணில் , சிறுத்தை , கரடி , கடமான் , காட்டுக்கோழிகள் மிகுந்த அளவு காணப்படுகின்றன . சோலைக்காடுகளின் பரவல் குறைவதால் படிப்படியாக இவ்வகை காடுகள் தொல்லுயிர் படிமங்களாகி வருவதாக வன ஆர்வலர்கள் கவலை தெரிவிகின்றனர் .
வனப்பகுதில் கால்நடைகளின் மேய்ச்சலைத் தடுத்து வன உயிரினங்களையும் அதைச் சார்ந்த வனப்பகுதிகளையும் பாதுகாக்கலாம். அந்நிய களைச்செடிகள் , மரங்களை ஒழித்து அதன் மூலம் பரவும் விதை முளைத்தலை தடுக்கலாம் . காட்டுத்தீயை தடுப்பதோடு , தேயிலை , காபி பயிரிடப்படுவதற்காக சோலைக்காடுகள் அழிக்கப்படுவதை தடுக்கலாம் . பைன் , யூகலிப்டஸ், அகேசியா வகை மரங்களை முற்றிலும் வனப்பகுதியிலிருந்து அப்புறப்படுத்தலாம் .
நிலத்தில் வாழும் உயிரினங்களில் 80% வனத்தில்தான் வாழுகின்றன . மனிதனது அத்துமீறலால் பல உயிரினங்கள் அழியும் தருவாயில் உள்ளன .வனத்தை உருவாக்குவதில் மரங்கள் பெரும் பங்கு இருக்கின்றன . மரங்கள் இல்லையென்றால் பூமியில் வனமே இல்லாமல் போய்விடும் . நாம் சுவாசிக்கத் தேவைப்படும் பிராண வாயு ( oxygen o2) மரங்களில் இருந்தே அதிகளவு கிடைக்கிறது . தண்ணீர் , கிடைப்பதற்கும் மரங்களே முக்கிய காரணம் . நிலச்சரிவைத் தடுப்பதிலும் மரங்கள் பெரும் பங்கு வகிக்கின்றன . உணவுப்பொருட்கள் , எரி பொருட்கள் , பல்வேறு வகையான பொருட்கள் செய்ய என்று நாம் மரங்களில் இருந்து பெரும் நன்மைகள் ஏராளம் . மரங்கள் இல்லாமல் மனிதனே இல்லை . இயற்கை இல்லாமல் நம் பூமியே இல்லை . இயற்கையோடு இணைந்து வாழாமல் நம்மால் நிலையான மகிழ்ச்சியையோ , வளர்ச்சியையோ எந்தக் காலத்திலும் பெற முடியாது .

**Vaitiyar Malick**

விளக்கம் : (முனைவர் ச .மெய்யப்பன் )
எவ்வகையில் உயர்ந்தவரும் நீர் இல்லாமல் இவ்வுலகில் வாழ முடியாது . அதுபோலத் தண்ணீரின் இடையறாத ஓட்டமும் மழை பெய்யவில்லை என்றால் இல்லையாகும்.
தண்ணீர் திரவ
"தங்கம் " என்று அழைக்கப்படுகிறது . தண்ணீர் இல்லாமல் நம் வாழ்க்கையை கற்பனை கூட செய்ய முடியாது . உலகத்தில் உள்ள நீரில் 3 % மட்டுமே நல்ல தண்ணீர் . இதை மட்டுமே நாம் குடிக்கப் பயன்படுத்த முடியும் . இதிலும் 2 % சதவீத தண்ணீர் பனிக்கட்டியாக உள்ளது . வெறும் 1 % தண்ணீர் மட்டுமே பூமி முழுவதும் நாம் வாழும் பகுதியில் கிடைக்கிறது . மழை பெய்வதன் மூலம் மட்டுமே நாம் அதிகளவு நல்ல தண்ணீரைப் பெறுகிறோம் . மழை பெய்வதற்கு முக்கிய காரணமாக இருப்பது அடர்ந்த வனப்பகுதிகள் தான் . உலகமயமாததாலும் , பொருளாதாரமயமாததாலும் எல்லா நாடுகளிலும் வனப்பகுதியின் அளவு நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருகிறது .

14-05-2017ஐம்பெரும் சக்திகள் - (நீர் 2)



மழை நீர் மேகத்திலிருந்து ஒரே கம்பியாகவோ அல்லது பெரிய பெரிய பாளமாகவோ விழாமல் துளித்துளியாக சின்னமழைத்துளியாக வானத்திலிருந்து விழுவதற்கு காரணத்தை மழையால் நனையும் போதாவது யோசித்திருக்கிறர்களா ? பெரிய பெரிய பாளமாகமாக விழுந்தால் . ,? நம்ம கதி என்னவாகும் ? முதலில் மழை உருவாகும் விதத்தைச் சொல்றேன்.
'மழை " என்பது ஒரு கூட்டு முயற்சி நம்ம பூமி, சூரியன், காற்று மண்டலம் இந்த மூன்றும் எந்த பேரம் பேசாமல் சேர்ந்த கூட்டு .உண்மையிலேயே மக்களுக்கு நன்மை செய்யணும் " என்கிற மகத்தான் கூட்டு சூரியன் பூமியை சூடாக்க, ஈரப் பிரதேசதங்களின் நீர் ஆவியாகி விடுகிறது , மேலே நோக்கிச் செல்லும் உஷ்ணக் காற்று நீர் ஆவியை அள்ளி இழுத்துச் செல்ல _ மேலே செல்ல செல்ல குளிரடைகிறது ஆவியாவிலுள்ள நீர் விடுபட்டு மேகமாகிறது மேகங்களுக்குள் சின்னச் சின்ன நீர்த் துளிகள் சேர்ந்து சேர்ந்து பெரிய நீர் துளியாகி இதன் கனம் மேலும் அதிகரிக்கிறது
இந்த மேகத்தின் மீது மேல் நோக்கிய காற்றை வீசச் செய்யும்போது, காற்றோட்டத்தையும் மீறி கீழே விடும்படி குண்டாகி விட விளைவது ஒரு மழைத்துளி' அடுத்த மழை அதற்கு அடுத்தப் பிறந்து உருவானது , தனியானது. ஒவ்வொரு மழைத்துளியும் அளவிலும், ஒவ்வொரு கனத்திலும் .ஒவ்வொரு கோணத்திலும், ஒவ்வொரு வேகத்திலும் நம்ம பூமியை வந்தடைகிறது (made for each other )
ஒவ்வொரு மழைத்துளியும் பூமியை நோக்கி கீழே விழுவதற்கு பூமியின் புவி ஈர்ப்பு விசைக் காரணம் இந்த புவி ஈர்ப்பு விசைதான் மழையை மண்ணுக்கு விநியோகம் செய்கிறது மேல் நோக்கிச் செல்லும் காற்றும் புவி ஈர்ப்பு விசையும் சேர்ந்து உரசி உரசி 'சின்னச் சின்ன தூறல் என்ன ...... என்னை கொஞ்சும் சாரல் என்ன... என்று சிறு சிறு துளியாக மழையாக உங்களை வருட வருகிறது
"அல்லாஹ் எத்தகையோனென்றால், அவன் காற்றுகளை அனுப்புகிறான் அவை மேகங்களை ஓட்டுகின்றன பின்னர் அவன் அவற்றை தான் நாடியவாறு வானத்தில் பரவச் செய்கிறான் . இன்னும் அவற்றை துண்டு துண்டாகவும் நீக்குகின்றான் அவற்றின் இடையே இருந்து வெளிவரும் மழையை நீர் பார்க்கிறீர்கள் "
திருக்குர்ஆன் (30 : 48)
சூரியன் தன் 6000 டிகிரி வெப்பத்தினால் மிகச் சிறிய பங்கு வெப்பத்தைக் கொண்டு பூமியை சூடாக்கும் போது பூமியிலுள்ள நீர் நிலைகளிலிருந்து நீர் மட்டும் ஆவியாகிறது
இன்னும் கொஞ்சம் அதிகப்படியான வெப்பத்தை சூரியன் வெளிப்படுத்தினால் கடல் நீரிலுள்ள "சோடியம் குளோரைடு " என்கிற சாதாரண உப்பும் நீரோடு ஆவியானால் மேகத்தின் மழை நீர் உப்பாக இருக்கும் .அப்படி உப்பு நீர் மேகமாக மழையாகப் பொழிந்தால் அந்த நீரை குடி நீராக பருக முடியுமா ? நம் தாகம் தீருமா ?
செடி, கொடி தாவர வர்க்கம் என்னாவது ஜீவராசிகளுக்கும் , மனிதர்களுக்கும் உணவு பிரச்சனை ஒரு கேள்வியாகிவிடாதா ?
"நீங்கள் குடிக்கின்றன நீரைக் கவனித்தீர்களா... ? மேகத்தில் இருந்து நீங்கள் அதனை பொழிவிக்கின்றீர்களா.... அல்லது நாம் பொழிவிக்கின்றோமா ° ......?
நாம் விரும்பினால் அதனை ( நீங்கள் குடிக்க முடியாத ) உப்பு நீராக்கி விட்டிருப்போம் இதற்கு நீங்கள் நன்றி செலுத்த வேண்டுமா ?"
திருக்குர்ஆன் ( 56 : 68 - 70 )
**Vaitiyar Malick**
மழை பொழிய வேண்டுமா இந்த ஸலவாத்தை 4444 தடவை ஓதுங்கள்
அல்லாஹ்
மழையை பொழியச் செய்வான்

அல்லாஹூம்மஸல் ஸலாத்தன் காமிலத்தன் வஸல்ம் ஸலாமன் தாம்மன் அலா ஸய்யிதினாமுஹம்மதின் தன்ஹல்லு பிஹில் உகத். வதன்ஃபரிஜு பிஹில் குரப் வதுக்லா பிஹில்ஹவாயிஜ். வதுனாலு பிஹிர் ரகாயிபு வஹுஸ்னுல் ஹவாதிம். வயுஸ்தஸ்கல் கமாமுமின் வஜ்ஹிஹில் கரீம். வஅலா ஆஹி வஸஹ்பிஹி ஃபீ குல் லம்ஹத்தின் வ நஃபசின்பி அததி குல் மஃலூமின் லக்க
பொருள் :
அல்லாஹ்வேஎங்களுடைய தலைவரான முஹம்மது ஸல்ல ல்லாஹூ அலைஹி வ ஸல்லம் அவர்கள் மீதும் அவருடைய குடும்பத்தினர்மற்றும் ஸஹாபிகள் மீதும் ஒவ்வொரு கண்சிமிட்டும் மற்றும் சுவாசிக்கும்நேரமும் உன்னால் அறியப்பட்ட அனைத்து எண்ணிக்கை அளவிற்கு பரிபூரமாணஅருளையும் முழுமையான சாந்தியையும் பொழிவாயாக. அந்த முஹம்மத் ஸல் ல ல் லாஹூ அலைஹி வ ஸல் லம் அவர்கள் எப்படி பட்டவர்கள் என்றால் அவர்கள் மூலமாகத்தான் சிக்கல்கள் அவிழ்கிறது. அவர்கள் மூலம் தான் துன்பங்கள் நீங்குகிறது. அவர்கள் மூலம்தான் தேவைகள்நிறைவேற்றப்படுகிறது. அவர்கள மூலம் தான் நாட்டங்களும் அழகிய இறுதி முடிவும்பெற்றுக் கொள்ளப்படுகிறது.அவர்களுடைய திருமுகத்தின் மூலம்தான்மேகத்திருந்து
மழை பெறப்படுகிறது.

ஐம்பெரும் சக்திகள் - (நீர் 3)


ருசித்த கடல்நீர்: குமரியில் பரபரப்பு

" அவன்தான் இருகடல்களையும் ஒன்று சேர்த்திருக்கின்றான் ஒன்று மிக்க இன்பமும் மதுரமுமான தண்ணீர் மற்றொன்று உப்பு கசப்பான தண்ணீர் (இவை ஒன்றேடென்று கலந்து விடாதிருக்கும் பொருட்டு) இவ்விரண்டுக்கும் இடையில் திரையையும் மீற முடியாத ஒரு தடையையும் ஏற்படுத்திருக்கிறான்
திருக்குர்ஆன் (25 : 53) (55 : 19 , 20)

18 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிரஞ்சு நாட்டு கடல் ஆய்வாளர் "ஜாகோஸ் " தான் அணிந்த முகமூடி விலகிவிட ,அவரின் வாயில் கடல் நீர் புகுந்து விட ,அந்த நீர் உப்பு இல்லாதிருக்க வியந்து , கண்டுபிடிக்கப்பட்டதுதான் "கடல் ஆறுகள்"
6 ஆம் நூற்றாண்டில் குர்ஆன் சொன்ன விஷயம் கண்டுபிடிக்கப்பட்டதோ 18 ஆம் நூற்றாண்டு .
உலகம் தோன்றி கடல் தோன்றிய காலத்திலிருந்தே இந்தக் கடல் ஆறுகள் கடலில் ஓடிக்கொண்டுதான் இருக்கிறது.
உலகிலேயே நீளமான ஆறு எது என்றால் நைல் நதி, பெரிய ஆறு எது என்றால்
அமெஸான் நதி , மிஸ்ஸி ஸிப்பி நதி என்பார்கள் ஆனால் இவைகளை விட நீளமான பெரிய நதிகளும் உள்ளன ஆனால் அவைகளை நம்மால் பார்க்க முடியவில்லை
நிலத்திலுள்ள நதிகளெல்லாம் நிலத்தை கரையாகக் கொண்டு ஓடும் .ஆனால் கடலில் ஓடும் நதிகளுக்கு கடல் நீரே கரைகளாகக் கொண்டு ஓடும் விசித்திரமான ஆறுகள் மேலும் இந்த ஆறுகள் கடல் நீருடன் இரண்டற கலக்காத நதிகள். என்ன காரணம் ?
காரணம் கடல் நீரின் வெப்பநிலை மிகக் குறைவு அல்லது குளிர்ந்த நிலையில் இருக்கும் உப்புச் செறிவால் உவர்ப்புத் தன்மையும் இருக்கும் இதனால் அடாத்தி அதிகமாகி எடையும் அதிக இருக்கும் இதனால் இந்த கடல் நீர் முழ்கி இருக்கும் உப்பு இல்லாத அடர்த்தி குறைவான நன்னீர் மேற்பரப்பிற்கு தள்ளுகிறது இதனால் கடல் ஆறுகள் ஏற்படுகிறது
இந்தக் கடல் ஆறுகள் 2600 அடி ஆழத்தில் ஒரே சீராக ஓடுகிறது நதியின் வெப்ப நிலை 10 முதல் 27 சென்டிகிரேடு வேகம் மணிக்கு 5 முதல் 25. கி.மீ வரை . இந்த ஆறுகளின் அகலம் 70 கி.மீ . நொடிக்கு ஐந்தரை கோடி கனமீட்டர் தண்ணீரை எடுத்துச் செல்கிறது அப்போ இது என்ன நதியா ? இன்னொரு கடலா ?
இதனால்தான் இறைவன் " இரு கடல்" என்று குர்ஆனில் குறிப்பிடுகிறான்
இது அட்லாண்டிக் கடலிருந்து ஆரம்பித்து மெக்ஸிக்கோ வழியாக புளோரிடாவை அடைந்து மீண்டும் அட்லாண்டிக் கடலை அடைகிறது
இன்னொரு பிரிவு அட்லாண்டிக் கடலிலிருந்து ஆரம்பித்து கிரீன்லாந்தை நோக்கி ஒரு பிரிவும் , நார்வே நோக்கி அயர்லாந் கடற்கரையோரமாக 2வது பிரிவும்
பிரான்ஸ் , ஸ்பெயினுக்கு 3வது பிரிவும் செல்கிறது.
இதைதி தவிர தற்செயலாக திடீர் திடீரென்று கடலின் அவ்வப்போது அந்தந்த இடங்களில் கடல் ஆறுகள் உருவெடுத்து மறைந்து போகிறது இதற்குரிய காரணம் இன்னும் விஞ்ஞானத்திற்கு தெரியவில்லை
இப்படித்தான் கன்னியாகுமரி மாவட்டம் பெரிய காடு கடல் பகுதியில் கடல் நீர் இனிப்பாக இருந்திருக்கிறது
பேப்பர் கட்டிங் கொடுத்துள்ளேன்

ஐம்பெரும் சக்திகள் (நீர் .4)



பூமியிலுள்ள மொத்த தண்ணீரை விஞ்ஞானம் மிகத் துள்ளியமாக கணக்கிட்டது
326 மில்லியன் கியூபிக் மைல்கள்
சென்ற 3000 மில்லியன் ஆண்டுகளாக இந்த அளவு மாறாமல் இருந்து கொண்டே இருக்கிறது இதுவும் விஞ்ஞானத்தால் நிரூபிக்கப்பட்டது
நூஹ் நபி காலத்து "தூபான் " வெள்ளத்திலும் சரி ; ஜப்பான் நாட்டு ஸுநாமி பேரலை வெள்ளத்திலும் சரி பயன்படுத்தப்பட்ட நீரின் அளவு பயன்பாட்டிற்கு பின்பும் இதே 326 மில்லியன் கியூபிக் மைல்கள் தண்ணீர்தான்.
கணக்கு சரியாக வருகிறது .
எப்படி கணக்குச் சரி ?
சொல்றேன்
ஒரே ஒரு மழைத்துளியைச் சற்று ஆராய்வோம்.

இது ஒரு தேசத்தின் ஒரு நேரத்தில் கடலின் ஓர் அங்கமாக இருந்திருக்கலாம் சூரியனின் வெப்பத்தால் கடலிலிருநது கடத்தப்பட்டு ஆவியாகி மேகமாகி வானில் உலாவி வேறு கண்டத்தின் தேசத்தின் மேகமாக இருந்திருக்கலாம் .
ஆசியக் கண்டத்திலோ ஆப்பிரிக்க கண்டத்திலோ உள்ள மலைகளின் மேலே வானில் மேகக் கூட்டத்தோடு கூட்டமாய் திரிந்திருக்கலாம்.
ராவல்பிண்டி விவசாயக் கழனியிலோ , ஆப்கான் கஞ்சா செடியிலோ காத்திருந்திருக்கலாம்
பிரஞ்சு நாட்டில் வருடக்கணக்கில் புதைக்கப்பட்ட மதுச்சாறோடு மறைந்திருந்திருக்கலாம்
பின் இமயமலை சாரவிலோ , ஆல்ப்ஸ் மலையிலோ . ஆர்டிக் கண்டப் பனிப்பொழிவிலோ கலந்திருக்கலாம்.
அமேசான் காட்டு நதியிலோ பிரம்ம புத்திரா நதியின் மடியிலோ தவழ்ந்து வந்திருக்கலாம்.
பின்லாந்து ஜலசந்தியிலோ பெரு நாட்டு பெரும் வெள்ளத்திலோ கஜகஸ்த்தான் கட்டாற்று வெள்ளத்திலோ சீனாவின் துயரமான மஞ்சள் நதி வெள்ளத்திலோ
நைல் நதி வெள்ளச் செழிப்பிலோ கலந்திருக்கலாம்
அன்று ஈராக் தஜ்லா நதியின் கௌதுல் ஆலம் ஜீலானி (ரஹ்) அவர்கள் செய்த ஒலுவின் ஒரு துளியாக இருந்திருக்கலாம் பின்னர் கண்ணனூர் புகாரி தங்கள் (ரஹ்) அவர்கள் செய்த ஒலு நீரில் ஒரு துளியாக இருந்திருக்கலாம்
அந்த ஒரே ஒரு நீர்த்துளி என் தகப்பனரின் முதுகந் தண்டில் ஓடிய உயிரணுவை சுமந்து கொண்டு என் தாயின் கருவறையில் சேர்த்து விட்டு பத்து மாதம் என்னோடு என்னோடு இருந்து பின் என்னோடு பயணித்து பூமியில் என்னை விட்டு விட்டு விண்ணில் எங்கோ பயணமாகி இருக்கலாம். இன்னும் ஆய்வு செய்தால் உங்களின் வியர்வை துளியில் ஒரு துளியாகக் கூட அது இருக்கலாம்
அதன் பயணம் இன்னும் முடியவில்லை அது 3000மில்லியன்ஆண்டுகளுக்கு முன் துவங்கிய பயணம்.
" அவன் தான் ஒரு துளி நீரிலிருந்து மனிதனை உற்பத்தி செய்கின்றான்
திருக்குர்ஆன் (25:54)
அனைத்து உயிரினங்களையும் நாம் நீரிலிருந்தே படைத்தோம்.
திருக்குர்ஆன் 21 : 30
326 மில்லியன் கியூபிக் மைல்கள் கொண்ட தண்ணீர் , அது என்று உருவாக்கப்பட்டதோ அப்படியே இன்றும் இருக்கிறது சற்றும் குறையாமல் .
ஆனால்... ...
அந்த ஒரு துளி நீரால் உருவான மனித வர்க்கங்கள் , ஜீவராசி வர்க்கங்கள, தாவர வர்க்கங்களின எத்தனை என்கிற கணக்குதான் விஞ்ஞானத்திற்கு இன்னும் தெரியவே இல்லை
"இறந்து போன பூமியை எவ்வாறு மழையைக் கொண்டு செழிக்கச் செய்கிறான் இவ்வாறே நிச்சயமாக அவன் இறந்தவர்களையும் உயிர்ப்பிக்கச் செய்வான் அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் உடையவன்"
திருக்குர்ஆன் 30 : 50
இந்த இடத்தில் எல்லா உயிர்களின் கணக்கும் சரியாக வரும்.

ஐம்பெரும் சக்திகள் (நீர் - 5)




ஆயிரக்கணக்கான வருஷங்களாகவே கடலுக்கு அடியில் போய்ப் பார்க்க வேண்டும்' என்கிற ஆசை மனிதனுக்கு இருந்து கொண்டே வந்திருக்கிறது
கிரேக்க தத்துவமேதை அரிஸ்டாட்டில் கடலுக்கடியில் இருகிற விஷயங்களைப் பற்றி சுவையாக எதையோ சொல்ல, அவருடைய சிஷ்யர் அலெக்ஸந்தர் (சுமார் கி.மு 300 வில்) அப்பவோ கண்ணாடியால் பலூன் மாதிரி ஒன்றை செய்து அதற்குள் உகார்ந்து கொண்டு கடலுக்கடியில் கொஞ்ச தூரம் சென்று பார்த்து விட்டு வந்திருக்கிறார் அப்போது மிகப் பிரமாண்டமான திமிலங்கிலத்தைப் பார்த்தாராம்

கரையிலிருந்து கடலுக்குள் ஓரிரு மைல் வரை இருப்பது கண்டங்களின் நிஜ எல்லைகள்தான் இதை "கான்டினெண்டல் ஷெல்ஃப்" என்கிறார்கள் இதன் சராசரி ஆழம் 600 அடி. அதன் பிறகு நிஜக் கடல் ஆரம்பமாகிறது
இதற்குப் பிறகு ஆழம் ஒரேயடியாக " ஜிவ் " வென்று சுமார் 13,000 அடிக்கு இறங்குகிறது இங்கே இருப்பது ."Abyss" . என்றழைக்கப்படும் பிரமாண்டமான சமவெளிப் பிரதேசம் இதில் ஏகப்பட்ட மலைகள் , படுகுழிகள் எரிமலைகள் எல்லாம் உண்டு.
நபி மூஸா (அலை) அவர்கள் கடலைக் கடக்க தங்களது கைத்தடியால் கடலை அடிக்கிறார்கள் கடல் இரண்டாகப் பிரிந்து வழி கொடுக்கிறது
இதைக் கண்ணுற்ற பிர்அவ்னும் அவனது படைகளும் அந்தக் கடற் பாதையில் தாங்களும் செல்ல ஆரம்பிக்கிறார்கள் பிரிந்த கடல் மெதுவாக சேர பிர்அவ்னும அவனது படை களும் ஜல சமாதியாகி விடுகிறார்கள்.
நிஜக் கடலின் ஆழத்தில் இறங்கி செங்கடலின் அக்கரைக்கு செல்லும் போது கடலின் ஆழம் சுமார் 13,000 அடி எனப் பார்த்தோம் . உயரயான இமயமலையை விட கடலின் தரைமட்டம் உயரம் எனவே தான் குர்ஆனில் அல்லாஹ்
"நாம் மூஸா நோக்கி, "நீங்கள் உங்களுடைய தடியினால் இந்தக் கடலை அடியுங்கள்" என வஹ்யி அறிவித்தோம், அவர் அடிக்கவே அது பல வழிகளாப் பிளந்து ஒவ்வொரு பிளைவு அலைகளும் பெரும் மலைகளைப் போல் இருந்தது "
திருக்குர்ஆன் 26 : 63
கடல்களின் நீர்மட்டம் குறைந்தால் வற்றினால் என்ன ஆகும் என்பது பற்றி விஞ்ஞானிகளின் ஆய்வு மிகப் பயங்கரத்தை கண் முன் காட்டுகிறது
நான்கு புறமும் கடலால் குழப்பட்ட ஜப்பான் . இலங்கை , ஆஸ்திரேலியா , அந்தமான் , நிகோபார் தீவுகள் 13,000 அடி முதல் 36,000 அடி உயரத்தில் இருக்குமாம்
(சர்வதேச விமானங்கள் 36,000 அடி உயரத்தில்தான் பறக்கிறது)
இந்தியா போன்ற தீபகற்பகங்களுக்கு கடல் வழியாகவும், தரைவழியாகவும் வரமுடியாது . வான்வெளியில் மட்டுமே வர முடியும்
இந்த நிலைமை கியாமத் நாளின் போது ஏற்படும் என்று குர்ஆனில் அல்லாஹ்
"கடல்கள் அகற்றப்படும் போது "
திருக்குர்ஆன் 82 : 03
கடல் இல்லாத உலகத்தில் தரைவழி பயணம் என்பது நினைத்துப் பார்க்கவே பயமாக இருக்கிறது

ஐம்பெரும் சக்திகள் (நிலம் 1)



இறைவனின் படைப்பில் நீர் ஓர் ஆச்சயமான படைப்பாக முந்திய பதிவுகளில் பார்த்தோம்
அதேப் போன்றே நிலத்திலும் எண்ணற்ற விநோதங்கள் ஏராளமாக குவிந்து கிடக்கிறது அவை அத்தனையும் இறைவனின் வல்லமையை எடுத்தியம்புவைகளாக இன்றும் இருந்து கொண்டு இருக்கிறது
" அமெரிக்காவில் கலிபோர்னியா மாகாணத்தில் உள்ள " ரேஸ் டிரெக் பிளாஸா "
என்ற இடம் மிகவும் பிரசித்தி பெற்றது இதற்கு இன்னொரு பெயரும் உண்டு
" மரண சமவெளி " (Death Valley) என்று .
ஏன் தெரியுமா ?
இங்கு கண்ணுக் கெட்டிய தூரம் வரைமனிதர்களையோ ,உயிரினங்களையோ மரம், புல் பூண்டுகளையோ பார்க்க முடியாது -
கிட்டதட்ட பாலைவனம் போல என்று வைத்துக் கொள்ளுங்கள் . எந்த உயிரினங் களும் இங்கே இல்லாததால் இதை " மரண சமவெளி "என்றழைக்கிறார்கள்

இங்கு கடும் வறட்சி நிலவுகிறது இதனால் நிலங்கள் பாளம் பாளமாக வெடிக்கிறது அப்படி வெடிக்கும் இடங்களில் எல்லாம் "ஐஸ்" படர்ந்திருக்கும் இது ஒரு அதிசய மர்மம் இது எப்படி ? தெரியவில்லை
இங்கு இன்னொரு மர்மமும் இருக்கிறது இந்த மர்ம பிரதேசத்தில் கற்கள் தானாகவே நகர்ந்து செல்லுகிறது நீண்ட காலமாக நடந்து வரும் இந்த மர்மத்திற்கான காரணம் இதுவரை யாருக்குமே தெரியாது.
கற்கள் தானாக நகர்வதற்கான அடையாளங்கள் மட்டும் தெள்ளத்தெளிவாக உள்ளது. இந்த இடத்தில் உள்ள கற்கள் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளில் அந்த முழுப் பிரதேசத்தையுமே சுற்றி வருவதாக விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்
இந்த பரந்த நிலப்பரப்புக்கு அருகே உள்ள மலையில் இருந்து கற்கள் உருண்டு துண்டுகளாக விழுகின்றன அவையே இந்தப் பகுதி முழுவதும் சுற்றிச் சுற்றி திரிகின்றன
சில கற்கள் 10 ஆயிரம் அடிகள் வரை கூட நகர்கின்றன இன்னும் சில கற்களோ வெறும் ஒரு அடி மட்டுமே நகர்கின்றன
முதன் முதலில் 1948 ஆம் ஆண்டு தகவல் வெளியானது 1972 முதல் 1980 விஞ்ஞானிகளின் ஆய்வு சூடு பிடித்தன அங்கே வேகமாக வீசும் காற்றின் காரணமாக கற்கள் நகரலாம் என்றால் சாதரணமான வேகத்தில் கூட காற்று வீசியது கிடையாது
விஞ்ஞானத்தால் இதை விளங்க வைக்க முடியவில்லை. இன்னும் புரியாத புதிராக மர்ம பிரதேசமாக இருக்கிறது
வேற்று கிரக வாசிகளின் விளையாட்டாக இருக்கலாமா ? தெரியவில்லை .
தி இந்து 27 .08 . 2014
குர்ஆனில் சில வசனங்கள் நம்மை யோசிக்க வைக்கிறது நம்முடைய பகுத்தறிவு கொஞ்சம் உதைப்படுகிறது .
" சில பாறைகள் அல்லாஹ்வின் மீதான அச்சத்தால் உருண்டு விழுவதுண்டு "
திருக்குர்ஆன் (2 : 74)
"எந்தப் பொருளும் அவனைப் போற்றிப் புகழாமல் இருப்பதில்லை "
திருக்குர்ஆன் ( 17 : 44)
"அந்தச் சுவர் விழலாமா என யோசித்துக் கொண்டிருந்து "
திருக்குர்ஆன் ( 18 : 77 )
"வானங்கள், பூமி மற்றும் மலைகள் ஆகிய அனைத்தும் அதைச் சுமக்க அஞ்சி மறுத்து விட்டன "
திருக்குர்ஆன் (33 : 72)
"ஏழு வானங்களும் பூமியும் அவற்றில் உள்ளவை யாவும் அவனைத் துதிக்கின்றன"
திருக்குர்ஆன் (17 : 44)
"செடி கொடிகளும் மரங்களும் அல்லாஹ்வுக்குப் பணிந்து வணங்குகின்றன"
திருக்குர்ஆன் (55 : 06)
நபிமொழிகள்
"இந்த உஹூத் மலை நம்மை நேசிக்கிறது நாமும் அதை நேசிக்கிறோம்"
புகாரி : 2889, 4084 , 7333
நபி (ஸல்) அவர்களின் சொற்பொழ்வு மேடையாக இருந்த ஒரு பேரீச்ச மரத்தின் அடிக்கட்டை தேம்பி தேம்பி . அழுதது
(திர்மிதீ நஸயீ )
"நான் மக்காவிலுள்ள ஒரு கல்லை நன்கறிவேன் நான் நபியாக அனுப்பப் பெறுவதற்கு முன்பே அக்கல் எனக்கு ஸலாம் சொல்லிக் கொண்டிருந்தது .அதை நான் இப்போதும் அறிவேன்.
( முஸ்லீம்

ஐம்பெரும் சக்திகள் ( நிலம் 2)



ஜெர்மன் புவியியல் அறிஞரான ஆல்ஃபிரட் வெகனர் - 1912 ல் "கண்டங்கள் மற்றும் கடல்களின் தோற்றம் " என்ற ஆய்வு புத்தகத்தை வெளியிட்டார்

புவியின் மேற்புற தட்டு என்பது பூமியின் மேலுள்ள நிலப்பரப்பு நகர்வை குறிக்கிறது

பசிபிக் தட்டு வடக்கு நோக்கி நகர வட அமெரிக்கத் தட்டு தெற்கு நோக்கி நகர்கிறது இந்த இரண்டு தட்டுகள் சந்திக்கும் இடத்தில் நிலத்தில் பெரிய பள்ளமே உருவானதோடு மட்டுமின்றி அதன் இரண்டு கரைகளிலும் மண் குவியல் சேர்ந்து விட்டது. சாலைகளில், வயல்களில் இதன் விளைவாக உண்டான பிளைவுகள் தெரிகின்றன

வரிசையாக மரங்கள் நட்டு வைத்திருந்த மர தோப்பில் சில மரங்கள் மட்டும் வரிசையிலிருந்து மாறி வந்து புதுவரிசை அமைத்திருந்தன அவை பிளவின் இந்தப் பக்கம் இருந்தவை

"அவர்கள் வசித் திருக்கும் பூமியை அதன்

ஓரங்களிலிருந்து நிச்சயமாக நாம் படிப்படியாக குறைத்து வருவதை அவர்கள் காணவில்லையா ?

திருக்குர்ஆன் ( 13:14 )

நபி ( ஸல் ) அவர்கள் காலத்தில் அபூ துஜானா (ரலி) என்ற நபித்தோழர் , பஜ்ர் தொழுது முடித்துவிட்டால் விரைவாக வெளியேறி விடுவார் நபி (ஸல்) அவர்களுடைய துஆ வைக் கேட்கின்ற வரையில் பொறுமையாக இருக்க மாட்டார்

ஒரு நாள் இதுபற்றி அவரிடம் கேட்டார்கள்

"எனது பக்கத்து வீட்டு பேரீத்தப் பழங்கள் என் வீட்டில் விழுகின்றன என் குழந்தைகள் விழித்து எழுந்ததும் பசியினால் அப்பழங்களை எடுத்து சாப்பிட்டு விடுகிறார்கள் ஒரு நாள் என் குழந்தை தனது வாயில் ஒரு பழத்தை சாப்பிட முயற்சிக்கும் போது வாயில் கையை விட்டு வெளியே எடுத்து விட்டேன் ஆகவே அவர்கள் விழிப்பதற்கு முன்பே அவைகளை எடுத்து பக்கத்து வீட்டில் ஒப்படைக்க விரைகிறேன்

நபி (ஸல்) அவர்கள் அந்த பக்கத்து வீட்டுக்காரரிடம் "இந்த ஒரு மரத்திற்கு பகரமாக சுவனத்தில் 10 மரத்திற்கு நான் பொறுப்பேற்கிறேன் சுவனத்து மரங்கள் அவற்றின் வேர்கள் பச்சை மரகதம் அவற்றின் தண்டுகள் செந்நிறத் தங்கம் அவற்றின் கிளைகள் வெண்மாணிக்கமுத்துக்கள் அம்மரத்தில் எத்தனை பழங்கள் இருக்கிறதோ அத்தனை ஹூருல் ஈன் பெண்களும் உமக்கு திடைப்பார்கள் இந்த ஒரு மரத்தை தோழருக்கு கொடுத்து விடு" என்றார்கள்

அவன்" நான் தவணைக்கு விற்பவன் அல்லன் ரொக்கத்திற்கு விற்பவன் "என்றான்

உடனே அபூபக்கர் (ரலி ) அவர்கள் பாய்ந்து வந்து மதீனாவில் செழிப்பான இடத்தில் உள்ள 10 பேரீத்தம் மரங்களை கொடுத்து இந்த மரத்தை அபூதுஜானா (ரலி) அவர்களுக்கு அன்பளிப்பு செய்தார்கள்

நபி (ஸல்) அவர்கள் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களிடம் "உமக்கு சுவனத்து அந்த 10 மரங்களுக்கு நான் பொறுப்பேற்கிறேன் " என்றார்

அந்த நயவஞ்ச பக்கத்து வீட்டுக்காரன் தன் மனைவியிடம் நடந்த சம்பவத்தைக் கூறி 10 பேரீத்த மரங்களும் நமக்கு கிடைத்துள்ளது நம் வீட்டில் நிற்கும் பேரீத்த மரத்தையும் அனுபவித்தக் கொள்ளலாம் "என்றான்

அன்று இரவு தூங்கி விழித்தபோது அல்லாஹ்வின் மாபெரும் சக்தியால் அம்மரம் அபூதுஜானா (ரலி) அவர்களின் வீட்டிற்கு பின்புறம் இடம் பெயர்ந்து வந்து விட்டது

**Vaitiyar Malick**

அல்லாஹ் ஒருவன் என்று சொல்கிறோம்,

ஆனால் தன் திருமறையில் எல்லா இடங்களிலும்

தன்னை பண்மையாக "நாம்" என்றும்

"நாங்கள்" என்றும் சொல்கிறான்.

திருமறையில் "ஸூரத் இஹ்லாஸில்"

மட்டும் அல்லாஹு **#அஹத்** என்று

சொல்கிறான் அரபு மொழியில் "ஒன்று"

என்பதற்கு **#வாஹித்** என்பார்கள்.

இந்த #அஹத் என்ற சொல்லுக்கும்

#வாஹித் என்ற சொல்லுக்கும் உள்ள

வேற்றுமை என்ன? என்பதை ஆராயும் பட்சத்தில் #வாஹித் என்பது "ஒன்றை" குறிப்பிடும் சொல்லாகவும் #அஹத் என்பது "பண்மையான ஒருமை"யை குறிக்கும் சொல்லாகவும்

தெளிவாகிறது.

உதாரணமாக "மந்தை கூட்டம்" போன்ற (Collective Noun) பேச்சிலும் எழுத்திலும் ஒருமை ஆகவும் பொருளில் பண்மையாக இருப்பதைப் போன்று, எல்லாமே அவன் எனபதற்கு இதுவும் ஒரு சான்று.

திருமறையில் (நஹ்னு அக்ரப் இலைஹி மின் ஹப்லுல் வரீத்) நாங்கள் உங்கள் பிராண நரம்பை விட சமீபமாக உங்களிடம் இருக்கிறோம்.

என்று பொருளாகிறது . **#நஹ்னு** என்று

வருவதால் நம்மிடம் பண்மையாக

எப்படி இருக்கிறான் ?

நம்மிடம் நீராகவும் நெருப்பாகவும்

காற்றாகவும் மண்ணாகவும் ஜீவனாக

ஆன்மாவாகவும் இருப்பது யாவும்

அவன் என்பதே உண்மை என்று

அறிவோம்...

Thanks:- Irsath

**Vaitiyar Malick**
அவரின் கணக்கு படி 1. 1 முடி÷ 100 = 1/100 முடி 2. 1/100 முடி ÷ 1000 = 1/1000 முடி 3. 1/100000 முடி ÷ 100000 முடி = 1/ 10000000000 (0.00000000001) அப்படியெனில் மாட்டு தோலிலுள்ள முடியின் நீளம் இயல்பாக 5 mm இருக்கும். அதை ஆயிரம் கோடி பங்காக வெட்டினால் கிடைக்கும் ஒரு முடியின் பங்கு. கூறியுள்ளார் இங்கு ஒரு அணுவின் எடை அல்லது அதன் வடிவத்தின் அளவுஎன கூறியுள்ளார். இவ்விடம் அணு என்பது நுண்மையானது என்பது திருமூலருக்கு தெரிந்துள்ளது. இதை போல வள்ளலார் தனது அருட்பாவில் " பிரியும் வகையும்" பிரியாவகையும் தெரிந்தாய் பின்னையே " என அணுவின் அடிப்படை கொள்கையை தெளிவாக கூறுகிறார். அண்டபரப்பின் திறங்கள் அனைத்தும் அறிய வேண்டியே ஆசைப்பட்ட தறிந்து தெரிந்தாய் அறிவைத் தூண்டியே பிண்டத்துயிர்கள் பொருந்தும் வகையும் பிண்டம் தன்னையே. பிரியும் வகையும் பிரியாவகையும் தெரிந்தாய் பின்னையே��எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம் என்ன பொருத்தமோ. திருஅருட்பா மேலும் திருக்குறளை சிறப்பித்து கூறுமுகமாக இடைக்காட புலவர் "கடுகை துளைத்தேழ் கடலைக் புகட்டி குறுக்கத் தரித்த குறள் " என்று பாடினார். இதையே "அணுவைத் துளைத்தேழ் கடலைக் புகட்டி குறுக்கத் தரித்த குறள்"என்றார் ஔவையார். கடுகானாலும் பிளந்துக்கொண்டே போனால் பிளக்கமுடியாத ஒரு சிறு துகள் (ATOM) இருக்கும். அதைப் பிளக்கும் பொது பிரம்மாண்டமான சக்தி உண்டாகும். இதை அணுவியல் படித்தோர் அறிவர். அவ்வணுவையும் பிளக்க முடியும் என்று அறிவியல் நுட்பம் தற்போது நிறைந்துள்ளது. இவ்வளவு நுட்பமான அணுவில் நிறைந்திருப்பது என்ன ? என்ற வினாவிற்கு தற்போதைய ஆய்வை களமாகக் கொண்டு பார்த்தால், அனுவைப்பிளந்து அவற்றின் அளப்பெரிய ஆற்றலை நம் கண்டும் கேட்டும் ஆண்டுகள் பல கடந்து விட்டன. அணு ஒன்றைப் பிரித்துக் கொண்டு போகும்போது, அதனுள் காணப்படும் உப அணுத்துகள்கள்தான் (Subatomic Particles). அண்டம் தோன்றும் போது எவை உருவாகியனவோ, அவைதான் அணுவுக்குள்ளும் இருக்கின்றன. அணு என்பதைப் பிரிக்க முடியாது என்னும் கருத்து ஆரம்பத்தில் விஞ்ஞானிகளிடையே இருந்திருக்கிறது. ஆனால் இலத்திரன், புரோட்டான், நியூட்ரான் என்று அது பிரிக்கப்பட்டது. தொடர்ந்து நியூட்ரானும், புரோட்டானும் பிரிக்கப்பட்டன. அப்படிப் பிரித்துப் பார்த்த போது, அவை இரண்டுக்குள்ளும் இருந்தவை ஒரேவிதமான குவார்க்குகள் மட்டும்தான். அதாவது பூமியில் உள்ள அனைத்துமே குவார்க்குகளால் உருவானவைதான். இவற்றுக்குள் இருக்கும் ஆற்றலை ஆற்றை ஆய்ந்த போது இந்த வெட்டவெளி என்னும் பால்வெளி முழுவதும் நிறைந்துள்ள வெறும் சக்தியில் வெளிப்பாடே அணுவிற்குள்ளும் இருந்தது. அங்கே வெட்டவெளியும் இருந்தது. இந்த அகண்ட வெளியையும் அணுவையும் இணைக்கும் மூலத்தை தேடி அலைந்த விஞ்ஞானிகள் கடந்த 1991 ஆம் ஆண்டு கண்டு கொண்டதே சரக் கோட்பாடு என்கின்ற (String Theory) விதியாகும். சரி அணுவை பற்றி இங்கு சொல்ல காரணம் தமிழர்கள் அணுவை பற்றி நன்கு அறிந்துள்ளனர். அணுவை பற்றி தேடும் போது பல

**Vaitiyar Malick**
விஞ்ஞானமும் மெய்ஞானமும்
அணு என்பதை கண்ணால் பார்க்க முடியாது, தொட்டு உணர முடியாது, நுகரவும் முடியாது. அப்படிப் பார்க்க முடியாத, உணர முடியாத, நுகர முடியாத அணுக்களால் தான் நமது உடன், நம் உண்ணு உணவு, உடுத்தும் உடை, குடிக்கும் தண்ணீர், நம்மை தாங்கும் நிலம், மரம், செடி, கொடி மற்றும் அனைத்து, எல்லாமுமாக உருவாகி இருக்கிறது. அணு கண்ணுக்கு தெரியும் பால் வெளி முழுவதும் இச்சக்தியின் வெளிப்பாடே, இந்த அணு தான் பால்வெளியின் தோற்றதிற்கும், பரிணாமத்திற்கும், உருவ அமைப்பிற்கும் தொடர்புடைய மறைபிற்கும் ,

மற்றும் பல கேள்விகளுக்கும் விடையாகும் என்கிறார் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன். அந்த அணுக்களுக்குள் உப அணுக்கள் மறைந்திருக்கிறது. சரி திருமூலர் என்ன சொல்றார்னு பார்ப்போம். அணுவில் அணுவினை ஆதிப் பிரானை அணுவில் அணுவினை ஆயிரம் கூறு இட்டு அணுவில் அணுவை அணுக வல்லார் கட்கு�அணுவில் அணுவை அணுகலும் ஆமே. அணுவில் அணுவினை ஆதிப் பிரானை - படைப்பாற்றல் அணுவில் அணுவாக உள்ளது, அது தொடக்க காலம் முதல் உள்ளது, அணுவில் அணுவினை ஆயிரம் கூறு இட்டு - நுண்ணியதிலும் நுண்ணிய அணுவினை ஆயிரம் பங்கிட்டு, அணுவில் அணுவை அணுக வல்லார் கட்கு - அணுவில் அணுவை அவற்றில் ஒன்றை அணுக வல்லோர்க்கு அணுவில் அணுவை அணுகலும் ஆமே - படைப்பாற்றல் அணுவை அணுகலாம். என்றுரைக்கிறார். அணுவின் அளவை கூறுகையில் மேவிய சீவன் வடிவது சொல்லிடின் , கோவின் மயிர் ஒன்று நூறுடன் கூறிட்டு, மேவிய கூறு அது ஆயிரம் ஆயினால் , ஆவியின் கூறு நூறாயிரத்தில் ஒன்றே, - திருமூலர் அருளியது படைப்பாற்றலின் வடிவத்தை சொல்வதென்றால் மாட்டின் தோலிலுள்ள முடியை நூறு பங்காக வெட்டி, வெட்டிய ஒரு பங்கு முடியை ஆயிரம் கூறாக வெட்டி, அக்கூற்றில் ஒரு கூற்றை ஒரு நூறாயிரம் பங்காக வெட்டினால் அதில் கிடைக்கும் ஒரு பங்கிலும் அவர் வடிவத்தை காணலாம் என கூறுகிறார். சரி

**Vaitiyar Malick**
மேலும்
# இரத்தம்
# பல் ஈறுகள்
# எச்சில்
தொடர்பான பிரச்சினைகளும் நிலம் என்னும் பஞ்சபூதத்தின் பலகீனத்தயே வெளிப்படுத்துகிறது.
.
மண்ணீரலில் ஏற்படும் தற்காலிக உபத்திரவதிற்கு தான் உடலின் அடிப்படையை புரிந்துக்கொள்ளாத மருத்துவத்துறை இரத்தப்புற்றுநோய் (Blood Cancer) என்று பெயர் வைத்து காலத்திற்கும் இரத்தத்தை மாற்றிக்கொண்டு இருக்கிறது.
குறள் - 948
நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.
நோயாளியின் உடல்மாற்றங்களால் வந்துள்ள நோயை இன்னது என்று அறிந்து அந்த நோய் வருவதற்கான மூல காரணத்தையும் அதைத் தீர்க்கும் வழியையும் அறிந்து அதைப் போக்குவதில் தவறு வந்துவிடாமல் மருத்துவர் செயல்பட வேண்டும்.
மண்ணீரல் என்னும் ராஜ உறுப்பு சரியாக இயங்கவில்லை என்றால் உடலில் தோன்றும் அறிகுறிகள்
# பலகீனமான செரிமானம் (Indigestion)
# செரிமானத்திற்கு பின் உருவாகும் கழிவுகளை வெளியேற்றுவதில் ஏற்படும் சிக்கல்
போன்ற எதிர்மறை உணர்வுகள் வெளிப்படும். இவையாவும் இருதயம் என்னும் ராஜ உறுப்பு சரியாக இயங்கவில்லை என்பதை வெளிப்படுத்தும் அறிகுறிகளே.
.
நீரிழிவு (Diabetes) சர்க்கரை வியாதி / சர்க்கரை வியாதி (Sugar Complaint)
உண்மையில் சர்க்கரை வியாதி என்று ஒரு நோயே கிடையாது. அஜீரணத்தைத் தான் உடலின் அடிப்படையை புரிந்துகொள்ளாத மருத்துவத்துறை நீரிழிவு (Diabetes) சர்க்கரை வியாதி என்று பெயர் வைத்தது. தங்களது சுயலாபத்துக்காக சர்க்கரை வியாதி (Sugar Complaint) என்கிற பெயர் வைத்து பரப்புரை செய்து தொடர்ச்சியாக பல ஆண்டுகலாக மக்களை குழப்பி வருகின்றனர்.
.
பஞ்சபூதம் - நிலம்
ராஜ உறுப்பு - மண்ணீரல்
துணை உறுப்பு - இரைப்பை
வெளியுறுப்பு - உதடுகள்
நிறம் - மஞ்சள்
சுவை - துவர்ப்பு மற்றும் இனிப்பு
எதிர்மறை உணர்வுகள்- கவலை, மன உளைச்சல் (Tension), நம்பிக்கையின்மை
**Vaitiyar Malick**
நிலத்தினுள் அமைந்து கிடக்கும் மண்ணினது இயல்பை அதில்
முளைத்த பயிர்கள் எவ்வாறு புறத்தே காட்டுமோ, அவ்வாறே,
ஒரு நல்ல குலத்தில் தோன்றியவரது இயல்புகளை அவர் பேசும்
சொற்களே காட்டிவிடும் என்கிறார் வள்ளுவர்.
• தமிழ்ப் பழமொழி
‘விளையும் பயிர் முளையிலே தெரியும்’ என்பது தமிழில் வழங்கி
வரும் ஒரு பழமொழி. நிலத்தின் இயல்பை முளைத்த விதையின்
முளை தெரிவிக்கும். முளையின் நலமே விளையக்கூடிய பயிரின்
தன்மையைக் காட்டும். என்பது இப்பழமொழியின் பொருள்.
இத்தகைய உண்மைகளை எல்லாம் தன் பட்டறிவினால்
(Experience) அறிந்திருந்த வள்ளுவர், நல்ல குலத்தில்
பிறந்தாரின் வாய்ச்சொல் அவர்களது இயல்பை வெளிப்படுத்தும்
என்பதற்கு உவமையாக, மண் வேதியியல் தத்துவத்தைக்
குறிப்பிடுகிறார்.
என்பு இலதனை வெயில்போலக் காயுமே
அன்பு இலதனை அறம்.
(குறள்: 77)
(என்பு = எலும்பு, இலதனை = இல்லாததை, காயும் = துன்புறுத்தும்)
பிறரிடம் அன்பு செலுத்துவதின் தேவையை, அதன் பெருமையைக்
குறிப்பிடவந்த வள்ளுவர். விலங்குகள் பற்றிய ஓர்
அறிவியல் உண்மையையும் வெளிப்படுத்துகிறார்; புழு பூச்சி
என்றோ, பிற உயிரனங்கள் என்றோ வள்ளுவர் குறிப்பிட்டிருக்கலாம்.
சொல்ல வந்த பொருளை விளக்குவதற்கு உரிய உவமையாக
அது அமைந்திருக்கும். ஆனால், எலும்பு இல்லாத விலங்குகள் என
இனம்பிரித்து ‘என்புஇல்’ என்று ஏன் கூறவேண்டும்?

விலங்கினங்களில் எலும்பு உடையவை, எலும்பு இல்லாதவை என்று
இரு பிரிவுகள் உண்டு. எலும்பு உடைய குதிரை, யானை, மாடு
போன்றவை வெயிலின் வெம்மையை ஓரளவுக்குத்
தாங்கிக்கொள்ளும். வெயிலின் வெம்மை அதிகரித்தால் அந்த
இடத்தைவிட்டு நகர்ந்து, வெயில் இல்லாத பாதுகாப்பான
இடத்திற்குச் சென்று விடும். ஆனால் வெயிலின் வெம்மையைக்
கொஞ்சம் கூடத் தாங்கிக் கொள்ள இயலாத பூச்சிகள் புழுக்கள்,
அந்த இடத்தை விட்டு நகரமுடியாமல் துடி துடித்துக் கொண்டு
துன்புறும். எனவேதான், எலும்பு இல்லாத இனத்தைச் சார்ந்தவை
என இனம் பிரித்து உயிரினங்களைச் சுட்டுகிறார். தான்
அறிந்திருந்த விலங்கியல் உண்மையினைத் தான் சொல்லவிரும்பிய
கருத்துக்கு உவமையாகக் குறிப்பிடுகிறார் வள்ளுவர்.

**Vaitiyar Malick**

ஆன்மாவானது யாது? உயிர் பிரிந்தது
என்று கூறுகிறோமே அப்படி நமது
உடலை விட்டு என்ன பிரிந்த்து?
- திருமூலர்

நமது உடலில் இருந்து விந்துவாக கருவுக்குள் சென்று எது உயிரானதோ அதுவே நமது உடலில் இருந்து பிரிந்துவிட்டால் பிண்டமாக கருதப்படுகிறது (இறப்பு).

“ஆக்குகின்றான் முன்பிரிந்த இருபத்தஞ்சு
ஆக்குகின்றான் அவன் ஆதி எம் ஆருயிர்
ஆக்குகின்றான் காப்பக்கோளகை யுளிருந்து
ஆக்குகின்றான் அவன் ஆவது அறிந்தே” (தி.ம 451)

பொருள்:

-------------

இறைவன் நமது இறப்பின் போது பிரித்த இருப்பத்தைந்து தத்துவங்களையும் தோற்றுவிக்கிறார்.
பிரிந்த 25 தத்துவங்களையும் விந்துவின் வாயிலாக அன்னையின் கருப்பையில் சேர்த்து உயிர் கொடுக்கிறார். அவர் உடல் வளர்ச்சிக்கு தேவையானவற்றை அறிந்தே படைக்கிறார்.

25 தத்துவங்கள்:

----------------------

பஞ்ச பூதம்(5) : பிருதிவி - (பூமி - நிலம் - மண்), அப்பு - (ஜலம் - நீர் - புனல்), தேயு - (அக்னி - நெருப்பு - அனல்), வாயு - (கால் - காற்று - கனல்), ஆகாயம் ( வெளி - வானம் - விசும்பு).
பஞ்ச தன் மாத்திரை(5): சுவை (ரசம்), ஒளி (ரூபம்), ஊறு (ஸ்பரிசம்), ஓசை (சப்தம்), நாற்றம் (கந்தம்).
பஞ்ச ஞானேந்திரியம்(5):மெய், வாய், கண், மூக்கு, செவி.
பஞ்ச கன்மேந்திரியம்(5): வாக்கு (வாய்), பாணி (கை), பாதம் (கால்), பாயுரு (மலவாய்), உபஸ்தம்(கருவாய்).
நான்கு அந்தக்கரணம்(4): மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.
புருடன்(1): அறிவு.

--------------------------------------------

------------------------------------

இந்த 25 தத்துவங்கள் சேர்ந்ததுதான் நமது ஆத்மா. இந்த 25 தத்துவங்களைக் கொண்டதுதான் நமது உயிரணு. இதை இன்றை அறிவியல் நவீன ஆராய்ச்சியின் மூலம் கண்டறிந்துள்ளது. ஆனால் திருமூலர் அருளிய ஞானத்தால் நமக்கு என்றைக்கோ சொல்லிவிட்டார்.

**Vaitiyar Malick**

(பூமியின் மொத்த வரலாற்றை சுற்றி ஒரு வேக பயணம்)
பிறந்த குட்டியாக எதை ஒன்றையும் பார்த்தாலும் பார்க்க மிக அழகாக இருக்கும் என்ற லாஜிக் பூமிக்கு பொருந்தாது. காரணம் பூமி பிறந்த போது அது ஒரு மிரட்டும் நரக கிரகம்.
அதன் பரப்புகளில் எட்டி பார்த்தால் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை உருகிய பாறைகளின் லாவா குழம்புகள் உலா வந்து கொண்டிருப்பதை காண முடியும்..
அந்த சூடான கொழ கொழ பாறை கூழால் தான் இந்த கிரகம் சூழ பட்டிருந்தது.
இந்நிலையில் பூமியின் சுழற்சி வேகம் இன்றை போல 24 மணி நேரமாக இருந்திருக்க வில்லை. அன்றைய ஒரு நாள் என்பது வெறும் 6 மணி நேரங்கள் மட்டும் தான்.
குறிப்பிட்ட காலத்திற்கு எல்லாம் கலந்த கலவையாக இருந்த பூமியின் தனிமங்களை தனித்தனி அடுக்குகளாக வரிசையாக அடுக்கிவைத்த புண்ணியம் பூமியின் ஈர்ப்பு விசையையே சாரும். அவைகள் இரும்பு நிக்கல் போன்ற கனமான தனிமங்களை பூமியின் மையத்திலும் ஏனைய கணம் குறைந்த தனிமங்களை படி படியாக மேல் அடுக்கில் ஒன்றின் மேல் ஒன்றாகவும் அடுக்கி வைத்தன.
மையத்தில் உள்ள இரும்பு நிக்கல் போன்றவையால் பூமிக்கு காந்த புலம் என்ற ஒன்று உருவாகி பூமியை ஒரு ராட்சத காந்தமாக மாற்றியது.
இந்த காந்த புலங்கள் சூரியனில் இருந்து வரும் சக்தி யூட்ட பட்ட துகள்களில் இருந்து சூரிய புயலில் இருந்து பூமியை காக்க தொடங்கின.
இன்றும் காத்து கொண்டு இருக்கின்றன.
இப்படி ஆர்பாட்டமாக சுற்றி சுழன்று கொண்டிருந்த பூமியின் வாழ்வில் ஒரு மறக்க முடியாத விபத்து ஒன்று ஏற்பட்டது... மோதல் விபத்து.
அதாவது கிட்ட தட்ட 450 கோடி ஆண்டு முன் இளைய பூமியை விண்வெளி பொருள் ஒன்று மிக வேகமாக தாக்கியது.

**Vaitiyar Malick**

தாக்கிய அந்த பொருள் ஏதோ சிறிய விண்கல் அல்ல (பூமி வரலாற்று பாதையில் விண்கல் மோதல் என்ற ஒரு நிகழ்வும் நடக்க இருக்கிறது ஆனால் இப்போது இல்லை அதற்கு இன்னும் சில கோடி ஆண்டுகள் செல்ல வேண்டும்.
மோதிய அந்த பொருள் ஒரு முழு கிரகம் அதன் அளவு கிட்ட தட்ட இன்றைய செவ்வாய் கிரகம் அளவு. அது மோதிய வேகம் அசுர தனமான மணிக்கு கிட்ட தட்ட நாற்பது ஆயிரம் கிலோ மீட்டர் வேகம்.
அந்த தாக்கத்தால் பூமி மிக பெரிய அளவில் பாதிக்க பட்டது அதன் உடலில் ஒரு சிறிய பகுதி பிய்த்து எறிய பட்டு அவைகள் ஈர்ப்பு விசையால் ஒன்றிணைந்து பிறகு பூமியை தொடர்ந்து சுற்ற ஆரம்பித்தது. பிற்காலத்தில் "நிலா " என்று அழைக்க பட்டு கவிஞர்கள் கவிதை எழுத ...குழந்தைகளுக்கு காட்டி சோறூட்ட பயன்பட்டது.

(பிய்த்து எறிய பட்ட இடத்தில உண்டான பள்ளங்கள் தான் பிற்காலத்தில் தன்னீர் நிரப்ப பட்டு கடல்கள் என்று அழைக்க பட்டன. இன்று நிலாவின் பருமன் எவ்வளவு உள்ளது என்று கணக்கு போட்டு பார்த்த ஆய்வாளர்கள் அதை உடைத்து தூள் ஆக்கி நமது கடலில் போட்டு நிறப்பினால் கிட்ட தட்ட பூமியின் கடலை தூர்க்கும் அளவு சரியாக நிலா இருப்பதாக சொல்கிறார்கள்)
மோதலில் தான் காதல் உண்டாகிகிறது பிறகு வாழ்க்கை துணை கிடைக்கிறது என்ற லாஜிக்கிற்கு ஏற்ப பூமி மோதலுக்கு பின் தனக்கு என்று ஒரு துனையை அதாவது துணை கிரகத்தை உண்டாக்கி கொண்டது.
அந்த துணை கிரகம் சும்மா வெட்டியாக சுத்தி வரவில்லை. பூமியில் பல விஷயங்களை அது நிர்ணயிக்கிறது.(கணவன் செயல்பாட்டில் பின்னணியில் இருந்து உதவும் மனைவியை போல்) குறிப்பாக பூமியின் பருவநிலை.
**Vaitiyar Malick**
பூமி தனது அச்சில் 23.5 டிகிரி சாய்ந்து கொண்டு சுற்றுவதால் தான் பருவ மாற்றங்கள் ஏற்படுகின்றன என்று நமக்கு தெரியும். சரி இதில் நிலவின் பங்கு என்ன?
ஒரு மைதானத்தில் சங்கிலியால் கட்ட பட்ட இரும்பு குண்டு ஒன்றை ஒருவர் கையால் பிடித்து வேகமாக சுற்றுவதாக கற்பனை செய்யுங்கள் .இப்போது அவர்
அந்த குண்டின் எடையால் பாதிக்க பட்டு ஒரு குறிப்பிட்ட பேலன்ஸ் இல் சுழல்வதை பார்க்கலாம் .அந்த குண்டு இவரை இழுத்து கொண்டு சுற்றும். திடீரென அதை விடுத்தால் அவரும் அந்த சூழல் பேலன்ஸ் இல் இருந்து விடு
படுவார் அல்லவா.
அப்படி தான் நிலாவின் ஈர்ப்பு விசையால் பூமி தனக்கும் நிலவுக்கும் ஒரு கற்பனை கயிறு கட்டி விட்டதை போல அதை இழுத்து கொண்டு சுற்றி வருகிறது. மேலும் 'பூமி பெலன்ஸி'ல் நிலா முக்கிய பங்கு வகிக்கிறது. நிற்க போகும் பம்பரம் போல பூமி தலை ஆட்டி நிலையில்லாமல் சுற்றாமல் நிலையான சுழற்சிக்கு இது உதவியாக இருக்கிறது.
பூமி இப்போது இருக்கும் அச்சில் சூழல இதுவும் ஒரு காரணம். அப்படி அந்த அச்சில் சுழல வில்லை என்றால் பருவங்கள் ஏற்பட்டிருக்காது.
இது தவிர நிலவின் ஈர்ப்பு விசை இன்னோரு காரியத்தை செய்தது பூமியை இழுத்து பிடித்து 6 மணிநேரமாக இருந்த பூமியின் சுழற்சி வேகத்தை படி படியாக குறைத்து 24 மணி நேரமாக மாற்றியது.
இப்படி சுற்றி திரிந்து கொண்டிருக்கும் இந்த சூழல் பூமியில் உயிரினங்கள் ஏதும் இன்றி கிட்ட தட்ட 80 கோடி ஆண்டுகளுக்கு தொடர்ந்தது. காரணம் உயிரினங்கள் உண்டாக மிக முக்கிய தேவை ஒன்று இருந்தது.
"நீர் இன்றி அமையாது உலகு"

## ஐம்பெரும் சக்திகள் - (நிலம் 3) 24-05-2017



நெம்புகோல் தத்துவத்தை உலகிற்கு தந்தவர் ஆர்க்கிமிடிஸ் என்கிற கிரேக்க விஞ்ஞானி கி.முவில் சொன்னார் வலுக் குறைவான விசையை நெம்புகோலின் நீண்ட புயத்தின் மீது பிரயோகித்து, குட்டையான புயத்தை பளுவான சுமையின் மீது செயல்படுத்துமாறு செய்தால் பளு நகரும் _இதுதான் நெம்புகோலின் தத்துவம் ஆர்க்கிமிடிஸ்க்கு பல நூற்றாண்டு முன்பே எகிப்திய பொறியியல் வல்லுநகர்கள் நெம்புகோல் தத்துவத்தை பயன்படுத்தி உள்ளனர். சரி அது இருக்கட்டும்
ஆர்க்கிமிடிஸ் தான்கண்டுபிடித்த தத்துவத்தை தன் சிரக்யூஸ் மன்னன் கெய்ரானுக்கு எடுத்துரைக்கையில் "வேறொரு புவிக்கோளம் இருக்குமாயின் தாம் அங்கே சென்று நமது பூமியைத் தூக்கி காட்டுவேன்" என்று எழுதினார் மன்னனும் தன் நாட்டுப்பதிவில் பதிப்பித்தான்
(இது கொஞ்சம் ஓவராக தெரியுதா ? )
பூமியை நகர்த்த நெம்புகோலின் நீண்ட புயத்தைத் தம் கையினால் அழுத்தி, பூமியின் நிறைக்குச் ( எடைக்குச் ) சமமான நிறையுள்ள எடை ஒன்றைத் தூக்க முடியுமென அவர் கருதினார்
.... ஆனால் பூமியின் எடை எவ்வளவு பிரமாண்டமானது என்பதை ஆர்க்கிமிடீஸ் அறிந்திருந்தால் அப்படி சொல்லி இருக்க மாட்டார். இருந்தாலும் சொல்லி அதைப் பதிவும் செய்தாகி விட்டது .
ஆமா, நம்ம பூமியை எப்படி எடை போட்டார்கள் ? சொல்றேன்,
இரண்டு பொருட்களுக்கு இடையில் ஏற்படும் ஈர்ப்பு சக்தி இரு பொருளின் எடை இவற்றிற்கு இடையுள்ள தூரம் மற்றும் புவி ஈர்ப்பு விசை இவற்றைக் கொண்டு பூமியின் எடை துல்லியமாக 6,00,00,000,00,00,000,00,00,000 அதாவது ஆறு கோடி கோடி கோடி டன் .

ஒரு மனிதன் 60 கிலோ எடையை தூக்க முடியும் என்றால் பூமியைத் தூக்குவதற்கு நெம்புகோலின் நீளம் 100,00,00,000,00,00,000,00,00,000 அதாவது நூறு கோடி கோடி கோடி மடங்கு நீளமுள்ள புயம்கொண்ட நெம்புகோல் தேவை.
சிறிய புயத்தின் முனையை ஒரு செ.மீ அதா யது அரை இன்ச்க்கும் சற்று குறைவாக உயர்த்துவதற்கு, மற்ற புயமானது வானவெளியில்
16,000,00,00,000,00 ,00,000 பதினாயிரம் கோடி கோடி கோடி கி.மீ நீளத்துக்கு மாபெரும் வில் வளைவில் நகர வேண்டியிருக்கும்
சரி, இந்த சோதனையை செய்வதற்கு எவ்வளவு நேரம் தேவையாக இருக்கும் ?
60 கிலோ. எடையை ஒரு வினாடியில் ஒரு மீட்டர் உயரத்திற்கு ஆர்க்கிமிடீஸ் தூக்குவதாக வைத்துக் கொண்டால் - இது ஏறக்குறைய ஒரு குதிரை திறன் (1 HP ) உள்ள வேலையாகும் எனவே இந்த பூமியை ஒரு செ.மீ அல்லது அரை இன்ஞ்ச்க்கும் குறைவான அளவிற்கு பூமியை நகர்த்த அவருக்கு
1,00,00,000,00,00,000,00,00,000 விநாடிகள் அல்லது 30 லட்சம் கோடி ஆண்டுகள் தேவையாக இருக்கும் ..
இது நடக்கிற காரியமா ?
எனவே மனித சக்தியைக் கொண்டும் இயந்திரவியல் துணை கொண்டும் இந்த பூமி அரை இன்ஞ்ச்க்கும் குறைவாக நகர்த்தவோ, நெம்பவோ முடியவே முடியாத நிலையில் ...
''பூமியில் பெருமையுடன் கர்வம் கொண்டு நடக்க வேண்டாம் . ஏனென்றால் நிச்சயமாக பூமியைப் பிளந்துவிடவோ , அல்லது மலையின் உச்சியை அடைந்துவிடவோ உங்களால் முடியாது"
திருக்குர்ஆன( 17 : 37 )

ஐம்பெரும் சக்திகள் (நிலம் 4)



வானத்தின் மேலே செல்வது போல அத்தனை சுலபமாக பூமியின் அத்தனை ஆழம் செல்ல முடியாது காரணம் பூமியின் மேற்பரப்பைக் கடந்தாலே 1500 டிகிரிக்கு சூடு எகிறி விடும் தண்ணீர் 100 டிகிரியில் கொதித்து ஆவியாகிவிடும் அப்படி என்றால் 1500 டிகிரி சூடு கற்பனை செய்ய முடிகிறதா ?
பனூ இஸ்ராயீல் களுக்கு அன்று திருநாளாக இருந்தது நபி மூஸா (அலை) அவர்கள் " திருமணமானவர் விபச்சாரம் செய்தால் அவனைக் கல்லால் அடித்துக் கொள்ள வேண்டும் திருமணமாகதவர் விபச்சாரம் செய்தால் சவுக்கால் அடிக்க வேண்டும்" என்று பயான் செய்தார்கள்
காரூன் ஒரு விபச்சாரிக்கு பொன்னும் பொருளும் கொடுத்து " நபி மூஸாவிற்கு எனக்கும் தொடர்பு இருக்கிறது " என்று அவதூறு சொல்லச் சொன்னான்
நபி மூஸா (அலை) அவர்கள் அந்த பெண்ணிடம் ." தவ்ராத் வேதத்தை தந்தவனும், பனி இஸ்ராயீல் களுகக கடலை பிளக்கச் செய்தவனுமான இறைவன் மீது சத்தியமாகக் கூறு" என்று சொன்னதும் அந்தப் பெண் எல்லா உண்மைகளையும் சொல்லி காரூன்தான் இப்படிச் சொல்லச் சொன்னதாக ஏவினான்" என்றாள்
நபி மூஸா (அலை) இறைவனிடம், காரூனை சபிக்கும் படி பிரார்த்திக்க இறைவனும் , உமக்கு கீழ்படியும்மாறு பூமிக்கு கட்டளை இட்டுள்ளோம் என்றான்
"பூமியே இவர்களை பிடி" என்று நபி மூஸா (அலை) அவர்கள் பூமிக்குக் கட்டளையிட பூமி, காரூனையும் அவனது இரு துணைவர் களையும் பூமி பிளந்து விழுங்கி விட்டது
"காரூனையும் அவனுடைய மாளிகையையும், நாம் பூமியில் சொருகி விட்டோம் அல்லாஹ்வுக்கு எதிரிடையாக அவனுக்கு உதவி செய்யக் கூடிய கூட்டத்தார் ஒருவரும் இருக்கவில்லை அவன் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளவும் முடியவில்லை "
திருக்குர்ஆன் ( 28 : 81)
தினந்தோறும் ஒரு ஆள் ஆழத்துக்கு காரூன் பூமிக்கடியில் கியாமத்து நாள் வரை சென்று கொண்டிருக்கின்றான் என்பதாக கத்தாதா (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள்
பூமியின் மேற்பரப்பை கடந்ததும் காரூன் 1500 டிகிரி சூட்டில் மாட்டிக் கொள்வான்

கொஞ்சம் விஞ்ஞான ரீதியாக சிந்தித்திக்கும் போது .............
பூமத்திய ரேகைக்கு விட்ட மாக அமையும்படி ஒரு துளையைப் பூமிக்கு குறுக்கே போட்டு அதன் வழியாக ஓர் உலோகக் குண்டைப் போட்டால் என்ன நிகழும் ?
அப்படி ஒரு துளையை போட முடியாது கற்பனையில் போட்டதாக வைத்துக் கொண்டால் சுமார் ஒரு மணி நேரம் இருபத்தி நாலு நிமிடத்தில் பூமியின் மறுமுனைக்குச் சென்று அந்த உடனே திரும்பி விடும் அதைக் கையில் எடுப்பதற்குள் அந்த உலோகக் குண்டு மறுபடியும் உள்ளே போய் திரும்பும்
அதாவது போக 42 நிமிடம் , வர42 நிமிடம இப்படி இருபுறமும் ஊசலாடிக் கொண்டிருக்கும் இதை சிம்பிள் ஹார்மோனிக் மோஷன் என்கிறார்கள்
பக்கத்து வீட்டு B SC படிக்கும் மாணவர்களிடம் கேட்டால் சொல்வார்கள்

ஐம்பெரும் சக்திகள் (நிலம் - 5)



"ஒரு காலத்தில்தமிழ்நாட்டில நெல் முளைத்த
இடங்களில் எல்லாம் இப்போது கல் முளைத்திருக்கிறது" என்ற வருத்தம் விவசாய குடும்பங்களில் இருக்கிறது தங்களின் விவசாய நிலத்தை மீட்டெடுக்க நாட்டின் தலை நகரில் தவம் கிடக்க வேண்டிய அவலம விவசாயிகளுக்கு இருக்கிறது ஒரு கோடியே 32.5 லட்சம் ஏக்கர் ஒரு காலத்தில் தமிழ்நாட்டில் நெல் முளைத்த நிலத்தில் விவசாயம் நடந்தது.
2012 ன் கணக்குப்படி ஒரு கோடியே 20 லட்சம் ஏக்கர் நிலத்தில் மட்டும்தான் விவசாயம் நடக்கிறது 12.5 லட்சம் ஏக்கர் நிலம் காணாமல் போய்விட்டது
நடிகர் வடிவேலு , "என் கிணற்றைக் காணவில்லை" என்று போலீஸில் புகார் செய்வார். அது பெரிய காமெடியாக நீங்களும் நானும் சிரிச்சோம்.
ஆனால் இப்போ 12.5 லட்சம் ஏக்கர் விளை நிலத்தை காணவில்லை
உங்களுக்கு சிரிப்பு வருகிறதா ?
சீனாவில் 1998 ல் ஆயிரக்கணக்கான ஏக்கர் காடுகளை அழித்து அதில் 56 லட்சம் வீடுகளை கட்டி மககளை அதில் குடியமர்த்தியது சீனா
காடுகளின் தடுப்பு இல்லாததால் "யாங்ட்சீ" ஆற்று வெள்ளத்தில் அத்தனை வீடுகளும் மக்களும் வெள்ளத்தில் காணாமல் போயினர்
விவசாய நிலங்கள் வீடுகளுக்காக வேகமாக சூறையாடப்படுகிறது
"பூமி இவ்வளவு விசாலமாக இருந்தும், அது சமயம் அது உங்களுக்கு மிக நெருக்கி விட்டது"
திருக்குர்ஆன் (9 : 25)
நபி (ஸல்) அவர்கள் தன்னை விளை நிலத்தோடு ஒப்பிட்டு,
"மழைத் தண்ணீரை தேக்கி வைத்து தானும் பயன்பற்று பிறருக்கும் பயனளிக்கும் சதுப்பு நிலம் போன்றவன் நான் " என்கிறார்கள்
ஹதீஸ்
சற்று சிந்தியுங்கள் நீங்கள் வயல் வரப்பு நிலங்களை விலைக்கு வாங்கி வீடு கட்டுவதாக எண்ணியிருந்த உங்கள் திட்டத்திற்கான விவசாய நிலத்தை நபி (ஸல்) அவர்கள் தன்னோடு ஒப்பிட்டுள்ளார்கள் . கண்டிப்பாக வாங்கிய விளை நிலத்தில் உங்களது வீடு கட்டித்தான் ஆக வேண்டுமா ?
""உங்கள் மனைவிகள் உங்கள் விளை நிலங்கள் .ஆகவே உங்கள் விளை நிலங்களுக்கு நீங்கள் விரும்பியவாறு சென்று உங்களுடைய பிற்காலத்திறகு வேண்டியதை தேடிக் கொள்ளுங்கள். நிச்சயமாக நீங்கள் அல்லாஹ்வைச் சந்திப்பீர்கள் என்பதையும் உறுதியாக அறிந்து Pயந்து கொள்ளுங்கள்
திருக்குர்ஆன் ( 2 : 23)

விவசாயம் விளை நிலம் இல்லாத நாடும்
மனைவி இல்லாத வீடும் எப்படி சந்தோஷமாக இருக்க முடியும் ?

**Vaitiyar Malick**
பொதுவாக சதுப்பு நிலப்பகுதி என்பது தனிப்பட்ட ஒரு நிலப்பகுதி அல்ல. கடல்கள், ஆறுகள் மற்றும் ஏரிகளுடன் தொடர்புடைய முக்கியமான பகுதியாகும். ஓர் ஏரியின் உபரி நீரோ அல்லது ஆறினுடைய உபரிநீரோ நீண்ட காலமாக ஒரே இடத்தில் சேர்வதால் உருவாகும் நிலப்பகுதிதான் சதுப்பு நிலம். இந்த நிலப்பகுதியானது 'ஸ்பாஞ்ச்' போல செயல்பட்டு நீரை உறிஞ்சி தக்கவைத்துக் கொள்ளும் தன்மையை உடையது. இந்த நிலப்பகுதியானது மழைக்காலத்தில் நிலத்துக்கு வரும் தண்ணீரைத் தக்க வைத்துக் கொள்ளும். பிறகு வறட்சி நிலவும்போது தண்ணீரை வெளியேற்றி நிலத்தினைத் தானே ஈரப்பதமாக வைத்துக் கொள்ளும். இதனால் பறவைகள் வருகை எந்த நேரமும் இருந்து கொண்டே இருக்கும்

**Vaitiyar Malick**
கடலின் அருகில் அமைந்திருப்பதால் கடல் நீரையும், கடல் பொங்கும் நேரத்தில் நிலத்துக்குள் வரும் நீரைத் தேக்கி வைக்கும் தன்மையும் சதுப்பு நிலத்துக்கு மட்டுமே உண்டு.

**Rahmath Rajakumaran**
ரஷ்யாவின் "தைகா" காடுகள் அமேசான் காடுகளை விட இரண்டு மடங்கு பெரியவை இக்காட்டை ஒருபுறம் அமெரிக்கா சுரண்ட இன்னொரு பக்கம் கள்ளக் கடத்தல் கொள்ளையடிக்க செடார், எல்ம் , போன்ற மரங்கள் திருட்டுத்தனமாக வெட்டி சீனா, ஜப்பான் தென் கொரியா போன்ற நாடுகளுக்கு கடப்படுப்படுகின்றன
பாவம்.. - … தைகா காடுகள் வேகமாக சூறையாடப்படுகின்றன

**Rahmath Rajakumaran**
"நீர் கூறும் இவ்வளவு பெரிய பூமியை இரண்டே நாட்களில் படைத்து …… … - பூமியில் வசிப்போருக்கு வேண்டிய ஆகாரத்தை நான்கு நாட்களுக்குள் திட்டமிட்டான்
குர்ஆன் ( 41 : 09-12 )
பூமியை படைத்ததை விட உணவுக்கான திட்டத்தை 4 நாட்களாக வகுக்கப்படுகிறது என்றால் நம்முடைய விளை நிலங்களைப் பற்றி கவலைப்படாமல் வீடு கட்டுகிறோம்

ஐம்பெரும் சக்திகள். (நெருப்பு - 1)



நெருப்பு எனும் இந்த ஆற்றல் ஒவ்வொரு பொருளுக்குள்ளும் மறைந்திருக்கும்
ஓரளவு வெப்ப சக்தியாக மறைந்து கிடக்கிறது என்பது விஞ்ஞானிகள் கண்டறிந்த ஓர் அடிப்படை உண்மை .
அவ்வாறு பொருட்களில் மறைந்திருக்கும் வெப்பம் திரவ அடிப்படையில்தான் உள்ளது' என்று முதலில் விஞ்ஞானிகள் கருதினர்கள் அந்தக் கருத்து சரியல்ல என்றும், பொருட்களில் மறைந்திருக்கும் வெப்பம் ஒரு வகை தாது சக்தியே என்று விஞ்ஞானி எம்போர்ட் பிரபு என்பவர் நிரூபித்துக் காட்டினார்
நாம் உட்கொள்ளும் உணவு கூட உடலுக்கு எரிபொருளாகப் பயன்பட்டு அப்போது வெளிப்படும் வெப்பம் ஆற்றலாக பரிணமிக்கிறது
நேற்றிரவு சாப்பிட்ட சப்பாத்தி குருமா இன்று காலை தண்ணீர் பம்பு அடிக்க எப்படி ஆற்றாலாக உருவெடுத்தது என்பது விஞ்ஞானத்தால் விளக்கம் தர முடியவில்லை
உடல் செல் உணவை எப்படி ஆற்றலாக மாற்றுகிறது என்பது இன்னமும் விளங்காத புதிராகவே இருக்கிறது
அதே மாதிரி உண்ணா நோன்பு கூட ஒரு வகையில் "நெருப்பு " என்றே அழைக்கப்படுகிறது
இதே மாதிரி நம் பூமியிலுள்ள வெப்பம் கழன்று கொண்டே இருக்கிறது பூமியின் நடுவில் 4100 டிகிரி செல்சியஸ் வெப்பம் உள்ளது.

அணு ஆயுதங்களை ஒழித்து விட்டாலும், அணு ஆற்றல் உற்பத்தி தொடரத்தான் போகிறது அணுவை உலையில் இட்டு ஆற்றலைப் பெற்றாலும் இவற்றிற்குரிய செலவு அதிகம் ; ஆபத்து அதைவிட அதிகம் எனவே அணுவிலிருந்து பெறக்கூடிய ஆற்றலைப் பூமியின் உட்பகுதியிலுள்ள வெப்பத்தை வெளியில் எடுத்துப் பயன்படுத்தலாம் என சோவியத்து விவிஞ்ஞானிகள் கருதுகிறார்கள்
பூமியின் உட்பகுதி வெப்பம் எதிர்காலத்தில் ஒரு முக்கியமான வெப்ப ஆற்றல் தோற்றுவாயாக விளங்கப் போகிறது
"ஒவ்வொரு பொருளின் பொக்கிஷங்களும் நம்மிடம் இருக்கின்றன என்னும் அவற்றை (அர்தந்தக் காலத்தில் அவ்வவ்வற்றிக்குரிய)க் குறிபிட்ட அளவில் தான் நாம் இறக்கி வைக்கிறோம்"

ஐம்பெரும் சக்திகள் ( நெருப்பு - 2)



சுமார் 1500 கோடி வருஷங்களுக்கு முன்பு இந்த பிரபஞ்சத்தைப் படைக்கும் போது, மாபெரும் வெடிப்பாக (Big Bank) வெடித்த வெப்பத்தை 1965-ல் தான் விஞ்ஞானிகள் ஆர்னோ பென்ஸியாஸ், ராபர்ட் வில்சன் கண்டுபிடித்தனர்
இந்த பரவலான உஷ்ணம் எங்கும் விரவி மைக்ரோவேவ் அலைவரிசையில் இருப்பதைக் கண்டனர் இது மிகவும் வியப்பான விஷயம் .
இந்த உஷ்ணம் 2 . 7 டிகிரி செல்வின் உஷ்ணம் பிரபஞ்சமெங்கும் நோக்கினும் ஒரே சமச்சீராக பரவியிருக்கிறது . இந்த உஷ்ணம் சீராக பரவி இருந்ததால் நாளைய விஞ்ஞானத்திற்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என விஞ்ஞானிகள் ஆர்வமூட்டுகிறார்கள
இந்த வெப்பம் நமது பூமிக்கு மிகவும் உபயோகமாக இருக்கும் . இதனால் பாட்டரி (Battary ) என்கிற வஸ்து தேவைப்படாமல் போகலாம் கூட போகலாம் என்கிறர்கள்
இது தவிர சூரியனிடமிருந்து வெளிவரும் வெப்பத்தை எப்போதும் பெற வேண்டி பூமியிலிருந்து 36, 290 கி.மீ உயரத்தில் பூமத்திய ரேகைக்கு மேலே பூமியோடு உடன் சுற்றும் பாதையில் ராட்சத சார்டிலைட்டுகளை அமைத்து சூரிய வெளிச்சத்தை மைக்ரோவேவ் அல்லது லேசர் சக்தியாக மாற்றி பூமியின் பக்கம் அனுப்ப வேண்டும் இந்த சக்தியை இங்கே வாங்கிக் கொண்டு மீண்டும் உள்ளுர் மின்சக்தியாக மாற்றி விநியோகம் செய்யலாம் இவ்வாறு சூரிய சக்தியை மின்சக்தியாக மாற்றி விண்ணிலிருந்து மின்சாரத்தை பெறலாம்

"தன் வரையறையில் ஒழுங்காக செல்லும் சூரியனையும் அவன்தான் உங்களுக்கு வசப்படுத்தினான்"
திருக்குர்ஆன் 14 : 33

ஐம்பெரும் சக்திகள் (நெருப்பு - 3)
மலையில் விளையும் மூலிகைகளான வெதுப்படக்கி இலை, பிரமடங்கு இலை, அருவா மூக்கு இலை கவிழ் தும்மை இலை போன்ற பச்சிலைகள் தீப்பற்றினால் பற்றி எரிகிறது.
காரணம் இம் மூலிகைகளில் எத்தனால், செல்லுலோஸ் என்ற பொருள் பிரித்தெடுக்கப்பட்டு எரிபொருளாகப் பயன்படுத்தப்படுகிறது.
இதைப் போல் அமெரிக்காவில் காணப்படும் சுவிட்ச் கிராஸ் (switchgrass ) எனப்படும் புல்லானது அதிகளவில் செல்லுலோஸைப் பெற்றுள்ளது எனக் கண்டறியப்பட்டுள்ளது
உயிரி வாயுக்களை பயோ- பியூல்ஸ் (Bio - Fules ) பயன்படுத்தும் முயற்சியில் காட்டாமணக்கிலிருந்து பெறப்படும் பயோ-டீஸல் ஏறத்தாழ நாட்டின் 20 சதவீகித தேவையை 2021 -ம் வருஷத்திற்குள் நிறைவு செய்யும் என்று எதிர்ப்பார்க்கப்படுகிறது

பிரேசில் நாட்டில் ஏறத்தாழ 50 சதவிகித மோட்டார் வாகனங்களில் தனி எத்தனாலையோ ( பெட்ரோல் எரிவாயுக்களுக்கு மற்றொரு தாவரங்களி லிருந்து பெறக்கூடிய மற்றொரு வாயுஎரிபொருள் எத்தனால் ) அல்லது எத்தனாலும் பெட்ரோலியமும் சேர்ந்த கலவை எரிபொருளான Gasohol யே பயன்படுத்துகின்றனர் தாவரங்களிலிருந்து பெறப்படும் எரிபொருட்கள் வெளியேற்றும் புகை பூமியை மாசுப்படுத்துவது இல்லை என்பது நமக்கு மிகப் பெரியவரப்பிரசாதமாகும்
"அல்லாஹ்வின் பசுமையான மரத்திலிருந்து நெருப்பை உங்களுக்காக உண்டாக்குகின்றான் "
திருக்குர்ஆன் ( 36 : 80 )

## ஐம்பெரும் சக்திகள் (நெருப்பு - 4) 30-05-2017

What is superconductivity?
• Superconductivity is a phenomenon of exactly zero electrical resistance and expulsion of magnetic fields occurring in certain materials when cooled below a characteristic critical temperature.
•It was discovered by Dut physicist Heike Kamerli Onnes on April 8,1911 ir Leiden.
Non-superconductive Metal
Superconductor
Resistance
0 K
Tc
Temperature

அறிவியலின் புதிய துறை ஒன்று நம்மை வியப்பில் ஆழ்த்தப் போகிறது.
சூப்பர் கன்டக்டிவிட்டி (super conductivity ) என்ற இயல் .அதாவது உலோகங்களிலுள்ள வெப்பத்தைப் பற்றி விஞ்ஞான உலகம் தீவிரமாக ஆராய்ச்சி செய்கிறது.
இந்த இயலில் உலக நாடுகள் பணத்தை கொட்டோ கொட்டு என்று கொட்டி ஆராய்கிறது . இன்னும் விடை கிடைக்கவில்லை அப்படி என்ன ஆராய்ச்சி ?
ஒரு பொருளின் வெப்ப நிலை ( - 273 டிகிரி) க்கு (மைனஸ் 273 டிகிரி) குறைந்தால் அந்த வெப்பநிலைக்குப் பெயர் " அப்ஸல்யூட் ஜீரோ" (Absolute Zero )
அப்படி என்ன மைனஸ் 273 டிகிரியில் விசேஷம் ?
சொல்றேன்.
இதற்கு மேல் குளிர் என்பது விஞ்ஞான ரீதியாக இல்லை . இந்த மைனஸ் 273 டிகிரியில் சில வினோதங்கள் விசித்திரமாக நிகழ்கின்றன . இது கற்பனை இல்லை , நிரூபிக்கபட்ட விஞ்ஞான உண்மை.
அதாவது, உலோகங்களிலுள்ள அணுவில் உள்ள எலக்ட்ரான்கள் வெளிவட்டத்தில் சுற்றிக் கொண்டிருப்பது முற்றிலுமாக நின்று போய் உஷ்ணம் என்பதே இல்லாத நிலை அந்த உலோகத்திற்கு வந்து விடுகிறது .
இப்போது அது உலோகம்தானா ? என்ற கேள்வி விஞ்ஞானத்திற்கு வருகிறது . அது ஓரமாக இருக்கட்டும் .
இந்த மைனஸ் 273 டிகிரியில் உலோகங்களின் மின் தடைகளில் (Resistance) கணிசமான மாற்றம் ஏற்பட்டு மின்சாரத்தைக் கடத்தும் தகுதி நேரடியாக அதிகமாகி விடுகிறது . மின்சாரத்தை தடுத்து நிறுத்த வேண்டிய தடை மின்சாரத்தை ஒரேயடியாகக் கடத்துகிறது . இதென்ன மாறுபட்ட இயல்பு ?
அதாவது லாரி ஓட்டுவதற்கு "'பிரேக் " மிகவும் தேவையானது . "பிரேக் _ வேகத்திற்கு தடை .
அதே மாதிரி 'ரெஸிஸ்டன்ஸ் " என்பது மின்சார தடை . இந்த மின் தடையை எல்லா உலோகங்களுக்கும் அலோகங்களுக்கும் இருக்கும் . இந்த இயல்பான தடை இப்போது இல்லாமல் செய்து விடுகிறது இந்த மைனஸ் - 273 டிகிரி இதனால் உலோகங்களில் பெரும் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தி இருக்கிறது.
அதாவது பிரேக்கே இல்லாத லாரி தலைதெறிக்க ஓடுவது மாதிரி மின்சாரம் மின் தடையை மீறி பாய்கிறது . விஞ்ஞானமே கொஞ்சம் பயந்துதான் இருக்கிறது.
ஒரு ஆங்கிலப் படத்தில் பொம்மை ஒன்று எல்லோரையும் விரட்டி விரட்டி கொலை செய்யுமே கதாநாயகி பொம்மைக்குள் பேட்டரி இருக்கிறதா ... பார்க்கும் போது பேட்டரி இல்லாமல் கையிலிருந்து குதித்து ஓடுமே .... - அது மாதிரி விஞ்ஞானிகளுக்கெல்லாம் மின் தடையை மீறிய மின்சாரப் பாய்ச்சல் உலோகங்களுக்குள் எப்படி வந்தது ? இங்கென்ன விஞ்ஞானப் பேயா ?
இது ஏன் ? தெரியவில்லை .
தெரிந்தால்,

நாளைய நவீன உலகத்தில் போக்குவரத்து , கம்யூட்டர், மின் சக்தி உற்பத்தி, விண்வெளிப் பயணம் அதுவும் ஒளியின் நிகர வேகத்திற்கு கலங்கள் உருவாகி வேற்று கிரகவாசிகளை சந்தித்து மாட்டுக்கறி பிராணி சாப்பிட நீங்கள் இந்தியாவிற்கு ஏலியன்களை அழைக்கலாம்.
உலகில் விஞ்ஞானத்தில் ஏன் எல்லா துறைகளிலுமே பெருத்த மாற்றம் ஏற்படப் போகிறது. நிறைய விஞ்ஞான விதிகளிலும் மாற்றம் ஏற்பட்டு , ஒரு பொருள் பொருள்தானா என்பதற்கு நிறைய அத்தாட்சிகள் தேவைப்படும் . மொத்தத்தில் விஞ்ஞானம் மெஞ்ஞானத்தின் பிடிக்குள் இருக்கும் . மெஞ்ஞான சித்தாத்தங்கள் கோலோச்சும் . நிறைய மெஞ்ஞானப் பாடல்களுக்கு விஞ்ஞானிகளால் விளக்கம் கொடுக்கப்படலாம்.
மைனஸ் 273 டிகிரி வெப்ப நிலை என்பதை விட மிக உச்சக்கட்ட குளிர் என்பதே சரி.
இது பற்றி விளக்கம் உங்களுக்குத் தெரிந்தால் கோடி கோடியாய் பணமும் நோபிள் பரிசும் உங்கள் வீடு தேடி வரும்.
" எவன் ஒவ்வொரு பொருளுக்கும் அதற்குரிய இயற்கைத் தன்மையைக் கொடுத்து அவைகளைப் பயன்படுத்தும் வழியையும் அவைகளுக்கு அறிவித்தானோ அவன்தான் எங்கள் இறைவன்" என்றார் மூஸா திருக்குர்ஆன் ( 20 : 50 )
- 273 டிகிரி என்பது ஒவ்வொரு பொருளின் இயற்கைத் தன்மை என்கிறது குர்ஆனின் விஞ்ஞான விளக்கம்.
இனி விஞ்ஞானிகளும்தான் குர்ஆனைத் தூக்க வேண்டும் .

ஐம்பெரும் சக்திகள் (நெருப்பு 5)




"நரகம் "என்ற வேதனை உலகத்தில் நெருப்பே பிரதானம் எங்கு நோக்கினும் நெருப்பு... நெருப்பு _ _ _நெருப்புடா ..
இங்கு ஜின்களைக் கொண்டும் கற்களைக் கொண்டும் மனிதர்களைக் கொண்டும் நிரம்பி வழியும் வேதனைப் பள்ளத்தாக்கு " ".நரகின் காவலாளி மாலிக்கே .....எங்களுக்கு மரணத்தைக் கொடுத்து முடித்து வையும் " என்று கதறும் நரகவாசிகளுக்கு , 'மரணம் என்பது ஒரே ஒரு தடவைதான் அது உங்களுக்கு முடிந்து விட்டது. இங்கு வேதனை வேதனை வேதனைத் தவிர வேறெதும் இல்லை " என்று பதில் சொல்லப்படும் .
அப்படி என்னென்றும் நெருப்போடு ஒரு வாழ்க்கை மனித நரகவாசிக்கு எப்படி இருக்கும் ? என்பதற்கு அத்தாட்சியாக ஆழ்கடலில் ஒரு புழுவை விஞ்ஞான உலகத்திற்கு இறைவன் காட்டுகிறான்
இதனைப் பார்த்து விஞ்ஞானிகள் உண்மையில் பயந்தே போயிருக்கிறார்கள் .
மனிதன் பொதுவாக வெறும் 45 டிகிரி செல்சியஸ் வெப்பத்தை தாங்கிக் கொள்வதே முடியாத காரியம் .
ஆனால் " லிப்ஸ்டிக் " என்ற புழு 400 டிகிரி முதல் 500 டிகிரி செல்சியஸ் வெப்பத்தையும், கடலின் அடி ஆழத்தின் அழுத்தத்தையும் தாங்கிக் கொள்ளக் கூடியது
அதாவது நம் பூமியின் மையப்பகுதியில் வெப்பநிலை 5000 டிகிரி செல்சியஸ் பூமியின் மேல் ஓட்டை "டெக்டானிக் ப்ளேட்ஸ்" என்று புவியியல் விஞ்ஞானிகள் அழைக்கிறார்கள் . இந்த ப்ளேட்கள் ஒன்றுக்கொன்று மோதி பூமியில் விரிசல் ஏற்பட்டு கடலுக்கடியில் பிளவு ஏற்பட்டு பூமியின் அடியிலுள்ள வெப்பம் அமிலத்துடனும் , பற்றி எரியும் வாயுவுடனும் தீ பொறியுடனும் வெளியேறும்.
பொதுவாக கடல் நீர் 5 அல்லது 6 டிகிரி செல்சியஸ் வெப்பநிலையில் இருக்கும் திடீரென பூகம்பத்தால் கடல் நீர் 500 டிகிரி செல்சியஸ் வரை உயர்கிறது

அந்த இடத்தில் சுமார் 7 அடி உயரமுள்ள புழு , பெயர் Glant tube worm அதாவது பெண்கள் பயன்படுத்தும் லிப்ஸ்டிக் மாதிரி இருக்கும்
இவைகள் பசிபிக் பெருங்கடலின் அதிக அழுத்தம் உள்ள ஆழ்கடலில் அதிகம் காணப்படுகிறது இவை பூமியின் மேலோடு நகர்ந்து வெடித்து சிதறும் போது கருமையான நச்சுபுகை மண்டலமும் , கடல் நீரால் குளிர்பிக்கப்பட்டு அப்படி இருந்தும் 500 டிகிரியில் எரிமலைக் குழம்புமும் வெளியேறும் அதிக வெப்பமும் அதிக அழுத்தமும் கொண்ட அந்த இடத்தில் இந்தப் புழு வசிக்கிறது
"நரகவாசிகளைப் பிடித்து இழுத்துக் கொண்டு நரகத்தின் மத்தியில் செல்லுங்கள்"
குர்ஆன் ( 44 : 47 )
இந்தப் புழுவின் உடல் பாக்டீரியாவால் நிரம்பி இருக்கும் . இந்த பாக்டீரியா சுற்றுப்புறத்தில் உள்ள வேதிப் பொருட் களுடன் வினை புரிந்து புழுவின் உடலில் ஒரு வித திரவம் அது சீழ் மாதிரி இருக்கிறது புழு தன் உடலிலிருந்து வெளிப்படும் சீழ் போன்ற திரவத்தை இந்தப் புழு அதனை உணவாக குடிக்கும்
"நரகவாசிகளின் தேகத்திலிருந்து வடியும் சீழ் தான் அவர்களுக்கு நீராகப் புகட்டப்படும்."
குர்ஆன் ( 14 : 16 )
இந்தப் பாக்டீரியாக்கள் ஹைட்ரஜன் சல்பைடு (உயிர்கொல்லி ) , கார்பன் - டை - ஆக்சைடு போன்றவற்றுடன் வேதிவினைகளில் ஈடுபட்டு புழுக்களுக்குத் தேவையான சக்தியை அளிக்கிறது . இந்த அளவு வேதியல் தொழிற்சாலை மாதிரி அடர்த்தியான அமிலத்தை உணவாக இந்த புழுக்கள் உண்பதால் இவைகளுக்கு செரிமான மண்டல உறுப்பான குடலும், கழிவு நீக்க மண்டலமும் படைக்கப்பட வே இல்லை
" நரகத்தில் என்றென்றுமே தங்கியிருந்து கொதிக்கும் நீர் புகட்டப்பட்டு , குடல்களெல்லாம் துண்டு துண்டாகி விடும்"
குர்ஆன் ( 47 : 15 )
மிக அதிகமான அழுத்தத்திலும் மிக அதிகமான வெப்பத்திலும் புதிய புதிய வேதிவினைகளின் போது உயிரை அழிக்கக்கூடிய கொடிய நச்சுப் பொருட்கள் இந்த புழுக்களுடன் வேதிவினை புரிந்து இந்தப் புழுக்களை எப்படி உயிருடன் வைத்து இருக்கிறது இந்தப் புழுக்கள் நித்தம் உயிர் வாழ்கிறதா ? செத்து செத்து வாழ்கிறதா ? என்பது விஞ்ஞானிகளுக்குப் புரியவில்லை
"நரகவாசிகளுக்கு நரகம்தான் கூலியாகும்
அதில் அவன் சாகவும் மாட்டான் ( சுகத்துடன்) வாழவும் மாட்டான் "
குர்ஆன் ( 20 : 74 )
இப்படி ஒரு ஜீவன் மிகுந்த கடல் ஆழ அழுத்தத்துடனும், 500 டிகிரி செல்சியஸ் நெருப்போடும் ,மிகுந்த உயிர் கொல்லி அமிலத்துடன் , சதா வேதிவினை செயல்பாட்டுடனும் ஒரு புழுவால் வாழ்வும் சாவும் இல்லாமல் ஜீவிக்க முடிகிறது என்றால்....
நரகில் மனித ஜீவனின் உடலுக்கு அத்தனை வேதனையும் இருக்கத்தான் செய்யும் என்பதை இந்த புழுவைக் கொண்டு நம்மால் உணர முடிகிறது அல்லவா ?
ஐம்பெரும் சக்திகள் -  01-06-2017
(ஆகாயம் 1)



"யூசுப் தம் தந்தையிடம், "என் அருமைத் தந்தையே... பதினொரு நட்சத்திரங்களும், சூரியனும் , சந்திரனும் எனக்குச் சிரம் பணிவதாக நான் கனவில் கண்டேன்"
திருக்குர்ஆன் ( 12 : 04 )
11 நட்சத்திரங்கள் என்பது யூசுப் ( அலை) அவர்களுடைய சகோதரர்கள் 11 பேர்களையும் அவரையும் சேர்த்து 12 பேர்கள் சூரியனும், சந்திரனும் அவருடைய தகப்பனார் மற்றும் தாயார் என்பதை குறிக்கும் என்பதாக குர்ஆன் விரிவுரையாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

இதையே விஞ்ஞான ரீதியாக இக் கனவு சொல்லப்பட்டிருக்கிறது என்பதாக வானியல்துறை வல்துநர்கள் குறிப்பிடுகின்றனர் .அதாவது
நம் சூரியக் குடும்பத்தைக் சுற்றி மிக அருகாமையில் 12 வகையான ராசிகள் எனப்படும் நட்சத்திர கூட்டங்கள் உள்ளன ஒவ்வொரு நட்சத்திர கூட்டங்களிலுள்ள நட்சத்திரங்களை ஒன்றோடு ஒன்று கற்பனை கோட்டால் இணைத்தால் உருவங்கள் கிடைக்கும் உ தாரணமாக ஆடு (மேஷம்) காளை மாடு (ரிஷபம்) இப்படியாக 12 உருவ நட்சத்திர கூட்டங்கள்
நம் பூமி 23 மணி, 50 நிமிடம் 4 நொடிகளில் தன்னைத்தானே ஒரு முறை சுற்றிக் கொண்டு சூரியனை ஒரு முறை சுற்றி வர 365 நாட்கள் 6 மணி 9 நிமிடம் எடுத்துக் கொள்கிறது.
இவ்வாறு பூமி சுற்றி வரக்கூடிய பாதையில் இந்த 12 ராசிகள் என்றழைக்கப்படும் நட்சத்திர கூட்டங்கள் அமைந்துள்ளன .
12 ராசிகளும் ஏறத்தாழ சம அளவு இடையில் உள்ளன எனவே வருடத்தின் 12 மாதங்களில் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு நட்சத்திர கூட்டத்தில் சரிசமமாக பூமி கடந்து போகிறது
ஒரு யூதர் நபி (ஸல்) அவர்களிடம் யூசுப் (அலை) அவர்கள் கனவில் கண்ட பதினோரு நட்சத்திரங்களை எனக்கு கூற வேண்டும் .
உடனே ஜிப்ரயீல் ( அலை) நபி (ஸல்) அவர்களுக்கு கூற, நபி (ஸல்) அவர்கள் அந்த யூதரிடம் " கூறினால் இஸ்லாத்தை ஏற்பீரா ? அவரும் சம்மதித்தார்
நபி (ஸல்) அவர்கள் அவற்றின் பெயரை கூறினார்கள்
1 )ஜரியான் . 2) உதாரிக் , 3) தய்யான், 4)காபிஸ், 5) சமூதான், 6) பலீக்கு , 7)முஸப்பஹ் , 8) லநூஹ், 9)பர்கு 10) வந்தாபு
11) துல்கத்பைன் என்பதாக ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்
தஃப்ஸீர் ஹமீதிய்யா
அடுத்து இறைவன் , நபி ஆதம் (அலை ) அவர்களைப் படைத்து ஒவ்வொரு உறுப்புகளிலும் விண்ணிலுள்ள 12 ராசி நட்சத்திரங்களைப் பிரதிபலிக்கச் செய்தான் .
தலை - மேஷம் , (ஆடு)
கழுத்து - ரிஷபம், (காளை மாடு)
கைகள் - மிதுனம் , (சிறுவர்கள் )
மார்பு காம்புகள் - கடகம் (நண்டு)
மார்பு -சிம்மம் (சிங்கம்)
இதயம் - கன்னி (இளம் பெண்)
தொப்பூழ் - துலாம் (தராசு)
இன உறுப்பு - விருச்சிகம் (தேள்)
தொடைகள் - தனுஷ் ( வில் அம்பு )
பின்புற பிட்டம் - மகரம் (ஒரு வகை ஜீவன்)
கால்கள் - கும்பம் (கும்பம் )
பாதங்கள் - மீனம் (மீன்)
ஆதாரம் :- அப்துற் றஹீம் எழுதிய நபிமார்கள் வரலாறு
பதினொரு நட்சத்திரங்களும் சூரியனும் சந்திரனும் எனக்குச் சிரம் பணிவதாக நான் கனவில் கண்டேன் யூசுப் (அலை ) அவர்கள் கூறியது பூமி சுற்றி வரும் பாதையிலுள்ள 12 நட்சத்திர கூட்டங்கள். என்றாலும் யூசுப் (அலை) அவர்களுடைய தாய், தந்தை 11 சகோதரர்கள் ஆகியோர் பிற்காலத்தில் உயர் பதவியில் இருந்த யூசுபைச் சந்தித்த போது யூசுப் (அலை) தம் பெற்றோரை தமது சிம்மாசனத்தில் அமரச் செய்து, சகோதரர்களைத் தாக்கு முன் நிறுத்தி வைத்த போது அவர்கள் அவருக்குச் சிரம் பணிந்தனர் .
ஆதாரம் :- தஃப்ஸீர் இப்னு கஸீர்
ஆதமுக்கு நீங்கள் சிரம் பணியுங்கள்" என்று மலக்குகளிடம் இறைவன் கூற இப்லீஸ் தவிர மற்றவர்கள் சிரம் பணிந்தார்கள்
குர்ஆன் (20 : 116)
ஆன்மீகக் கண்ணோட்டத்தில் ஆராயும் போது பிரபஞ்சவெளியில் 12 ராசி நட்சத்திரக் கூட்டங்களை மனித உருவ அமைப்பில் படைத்ததைக் கொண்டு மொத்த பிரபஞ்சமும் மனிதனுள் அடங்கி விடுகிறது .
இப்பேற்பட்ட மனிதனுக்கு சிரம் பணியுங்கள் என்று இறைவன் கூறுவது போலத் தெரிகிறது
இந்த இரு சம்பவத்தையும் அலசி ஆராயும் போது அறிவியலும் ஆன்மீகமும் பின்னிக் கிடப்பதை உங்கள் உணர முடிகிறதா ?

ஐம்பெரும் சக்திகள்
(ஆகாயம் - 2)



கோடான கோடி நட்சத்திரங்கள் , சூரியன், கோள்கள், சந்திரனுக்கெல்லாம் ஏதாவது "மூலம் " உண்டு என்றால், அந்த" மூலம் " எப்படித் தோன்றியது ? ( இது என்ன கேள்வி ? )
நவீன பௌதிகம் சிருஷ்டியின் முதல் கணங்களைப் பற்றி கால்மாலஜியில் (பிரபஞ்ச இயலில் ) சொல்கிறது ஒரு விதமான "பரமாணு " மிக மிக ஆதி நாட்களில் ( அது "காலம்"என்று சொல்லிக் கொள்ள முடியாத ஒரு "கால "த்தில் ) அந்த பரமாணு வெடித்து ( Big Bang) மொத்தச் சக்தியும் விண்வெளியில் பரவியிருக்கிறது என்று விஞ்ஞானிகள் கூட்டம் போட்டு சொல்லிவிட்டார்கள் .
அதற்குப் பல பௌதிக ஆதாரங்களைக் காட்டுகிறார்கள் ." இதோ பிரபஞ்சமெங்கும் பரவியிருக்கும் சீரான வெப்பம் சரி தானா ? அப்போ 'பிக் பாங் " நடந்திருக்கிறதா ? சரி தானா சரிதானா ?
சொன்ன விஞ்ஞானிகள் சொல்லிய விஷயத்தில் அவர்களுக்கே ஆயிரத்தெட்டு சந்தேகம் தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டிடுக்கிறார்கள் .
ஆதியோடு அநாதி காலத்தில் கிருஷ்டியின் மிக முதல் கணங்களை செகண்டுகளை - - ஏன், முதல் மில்லி செகண்டு வரை சொல்லி இருக்கிறார்கள் . கணக்கு சரி. ஆனால் , அதற்கு முன் என்ன ? எப்படி அந்த ஆதி அணு முதலில் வந்தது என்று கேட்டால் விஞ்ஞானம் அம்பேல் தான் . சூன்யம் தான் என்று விஞ்ஞானிகள் கோரஸாக சொல்கிறார்கள் . சூன்யத்திற்கு விளக்கம் கேட்டால் அதுவும் சூன்யம்தான் - என்று விளக்கம் சொல்கிறார்கள்
ஆனால் திருக்குர்ஆனில் அல்லாஹ் இதற்குரிய விடையை சொல்கிறான் :
" (அல்லாஹ்) வானங்களையும் , பூமியையும் முன் மாதிரி இன்றி (இல்லாமையில் இருந்து) தானே உண்டாக்கினான் . அதனிடம் "குன் " - "ஆகுக " என்று கூறினால் , உடனே அது ஆகிவிடுகிறது "
திருக்குர்ஆன் ( 2 : 117 )
(கவனிக்கவும் முன் மாதிரி இன்றியே)
ரஹ்மத் ராஜகுமாரன் .

**Rahmath Rajakumaran**
திட்டமாக மனிதன் மீது காலத்தில் ஒரு நேரம் வந்து, அதில் அவன் இன்ன பொருள் என்று குறிப்பிட்டுக் கூறுவதற்கில்லாத நிலையில் அவன் இருக்கவில்லையா ?
குர்ஆன் 76 : 01
மனிதன் மட்டும் அல்ல இந்த பிரபஞ்சமும் இன்ன பொருள் என்ற நிலையில் இல்லாமல் இருந்தது அதாவது ஒன்றுமே இல்லாத நிலையில் இருந்து எல்லாமே உருவாயின அது தான் "குன் பயகூன் " என்ற ஒற்றை வார்த்தையிலிருந்து வெளிவந்தன

ஐம்பெரும் சக்திகள் (ஆகாயம் 3 )
சூரியனைச் சுற்றும் கோள்கள் 11




சூரியனை நெருக்கமாக

**1 புதன் கோள்**
**2 வெள்ளி**
**3 பூமி**
**4 செவ்வாய்**
**......................**
**5 வியாழன்**
**6 சனி**
**7 யூரேனஸ்**
**8 நெப்டியூன்**
**9 புளுட்டோ**

ஒவ்வொரு கோள்களுக்கும் இடையே உள்ள தூரத்தின் விகிதாச்சாரம் ஒரளவு சமமாக இருந்தாலும் செவ்வாய் கோளுக்கும வியாழன் கோளுக்கும இடையே உள்ள தூரம் இரு மடங்காக இருக்கிறது
செவ்வாய்க்கும் வியாழனுக்கும் இடையே ஒரு கோள் இருந்திருக்கிறது அது உடைந்து சிறு துண்டு முதல் சிறு குன்று வரை சூரியனைச் சுற்றி வருகிறது
இவைகளுக்கு அஸ்ட்ராய்டுகள் என்று பெயர்
செவ்வாய் கிரகத்திற்கும் வியாழன் கிரகத்திற்கும் இடையே இருந்த கிரகத்தில் மனிதர்கள் இருந்திருக்கலாம் அவர்கள் நம்மை விட அறிவாளியாக இருந்து அணு ஆயுதங்களை பயன்படுத்தி கிரகத்தை உடைத்திருக்கலாம்
இது போக கடைசி கோளான புளுட்டோவுக்குப் பிறகு ஒரு கோள் நம்ம சூரியனைச் சுற்றி வருகிறது இந்த கோளுக்கு " "பெர்சிலோன் "அல்லது காலிப்ஸோ என்ற பெயர் சூட்டப்படலாம்
இது நம்ம பூமியை விட 5 மடங்கு பெரியது சூரியனைச் சுற்றி முடிக்க 1000 வருடம் ஆகிறது
குர்ஆனில் கோள்களை குறிக்க " கௌகப் "
( Kaukab ) என்ற பதம் பயன்படுத்தப்பட்டிருக்கிறது இதன் எண்ணிக்கை எவ்வளவு என்று குர்ஆன் குறிப்பிடப்படவில்லை
ஆனால் குர்ஆனில் யூஸுப் அலை அவர்கள் . . .
" தன் தந்தையாகிய யாகூப் அலை அவர்களிடம் " என் தந்தையே பதினோரு கோள்களும் சூரியனும் சந்திரனும் எனக்கு சிரம்பணிய மெய்யாகவே நான் கனவு கண்டேன் "
குர்ஆன் 12 : 04
மேற்கண்ட வசனத்தில் இறைவன் கௌஃப் என்ற வார்த்தையை பயன்படுத்தி உள்ளான் இதற்கு கோள்கள் அல்லது கிரகங்கள் என்று பொருள்படும்

ஐம்பெரும் சக்திகள்
(ஆகாயம் 4)



பூமியில் முதன்முதலாக உயிர்கள் எப்படித் தோன்றியது என்பது பற்றி அறிவியலில் பல சித்தாந்தங்கள் உள்ளன .அதில் ஒன்று Cosmic soup (காஸ்மிக் சூப் )
பல கோடி ஆண்டுகளுக்கு முன்னர் தீப்பிழம்பாக இருந்த பூமி படிப்படியாக வெப்பம் தணிந்து எரிமலைகளாகவும் தீக்குழம்புகளாகவும் புகைந்து கொண்டிருந்த நிலை .
அதன் பின்னர் உற்பத்தியான மீத்தேன் , ஹைட்ரஜன் , கார்பன்-டை_ ஆக்சைடு போன்ற சமாசாரங்கன் சேர்ந்த ஒரு கலவைதான் இந்த காஸ்மிக் சூப்.
இந்த காஸ்மிக் சூப்பில் பேரொளியாக மின்னல் பாய்ந்த போது முதல் அமினோ அமிலம் தோன்றியது . இந்த அமிலம்தான் அம்மோனியாவுடன் சேர்ந்து படிப்படியாக உயிரினங்கள் தோன்றக் காரணமாக இருந்தது வேற்று கிரகவாசிகளை விண்வெளியில் தேடும் போது இந்த அமினோ அமிலத்தைத்தான் பிரபஞ்ச இயலாளர் தேடுவார்கள் . அது விண்வெளியில் நிரப்பக் கிடைத்துள்ளது . இதன் மூலம் வேற்றுகிரக வாசிகள் இருப்பதாக இந்த அமிலத்தைத் தான் சாட்சியாக காட்டுவார்கள் .
ஹதீது குத்ஸுயில் ...
"அல்லாஹ் படைத்தவற்றில் முதலாவது என்னுடைய பேரொளியாகும் அப் பேரொளி யில் இருந்தே இறைவன் தன் படைப்புகள் அத்தனையும் படைத்தான் எனவே தான்
" லவ்லாகலமா ஹலக துல் அஃ ப்லாக " (நீர் இல்லையானின் வானங்களைப் படைத் திருக்க மாட்டேன் ) என்ற திரு வசனமும் வழங்கி வருகிறது " என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்
Cosmic soup யில் அன்றைக்கு விண்ணிலிருந்து பாய்ந்த போராளியான மின்னல் நபி (ஸல்) அவர்களின் பேரொளி தானோ ?

ஐம்பெரும் சக்திகள்
(ஆகாயம் 5)



1923 ஆம் ஆண்டில் Dr எட்வின் ஹப்பில் 40 அங்குல தொலை நோக்கியைக் கொண்டு நம்முடைய ஆகாய கங்கை பால் வீதி (ஆங்கிலத்தில் மெட்டா காலக்ஸி ) க்கும் அடுத்த பால் வீதி ஆண்ட்ரோ காலக்ஸியில்எண்ணற்ற நட்சத்திரங்கள் அடங்கிய மாபெரும் அண்டம் இருப்பதைப் பார்த்தார்.
இதனை அடிப்படையாக வைத்து Dr. வில்லிலே நம்முடைய பால் வீதியில் இதுவரை 1800 கோடி கிரகங்கள் கண்டுப்பிடிக்கப்பட்டு நூற்றில் ஒரு கிரகத்திற்கு சூரிய ஒளி பரவ வாய்ப்பு இருப்பதாக வைத்துக் கொண்டால் 18 கோடி கிரகங்கள் தேறும்.
இவற்றில் மனிதனைப் போன்ற அறிவுள்ள ஜீவன்கள் தோன்றி இருக்க முடியும் என்று நிரூபித்துள்ளார் .
இதனால் வேற்று கிரக வாசிகள் இருப்பது சாத்தியம் என்று விஞ்ஞானிகள் கருதுகின்றனர்
1947 ம் வருடம் .கென்னத் ஆர்னால்டு என்ற விமானி ஒளி பொருந்திய பறக்கும் தட்டை மேகத்தினூடே பார்த்ததாக கூறுகிறார்

1971 நவம்பர் 2 ல் ரொனால்ட் ஜான்சன் என்னும் 16 வயது இளைஞர் டெல்போஸ் என்னும் கிராமத்தில் தன் ஆடுகளை ஓட்டிக் கொண்டு வரும் போது விசித்திரமான சப்தம் ஒளி பொருந்திய பறக்கும் தட்டு காளான் வடிவில் 9 அடி விட்டத்துடன் புதரிலிருந்து வானுக்கு பறந்தது அதன் அடிப்பாகத்தின் வெப்பத்தால் ஜான்சனின் உடலில் லேசான தீக்காயமும் அவனின் அலறல் கேட்டு அக்கம் பக்கத்தார் பார்க்க நீல நிற ஒளி வீசி பறந்து கொண்டிருந்தது புல்தரை வட்ட வடிவில் எரிந்து கொண்டிருந்தது .
(மதன் எழுதிய மனிதனும் மர்மங்களும்)
உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் " நான் ஓர் இரவில் எனது பேரீச்சங்கனிகளை உலர வைத்தில் குர்ஆன் ஓதிக் கொண்டிருந்தேன் . (சூரா பகரா .-புகாரி 5018 கூறுகிறது)
அப்போது என் குதிரை கடுமையாக மிரண்டது நான் தொடர்ந்து ஓதிக்கொண்டே இருக்க குதிரை தொடர்ந்து மிரண்டது . அங்கு படுத்திருந்த என் மகன் யஹ்யாவை அந்தக் குதிரை மிதித்து விடுமோ என்று நான் பயந்தேன் . எனவே அங்கு சென்ற பார்த்த போது மேகம் போன்றதொரு பொருளை என் தலைக்கு மேலே கண்டேன் அதில் விளக்குகள் போன்ற பிரகாசிக்கும் பொருள்கள் இருந்தன நான் பார்த்தவுடன் அது வானில் உயர்ந்தது என் கண்ணை விட்டும் மறைந்துவிட்டது பிறகு நான் அதை காண முடியவில்லை "
காலையில் இது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கூறினேன் அதற்கு அவர்கள்
" இப்னு ஹுஸைரே தொடர்ந்து ஓதி இருக்கலாமே ,,,,,,
"நான் தொடர்ந்து ஓதினேன் " என்று கூறினேன்.
அதற்கு அவர்கள் மீண்டும் " நீங்கள் தொடர்ந்து ஓதி இருக்கலாமே " என்றார்கள்
"நான் தொடர்ந்து ஓதினேன் என் மகன் யஹ்யாவைக் குதிரை மிதித்து விடுமோ என்று அஞ்சினேன் .அவனருகில் இருந்தேன் எனது தலையை உயர்த்தி வானத்தைப் பார்த்த போது அந்த மேகம் போன்றதொரு விளக்கைக் கண்டேன் .அதில் விளக்குகள் எரியக் கண்டேன் அதன் பிறகு என் கண்ணை விட்டு மறைந்துவிட்டது.
நபி(ஸல்) அவர்கள் " உன் குரலைக் கேட்டு நெருங்கி வந்த வானவர்கள்தாம். அவர்கள் நீர் தொடர்ந்து ஓதியிருந்தால் காலையில் மக்களும் அதைப் பார்த்திருப்பார்கள். மக்களை விட்டும் அது மறைந்திருக்காது" என்று கூறினார்கள்
(முஸ்லீம் 1400)

ரமலானும் வேதங்களும்



ரமலான் முதல் நாளில் நபி இப்ராஹிம் (அலை) அவர்களுக்கு ஆகமம் (சுஹ்பு) அருளப்பட்டது .
அதற்கு 700 ஆண்டுகளுக்குப் பிறகு ரமலான் 6 ஆம் நாளில் நபி மூஸா (அலை) அவர்களுக்கு அபுறானீ மொழியில் தவ்ராத் வேதம் அருளப்பட்டது .
அதற்கு 500 ஆண்டுகளுக்குப் பிறகு ரமலான் 12 ஆம் நாளில் நபி தாவூத் (அலை) அவர்களுக்கு யூனானீ மொழியில் ஸபூர் வேதம் அருளப்பட்டது .
அதற்கு 600 வருடங்களுக்குப் பிறகு ரமலானில் நபி ஈஸா (அலை) அவர்களுக்கு சுர்யானீ மொழியில் இன்ஜில் வேதம் அருளப்பட்டது .
அதற்கு 500 வருடங்களுக்குப் பிறகு ரமலான் 27-ஆம் நாளில் நபி (ஸல்) அவர்களுக்கு அரபி மொழியில் திருக்குர்ஆன் அருளப்பட்டது .

நியாய தீர்ப்பு நாள்
( Judgement Day )




1961 ம் ஆண்டு ஹாலிவுட்டில் வெளியான "Judgement of Nuremberg " என்ற படம் 'மனித மனசாட்சியை உலுக்கிக் கேள்வி கேட்கும் உயர்ந்த படம் . இரண்டு ஆஸ்கார் விருதுகள் பெற்றது.
இரண்டாம் உலகப்போரின் போது, ஹிட்லர் லட்சக்கணக்கான யூதர்களைக் கொன்று குவித்தார் . யுத்த முடிவில் ஹிட்லர் இறந்து போகிறார் . ஆனால் இந்தக் குற்றக்களுக்கு யார் பொறுப்பு ஏற்பது, ? யாரைக் குற்றவாளி என்று விசாரணை செய்வது ? என்று கேள்விகள் எழுந்தது . யோசிக்க வேண்டிய வேள்விகள் . எந்த அதிகாரிகள் , மந்திரிகள் , நீதிபதிகள் , ஹிட்லரின் உத்தரவுகளைச் செயல்படுத்தினார்களோ , அவர்களைக் குற்றவாளியாக அறிவித்து அவர்கள் மீது நீதி விசாரணை நடைபெற வேண்டும் என்று உத்தரவு இடப்பட்டு ஜெர்மனியில் உள்ள "நூரெம்பெர்க் " என்ற இடத்தில் பொது விசாரணை நடந்தது
அமெரிக்க நீதித்துறையின் சார்பில் நூரெம்பெர்க் விசாரணைக்குத் தலைமை ஏற்கிறார் நீதியரசர் " டான் ஹோவாட் " இவர் விசாரிக்கப் போகும் குற்றவாளிகள். யூதப் படுகொலை சம்பவங்களுக்கு உத்தரவு தந்த அவரைப் போன்ற பெரிய நீதிபதிகள், அதில் ஒருவர் சட்ட நூல்களை எழுதி உலகப் புகழ் பெற்ற மாபெரும் சட்டமேதை " எர்னெஸ்ட் ஜேனிங் " கும் ஒருவர் .அவரும் குற்றவாளி கூண்டில் நிற்கிறார்
இந்த விசாரணையை ஹோவாட் எப்படி நடத்துகிறார் என்பதை காண பெருங் கூட்டம்
நீதி விசாரணையின் முடிவில் நாஜி படுகொலைக்கு ஹிட்லர் மட்டுமே குற்றவாளி அல்ல. அவரைக் கொண்டாடிய பொதுமக்களும் , அவரால் ஆதாயம் பெற்ற அதிகாரிகளும் , அவரைப் பற்றி உயர்வான பிம்பத்தை உருவாக்கிய ஊடகங்களும் , ஹிட்லரை ஆதர்ச புருஷனாக வழிபட்ட தேசங்களும் , ஹிட்லருக்கு பொருள் உதவி செய்த தொழிலதிபர்களும் கூடக் குற்றவாளிகளே i அதிகாரிகள், நீதிபதிகள் உயிர் பயத்தில் அப்படி நடந்து கொண்டாலும் , தங்கள் மனச்சாட்சிக்கு விரோதமாகச் செயல்பட்டது பெரும் தவறே , என்று தீர்ப்பளிக்கிறார் .
"சிறிது வெளிச்சம் " - எஸ்.ராமகிருஷ்ணன்
" யாருக்கு நம் தூதர்கள் அனுப்பப்பட்டார்களோ அவர்களை திடனாக விசாரணை செய்வோம். இன்னும் நம் தூதர்களையும் திடனாக விசாரிப்போம்.
திருக்குர்ஆன் 7 : 06
" கடவுள் "
என்கிறதொடர்
இன்ஷா அல்லாஹ்
நாளை 18-06-2017
கடவுள் 1

மனிதர்களின் தின வாழ்க்கை வழுக்கு ரோட்டில் கப்பல் கார் போல ஸ்மூத் ஆகச் சென்று கொண்டிருக்கும் வரையில் எந்தக் கடவுளும் அவர்களுக்கு தேவையில்லை என்றே தோன்றி இருக்கிறது .
முதன்முதலாக அந்தப் பயணத்தில் ஒரு சின்ன முள் குத்தி சட்டென்று பயணம் நின்று போகும் போதுதான் தத்துவங்களின் உதவி தேவைப்படும் .
ஓர் ஆத்ம நண்பரையோ உறவினரையோ விபத்து ஏற்பட்டோ அல்லது கான்சர் போன்ற நூற்றெட்டு உபாதைகளில் ஒன்றாலோ அல்லது இயற்கையின் சீற்றத்தாலோ வாழ்வு இழந்து வேதனை அடையும்போது சட்டென்று அம்மனிதர்களுக்கு , '' ஆஹா , வண்டி இப்படியே ஓடிக் கொண்டிருப்பது உத்தரவாதம் இல்லை : நம்மை விடப் பெரிய சகதி , பெரிய உண்மை அறியப்படாமல் இருக்கிறது . என்கிற ஞானோதயம் தோன்றும் . அப்போதுதான் அந்த பெரிய சக்தி என்னா ஏது என்று தேடச் சொல்கிறது. அந்த சக்தியில் திளைத்த ஞானிகளைப் போய் பார்க்க வைக்கிறது . இப்போது அவர்களுக்கு கடவுள் தேவையாகி விடுகிறது.

இதையே குர்ஆனில் அல்லாஹ் :
"நம்முடைய வேதனையைக் கண்ணால் கண்ட பின்னர், அவர்கள் கொண்ட நம்பிக்கை அவர்களுக்குப் பயனளிக்கவில்லை .இதுவே அல்லாஹ்வினுடைய வழி (இதற்கு முன்னரும்) அவனுடைய அடியார்களில் (இவ்வாறே) நிகழ்ந்திருக்கின்றது. ஆதலால் (வேதனை இறங்கிய) அந்த நேரத்தில் இறை நிராகரிப்பவர்கள் நஷ்டத்தையே அடைந்தார்கள் .
திருக்குர்ஆன் ( 40 : 85 )

கடவுள் 2

மனித இனத்தின் மிகப் பெரிய இரண்டு கேள்விகள்
"நாம் யார் ? " இந்தப் பிரபஞ்சம் எப்படித் தோன்றியது ? " இரண்டு கேள்விகளுக்கும் விடையளிக்க, 'கடவுள் தேவையா ? தேவைப்பட்டால் , அவர் எப்படிப்பட்டவர் ? வடிவம் உண்டா ? வடிவம் இல்லை என்றால் பகுத்தறிவுக்கு என்ன பதில் சொல்ல ? என்கிற கேள்விகள் படை யெடுக்கும்.
"தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்தது எப்பேர்மற்று அப்பேர். தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பாரே
அவ்வண்ணம் ஆழியானாம்" .
- -பொய்கை ஆழ்வார்
'எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள் ' எப்படி வேண்டுமானாலும் அவனை பெயர் சொல்லி அழைத்துக் கொள் எந்த வடிவத்தில் சிந்தித்துப் பார்க்கிறோமோ அந்த வடிவம்தான் கடவுள் என்கிறார் பொய்கை ஆழ்வார் .
" (நபியே ') நீங்கள் கூறுங்கள் : "நீங்கள் அல்லாஹ் என்றழையுங்கள் .அல்லது அர்ரஹ்மான் என்றழையுங்கள் .எப் பெயர் கொண்டு நீங்கள் அழைத்த போதிலும் , அவனுக்கு அழகான ( இன்னும்) பல திருப்பெயர்கள் இருக்கின்றன .
திருக்குர்ஆன் 17 : 110
குர்ஆனில் அவனின் திருப் பெயர்கள் 99 .
இந்த 99 நிலையிலும் (அருளாளன், அன்புடையோன்,,,,, மாதிரி 99 நிலையிலும்,,) அவன் இருக்கிறான் என்றாலும் அதற்கு மேற்பட்ட நிலையிலும் இருப்பான் அந்த நிலைகள் குறித்து குர்ஆனில் சொல்லப்படாத நிலையாக இருந்தாலும் அவன் அவ்வாறெல்லாம் இருப்பான் .என்பதாக அறிய முடிகிறது .
இப்படி கடவுளை 99 நிலையில் உள்ள சிந்தனைக்குள் மட்டும் உட்படுத்தாமல் நம் சிந்தனை அதனையும் தாண்டிய நிலையிலும் அவன் இருக்கிறான் . அதாவது
இங்கு நம் பகுத்தறிவுக்கும் அப்பாற்பட்ட நிலை.
இந்த இடத்தில் நிறைய ஞானிகள் , தத்துவ ஞானிகள் கொஞ்சம் சிரமப்பட்டிருக்கிறார்கள்
நம்மாழ்வார் இப்படி சொல்கிறார் :
" உளன் எனில் உளன்
அவன் எனில் அவன் "
இது என்னவென்று புரிகிறதா ?
இது நமக்கு கிடைத்திருக்கும் சுகமான சுந்திரமா ?
நண்பர்கள் தக்கலை பீர் முஹம்மது அப்பாவையும் , திருமூலரையும் எடுத்துச் சொல்வார்கள் என எதிர்ப்பார்க்கிறேன் .

குறிப்பு :
"கடவுள் " தொடர் குறித்து என் மனைவி உட்பட என்னைச் சேர்ந்த நண்பர்கள் பயப்படுகிறார்கள் "ஏதோ அணுக்குண்டு என்று தெரியாமலே நீங்கள் அதை அணைத்துக் கொண்டிருக்கிறீர்கள் இத்தோடு போதும் " என்கிறார்கள். என்ன செய்ய ? இன்னும் 20 பதிவாவது போடும் அளவிற்கு எழுதி எழுதி இன்னும் முற்றுப் பெறாமல் கட்டுரை தொடர்கிறது .

கடவுள் 3
கடவுளை எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள் .எப்படி வேண்டுமானாலும் பெயர் சொல் .,,,,,,இப்படி சுதந்திரம் கொடுப்பதில் ஓர் அபாயம் இருக்கிறது . கடவுளை, நம் சிந்தனை எல்லை களுக்கு உட்படுத்துகிறோம் . அதற்கெல்லாம் அப்பாற்பட்ட ஒரு கடவுளைப் பற்றி யோசிக்க இயலாமல் போய்விடும் . இந்த நிலை புத்தருக்கு ஏற்பட்டிருக்கிறது . தீவிரமான அவரது சிந்தனை ஓட்டத்தில் கடவுளுக்கு இடம் கிடைக்கவில்லை

புத்தருக்கு இமய மலை அடிவாரத்தில் ஒரு சிறிய ராஜ்யம் இருந்தது (கி.மு 563 - கி.மு 483 ) அவருக்கு நல்லது நினைத்த தந்தை .
அன்பான மனைவி யசோதரை அழகான மகன் ராகுலன் .இத்தனை சௌகரியங்கள் இருந்தும் ஒரு தேடுதல் இருந்தது . அந்த தேடுதல் இரவோடு இரவாக சொல்லிக் கொள்ளாமல் அரண்மனை வாழ்க்கையை துறக்கச் சொன்னது .
மனித குலத்தின் மூப்பு, வியாதி, மரணம் இம் மூன்றும் தவிர்க்க முடியாதது என்பதை கவனித்து இதன் காரணத்தை தேடி அலைந்திருக்கிறார். ரிஷிகளிடம் விடை கிடைக்கவில்லை . மெய் வருத்தத்தில் விடை கிடைக்கவில்லை .
புத்தர் இறைவனைத் தேடி அலைந்தால் ஒரு அடி அவனை நோக்கி வைத்தால் அவன் 10 அடி ஓடோடி வருவான். ஆனால் ஞானத்தை தேடி அலைந்தார் .இது விவகாரமானது
கிள்று (அலை ) அவர்களிடம் நபி மூஸா (அலை) ஞானம் கற்க போன போது கிள்று
கப்பலில் ஏறி அதன் பலகையைப் பெயர்த்து அதனை ஓட்டையாக்கி விட்டார் முஸா (அலை ) பதறுகிறார்கள் (குர்ஆன் 18: 71 )
அடுத்து கிள்று (அலை) அவர்கள் ஒரு சிறுவனை கொலை செய்து விடுகிறார் (குர்ஆன் 18 : 74 ) மூஸா (அலை) பயப்படுகிறார்கள்
அடுத்து அநியாயம் செய்யும் ஊரில் உள்ள பழுதடைந்த சுவரை கிள்று (அலை) சரி செய்கிறார் மூஸா(அலை) அவர்கள் ஆவேசப்படுகிறார் (குர்ஆன் 18 : 77 )
இதெல்லாம்தான் ஞானங்கள் என்று கிள்று நபி (அலை) அவர்கள் நபி மூஸா (அலை) அவர்களுக்கு கற்று கொடுக்கிறார் . இது போன்று 100 நிகழ்வுகளைக் கொண்டு நான் மூஸாவிற்கு ஞானம் கற்றுக் கொடுக்க நினைத்திருந்தேன் அதற்குள் மூஸா (அலை) அவர்கள் பொறுமை இழந்து விட்டதாக கிதாபுகளில் காணக் கிடக்கிறது
இதற்குரிய காரண காரியங்கள் பின்னர் மூஸாவுக்கு அறிவிக்கிறார்கள் . இதுதான் ஞானத்தின் படிப்பினைகள் . குதர்க்கமானது குந்தகமானது . ஆவேசமானது
காரில் மூவர் பயணம் செய்யும்போது இருவர் விபத்திற்கு உள்ளாகி இரு உயிர்கள் பிரியும் போது அதற்குரிய காரண காரியங்கள் நம் கண்களுக்குத் தெரியாது. ஐயோ என்று சொல்லாமல் வாய் மூடி இருப்பது சரியா ? சரிதான் என்று மேற்கண்ட வசனங்கள் இதைத் தான் சொல்கிறது . இறை நடவடிக்கையில் காரணம் இல்லாமல் போவாது .இதுதான் ஞானம் .
இந்த மாதிரியான கடின பரிசோதனையில் புத்தர் சிக்காமல் தன் தேடி வந்த மூன்று காரணத்திற்கு விடை பளிச்சென்று வெளிச்சம் போட்டது போல் அவருககு கிடைத்தது அது தான் " ஆசையும் பற்றும் தான் ஆதாரக் காரணங்கள் இவற்றை துறந்தால் ஞானம் (நிர்வாணம்) கிடைக்கும் என்றார் .
அந்த நிர்வாணம் எப்படிப்பட்டது ?
" எதையும் விரும்பாமல் இருக்கும்போது , ஒருவன் எதையும் கைப்பற்றுவதில்லை என்றால் அவனுக்கு கவலை இல்லை., பரபரப்பு இல்லை இதனால் மனதுக்கு அமைதி கிடைக்கிறது
பௌத்தத்தில் கடவுளும் இல்லை ,,கடவுள் கொள்கையும் இல்லை . இருந்தாலும் ஒரு மதமாக உலகம் ஏற்றுக் கொண்டது .

கடவுள் 4

பௌத்தம் தாண்டி ஜைனம் மதக் கோட்பாடுகளுக்குள் செல்லலாம் என்ற போது நண்பர்

Athavullah Athavullah

பௌத்தம் பற்றி இன்னும் அதிகமாக தனி கட்டுரை வேண்டுமென முந்தய பின்னூட்த்தில் கேட்டிருந்தார் . ஆகவே இப்போவே சொல்லி விடலாம் என்று ,,,,,,.,,, .

புத்தரின் "நிர்வாணம் " உடைகளை கழற்றி விட்டுத் திரிவது அல்ல : ஒரு விதத்தில் களைதல்தான் அது ஆசைகளை ,பற்றுகளை . உடைமைகளை , ஏன் ,,,,,,,, கடமைகளைக் கூடக் களைந்து அடையும் அந்த நிலைதான் என்ன ?

"அந்த நிலையில் தண்ணீர் இல்லை ; நெருப்பு இல்லை ; காற்று இல்லை ; பூமி இல்லை ; விண்வெளிக்கோளம் இல்லை; அளவிலாத தன்னிலை உணர்வு இல்லை : பாழ் இல்லை : வருவது இல்லை; போவது இல்லை; நிற்பது இல்லை; புறப்படுவது இல்லை : எழுவது இல்லை : தாழ்வது இல்லை ; நிலைப்பது இல்லை : செல்வது இல்லை; ஆதாரமும் இல்லை . அதுதான் துன்பத்தின் முடிவு '

,,,, ,,,,, இந்த நிலையை அடைவது இருக்கட்டும் முதலில் புரிந்து கொள்ள வேண்டும் இந்த நிர்வாண நிலையை அடைந்தவன் புத்தன் ஆகிறான்.

இது, ஒருவனின் தின வாழ்க்கையின் போதே நிகழலாம் . புத்தருக்கு அது நிகழ்ந்தது - புத்தர் இல்லாத நீங்கள் பளிச்சென்று இந்த நிலையை அடைந்தால், அல்லது உணர்ந்து விட்டால் , உங்கள் பாவ கருமங்கள் உங்களைத் தொடராது . இந்த நிலையை அடைந்த பின் , உடல் என்ன பாழாய் போனாலும் கவலையே பட வேண்டாம் .

இந்த நிலையை இஸ்லாம் இறைப் பொருத்ததிற்காக பயன்படுத்தச் சொல்கிறது .

"அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தைப் பெறுவதற்காகத் தன்னுடைய உயிரையே தியாகம் செய்யக் கூடியவர்களும் மனிதர்களில் உண்டு . அல்லாஹ் இத்தகைய அடியார்கள் மீது மிகவும் கருணையுடையவன் ."

திருக்குர்ஆன் ( 2 : 207 )

ஓர் ஆத்மா மறுபடியும் இப்பூமியில் பிறக்கும் என்பதை புத்தர் நம்பவில்லை .இது இந்து மதக் கருத்திற்கும் , பௌத்த கருத்துக்கும் முக்கியமான வித்தியாசம் .

இந்து மதத்தின் வர்ணாசிரம தர்மத்தை புத்தர் ஏற்கவில்லை . " பிறப்பால் ஒருவனைப் பாகுபடுத்துவது தப்பு . ஆனால் ஒழுக்கத்தால்தான் பாகுபடுத்த வேண்டும் " என்றார் . இதனால்தான் பௌத்தம் இந்தியாவில் பிறந்து , இலங்கையில் வாழ்கிறது .

பர்மா , ஜப்பான், சீனா, திபெத் போன்ற நாடுகளில பௌத்தம் இயங்குகிறது.

புத்தர் இறந்ததும் உடல் எரிக்கப்பட்டது. மற்ற நாடுகளுக்கு சாம்பல் அனுப்பி வைக்கப்பட்டது .

ஏதோ ஒரு விதத்தில் புத்தரை வழிபட பௌத்தர்களுக்கு அவரின் அடையாளம் தேவைப்பட்டது .எனவே புத்தரின் பல் ஸ்ரீலங்காவில் கண்டியில் மிகவும் ஆராதிக்கப்படுகிறது .

பௌத்தம் அதன் ஆரம்ப காரணங்கள் விலகிப் போய் அதன் சடங்குகள் மட்டுமே மிஞ்சம் இருக்கிறது .

மிகச் சிறுவனான சித்தார்த்தனின் ( சிறுவனான புத்தரின் இயற்பெயர் ) "உயிர் வாழ்தலின் கேள்விகள் " பல விதங்களில் இன்றைய அறிவியல் யுகத்தில் கூட மறுபடி மறுபடி மறுபடியும் கேட்கப்பட்டுக் கொண்டே இருக்கிறது . இதுதான் பௌத்தத்தின் விண்ணை முட்டும் வியப்பான விஷயம் .

கடவுள் 5

தமிழகத்தில் பௌத்தத்தை விட சமணம் (ஜைனம்) அதிகம் பரவியிருந்தது அதற்கான அடையாளங்கள் இன்றும் சித்தன்னவாசல் , நார்த்தா மலை போன்ற பகுதிகளில் காணக் கிடக்கிறது . கர்நாடகத்தில் உள்ள சிராவணபெலகோளாவிலும் அதிகம்

திருநாவுக்கரசர் , 60 வயது வரை சமணராக இருந்து பின்னர் சைவத்துக்கு மாறினார் காரணம் எனக்குத் தெரியவில்லை.

பௌத்த மதத்தை விடப் புராதனமானது சமணம் .அதன் சரித்திகத்தில் முக்கியமான புருஷர் மஹாவீரர் (கிமு 599 யிருந்து 527 வரை வாழ்ந்தவர் .72 ஆம் வயது வரை வாழ்ந்து பீகாரில் ".பவா' என்ற இடத்தில் சமண முறைப்படி பட்டினி கிடந்து இறந்து போனார் .

சமணர்களின் தத்துவம் : மனித இனம் பந்தங்களிலிருந்தும் வாழ்க்கை விவாரங்களின் பாதிப்புகளிலிருந்தும் தன் தனிப்பட்ட ஆத்மாவை கடுமையான தவம் அல்லது பெரிய விரதத்தின் மூலம் தன் ஆத்மாவை விடுதலைப் பெறச் செய்ய முடியும் .இந்தத் தவம் பதினான்கு கட்டங்கள் அல்லது குணங்தானங்கள் மூலம்

படிப்படியாக நம் உண்மை ஆத்மாவை மறைக்கும் கர்மங்களை நீக்கலாம் .இதற்காக தன் ஆத்மாவை தன்னை தானே சுத்தப்படுத்த வேண்டுமே தவிர மற்ற எவராலும் இவரின் தனிப்பட்ட ஆத்மாவை சுத்தப்படுத்த முடியாது .
" நீங்கள் ஒரு நாளைப் பற்றியும் பயந்து கொள்ளுங்கள் .அந்நாளில் எந்த ஆத்மாவும் எந்த ஆத்மாவுக்கும் யாதொன்றையும் கொடுத்து அதன் கஷ்டத்தை தீர்க்க மாட்டாது அதற்காக (எவருடைய) பரிந்துரையும் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது அதற்காக யாதொரு பரிகாரத்தையும் ஈடாகப் பெற்றுக் கொள்ள மாட்டாது. அன்றி அவர்கள் (எவராலும் எவ்வித ) உதவியும் செய்யப்பட மாட்டார்கள் ,
திருக்குர்ஆன் ( 2 : 48 )
ஜைனர்கள் உலகில் உள்ள அனைத்தையும் ஜீவ - அஜீவ என்று இருவகையாகப் பிரிக்கிறார்கள் .இதை உயிருள்ள - உயிரற்ற என்பதையும் விட , உணர்ந்த _ உணர்வற்ற என்பது பொருந்தும் . Sentient and Nonsentient . எல்லா உயிரும் ஜீவ - அஜீவ கலப்பு .வெறும் ஜீவன்தான் உண்மை நிலை .அதன் மேல் அஜீவ நிலைபடும் போது அது கறைபடுகிறது . எப்போது கலந்தது , எத்தனை அஜீவக் கலப்பு என்பதையெல்லாம் சரியாகச் சொல்ல முடியாது .ஆனால் அஜீவக் கறையை மெள்ள மெள்ள நீக்கலாம் - அதுவும் தவ ஒழுக்கத்தின் மூலம் .
ஒரு பிறவிகளில் கொஞ்சம் கொஞ்சமாகக் கர்ம வினை தீரும் . ஒரு முதிய ஜைன முனிவர் , வர்த்தமானர் செய்தது போல சோறு . தண்ணீர் இல்லாமல் உபவாசமிருந்து சாகத் தீர்மானிக்கலாம் .
அஹிம்சை இவர்களுக்கு மிக முக்கியம் .மற்ற உயிர்களுக்குக் கேடு விளைவிக்கும் எந்த செயலும் கூடாது அதனால் நடக்கும் போது முன்னால் பாதையை லேசாக பெருக்கிக் கொண்டே செல்வார்கள் . மூச்சு விடும் போது மூக்கையும் ,வாயையும் துணி போட்டு மறைப்பதும் இதே காரணத்திற்காகத்தான்.
உலகமெங்கும் உள்ள 60 லட்ச ஜைனர்களில் 30 லட்சம் பேர் இந்தியாவில் குறிப்பாக ராஜஸ்தான், குஜராத் இருக்கிறார்கள் . இவர்களின் எண்ணிக்கையில் குறைவு என்றாலும் இந்தியப் பொருளாதாரத்தில் இவர்களின் பங்கு கணிசமானது.
ரஹ்மத் ராஜகுமாரன்

## கடவுள் 6

1469 நவ 15 லாகூர் பக்கத்தில் ராய் போய்டி - தல்வண்டி (Rai Bhoidi - Talwandi) என்ற கிராமத்தில் பிறந்தார் நானக் . இந்திய - பாக் பிரிவின் போது பாக்கில் இருக்கிறது இந்த குட்டி கிராமம் இப்போது பெயர் நன்கன் சாஹிப் கிராமம் .
நானக் கின் 19 வயதில் திருமணம் ஸ்ரீ சந்த், லக்மி சந்த இரு ஆண் மக்கள் .
30 வயதில் ஆற்றங்கரையில் உடுப்பு இருக்க காணாமல் போய்விட்டார் நானக் . ஆறெல்லாம் தேடி உடல் கிடைக்கவில்லை .இறந்த சடங்கு செய்யும்போது 3 நாள் கழித்து வீட்டிற்குள்ளே இருநது வந்தார் . யாரிடமும் பேசாமல் அமைதியாக இருந்தார் .மறுநாள் வாய் திறந்து , " இந்துக்கள் வழியையோ ,மூஸ்லீம்கள் வழியையோ நான் கடைப்பிடிக்கப் போவதில்லை . உண்மையான கடவுள் இந்துவும் இல்லை முஸ்லீமும் இல்லை ஆனாலும் நான் கடவுளுடைய வழியில் நடக்கப் போறேன் .
அந்த மூன்று நாள் ?
"ஓ ,,,அதுவா நான் கடவுள் கிட்டே போய் இருந்தேன். அங்கே எனக்கு அமிர்தம் கொடுத்தார்கள் .குடித்தேன் கடவுள் என்னுடன் எப்போதுமே இருப்பதாக கூறி விட்டார் இதை நம்புறவங்க என்னுடன் வாங்க"
இப்போ வெறும் நானக்காக இருந்தவர் குருநானக்ஜி .
பிரம்மனும், அல்லாஹ்வும் எனக்கு ஒன்றே .கஃபா யாத்திரை எனக்கு வேண்டாம் . கங்கை ஸ்நானமும் தேவை இல்லை .நான் ஒரே கடவுளையே வணங்குகிறேன். பூஜை அல்ல : தொழுகை அல்ல .எங்கள் உடலும் உயிரும் அந்த ஒரே ஒரு பரம்பொருளுக்கே . அவன்தான் ராமன் அவன்தான் அல்லாஹ் .,,, இப்படி குரு கிரந்த சாகிபில் சொல்லபலப்பட்டிருக்கிறது .
மறுபிறவி உண்மை . ஆத்மா மனிதரூபம் பெறுவதற்கு முன் பல பிறவிகள் எடுத்து மடிகிறது. நாம் உயிர் வாழ்வதன் குறிக்கோள், மற்றவர்களுக்கு உதாரணமாக வாழ்ந்து பரம்பொருளிடம் இறுதியில் ஒன்றிப் போவதே .
மூடப் பழகக வழக்கங்கள் , பட்டினி , சேஷத்ராடனம் , நீத்தாரை வழிபடுதல் அனைத்தையும் சீக்கியம் மறுக்கிறது பஞ்சாபி மொழியில் "சீக்" என்றால் சிஷ்யர்கள் பத்து குருமார்கள் சொன்னதை மட்டுமே கடைப்பிடிக்கும் சிஷ்யர்கள் .
குரு நானக் மக்காவில் தங்கி கஃபாவை நோக்கி கால் நீட்டி படுத்துறங்கிய போது இஸ்லாமிய குரு ஒருவர் கடுங்கோபம் கொண்டு, " இறைவன் இருக்கும் திசையில் மரியாதைக் குறைவாக கால் நீட்டலாமா ? என்று கேட்க, " மன்னிக்கனும் தெரியாமச் செஞ்சுட்டேன் , சரி இறைவன் இல்லாத திசையை நீங்க காட்டின அந்தப் பக்கம் நான் காலை நீட்டிக் கொள்வேன் " என்றார் குருநானக் .
இஸ்லாமிய குரு திகைத்துவிட்டாராம்.
உடனே குருநானக் குர்ஆனில்

" கிழக்கு திசையும் மேற்கு திசையும் அல்லாஹ்வுக்கே உரியன ஆதலால் நீங்கள் எத்திசையை நோக்கினும், அது அல்லாஹ்வின் திசையே. நிச்சயமாக அல்லாஹ் விசாலமானவன் ; மிக அறிந்தவன்
திருக்குர்ஆன் ( 2 : 115 )
என்ற வசனத்தை ஓதிக் காட்டினாராம் . உடனே இஸ்லாமிய குரு இவருக்கு மரியாதை செய்தாராம்.
இவர் இறந்த போது இவரை எரிக்கவா அடக்கவா என்ற தர்க்கம் வந்தது. இது சம்பந்தமாக இவரே முன்னமே சொல்லியது சின்ன குருமார்களுக்கு நினைவுக்கு வந்தது
அதாவது இரண்டு கட்சி காரர்களும் ஒவ்வொரு பூ மாலையை என் உடல்பக்கத்தில் வைத்து என் உடலோடு பூ மாலையும் சேர்த்து போர்வையால் மூடி
3 நாள் கழித்து திறக்க வேண்டும் எந்தப் பக்கம் பூ மாலை வாடாமல் அப்படியே இருக்கிறதோ அந்தக் கட்சி சொன்னபடி செய்யுங்கள் " என்று முன்னமே சொல்லி இருக்க , மூன்று நாள் கழித்து திறந்த போது பூ மாலைகள் இருந்தது . ஆனால் உடல்தான் இல்லை இறைவனிடத்தில் அவர் உடல் போய் சேர்ந்தாக இன்றும் சொல்லப்படுகிறது .
இந்துக்கள் தங்கள் பூமாலையை எரித்து அஸ்தியை கரைத்தார்கள் முஸ்லீம்கள் தங்கள் பூ மாலையை அடக்கம் செய்தார்கள் குருநானக் 1539 செப் 22 நாள் உயிர் நீத்தார்.
சீக்கிய மதம் இந்துக்களின் பக்தி இயக்கமும் . இஸ்லாமிய சூஃபி கொள்கையையும் சேர்ந்த கலவை என்கிறார்கள் , ஆனால் சீக்கியர்கள் இதை ஒத்துக் கொள்ளவில்லை .
மன்னர் அக்பர் இவர்களுடைய பொற்கோயிலை கட்டுவதற்கு பெரிய நிலத்தை தானமாக கொடுத்தார் .
காரணம் அக்பர் தான் உருவாக்கிய
"தீன் இலாஹி "மதமும் சற்று ஏறக்குறைய சீக்கிய மதம் மாதிரியே இருந்தது
பஞ்சாபில் அமிர்தசரஸில் உள்ள பொற்கோயிலை
"ஹர் மந்திர் சாகிப் " எனப்படும் .
ரஹ்மத் ராஜகுமாரன்

கடவுள் 7

புத்தர் மறைவுக்குப் பின் அவரது படிப்பினைகளை சீடர்கள் விதவிதமாக புரிந்து கொண்டார்கள் இதனால் பௌத்தம் இரண்டாக பிரிந்தது ஹீனயான (சிறிய தேர் அல்லது கலம்) மஹாயானா (பெரிய தேர் அல்லது கலம் )
இதுபோக நாகார்ஜுனர் மத்யா மிக (நடுச் சாலை) என்ற சூன்ய வாதக் கருத்துக்களை வலியுறுத்தனார் .
இதுதான் பௌத்திலிருந்து " ஜென்" தோன்றியது
5 நூற்றாண்டின் பிற்பகுதியில் சீனாவுக்குச் சென்ற போதி தர்மர் " வார்த்தைகளிலும் எழுத்துக்களிலும் தேடாமல் , புனிதப் புத்தகங்களுக்கு அப்பால் நேராக மனதைக் குறி வைத்தால், ஒருவன் தன் இயற்கையை முழுவதும் அறிந்து , புத்தனாக முடியும் " என்றார் . இதுதான் ஜென் பௌத்தத்தின் அடிப்டைக் கருத்து
தன் இயற்கையை அறிவதை "கென் ஷோ " என்கிறார்கள் தன் மூச்சின் எண்ணிக்கையை அறிவது , உங்கள் மூச்சை மனத்தில் தொடர்வது , அமைதியாக எண்ணங்களற்று (சும்மா ) உட்கார்ந்திருப்பது , " கோன் " என்னும் விடுகதைகளில் ஞானத்தைப் போதிப்பது ,, இதெல்லாம்தான் ஜென்
ஜென் ஒரு கொள்கையோ கோட்பாடோ அல்ல அது ஒரு தத்துவம் கூட அல்ல
அது ஒரு வாழ்க்கை முறையா ? இல்லை.
சட்ட திட்டங்கள் எதுவும் கிடையாது
ஜென்னில் வாழ்கிறேன் என்று சொன்னால் கூட அது பெரும் பிழையாகும் .
ஜென் என்பது தியானம். ஆனால் எதை நினைத்தும் தியானிப்பது இல்லை .எல்லாவற்றிலும் தியானம் இருப்பதாகச் சொல்கிறது ஜென்
பேசுவது, இருப்பது, நடப்பது, உண்பது , சிரிப்பது , உறங்குவது, தொழில் செய்வது , எல்லாமே தியானம் .எல்லாவற்றையுமே தியானமாக்க முடியும் இதுதான் ஜென் .
"ஜின்களையும் , மனிதர்களையும் என்னை வணங்குவதற்கன்றி (வேறெதற்காகவும் ) நான் படைக்கவில்லை "
திருக்குர்ஆன் 51 : 56
தன்னைத் தானே அடையாளம் கண்டு கொள்வது ஜென்
" காணாமல் போன தன் மூக்குக் கண்ணாடி ,தன் மூக்கின் இருப்பதைக் கண்டு, கொள்வது போன்றது ஜென் " என்று ஓஷோ குறிப்பிடுகிறார் .
நான் _ யின் ஒரு ஜென் குரு (1868 - 1912) -ல் வாழ்ந்தவர் அவரிடம் ஒரு கல்லூரிப் பேராசிரியர் , ஜென் பற்றிக் கேட்க வந்தார்
நான்- யின் அவருக்குக் கோப்பையில் தேநீர் அளித்தார் . கோப்பை நிரம்பி வழிந்ததும் அவர் தேநீர் ஊற்றுவதை நிறுத்தவில்லை .பேராசிரியர் இதைப் பார்த்து " கோப்பை நிரம்பி வழிகிறது " என்றார்

"இந்தக் கோப்பை போலத்தான் நீ. மனம் முழுவதும் கருத்துக்களும், ஐயங்களும் நிரப்பி வைத்திருக்கிறாய் . உன் கோப்பையைக் காலி செய்யாமல் நான் எப்படி உனக்கு ஜென்னைக் காட்ட முடியும் ?" என்றார் நான் -யின் .

கௌதுல் ஆலம் முகையதீன் அப்துல் காதிர் ஜிலானி (ரஹ்) அவர்கள் பக்காத் நகருக்குள் வருவதை அறிந்த பாக்தாத் மார்க்க அறிஞர்கள் . "பாக்தாத்தான் மார்க்க அறிவால் நிரம்பி இருக்க . முகையதீன் அவர்கள் ஏன் வர வேண்டும் என்பதை சூட்சம அவர்களுக்கு உணர்த்த வேண்டிய ஒரு பாத்திரம் நிரம்பி வழியும்படி நீரை ஊற்றி அவர்கள் முன் வைத்தனர் ,

அதைப் புரிந்து கொண்ட ஆண்டகை அவர்கள் கை நிறைய முல்லைப் பூக்களை அள்ளி அந்தப் பாத்திரத் தண்ணீரில் போட்டு திருப்பி அனுப்பித்தார்கள் .

இது பற்றி அவர்களின் சீடர்கள் கேட்டதற்கு "உங்கள் மார்க்க அறிவு நிரம்ப உள்ள பாக்தாத்தில் அவ்வறிவை மணம் பெற செய்யவே நான் வருகை தர உள்ளேன் " என்பதை குறிப்பால் உணர்த்தவே முல்லைப் பூக்களைப் போட்டு திருப்பி அனுப்பினேன் " என்றார்கள்

பார்க்கப் போனால் இதுவும் ஜென்தான்

கடவுள் 8

ஷித்தோ அல்லது ஷிண்டோ என்றும் சொல்கிறார்கள் இது ஜப்பானியபுராதனமான மதம் கிமு 500 துவங்கியது ஜப்பானிய மக்கள் 84 சதவிகிதத்தனர் இன்றும் பின்பற்றுகிறார்கள்.

இயற்கை வழிபாடு , பால் பார்த்து குறி சொல்வது , வீர வழிபாடு , மந்திர தந்திரங்கள் ,,,,, இப்படி எல்லாம் சேர்ந்த கலப்பு மதம். இதன் பெயர் "ஷின், துன்" என்னும் சீனமொழிச் சொற்கள் அதாவது "கடவுளின் வழிகள் " ஷிந்தோ பல கடவுள்களைப் பேசுகிறது அந்த கடவுள்களை "காமி " என்கிறார்கள் மலை, காற்று, ஏன் உண்மைக் கூட கடவுள் என்கிறார்கள் (கடவுளுக்கு "ஹக்" என்ற பெயரும் இருக்கிறது இது ஷிந்தோ வினருக்கு தெரியாதா என்னவோ ? ) புத்தரையும் காமி என்றழைக்கிறார்கள் .

பௌத்தமும் ஷிண்டோவும் கலந்த மதம் இம் மதத்திற்கு வேதம் இல்லாததால் கன்ஃபூஷியஸின் போதனைகளை வேதமாக்கி உள்ளனர் . இதனால் கன்ஃபூஷியஸும் காமிதான் அவ்வப்போது காமிகள் தத்துவமாக பேசுவார்கள் கேட்க பிரமாதமாக இருக்கும் . தத்துவமெல்லாம் ஐந்தாறு வார்த்தைகளில் முடிந்துவிடும் . விளக்கம் ஐந்தாறு மணி நேரம் மற்றவர்களால் கொடுக்க முடிகிறது . ஜப்பானிய தேசீய கீதம்தான் உலகிலேயே ரொம்ப சின்னது காரணம் காமிக்கள்

சொர்க்கம், நரகம் பற்றி நிறைய பேசுகிறார்கள் சொர்க்கம் உயரமான இடம் செழிப்பான பூமி ஆறுகள் அருவிகள் கொண்ட குளிர்ச்சியான பிரதேசம் . தாங்கள் தங்குவதற்குரிய இடத்தையும் பிரமாதமான படங்களாக வரைந்து வீட்டுக்கு வந்து போகிறவர்களிடம் காட்டிக் கொள்வார்கள். "இதுதான் என் சொர்க்கம் "என்று .

நரகம் வெப்பமும், இருளும் துர்நாற்றமும் கொண்ட அதள பாதாளம் , காமிகள் இங்கெல்லாம் போய் பார்த்து விட்டு வந்தவர்கள் , எனவே காமியையும் வழிபட வேண்டும் .முன்னோர்களையும் வழிபட வேண்டும் , மிருகங்கள் , பறவைகள் , மற்ற ஜீவராசிகள் , மலைகள் இவைகள் எல்லாம் கூட "கடவுளின் தூதர்கள் " என்று நம்புகிறார்கள் காரணம் இவைகள் கடவுளை வணங்குகின்றன , எனவே கடவுளின் புறத்திலிருந்து அவ்வப்போது அவைகளுக்கு செய்திகள் வருகின்றன என்றும் கூட நம்புகிறார்கள் .

இவர்களின் கோயில்களினுள்ளே இரண்டு நாய் பொம்மைகள் ஒன்றை ஒன்று பார்த்துக் கொண்டு இருக்கும் கமா , இனு என்று அவற்றிற்குப் பெயர்.

ஆறுகளையும், அருவிகளையும், காற்றின் அசைவு , வெயிலின் நிழல் , மேக மூட்டத்தின் உருவங்கள், கரையான் புற்றின் வடிவமைப்பு எறும்பின் இயக்க திசை ,,,,,,இப்படி ஏகப்பட்டவைகளின் செய்கைகளின் இருந்து அது சொல்ல வரும் சேதியை மனத்தின் உள்ளுணர்வால் அறிந்து குறி சொல்கிறார்கள் , அது பற்றிய குறிப்புகளையும் எழுதி வைத்துள்ளார்கள்.

"உங்களது இறைவன் தேனீக்களுக்கு மலைகளிலும் , மரங்களிலும் மக்கள் கட்டும் கட்டிடங்களிலும் கூடுகளை அமைத்துக் கொள்ளும்படி அறிவூட்டினான் (வஹி)

குர்ஆன் : 16 : 68

(நபியே) நீர் பார்க்கவில்லையா ? வானங்களிலும் , பூமியிலும் உள்ளவையும் , பறவைகளும் இறக்கையை விரித்த வண்ணமாக தஸ்பீஹு செய்து துதிக்கின்றன

குர்ஆன் 24 : 41

செடிகள் (கொடிகள் ) மரங்கள் (ஆகியவை அனைத்தும் அல்லாஹ்வுக்கு வழிபட்டு) சிரம் பணிகின்றன .

குர்ஆன் 55 : 06

மலைகளை நோக்கி , " நீங்களும் தாவூதுடன் சேர்ந்து துதி செய்யுங்கள் "என்று கட்டளையிட்டோம்,

குர்ஆன் 34 : 10

வானங்களிலும் .பூமியிலும் இருப்பவை அனைத்தும் அவை விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் அல்லாஹ்வுக்குச் சிரம் பணிந்து வழிபட்டே தீரும். காலையிலும் மாலையிலும் அவற்றின் நிழல்களும் வழிபடுகிறது .
குர்ஆன் 13 : 15
(நபியே) வானங்களில் இருப்பவர்களும் பூமியில் இருப்பவர்களும் . சூரியனும், சந்திரனும், நட்சத்திரங்களும் மலைகளும் , மரங்களும் கால்நடைகளும் , மனிதரில் ஒரு பெரும் தொகையினரும் நிச்சயமாக அல்லாஹ்வுக்குச் சிரம் பணிந்து வணங்குகின்றனர் என்பதை நீங்கள் காணவில்லையா ?
குர்ஆன் 22 : 18
கடவுளின் தூதர்களை வணங்கும் ஷிண்டோ மதத்தினர் இவைகளைப் படைத்த கடவுளை நேரடியாக வணங்காததுதான் ரொம்பவும் ஆச்சரியமாக எனக்கு இருக்கிறது .

கடவுள் l0
முடியாத ஓர் அனுபவம் . அது ஒரு சக்தி .எல்லாப் பொருட்களையும் சூழ்ந்து மூடி, அவற்றை ஊடுருவியிருக்கும் சக்தி . உயிருள்ள - உயிரற்ற அனைத்திலும் விரவி இயற்கை விதிகளை , இயக்கச் சக்திகளை சமன்படுத்தி எதிர்மறைகளை ஒன்று சேர்த்து அதனை ஜோடி ஜோடிகளாக ஆக்கி அவற்றிற்குள் இருக்கும் சக்தியை " தாவ்" ( dao என்று உச்சரிக்கிறார்கள் ) இந்தச் சொல்லுக்குக் குத்துமதிப்பாகப் "பாதை" அல்லது "வழி " என்று பொருள் கூறலாம் . அறுதியிட்டு "இது தான் " என்று சொல்ல முடியலை. எல்லாவற்றிலும் ஊடுருவி, எல்லாவற்றிலும் சூழ்ந்து , எல்லாவற்றிலும் பிரிக்க முடியாத இந்த சக்தியை "தாவ் "
வானங்களிலும் பூமியிலும் உள்ள அனைத்தும் அல்லாஹ்வுக்குரியனவே அல்லாஹ் அனைத்தையும் (தன் ஞானத்தைக் கொண்டு) சூழ்ந்தறிபவனாக இருக்கின்றான் ,
திருக்குர்ஆன் (4 : 126)
ஆக தாவ் என்பது அல்லாஹ்வின் அருள்
வெறுப்பு இல்லாமல் அன்பு இருக்க முடியாது இருள் இல்லாமல் ஒளி இருக்க முடியாது பெண இல்லாமல் ஆண் இருக்க முடியாது இது போன்ற தாவிஸத்தில் அதிகம் பார்க்க முடிகிறது இதை நிறுவியவர் "லாவ் ட்சே (Lao Tse ) கி.மு 604 -லிருந்து 571 வரை வாழ்ந்த சீன ஞானி.
சீனாவில் உள்நாட்டுக் கலவரம் சண்டை இவற்றிலிருந்து விடுபட ஏற்கனவே சீனக்காட்டில் தவமிருந்த லாவ் ட்சே நாட்டை விட்டு வெளியேறும் போது நாட்டின் எல்லை காவல் படைத் தலைவனால் கண்டுபிடிக்கப்பட்டு நாட்டை விட்டு வெளியேற அனுமதிக்க முடியாது நீங்கள் கற்றுக் கொண்ட ஞானத்தை இம் மக்களுக்கு கொடுத்தாலே போதும் யுத்தங்களை நிறுத்தி சமானத்தை ஏற்படுத்த முடியும் . ஒரு நாட்டின் அமைதியை, ஆளும் மன்னால் கொடுக்க முடியாது உம்மை போன்ற மகான்களால் நிச்சயம் கொடுக்க முடியும் .எனவே இம்மக்களுக்கு சொல்ல வேண்டியதை எழுதிக் கொடுத்து விட்டு போகலாம்" .என்று கூற , உட்கார்ந்த இடத்திலேயே நிலையாக உட்கார்ந்து எழுதியதுதான் இந்த " தாவ்" மக்களால் அங்கிகரீக்கப்பட்டு அதை வேதமாகவே ஏற்றுக் கொண்டனர் .
பொதுவாக வேதங்கள் யுத்தங்களின் போது தான் வெளிப்படுகிறது . பகவத் கீதை அருளப்பட மஹாபாரத யுத்தம் தேவையாயிருந்தது
சிலுவைப் போருக்குப் பின்னே பைபிள் அதிகம் பின்பற்றப்பட்டது
பத்ரு யுத்தத்திற்குப் பிறகே இஸ்லாம் வேகமாக பரவி வேறுன்றி குர்ஆன் அங்கீகரிக்கப்பட்டது.
தாவ் என்பது பிரபஞ்சத்தின் முதல் காரணம் , எல்லா உயிர்களின் ஊடேயும் உள்ள சக்தி இந்த தாவ் எல்லோரையும் சூழ்ந்திருப்பதால் எல்லோரும் அதை உன்னிப்பாக கவனிக்க வேண்டும் .அதன் வினை வியப்பூட்டக் கூடியது ,
அனைவரின் குறிக்கோளும் தாவுடன் ஒன்றுவதே ஆகும் . நம்முடைய நிர்க்குண பிரம்மம் போல அது. அதை உருவாக்க முடியாது , பிரார்த்தனையைக் கேட்கும் கடவுள் என்று எவருமில்லை .காரணம் எந்த பிராத்தனையும் ஏதும் இல்லாமல் இந்த பிரபஞ்சம் படைக்கப்பட்டிருக்கின்றது நல்லதும் நடந்து கொண்டிருக்கிறது .
ஒவ்வொருவரும் தமக்குள்ளேயே எண்ணங்களிலும் செயல்களிலும் விடை தேட வேண்டும் .அதற்கு தாவ் வழி செய்யும்
காலம் திரும்ப வரும். நீங்கள் நினைத்த மாதிரியான காலமாக அது இருக்காது அது ஏறக்கனவே செய்த பழைய காலத்தின் எதிர்வினையான காலம். அதன் போக்கு நேரானதல்ல. வட்ட வடிவமானது .
ஆரோக்கியமும் , வீரியமும தாவிஸ்டுகளுக்கு முக்கியம் , உடலிலுள்ள பஞ்ச துவாரங்கள் , பஞ்ச பூதங்களைச் சார்ந்தவை.
ஒவ்வொருவரும் தமக்கு வழங்கப்பட்டருக்கும் ."சி" என்னும் "மூச்சை "ப் பாதுகாக்க வேண்டும் .(ரூஹ்) மூன்று குணங்கள் முக்கியம் கருணை , அடக்கம் , கட்டுப்பாடு
"வூ வெய் " என்பதுதான் தாவிஸத்தின் வழி . இயற்கையின் வழி. இதில் எந்தச் சக்தியும் குறுக்கிட முடியாது .அது அதன் போக்கிலேயே விட வேண்டும் (அது விதி)

மலையைப் போல் அமைதியாக இரு. நதியைப் போல் பெருகு- காற்றைப் போல் இயங்கு . கடலைப் போல் விரி நெருப்பைப் போல் நிமிர் .தாவ் வின் மந்திரம்
எங்கள் வாழ்வை ,தாவிடம் ஒப்படைத்து விட்டோம் - பிரபஞ்சத்தில் இயற்கையுடன் இணைந்து விட்டோம் இந்த ஜன்மத்திலும் , இதற்கும் பின்பும் தாவோடு வாழ்வதற்கு ¡
**நாளை வியப்பூட்டும் விந்தைகள் தொடர் இன்ஷா அல்லாஹ் 30-06-2017**

வியப்பூட்டும் விந்தைகள் 1 01-07-2017



"உலகிலேயே மிக அழகான அனுபவம் என்பது ஆச்சரியங்களை - எதிர்பாராததைச் சந்திப்பதுதான் .எல்லா கலைகளுக்கும் அறிவியலுக்கும் அதுதான் ஊற்று " இதைச் சொன்னவர் மிகச் சிறந்த விஞ்ஞானியான ஆல்பர்ட் ஐன்ஸ்டைன்.
" அறிவியலில் எல்லா வினாக்களுக்கும் விடை இல்லை " இதையும் ஐன்ஸ்டைனே சொல்லி இருக்கிறார். அறிவியல் விதிகளின்படிதான் அன்றாட உலகில் எல்லாம் ஒழுங்காகவோ ஒழுங்கற்றோ நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன .அதனால் அன்றாடம் அதிசயங்கள் அற்றது. பஸ்கள் பறப்பதில்லை பறவைகள் பேசுவதில்லை , பெண்கள் பேசாமல் இருப்பதில்லை .
மனிதன் அதிகாலத்திலிருந்து தன்னைச் சுற்றிய உலகத்தில் அற்புதங்கள் பல உள்ளன என்று நம்பி வந்தான் . நம் புராணங்களிலும் பைபிள், குர்ஆன் போன்ற எல்லா நூல்களிலும் பல அற்புதச் செயல்கள் பதியப்பட்டுள்ளன .
கம்பால் அடித்து கடல் பிளப்பதும் ,மலையைப் பிளந்து ஒட்டகம் ஓடி வருவதும் .வந்த ஒட்டகம் உடனேயே கன்றை ஈனவதும் , நெருப்பினுள் மனிதர் ஜீவிப்பதும் ,,,,,,இப்படி ஏகப்பட்ட அதிசயங்கள் பைபிளும் குர்ஆனிலிலும் மாறி மாறி பதிவு செய்யப்பட்டுள்ளது .
இந்த அதிசயங்கள் வேதங்களில் மட்டுமே அன்றி தினசரி வாழ்விலும் நான் காண முடிகிறது அதற்கான ஆதாரமான பதிவுகள் கூட இருக்கிறது அதன் அத்தாட்சிகளாக . இதை எந்த அறிவியல் விதிகளோடு ஒப்பிட்டு ஏற்க முடியும் என்பதுதான் தெரியவில்லை
உதாரணமாக ,,,, ,,,,,
மார்கன் ராபர்ட்ஸன் என்பவர் ஒரு நாவல் எழுதினார் , பெயர் "டைட்டனின் அழிவு அல்லது நாசம்" (The wreck of the Titan or Futility ) . அந்த நாவலில் டைட்டன் என்கிற உலகிலேயே மிகப்பெரிய சொகுசுக் கப்பல் 'ஒரு ஐஸ்பாறையில் மோதி மூழ்கிப் போகிறது . பல பேர் இறந்து போகிறார்கள் என்பது அதன் கதை . சுவாராஸியம் இல்லாத கதைப் போல் அப்போது இருந்தது .
எங்கோ கேட்ட கதை போல இருக்கிறதல்லவா ?
1912 -ல் டைடானிக் என்னும் கப்பல் ஐஸ் பாறையில் மேல் நிஜமாகவே மோதி மூழ்கியது . நாவல் எழுதியது 1898 .நாவலின் கற்பனைக்கும் நிஜத்தின் விதிக்கும் உள்ள ஒற்றுமைகளைப் பாருங்கள் .
இதை எந்த வகை ஆச்சரியம் என்பீர்கள் ...?
இயற்பியல் விதிகளையும் மீறிய அமானுஷ்ய சக்தி ஏதும் உலகில் உண்மையில் இருக்கிறதா ?
விஞ்ஞானத்தில் பதில் இல்லை , உங்களிடம் பதில் இருக்கிறதா ?

வியப்பூட்டும் விந்தைகள் 2



"நாஸ்ட்ராடமஸ் " பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள் தெற்கு பிரான்ஸில் ரெமி என்னும் நகரில்.1503 -ல் பிறந்தவர் , தின வாழ்வில வைத்தியர் .சுமார் 1000 எதிர்காலச் சம்பவங்களை அவர் குறி சொல்லி அதற்கு "நூற்றாண்டுகள்" என்கிற தலைப்பில் புத்தகமாக வெளியிட மிகப் பிரபலமானது. அத்தனையும் கவிதை வடிவில் ஒரு மாதிரியான புரிந்தும் புரியாத அயோமயமாக எழுதி தள்ளி இருக்கிறார் .(இப்போதுள்ள சில புதுக்கவிதைகள் மாதிரி )

பிரெஞ்சுப் புரட்சி . நெப்போலியன் வாழ்வும் தாழ்வும் ,,,,,,,,இப்படி ஆரம்பித்து இரண்டு உலகப் போர்கள் , காந்தி இறந்தது , இரான் - இராக் சண்டை , , வளைகுடா யுத்தம் , ஏன் எங்க பெரிய குத்பா பள்ளிவாசல் பின்னாடி இன்று தெரு நாய் 4 குட்டி போட்டது இருக்கிறதா ,,,,, என்றால் நூற்றாண்டு புக்கில் இருக்கிறது "நாயோடு பெரிய கோனே நாலு வாண்டுகளே நலமறிய பிரசவித்ததுவே பள்ளி " ,,,இப்படி அவரவருக்குத் தேவையான மலுப்பலுடன் இருக்கிறது , உங்களைப் பற்றிய செய்திக் கூட இருக்கிறது , நல்ல பாருங்கள். கிடைக்கும்.

ஆனாலும் நாஸ்ட்ராடமஸில் ஒரு பெரிய ஆச்சரியமும் இருக்கிறது ஹிட்லர் பற்றி அவர் "ஹிஸ்டர்" என்று சொல்லி இருக்கிறார் .

"சுதந்திரம் மறுக்கப்படும். ஒரு கரியகுள்ள கொடிய வில்லன் மற்ற பேருடன் சேர்ந்து சுதந்திரத்தைப் பறிப்பான் ,

வெனிஸ் நகரம் ஹிஸ்டரால் அழியும் ,

பசித்த மிருகங்கள் நதிகளைத் தாண்டும்

பெரும்பாலானோர் ஹிஸ்டருக்கு எதிராக இருப்பார்கள் .தலைவனை இரும்புக் கூண்டில் அடைப்பான். ஜெர்மனியின் புதல்வன் சட்ட திட்டங்களைப் பார்க்க மாட்டான் , " இதை அதிசயம் என்று சொல்லத்தான் தோன்றுகிறது ,

மேற்சொன்ன விஷயம் பழங்காலம் , ஏதாவது உட்டலக்கடி இருக்குமா ,? என்று எண்ணத் தோன்றுகிறது இந்த நூற்றாண்டில் இம் மாதிரியான எதிர்காணல்கள் உண்டா ? என்றால் ஏராளம் என்று ஒரு பட்டியல் ஆதாரத்தோடு இருக்கிறது , அவற்றில் சில

செப்டம்பர் 1918-ல் "எவ்ரிபடி " என்னும் பத்திரிக்கை ஒரு யுத்தத்தைப் பற்றி ஒரு செய்தி வெளியிட்டது , ஆகஸ்ட் 23, 1980-ல் ஆவியோடு பேசும் அலெக்ஸ்டானஸ் என்பவர் என்.பி.சி ரேடியோவின் " விளக்க முடியாத நிகழ்வுகள் "

என்னும் நிகழ்ச்சியில் ஒரு பேட்டியில் இவ்வாறு கூறினார்.

ஒரு மிகப் பிரபல ராக் பாடகர் அகாலமாக இறந்து போவார். இது இந்தக் கணத்திலிருந்து எப்போது வேண்டுமானாலும் நிகழலாம் , "

இந்தப் பேட்டி செப்டம்பர் 5 -ம் தேதி ஒலிப்பரப்பாகியது டிசம்பர் 8ம் தேதி ஜான் லென்னன் உலகின் மிகப் பிரபலமான பீட்டில்ஸ் பாடகர் தன் அபார்ட்மெண்ட் வாசலிலேயே சுட்டுக் கொல்லப்பட்டார் . யார் சாகக்கூடும் என்று அன்றே வானொலி நிலையத்தார் ஆறு பெயர்களைப் பட்டியலிட்டிருந்தார்கள்

அதில் முதல் பெயர் ?

ஜான் லென்னன் '

இது என்ன சொல்ல

வியப்பூட்டும் விந்தைகள் 3



ஜனவரி 16ந் தேதி, 1969, சிகாகோ
நகரத்தில் ஓர் ஓட்டலின் பாரில் நுழைந்து, "பேப்பர் கொடுப்பா,,,,,, ரயில் விபத்தில் எத்தனை பேர் இறந்தாங்கனு பார்க்கணும் ,,,, ,, ,, " என்றார் ஜோசப் டி லூயிஸ்
" விபத்தா..? என்ன ரயில் , , , ? பேப்பர்ல ஏதும் செய்தி இல்லையே., , ,, என்றார்கள்
" இங்கிருந்து தெற்காலப்பா ,,, ,,, ,, ரெண்டு ரயில் , பனிமூட்டத்துல ஒண்ணோட ஒன்று மோதிக்கிட்டு நிறைய பேர் அடிபட்டு செத்துட்டாங்கப்பா ,,,, ,, ,,, பேப்பர்ல வரல ,,, ,,? "
என்றார் ஜோசப் டி லூயிஸ் |
ரேடியோ போட்டார்கள் . ராத்திரி பதினோரு மணி ,,,, ,,, , . விபத்தைப்பற்றி எந்த செய்தியும் இல்லை , லூயிஸை ஒரு "லூஸ்"மாதிரி பார்த்தார்கள் .டின் கட்டாத குறை ,
இரண்டு மணி நேரம் கழித்து, இரவு 1 மணிக்கு இல்லினாய் சென்ட்ரல் ரயில்கள் இரண்டு பனியில் மோதிக் கொண்டன , சிகாகோவிற்கு தெற்கே .47 பேருக்கு பயங்கர அடி' அந்த இடத்திலேயே 3 பேர் மரணித்துப் போனார்கள் ,
யார் இந்த ஜோசப் டி லூயிஸ் ,, ,, . ஒரு முடிதிருததக் கலைஞர் . எட்டாவதுக்கு மேல் படிக்கவில்லை டி.வி-யிலும் பத்திரிக்கைகளிலும் எதிர்வரப்போகும் விபத்துகள் பற்றி நிறைய பேசினார். பல, நிறைய பலித்தன.
1967, நவம்பர் 25-ம் தேதி " ஒரு பாலம் இடிந்து விழும் " என்றார்
3 வாரம் கழித்து டிச 16ந் தேதி ஒஹையோ நதியின் குறுக்கே இருந்த 'வெள்ளிப் பாலம்" இடிந்து விழுந்து 36 பேர் இறந்தனர் . 10 பேரைக் காணவில்லை .
1968 ஜனவரி 8ந் தேதி "நாட்டில் கலவரம் வரும் " என்றார் லூயிஸ் ஏப் 7 ந் தேதி சிகாகோவில் பெரிய கலவரம் வந்து ஐயாயிரம் மைய அரசுப் படையினர் வந்து கலவரத்தை அடக்கினார்கள்,
1968 டிச 15-யில் "கென்னடி குடும்பத்துக்கு தண்ணீர் மூலம் ஒரு கண்டம் இருக்கிறது " என்றார் லூயிஸ் உடனே அரசுப் பணியாளர்கள் இவரது முடி திருத்தும் கடைக்கு படை எடுத்தார்கள்
"எப்படி கென்னடி குடும்பத்திற்கு தண்ணீரில் கண்டம் என்று கேட்டனர் ?
"ஒரு பெண் நீரில் முழ்குவதைப் பார்த்தேன் " என்று கஷ்டமர் ஒருவருக்கு மொட்டைப் போட்டவராக சாதாரணமாகச் சொன்னார்
மே 21 1969 , மேரி ஜோ என்னும் பெண் , எட்வர்ட் கென்னடியுடன் காரில் சென்று கொண்டிருக்கும் போது நீரில் குதித்து செத்துப் போனாள் , இதற்குரிய காரணத்தை கென்னடி ஒழுங்காக சொல்லவில்லை . மழுப்பலும் ,சம்மாளிப்பும் அதிகமாக இருந்தது இதனால் கென்னடியின் அரசியல் வாழ்வுக்குப் முற்றுப்புள்ளி வைத்தது ,
மே 21 , 1969 -ல் டி லூயிஸ் "ஒரு விமானம் விபத்துக்குள்ளாகி , ஒன்னு, இரண்டு , மூன்று , நாலு ,,,,, . ,,,, ..... 79 பேர் செத்துப் போவார்கள் என்றார்
செப் 9 -ம் தேதி அலிகனி ஏர்லைன்ஸின் விமானம் ஒரு தனியார் விமானத்துடன் மோதி 4 பைலட்களும் 79 பயணிகளும் இறந்தனர் .
கஷ்டமருக்கு முடி திருத்தம் , செய்து கொண்டிருக்கும் போது பேட்டி கேட்டனர் "இதெல்லாம் எப்படி ? "
"கண்ணுக்குத் தெரியுது அதனாலே சொல்றேன் , "
"வேறே ஏதாவது தெரியுதா ? "
" இல்லை - தெரிஞ்சா சொல்றேன் . கடைக்கு அடிக்கடி வந்து உங்கள் சிகையை அழகுப்படுத்திக் கொள்ள வாருங்கள் " என்று எந்த பந்தாவும் இல்லாமல் கேஷுவலாக சொன்னார் லூயிஸ் .
ரஹ்மத் ராஜகுமாரன் .

வியப்பூட்டும் விந்தைகள் 4




இங்கிலாந்து பிரதமர் சர்ச்சில் இரண்டாம் உலகப்போரின் உச்சமான தருணம் . லண்டன் நகரம் குண்டு வீச்சுக்கு உட்பட்டு அலை அலையாக ஜெர்மன் விமானங்கள் வந்து வந்து குண்டு போட்ட வண்ணமாக இருந்தது சர்ச்சில் தைரியமாக இருந்தாலும் அவரது உள் மனதின் எச்சரிக்கைகளைப் புறக்கணிக்கவில்லை , ஒரு நாள் ராத்திரி சர்ச்சில் தன் டவுணிங் தெரு பத்தாம் நம்பர் வீட்டில் மூன்று மந்திரிகளை டின்னருக்கு அழைத்திருந்தார். விருந்து நடந்து கொண்டிருந்த போது விமானத் தாக்குதல் தொடங்கியது .இதை சர்ச்சில் சற்றும் எதிர்ப்பார்க்கவில்லை
சாப்பிட்டுக் கொண்டிருந்த சர்ச்சில் திடீரென்று எழுந்து சமையலறைக்குப் போய் அங்கிருந்த சமையல்காரர்களிடம் , "சாப்பாட்டை டைனிங் ரூமில் உள்ள மேஜை மேல் வைத்து விட்டு , உடனே பாம்ஷெல்டர் பாதுகாப்புக்குச் சென்று விடுங்கள் சமையலறையில் யாரும் இருக்கக் கூடாது" என்று ஆணையிட்டு 3 வது நிமிடத்தில் துள்ளியமாக சமையலறையில் குண்டு விழுந்து சமையல் அறை ஒன்று இங்கு இருந்தது என்று யாராலும் சொல்ல முடியாத அளவிற்கு கட்டட குவியல்கள்
சமையல்காரரும் ,பணிப் பெண்ணும் காப்பாற்றப்பட்டார்கள் ,
சாப்பிட்டுக் கொண்டு இருக்கும் போது எதற்காக எழுந்து போய் சமையல் அறையில் அப்படி ஒரு ஆணையை ஏன் பிறப்பிக்க சொன்ன சக்தி எது ? மொத்த வீடே பாதுகாப்பு கேள்வி குறியாய் இருக்கும் போது சர்ச்சில் சமையலறையை மட்டும் பாதிக்கப்படப் போகிறது என்பது எப்படி தெரியும் ? இது பற்றி வியந்து வியந்து சொல்லிக் கொண்டே இருந்தார் சர்ச்சில் ,
மற்றொரு முறை சர்ச்சில் லண்டனில் காரில் செல்லத் தயாரானார் , அவர் எப்போதும் காரில் உட்காரும் பக்கத்தின் கதவு திறந்து, கார் காத்திருந்தது .ஒரே ஒரு விதிவிலக்காக , அன்று அவர் சுற்றி வந்து எதிர் பக்கத்து கதவை திறந்து ஏறிக் கொண்டார் .
தெருவில் இருட்டில் செல்லும் போது ஒரு "பாம்" பக்கத்தில் விழுந்து கார் கன்னாபின்னாவென்று நிலையிழந்து இரண்டு சக்கரத்தில் கொஞ்ச தூரம் போய் விழவிருந்தது , சார்ச்சில் உயர்ந்த பக்கத்தில் உட்கார்ந்திருந்தால் கார் மீண்டும் சமநிலைக்கு வந்து தப்பித்தது "குண்டாக இருந்ததால் தப்பித்தேன் " என்றார் சர்ச்சில் வழக்கம் போல் காரில் உட்காரும் இடத்தில் இருந்தால் சர்ச்சில் செத்திருப்பார்
சர்ச்சில் மனைவி இது பற்றி கேட்ட போது , "ஏதோ ஒன்று காரை அணுகும் போது, "நில் ' அந்தப் பக்கம் ஏறிக் கொள்" என்று சொன்னது அதனால் இடம் மாறி உட்கார்ந்தேன் " என்றார் .
நம்மில் பெரும்பாலானவர்களிடம் உள்மன எச்சரிக்கை இருக்கிறது என்று விஞ்ஞானிகள் நம்புகிறார்கள் , அது எப்படி இயங்குகிறது என்பதை விஞ்ஞானிகளின் உள்மனம்தான் சொல்ல வேண்டும்

வியப்பூட்டும் விந்தைகள் 5
"நான் உங்களை மக்கா ஹரத்தில் நீங்கள் கஃபாவை வலம் சுற்றி வருவதை நிஜமாகவே பார்த்தேன்" என்கிறார் புதிய ஹாஜி ஒருவர்
அந்த நண்பரோ "ஹஜ்ஜுக் நான் வரவே இல்லையே " என்கிறார்
இது மாதிரி சம்பவங்கள் சாத்தியம் என்கிறார் கேம்ப்ரிட்ஜ் பேராசிரியர் ஏட்ரியன் டாப்ஸ் என்கிற விஞ்ஞானி "சைட்ரானிக் அலை முகப்புகள் ( Psitronic Wavefronts ) என்ற தத்துவத்தால் இது மாதிரி உலகில் நடக்கலாம் நடந்திருக்கிறது என்கிறார் .
மிகவும் குழப்பியடிக்கும் ஒரு தத்துவம் .
அதை படிக்காமலேயே நீங்கள் ஒரு முறைப்புடன் அடுத்தப் பதிவுக்குப் போய் விடுவீர்கள் ஆகையால் சம்பவத்தை மட்டும் சொல்றேன் , இப்போ இல்லை அப்புறமா சொல்றேன்

வியப்பூட்டும் விந்தைகள் 6



வி.வி 5 படித்த பின் இந்தப் பதிவைப் படித்தால் புரியும் ,
அமெரிக்காவில் கலிபோர்னியாவின் இங்கிள்வுட் என்னும் ஊரைச் சேர்ந்த பால் மக்காஹன் தம்பதிகள் கிராண்ட் கன்யன் என்னும் பிரசித்தப் பெற்ற சுற்றுலாப் பிரதேத்துக்குச் சென்றிருக்கிறார்கள் . மாலை நேரம் அவர்கள் தங்கியிருக்கும் காபினுக்குப் பக்கத்து காபினுக்கு ஒரு பெண்மணி , ஒரு கை இல்லாத கணவர் , ( புளு கலர் சட்டக்கை காற்றில் ஆடுகிறது ) , லக்கேஜ் தூக்கிக் கொண்டு வரும் பையன் , இருவருடன் செல்வதை திருமதி மக்காஹன் பார்க்கிறாள்
அந்தப் பெண்மணி ஒரு வருஷம் முன்பு கோர்டில் ஜூரியாக தன்னுடன் வேலை பார்த்திருக்கிறார். தன் கணவருக்கு ஒரு கை இல்லை என்பதை தன்னுடன் பணிபுரியும் காலத்தில் அவள் சொல்லவே இல்லை என்பதை தன் கணவரிடம் சொல்லிக் கொண்டாள் ,
"எதற்கு ராத்திரியில் தொந்தரவு செய்ய வேண்டும் .... ...? காலை சந்திக்கலாம் ..... என்று கணவர் சொல்லிவிட்டார் ,
மறுநாள் காலை அவர்களை வராந்தாவில் பார்த்ததும் அருகில் சென்று பேசினோம். எங்கள் கணவர்களும் சந்தித்துக் கொண்டார்கள் இருவரும் இயல்பாகவே சற்றுநேரம் பேசி இருந்து விட்டு , முதல் நாள் சாயங்காலம் அவர்கள் வந்து சேர்ந்ததைக் கவனித்தாகவும் சொன்னேன்
அவர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டார்கள் காரணம் இவர்கள் குறிப்பிடும் நேற்று சாயங்காலம்தான் புறப்பட்டாரகள் இன்று காலை 6 மணிக்கு இங்கு வந்திருக்கிறார்கள் .. அதெப்படி நேற்று மாலை இங்கு எங்களைப் பார்த்திருக்க முடியும் ? நீங்கள் வேறு யாரையாவது பார்த்திருப்பீர்கள் ..... என்றனர்
ஒரு கை இல்லாத உங்களை புளு கலர் சட்டைக் கை காற்றில் அடியதைக் கூடப் பார்த்தேன் என்றனர் பால் மக்காஹன் தம்பதி கூற ,
இன்றைக் இவர் போட்டு வந்த சட்டை வெள்ளை புளு கலர் சட்டை நேற்று காலை போட்டிருந்தேன் நேற்று மாலை துவைத்து மடித்து வைத்து விட்டேன் இதோ " என்று புளு கலர் சட்டையை காண்பிக்கிறார் கை இல்லாத நபரும் அவரின் மனைவியும் .
இரண்டு தம்பதிகளும் ரொம்பவும் ஆச்சரியப்படுகிறார்கள் போன் வருஷம் தான் விபத்தில் ஒரு கை போனதாக குறிப்பிடுகிறார் .
நேற்று மாலை இங்கு வருவதற்காக காத்திருந்தோம் .
இவருக்கும் லேசாகத்தான் பரிச்சயம் .இருவர் வாழ்விலும் எந்த விதப் பரபரப்போ ,பயமோ . அபாயமோ இல்லை இரண்டு குடுபங்களுக்கும் அதற்கு முன் எந்த வித உறவோ, தொடர்போ இல்லை .முதல் நாள் சாயங்காலம் அவர்களைப் பற்றி யோசிக்க , மனதில் கொண்டு வரக் காரணமே இல்லை பார்த்தது யார் அல்லது என்ன ?
கையில்லாத நபர் தன் மனைவியுடன் சுற்றுலா செல்வதை புளு கலர் சர்ட் போட்டு யோசிததிருக்கிறர் உடனே அவரது மனம் வெளியில் உருவம் எடுத்து சுற்றுலா இடம் அது நினைக்கும் வேகத்தில் வந்திருக்கிருக்கலாம் அதைத்தான் இவர்கள் பார்த்திருக்கிருக்கலாம் ,
2004 -ல் என் தாயுடனும் தாரத்துடனும் ஹஜ் செய்யப் போயிருந்தேன் , தாயாரால் நடந்து தவாபு செய்ய முடியவில்லை. எனவே தள்ளுவண்டியில் அவர்களை வைத்து தள்ளிக் கொண்டு முதல் மாடித்தளத்தில் அத்தனை தவாபும் செய்தேன் ,
ஏமன் நாட்டு நண்பர் ஒருவர் முதல் மாடி தளத்தில் நின்று கொண்டு கஃபாவைப் பார்த்துக் கொண்டிருந்தார் . என்னைக் கூப்பிட்டு கஃபாவை பார்க்கச் சொன்னார் பார்த்தேன் , உடனே அவர் தன் கண்களாலேயே கஃபாவைச் சுற்றி சுற்றி நின்ற இடத்திலேயே தவாபு செய்து விட்டு அப்புறமா காலால் நடந்து தவாபு செய்து ஷஈ ஓடி இரண்டு ரக்அத் தொழுது நிறைவு செய்தார் ,
அவர் இது பற்றி சொல்லும் போது. முதலில் மனதால் தவாபு செய்து பின் காலால் நடந்து தவாபு செய்யும்போது ரொம்பவும் ஈஸியாக இருக்கும் என்றார்

ஈஸியாகவே இருந்தது .
யானை வரும் முன்னே மணியோசை வரும் முன்னே . "மனம் "மணியோசை மாதிரி
மனதிற்கு இத்தனை சக்தியா ? எங்கிருந்து வந்தது ?

இங்கிலாந்து கணித இயற்பியல் பேராசிரியர் வாஸ்ஸர்மன் என்பவர் ஒரு சித்தாந்தம் சொல்கிறார் ......
"உலகத்தில் உள்ள நடக்கிற, நடக்கப் போகிற சம்பவங்கள் அனைத்தும் காலமற்ற மன பிம்பங்களாக வடிவு கொண்டிக்கின்றன. அவைகளுடன் உலகில் உள்ள ஒவ்வொரு உயிருள்ள , உயிரற்ற துகளுக்கும் சம்பந்தம் உள்ளது" என்கிறார்
குழப்பமாக இருக்கிறதா ?
அதாவது எல்லா சம்பவங்களுக்கும் இடையில் ஒரு தொடர்பிணைப்பு சங்கிலி போல இருக்கிறது . இவையெல்லாம் மனங்கள் மூலம் ஏற்படும் இணைப்புகள் ,
மூளையில் ஏற்படும் பிம்பத்துக்கும் சலனத்துக்கும் எதிர்காலச் சம்பவத்துக்கும் ஓர் இணைப்பு மனத்திலேயே இருக்கிறதே , அதுபோல சிலருக்கு இந்த இணைப்பு கொஞ்சம் விஸ்தாரமாகவே இருந்து எதிர்காலத்தை அவர்களால் அவர்களால் சொல்ல முடியும் என்று சொல்கிறார்கள்

வியப்பூட்டும் விந்தைகள் 7

| Lincoln | Kennedy |
|---|---|
| Lincoln was elected to Congress in 1846 | Kennedy was elected to Congress in 1946 |
| He was elected President in 1860 | He was elected President in 1960 |
| His wife lost a child while living in the White House | His wife lost a child while living in the White House |
| He was directly concerned with Civil Rights | He was directly concerned with Civil Rights |
| Lincoln had a secretary named Kennedy who told him not to go to the theater *1 | Kennedy had a secretary named Lincoln who told him not to go to Dallas *2 |
| Lincoln was shot in the back of the head in the presence of his wife | Kennedy was shot in the back of the head in the presence of his wife |
| Lincoln shot in the Ford Theatre | Kennedy shot in a Lincoln, made by Ford |
| He was shot on a Friday | He was shot on a Friday |
| The assassin, John Wilkes Booth, was known by three names, comprised of fifteen letters | The assassin, Lee Harvey Oswald, was known by three names, comprised of fifteen letters |
| Booth shot Lincoln in a theater and fled to a warehouse *3 | Oswald shot Kennedy from a warehouse and fled to a theater |
| Booth was killed before being brought to trial | Oswald was killed before being brought to trial |
| There were theories that Booth was part of a greater conspiracy | There were theories that Oswald was part of a greater conspiracy |
| Lincoln's successor was Andrew Johnson, born in 1808 | Kennedy's successor was Lyndon Johnson, born in 1908 |

VIA 9GAG.COM



சரித்திரப் பிரசித்திப்பெற்ற இரண்டு அமெரிக்க ஜனாதிபதிகளின் 16 பொருத்தங்களைப் பாருங்கள்
|) லிங்கன் 1860லும், கென்னடி 1960 லும் ஜனாதிபதி ஆனார்கள் சரியாக 100 வருடங்கள்
2) இருவரும் நீக்ரோ இனத்தினரின் உரிமைகளில் தீவிரமாக ஆழ்ந்திருந்தார்கள்
3) இருவரும் வெள்ளிக்கிழமை தத்தம் மனைவிகளின் அருகில் இருக்கும் போது , சுட்டுக் கொல்லப்பட்டார்கள் .
4) இரு மனைவியரும் வெள்ளை மாளிகையில் வாழும் போது பிள்ளை பெற்று, பிறந்ததும் குழந்தை இருவருக்குமே இறந்தது.
5) கென்னடி, லிங்கன் இருவரும் தலையின் பின் பகுதியில் குண்டுதுளைத்துச் செத்தார்கள் .
6) லிங்கன் இறந்தது ஃபோர்டு அரங்கத்தில் கென்னடி இறந்தது லிங்கன் என்ற பெயர் கொண்ட காரில் ' அந்தக் காரைத் தயாரித்தது ஃபோர்டு மோட்டார் கம்பெனி
7) இருவரும் இறந்த பின்னர் , ஜான்சன் என்ற பெயருள்ளவர்கள் ஜனாதிபதியாக பதவி ஏற்றார்கள் ஆண்ட்ரு ஜான்சன், விண்டன் ஜான்சன் .
8 ) ஆண்ட்ரு ஜான்சன் பிறந்தது 1808 . விண்டன் ஜான்சன் பிறந்தது 1908
9) விங்கனின் செயலாளரின் முன்பெயர் ஜான் .அதேசமயம் ஜான் கென்னடியின் செயலாளரின் பின்பெயர் லிங்கன் .
10) இருவரையும் கொன்றவர்கள் பிறந்த வருடங்கள் ஜான் வில்க்ஸ் பூத் 1839 ,
லீ ஹார்வி ஆஸ்வார்டு 1939. சரியாக 100 வருஷம்
11) கொன்ற இருவரும் தென் மாநிலத் தீவிரவாதிகள் ,
12) இடு வரும் பிடிபட்டு, வழக்குத் தொடுப்பதற்கு முன் சுட்டுக் கொல்லப்பட்டாகள் .
13) பூத் , விங்கனை ஒரு தியேட்டர் அரங்கத்தில் கொன்றுவிட்டு ஒரு கிடங்குக்கு ஓடினான் . ஆஸ்வால்டு , ஒரு கிடங்கிலிருந்து கொன்று விட்டு தியேட்டர் அரங்கம் நோக்கி ஓடினான் .

14) லிங்கன், கென்னடி இரண்டு பெயர்களும் ஆங்கிலத்தில் ஏழு எழுத்துக்கள் ,
15) அடுத்த ஜனாதிபதியான ஆண்ட்ரூ ஜான்சன் , லிண்டன் ஜான்சன் இருவரின் பெயர்களஆங்கிலத்தில் 13 எழுத்துக்கள்
16) கொலையாளிகளான ஜான் வில்க்ஸ் பூத் ,
லீ ஹார்வி ஆஸ்வால்டு இருவர் பெயரும் ஆங்கிலத்தில் 5 எழுத்துக்கள்
இதெல்லாம் தற்செயலான காரியங்களா ?
" பூமியிலோ வானத்திலோ உள்ளவற்றில் ஓர் அணுவளவும் (நபியே) உங்களது இறைவனுக்குத் தெரியாமல் தவறி விடுவதில்லை . இவற்றை விட சிறியதோ அல்லது பெரியதோ (எதுவாயினும் ) அவனுடைய விரிவான பதிவுப் புத்தகத்தில் பதிவு செய்யப்படாமல் இல்லை
திருக்குர்ஆன் (10 : 61 )

வியப்பூட்டும் விந்தைகள் 8




1974 வருடம் " தி சண்டே டைம்ஸ் " பத்திரிக்கை நடத்திய வாசகர் போட்டியில் நம்ப முடியாத தற்செயல் பற்றி எக்கச்சக்கமானவர்கள் தக்க ஆதாரத்துடன் தங்கள் வாழ்க்கையில் நடந்த சம்பவங்களை சுட்டிக்காட்டினர் . இதில் ரொம்பவும் விசித்திரமான சம்பவங்கள் கொண்டது "பேஜ்" என்ற முன்னாள் வீரரின் சம்பவம்தான். பேஜ் 1940 ஆம் வருடம் ஜுலையில் இங்கிலாந்து ராணுவத்தில் சேர்ந்தார் .மேற்கொண்ட சம்பவங்களை பேஜ்ஜே கூறுகிறார்
"என் கல்யாண போட்டோக்களை மனைவி போஸ்ட்டில் அனுப்பி வைத்தாள். எனக்கு வந்த கவரை ஆர்வத்துடன் பிரித்துப் பார்த்த போது அதில் இருந்தது வேறொருவரின் கல்யாண போட்டோக்கள்.லட்டர் யாருக்கு வந்திருக்கிறது என்று உறையைத் திருப்பிப் பார்த்தேன் "பேஜ் " என்ற பெயருக்கு அல்ல "பேப்' என்ற பெயருக்கு .
என் இராணுவ நம்பர் 1509321 ஆனால் பேப் என்பவரின் இராணுவ நம்பர் 1509322 அதே இராணுவ முகாமில் இன்னொரு குழுவுடன் பணிபுரிந்து கொண்டிருந்த பேப்பிடம் அவர் கல்யாணப் படங்களை அவரிடம் ஒப்படைக்க போனால் என் மனைவி அனுப்பிய என் கல்யாண போட்டோக்களைப் பிரித்துப் பார்த்து குழப்பத்தோடு அவர் இருந்தார்
இது எப்படி இருவரும் ஒரே மாதிரி கல்யாண போட்டோக்களை வீட்டிலிருந்து அனுப்பச் சொன்னோம் , ? அது எப்படி துள்ளியமாக இருவருக்கும் இடம் மாறியது ?
ராணுவத்தை விட்டு லண்டன் டிரான்ஸ்போர்ட்டில் டிரைவராக
வேலையில் சேர்ந்தேன் ஒரு முறை எனக்கு வந்த சம்பளக் கவரில் சம்பளம் குறைவாக இருந்தது.
கவரைத் திருப்பிப் பார்த்தேன் அது என் கவர் திருப்பிக் கொடுக்கப் போனால் , என் கவரை வைத்துக் கொண்டு, அக்கவுண்ட்ஸ் டிபார்ட்மெண்டில் திருதிரு வென்று நின்றிருந்தார் அதே ராணுவ ஆசாமி பேப் .,.
தற்செயலாக அவர் லைசென்ஸ் நம்பரை வாங்கிப் பார்த்தேன் 29223 இராணுவம் போலவே இங்கும் எனக்கு எந்த நம்பர் 29222
இது எப்படி தற்செயலாகும் ?

**Mohammed Hadhees**
ஹிப்ழு ஓதுகையில் என்னுடன் சேர்த்து 9 பேர் பட்ட மாணவர்கள்.
ஆனாலும் நானும் இன்னொரு நண்பரும் மட்டும் ஒரே நாளில் குர்ஆனை நிறைவு செய்தோம்.
பிறகு பட்டமளிப்பும் ஒரே நாளில்தான்.
பல வருடங்களுக்குப் பிறகு எதார்த்தமாக அவர் தனது திருமண அழைப்பிதழ் எனக்குத்தர...ஆச்சர்யம்... அதே நாளில்தான் ( ஏப்ரல் 27)எனது திருமணமும் முடிவு செய்யப்பட்டிருந்தது.

அதிலும் இன்னொரு ஆச்சரியம் என்னவென்றால் வெவ்வேறு ஊர்களைச்சார்ந்த எங்களுக்கு ஒரே ஊரில்(மேலப்பாளையத்தில்) பெண் வீடு.
அடுத்த ஆச்சரியம்...
இருவருக்கும் ஒரே(வாவர்) பள்ளிவாசலில் ஒரே குத்பா-துஆ வின் மூலம் திருமணம் முடித்து வைக்கப்பட்டது.
மிகவும் எதார்த்தமானவை இந்த நிகழ்வுகள்

வியப்பூட்டும் விந்தைகள் 9

ரீடர்ஸ் டைஜஸ்ட் , ஜனவரி 1980 இதழில் வெளியான செய்தி
நாற்பது வருஷத்திற்கு முன் இரட்டையர்கள் பிறந்த சிறிது நேரத்திலேயே வெவ்வேறு குடும்பங்களில் வளர்வதற்காக கொடுக்கப்பட்டு விட்டனர் அந்த உடனேயே அந்தக் குழந்தைகளைப் வளர்க்க வாங்கிய தம்பதிகள் வேறு வேறு நாடுகளில் குடியேறி விட்டனர் எந்த வித தொடர்பும் இல்லை.
1979-ல் அவர்களுக்கு 39 வயது இருக்கும் போதுதான் அவர்கள் பிறந்த இடத்தில் சந்தித்துக் கொள்கின்றனர் அதுவும் முதன்முறையாக.
தங்கள் வாழ்வை ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது அவர்களுக்கு பேரனந்தமும் ஆச்சரியமும் ஏற்பட்டது
இருவருக்குமே ஜேம்ஸ் என்று பெயர்.
இருவருமே சட்ட மீறல் தடுப்பு உத்தியோகத்தில் இருந்தார்கள் .
இருவருக்கும் ஓவியங்கள் வரைவதிலும் தச்சு வேலை செய்வதிலும் ரொம்பவும் இஷ்டம் .
இருவரின் மனைவியின் பெயர் லிண்டா
இருவருக்கும் ஒரே ஒரு மகன் .இரு மகன்களின் பெயர் ஜேம்ஸ் ஆலன்
இரு மகன்களின் மனைவியர்களின் பெயர் விண்டா
இரு மகன்களுக்கும் தலா ஒரே ஒரு மகள் அவர்களின் பெயர்கள் பெட்டி .
இவ்விருவரும் விவாகரத்தாகி மீண்டும் கல்யாணம் செய்து கொண்டவர்கள்
இரு பெண்களும் நாய் வளர்த்தார்கள் இரண்டு நாய்களின் பெயர்களும் டைனி
இது விஷயமாக டைஜஸ்ட் புத்தகமும் எல்லா ஆதாரங்களையும் குறிப்பிட்டிருக்கிறது ,

வியப்பூட்டும் விந்தைகள் 10



A)
ஜேம்ஸ் ஸ்பைசட் என்பவர் 1787 ஜனவரி 25 ம் தேதி யுத்தத்தில் சுட்டுக் கொல்லப்பட்டார்
அவர் அப்போது அணிந்திருந்த கோட்டு, அவருடைய அண்ணன் டேனியலுடையது
டேனியல் 3 வருடத்திற்கு முன் நடந்த . யுத்தத்தில் டேனியல் சுட்டுக் கொல்லப்பட்டார்
அந்த கோட்டைதான் ஜேம்ஸ் ஸ்பைசட் யுத்தத்திற்கு போகவதற்கு அணிந்து சென்றார் . அதே கோட் , அதே கோட்டின் பொத்தல் வழியே குண்டு ஊடுருவி அண்ணனைப் போலவே தம்பியும் இறந்தார் .
B)
14 ஆம் லூயி மன்னன் வைத்திருந்த ஒரு அலங்காரக் கடிகாரம் அந்த மன்னன் இறந்த அதே கணத்தில் நின்று போனதாம்.
சரியாக காலை 7.45 செப்டம்பர் 1 - 1715 .அதற்குப் பிறகு கடிகாரம் ஓடவே இல்லை .
C)
மூன்று ஆங்கிலேயேர்கள் தென் அமெரிக்க பெருநாட்டில் 1920 ஒரு ரயில் வண்டியில் பயணம் செய்வதற்கு டிக்கட் ரிசர்வ் செய்தனர் .
ரயில் பயணம் செய்யும்போதுதான் மூவரும் முதன் முதலாக சந்தித்திக் கொண்டனர்
அந்த ரயிலில் 3 பேரைத் தவிர வேறு யாரும் பயணம் செய்யவில்லை .
மூவரின் பெயர்கள் 1) பிங்ஹம் 2) போவெல்
3 ) பிங்ஹம் போவெல் ,
D)
ஜோசப் பிக்லாக் என்பவர் டெட்ராய்ட் நகரில் 1930-ல் ஒரு தெருவில் நடந்து சென்று கொண்டிருக்கும் போது மாடியிலிருந்த ஜன்னல் வழியே ஒரு குழந்தை தொடிக்கஉீர் என்று அவர் மேல் விழுந்தது . உயிர் தப்பியது
ஒரு வருஷம் கழித்து அதே குழந்தை அதே மாடியிலிருந்த ஜன்னல் வழியே அவர் மேல் விழுந்தது.
இந்த முறையும் உயிர் தப்பியது

வியப்பூட்டும் விந்தைகளைப் பற்றிய பதிவுகளில் பொதிந்திருக்கும் இறை வல்லமையைத்தான் சொல்லப்பட்டிருக்கிறது .     12-07-2017



"coincidence" என்ற ஆங்கில வார்த்தைக்கு "தற்செயல் " என்பது நேரடி சொல் அல்ல , கொஞ்சம் அதிசயம் கலந்த தற்செயல் என்று வேண்டுமானால் மொழி மாற்றலாம் . தற்செயலான நிகழ்ச்சிகளில் உள்ள ஒரே சீரான தன்மை எப்போதும் மனிதர்களுக்கு மகிழ்ச்சி அளித்து வருகிறது ,
சூரியன் கிழக்கில் உதித்து மேற்கில் மறைவது தற்செயலான விஷயம் , இதில் மாறி நிகழ்ந்தால் அது அதிசயம்
குர்ஆனோ சூரியன் மேற்கிலும் உதயமாகும் அப்போது அது உலகின் இறுதி நாளாக இருக்கும் என்கிறது , இந்த நிகழ்வு தற்செயலானது அல்ல .
"அவன் அறியாமல் யாதொரு இலையும் உதிருவதில்லை "
(திருக்ஆன் : 6 : 59) என்ற அழுத்தமான வசனத்தின் மூலம் எல்லா நிகழ்வுகளும். இயக்கமும் அவனது கட்டுப்பாட்டில்தான் இருக்கிறது என்பதை அறிய முடிகிறது .
" நீங்கள் என்ன நிலைமையில் இருந்த போதிலும் ....... .... உங்களுடைய காரியங்களில் நீங்கள் எதைச் செய்தபோதிலும் நீங்கள் அவற்றில் ஈடுபட்டிருக்கும் போதே உங்களை நாம் கவனிக்காமல் இருப்பதில்லை " திருகுர்ஆன் : 10 : 61
இந்த இரு வசனங்கள் போதும் "வியப்பூட்டும் விந்தைகள்" என்கிற பதிவுகளில் உள்ள வியப்பான விஷயங்களின் மூலம் தன் இருப்பை மக்களுக்கு விளங்க வைக்கின்றான் இறைவன் என்பதை அறிய முடிகிறது.
வியப்பான யாதொரு விஷயங்களில் வியப்பை ஏற்படுத்துவதில்தான் இறைவனின் வல்லமையை உணர முடிகிறது இந்த அற்புதங்கள் மனித குலத்திற்கு மட்டுமின்றி அவன் படைத்த அத்தனை படைப்புகளிலும் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது " இதன் மூலம் நீங்கள் சிந்திக்க வேண்டாமா ?" என்று கூறும் அநேக வசனங்களில் சொல்லப்படும் சேதிகள் யாவுமே இந்தஅற்புதம் , இந்த ஆச்சரியம் கொண்டதாகத்தான் இருக்கிறது.
" வணக்கத்திற்குரியவன் இறைவனைத் தவிர யாருமே இல்லை " என்று இதயபூர்வமாக கூறுவதைத் தவிர வேறென்ன இருக்க முடியும் ?

**வினோத மருத்துவங்கள் "**
**தொடரில் பழமையான மருத்துவம் முதல் மருந்தில்லா மருத்துவம் வரை இன்ஷா அல்லாஹ்**

வினோத மருந்துவங்கள் 1




உலகில் எல்லா நோய்களுக்கும் மருந்து கண்டு பிடித்திருக்கிறார்களா என்றால் , இல்லை எய்ட்ஸ்க்கும் , கேன்ஸருக்கும் மருந்துகளை தேடும் ஆய்வில்தான் மருத்துவ உலகம் இன்னும் இருக்கிறது .
இன்னும் எத்தனையோ நோய்கள் அதன் இயல்புகளை கண்டறியப்படுவதற்குள் நோயாளியின் உயிரை குடித்துவிட்டு பிணத்தோடு பிணமாக புதைந்து கொள்கிறது. இந்த மாதிரி நோய்களுக்கு இன்னும் மருத்துவ உலகம் பெயரே வைக்கவில்லை அதற்குள் அத்தனை அவசரமாக முகவரி கொடுக்காமல் பாடைகட்டி பறந்து போய் விடுகிறது .
முதல் மருத்துவம் சித்த மருத்துவம் மனித உடலில் வாதம், பித்தம், கபம் இந்த 3ஆதார சக்திகளை சம நிலைப்படுத்துகிற ஒரு சித்தாந்தம் இந்த மூன்று ஆதார சக்திகளையும் இயக்கக் கூடியது உடலில் இருக்கக் கூடிய மூலாதார அக்னி .சித்த மருத்துவம் உடலுக்குள்ளே மருத்துவம் பார்க்கிறது.
இரண்டாம் மருத்துவம் அலோபதி என்கிற ஆங்கில மருத்துவம் மனித உடலுக்கு வந்த நோயின் மூலக் காரணத்தை உடலுக்கு வெளியே தேடுவது பூச்சிகள் , கிருமிகள் ,பாக்ட்ரீயாக்கள் இந்த மாதிரி .
மூன்றாம் மகத்துவம் ஜீவ மருத்துவம் Pறவைகள், விலங்குகள் போன்றவற்றை பயன்படுத்தி மருத்துவம்.
போகர் என்கிற ஒரு சித்தர்தான் முதலில் கருங்குரங்கோட ரத்தம் , சிறுநீர் கொண்டு மருந்து தயாரித்தார் .
இவர் எந்த போகர் என்று தெரியவில்லை. சித்தர்களில் நிறைய பேர் போகர்கள் ,
சித்த வைத்தியத்தில் . அதுவரை அஜீவ மருத்துவமான மூலிகையிலிருந்து மருந்து தயாரித்தது போக ,இப்போது ஜீவ மருத்துவத்திற்கும் சித்த வைத்தியம் மாறிக் கொண்டது .
இப்போது நிறைய ஜீவ மருத்துவத்தை சித்த வைத்தியம் தயாரிக்க ஆரம்பித்தது உதாரணத்திற்கு சீட்டுக்குருவி லேகியம் " யானைப் பல் , மான் கொம்பு என்று ஒரு பட்டியல் நீண்டால் , சீனாவில் புலியையும் காண்டமிருகத்தின் கொம்பும் ஜப்பானில் திமிங்கல மீனிலிருந்தும் மருந்து தயாரிக்க ஜீவ மருத்துவம் இப்போது கள்ள மார்க்கெட் மருத்துவமாக மாறிவிட்டது .
சித்த மருத்துவத்தில் மாம்பழச் சித்தர் ஈயத்தையும் தங்கத்தையும் பஸ்பம் செய்து பாஷாணமா ஸ்புடம் போட்டு மருந்து தயாரித்தார் முதன் முதலில் சித்த மருத்துவத்தில் இரசாயனத்தைப் பயன்படுத்தியவர் இவர்தான்
நான்காம் மருத்துவம் கதிர்கள் . பல நூறு நுண் கதிர்கள் மருத்துவத்திற்கு பயன்படுத்தப்பட்டது . இப்போது நாம் கதிர்வீச்சை கான்சருக்கு பயன்படுத்துகிறோம். இதனால் பயனை விட சேதம் அதிகம் . சித்த வைத்தியத்திலும் கதிரியக்கம் இருக்கிறது - பாதரசத்தை திடமான கட்டியாக்குகிறார்கள் அதாவது அதன் மூலக்கூறு அமைப்பையே மாற்றி விடுகிறார்கள் . அதன் மென்மையான கதிரியக்கத்தை ஜீவ , அஜீவ , ரசாயன மருந்துகளில் செலுத்துகிறாரகள் ,
எல்லா நோய்களும் கிருமிகள் பாக்ட்ரியாக்களால் வருகிதென்றால் எய்ட்ஸ் நோய் கண்களுக்கும், மைக்ரோஸ்கோப்புக்கும் புலப்படாத வைரஸ்களால் ஏற்படுகிறது .இந்த வைரஸ்கள் மரபணு என்னும் DNA யை குறிவைத்து தாக்குகிறது
எனவே DNA வில் திருத்தம் செய்யப்பட்டால்தான் அதற்குரிய பரிகார மருந்து ஒரு சமயம் கிடைக்கலாம் என மருத்துவ உலகம் எதிர்ப்பார்க்கிறது .
DNA யைப் பற்றி நாம் மிகச் சொற்பமாகத்தான் அறிந்திருக்கிறோம்.
சுய ஒழுக்கக் கட்டுப்பாட்டின் மூலம் இந்த நோய் வராமல் பாதுகாக்கலாம் . வெண்கல மணியை வெளியே போய் அடிக்காதேன்னு சொன்னா கேட்டால் தானே ..........

**Vaitiyar Malick**
"வாதம், பித்தம், கபம்" -அல்லது "வளி, அழல், ஐயம்" என்னும் மூன்று விஷயங்களும் நம்ம பாரம்பரிய மருத்துவத்தின் அடித்தளங்கள். உடலின் ஒவ்வொரு அசைவையும் நகர்த்தும் உயிர்த் தாதுக்கள் அவை. அப்ப அதல்லாம் சித்தா ஆயுர்வேத டாக்டர்கள் சமாச்சாரமாச்சே.. நமக்கெதுக்கு? என நகர வேண்டாம். இந்த வாத பித்தம் கபம் குறித்த அடிப்படை அறிவு நம் ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டும். முன்பு இருந்திருந்தது. "ஐய்யோ..ஐஸ்கிரீமா? த்ரோட் இன்ஃபெக்‌ஷனாயிடும்! ரோட்டோர பரோட்டாவா..அமீபியாஸிஸ் வந்துடப் போகுது," என்ற அறிவை வளர்க்கும் நாம், "உருளைக்கிழங்கு போண்டா நமக்கு வேண்டா. அது வாயு கொடுக்கும். வாதக் குடைச்சல் வந்துடும். மழை நேரத்தில தர்பூசணி எதுக்கு கபம் கட்டிக்க போகுது"-என்கிற மாதிரியான நம் தினசரி உணவும் அது அதிகரிக்க அல்லது குறைக்க வைக்கும் உடலின் இந்த மூன்று முக்கிய விஷயங்கள் குறித்த அறிவும் தெரிந்திருக்க வேண்டும்.
"முத்தாது" என்று தமிழ் சித்தத்திலும் "த்ரீதோஷா" என்றூ ஆயுர்வேதத்திலும் பேசப்படும் இந்த மூன்று விஷயத்தை தான் "மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர் தொகுத்த வளி முதலாய மூன்று"- என்று நம் திருவள்ளுவர் நோயின் அடிப்படையாகச் சொல்லியிருக்கிறார்.
இந்த வாதம், நம் உடலின் இயக்கத்தை தசை, மூட்டுக்கள், எலும்பு இவற்றின் பணியை, சீரான சுவாசத்தை சரியான மலம் கழிப்பதை எல்லாம் பார்த்துக் கொள்ளும். பித்தம், தன் வெப்பத்தால் உடலை காப்பது. இரத்த ஓட்டம், மன ஓட்டம், சீரண சுரப்புகள், நாளமில்லா சுரப்புகள் - போன்ற அனைத்தையும் செய்வது. கபம் உடலெங்கும் தேவையான இடத்தில் நீர்த்துவத்தையும் நெய்ப்புத்தன்மையையும் கொடுத்து எல்லா பணியையும் தடையின்றி செய்ய உதவியாய் இருப்பது. இந்த மூன்று வாத பித்த கபமும் சரியான கூட்டணியாய் பணிபுரிந்தால் உடம்பு எனும் பார்லிமெண்ட் ஒழுங்காய் நடக்கும். ஒண்ணு "காமன் வெல்த்"திலும்-இன்னொன்று அலைக்கற்றை ஒதுக்கீட்டிலும் சேட்டை செய்தால்- ஒரே நோய்களின் கூச்சலும் குழப்பமும் தான் உடம்பு பார்லிமெண்ட்டில் ஓடும்.

**Vaitiyar Malick**
இந்தக் கூட்டணி ஒழுங்காய் வேலை செய்ய உணவு, ரொம்ப முக்கியம். மனமும் பணியும் கூட கூட்டணிப் பணிக்கு அவசியமானது. ஒருவருக்கு மூட்டு வலி உள்ளது. கழுத்துவலி எனும் ஸ்பாண்டிலைஸிஸ் உள்ளதென்றால், வாதம் சீர் கெட்டு உள்ளது என்று பொருள். இந்த வியாதிக்காரர்கள் வாதத்தை குறைக்கும் உணவை சாப்பிட வேண்டும். வாதத்தைக் கூட்டும் உணவை காசியில் விட்டு விடலாம். புளி, உருளைக்கிழங்கு, கொண்டைக்கடலை, துவரம்பருப்பு, கடலைப்பருப்பு, வாழைக்காய், கொத்தவரை, காராமணி, குளிர்பானங்கள், செரிமனத்திற்கு சிரமம் தரும் மாவுப்பண்டங்கள் வாயுவைத் தரும். வாதத்தைக் கூட்டும். மூட்டுவலிக்காரர், மலக்கட்டு உள்ளோர், ஆஸ்துமாவில் அதிகம் அவதிப்படுவோர் இந்த உணவைக் கூடியவரை தவிர்க்க வேண்டும். வாயுவை வெளியேற்றும் இலவங்கப்பட்டை, மிளகு, புதினா, பூண்டு சீரகம், மடக்கறுத்தான் கீரை, வாய்விடங்கம், இதனை உனவ்பில் சேர்ப்பது வாத்தை குறைத்திட உதவும்.
பித்தம் அதிகரித்தால் அசீரணம் முதல் டிப்ரஷன் வரை பல பிரச்னை வரக் கூடும். அல்சர், இரத்தக்கொதிப்பு, ஆரம்பநிலை மதுமேகம் என பித்த நோய் பட்டியல் பெரிசு. இன்றைய நவீன வேகமான வாழ்வியலில் பெருகும் பல நோய்க்கு இந்த பித்தம் ஒரு முக்கிய காரணம். நாம் தான் இப்போது மனசை கல்லில் அடித்து துவைச்சு காயப் போடும் வேகத்தை தானே விரும்புகிறோம்! பித்தம் அதிலும் அதிகம் வளர்கிறது. பித்தம் குறைக்க உணவில் காரத்தை எண்ணெயை குறைக்க வேண்டும் கோழிக்கறி கூடவே கூடாது. கோதுமைகூட, அதிகம் சேர்த்தால் பித்தம் கூட்டம். அரிசி அந்த விஷயத்தில் சமத்து.(என்ன கொஞ்சம் அளவோடு அரிசியின் சட்டையை அதிகம் கழட்டாமல்(கைக்குத்தல்) சாப்பிடணும்).
கரிசலாங்கண்ணி கீரை, கறிவேப்பிலை, சீரகம், தனியா, எலுமிச்சை, மஞ்சள், இஞ்சி- என் இவையெல்லாம் பித்தம் தணிக்கும். பித்தம் குறைக்க கிச்சன் கவனம் மட்டும் போதாது. மனம் குதூகலமாய் இருப்பது அவசியம். இன்றைக்கு சர்க்கரை வியாதி பெருக பலரும் அதிக அரிசி உணவைக் காரனமாய்ச் சொல்கிறோம். அளவுக்கதிகமான மனப்பழு, மனஅழுத்தம் தான் அதைவிட முக்கியக் காரணமாகப் படுகிறது.

**Vaitiyar Malick**
ஆதலால் சந்தோஷம் கால்படி, சிரிப்பு அரைப்படி போட்டு, அதில் கண்டிப்பாய்" நான்"-கிள்ளி நீக்கிப் போட்டு, விட்டுக்கொடுத்தலில் வேகவைத்து புன்னகையில் தாளித்தெடுத்து காதலோடு பரிமாறுங்கள். பித்தமென்ன மொத்தமும் அடங்கும்.
அடுத்து கபம். சளி, இருமல், ஆஸ்துமா, மூக்கடைப்பில் இருந்து கபத்தால் வரும் நோய்கள் நிறைய. பால், இனிப்புகள், நீர்க்காய்கறிகளான தர்பூசணி, மஞ்சள்பூசணி, சுரைக்காய், பீர்க்கு, வெள்ளரி, குளிர்பானம், மில்க் ஸ்வீட், சாக்லெட் என இவையெல்லாம் கபம் வளர்க்கும் காரணிகள்.மழைக்காலத்திலும், கோடைக் காலத்தில் கபநேரமான அதிகாலை மற்றும் இரவுநேரங்களில் தவிர்க்கலாம். மிளகு, சுக்கு, திப்பிலி, ஆடாதொடை, துளசி, கற்பூரவல்லி, தூதுவளை- என இவையெல்லாம் கபம் போக்க உதவும். தும்மிக்கொண்டே வரும் வீட்டுக்காரருக்கு கற்பூரவல்லி பஜ்ஜியும் சுக்கு காபியும் கொடுத்துப் பாருங்கள். தும்மல் அன்றிரவின் தூக்கத்தைக் கெடுக்காது.
வாத பித்த கபம்-இந்த மூன்று வார்த்தை மந்திரக் கூட்டணியை அச்சுபிச்சு இல்லாமல் காப்பதில், சமையல்கூடத்திற்கு சந்தேகமில்லாமல் பங்கு உண்டு.அதற்கு பாரம்பரிய அனுபவம் அவசியம். பாரம்பரிய அனுபவங்கள் பாரம்பரிய சொத்தைக் காட்டிலும் பலம் பொருந்தியவை. அதனை மடமை என்றோ பழசு என்றோ ஒதுக்குவது முட்டாள்தனம். அங்கே இங்கே தவறுகள் சேர்ந்திருக்கும். ஆனால் இன்று சந்தையைக் குறிவைத்து "2020-இல் இந்த நோயை உருவாக்க வேண்டும். அப்பொது இந்த மருந்தை இங்கு விற்கலாம்,' என திட்டமிடும் கேவலமான எண்ணங்கள் கண்டிப்பாய் அப்போது கிடையாது. இதை புரிந்து பாரம்பரிய அறிவை கவனமாய் பாதுகாப்போம். அது நம்மையும் நம் தலைமுறையையும் பாதுகாக்கும்!
:- நன்றி வலை தள உதவி

**Vaitiyar Malick**
சித்த மருத்துவ உறுப்புகள்
மருத்துவ உறுப்புகள் என்பது, உடல் உறுப்புகளைப் போல இயற்கையாக அமைய வேண்டியவை எனலாம். உடல் உறுப்பில் ஏதேனும் ஒன்று குறைந்தாலே ஊனம் என்றாகும். அதிலும் சில உறுப்புகள் குறைந்தால் உடல்தான் இருக்கும்; உயிர் இருக்காது. அதைப் போலவே மருத்துவ உறுப்புகள் கூறப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று குறைந்தாலும் மருத்துவம் ஊனம் ஆகிவிடும். ஒரு சில உறுப்புகள் குறைந்தால் மருத்துவமே உயிரற்றுப் போகக் கூடும் என்பது உணர்ந்து, மருத்துவம் பார்க்க வேண்டும் எனக் கருதி உறுப்புகள் உரைக்கப் பட்டன.
அவ்வாறு கூறுவது, ஒரு முழுமை நிலையை உணர்த்தவும், முழுமையான மருத்துவமுறை வளர்ந்தோங்கவும் உறுப்புகள் அமைத்துக் கூறப்பட்டது எனலாம்.
மருத்துவ உறுப்புகள்:
மூன்று கண்கள்; நான்கு தலைகள்; ஐந்து முகங்கள்;
ஆறு கைகள்; எட்டு உடல்கள்; பத்துக் கால்கள் எனும்
முப்பத்தாறும் மருத்துவ உறுப்புகளாகும்51.
மூன்று கண்கள் : மருந்து, மருந்தின் சுத்தி, மருந்தின் குணம் ஆகிய மூன்றும் மூன்று கண்கள்.
நான்கு தலைகள் : வாதம், பித்தம், ஐயம், தொந்தம் ஆகிய நான்கும் நான்கு தலைகள்.
ஐந்து முகங்கள் : வாந்தி, பேதி, குடல் சுத்தி, நசியம், இரத்தத்தை வெளியாக்கல் ஆகிய ஐந்தும் ஐந்து முகங்கள்.
ஆறு கைகள் : இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு ஆகிய ஆறும் ஆறு கைகள்.
எட்டு உடல்கள் : எண்வகைத் தேர்வு முறைகள் எட்டு உடல்கள்.
பத்து கால்கள் : நாடிகள் பத்து, வாயுக்கள் பத்து ஆனாலும் அவை பத்துப் பெயர்களால் குறிக்கப்படுவதால் பத்து கால்கள் எனப்படும்.
என்று குணவாகடம் 52 ல் கூறபடுகிறது
v**aitiyar Malick**
ஆடை மருத்துவம்:-
சால்வை :
சலதோஷம், தலைவலி, வாத நோய், வயிற்றுவலி, குளிர்பனி போகும்.
பட்டாடை :
பித்தம், கபம் போகும். மகிழ்ச்சி, உத்தி, வியர்வை, காந்தி உண்டாகும்.
வெண்பட்டு :
சுரம், சீதம், வாதம் போகும். காந்தி, அழகு உண்டாகும்.
நாருமடி :
சளி, நீர் ஏற்றம், வாய்வு, சந்தி போகும். உடல் சுத்தி உண்டாகும்.
வெள்ளாடை :
முக்குற்றம், வியர்வை போகும். ஆயுசு, அழகு, களிப்பு, போதம், வெற்றி உண்டாகும்.
சிவப்பாடை :
பித்தம், வெப்பம், சுரம், வாந்தி, அருசி, கபம், மந்தம் உண்டாகும்.
பச்சை ஆடை :
உடல்வெப்பம், ஐயம் போகும், கண்குளிர்ச்சி, உடல்பூரிப்பு, உண்டாகும்.
கறுப்பாடை :
காசம், வெப்பு, விஷம், மந்தாக்கினி, பித்தம் போகும்.
மஞ்சளாடை :
நீர்க்கடுப்பு, காசம், விஷ சுரம், நமைச்சல், வெப்பு, மலம் போகும்.
கம்பளம் :
பெரும்பாடு, அசீரணம், கிராணி, சூலை, பேதி, சீழ் போகும்.
அழுக்குத்துணி : அழகு, அறிவு, போகும்; நோய், குளிர், துக்கம், தினவு, வெட்கம் உண்டாகும்.
என்று குறிப்பிடுகிறது.
ஆடை வகைகள் எல்லாம் ஒவ்வொரு குணத்தை உடையவையாக இருக்கக் காணலாம்.
இவற்றில் சிவப்பு ஆடையும், அழுக்குத் துணியும் உடலுக்குப் பயன் தராதவைகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.
கந்தையானாலும் கசக்கிக் கட்டு என்னும் பழமொழி, அழுக்குத் துணியினால் வரக் கூடிய கெடுதல்களைக் கருதி உரைக்கப்பட்டதாகக் கொள்ளவும் இடமுண்டு. ஆக, ஆடை வகைகள் உடல் நலன் கருதியே பயன்படுத்தப்படுகின்றன என்பதை அறிகிறோம்.
:- நன்றி ஐயா பாஸ்கர்

**Vaitiyar Malick**
வயிற்றைச் சுத்தம் செய்வது எப்படி?
நம் உடலிற்குத் தேவையான சத்துகள் நாம் உண்ணும் உணவில் இருந்தே பெறுகிறோம். உணவில் இருந்து சத்துக்களை உடலுக்கு பிரித்தளிக்கும் வேலையை செய்வது நமது வயிறு. இதனை தூய்மையாய் வைத்திருந்தால் உடல் ஆரோக்கியத்தை பேண முடியும் என்கின்றர் சித்தர் பெருமக்கள்.
எப்படிச் சுத்தமாய் வைத்திருப்பது?

எளிய விதிகள்தான், யாரும் கடைபிடிக்கலாம்.
ஒரு நாளிற்கு இரண்டு முறை மலம் கழிக்க வேண்டும்.
வருடத்திற்கு இரு முறை பேதி மருந்து உட்கொள்ள வேண்டும்.
அதென்ன பேதி மருந்து?
இந்த பேதி மருந்தைப் பற்றி கோரக்கர் தனது "ரவிமேகலை" நூலில் "பேதிகல்பம்" என்ற பெயரில் அருளியிருக்கிறார
சோற்றுக் கற்றாழை மடல் களில் பெரிதாக உள்ளதாகப் பார்த்து ஐந்து மடல்களைக் கொண்டுவந்து, அவற்றை சீவி அதில் உள்ள சோற்றை எடுத்து ஒரு பாத்திரத்தில் போட்டு அதனுடன் கடுக்காய்த்தூள் ஒரு பலம் போட்டுப் பிசைந்தால் அது நீர்த்துப் போய் விடுமாம். பின்னர் அதனை வடிகட்டி எடுத்து, அதனுடன் எலுமிச்சம் பழச்சாறு பத்துத் துளி விட்டு கலந்து மூன்று நாட்கள் காலை வேளையில் தொடர்ந்து அருந்த வேண்டுமாம். அப்படி அருந்தினால் வயிறு கழியுமாம். அத்துடன் வாதம், பித்தம், ஐயம் ஆகிய மூன்று குற்றங்களும் நீங்கும் என்கிறார்.
இதன் மூலம் வயிறு சுத்தமாகி, அதன் செயல்பாடு மேம்படும்
:- சித்த மருத்துவரின் ஆலோசனையின் படி மருந்து செய்வது தான் சிறந்தது

**Vaitiyar Malick**
முன்னோர்கள் அறிவியலின்படி உடல் இயங்கும் விதம் :
நம் உடலை இயக்குவது வாதம்,பித்தம்,கபம் எனும் மூன்று குணங்கள் தான் என்பது நம் முன்னோர்கள் கண்டுபிடித்த முக்காலத்திற்கும் பொருந்தக்கூடிய உண்மை.எனவே நம் உடலை பற்றி புரிந்து கொள்ள இம்மூன்றையும் பற்றி அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும்.ஆகவே இந்த வகையில் வாதம், பித்தம், கபம் ஆகியன நம் உடலில் எவ்வாறு உற்பத்தி செய்யப்படுகின்றன ? என்னென்ன பணிகளைச் செய்கின்றன என காணலாம்.
வாதம்,பித்தம்,கபம் என்ற மூன்றும் நாம் உண்ணும் உணவினின்றும்,அது ஜீரணமாகும்போதும்,பிறகு அது இரத்தம்,மாமிசம் முதலிய தாதுக்களாக மாறும்போதும் உண்டாகின்றன.இனி இவற்றை ஒவ்வொன்றாக விளக்கமாக காணலாம்

**Vaitiyar Malick**
கபம் :
நாம் உண்ணும் உணவு வயிற்றில் போய்ச் சேர்ந்தவுடன் முதலில் ஜீரணமாவது இனிப்பான பாகமும்,இனிப்பாக மாறக்கூடிய பாகமுமே.இந்த முதற்பகுதி ஜீரணமானவுடன் அப்போது மேலே நுரையாக மிதப்பது கபம்.அது வெளுப்பும்,வழ வழப்புமுள்ள ஓர் திரவம்.அது அவ்விடத்திலிருந்து உடம்பின் பல பாகங்களுக்குச் சென்று பலவித வேலைகளைச் செய்கின்றது.முக்கியமாக 1.நைப்பு 2.குளிர்ச்சி 3.வழ வழப்பு 4.பசை போன்ற தன்மை 5.பலம் 6.பொறுமை 7.தைரியம் இவற்றைக் கொடுக்கின்றது.
மேலும் எலும்புகள் சேரும் இடத்தில் அவற்றிற்கு ஆதாரமாகவும்,அசைவுக்கு உதவியாக நைப்பைக் கொடுத்தும்,இருதயத்துக்கு ஆகாரமாகவும்,வயிற்றில் இருந்து கொண்டு ஆகாரம் ஜீரணம் ஆவதற்கு தகுதியாக அதை நெகிழச் செய்தும்,நாக்கிற்கு ருசி பார்க்கும் சக்தியைக் கொடுத்தும்,தலையில் இருந்து கொண்டு கண்களைக் குளிரச் செய்தும் உதவுகின்றது.கபம் அதிகமாக தங்கியிருக்கும் இடங்கள் தலை முதல் இருதயம் வரையுள்ள பகுதி ஆகும்.இது தவிர பூட்டுகள்,வயிறு,கொழுப்பு ஆகும்.

**Vaitiyar Malick**
பித்தம் :
இனிப்பான பகுதியின் ஜீரணம் முடிந்தவுடன் உணவிலுள்ள புளிப்பான பாகமும்,புளிப்பாக மாறக்கூடிய பாகமும் வயிற்றிலேயே ஜீரணமாகின்றன.இந்தப் பகுதி ஜீரணமானதும் மேலே மிதந்து வரும் திரவத்திற்குப் பித்தம் என்று பெயர்.அது பச்சை கலந்த மஞ்சள் நிறமானதும்,புளிப்பும்,காரமும் சேர்ந்த சுவையுள்ளதுமான திரவமாகும்.இது வயிற்றிலிருந்து உடம்பின் பல பாகங்களுக்கும் சென்று பலவிதமான வேலைகளைச் செய்கிறது.
அது வயிற்றையும்,குடலையும் சேர்க்கும் வளைந்த குழாயாகிய க்ரஹணி என்னும் இடத்திற்கு வந்து அங்கே உஷ்ணமாக மாறி, அதன் மேலே வயிற்றிலிருக்கும் அன்னத்தை பக்குவம் செய்விக்கிறது.மேலும் வயிற்றில் நடக்க வேண்டிய ஜீரணம் முடியும் வரையில் வயிற்றிலுள்ள உணவு கீழே இறங்காமல் தடுக்கின்றது.வயிற்றில் ஜீரணம் முடிந்தவுடன் உணவு கீழே குடலுக்கு இறங்குவதற்கு இடம் கொடுக்கின்றது.பிறகு குடலில் நடக்க வேண்டிய நடக்க வேண்டிய ஜீரணத்திற்கும் மேலிருந்து உஷ்ணத்தைக் கொடுத்து உதவுகிறது.
உணவின் ஸாரமாகிய ரஸம் சிவப்பு வர்ணத்தை அடைந்து ரத்தமாக மாறுவதும்,கண்ணின் பார்வைச் சக்திக்கும் பித்தமே ஆதாரம்.உடம்பின் மேனிக்கும் பித்தமே காரணம்.ஆகவே பித்தம் சில சமயங்களில் திரவ ரூபமாகவும்,சில சமயங்களில் வெப்ப ரூபமாகவும்,வேறு சில சமயங்களில் ஒளி வடிவமாகவும் இருப்பது குறிப்பிடத்தக்கது.இவ்விதம் உஷ்ணமாக மாறிய பித்தத்தின் சக்தியையே அக்னிபஸம் என்று சொல்லுகிறோம்.
இந்த அக்னி ஆயுளுக்கும்,நிறத்திற்கும்,வலிமைக்கும்,ஆரோக்கியத்திற்கும்,உற்சாகத்திற்கும் தேகபுஷ்டிக்கும்,காந்திக்கும்,உடம்பின் எல்லா தாதுக்களின் ஸாரமாகிய ஓஜஸ் என்பதற்கும்,உடம்பின் வெப்பத்திற்கும்,ஐந்து வகை ப்ராணன்கள் என்று சொல்லப்படும் வாயுவின் சக்திக்கும் ஆதாரமாக இருக்கின்றது.மேலும் பித்தமானது இதயத்தில் இருந்து,பொருள்களை அடைய வேண்டுமெனும் ஆசை,அதற்கான முயற்சி இவற்றைத் தூண்டுகின்றது.இவ்வாறாக பல இடங்களில் பலவித வேலைகளைச் செய்தபோதிலும் பித்தம் அதிகமாகத் தங்கியிருக்கும் இடம் இதயத்திற்குக் கீழே தொப்புள் வரையில் உள்ள பகுதிகள் ஆகும்.

**Vaitiyar Malick**

வாதம் :

உணவு குடலுக்கு இறங்கிய பிறகு உணவின் காரமான பகுதியும்,காரமாக மாறக்கூடிய பகுதியும் பக்குவமடைகின்றன.ஜீரணத்தின் இந்த பகுதியில் வாதம் உண்டாகின்றது.வாதம் என்பது கண்ணால் பார்க்க கூடியதில்லை.காற்று எப்படி தொடு உணர்ச்சியால் அறியப்படுகிறதோ, அப்படியே உடலில் உண்டாகும் வாதமும்,அது செய்யும் வேலையினாலும்,மற்ற குணங்களாலும் அறியப்படும்.அது பொதுவாக காற்றின் தன்மையை உடையது என்று சொல்லலாம்.பித்தம் எப்படி வெப்ப சக்தியாக மாறுகிறதோ அப்படியே, வாதமும் உடலில் பல வேலைகளைச் செய்யும் உடல் சக்தியாக ( Physical Energy ) மாறுகின்றது.

வாதம் நமது உடம்பில் பல இடங்களுக்கும் சென்று பல முக்கியமான வேலைகளைச் செய்கின்றது.அவை வருமாறு,

1.வாக்கு,மனம்,உடம்பில் பல பாகங்கள்,ஐம்புலன்கள் இவைகளின் வேலைகள்.

2.மூச்சு விடுதல்,உற்சாகம்

3.ரஸம்,இரத்தம் இவைகளை உடம்பில் சமமாக பரவும்படி செய்தல்.

4.மலம்,சிறுநீர் வெளியேற்றம்.

வாதம் உடல் முழுவதும் சென்று பல வேலைகளைச் செய்த போதிலும்,அது அதிகமாக தங்கியிருக்கும் இடம் தொப்புளுக்கு கீழே உள்ளங்கால் வரையுள்ள பகுதிகள் ஆகும்.

இவ்வாறாக வாதம்,பித்தம்,கபம் இவை மூன்றும் நமது உடம்பில் நடக்கும் பல வேலைகளுக்கும் இன்றியமையாதவை ஆகும்.ஆனால் இவை இருக்க வேண்டிய அளவுக்கு மிகினும்,குறையினும் இவைகளே பலவித நோய்களுக்கு காரணமாகின்றன.இவை எல்லா அங்கங்களிலும் புகுந்து பலவித வேலைகளைச் செய்வதால்,இவைகள் சம்பந்தப்படாமல் யாதொரு நோயும் ஏற்படுவதில்லை எனலாம்.இவைகளை குணப்படுத்தினால் அநேகமாய் எல்லா நோய்களையும் குணப்படுத்தலாம்.ஆகவே உடம்பில் வாதம்,பித்தம்,கப இவற்றின் நிலையை அறிந்து அவற்றின் மிகுதியையும்,குறைவையும் சமப்படுத்துவதே இயற்கை சார்ந்த மருத்துவத்தின் நோக்கமாகும்.

இனி வாத,பித்த,கபங்களுடன் மிகுந்த தொடர்புடைய நாடிகள் பற்றி தெரிந்து கொள்வோம்.

2

**Vaitiyar Malick**

நாடிகள் :

நாடிகள் என்பன உடலின் சூட்சம ( Subtle ) பாதைகளாகும்.இவை உடலின் இயக்க ஆற்றல் செல்லும் பாதைகளாகும்.தொப்புளுக்கு கீழே 4 அங்குலம் உள்ள பகுதியிலிருந்து எல்லா நாடிகளும் துவங்குகின்றன.இவை மொத்தம் 72,000 ஆகும்.இவை இலையின் நரம்புகள் போல பல கிளைகளாக பிரிந்து உடலின் எல்லா பகுதிகளுக்கும் செல்கின்றன.வாத,பித்த,கபங்களின் காரணங்களால் ஏற்படும் சகல வேலைகளுக்கும் இவைகளே ஆதாரமாகி எப்போதும் அசைவோடு கூடிய கொடி போல் அமைந்திருப்பவை இவை.இவற்றுள் சில பருமனாகவும்,சில திரண்ட வடிவம் உள்ளவைகளாகவும்,சில முடிச்சுள்ளவைகளாகவும்,பல நாடிகள் ஒன்று சேர்ந்தும்,எல்லாம் ஓட்டை உள்ளவைகளாகவும் இருக்கும்.

நாடியின் துவாரங்களின் வழியாக பிராணவாயு சஞ்சரிக்கின்றது.தோஷங்கள் சேராதிருக்கும் போது, உடம்பிற்கு சுகத்தையும்,தோஷங்களோடு சேர்ந்திருக்கும் காலத்தில் வியாதியையும் உண்டு பண்ணக்கூடியது.

இவற்றுள் 30,000 நாடிகள் ஆண் நாடிகள் என்றும்,30,000 நாடிகள் பெண் நாடிகளென்றும்,12,000 நாடிகள் இருபால் நாடிகள் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.இதில் பத்து நாடிகள் மிகவும் முக்கியமானவை.

அவை, 1.இடை 2.பிங்களை 3.சுழுமுனை 4.காந்தாரி 5. ஹஸ்தபீஜம் 6.பூஷா 7.பயஸ்விநீ 8.அலம்பு 9.குஹூ 10.சங்கினீ ஆகும்.

நாடியின் நடை அறிதல் :

நமது உடலில் இரத்தம் பல உறுப்புகளுக்குச் செல்லும்போது அலை அலையாக செல்கின்றது.ஒவ்வொரு முறையும் இந்த அலை மூன்று எழுச்சியுள்ள ஓர் தொகுதியாக செல்கின்றது என்பது நம் முன்னோர்களின் கண்டுபிடிப்பு.இந்த மூன்றும் முறையே வாதம்,பித்தம் மற்றும் கபம் தொடர்புடையதாகும்.இதனைக் கொண்டு நமது உடலின் வாத,பித்த,கப அளவுகளை தெரிந்து கொள்ளலாம்.இதன் மூலம் உடலில் ஏற்பட்டுள்ள நோயைக் கண்டறியலாம்.

இதில் வாத நாடியின் எழுச்சி ஒரு பங்கென்றால்,பித்த நாடியின் எழுச்சி அரை பங்காகவும்,கப நாடியின் எழுச்சி கால் பங்காகவும் நோயற்றவர் கையில் சாதாரணமாகக் காணப்படும்.

இந்த மூன்றின் அளவையும், மருத்துவர் ஒருவர் முறையே, ஆள்காட்டி விரல்,நடு விரல்,மோதிர விரல் ஆகிய தன் கையின் மூன்று விரல்களைக் கொண்டு நோயாளியின் நாடியை அறிதலுக்கு, நாடியின் நடை அறிதல் ( நாடி பார்த்தல் ) என்று பெயர்.இதில் மருத்துவர், நோயாளியின் கையில் மணிக்கட்டுக்கு ஒரு அங்குலம் மேலேயும்,கட்டை விரலுக்கு கீழேயும் உள்ள இடத்தில் நாடி பிடித்து அறிவார்.

**Vaitiyar Malick**

நோயற்ற நிலையில், ஆள்காட்டி விரலில் வாதமும்,நடு விரலில் பித்தமும்,மோதிர விரலில் கபமும் உணரப்படும்.ஆண்களுக்கு வலது கையிலும்,பெண்களுக்கு இடது கையிலும் நாடி பார்க்கப்படும்.இது தவிர பசுக்களுக்கு மூக்கு ஓட்டைகள் சேருமிடத்திலும்,குதிரைகளுக்கு காதிலும் நாடி பார்க்கப்படும்.

பொதுவாக நாடிகளின் துடிப்பை, பறவைகள்,விலங்குகள் ஆகியவற்றின் நடையுடன் ஒப்பிடுகிறார்கள்.அந்த வகையில் இயல்பான உடல்நிலையுடைய ஒருவரின் நாடி நடைகள் பின்வருமாறு அமையும்.

வாத நாடி - பாம்பின் நடை

பித்த நாடி – தவளையின் நடை

கப நாடி - அன்னத்தின் நடை
இனி நோயுள்ள ஒருவரின் நாடி நடைகளைக் காண்போம்.
1.உறுதியற்ற நிலையில் :
வாதநாடி – தவளை,சிட்டு,ஆமை
பித்த நாடி - காகம்,கிளி,தவளை
கப நாடி - புறா,ஊர்க்குருவி,கோழி,குதிரை
2.உறுதி மிக்க நிலையில் :
வாத நாடி – மான்,மீன்,அட்டை,மூஞ்சூறு
பித்த நாடி – புறா,அன்னம்,ஊர்க்குருவி,குதிரை
கப நாடி - எருமை,பெண்சிட்டு,யானை என்றவாறு அமையும்.
இவ்வாறாக நாடி பற்றிய பல செய்திகள் நூல்களில் கூறப்பட்டிருந்தாலும்,நாடியின் நடையை அனுபவத்தினால் மட்டுமே துல்லியமாக அறிய முடியும்.பலருடைய நாடியை ஆரோக்கிய நிலையிலும்,நோய் வந்த நிலையிலும் நாடியை பார்த்துப் பார்த்து அனுபவம் முற்றினாலொழிய நாடியை துல்லியமாக அறிய முடியாது.இன்றைய நிலையில் இந்தக் கலையில் தேர்ச்சி பெற்றவர்கள் அரிதாகிக் கொண்டே வருகிறார்கள் என்பது கவலைத் தரக்கூடிய செய்தியாகும்.

**Mohammed Hadhees**
புராணிக் ஹீலிங் என்ற மருத்துவம் சம்பந்தமாக ஒரு பெரிய்ய்ய்ய்ய புத்தகத்தை படித்திருக்கிறேன்.அது தங்கள் பட்டியலில் எதைச்சாரும்?

**Rahmath Rajakumaran**
தெரியவில்லை . புராணிக் ஹீலிங் பற்றி எனக்குத் தெரியாது , நீங்கள் சொன்னால் நல்ல இருக்கும் ,

**Mohammed Hadhees**
எனக்கு ரொம்ப மெமரி லாஸ் இருக்கு. ஒரு பக்கம் படிச்சுக்கிட்டே வருவேன்.ஒரு பக்கம் மறந்துகிட்டே வருவேன்.☺.
அது சீன மருத்துவம்னு நினைக்கிறேன்.
மனிதனின் குணங்கள் தான் அவனுக்கு நோயை ஏற்படுத்துகிறது.
மனிதனின் குணங்கள் அவனிடத்தில் நிறங்களாக பிரதிபலிக்கிறது.
உதாரணமாக...கோப குணம் அதிகமுள்ளவனிடம் சிவப்பு நிறம்..பொறாமை குணமுள்ளவனிடம் மஞ்சள் நிறம்..இப்படியாக.(இதனால்தான் நல்லடியார்களைச்சுற்றி வெண்மை நிறம் ஒளிவட்டம் போல காட்சியளிக்கிறது)
அடுத்து...
ஒவ்வொரு நிறங்களும் சில நோய்களை ஏற்படுத்துகிறது.
உதாரணமாக சிவப்பு நிறம் ரத்தக்கொதிப்பை ஏற்படுத்துகிறது.
{கோபக்காரன்-சிவப்பு நிறம் -ரத்தக்கொதிப்பு }
மனிதர்களின் இந்த நிறங்களை தனிப்பட்ட பயிற்சிகள் மூலம் அதற்கு மருத்துவம் செய்கிற மருத்துவர்கள் அறிந்து கொள்வார்கள்.
ஓர் அறையில் பச்சைப்பசேலென்ற செடிகளை வைத்திருக்கும் அம்மருத்துவர்கள் நோயாளிகளின் தேவையற்ற அதிகப்படியான நிறங்களை அச்செடிக்கு கடத்துவதின் மூலம் சிகிச்சையளிப்பார்கள்

**Mohammed Hadhees**
மேட்டுப்பாளையத்தில் அப்படி ஒருவர்(முஸ்லிம்) மருத்துவம் செய்கிறார்.அவரது உறவினர் மூலம்தான் அது சம்பந்தமான புத்தகம் படிக்கக்கிடைத்தது.
டெல்லியில் ஓதுகையில் படித்தது.இல்லாத ஊருக்கு இழுப்பைப்பூ சர்க்கரை...கதையாக ஏதாச்சும் படிக்க தமிழ்ப்புத்தகம் கிடைக்காதா?என ஏங்கியபோது அந்த( 300 பக்க?)புத்தகத்தை ராப்பகலா கண்விழித்து படித்தேன்

**Rahmath Rajakumaran**
அந்த புக்கின் பெயர் , எழுதிய ஆசிரியர் , பிரிண்ட் செய்த அச்சகம் மற்றும் வருஷம் சொன்னால் போதும் .

**Muhammad Thaj Muhyideen**
அது 'புரானிக் ஹீலிங்' அல்ல; 'ப்ரானிக் ஹீலிங்' ஆகும். தமிழில் ' ப்ராண மருத்துவம்' ஆங்கிலத்தில் HAN HEALING (ஹேன் ஹீலிங்). அந்த மேட்டுப்பாளையம் முஸ்லிம் டாக்டர் என் நண்பர்தான். உடலைச் சுற்றி ஒரு ஒளிவட்டம் அனைவருக்கும் உள்ளது.( அது ஒரு மாக்னடிக் கரண்ட்- MAGNETIC CURRENT)-( மகான்கள் தலை சுற்றி ஒரு ஒளி வட்டம் வரைகிறார்களே அதுதான்.) அந்த ஒளிவட்டம் முழு உடலையும் சுற்றி அனைவருக்கும் உள்ளது.
நோயுற்ற பகுதியில் அந்த ஒளிவட்டம் உடைந்திருக்கும் (RUPTURE).அதை அந்த பயிற்சி பெற்ற டாக்டர்கள் தன் கையில், வரிகள் கொண்ட செப்பு பிளேட்டுகளைக் கொண்டு அந்த உடைந்த பகுதி நோக்கி செயல் (ACTIVATE) படுத்துகின்றனர் .உடலின் எப்பாகத்திலும் கை படுவதில்லை. சுமார் 10,15 நிமிடங்கள் தினம் ஒரிரு முறைகள் 3 முதல் 5 நாட்கள் சிகிச்சை; மூட்டு வலி. கல் கரைய, நரம்பு நோய்களுக்கு நன்கு குணம் கிடைக்கின்றது. நானும் சிகிச்சை பெற்றுள்ளேன். (ஆக்கு பிரஷர், ஆக்கு பஞ்சர் சிகிச்சையும் செய்கிறார்.
இதய நோய் ரத்த குழாய் அடைப்புக்கு உடலில் கை படாமல் ப்ரானிக் சிகிச்சை மூலம் அடைப்பை நீக்குகிறார். நம்ப முடியாமல் இருக்கும். என் மனைவிக்கு 65 வயதில் 3 அடைப்பை நீக்கினார். ஆபரேஷன் தவிர்க்கப் பட்டது. இந்த சிகிச்சைக்கு கண்டிஷன் இதற்கு முன் ஆபரேஷன் செய்திருக்கக்கூடாது. நீண்ட காலம் சாப்பிடும் டயாபடிக், பிரஷர்

மாத்திரை தவிர வேறு எந்த மாத்திரையும் சாப்பிடக் கூடாது. இந்த சிகிச்சையில் மருந்து ,மாத்திரை என்ற பேச்சிற்கே இடமில்லை.
இந்த HAN HEALING முறை அமெரிக்கா போன்ற நாடுகளிலும் உள்ளது.இதற்கு நூற்களும் உள்ளன.

விநோத மருத்துவங்கள் 2






உலக மக்கள் தொகையில் 11பேரில் ஒருவருக்கு டயாபடீஸ் (கிரேக்க வார்த்தை ஆங்கிலத்தில் நட்சிகுச்பி )என்னும் நீரிழிவு
2014-ல் உலகில் 422 மில்லியன் மக்கள் நீரழிவு நோயால் பாதிக்கப்பட் டுள்ளனர். என்னையும், என் நண்பனையும் சேர்த்து கணக்கிட்டார்களா..... தெரியவில்லை .
நம் உடலிலுள்ள திசுக்களுக்கு இயக்கும் சக்தியை இரத்தத்திலுள்ள குளுக்கோஸ் கொடுக்கிறது. இருப்பினும் குளுக்கோஸை திசுக்களில் செலுத்த இன்சுலின் என்ற ஹார்மோன் தேவை. இந்த இன்சுலின் வயிற்றுக்குப் பின் பகுதியிலுள்ள கணையம் என்னும் சுரப்பி உற்பத்தி செய்து கொடுக்கிறது . (இதைக் கண்டு பிடிக்க நாயுக்கு கணையம் என்ற பான்க்ரியாஸை நீக்கி சோதனை செய்து அதன் மூத்திரத்தில் சுகர் ஏறி செத்தோ போச்சு ஜிம்மி நாய் பிணத்திற்கு முன்னாடி நின்று மின்கோவஸ்கியும் மெர்சிங்கும்........" பார்த்தீங்களா கணையம்தான் இன்சுலினை சுரக்கிறது. )
வயது கூடும் போதோ பரம்பரையின் காரணமாகவோ சிலருக்கு கணையம் குறைவாக இன்சுலினை சுரக்கிறது அதாவது இரத்தத்திலுள்ள குளுக்கோஸை குறைவாக எடுத்து மீதியை எடுக்காமலேயே இரத்ததிலேயே இருப்பதால் இரத்தத்தில் குளுக்கோஸின் அளவு கூடுகிறது .
இந்த மீதி குளுக்கோஸ் இதயம் , சிறுநீரகம் , கண்கள் , நரம்பு மண்டலம் மற்றும் இரத்த நாளங்களையெல்லாம் செல்லமாக முத்தமிடுகிறது . வந்தாச்சி சுகர் நோய் .
"காபிக்கு சுகர் போடலாமா ? அரை சீனி போடுங்கோ " - நொறுக்குத் தீனியில் கறிவேப்பிலையைக் கூட மிச்சம் வைக்காமல் லவட்டுகிறது . இனிப்பு கொண்டு வந்தால் கண்கள் பிரகாசமடையும். தண்ணீர் தாகம் அரை மணிக்கு ஒரு தடவையாவது மூத்திரம் பெய்ய ......சுகர் உடலில் வளமாய் வாழ வந்திருக்கிறது என்பதை மெலிந்த உடலால் அறிந்து கொள்ளலாம் . ( ராத்திரியில் மூத்திரம் அடிக்கடி போக ,பயங்கர கனவு வேற )
அதிகாலையில் (Fasting சுமார் இரண்டு இன்ஞ்க்கு இரத்தம் எடுத்து, சாப்பிட்ட பின் ஒன்றரை மணிக்குப் பிறகு (post prondial ) ரத்த சோதனையில் முதல் இரத்தம் 100க்கும் குறைவாக , இரண்டாம் இரத்தம் 130 க்கும் குறைவாக இருந்தால் எல்லாம் நலமே .
அதென்ன 100 / 130 .
100 மில்லி லிட்டருக்கு இத்தனை மில்லி கிராம் என்று கணக்கு.
தேனாக இனிக்கிறது .மொரார்ஜி தேசாய்க்கு முன்பேயே 1684 லேயே வில்லிஸ் என்ற ஆங்கிலேயர் மூத்திரத்தை நாக்கில் தொட்டுப் பார்த்து தேனாக இனிக்கிறது என்பதை வைத்து "மூத்திரைப் பேய் " என்று பெயரும் இட்டார் ,
இது நோயா ? இல்லை குறை, முடி நரைத்தல், ரீடிங் கண்ணாடி போடுவது மாதிரி ஒரு குறை . அவ்வளவுதான் . நோய் இல்லை
என்ன சாப்பிடறது ? பூமிக்கு மேலே விளையற காய்கறி கீரை வகைகள் . பூமிக்குள்ளே விளையிற கிழங்கெல்லாம் கூடாது . உங்க டாக்டர் பிரிண்ட் செய்து பேப்பர் கொடுப்பார் . அதிலே கலோரி கணக்கெல்லாம் இருக்கும் கூடவே
வயிற்றெரிச்சலும் இருக்கும் ,
"டாக்டர் சார் , இனிப்பு கூடாது , கிழங்கு கூடாது ,வயிறு முட்ட சாப்பிடக்கூடாது , கூல்டிரிங்ஸ் கூடாது , குளோப் ஜான் கூடவே கூடாது , ஐஸ் கிரிமை பார்க்க கூடாது
எல்லாவற்றையும் விட்டு விட்டு வாழ்க்கையில் என்னதான் சார் இருக்கு ?"
"வாழ்க்கை இருக்கிறதே : "

**Vaitiyar Malick**
சர்க்கரை நோய்க்கு எனும் மது மேகம்
நிறைய பேர் கேட்டது. எளிமையான மருந்து
கடுகு ரோகினி - 50 கிராம்
வெந்தையம் - 50 கிராம்
கருவேப்பிலை - 50 கிராம்
நெல்லி முள்ளி - 50 கிராம்
கீழா நெல்லி - 100 கிராம்
சுக்கு - 50 கிராம்
மிளகு - 50 கிராம்
அனைத்தையும் முறைப்படி பொடித்து, சலித்து பத்திர படுத்தி புட்டியில் அடைத்துக்கொள்ளவும்.
தினமும் 1 தேக்கரண்டி பாலில் கலந்து உணவுக்கு முன் சாப்பிடவும்.
அதே போல உடலில் உள்ள அனைத்து மூட்டுகளுக்கும் எளிமையாக மடக்கி நீடுகின்ற மாதரி யோகா பயிற்சி மேற்கொள்ளுவது சிறப்பு. மாலை நேர சூரிய ஒளி உடலில் படும் படி நடைப்பயிற்சி நன்மை தரும்
நன்றி :- லோகேஸ் குமார்

**Vaitiyar Malick**
சர்க்கரை வியாதியா? கவலை வேண்டாம் !
தமிழ் நாட்டிலேயே முன்னோடியாக இருக்கக் கூடிய ஒரு நகரம் எது என்றால் சென்னை. சக்கரை வியாதிக்கான மிகப் பெரிய வணிகச் சந்தையை தனக்குள்ளே உள்ளடக்கிக் கொண்டு, நடைப்பிணமாய் திரியக் கூடிய தமிழ் சமூகம் இன்று உருவாகி உள்ளது. அதற்கான காரணங்கள் என்ன? அது எப்படியெல்லாம் வருகிறது? அதை எப்படி தடுக்கலாம்? அதற்கான உணவு முறை கட்டுப்பாடுகள் என்ன? இதையெல்லாம் முழுமையாக அலசி ஆராயப்போகிறோம். முதலில் நீரிழிவு என்பது அன்றே சித்தர்களால் மது மேகம் என்ற பெயரில் சொல்லப்பட்டது. இந்த மது மேகம் எப்படியெல்லாம் வரும் என்பதை விளக்கும் சித்தர் பாடலானது . . . .
“கோதையார் களவின் போதை
கொழுத்த மீனிறைச்சி போதை
பாலுடன் நெய்யும்
பரிவுடன் உண்பீராகில்
வருமே பிணி”

**Rahmath Rajakumaran**
டயாபடீஸ் செக்ஸைப் பாதிக்குமா ?
பாதிக்கும். ரெட்டினோபதி (கண்) , நெஃப்ரோபதி (சிறுநீரகம்) , மைக்ரோ ஆன்ஜியோபதி (இதயத்தின் சிறு குழாய்கள் ) இவற்றை பாதிப்பது போல் இன உறுப்பு நரம்பு மண்டலத்தையும் பாதிக்கும் .
கால் எரிச்சலை உண்டாக்க கூடிய டயாபடீஸ்க்கு "நியூரைட்டிஸ்" என்பார்கள்

விநோத மருந்துவங்கள் 3



" எண்பது வயதுக்குள் ஹார்ட் அட்டாக் வருவது என்பது ஆண்டவனின் கட்டளை அல்ல. மனிதனின் விருப்பம்" - பால் டட்லி ஒயிட் என்ற உலகப் புகழ் பெற்ற இதய நோய் நிபுணர் சொன்னது.
இதய ரத்தக் குழாய்களில் அதிரோஸ் க்ளீரோயிஸ் (Alteroslerosis) எனப்படும் கொழுப்பும் , ஃபைப்ரின் (Fibrin) எனப்படும் ஒரு பொருளும் சேர்ந்து அடைப்பை ஏற்படுத்துகின்றன , இது இரத்தக் குழாயில் 75 சதவிகிதத்திற்கும் மேற்பட்ட இடத்தை அடைக்கும் போதுதான் ஆஞ்சைனா (Angina) என்ற மார்பு வலி ஏற்பட்டு இதயத்திற்கு இரத்த சப்ளை தடைபடுகிறது.
" மார்பு வலி எப்படி இருந்தது ? "
"டாக்டர் என் நெஞ்சின் மீது ஏதோ ஒரு பாறாங்கல்லை ஏற்றி வைத்தது மாதிரி இருக்கிறது"

சிலர் "நெஞ்சிக் கூட்டையே நெரிப்பது மாதிரி வலி டாக்டர் "
சிலர் நடு மார்பில் எரிச்சல் ஏற்படுவதாகச் சொல்லி ,இது காஸ்டரிக் வலி என்று தப்பாக புரிந்து கொண்டு அண்டாசிட் மாத்திரிகளை விழுங்கிக் கொண்டிருக்க , புலி மாதிரி ராத்திரி வந்து டயத்திற்குள் காரியத்தை முடித்துவிடும் .
" நேற்று ராத்திரி இடியப்பம் பாயாவும் இன்று மதியம் தலைக்கறியும் தானே மனுசன் சாப்பிட்டார் "
"போதும் மேற்கொண்டு ஒன்றும் சொல்லவே வேண்டாம் சரி , உறவுக்கெல்லாம் சொல்லிடு அஸருக்கு எடுக்குறாங்க "
சிலருக்கு மார்பு வலி வியர்வை மழையில் நனைந்து குளித்த மாதிரி ஏ.சியிலும் கூட வியர்த்திருக்கும் .
சிலருக்கு நெஞ்சின் மையப்பகுதியில் தொடங்கி இடது கைக்கோ, தொண்டைக்கோ சில சமயங்களில் வலது கைக்கோ அல்லது வயிற்றுக்கோ வலிபரவும் ,
அதிகமான மனச்சுமையும் , உணர்ச்சிப் போராட்டமும் (Emotional Disturbance) ம் ஒரு காரணம் . எது நடந்தால்தான் என்ன ? கலம் எழுதியதுதானே காலத்திலும் நடக்கும் " அந்த மனநிலைக்கு நீங்களும் , நானும் வந்தாக வேண்டும் .
18 நூற்றாண்டில் வாழ்ந்த ஜான் ஹண்டர் என்னும் ஆங்கிலேயே மருத்துவர் மிகவும் கோவப்படுபவர் . இதய நோயைப் பற்றி இவர் செய்த ஆராய்ச்சிக் கட்டுரையைச் சமர்பித்த போது சம்பந்தப்பட்ட நிபுணர் குழு , இவரை வீணாக திரும்ப திரும்ப கேள்வி கேடடு விளக்க வைக்க . உச்சக்கட்ட கோபவெறியில் எல்லாவற்றையும் சொல்லிவிட்டு இறந்து போனார் ஜான் ஹண்டர் .
கோர்ட் வாசலல தகப்பன் கதற கதற 20 வயது பொண்ணு அந்த பயலோடு போவதைப் பார்த்து , "மவளே , நீ போதே " என்று கதறும் போது ..... நமக்கே வலி வராமல் என்ன செய்யும். ?
உணவுக் கட்டுப்பாட்டில் கவனம் செலுத்துங்கள் ,
புகை பிடிப்பது நிறுத்தங்கள்,
Fellow ship உள்ள கிளப்பிற்கு போகாதீர்கள்.
உடற்பயிற்சி அதுவும் என்ன நடந்தாலும் நடக்காவிட்டாலும் பரவாயில்லை நீங்கள் நடந்து விடுங்கள் ,
"இதயங்கள் அமைதி பெற 'திக்ரு செய்யுங்கள்" - (குர்ஆன்)
செய்துதான் பாருங்களேன்
விநோத மருத்துவங்கள் 4




உடம்பை ஒரு குடும்பம் என்று நினைத்துக் கொள்ளுங்கள் கட்டளைகள் போடும் அப்பாதான் மூளை .
வேலைக்குப் போய்க் சம்பாதித்து தரும் அக்கா - நுரையீரல் .
எதற்கெடுத்தாலும் சத்தம் போடும் அண்ணன் _ இதயம்
சமைத்து எல்லோரையும் வேலைக்கு அனுப்பி, வீட்டைச் சுத்தப்படுத்தி , மொத்த வருமானத்தில் சேமித்து குடும்பத்தையே கட்டி காக்கும் அம்மாதான் இந்தச் சிறுநீரகங்கள் .
அம்மா தன் உடம்புக்கு கஷ்டம் வந்தால் வெளியே சொல்வதில்லை . இரண்டு ஆள் வேலையை ஒரே ஆள் செய்ததால் ஒரு நாள் " முடியலப்பா" என்று அம்மா பDடுத்துக் கொள்வார் அப்போதுதான் தெரியும் கிட்னி ஃபெயிலியர்
போட்டி போட்டு ராவா அடிச்சது , 420 ஜர்தா பீடா , "மாப்ளே மப்பு ஏறலடா கணேஷ் புகையிலை கொஞ்சம் சுண்ணாம்பு காட்டி உருட்டி தாடா "
அத்தனை கருமாந்திரத்தையும் சிறுநீராகங்கள்தான் வடிகட்டியாக வேண்டும் .
சிறுநீராகத்தை அம்மான்னு சொன்னா சும்மாவா ?
பிளட் பிரஷரை ஏற, இறங்க விடாமல் பரமரிப்பது , எலும்பை ஆரோக்கியமாக காப்பது , உடம்பின் அமில - கார அளவுகளைச் சரிவிகிதத்தில் வைத்திருப்பது . ரத்த சிவப்பணுக்களை உற்பத்தி செய்வதற்கான மூலப் பொருட்களை தயார் செய்வது , உடம்பில் சோடியம் , கால்ஷியம், பாஸ்பரஸ் , தண்ணீர் ,பொட்டாசியம் போன்றவற்றின் அளவுகளைச் சரியான விகிதத்தில் இருக்கும் படி பராமரிப்பது. சக்தியை சேமித்து வைத்துத்

தேவையான நேரத்தில் தருவது இதெல்லாம் சிறுநீரகங்களின் வேலைகள் . ஒட்டு மொத்த குடும்பத்தை தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் அம்மாவேதான் .
வயிற்றுக்குப் பின்புறம் முதுகெலும்பின் இரு பக்கங்களிலும் 12 செ.மீ நீளத்திலும் , 6 செ.மீ அகலத்திலும் , 3 செ.மீ தடிமானத்திலும் சிறுநீரகங்கள் இருக்கின்றன ,
சிறுநீரகங்களில் ஒரு மில்லியன் நெஃப்ரான்கள் இருக்கின்றன இவை ஸ்ப்ரிங் மாதிரி சுருட்டி வைக்கப்பட்டிருக்கின்றன இதனை நீட்டினால் அறுபது கிலோ மீட்டர் நீளம் இருக்கும். இவ்வளவு பெரிய விந்தையான படைப்பு
நெஃப்ரான்கள் ரத்தத்திலிருந்து சிறுநீரை வடிகட்டி , சிறுநீர்ப் பைக்கு அனுப்புவதுதான் இதன் வேலை. எந்த சுத்திகரிப்பு தொழிற்சாலையிலும் இத்தனையூண்டு இடத்தில் சுத்திகரிப்பு நடந்ததில்லை ,
சர்க்கரை நோயாலும் பாதிப்படைகிறது மூட்டு வலி கைகால் குடைச்சல் , தலைவலி , வயிற்று வலி என்று எதற்கெடுத்தாலும் வலி நிவாரண மாத்திரைகளால் சிறுநீரகங்கள் உடனே பாதிப்படைகிறது அந்த உடனேயே தன் வேலையையும் நிறுத்தி விடுகிறது
வள நிவாரணி மாத்திரைகளில் Ibubrufen ,
Nimilicide போன்ற மாத்திரைகளை ரொம்பவும் ஜாக்கிரதையாக எடுக்க வேண்டும் . மூட்டு வலி கால் உளைச்சல் என்றதும் சும்மா மிட்டாய் மாதிரி விழுங்கக் கூடாது . பாலியூரியா வலி நிவாரணியால் சிறுநீரகத்தை பொத்தலாக்கி பிய்த்துக் கொண்டு சிறு சிறு இறைச்சித் துண்டுகள் அளவில் சிறுநீராகமே வெளியேறிக் கொண்டிருக்கும் இதற்கு papillary Necrosis என்று பெயர்
சிறு நீரகக் கற்களாலும் பாதிக்கப்படும் .

## விநோத மருத்துவங்கள் 5

இதயம் பற்றி மறுபடியும் எழுத வேண்டிய நிர்ப்பந்தம்

பொதுவாக பரம்பரையில் ரத்த அழுத்தம் , சர்க்கரை நோய் , ஹார்ட் - அட்டாக் ஆகியன இருந்தால் 40 வயது மேலான அனைவரும் இதய நல மருத்துவரிடம் பரிசோதனை செய்து கொள்வது நல்லது.

கொழுப்புக்கான பரிசோதனை , எக்ஸ்-ரே , டிரட்-மில் போன்ற பரிசோதனைகள் செய் லாம் இதன் மூலம், இரத்த ஓட்டத்தின் அளவு குறைவாக தெரிந்தால். இதயத்தில் பிரச்சனை வரலாம் , வருமுன் காப்பது

Dr. கே.எம் செரியன் கூறுகிறார் திருஞான சம்பந்தம் என்பவர் , மூச்சு விட சிரமப்படுவதாகக் கூறினார். சிகரெட் பீடி பழக்கம் இல்லை , சர்க்கரை நோயும் இல்லை இவருக்கு முதிர்ந்த ஹார்ட் அட்டாக் வந்துள்ளது .

இதய தசைகளின் பலவீனம் காரணமாக இவருடைய இதயத்தின் இடதுபுறம் செயலிழந்தது .எனவே "கரோனரி ஆஞ்சியோ கிராம்" செய்தோம் .மூன்று தமனியிலுமே பல அடைப்புகள் இருந்தன .இடது புறத்தில் தொண்ணூறு சதவிகிதமும் , வலது புறத்தில் நூறு சதவிகித அடைப்பும் இருந்தது , கரோனரி பை-பாஸ் அறுவை சிகிச்சையும் பலூன் பம்ப் முறையும் செயல்படுத்த முடிவு செய்யப்பட்டது

கொழுப்பின் அடைப்பை பலூன் பம்ப் மூலம் நீக்கி விடுதல் ஒரு வகை . அடைப்பு உள்ள இடங்களைத் தவிர்த்துவிட்டு பை-பாஸ் பாதை வழியாக ரத்த ஓட்டத்தினை முறைப்படுத்துதல் சிகிச்சையின் மற்றொரு வகை. திருஞான சம்பந்தத்துக்கு இந்த இரண்டாவது வகை சிகிச்சையே சரியாக இருக்கும் என முடிவு செய்தோம் .சிகிச்சை வெற்றி அளித்தது அவரது ஆயுள் நீண்டது ,

சகோதரி

Amina Yosuff

தன் தங்கை கணவருக்கு நேற்று திடீரென்று நெஞ்சில் எரிச்சல் ஏற்பட்டதாக என்னுடைய இதயம் பதிவில் (விநோத மருந்துவங்கள் 3 ) பின்னூட்டம் இட்டார் அவருக்காக

இப்பதிவு

**Rahmath Rajakumaran**
இதய நோய்க்கு மருந்து ஐந்து
1 ) குர்ஆனை ஆராய்ந்து ஓதுவது
2) வயிற்றை காலியாகப் போடுவது
3) இரவில் தஹஜ்ஜத் தொழுவது

4) நடுநிசியில் அல்லாஹ்விடம் மனமுருகி துஆ கேட்டல்
5) நல்லோர்களின் சகவாசத்தில் இருப்பது.
இப்ராஹீம் கவாஸ்ஸு (ரஹ்) அவர்கள் கூறியது .

விநோத மருத்துவங்கள் 6 ( பாகம் 1 )




"நிகரில்லாதது " என்கிற வர்ணனை மூளைக்குத்தான் பொருந்தும்
செயற்கை கை செயற்கை கால் செயற்கை சிறுநீரகம் , செயற்கை மூச்சோட்டம் , செயற்கை இதயம் எல்லாம் வந்தாயிற்று ஆனால் செயற்கை மூளை ஒன்று மட்டும் இதுவரை தயாரிக்கப்படவில்லை தயாரிக்கவும் முடியாது. அதே மாதிரி மூளை மாற்று அறுவை சிகிச்சையும் சாத்தியமே இல்லை.
மூளை செல்களின் எண்ணிக்கை இருபது டிரில்லியன் அதாவது இரண்டாயிரம் கோடி கோடி .மூளையின் நரம்பு நார்களை ஒன்றன் பின் ஒன்றாக சேர்த்து வைத்தால் , அந்த நீளத்திற்கு சந்திரமண்டலம் போய் விட்டுத் திரும்பலாம்.
கண் இமைக்காமல் ஒருவரை பார்க்க வேண்டுமானால் அதற்கு ஒரு சர்க்யூட் அப்படி பார்த்தால் கிளம்பும் பெருமூச்சை வெளியேற்ற இன்னொரு சர்க்யூட்
மெல்லிய மின்சார தூண்டுதல் மூளையில் ஆங்காங்கே தொடும் போது உடலில் அந்தந்த உறுப்புகள் துடிப்பதை வைத்து ஒவ்வொரு உடல் உறுப்பு களுக்குரிய ஏரியாவை மூளையில் குறித்துக் கொண்டார்கள் .
பயங்கரமான கிரிமினலை ஃபராண்டல் லோபெக்டமி ஆபரேஷன் அதாவது மூளையின் முன்பகுதியில் சிந்திக்கும் திறன் இருப்பதால் அதை வெட்டி எடுத்தால் குற்றவாளி ஜடமாகிப் போவான் நில் என்றால் நிற்பான் உட்கார் என்றால் உட்காருவான் .
வன்முறையில் ஈடுபடும் மனநோயாளி களுக்கு இந்த ஆப்ரேஷன் செய்து ரொம்பவும் சாதுவாக ஈகாஸ் மோனிஸ் என்கிற டாக்டர் மாற்றினார் நோபல் பரிசு கூட கிடைத்தது .இன்னொரு பரிசும் கிடைத்தது வேறு ஒரு மன நோயாளிக்கு இந்த ஆபரேஷன் செய்யும்போது டாக்டரை சுட்டுக் கொன்று விட்டான் . அவன் கொடுத்தப் பரிசு மரணம்.
மனநிலையையே சிதைத்து விடக் கூடிய இந்த சைக்கோ சர்ஜரியை யூதர்களுக்கு பண்ணலாம் என்று ஹிட்லர் திட்டம் தீட்டினார்.
1972 ல் டோக்கியோவில் சைக்கோ சர்ஜரி சர்வதேச மாநாடு நடக்கத் திட்டமிட்டிருந்த இடத்தில் ஜப்பான் பல்கலைக் கழக மாணவர்கள் நுழைந்து ரகளை செய்து மாநாட்டை நிறுத்தினார்கள்
மூளை தன் கட்டுப்பாட்டுச் செய்திகளை நரம்புகள் வழியாக உச்சி முதல் உள்ளங்கால் வரை பரப்பிக் கொண்டிருக்கிறது . இது தவிர விண்வெளி கதிர்கள் மூலம் சில செய்திகள் மூளைக்கு வருவதாகவும் நம்பப்படுகிறது அதற்கு உதாரணம்தான் கனவுகள் என்றும் கருதப்படுகிறது.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : " மறுமை நாளில் நரகவாசிகளிலேயே மிகவும் இலேசாக வேதனை செய்யப்படுவர் ஒரு மனிதராவார் . அவரின் உள்ளங் கால்களின் நடுவில் நரக நெருப்புக் கங்கு வைக்கப்படும் அதனால் அவரின் மூளை கொதிக்கும் .
புகாரி : 6561
நுஅமான் இப்னு பஷீர் (ரலி) அவர்கள்

**Abdulmalik Malikulavi**
செருப்பு போடாதவனின் சாட்சியை ஏற்றுக்கொள்ளாதீர்( நபிமொழி) கருத்து : செருப்பு அணியாமல் வெயிலில் நடந்தால் பாதத்தின் நரம்புக்களின் வழியே உஷ்ணம் தலைக்கிஏறி அதிலுள்ள மூளையை தாக்கு

**Abdulmalik Malikulavi**
உஷ்ணம் மூளையை தாக்கும் போது அந்த மனிதன் அந்த நேரத்தில் குழப்பத்தில் இருப்பான் தெளிவு இல்லாமல் குழப்பத்திலிப்பவனின் சாட்சியை எப்படி ஏற்கமுடியும் ?

விநோத மருத்துவங்கள் 7 ( பாகம் 2 )




"குழந்தை தலைவலி என்று அழுதது. அம்மாவின் மடியில் படுத்துக் கொண்டது . இறந்து போனது." _ இப்படி ஒரு வாசகம் பைபிளில் வரும் . அவ்வளவு கொடுமையானது தலைவலி .
உலக ஜனத்தொகையில் பாதி பேருக்கு தலைவலி வருகிறது ,
மூளைக்குள்ளேயும் .மூளையைச் சுற்றிலும் ஒரு நீரோட்டம் இருக்கிறது. மூளை அந்த நீரில்தான் மிதக்கிறது .அந்த நீரோட்டத்தை "செரிப்ரோஸ்பைனல் ஃப்ளுயிட் சர்க்குலேஷன் " என்று இதற்குப் பெயர். இந்த நீரின் அளவு அதிகமானாலும் குறைந்தாலும் தலைவலி வரும்.
தலையில் அடிபட்ட நோயாளிகளுக்கு மண்டை ஓட்டு எலும்பு முறிந்து மூளை சூழ் சவ்வு கிழிந்து அந்த நீர் வெளியேறி விடும் . இதனால் தலைவலி வரும் .
குட்டையான நிலைப்படி தலையில் தட்டி மண்டையோட்டில் காயம் ஏற்பட்டு சீழ் பிடித்து அதன் கிருமிகள் மண்டையோட்டில் புகுந்தாலும் தலைவலி வரும்.
மண்டையோட்டில் ஏற்படும் கட்டிகள் மூளைக்குள்ளே வரும் கட்டிகள் போன்றவைகளாலும் தலைவலி வரும் பெண்களின் மூளையில் வளரும் புற்றுநோய்க் கட்டிகளின் வீரியம் மாதவிடாய்க் காலங்களிலும் கருவுற்றிருக்கும் போதும் கடுமையாக அதிகரிக்கும் .
நேரத்திற்கு சாப்பிடாதது , தூங்க வேண்டிய சமயங்களில் விழித்திருப்பது , செவிப்பறை கிழியும்படியான சத்தம் , கண்ணை கூசும் படியான வெளிச்சம் , கண் லென்ஸ் இடம் நகர்ந்து இருப்பது ,நுணுக்கமான வேலைகளைத் செய்வது இவைகளாலும் தலவலி வரும் . துக்கம் அதனால் அழுகை இதனாலும் தலைவலி வரும்.
எட்டு வயதுக்கு முன்பாக வரும் தலைவலி கண் கோளாறு காரணமாகும் .
15-20 வயதில் வரும் தலைவலி சைனஸ் காரணமாகும்.
நடுத்தர வயதில் ரத்த அழுத்தம் , சிறுநீரகக் கோளாறுகள் போன்ற காரணங்களக் தலைவலி வரலாம் .
தலைவலிகளில் "கிங்" ஒற்றைத் தலைவலி ( migraine ) கண் முன் விந்தையான விசித்திரமான காட்சிகள் தெரியும் ,
லூயிஸ் கரோலுக்கு இத் தலைவலி வந்து விசித்திரமான காட்சிகள் தெரிய அதை அப்படியே வரைந்து "அதிசய உலகில் ஆலிஸ் (Alice in Wonderland ) என்ற குழந்தை களுக்குப் பிடித்தமான ஒரு நாவலையே எழுதிவிட்டார் . அடியேனும் அவ்வப்போது அவதிப்பட்டுள்ளேன் . காட்சிகள் எதுவும் தோன்றவில்லை ஆனால் விநோதமான கற்பனைகள் வந்திருக்கிறது .
மலச்சிக்கல் போன்ற காரணங்களால் கூட இத் தலைவலி வரும்.
ரோமாபுரியின் மன்னர் சீஸர் தமக்கு நீங்காத தலைவலி ஏற்பட்டிருப்பது குறித்து உமர்(ரலி) அவர்களிடம் கூற , அவர்கள் தொப்பி ஒன்றை தயாரித்து அவருக்கு அனுப்பினார்கள் அதனை அவர் தம் தலையில் அணியும்

பொழுதெல்லாம் தலைவலி நீங்கி விடும் இது குறித்து அவருக்கு ஆச்சர்யம் ஏற்பட்டது அந்தத் தொப்பியைப் பிரித்துப் பார்த்ததில் "பிஸ்மில்லாஹ் ஹிர்ரஹ்மானிர் ரஹீம் " என்று எழுதப்பட்டிருந்தது.

விநோத மருத்துவங்கள் 8




வியாதிகளுக்கும் மரணத்துக்கும் இணையானதா முதுமை ?

முன்னாள் அமெரிக்க அதிபரும் , ஹாலிவுட்டில் பிரபல நட்சத்திரமாக சாகசங்கள் செய்து மின்னியவருமான ரொனல்டு ரீகன் தன் கடைசி காலத்தில் TV யில் குளறிகுளறி பேட்டி கொடுத்தார்.

" இது என் வாழ்க்கையின் அஸ்தமன நேரம் .

அதாவது ரீகன் குறிப்பிட்டது தனக்கு வந்திருக்கும் "ஆல்ஷீமர்ஸ் டிஸீஸ் எனும் நோயைப் பற்றிதான். எவ்வளவு பெரிய Pதவி , எவ்வளவு. பெரிய சினிமா நட்சத்திர கதாநாயகன்.

உலக குத்துச்சண்டை வீரர் முகம்மது அலி எதிர் குத்துச்சண்டை வீரர்களை விநாடியின் சின்னப் பகுதிக்குள் வீழ்த்தி " நாக் அவுட் " செய்த அந்த கையினால் ஒரு சின்ன டார்ச் லைட்டை தூக்க முடியவில்லை. ஒரே ஒரு குத்தில் பவுண்ட் கணக்கில் சக்தியை வெளிப்படுத்தியவர் . ஆனால் இப்போ வாயில் எச்சில் ஒழுக , கை சீரான அசைவின்றி வெட்டி வெட்டி நகர ...... தவித்து அதிலேயே இறந்து போனார். அவரை தாக்கி இருந்த நோய் "பார்க்கின்ஸன்ஸ் டிஸீஸ் "

இதே அறிகுறிகளோடு இதே வியாதி போப்பாண்டவரான இரண்டாம் ஜான் பாலைத் தாக்கி இருந்தது .போப் , "எக்ஸ்ட்ராபிரமிடல் சிண்ட்ரோமால் பீடிக்கப்பட்டிருந்தது . பைபிளை ரொம்பவும் ஆராய்ந்தவர் . கிறிஸ்துவ பேறறிஞர் . வந்த நோயுக்கு பெயர் எதுவாக இருந்தால் என்ன ? நோயின் அ றிகுறி அதேதான் .

முதுமையின் காரணமாக மூளையில் இருக்கும் நரம்பு. செல்கள் அழிந்து போகும் போது பார்க்கன்ஸன்ஸ் டிஸீஸ் நோய் தாக்கி சிறு குழந்தைகள் போல் ஆகிவிடுகின்றனர்

"கற்ற கல்வி நெருப்பில் எரியாது , நீரில் கரையாது. திருட்டுப் போகாது " - என்ற Pழைய பாடல் ஒன்று உண்டு . நெருப்பும், நீரும் ,திருடனும் செய்ய முடியாத காரியத்தை "டிமென்ஷியா " செய்து விடும் , அறிஞர்களாகவும் , பேச்சாளர்களாகவும் , தலைவர்களாகவும், விளையாட்டு வீரர்களாகவும் , மல்யுத்த மாமன்னர்களாகவும் பிரகாசித்தவர்கள் கூட , டிமென்ஷியா தாக்கினால் அறிவற்ற , நினைவுத் திறனற்ற , சுயக் கட்டுப்பாடற்ற பரிதாப நிலைக்குப் போய் சின்ன குழந்தைகளாக மாறி விடுவதை காணமுடிகிறது. இதற்குக் காரணம் மூளை பாதிப்படைகிறது .

"...... ....... பின்னர் உங்களைச் சிசுக்களாக வெளிப்படுத்தி நீங்கள் உங்கள் வாலிபத்தை அடையும்படிச் செய்கிறோம். இதற்கிடையில் இறந்து விடுபவர்களும் உங்களில் பலர் இருக்கின்றனர் (அல்லது வாழ்ந்து ) அனைத்தையும் அறிந்த பின்னர் ஒன்றுமே அறியாதவர்களைப் போல் ஆகிவிடக் கூடிய தள்ளாத வயது வரையில் விட்டு வைக்கப்படுபவர்களும் உங்களில் இருக்கின்றனர் ................."

திருக்குர்ஆன் : ( 22 : 05 )

விநோத மருத்துவங்கள் 9




எலும்புகளில் கொஞ்சம் வீக்கான எலும்பு அதாவது மெக்கானிக்கலாக பார்த்தால் முதுகெலும்புதான் அதாவது சுமார் ஐந்து கிலோ எடையை தாங்கும் விதமாகத்தான் வடிவமைக்கப்பட்டிருக்கிறது அதை விட அதிகமான எடையைத் தலை மீது ஏற்றும் போது .நாளடைவில் முதுகெலும்பு கடுமையாகப் பாதிக்கப்படுகிறது .

சீனா பெருஞ்சுவர் முதல் எகிப்திய பிரமிடுகள் வரை மனித சக்திகள் தார்மாறாக பயன்படுத்தப்படுத்தப் பட்டிருக்கிறது .அங்கெல்லாம் தலைச்சுமையாக கற்களை சுமந்து செல்ல அடிமைகளைப் பயன்படுத்தி இருக்கிறார்கள்.

கிராமங்களில் ஐம்பது கிலோ எடையை சாதாரணமாக, தலைச்சுமையாக சுமந்து செல்கிறார்கள் கிராமத்துப் பெண்கள் 25 கிலோ எடையுள்ள தண்ணீர் குடங்களில் ஒன்றை தலையிலும், இன்னொன்றை இடுப்பிலும் சுமக்கிறார்களே என்ற கேள்வி வருகிறதல்லவா .......இந்த மாதிரி தலைச்சுமைகளால் முதுகெலும்பு கடுமையாகப் பாதிக்கப்படுகிறது இதனால் முகுது வலி தொல்லை வரலாம் .

காயங்களால் முதுகெலும்பு பாதிக்கப்படும் போது , கால்கள் இரண்டும் செயலிழந்து விடும். முதுகெலும்பின் உச்சியில், கழுத்து எலும்பு அடிபட்டால் கை, கால் எல்லாம் செயலிழந்து உதவாமல் போகும். சிறுநீர்,மோஷன் போன்றவற்றின் கட்டுப்பாடும் போய் விடும்

இளம்பிள்ளை வாதம் என்பது வைரஸ் என்னும் நுண்கிருமியின் தாக்கத்தால் வருவது. மூளையின் அடிப்பாகத்தையும் ஸ்பைனல் கார்டையும் தாக்குவதால் கால்களைக் கட்டுப்படுத்தும் நரம்புகளும் . தசைகளும் பாதிக்கப்பட்டு , அவை சுவாதீனம் இழந்து விடுகின்றன . இதற்கு வருமுன் தடுப்பு மருந்து இருக்கிறது . குழந்தைகளுக்குத் தவறாமல் கொடுத்து விட வேண்டும் . வந்த பின் குணப்படுத்துவது ரொம்பவும் கஷ்டம். ,

இந்த முதுகெலும்புக்குள்தான் ஸ்பைனல் கார்டு இருக்கிறது . தீப்பற்றிய சிகரெட் துண்டு ,முற்கள் உள்ளங்காலில் பட்டதும் வெடுக்கென்று தூக்குறோமே இதை "அனிச்ச செயல்கள் " என்கிறோம் ,

இந்த செயல்பாட்டிற்குரிய தீர்வை மூளை எடுத்து செல்படுத்துவது இல்லை காரணம் நொடிப்பொழுதில் செய்ய வேண்டிய வேலை எனவே இதை ஸ்பைனல் கார்டிலிருந்தே ஆணைகள் பிறப்பிக்கப்படுகின்றன.

" (நபியே) உங்களது இறைவன் மலக்குகளை நோக்கி . " நிச்சயமாக நான் உங்களுடன் இருக்கிறேன். ஆகவே நீங்கள் நம்பிக்கையாளர்களை உறுதிப்படுத்துங்கள் .நிராகரிப்பவர்களுடைய உள்ளங்களில் நாம் திகிலை உண்டு பண்ணுவோம். (என்று கூறி நம்பிக்கையாளர்களை நோக்கி ) நீங்கள் அவர்களுடைய பிடரிகளின் மேல் வெட்டுங்கள் .அவர்களை கணுக்கணுவாகத் துண்டித்து விடுங்கள்.. " என்று அறிவித்ததை நினைத்துப் பாருங்கள்

திருக்குர்ஆன் : 8 : 12

விநோத மருத்துவங்கள் 10



தலையில் அடிபட்டவர்களை கிளாஸ்கோ கோமா ஸ்கேல் (Glasgow coma scale) என்கிற அளவையின் மூலம் அளக்கப்படும்
தலையில் அடிபட்டு கயநினைவில்லாமல் சேர்க்கப்படும் நோயாளி முளையில் இருக்கும் ரத்தக் கட்டி (Blood clot) அகற்றப்பட்டவுடன் குணமாகிப் பேசிய நிகழ்வுகளும் உண்டு.
இதற்கு எதிர்மறையாக "டாக்டர் ஆக்ஸிடெண்டில் என் தலையில் அடிபட்டுடுச்சு" என்று வந்து நிற்கும் ஆள்... ஆஸ்பத்திரியில் அட்மிட் பண்ணும் போது . "வீட்டுல போய்ச் சொல்லிட்டு வாரேன்" என்று நார்மலாகப் பேசிக் கொண்டிருககும் போதே அப்படியே சரிந்து விழுந்து இறந்த போன சம்பவமுண்டு .
சேமூர் கிரே பற்றி உங்களுக்குத் தெரியுமா ?
சொல்றேன். நமக்கெல்லாம் "சூப்பர் கம்ப்யூட்டர் " என்கிற அற்புதமானதை தந்து விட்டு போனவர்.
ஆரம்பத்தில் ஒரு ரூமையே அடைத்துக் கொண்டு இருந்த கம்ப்யூட்டர்கள் "லேப் டாப் " என்கிற கைப் பெட்டி சைஸுக்கு வர காரணமானவர் சேமூர் கிரே
கம்ப்யூட்டர் தொழில் நுட்பத்தில் உலகில் மிக தலை சிறந்த IBM கம்ப்யூட்டரை விடவும் வேகமான கம்ப்யூட்டரை கிரே வடிவமைத்ததும் , IBM நிறுவனத்தின் தலைவர் "ஒரு பியூன் உட்பட வெறும் 34 பேரை மட்டும் வைத்துக் கொண்டு கிரே சாதித்ததை இவ்வளவு பெரிய பிரமாண்ட நிறுவனமான நம்மால் ஏன் செய்ய முடியவில்லை" என்று கேட்டு தன் ஊழியர்கள் அத்தனை பேருக்கும் மெமோ கொடுத்தாராம்.
எல்லோராலும் கிரே வாக முடியுமா ?
கம்ப்யூட்டர் மூலமாக அதி வேகத்தில் செல்கிற ஒரு கார் விபத்துக்குள்ளானாலும் அதில் பயணம் செய்ப்வரின் உயிருக்கு ஆபத்து நேராதபடி காப்பது எப்படி என்று திட்டமிட்டார் .
தனது காரின் முன் புறத்தில் பின்புறத்தில் பக்கவாட்டில் என்று எல்லா பாகங்களிலும் ஆக்ஸிடெண்ட் ப்ரூஃப் சாதனங்களை கம்ப்யூட்டரின் கட்டுப்பாட்டில் அமைத்த கிரே கவனிக்க தவறியது காரின் மேல் பாகத்தை .
இரு கார்களுக்கு இடையில் சிக்கி கிரேயின் கார் நசுங்கிய போது , காரின் டாப் குவிந்து வந்து கிரேயின் தலையில் அடித்தது. தலைக் காயத்தால் இறந்து போனார் கிரே . ச்சே ...
"அடடே, டாப்பு மறந்து போச்சே"
"யாதொரு ஆத்மாவும் அல்லாஹ்வின் அனுமதியின்றி இறப்பதில்லை இது நிர்ணயிக்கப்பட்ட விதியாகும் .
திருக்குர்ஆன் 3 : 145

ஜீவ மருத்துவம் 1



நிறைய நண்பர்கள் ஆர்வப்பட்டு இதை எழுதச் சொன்னார்கள்
விலங்குகள் , பறவைகள் , ஊர்வனங்கள் , புழு , பூச்சிகள் வரையுள்ள அத்தனை ஜீவராசிகளைப் பயன்படுத்தி மருந்துகள் தயார் செய்து நோயைக் குணப்படுத்துகிறார்கள் . நூற்றுக்கும் மேலான ஜீவராசிகளைப் பயன்படுத்தி மருத்துவம் சொல்லப்பட்டிருக்கிறது .இதில் நமக்கு இலேகுவாக கிடைக்கக்கூடிய ஜீவ மருத்துவத்தை மட்டும் சொல்கிறேன்

சித்த ,ஆயுர்வேதம் , யூனானி , அலோபதி (ஆங்கில மருத்துவம்) மற்றும் சீன , கொரியா மருத்துவங்கள் அத்தனைலும் ஜீவ மருந்துகள் பயன்படுத்தப்படுகிறது.
எனக்கு கிடைத்திருக்கும் கிதாபுகள் அரபி தமிழ் கிதாபுகளிலிருந்து மொழியாக்கம் செய்யப்பட்டு பழங்கால தமிழ் சொற்றொடர்கள் அதிகம் அதிகம் பயன்படுத்தப்பட்டிருக்கிறது .எனக்கு நல்ல தெரிந்த வார்த்தைகளை சொல்கிறேன் எனக்குப் புரியாத பழங்கால தமிழ் வார்த்தைகளை கிதாபுகளில் உள்ளவாறு அப்ப்டியே கொடுத்து விடுகிறேன்.
உதாரணத்திற்கு.
யானையின் காதிலுள்ள ஊத்தையை யாதொருவனுக்கு குடிப்பி வித்தால் ஏழு நாளைக்கு நித்திரையை விட்டும் விழிக்க மாட்டான் .
யானையின் பித்தை வெண்குஷ்டத்தில் பூசி 3 நாளைக்கு விட்டு வைத்தால் அதை போக்கு விடும் .
அதன் எலும்பை குழந்தைகளின் கழுத்தில் கட்டினால் முஷல் வலியை விலக்கும்
அதன் தந்தத்தை ஏதொரு மரத்தின் பேரில் கட்டப்பட்டால் அவ்வருடத்தில் காய்விடாது.
தந்தத்தை உரைத்து ஏழு நாளைக்கு மலடியான பெண் பிள்ளை குடித்து பின்பு ஜிமாஉ செய்தாளானால் கெர்ப்பமாவாள் .
அதன் மூத்திரத்தை யாதொரு பெண் பிள்ளை குடிதது பின் ஜிமாஉ செய்யப்படுவாளே யானால் கெர்ப்பமாவாள் .
இன்ஷா அல்லாஹ் "
இந்த மாதிரி தமிழ் வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டுள்ளது . முடிந்தவரை நல்ல தெரிந்த தமிழ் வார்த்தைகளை பயன்படுத்துகிறேன் அர்த்தம் புரியாத வார்த்தைகளை அப்படியே சொல்லி விடுகிறேன் இன்ஷா அல்லாஹ்

## ஜீவ மருத்துவம் 2



பாம்பின் விஷத்திலிருந்து எடுக்கப்படும் ஸீரம் பாம்புக்கடிக்கு மாற்று மருந்து .
பாம்பின் விஷத்திலிருந்து தயாரித்த "ரிஸர்பின் " போன்ற மருந்துகள் ரத்த அழுத்தத்தைக் கட்டுபடுத்த உதவும்.
ஒவ்வொரு முறையும் ஒரு சில துளிகள் மட்டும் கிடைப்பதால் எடை க்கு எடை தங்கத்தை விட விலை அதிகம் .
நல்ல பாம்பின் விஷம் " ந்யூரோ பாக்ஸின் " வகைப்பட்டது ..
கட்டு விரியனின் விஷத்தில் "ஹீமோ டாக்ஸின் " உள்ளது ஹார்ட் அட்டாக், ஸ்ட்ரோக் போன்றவற்றுக்கு பாம்பு விஷம் உகந்தது .
அளவுக்கு அதிகமானால் அமிர்தமும் நஞ்சு. இது பழமொழி
அளவில் குறைந்தால் நஞ்சும் அமிர்தமாகும் - - இது மருத்துவ மொழி .
"உம் கைத்தடியைக் கீழே எறியும் "(அவ்வாறே மூஸா அதை எறியவும்) அது பாம்பு போல் நெளிந்ததை அவர் கண்ட பொழுது , திரும்பிப் பார்க்காது (அதனை விட்டு) ஒடலானார் ; "மூஸாவே ... பயப்படாதீர் நிச்சயமாக (என்) தூதர்கள் என்னிடத்தில் பயப்பட மாட்டார்கள்"
திருக்குர்ஆன் 27 : 10
மேற்கண்ட இறை வசனத்திற்கு மருத்துவ ரீதியில் அணுகினால் விளக்கம் மருத்துவ மாகவே படுகிறது.
அல்லாஹ்வே மிகவும் அறிந்தவன்.

ஜீவ மருத்துவம் 3



ஒட்டகம் பத்தினி தனமுடையது தன் தாய்யையும் தன் சகோதரியையும் அது புணராது .
அதற்கு பித்தில்லை. இதனால் தாகத்தை மிகுதியாக தாங்கிக் கொள்ள முடிகிறது .
அதன் ஈரலில் பித்தைப் போல் ஒரு வஸ்து உண்டு. அதைக் கண்ணில் தீட்டினால் கண்ணிருளைப் போக்கி விடும்.
ஒட்டக கறி சாப்பிட்டால் ஒலு முறிந்து விடும் தொழுவதாக இருந்தால் மறுபடியும் ஒலு செய்ய வேண்டும் . இது ஏன் என்பது பற்றி ஆலிம்கள் விபரம் சொல்வார்கள் என நினைக்கிறேன். மற்றபடி ஆடு மாடு இறைச்சிக்கு இந்த சட்டம் இல்லை .
ஒட்டகையின் இறைச்சியைத் தின்றால் தாதை எழுப்பி வைக்கும் .
இரத்தம் கசியும் இடத்தில் அதன் முடியை கரித்து தூவினால் இரத்தம் நின்று விடும்
ஆண் ஒட்டகத்தின் மூத்திரத்தை லாகிரி கொண்டவன் குடித்தால் அப்பவே தெளிச்சல் பெறுவான் .
கெண்டை காலின் மூளையை பஞ்சில் எடுத்து வைத்து மாதவிடாய் முடிந்து துப்புறவான பின் மூன்று நாளைக்கு அபத்துள் ( பெண் குறியினுள் ) வைத்திருந்து பின்பு ஜீமாஉ (உடலுறவு) கொண்டால், மலடியாக இருந்தாலும் கர்ப்பம் உண்டாகும்.
உகல் அல்லது உரைனா கோத்திரத்திலிருந்து சிலர் மதீனாவிற்கு வந்திருந்தனர் .மதீனாவின் சீதோஷ்ண நிலை அவர்களுக்கு ஒத்துக்கொள்ளவில்லை .எனவே ஒட்டகத்தின் பாலையும் அதன் சிறுநீரையும் அருந்துமாறு அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள் உடனே அவர்கள் அதன் மூலம் நோயிலிருந்து நிவாரணம் அடைந்தனர்
ஸஹில் புகாரி 233

ஜீவ மருத்துவம் 4



- பசுவின் கொழுப்பை சிவந்த அரிதாரத்துடன் வீட்டில புகைத்தால் (புகைப் போட்டால்) பாம்பு தேளு விஷ ஜந்துகள் போய் விடும்.
- அதன் தலைக் கொம்பை நுணுக்கி வஜீபனத்தில் சேர்த்துக் கொண்டால் நாள் முறை வைத்து வரும் காய்ச்சல் தீரும் . அதைக் குடித்தால் தாதை எழுப்பும் .
அதன் இரத்தம் ஓடுகிற இரத்தத்தை நிறுத்தும் .
அதன் பித்தும் வெங்காயத் தண்ணீரும் கூட்டி மூல முலையில் (பைல்ஸ்) தடவினால் அதை குணமாக்கும் .
அதைத் திரேகத்திலுள்ள கரும்புள்ளிகளில் தேய்த்தால் அதை நீக்கும் .
அதைத் தேனுடன் கலந்து கண்களில் அஞ்சனமீட்டால் கண்ணிருளை நீக்கும் .
அதனுடன் தேனும், பொரி காரமும் ,
குமுட்க்காய் சதையும் கூட்டி அண்டியில் ( கழிவிடத்தில்) தேய்த்தால் குணமாகும் .
கறுத்தபசுவின் பித்தைக் கொண்டு கண்ணில் அஞ்சனமீட்டால் அது பார்வையைக் கூர்மையாக்கும்.

பசுவின் கண்ணைக் களைந்து அந்தக் கண்ணிலுள்ள தண்ணீரைக் கொண்டு கடிதத்தில் எழுதினால் பகலில் எழுத்து வெளியாகாது . இரவில் வாசிக்கலாம் .
பசுவின் முடிகளைக் கரித்துக் குடித்தால் , பல் வலியை குணப்படுத்தும்
இரும்பு ஆணியை நெருப்பில் பழுக்கக் காய்ச்சி கறந்த பாலில் புகுத்தி காலை வெறும் வயிற்றில் 3 நாட்கள் குடித்தால் முகத்திலுள்ள மஞ்சணிப்பை குணப்படுத்தும் .
பசுவின் வெண்ணெயை குழந்தைகளின் ஈறுகளில் தேய்த்தால் பல் முளைக்கும் .
காளை மாட்டின் விதையை கரித்து தின்றால் ஜிமாஉ மிகுதமாக்கி வைக்கும் .
அதன் கோஷத்தை (ஆண் குறியை) உலர்த்திப் பொடித்து சூரணித்து ஒரு திர்ஹத்திடை உட்கொண்டால் இயலாத கிழவனை கன்னிஸ்திரீயைக் கன்னியழிவிக்கச் செய்யும் போகத்தை அதிகமாக்கி வைக்கும் .மற்றும் அதில் புதுமை காண்பான்
(கிதாபிலுள்ள வார்த்தைகளை அப்படியே அச்சு பிசகாமல் தந்து இருக்கிறேன் )
காளை மாட்டின் மூத்திரத்தின் ஈர மண்ணை எடுத்து தன்னுடைய கோஷத்தில் பூசி பின் புணர்ந்தால் தாதை எழுப்பி வைக்கும் .
அதன் ஊத்தாம் பெட்டியை உலர்த்தி பொடித்து சிர்க்காவும் , குளிர்ந்த தண்ணீரும் கூட்டி விருப்பில் ( படுக்கையில்) மூத்திரம் பேய்கிறனுக்குக் குடிப்பாட்டினால் (குடி) குணமாகும் .
........." (நீங்கள் மாட்டை அறுத்து ) அதில் ஒரு பாகத்தை (நாக்கு) க் கொண்டு ( கொலையுண்ட ) அவனை அடியுங்கள் " என நாம் கூறினோம். (அவ்வாறு அடித்தவுடன் இறந்தவன் உயிர் பெற்றெழுந்து கொலையாளியை அறிவித்தான் . .......
இது விஷயம் அல்லாஹ்வே அறிவான்
திருக்குர்ஆன் 2 : 73

ஜீவ மருத்துவம் 5



முயல் ஒரு வருடம் ஆணாகவும் ஒரு வருடம் பெண்ணாகவும் இருக்கும். ஆணாக இருக்கிற காலத்தில் பிள்ளையைக் கொடுக்கும். பெண்ணாக இருக்கிற காலத்தில் பிள்ளை உண்டாய் பெறும் ,
முயவின் கோஷம் இரு பகுப்பாய் இருக்கும் அதில் ஒரு பகுப்பு எலும்பாகவும் மற்றொரு பகுப்பு சவ்வாகவும் இருக்கும் .
முயல் ஒரு கண்ணை பொத்தியும், மற்ற கண்ணை திறந்தபடியும் தூங்கும் கண்ணி வைத்து பிடிப்பவன் ஏமாந்து போவான்.
முயலின் கறண்டைக்காலைக் கட்டியவனுக்கு சூனியம் , கண் திருஷ்டி அண்டாது
இரண்டு ஊகியத்து பசுவின் பாலில் இரண்ட ரிசியடை அதன் மூளை சேர்த்துக் குடித்தால் முடி நரைக்காது ,
ஆண் முயலின் கோறோஜனையை குடித்தவள் ஆண்பிள்ளை பெறுவாள் ,
பெண் முயலின் கோறோஜனையை குடித்தவள் பெண் பிள்ளை பெறுவாள்.
அதன் மூளையை இரண்டாசியிடை கர்ப்பூரத்துடன் மத்தித்து குடித்தவனை உவர்ந்தவர்களே அல்லாது, யாரும் காணார் . அது லோக வசியம் பெண் வசியமாம் .
(இது பற்றி விபரம் கேட்க வேண்டாம் எனக்குத் தெரியாது)
அதன் இரத்தத்தைக் குடித்தவள் கெர்ப்பமாள் . அதை தோலில் ஏற்பட்ட பத்துகளில் பூசினால் அது மறையும்
அதன் மூளையை தின்றும் அபத்தில் ( பெண் குறியில் ) தடவியும் புணர்ந்தால் கெர்ப்பம் உண்டாகும் .
அதன் பித்தை பசு நெய்யில் குழைத்து முலைப்பாலில் மத்தித்து கண்ணில் தீட்டினால் கண்ணிலுள்ள வெள்ளையைப் போக்கி விடும்.
அதன் இறைச்சி அடிக்கடி உண்டால் விரிப்பில் மூத்திரம் போவதைக் குணமாக்கும்
வரி முயலுடைய கொழுப்பை உடலில் தேய்த்துக் கொண்டால், நாய் விலகி ஓடும் ,
வரி முயவின் தோல் மற்றும் எலும்பை வைத்துக் கொண்டால் நாய் குரைக்காது .
வரி முயலின் இரத்தம் குடித்தால் வஸ்வாசு என்கிற மன ஊசலாட்டத்தைப் போக்கும்.
நசல் கொண்ட குழந்தைக்கு அதன் பிடரி முடியை 7 நாள் புகை பிடித்தால் நோய் நீக்கும் ,
முயலின் பித்தை கண்ணில் மஞ்சனமிட்டால் கண்ணிருளையும் , நீர் வடிதலையும் போக்கும் பார்வை கூர்மையாக்கும் .

**Rahmath Rajakumaran**
முள்ளம் பன்றியின் ஆச்சரியமான செய்தி : அதற்கு மாதவிலக்கு வரும் என்பது மட்டும் அல்ல , அதுவே ஒரு வருடம் ஆணாகவும் , மறு வருடம் பெண்ணாகவும் மாறிக் கொள்ளும்
ஹஜரத் அபுஸ்ஸுஊத் (ரலி)
ஆதாரம் : குதூரி ஓரக் குறிப்பு பக்கம் 227 )

தொடரவா ?
ஜீவ மருத்துவம் தொடர் விஷயமாக சில நண்பர்கள் குறைபட்டுக் கொள்கிறார்கள் தவறான தகவல்கள் , ஊர்ஜிதம் இல்லாத அறிவியல் சித்தாந்தங்கள், அர்த்தம் புரியாத பழந்தமிழ் சொற்கள் , மனதை சங்கடப் படுத்தும் சல்லாப மருத்துவங்கள் இவைகளைக் கொண்டு இத் தொடர் தொடர வேண்டுமா ? கேட்கிறார்கள் சிலர் .
பொதுவாக எல்லா மருத்துவமும் நான் ஆய்வு செய்த வரை அநேக நோய்களுக்கு மருந்து கண்டுபிடித்தாலும் , சல்லாபத்திற்கும் தனி முக்கியத்துவம் கொடுக்கிறது ,
காரணம் , ஆதி கால அரசர்களுக்கு பல மனைவிகளும் , அழகு அடிமைப் பெண்களும் அந்தப் புறத்தில் அதிக அதிகமாக இருந்தனர் . அத்தனை அழகிலும் அரசர் சொக்க நினைத்தார் . இதனால் சல்லாப மருந்தும் , ஊக்க மருந்தும் அதற்கேற்ற உணவு வகைகளும் அரசர்களுக்குத் தேவைப்பட்டது .
எப்படி அரசபையில் கவிஞர்கள் இருந்தார்களோ , அதேப்போல் அரச மருத்துவர்களும் இருந்தார்கள் இவர்களுக்கு ஒரே வேலை அரசர் வேட்டையாடி கொண்டு வந்த மிருகங்களிலிருந்து உணவும், சல்லாப மருந்தும் தயாரிப்பதிலேயே காலமெல்லாம் முழ்கி இருந்தனர் . ஆகையால் ஜீவ மருத்துவத்தில் அதிகமாக அது பற்றி பேசப்படுகிறது ,
சரி ,நவீன விஞ்ஞான காலத்தில் கூட சல்லாப மருநதுகளுக்கு சரிநிகர் அஸ்தஸ்து கொடுக்கப்படுகிறது. "வயாகாரா " என்ற ஒன்றை சொற்றொடர் வையகத்தையே எழுப்பி வைத்தது நாமறிந்த சேதி .இப்படி இருக்க ஜீவ மருத்துவ தொடரிலும் இச்சை மருத்துவத்திற்கு இடம் அதிகம் இருப்பதை தவிர்க்க இயவில்லை .
இத்தனையும் உள்ளடக்கிய இத் தொடர் தொடரவா ...... என்பது பற்றி நீங்கள்தான் சொல்ல வேண்டும் .

வித்தியாசமான முற்றிலும் வேறுபட்ட
ஜீவ மருத்துவம் என்பதை இப்போதுதான் விளங்கிக் கொண்டேன் .
ஜீவ மருத்துவத்தில் சில செயல்பாடுகள் உடம்போடு சம்மந்தப்பட்டு நோயை நேரடியாக குணப்படுத்தும் . சில செயல்பாடுகள் நோயாளியின் ஆத்மாவோடு செயல்படுத்தும் இதை "தல்சுமாத் "என்னும் அஸ்மா வேலை (இதில் நம்பிக்கை இல்லாத நண்பர்கள் என் பழைய அறிவியல் கட்டுரைகளை படித்து ஆனந்தம் கொள்க உங்களது பின்னூட்டங்கள் இங்கு மட்டும் தேவை இல்லாதது ) என்று நேற்று மாலையில் இருந்து இன்று காலை வரை இது சம்பந்தப்பட்ட துறையை சேர்ந்த வல்லுநர்களிடம் இதில் நிபுணத்துவம் வாய்ந்த தொலை தூரத்தில் உள்ள சில பெரியவர்களிடம் செல்போனில் தொடர்பு கொண்டும் அவர்கள் பேசுவதை செல் வீடியோ மூலமும் ஓரளவு தெரிந்தும் கொண்டேன் (கிணறு வெட்ட பூதம் கிளம்பிய கதையாகி விட்டது )
இதில் மெஸ்மெரிஸம் , ஹிப்னாடிஸம், நோக்கு வர்மம் , போன்ற கலைகள் எல்லாம் அடங்கியதுதான் இந்த ஜீவ மருத்துவம் , இதை நான் மேலோட்டமாக கிதாபுகளையும் வலை தளத்தையும் பார்வையிட்டு சொல்ல ஆரம்பித்து விட்டேன் . ஒவ்வொரு ஜீவனின் உயிரோடும் ஆத்மாவோடும் சம்பந்தப்பட்ட விஷயம் என்பதை நேற்றிரவுதான் தெரிந்து கொண்டேன் . (எலியாக இருந்தாலும் கேட்டு தான் அறுக்க வேண்டும் தெரிகிறதா ...... கண்டிப்பான அந்தக் கனத்த குரல் இன்னும் காதில் ஒலிக்கிறது) மெய்சிலிர்த்து போனேன். கூடவே பயந்தும் போனேன் .
இதனால்தான் அநேக ஜீவ மருத்துவம் அறிவியலுக்கும் நம் பகுத்தறிவுக்கும் புறம்பாக இருந்திருக்கிறது . இதை எழுதுவதற்கும், பேசுவதற்கும் கூட இத்துறை நிபுணத்துவர் ஒப்புதல் (இஜ்ஜாத்) வேண்டும் என்பதையும் வலியுறுத்தினார்கள் .
கேட்டிருக்கிறேன் . இதுவரை எழுதியுள்ள எல்லா கட்டுரைகளையும் பார்வையிட்டு பின் ஒப்புதல் இன்ஷா அல்லாஹ் தருவார்கள் என்று இன்று இரவு வரை நம்புகிறேன் . அதுவரை ஜீவ மருத்துவம் தடங்கலுக்கு வருந்துகிறது ,

ஜீவ மருத்துவம் 6
27-07-2017



நகர்த்த முடியாத பெரிய கண்களையும் அகன்ற stereoscopic பார்வையும் கொண்டவை.
இந்த அமைப்பினால் மிக குறைந்த வெளிச்சத்தில் கூட எலியைக் கண்டு பிடிக்க உதவுகிறது. எலி நகர்ந்தால் 359° டிகிரி தன் தலையை இடம் வலமாக திருப்பிக் பார்க்க முடியும் .
ஆந்தையை அறுத்தால் ஒரு கண் மூடியும் மற்றொரு கண் திறந்தும் இருக்கும் .
திறந்த கண்ணை மோதிர வட்டின் கீழே தனித்து வைத்தவன் அது இருக்கும் அளவுக்கு உறங்க மாட்டான் மூடிய கண்ணை இதேப்போல் செய்தால் உறங்கிக் கொண்டே இருப்பான்.
இதை அறிய வேண்டுமானால் கண்களை தண்ணீரில் போட்டால் விழித்த கண் மிதக்கும் , மூடிய கண் தண்ணீரில் மூழ்கும் .
இதன் கல்பை (இதயத்தை ) உறங்குகிறவளின் இடது கையில் வைத்தால், அன்றைக்கு அவள் செய்ததெல்லாம் மொழிவாள் .ஆனால் அவள் அறிய மாட்டாள் .
அதன் பித்தை கண்ணில் தீட்டினால் கண் இருளைப் போக்கும் .
பெண் ஆந்தையின் கல்பை எடுத்து ஓநாயின் தோலில் பொதிந்து கெண்டைக் காலில் கட்டிக் கொண்டால் கள்ளர்களை விட்டும் விஷ ஜந்துக்களை விட்டும் அச்சம் தீர்வான் .
அதன் கொழுப்பை உருக்கி கண்ணில் தீட்டினால் இரவில் யெத்தலத்தில் புகுந்தானோ அத்தலம் பிரகாசிக்கும் .
(இறந்தவரின் எலும்பு ஆந்தையாக மாறிப் பறப்பதாக கருதும் ) ஆந்தையைப் பற்றிய நம்பிக்கை உண்மை அல்ல, என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்
புகாரி 5770 - அபூஹுரைரா

ஏன் மாமரத்தில் மாங்காய்தான் காய்க்க வேண்டுமா ? தேங்காய் காய்க்கக் கூடாதா ?
கோழி ஏன் குட்டி போடுவது இல்லை ? பூனை ஏன் முட்டை போடுவதில்லை ? பாம்புகளுக்கு ஏன் கால்கள் இல்லை ? பல்லிகளுக்கு ஏன் பறக்க இறக்கை இல்லை ? குதிரைக்கு ஏன் கொம்புகள் இல்லை ? யானைக்கு இருக்கிற தந்தம் பூனைக்கு ஏன் இல்லை ?
...... இவையெல்லாம் முட்டாள்தனமான கேள்விகளாக இருக்கலாம் . ஆனால் இவையெல்லாம் மரபியலின் மகத்தான மர்மங்கள் .
மரபியலைப் பற்றி ஞானம் வெகு காலத்துக்கு முன்பிருந்தே முன்னோர்களால் கையாண்டிருப்பதும் உண்மையே ,
இது தான் "மரபியல் " என்று தெரியாமலே .
மரபியல் குறித்து நபி (ஸல்) அவர்களிடம் கேள்வியாய் நிறைய நிறைய கேட்கப்பட்டிருக்கிறது .அதற்குரிய பதிலை ரொம்பவும் அழகாகவும் ,சிம்பிளாகவும் சொல்லி இருப்பதில் நவீன விஞ்ஞானத்தின் மரபியல் கோட்பாடுகளை ஆண்டாண்டு காலம் ஆய்வு செய்ததை விட நபி (ஸல்) அவர்களின் வாக்கு அதையும் விட மிகைத்திருந்தது .இதுதான் விண்ணை முட்டும் ஆச்சரியம்.
திருக்குர்ஆனில் பல இடங்களில் மரபியல் குறித்து இறைவன் பேசி இருப்பது இன்னும் ஒரு வற்றாத ஆச்சரியம் .
சொல்றேன். இன்ஷா அல்லாஹ் தொடரா சொல்றேன் . இந்த தொடருக்கு
"மரபியலின் மகத்தான மர்மங்கள் "

இது அதி நவீன விஞ்ஞானம் . நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வருகிற விஞ்ஞானம் . இன்னும் இது பற்றிய ஆயிரமாயிரம் ஆய்வுகள் உலகமெங்கும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இந்த ஆய்வின் எந்த முடிவுகளும் குர்ஆனேயோ , ஹதீஸையோ பொய்ப்பித்ததாக இல்லை .
ஆனால் இந்த் ஆய்வுகள் மூலம் வல்ல ரஹ்மானின் வல்லமையை மேன் மேலும் நம்மால் உணர்ந்து கொள்ள முடிகிறது என்பதை சுட்டிக் காட்டவே என் சிற்றறிவுக்கு உட்பட்ட என் விஞ்ஞான ஆய்வை உங்களிடம் மிக எளிமையாக நிறைய உதாரணங்களோடு சொல்ல வருகிறேன் .இன்ஷா அல்லாஹ் ,

இது எனக்கான பதிவு



நண்பர் Meeran Mitheen மற்றும் நண்பர்

Kamaludeen Abu Bakar

என் பதிவுகளை புத்தமாக போடலாமே என்று "பிஸ்மில்லாஹ் இல்லாத தௌபா 2-ல் பின்னூட்டமாக கேட்டிருந்தார்கள் அவர்களுக்கு நானும் Reply பின்னூடத்தில் பதிலும் சொல்லி இருந்தேன் .அதுவும் மிகுந்த வருத்தத்தோடு .

இந்த நிகழ்வை சித்திரிககும் வகையில் ஒரு நாள் நான் படித்த ஒரு சம்பவம் என் ஞாபகத்திற்கு வந்தது .

ஒரு அடர்ந்த காடு . அதன் நடுவே சின்ன பொத்தையும் அதனுள் ஒரு குகை. குகையினுள் ஒரு ஞானி தியானித்துக் கொண்டிருக்க . அங்கு வந்த வேடர்கள் அவரின் முகத்தில் அளவற்ற மகிழ்ச்சியும் . எல்லையில்லா சந்தோஷத்தையும் பார்த்தனர்.

மெதுவாக ஞானியின் அருகில் போய் , " ஐயா பெரியவரே , உங்கள் முகம் மிக்க பொழிவோடும் , இத்தனை சந்தோஷமாக இருப்பதற்குரிய காரணத்தைத் தெரிந்து கொள்ளலாமா ? என்று கேட்டனர் .

அதற்கு அந்த ஞானி ,

" நான் எப்போதும் இப்படித்தான் இருக்கிறேன் . எனக்கு எந்த மாற்றமும் தெரியவில்லையே" என்றார் ஞானி .

"நட்ட நடுக்காட்டில் ஒரு சின்ன குகையில் இருந்து கொண்டு எத்தனை சந்தோஷமாக இருக்கிறீர்கள் .... நாங்கள் ஊர் புறத்தில் மக்களோடு மக்களாய் எந்த வசதிக்கும் குறைவு இல்லாமல் இருக்கிறோம் .ஆனால் எங்களிடம் மகிழ்ச்சி இல்லை . கவலை இருக்கிறது . நீங்கள் எங்கிருந்து இத்தனை மகிழ்ச்சியும் பெறுகிறீர்கள் ? " என்று கேட்டனர்

"நான் இந்தக் குகைக்குள்தான் எனது சதா ஆனந்தத்தைப் பெறுகிறேன் . இதோ இதன் மூலையிலிருக்கும் சின்ன துளையைப் பார்த்தால் , எனது மகிழ்ச்சிக்கான காரணத்தை உணர முடியும் " என்றார் அந்த ஞானி .

அவர்கள் அந்தத் துளை வழியாகப் பார்த்தனர் . ஒரு மரக்கிளையைத் தவிர வேறு எதுவுமே தெரியவில்லையே " என்றனர் வேடர்கள் .

ஞானி மீண்டும் பார்க்கச் சொன்னார் .

"கொஞ்சம் கிளைகளும் கொஞ்சூண்டு வானமும் தெரிகின்றன " என்றனர் வேடர்கள் .

"அதுதான் . அதுதான் எனது சந்தோஷத்துக்குக் காரணம் - சொர்க்கத்தின் சிறுதுளி அது " என்றார் ஞானி .

வேடர்கள் நினைத்தார்கள் "குகைக்கு வெளியே எவ்வளவு பெரிய வானம் . எவ்வளவு பெரிய உலகம் " என்று எண்ணினார்கள் .

புற உலகம் பெரிசு சொர்கத்தை மறைக்கும் அளவிற்கு அது பெரிசு . இந்த குகைத் துளை ரொம்பவும் சின்னதுதான் . இந்த குகைத் துளைக்குள்தான் ஞானியின் சொர்க்கம் எட்டிப் பார்த்தது.

ஆனந்தம் மனிதனின் உள்ளார்ந்த இயற்கை ; அதை அடைய முடியாது : அதைக் கண்டறிவது மட்டுமே சாத்தியம் .

இது யாருக்கு புரியுதோ இல்லையோ மேற்சொன்ன நண்பர்கள் இருவருக்கும் புரிந்தால் சரி .

எனக்கு குகைத் துளையே போதுமானது .

இசை 1



இசையை ரசிப்பதன் மூலமோ உருவாக்குவதன் மூலமோ அதில் ஈடுபாடு காட்டுவது ஏற்புடையதல்ல என்றொரு கருத்து இஸ்லாமிய உலகில் இருக்கத்தான் செய்கிறது மறுக்கவில்லை
இறைவனிடமிருந்து மனிதனை இசை தூரமாக்கி விடுகிறது என்றும இறைச் சிந்தனையை அது மறக்கடிக்க வைத்து விடுகிறது என்றும் சொல்லப்படுகிறது
இசையில் ஒருவன் தன்னையே மறக்க நேரிடுவதால் அது தவிர்க்கப்பட வேண்டும் என்றும் வாதிடப்படுகிறது
இசை கூடாது என்றும் அழுத்தமாக சொல்பவர்கள் திருக்குர்ஆனில் இருந்தும் நபிமொழிகளிலிருந்தும ஆதாரங்கள் காட்டப்படுகிறது
இசை இறைவனுக்கு எதிரியாக இருக்க முடியுமா?
நான்கு வேதங்களில் ஒன்றான சபூர் வேதத்தை இசை வடிவில் அருளிய இறைவன் இசை உணர்வற்றவனாக இருப்பானா ? சொல்லுங்க
" மலைகளை நோக்கி நீங்கள் அவருடன் (தாவூத்) சேர்ந்து துதி செய்யுங்கள் என்று கட்டளை இட்டோம் அவ்வாறே பறவைகளுக்கும் கட்டளையிட்டோம்
. . . . . . . குர்ஆன் 34 : 10
என்று கூறி சபூர் வேதத்தை தாவூத் அலை அவர்கள் ஓத அதில் எல்லா ஜீவன்களும் திளைத்திருந்தன என்பதை அறிய முடிகிறது
நபிஸல் அவர்களுக்கு வஹி சில சமயம் மணியடிப்பது போலவும் தேனீ ரீங்காரமிடுவது போலவும் வந்திருப்பதாக ஹதீஸ்களின் மூலம் அறிகிறோம்
மணி சப்தமும் தேனீ ரீங்காரமும் இசை வடிவம்தானே .என்ன சொல்றீங்க ?

இசை 2




இந்தியா ஒரு மதச் சார்பற்ற நாடு அவரவர் தத்தம் மதங்களை பின்பற்றலாம் குர்ஆனில் கூட "உங்களுடைய மார்க்கம் உங்களுக்கு எஙகளுடைய மார்க்கம் எங்களுக்கு "
குர்ஆன் 109 : 06
இதன் அடிப்படையில் இந்திய இசைச் சூழலைப் பொறுத்தவரை கர்னாடக சங்கீதத்தின் வரலாற்றைப் பார்த்தால் தியாக ராஜரின் சாகித்ய கீர்த்தனைகள் அனைத்தும் இறைத் துதியாக இறைவனைப் புகழ்ந்து பாடுவதாகவே இருக்கின்றது
கிறிஸ்தவ தேவாலயங்களில் இறை சொற்பொழிவைக் காட்டிலும் இறை சங்கீதத்திற்கே முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது என்பதை அறிய முடிகிறது
திருக்குர்ஆனிலும்
" நபியே ! அந்நாளில் மலக்குகள் தங்கள் இறைவனைப் புகழ்ந்து துதி செய்த வண்ணம் அர்ஷை சூழ்ந்து நிற்பதை நீங்கள் காண்பீர்கள
குர்ஆன் 39 : 75
இறைவனை துதி செய்து பாடும் இசை எப்படி சாத்தானின் குரலாக இருக்க முடியும் ? நீங்கள் சொல்லுங்கள்
""கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்தக்குடி தமிழ்குடி " என்று நபி ஆதம் அலை அவர்கள் பேசிய மொழிக் கூட தமிழ்தான் என்று வாதிடும் நம் தமிழ் மொழி நீங்கள் நானும் பேசுவதும் தமிழ் மொழி மூன்று தமிழைக் கொண்டது அவை
இயல்
இசை
நாடகம் . . . இதில் இசையை விடுத்து தமிழ் மொழி வாழாது என்பதையும் நீங்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்

இசை 3



தொனி கூட்டி ஓதப்படும் கிராஅத்திலும் ஐந்து நேர பாங்கு ஒலியிலும் மனதை கிறங்க வைக்கும் இசை நாத லயம் இல்லையா ? சொல்லுங்கள்

" உங்களது குரல் வளம் பெற்றதாக இருந்தால் திருக்குர்ஆனை அழகான முறையில் ஓதுங்கள் என்று நபிஸல் கூறியதாக ஹதீஸகளின் மூலம் அறிகிறோம்
பாங்கோசை இனிமையாகவும் நல்ல அழுத்தமாக இருக்க வேண்டும் என்ற காரணத்தால் பிலால் ரலி அவர்களை நபிஸல் அவர்கள் பாங்கு சொல்லும் பணியில் அமர்த்தினார்கள் என்பதை வரலாற்றில் காண முடிகிறது
பொதுவாக ஆப்பிரிக்க மக்களால் உலக முழுவதும் இசையை கலையாகவும இசைக்கும கலைஞர்களாகவும் இருக்கிறார் உலகப் புகழ்பெற்ற ABBA , மைக்கேல் ஜாக்சன் போன்றவர்கள் தங்களின் குரல் தொனி இசைக்கு இசைந்ததாக இருந்தது
பிலால் ரலி அவர்கள் பாங்கு சொல்லும் போது "ஸூன்" என்கிற அரபி எழுத்து உச்சரிப்பு சரிவர அமையவில்லை என்றாலும் நபிஸல் அவர்களையே பாங்கு சொல்ல நியமித்தார்கள் என்றால் இனிமையான குரல் வளத்திற்காகத்தானே
யோசியுங்கள்

இசை 4



இசைக்கும் ரூஹ்விற்கும் சம்பந்தம் இருக்கிறதா என்று நண்பர்

Sulaiman Ibrahim

இசை 3 ல் கம்மாண்டில் கேட்டிருந்தார்

சொல்றேன் . இந்து சகோதர சமூகத்தில் பிணத்தை ஊர்வலமாக கொண்டு போகும் போது தாரை தப்பட்டையோடு சங்கும் ஊதுவார்கள்

சங்கு ஊதலின் ஓசையும் ஸூர் என்னும் கொம்புக் கருவியின் ஓசையும் ஏறத்தாழ ஒரே மாதிரியே இருக்கும்

உடம்பை விட்டு ரூஹ் பிரிந்ததும் சங்கு ஊதப்படுகிறது

மறுமையில் மீண்டும் ரூஹ்கை கொடுத்து எழுப்பப்படும் போது ஸூர் ஊதப்பட்டு எழுப்பப்படுவதாக திருக்குர்ஆனில் அல்லாஹ்

" ஸூர் ஊதப்பட்டதும் உடனே அவர்கள் சமாதிகளிலிருந்து வெளிப்பட்டு தங்களின் இறைவனிடம் விரைவார்கள் . . .

. . . . . குர்ஆன் 36 : 51

"ஸூர் ஊதப்படும் அந்நாளில் நீங்கள் அணியணியாக வருவீர்கள்

. . . . . குர்ஆன் 78 :18

குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் இயற்றிய திருப்பாடற்திரட்டில் உள்ள இசைச் சிறப்பு இதில் 22 கீர்த்தனைகள் இராக தாளக் குறிப்புடன் மேற்கோள் காட்டி கொடுத்துள்ளார்
தோடி ,,பைரவி, ஆனந்த பைரவி , புன்னாகவராளி ,
கல்யாணி, பரசு,பந்துவராளி, தன்னியாசி, சாவேரி, சௌராஷ்ட்டிரம் கேதாரகௌளம் , அசாவேரி, பியாகடை, செஞ்சுருட்டி, ஆகிரி, காம்போதி,அடாணா போன்ற பல்வேறு இராகங்களும் , சாப்பு, ஆதி, ரூபகம் , அடதாளம் போன்ற தாளங்களும் கையாளப்பட்டுள்ளன
கீர்த்தனைகள் ஒவ்வொன்றும் தனிச்சிறப்பு மிக்கவை
இசை நயம், சொல் நயம் , பொருள் நயம் அனைத்தும் மிகுதியாக காணப்படுகிறது
பல்வேறு பாடல்களில் நாதம் , கீதம் நாட்டியம்

(சூபி நடனம் ) போன்ற பல இசைக் கூறுகள் அமைந்துள்ளது
ஆதாரம் :குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்களில் இசைக் கூறுகள்
மு . சுபசிரி
இந்திய இசைத் துறை ஆய்வாளர் சென்னை பல்கலைக்கழகம்

ஸ்பெயினில் ஸர்யப் போன்ற பகழ் பெற்ற இசைக் கலைஞர்கள் இருந்தனர் ஃபரீத் அல் அத்ரஷ் மற்றும் அவருடைய சகோதரி அமல் ஆகியோர் பிரசித்த பெற்ற அரபு இசைக் கலைஞர்களாக இருந்தனர்
பந்தீர் , புஸூக், தர்பூகா, கிம்பி , கமஞ்சா, தே (புல்லாங்குழல் மாதிரி)
கனூன் (சந்தூர் மாதிரி )
ரபப் (வயலின் மாதிரி)
இதெல்லாம் அராபிய இசைக் கருவிகள் சிலவற்றின் பெயர்கள்

முகலாயர்கள் காலத்தில் புகழ் பெற்ற மார்க்க கல்வி நிறுவனமான "தர்ஸெ நிஸாமி" யில் திருக்குர்ஆன், ஹதீஸ்கள் தத்துவம் ,தர்க்கம், கணிதம், வான சாஸ்திரம் இவற்றோடு இசையும் பாடமாக வைக்கப்பட்டு இருந்தது அல்லாமா ஷிப்லி( ரஹ்) போன்றவர்கள் அங்கு படித்தவர்களே

வலசை " எனும் இடம் பெயர்வு 23-08-2017




"migration" என்பது பறவைகள் ,மிருகங்கள், மீன்கள் மற்றும் உயிரினங்கள் தாங்கள் வாழும் இடத்திலிருந்து வேறொருஇடத்திற்கு இடம் பெயர்வதைக் குறிக்கும் இதே வார்த்தைக்கு முன் 'E 'சேர்த்தால் "Emigration " வேற்று நாட்டு குடியேறுதல் என்று அர்த்தப்படும்
உயிரினங்களுக்கு தாங்கள் வாழும் இடங்களிலுள்ள இருப்பிட சிக்கல் , கடுமையான தட்பவெப்ப நிலை , உணவுப் பற்றாக்குறை , இது போன்ற பல காரணங்களால் புலம்பெயர்வு அவைகளுக்கு அவசியமாகிறது அதுவும் உயிரைப் பணயம் வைத்து உலகம் சுற்றி வருகிறது.
பருவ காலங்களை ஒட்டி இடம்பெயர்கிறது. உயிரினங்கள் வெப்ப நிலை வேறுபாட்டை உள்ளூர உணர்கின்றன .
பூமியின் காந்த விசையால் ஏற்படும் மாற்றங்களை உணர்கின்றன . நாம் செயற்கை கோள்களால் இயக்கப்படும் GPS கருவியை பயன்படுத்தி பாதைகளை அறிவது போல் கால வெளியிருந்து வரும் செய்திகளை தங்கள் உள் உணர்வால் கிரகிக்கின்றன . வலசை தொடர்கின்றன
பகல் பொழுதுகளில் சூரியன் , மலைகள் மற்றும் நீர் நிலைகள் இவற்றை அடையாளங்களாகவும் , இரவில் நட்சத்திரங்கள் , சந்திரன் அதன் இருப்பிட திசைகளையும் பறவைகள் உள் வாங்கிக் கொள்கின்றன .
" (பகலில் திசைகளை அறிவிக்கக் கூடிய மலைகள் போன்ற) அடையாளங் கொண்டும் (இரவில்) நட்சத்திரங்களைக் கொண்டும் (பயணிகள் ) தங்கள் வழியை அறிந்து கொள்கின்றனர் "
திருக்குர்ஆன் (16 : 16 )

மேற்கண்ட வசனம் மனிதர்களுக்கும் மட்டும் அன்றி பறவைகளின் வலசைக்கும் பொருந்துகிறது . இது வியப்பான விஷயமே .
பறவைகள் , விலங்குகள் குழுக்களாகச் செல்லும் போது அவற்றைக் கொன்று தின்னும் உயிரிகளிடம் இருந்து தன்னையும் தன் குஞ்சுகள் / குட்டிகளையும்
பாதுகாக்கப்படுகிறது . மேலும் இளம் குஞ்சுகளுக்கு பிறந்த கொஞ்ச நாளிலே மிகவும் தூரமான தொலைவு பறக்க நேரிடுவதால் , அவை உள்ளூர் வந்த பிறகு அடிக்கடி பறப்பதற்கு அது பெரிய தொரு பயிற்சி களமாக வலசை அமைந்து விடுகிறது .
பறவைகள் 12 வகையான வான்வழிகளைப் பயன்படுத்துகின்றன. இந்த வான் பாதைகள் பூமியின் தீர்கக ரேகை ,.அட்சய ரேகைகளைச் சார்ந்து இருக்கிறது என்பதை நுண்ணிய மின் அலை பரப்பியினைப் பொருத்தி அதிலிருந்து எழும் அலைகளைக் கொண்டு செயற்கை கோள்கள் வழியாக கிடைக்கப் பெற்று அந்தப் பறவை உள்ள இடம், பறக்கும் உயரம் , வேகம் போன்ற தகவல்களை கண்டறிந்ததில் மேலும் பல ஆச்சரியப்படும்படியான பல விஷயங்கள் ஆய்வுக்குள்ளாகி இருக்கிறது . இந்த ஆய்வு பூமியின் சுற்றுப்புறத்தின் தாக்கங்களை அறிந்து கொள்ள உதவும் என எதிர்ப்பார்க்கப்படுகிறது .
வலசை என்னும் இடம்பெயர்வு உயிரினங்களில் மட்டும் அல்ல ஆதிகாலத்திலேயே மனிதர்களிர்களிடம் இருந்திருக்கிறது அவர்களுக்குள்ளே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள் மற்றும் தட்பவெப்ப நிலை ,உணவு போன்ற புற காரணிகளையும் கொண்டும் வாழ்விடத்தை விட்டு வேறொரு இடத்திற்கு இடம்பெயர்வு நடந்திருக்கிறது
"உங்கள் இறை எண்ணியிருந்தால் மனிதர்கள் அனைவரையும் ஒரே வகுப்பினராக ஆக்கி இருப்பான் (அவ்வாறு அவன் நாடவில்லை ) அவர்கள் தங்களுக்குள் மாறுபட்டுக் கொண்டே இருப்பார்கள் "
திருக்குர்ஆன் (11 : 118 )
இதனால் இடம்பெயர்ந்தார்கள் .
இடம்பெயர்வு என்பது ரொம்ப சிரமானது வழிப் பயணம் மிகவும் ஆபத்தானது . இருந்தாலும் வலசை சென்றாக வேண்டும் மான்கள் ஆற்றைக் கடக்கும் போது முதலைகளால் உயிரிழக்கப்படலாம் .அவைகளின் எதிரிகள் மான்களை கண்காணித்துக் கொண்டே இருக்கும். இறைவனின் நாட்டத்தாலே மட்டுமே உயிர் பிழைக்க முடியும் .
எதிரிகளால் தாக்கப்படுவோம் என தெரிந்து மக்காவை விட்டு ஹிஜ்ரத் செய்த நபி (ஸல்) அவர்களும் தோழர் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களும் தௌர் குகையில் தங்கி இருக்கும் போது எதிரிகளால் சூழப்படுகிறார்கள் .
"நிச்சயமாக அல்லாஹ் அவருக்காக உதவி செய்தே இருக்கின்றான் குகையில் இருந்த இருவரில் ஒருவராக அவர் இருந்த போது (எதிரிகள் குழ்ந்த போது அவன் காப்பாற்றிய இருக்கின்றான் )......
திருக்குர்ஆன் ( 9 : 40 )
நபி (ஸல்) அவர்களின் மகளார் ஜைனப் (ரலி) அவர்கள் மக்கா விட்டு மதினாவிற்கு ஹிஜ்ரத் செய்த போது வழியிலே ஹப்பார் இப்னு அஸ்வத் என்பவன் கற்பகமாக இருந்த அவர்களின் வயிற்றில் ஈட்டி எரிந்து கொலை செய்தான் .
சகாராப் பகுதியில் கழுத்தில் அம்பு குத்தியும் சாகாத வெண் கொக்கு அந்த அம்புடனே நூற்றுக்கணக்கான கிமீ பறந்து வந்து ஜெர்மனியில் துப்பாக்கி குடு ஒன்றில் தப்பி அதே நபரின் அடுத்த குண்டில் பலியானது அந்த வெண்
கொக்கு . வலசையில் உயிர் பறிப்போனது .
வரலாற்றின் மிகப் பெரிய இடம்பெயர்வு நபி மூஸா( அலை ) அவர்கள் கொடியவன் பிர்அவ்னிடமிருந்து லட்சக்கணக்கான தம் இன மக்களைக் கூட்டிக் கொண்டு எகிப்தை விட்டு இடம்பெயர்வு செய்யும் போது பயணத்தின் வழியில் உள்ள ஆபத்தை குர்ஆனில்
"நீங்கள் என்னுடைய அடியார்களை அழைத்துக் கொண்டு இரவோடு இரவாக நடந்து ( சென்று) விடுங்கள் வழியில் குறுக்கிடும் கடலில் உங்களது தடியால் அடித்து உலர்ந்த வழியை ஏற்படுத்துங்கள்"
திருக்குர்ஆன் ( 20 : 77 )
எகிப்தில் இருந்து ஒரே ஒரு குடும்பம் இடம்பெயர்வு செய்தது அதுவும் பச்சயிளம் பாலகனோடு . நபி இப்ராஹீம் (அலை) இவர்கள் தன் மனவி ஹாஜராவுடன் யாருமற்ற வனாந்தர வெளியில் விட்டு விட்டு அவர்களின் பாதுகாப்பிற்காக இறைவனிடம் துஆ செய்கிறார்கள். குர்ஆன் (14 : 37 ) வசனம் பார்வையிடவும் .
.......... இப்படி குர்ஆன் அநேக வலசை என்னும் இடம்பெயர்வு பற்றி பேசுகிறது.
நமமில் நிறைய போருக்கு இடம்பெயர்வு என்னும் வலசை நடந்து கொண்டுதானே இருக்கிறது . அதில் அவனின் தன்னிகரற்ற வல்லமை வெளிப்பட்டிருப்பதை உங்களால் உணர்ந்து கொள்ள முடிகிறதா ?

கற்களின் உலகம்




பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் ஓர் அதிசயப் பொருள் போல் ஒரு கல்லைப் பாதுகாக்கிறார்கள் ஆப்பிரிக்காவில் உள்ள டான்சானியாவில் ஓல்டுவாய் கோர்ஜ் என்னும் பகுதியில் கையில் பிடித்துக் கொள்ளும் அளவிற்குச் சிறிய உருவக் கல். அது மனிதன் உருவாக்கிய முதல் ஆயுதம் .சாம்பலும் பச்சையும் கலந்த நிறம். இது ஆதி மனிதன் உருவாக்கிய முதல் கருவி இதன் வயது 10 லட்சம் வருஷத்திற்கும் மேல் . கம்ப்யூட்டர் காலத்தில் இது மாதிரி உருவாக்க ஒரு நிமிடம் போதும் ஆனால் அந்தக் காலத்தில் கருவிகள் எதுவும் இல்லாமல் அவர்கள் உருவாக்கிய முதல் கருவி இந்தக் கல் ஆயுதம் தான்.
புதிய சிந்தனைகள், புதிய கண்டு பிடிப்புகள் எல்லாமே இந்தக் கல்லில் இருந்துதான் தொடங்குகின்றன .உழைப்பின் முக்கியத்தை முதல் முறையாக மனிதன் உணர்ந் கொண்டது இந்தக் கல்லிடம் இருந்துதான் . தனித்தனியாக அல்ல. நாம் அனைவரும் ஒரே சமூகமாக ஒன்று சேர்ந்து உழைத்தால் நம் அனைவருக்கும் பலன் அதிகம் என்பதை இந்தக் கல் மனிதனுக்கு கற்றுத் தந்தது .
மேலும் இந்தக் கல் உருவாக்கும் போது தான் மனிதர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளும் வழக்கத்தையும் ஆரம்பித்திருக்க வேண்டும். கிண்டலடிக்கவும் , சண்டை போடவும் மகிழ்ச்சியை வெளிப்படுத்தவும் நட்பு கொள்ளவும் அவர்கள் கற்றுக் கொண்டது இந்தக் கல்லை உருவாக்கும் போது தான்
எனவே, கல்லுக்கு நாம் அனைவரும் நன்றி சொல்ல வேண்டும் .இந்தக் கல் இல்லாவிட்டால் கற்காலம் இல்லை. கற்காலம் இல்லாவிட்டால் இன்றைய நவீன காலமும் இல்லை .எனவே கல்லுக்கு நன்றி செலுத்துங்கள் என்கிறார்கள் விஞ்ஞானிகள். அட போங்க கல்லுக்கென்ன உயிரா இருக்கிறது ?
இருக்கிறது . அட , உயிர் இருக்கிறது . சொன்ன கேளுங்க .
"நாம் மலைகளை தாவூதுக்கு வசப்படுத்திக் கொடுத்தோம் . மாலையிலும் . காலையிலும் அவைகள் அவருடன் சேர்ந்து துதித்தன. "
குர்ஆன் ( 38 : 18 )
நபி ஸாலிஹ் (அலை) அவர்களின் ஒட்டகம் மலை ஈன்றெடுத்த ஒட்டகம் தானே ....? மலை ஒட்டகத்தை ஈன்றெடுக்குமா ? கேள்வியெல்லாம் கூடாது ,
நபி (ஸல்) அவர்களும் அபூபக்கர் சித்தீக் (ரலி) , உமர் (ரலி) , அலி (ரலி) இவர்கள் உஹது மலையின் மீது இருக்கும் போது உஹது மலை தளும்பியது உடனே
" உஹதே ... தளும்பாதே உன் மீது ஒரு நபியும் ,ஒரு சித்தீக்கும். இரண்டு ஷுஹதாக்களும் (இறைவழியில் உயிர் நீர்த்தவர் ) இருக்கும் போது நீ ஏன் தளும்புகிறாய் ? உடனே உஹது நிலைபெற்று நின்றது .
இஸ்ரவேலர்கள் ஒருவரை ஒருவர் பார்த்தப்படி நிர்வாணமாக குளிப்பது வழக்கம் .ஆனால் நபி மூஸா (அலை) அவர்கள் தனித்து நிர்வாணமாக குளிப்பதால் ."நபிக்கு விரை வீக்கம் இருக்கலாம் என்பதாக பேசிக் கொண்டனர்.
ஒரு சமயம் நபி மூஸா (அலை) அவர்கள் தன் ஆடையை கழற்றி ஒரு கல்லின் மீது வைத்து விட்டு நிர்வாணமாக குளிக்கச் சென்றார்கள் .உடனே அவர்களின் ஆடையோடு அந்தக் கல் ஓடி விட்டது மூஸா (அலை) அந்தக் கல்லைத் தொடர்ந்து " கல்லே ... என்னுடைய ஆடை என்று சப்தமிட்டு பின் தொடர்ந்து ஓட , அப்போது அவரின் மர்ம ஸ்தானத்தை இஸ்ரவேலர்கள் பார்த்து விட்டு , "மூஸாவிறகு எந்தக் குறையுமில்லை " என்றனர் . புகாரி 278
'பாறையின் மீது அமர்ந்திருக்கும் ஒருவனின் மன நிலை எப்படி இருக்கிறது என்பதை. அந்தப் பாறைக் கல் அறிந்து கொள்கிறது "
" அபூபக்கர் (ரலி) அவர்கள் வீட்டின் சுவற்றில் பதித்த கல் ஒன்று நான் நபியாவதற்கு முன்பே எனக்கு ஸலாம் சொன்னது "
சின்ன கூழாங் கற்கள் திக்ரு செய்கிறது என்பதாக நபி (ஸல்) அவற்றை கையில் எடுத்ததும் கல் திக்ரு செய்வதை நபித் தோழர்களும் கேட்டனர்.

நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் ஸஜ்தா செய்ய குனியும் போது.அபூஜஹ்ல் பெரிய கல்லை தூக்கி நபி அவர்களின் தலையில் போட எத்தனித்தபோது அக் கல் அவனது கையோடு ஒட்டிக் கொண்டது . ரொம்ப சிரமத்துடன் கையில் இருந்து வீசினான்
அவனின் குறைஷித் தோழர்கள் இது பற்றி விசாரித்த போது . " மிகப் பெரிய ஆண் வாலிப ஒட்டகம் ஒன்று அக்கல்லில் தென்பட்டது . அதனுடைய தலையைப் போல் அதனுடைய கோரைப் பற்கள் போல் வேறெந்த ஒட்டகத்தையும் நான் பார்க்கவில்லை. அது என்னை கடிக்க வந்தது என்றான்
இது பற்றி நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம் , "அப்படி அந்தக் கல்லில் தோற்றமளித்தவர் வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் ஆவார்கள். அவன் நெருங்கி இருந்தால் , அவர் அவனைக் கொன்றிருப்பார் .
கல் துதி செய்கிறது , ஈன்றெடுக்கிறது , தளும்புகிறது , எடுத்துக் கொண்டு ஓடுகிறது , திக்ரு செய்கிறது , ஒட்டகத்தலையாக உருமாறுகிறது . இன்னும் என்ன செய்ய வேண்டும் இந்தக் கல் ? அதையும் செய்யும் .
இப்போ சொல்லுங்கள், கல்லுக்கென்ன உயிரா இருக்கிறது ?

நிலைச் சக்தி (mgh )யும் அணு சக்தியும் (Atomic Energy ) யும்



கி.பி 571 பிப்ரவரி கடைசி தினம் அல்லது மார்ச் 1 முஹர்ரம் மாதத்தில் ஏமன் நாட்டு மன்னன் அப்ரஹா யானைப் படையை திரட்டிக் கொண்டு கஃபவை நோக்கி வந்தான். இந்த நிகழ்வு நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு 50 நாட்களுக்கு முன்பு நடந்தது .
"(நபியே) யானைப் படையினரை உங்களது இறைவன் எவ்வாறு அழியச் செய்தான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா ?
அவர்களுடைய சூழ்ச்சியை அவன் வீணாக்கி விட வில்லையா ?
அவர்கள் மீது பறவைகளைக் கூட்டங் கூட்டமாக அனுப்பி வைத்தான் .
( கெட்டியான) சுடப்பட்ட சிறிய கற்களை அவை அவர்கள் மீது எறிந்தன .
அதனால் அவன் அவர்களை(ப் பறவைகளால் ) கொத்தி தின்னப்பட்ட கதிர்களைப் போல் ஆக்கி (அழித்து) விட்டான் .
திருக்குர்ஆன் : ( 105 : 1 - 5 )
கரிய நிறமும் மஞ்சள் நிற மூக்கும் அவற்றின் கழுத்து பச்சை நிறமுமாக உள்ள சிறிய பறவைக் கூட்டங்களை அனுப்பினான் இப்பறவைகளை யாரும் அதற்கு முன்னர் கண்டதில்லை .அதற்குப் பின்னும் கண்டதில்லை " என்பதாக இப்னு ஜூபைர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்
ஒவ்வொரு பறவையின் வாயில் ஒரு கல்லும் , இரு கால்களில் இரு கற்களும் இருந்தன. ஒவ்வொரு கல்லிலும் எவர் மீது அது விழ வேண்டுமோ அவரது பெயர் அக்கற்களில் எழுதி இருந்தது .
அக்கல் அவர்களது தலை உச்சியில் விழுந்ததும் அவர்களது உடலுக்குள் சென்று கால் வழியாக வெளியேறிக் கீழே விழுந்தன. யானைகளின் உடலிலும் இக்கற்கள் ஊடுருவி வெளிவந்தன,
இக் கற்களில் சிலவற்றை மக்காவாசிகளால் எடுத்து வைக்கப்பட்டிருந்தன . நபி (ஸல்) அவர்களின் மாமி உம்மு ஹானீ (ரலி) அவர்களிடம் இவற்றில் சில கற்கள் இருப்பதை தாம் பார்த்ததாக இப்னு அப்பாஸ் ( ரலி) அவர்கள் கூறியிருக்கிறார்கள் .
மேற்கண்ட வசனத்தில் ' சுடப்பட்ட சிறிய கற்கள் " என்று இறைவன் குறிப்பிடுவதாலும் கிதாபுகளின் குறிப்பில் தலைபட்டு கால்வழியாக வெளியேறியதாலும் அக்கற்கள் அணு கதிர்வீச்சு கொண்ட யூரேனியம் U 231 அல்லது இருடியம், தோரியம் போன்ற கற்களாக இருக்கலாம் .இக்கற்கள் பட்டாணி கடலைப் போன்று சிறியதாக இருந்தாலும் சுய பொருண்மை திணிவு களில் மிக அதிகமான எடை கொண்டதாக இருக்கும் . எனவேதான் யானையின் உடலிலும் உட்புகுந்து அக்கற்கள் வெளியேறி இருக்கிறது .

கற்களின் வீச்சு விசையைக் கணக்கிட
**mass (m) = கல்லின் பொருண்மை**
**10 கிராம்**
**gravidatio Force (g ) =**
**புவி ஈர்ப்பு விசை 9 . 81 Newton/ met**
**height ( h ) = ஒவ்வொரு கற்களும் வீசப்படும் உயரங்கள் .15 மீட்டர் (50 அடி)**
**செலவிடப்படும் சக்தி**
**Energy ( E ) = m X g X h**
**= 10/ 1000 X 9.81 X 15**
**= 1. 4715 kgm - Newton / met**
ஒவ்வொரு மீட்டர் உயரத்திற்கும் ஒன்றரை கிலோ கிராம் எடை வீதம் அதிகரித்துக் கொண்டே இருக்கும்
இப்னு உமர்(ரலி) அவர்கள் குறிப்பிடுகிறார்கள் : " நாங்கள் தாயிஃபிலிருந்து நபி (ஸல்) அவர்களுடன் திரும்பும்போது ஒரு கப்ரின் அருகில் சென்றோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் , " இது அபூரிகாலின் கப்ரு. இவர் தக்கீப் கோத்திரத்து தலைவர் . இவர் கஃபா ஹரமில் இருக்கும் வரை அவர் மீது கல் விழாமல் தடுக்கப்பட்டுக் கொண்டிருந்தது ஹரத்தை விட்டு அவர் வெளியேறியதும். அவர் பெயர் பொறிக்கப்பட்ட அவர் மீது விழுந்து இதே இடத்தில் மாண்டர். இவர்தான் அப்ரஹா மன்னனுக்கு மக்காவிற்குள் வர வழிவகுத்துக் கொடுத்தவர் .
"மக்கா கஃபா ஹரத்தை இடிக்க மஹ்மூது என்னும் பிரமாண்டமான யானை மறுத்தது அதை கொடுமைப்படுத்திக் கொண்டு வந்த படைத் தளபதியும் யானைப்பாகனும் நொண்டி சப்பாணியாகவும் , பாகன் குருடனாகவும் மக்காவில் மனிதர்களிடம் உணவு கேட்டு வாங்கி உண்டு வந்தனர் " என்று அன்னை ஆயிஷா ஸீத்தீக்கா (ரலி) அவர்கள் கூறியிருக்கிறார்கள்

மனிதன் எட்டிப் பார்க்காத எட்டாவது கண்டம்





உலகத்தில் இருப்பது மொத்தம் ஏழு கண்டங்கள் . அதெங்கே இருக்கிறது எட்டாவது கண்டம் ?
ஆனால், "மனிதன் இன்னமும் போய்ப் பார்க்காத , ஆனால் கண்டுப்பிடித்தே ஆக வேண்டிய எட்டாவது கண்டம் ஒன்று இருக்கிறது " என்று சொல்லி பரபரப்பு ஏற்படுத்தியவர் வில்லியம் பீப் என்ற அறிஞர். 1917 ம் ஆண்டில் அப்படி அவர் சொன்னது புதிய நிலப்பரப்பை அல்ல; சூரியன் வெளிச்சம் தரையை தொடாத காடுகளின் மேல் உள்ளஅடர்த்தியான பசுமையான கூரையை .....
"ஆமாம் தரையிலிருந்து 200 அடி உயரத்தில் லட்சக்கணக்கான சதுர மைல்கள் பரவி கிடக்கும் காடுகளின் கூரையில் ஏராளமான உயிரினங்கள் இருக்கின்றன . நமது மூதாதையர்களின் பார்வையில் படாததால் இன்னமும் அழிக்கப்படாமல் அப்படியே இருக்கின்றன,
கடிக்கும் எறும்புகள் , கொட்டும் தேனீக்கள் , குத்தும் முட்கள் ,வழுக்கும் கிளைகள் , மூக்கைத் துளைக்கும் நெடி ..... இவற்றையெல்லாம் மீறி ஒருவர் 200 அடிக்கும் உயரமான மரத்தின் உச்சிக்குப் போகத் தயாராக இருந்தால் , அங்கு ஒரு இயற்கையின் மாபெரும் களஞ்சியமே அவருக்காக காத்துக் கொண்டிருக்கிறது.
1980 களில் வன ஆய்வாளர் டெர்ரி இர்வின் , அமேசான் காடுகளில் ஒரு முறை நடந்து போய்க் கொண்டிருந்த போது , மேலேயிருந்து ஏதோ பொல பொலவென்று கொட்டியது , ஆர்வத்தில் அதை எடுத்துப் போய் பல வருடங்களாக சோதித்துப் பார்த்தார் . அதில் விதவிதமான வண்டுகள் இனத்தைச் சேர்ந்த பூச்சினங்கள் அதில் இருந்தன .இதுவரை பெயரிடப்படாத புது புது வகைகள்.
"நீங்கள் அறியாதவற்றையும் அவன் படைப்பான் " குர்ஆன் 16 : 08
ஆச்சரியமடைந்த அவர் அடுத்தடுத்த மரங்களில் தேடினார் .ஒவ்வொரு மரத்திலும் வெவ்வேறு விதமான உயிரினங்கள் அவருக்குக் கிடைத்தன .
பல பறவைகள் . பூச்சிகள் , இப்படிக் காடுகளின் கூரை எனப்படும் மரஉச்சிகளில் பிறந்து அங்கேயே வாழ்ந்து அப்படியே மடிந்தும் விடுகின்றன. இறந்த பிறகோ அல்லது விபத்தால் தடுமாறியோ விழும் போது எந்த

மரக்கிளையிலும் தடுக்கிக் கொள்ளாமல் இருந்தால் மட்டுமே அவை தரைக்கு வரும் ... தரை என்று ஒன்று இருப்பதே இங்குள்ள உயிரினங்களுக்குத் தெரியாது என்ற உண்மை அப்போதுதான் பலருக்கும் தெரிந்தது . லட்சக்கணக்கான சதுர மைல்களால் பரவிக் கிடக்கும் காடுகளின் பச்சப் பசேல் என்ற கூரை . இது ஒரு தனி உலகம் .
இப்படி காடுகளின் கூரைகளில் மூன்று கோடிக்கும் மேலான உயிரினங்கள் வரை இருக்கலாம் என்று கணக்கிடப்பட்டுள்ளது இவற்றை ஆராயும் பணிக்கு " காட்டுக் கூரை ஆராய்ச்சி " (canopy Analysis ) என்று பெயர் வந்தது .
மர உச்சிக்கு எப்படி போவது ? கயிறுகள், கயிற்றுப் பாலங்கள் , பலூன் விமானங்கள் .கிரேன்கள் , கோபுரங்கள் என்று படிப்படியாக வளர்ந்து , கடந்த 15 வருடங்களாக " உச்ச மட்ட "ஆராய்ச்சி உச்சக் கட்டத்தை அடைந்துள்ளது .
டவர் கிரேன்கள் மர உச்சியை 30 அடி உயரத்தில் இருக்கும் .அதில் சாவதானமாக உட்கார்ந்து ஆராயலாம் இருட்டு ஒரே கும்மிருட்டு பகல் பொழுது கூட இருட்டாக இருக்கும் 'கிரிக்' 'கிரிக்' சப்தம் இடைவிடாது கேட்டுக் கொண்டே இருக்கும்.
"வானங்களையும் .பூமியையும் அதற்கு மத்தியில் உள்ளவைகளையும் வீண் விளையாட்டுக்காக நாம் படைக்க வில்லை . " குர்ஆன் 44 : 38
கீழே இருந்து ஆராய்ச்சியாளர்கள் மேலே போவதற்கு ஒரு கூண்டு உண்டு .இந்த கிரேன் மேலே 51 மீட்டருக்கு சுழலக் கூடியது . எட்டு ஏக்கர் பரப்பளவில் இருக்கும் மரங்களின் கூரைகளை அப்படியே சுழன்று சர்வே செய்யலாம்
ஐக்கிய நாடுகளின் இயற்கை பராமரிப்பு நிறுவனம்தான் இந்த ஆராய்ச்சியில் அதிக ஆர்வம் காட்டுகிறது. இந்த எட்டாவது கண்ட ஆராய்ச்சி, மனித குலத்தை வாட்டி வதைக்கும் கொடுமையான நோய்களில் .எதற்காவது தீர்வு கிடைக்காதா ? அதைக் கண்டறியவும்தான் இந்த ஆராய்ச்சி
"பூமியில் நீங்கள் சுற்றித் திரிந்து பாருங்கள் ஆரம்பத்தில் படைப்புகள் எவ்வாறு உற்பத்தி செய்கிறான் பின்னரும் அல்லாஹ் மறுமுறையும் உற்பத்தி செய்வான்
குர்ஆன் 29 : 20

மாற்றம் ஒன்றே மாறாதது. 31-08-2017





நதி ஓடிக் கொண்டிருக்கிறது அதில் கை வைக்கிறோம் .
முதலில் நாம் வைத்தபோது கைகளில் படும் நீர்தானா வைத்த பிறகும் படுகிறது ? இல்லை ,
அந்த நீர் ஓடிவிட , வந்த நீர் தானே படுகிறது .
அடுத்த கணத்தில் அந்த நீரும் போய் விட , வேறு நீர் அல்லவா படுகிறது ?
ஆம் ... அந்த நீர் அல்ல இது, இந்த நீர் அல்ல அது ..
எல்லாமே மாறிக் கொண்டிருக்கிறது .
எப்போதோ அல்ல.எப்போதும் .
ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டே இருக்கிறது .
இந்த தத்துவத்தை சொன்னவர் கி.மு 535 ஆம் ஆண்டு கிரேக்கத்தின் காலனியாக இருந்த துருக்கியின் மன்னரின் மைந்தனாக "ஹிராக்லிடஸ் " என்ற தத்துவ ஞானி இந்த மாற்றம் தத்துவத்தைச் சொன்னார்

எல்லாமே மாறிக் கொண்டிருக்கிறதென்றால் , சூரியன் மாறுகிறதா ? சந்திரன் மாறுகிறதா ? என்று மக்கள் கேட்பார்கள் .
இன்றைய அளவுக்கு வானவியல் சாஸ்திரம் அன்று வளர்ந்திருககவில்லைதான் என்றாலும் அவர்களுக்கு புரிகிற மாதிரி சொன்னார்
சூரியன் காலையில் ஒரு திசையில் உதித்து ... பிறகு இடம் மாறி .. இடம் மாறி எவ்வளவு மாற்றத்தின் பின் மாலையில் மறைகிறது .? இது மாற்றம்தானே ?
பிறைச் சந்திரனாக இருந்தது . மாற்றமடைந்து .. மாற்றமடைந்து எப்படி முழுச் சந்திரனாக வளர்கிறது ?
" (உலர்ந்து வளைந்த ) பழைய பேரீச்ச மடலைப் போல் பிறையாக ஆகும் வரையில் சந்திரனுக்கு நாம் பல நிலைகளை ஏற்படுத்தி இருக்கின்றோம்.
திருக்குர்ஆன் (36 : 39)
மனிதர்களும் கூட அப்படித்தான் . பருவங்களால் மாறிக்கொண்டே இருக்கிறார்கள் .
சங்க காலத்தில் ஆண்களின் பருவத்தை
ஏழு நிலைகளாக பிரித்தனர்
1 . பாலன் 1 வயது முதல் 7 வயது வரை
2 .மீளி 8 - 10
3 . மறவோன் 11 - 14
4. திறவோன் 15
5. விடலை 16
6. காளை 17 - 30
7. முதுமகன் 30 வயதுக்கு மேல்
இதைப் போன்றே பெண்களின் பருவத்தையும் ஏழு நிலை .
1. பேதை 1 - 8
2 , பெதும்பை 9 - 10
3 . மங்கை 11- 14
4. மடந்தை 15 - 18
5. அரிவை 19 - 24
6. தெரிவை 25 - 29
7 . பேரிளம் 30 வயதுக்கு மேல்
" மனிதர்களே (மறுமையில் உங்களுக்கு உயிர் கொடுத்து) எழுப்புவதைப் பற்றி நீங்கள் சந்தேகம் கொண்டால் , நிச்சயமாக நாம் உங்களை மண்ணில் இருந்தே , பின்னர் இந்திரியத் துளியிலிருந்து .பின்னர் அதனை ஓர் இரத்தக் கட்டியாகவும் , பின்னர் குறை வடிவ அல்லது முழு வடிவமாமிசப் பிண்ட மாகவும் செய்கிறோம். நம்முடைய வல்லமையை உங்களுக்குத் தெளிவாக்கும் பொருட்டே ( இவ்வாறு படிப்படியாகப் பல மாறுதல்களை அடைய) ஒரு குறிப்பிட்ட காலம் வரையில் தாங்கி இருக்கும்படி செய்கிறோம் . பின்னர் உங்களைச் சிசுக்களாக வெளிப்படுததி நீங்கள் உங்கள் வாலிபத்தை அடையும்படிச் செய்கிறோம் .இதற்கிடையில் இறந்து விடுபவர்களும் உங்களில் பலர் இருக்கின்றனர் . (அல்லது வாழ்ந்து) அனைத்தையும் அறிந்த பின்னர் ஒன்றுமே அறியாதவர்களைப் போல் ஆகிவிடக்கூடிய தள்ளாத வயது வரையில் விட்டு வைக்கப்படுவர்களும் உங்களில் இருக்கின்றனர்.
திருக்குர்ஆன் ( 22 : 05 )
" மாற்றம்தான் நிலையானது . மற்றது எல்லாமே மாறிக்கொண்டே இருக்கிறது" என்று 19 நூற்றாண்டில் காரல் மார்க்ஸ் சொன்னது கூட ஹிராக்லிடஸின் சிந்தனை வழியில்தான்.
அவரது அறிவியல் பாரம்பரியத்தின் தொடர்ச்சிதான் இன்றைய வாழ்வியல் மற்றும் உயிரியல் சிந்தனகள்.
ஒரு சமயம் ஹிராக்லிடஸ் ஒரு கருத்தரங்கில் கலந்து கொண்டார் .
கேள்விகளால் அவரைத் துளைத்தெடுக்க வேண்டுமென்று சிலர் வந்திருந்தனர்.
ஹிராக்லிடஸ் " மாற்றம் " பற்றி விரிவுரையாற்றிக் கொண்டே வந்தவர் .திடீரென்று நிறுத்தி விட்டு, "அவ்வளவு ஏன் ,மாற்றம் என்பது வேறொன்றும் இல்லை , நீங்கள் என்னை எப்படியாவது கவிழ்க்கனும்னு வந்திருப்பீங்க .என் பேச்சைக் கேட்டதும் மாறிட்டீங்கள்லியா? அதுதான் மாற்றம் " என்று சொல்லவும் எதிர்பாளர்களின் தலைகள் கவிழ்ந்துப் போயின,
இரவு பகலாகிறது; பகல் இரவாகிறது
கோடை போய் குளிர் வருகிறது , வறட்சிப் போய் வெள்ளம் வருகிறது ,
பூ காயாகிறது . காய்கனியாகிறது ,கனி செடியாகிறது . குழந்தை பெண்ணாகிறாள் ; பெண் தாயாகிறாள் . இளமை மாறி முதுமை வருகிறது . இதைத்தான் "மாற்றம் ஒன்றே மாறாதது " என்கிறோம்.
மாற்றம் மட்டும்தான் நிரந்தரம் . அனைத்து உயிரினங்களுக்கும் அவற்றுக்கே உரித்தான குணங்கள் மற்றும் பண்புகளை உள்ளடக்கி இருக்கின்றன. அவை நிலையானது என நம்பப்படுகிறது.
.....ஆனால், அனுபவத்தில் என்ன காண்கிறோம் ?

அன்பு வெறுப்பாகிறது. வெறுப்பு பாசமாகிறது. கோபம் பொறுமையாகிறது
சாந்தம் கோபமாகுகிறது .அதாவது மனிதனின் குணம் மாறிக்கொண்டே இருக்கிறது . காரணம் தேவை, வசதி வாய்ப்பு , சூழ்நிலைக்கு ஏற்ப குணம் மாறுபடுகிறது.
மாற்றம் வரும் போது , அதை மனிதன் ஏற்றுக் கொள்ளப் பழகிக் கொள்ள வேண்டும். இவை புரிந்து கொண்டால் , மாற்றத்தைச் சந்திக்கும் போது . ஏமாற்றம் அடைய வேண்டியது இருக்காது.
படைத்த படைப்புகளுக்கெல்லாம் மாற்றம் வரும் . ஆனால் அவைகளையெல்லாம் படைத்தவனுக்கு எந்த மாற்றமும் வராது .
"மிக கண்ணியமும், பெருமையும் தாங்கிய உங்களது இறைவனின் திருமுகம் மட்டும் ( மாறாது அழியாது ) நிலைத்திருக்கும்
திருக்குர்ஆன் ( 55 : 27 )

குர்பானி " என்னும் திருப்பலி



குர்பானி எப்போது ஆரம்பித்தது ?
ஆதம் (அலை) ஹவ்வா (அலை) தம்பதிகளுக்கு ஒவ்வொரு சூலிலும் ஒரு ஆண் ஒரு பெண் குழந்தைகள் பிறக்கும் .
முதல் பிரசவ ஆணுக்கும் இரண்டாம் பிரசவ பெண்ணுக்கும் திருமணம்
முதல் பிரசவ பெண்ணுக்கும் இரண்டாம் பிரசவ ஆணுக்கும் திருமணம் .இது இறைச் சட்டம் காரணம் வேறு மக்கள் எவரும் இல்லை . இப்போது இச்சட்டம் உலகில் எங்குமே இல்லை.
முதல் சூலில் காபிலும் இக்லீமா என்ற பேரழகியும் இரண்டாம் சூலில் ஹாபிலும் லுபூதா என்ற குறைவான அழகியும் பிறந்தார்கள்
காபில் இறைச் சட்டத்தை மீறி தன்னுடன் பிறந்த பேரழகி இக்லீமாவை மணப்பேன் என்று கூற .ஆதம் (அலை) அவர்கள் இறைவனின் சம்மதம் பெற குர்பானி கொடுக்கச் சொல்லி "யாருடைய குர்பானியை இறைவன் ஏற்றுக் கொள்கிறோனோ அவருக்கே பேரழகி
இக்லீமா " என்கிறார்கள்.
காபில் விவசாயி . வேளாண் விவசாயப் பொருட்களை குர்பானி கொடுத்தார் அவர் நல்ல கதிர்களையும் , பழங்களையும் தனக்கும் உம்மி தொலிகளுடன் கூடிய கதிர்களையும் பழுதான பழங்களையும் இறை குர்பானிக்கு வைத்தார்.
ஹாபில் ஆடு மேய்ப்பாளர் .நல்ல கொழுத்த ஆட்டையும் பாலடை கட்டி, வெண்ணெய் போன்றவற்றை இறை அச்சத்துடன் குர்பானிக்கு வைத்தார் .
வானில் இருந்து புகையில்லாத வெள்ளை நெருப்பு பறந்து வந்து ஹாபில் உடைய குர்பானியை கரித்துக் கொண்டு போனது .எனவே ஹாபில் குர்பானி இறைவனால் ஏற்றுக்கொள்ளப்பட்டது இக்லீமாவை திருமணம் செய்தார்.
தங்களுடைய உழைப்பின் பொருளை ஒரு பெண்ணுக்காக கொடுப்பதிலிருந்து திருமணத்தின் போது பெண்ணுக்கு "மஹர் " என்னும் மண கொடை முடிவு செய்யப்பட்டது அன்றிலிருந்துதான்.
'விவசாய பொருட்களையும் குர்பானிக்கு பயன்படுத்தலாம் ' என்ற கோட்பாட்டின் கீழ் தமிழர் பொங்கல் தினத்தின் போது பச்சரிசியில் பொங்கல் விளைந்த கரும்பு புதைந்த மஞ்சள் என்று இறைவனுக்கு படைத்து " பொங்கலோ பொங்கல் " என்று சப்தமிட்டு வழிபடுகின்றனர். இதுவும் தமிழர்களைப் பொறுத்தவரை குர்பானிதான்.
ஆடு ,மாடு ,ஒட்டகம் போன்றவற்றை குர்பானி கொடுக்கும் போது "அல்லாஹ் அக்பர் அல்லாஹ் அக்பர் " என்ற தக்பீர் முழக்கத்துடன் உலகம் தழுவிய இஸ்லாம் திருப்பலி எனும் குர்பானி கொடுக்கப்படுகிறது .
"ஆகவே அவ்விருவரும் (இறைவனின் விருப்பத்திற்கு ) முற்றிலும் வழிப்பட்டு , (இப்ராஹீம் தன் மகன் இஸ்மாயிலை அறுத்துப் பலியிட ) முகங்குப்புறக் கிடத்தினார் " குர்ஆன் (37 : 103 )
" ஆகவே மகத்தானதொரு பலியை அவருக்கு பகரமாக்கினோம் " குர்ஆன் (37 : 107 )

என்று கூறிய இறைவன் அன்றொரு நாள் ஹாபில் இடமிருந்து குர்பானியாக பெறப்பட்ட அந்த கொழுத்த செம்மறியாட்டை ,இஸ்மாயில் (அலை) அவர்களுக்கு பகரமாக இறக்கி அறுக்கச் செய்தான். பகரம் கணக்கு சரியானது .
இதுவே எனக்கும் உங்களுக்குமான குர்பானி சட்ட கடமையாகியது.
அக்காலத்தில் அரபியர்கள் பலி பிராணிகளை கஃபாவில் வைத்து அறுத்து அதன் இரத்தத்தை கஃபாவில் தெளித்தும் . அதன் இறைச்சியை கஃபாவை சுற்றியும் வீசி எறிவார்கள் இது இறைவனுக்குப் போய் சேரும் என்று நம்பினர் உடனே இறைவன் ,
"குர்பானி மாமிசமோ அல்லது அதன் இரத்தமோ அல்லாஹ்வை அடையது விடுவது இல்லை. உங்களுடைய இறை அச்சம்தான் அவனை அடையும் "
குர்ஆன் ( 22 : 37 ) என்கிற இறை வசனம் இறங்கியது .
இந்து மதப்படி பலியிடப்படும் ஆடு மாடு போன்றவை ஆண் பாலினமாக இருக்க வேண்டும் . கோழியாக இருந்தாலும் ஆண் பாலினமான சேவலாக இருக்க வேண்டும் . பலியிடும் போது அதன் மீது மஞ்சள் நீர் தெளிக்கப்படும் போது அது மூன்று முறை தலையை குலுக்கும் போது அது தன்னை பலியிட சம்மதம் தெரிவித்து விட்டாகக் கருதி அதைப் பலி கொடுக்கின்றனர் .
" குர்பானி ஒட்டகத்தை அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் ஒன்றாக நாம் ஆக்கியிருக்கிறோம்................
( அதன் இடப்பக்க முன் காலைக்கட்டி மற்ற மூன்று கால்களில் ) நிற்க வைத்தவாறே அல்லாஹ்வின் பெயரைக் கூறி அறுங்கள் ....... நீங்கள் நன்றி செலுத்தும் பொருட்டு இவ்வாறு அதனை உங்களுக்கு வசப்படுத்தி தந்தோம் "
திருக்குர்ஆன் : (22 : 36 )
("ஸவாப்ப" - நின்றவைகளாக இருக்கிற நிலையில் என்ற வார்த்தையில் இருந்து தெரிகிறது )
வேத காலத்தில் பசு மாமிசம் சாப்பிட்டதாக மஹாபாரத்தில் .............
" பிராமண சுங்கிருதியின் மகனான சத்திரிய அரசன் ரந்தி தேவனுடைய விருந்தினர் சாலையில் நித்தம் 2000 பசுக்கள் அறுக்கப்பட்டு விருந்தளிக்கப்பட்டது .
ஆதாரம் : ராகுல சாங்கிருத்தியாயன் எழுதிய வால்கா முதல் கங்கை வரை - 12வது அத்தியாயம்
"அக்கினித் தேயம் " என்னும் சடங்கு யாகத்தில் பசுதான் பலி கொடுக்கப்பட்டது.
பலி கொடுத்தல் வேத காலத்தில் மிக முக்கிய சடங்காக இருந்தது .காரணம் நம்மில் குறையும் மிருகக் குணங்கள் அழியச் செய்வதன் மூலமே இறைவனை நெருங்க முடியும் என்று அக்கால வேதக்காரர்கள் நம்பினர் . அடுத்து வந்த பௌத்தம் , சமணம் சமயங்களின் எழுச்சியால் பலி கொடுத்தல் புறந்தள்ளப்பட்டு இப்போது இந்து சமயத் தின் ஓரத்தில் தள்ளி வைக்கப்பட்டது .
பிக்கார்ட்ஸ் என்கிற பிரிட்டிஷ் விஞ்ஞானி : "மாமிசம் காய்கறிகள் இரண்டையும் உண்ணும் வகைச் சேர்ந்தவனே மனிதன் . அசைவ உணவை தவிர்த்தல் நல்லதல்ல . காரணம் மனிதனின் குடற்பகுதியில் ஏராளமான பாக்ட்ரியாக்கள் படைக்கப்பட்டுள்ளன. இறைச்சி உட்கொள்ளும் போது அதனை எளிதாக செரிமானம் செய்து சக்தி ஆற்றலாக மாற்றவே பாக்ட் ரியாக்கள் உள்ளன . அசைவ உணவை உட்கொள்ளாத உடல் எளிதாக நோய் தொற்றிக் கொள்ளும் தளமாக மாறி விடுகிறது என்கிறார் விஞ்ஞானி ,
அட, மனிதனுக்கு இரண்டு கோரைப் பல் இருப்பதே வெந்த அசைவ உணவை மென்று உட்கொள்ளத்தான் என்பதாக பரிணாம வளர்ச்சி ஆய்வார்கள் கூறிப்பிடுகின்றனர் .
குர்பானிக்கு தயாராகி விட்டீர்களா ?

காரூனின் பொக்கிஷங்கள். 3-09-2017



காரூனை விவிலியம் " கோராக் " என்றும் வரலாற்று ஆசிரியர்கள் " ட்யூடன் கமென்" என்றும் அழைக்கிறார்கள் .
காரூன் ,நபி மூஸா (அலை) அவர்களின் சிறிய தந்தையும் ,சிறிய தாயும் மகனும் ஆவான்.

நபி மூஸா (அலை) விசுவாசங் கொண்டு , தவ்ராத் வேதத்தை நன்கு கற்றவனும் அழகனும் நல்ல இனிமை குரல் வளமும் பெற்றவன் . மேலும் மிகச் சிறந்த அறிவாளன் இதனால்தான் கோடி கோடி செல்வத்தைப் தன் அறிவினால் பெற்றதாக பிற்காலத்தில் கூறினான் (குர்ஆன் 28:78 )
பனீ இஸ்ரவேலர்களாக இருந்து பின்னர் அவர்களை விட்டு விலகி
ஃபிர் அவனுடன் சேர்ந்து (ஆட்சியில் பங்கு ) தன் இன மக்களுக்கு பல துரோகங்கள் செய்தான்.
(குர்ஆன் 28 : 76 )
அவனின் செல்வங்கள் 4 லட்சம் பொக்கிஷப் பெட்டிகளில் இருந்தன. செல்வத்தின் மதிப்பு சொல்லப் படவில்லை . காரூனுடைய பொக்கிஷங்களது சாவிகளை தூக்குவதற்கு 40 பேர் நியமிக்கப்பட்டிருந்தனர் ஒவ்வொருவரும் 16000 சாவிகளைத் தூக்குவார்கள் அதுவும் அவர்களுக்கு பளுவாக இருந்தனவாம். 60 கோவேறு கழுதையின் சுமையாக அந்த சாவிகள் இருந்தன.
"நிச்சயமாக அதனுடைய சாவிகள் சக்தியுள்ள ஒரு கூட்டத்திற்கு பெரும் பளுவாக இருந்தன "
- குர்ஆன் ( 28 : 76 )
காரூன் , நபி மூஸா (அலை) அவர்கள் மீது விபச்சார அவதூறு சொல்லி ,ஒரு விபச்சாரியையும் அதற்கு பொய் சாட்சி சொல்ல ஏற்பாடு செய்து , அந்த விபச்சாரி காரூனைப் பற்றிய உண்மையை சொல்லிவிட்டாள் . இதனால் இறைவனின் சாபத்திற்கு ஆளாகி அவனும் , அவனுடைய மாளிகையும் பூமியில் புதைந்து போனார்கள் .
குர்ஆன் ( 28:81 )
"ஹார்வட் கார்ட்டர் " என்ற ஆங்கில வரலாற்று ஆய்வாளர் காரூனை "ட்யூடன் கமென் "என்று அழைக்கிறார் .இவனும் மாளிகையும் மண்ணில் ( கி.மு 1350 ) புதைந்து போய் இருப்பதை வேதங்கள் வாயிலாக அறிந்து நிச்சயமாக மற்ற பிரமிடு கொள்ளைப் போனது போல் புதைந்த இவனின் மாளிகை கொள்ளைக்காரர்களின் கண்களுக்கு தெரியாமல் போய் இருக்கும் என்ற நம்பிக்கையில் 30 வருடங்களாக சுற்றிச் சுற்றி வந்தார் 1922 -ல் நவம்பர் மாதம் எகிப்தின் புகழ் பெற்ற புராதன லக்ஸர் கோயில்களுக்கு மேற்கே பாலைவன மணலில் புதைந்து போயிருந்த ட்யூடன் கமென் என்கிற காரூனின் மாளிகையை தோண்டி எடுக்க அதனுள் விலையுயர்ந்த கற்கள் , நெக்லஸ்கள், மோதிரங்கள் தங்க நாற்காலி, தங்க மேஜைகள் அதிலெல்லாம் வைரக்கற்கள் பதித்து மிகச் சிறந்த ஆபரண வேலைபாடுகள் . அப்பப்பா . அவனின் முகமூடி கூட தங்கத்தால் ஆன சூரிய முகமூடி (படம்)
கார்ட்டரின் பிரமிடு ஆராய்ச்சிக்கு பணம் கொடுத்து உதவிய கார்னர்வான் என்ற ஆங்கிலேயர் 1923 ம் ஆண்டு இறந்து போனார் , இதில் பிரமிப்பான விஷயம் ட்யூடன் கமென் கன்னத்தில் எந்த இடத்தில் ஒரு தழும்பு எப்படி இருந்ததோ அதே இடத்தில் அதை தழும்பு அப்படியே ஒரு விஷக் கொசு கடிக்க கார்னர்வான் கன்னத்தில் ஏற்பட்டு அதனாலேயே கார்னர்வான் இறந்து போகிறார்.
காரூனிடம் இருந்த செல்வம் அன்றைய காலகட்டத்தில் எகிப்தை கட்டி ஆண்ட ஃபிர்அவ்னையும், மொத்த பத்து எகிப்தையும் விலைக்கு வாங்கும் அளவிற்கு காரூனிடம் செல்வம் இருந்தது . ஃபிர்அவ்னுக்கு நிகராக நிழல் ஆட்சியை உருவாக்க முடியும் என்ற அளவிற்கு காரூன் இருந்தான் , நல்ல வேளை 28 வயதிலேயே காரூன் இறந்தும் போனான் இல்லாவிட்டால் இப்போது மொத்த உலகத்தையும் கட்டி ஆளும் இல்லுமினாட்டிகளின் இரகசிய நிழல் ஆட்சி அதிகாரம் போல் கி.மு 1350 ல் எகிப்தில் உருவாயிருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது .
இல்லுமினாட்டி (தெளிவூட்டுதல் என்கிற லத்தீன் வார்த்தை ) இது மே 1, 1776 அன்று ஜீசிச போதகர் ஆடம் வெல்ஷாப்ட் மூலமாக அன்றுதான் ரகசிய சமூகமான இல்லுமினாட்டிகளைப் பற்றி உலகுக்கு தெரிய வந்தது . ஏஞ்சலினா ஜூலி , அமெரிக்க அதிபர் ட்ரம்ப், முன்னாள் அதிபர் ஜார்ஜ் புஷ், கிளிண்டன் , ஒபாமா , பில்கேட்ஸ், ஃபேஸ்புக் நிறுவனர் மார்க், திரைப்பட இயக்குநர் ஜேம்ஸ் கேமரூன், ஸ்டீவன் ஸ்பீல்பெர்க், மறைந்த மைக்கேல் ஜாக்ஸன் , ஹிட்லர் , வின்ஸ்டன் சர்ச்சில் உள்ளிட்டவர்கள் இல்லுமினாட்டிகள் என்று வலைதளம் விவரிக்கிறது .
பிரதமரை தேர்ந்தெடுப்பதில் இருந்து உங்களுக்கு குழந்தை பிறக்கிறது வரை எல்லாமே இல்லுமினாட்டிகள்தான் முடிவெடுக்கின்றன.
இல்லுமினாட்டிகள் மொத்தம் 13 குடும்பங்கள் . இந்த 13 குடும்பத்தார்கள் தான் இந்த உலகை மறைமுகமாக ஆண்டு வருகிறார்கள் .இது இரகசிய நிழல் அமைப்பு இதன் நெட்வொர்க் உங்க வீட்டிற்குள்ளும் வலை விரித்திருக்கிறது . மேலும் நீங்கள் அதிகம் அதிகமாகப் பயப்பட தமிழிலேய"இல்லுமினாட்டிகள் " என்று வலைதளத்தில் தேடினால் தகவல்கள் கொட்டோ கொட்டு என்று கொட்டி உங்களை பயமுறுத்தி திணறடிக்கும்.
உலகின் பாதிக்கும் மேலாக உள்ள சொத்து 8 பேரிடமே உள்ளது என்று ஆக்ஸ்போம் நிறுவனம் ஆய்வு நடத்தி இருக்கிறது.
1) பில்கேட்ஸ் . மைக்ரோ சாப்ட் நிறுவனம் 75 பில்லியன் அமெரிக்க டாலர்கள். (ஒரு பில்லியன் என்பது 100 கோடி, ஒரு அமெரிக்க டாலர் இந்திய ரூபாய்க்கு 64 )
2) அமென்ஷியோ ஓர்டேகா (ஸ்பெயின் தொழில் அதிபர் ) 67 பில்லியன் அமெரிக்க டாலர் .

2) வாரன் பபெட் ( அமெரிக்க பங்குச் சந்தை முதலீட்டாளர்) 61 பில்லியன் அமெரிக்க டாலர்கள்.
3) கார்லோஸ் ஸ்லிம் ஹெலு (மெக்சிகோ தொழில் அதிபர் ) 50 பில்லியன் அமெரிக்க டாலர்கள்.
4) ஜெப் பெஜோஸ் ( அமெசான் டாட் காம் ரிறுவனர் ) 46 பில்லியன் அமெரிக்க டாலர்கள்.
5) மார்க் சக்கர்பெர்க் ( பேஸ்புக் நிறுவனர் ) 45 பில்லியன் அமெரிக்க டாலர்.
6) லேரி எலிசன் (ஆர்க்கிள் நிறுவனர் ) 44. பில்லியன் அமெரிக்க டாலர்கள்
7 ) மைக்கேல் ப்ளூம்பெர்க் 40 பில்லியன் அமெரிக்க டாலர்கள்
8 ) தெரியவியலை,
ரஷ்யாவின் 74 .5 % பொருளாதார வளர்ச்சியை 1 % பணக்காரர்களால் மட்டுமே அனுபவிக்கப்படுகிறது
மொத்த அமெரிக்க செல்வத்தில் 42.5 சதவிகிதம் 1 சதவீத அமெரிக்க செல்வந்தர்களிடம் மட்டுமே இருக்கிறது
இல்லுமினாட்டிகளின் 13 குடும்பத்தார்கள் அநேகர் யூதர்கள் இவர்களின் தொடர் ஒரு வேளை எகிப்து காரூனிடம் இருந்து தொடரலாம் .

மண் செய்யும் மாயம் .



கி.மு 1500 ல் எழுதப்பட்ட சமஸ்கிருத ஸ்லோகம் இப்படிச் செல்கிறது " கைப்பிடியளவு உள்ள இந்த மண்ணில்தான் நம் உயிர் வாழ்க்கை அடங்கி இருக்கிறது .இந்த மண் நம்முடைய உணவை , எரிபொருளை நம்முடைய வீட்டை பாதுகாக்கும் . நம்மைச் சூழ்ந்து நின்று நம்முடைய வாழ்வாதாரத்திற்கு வகை செய்யும் .இதை பராமரிக்காமல் , உதாசீனப்படுத்தினால் மண் அழியுதோ இல்லையோ மனித குலம் அழிந்துவிடும்..
மண்ணுக்கு உயிர் இருக்கிறதா ?ஆம் இருக்கிறது . உயிர் இருந்ததால்தானே இறந்தும் போகிறது பர்மா முஸ்லிம்கள் மாதிரி.
அப்புறமா உயிர்பிக்கப்படுகிறதா ? உயிர் பிக்கப்படுகிறது விஞ்ஞானிகள் மட்டும் சொல்லவில்லை ,குர்ஆனே சொல்கிறது .
"அவனே இறந்த பூமிகளையும் செழிப்பாக்கின்றான். இவ்வாறே மரணித்த பின்னர் மறுமையில் நீங்கள் வெளிப்படுத்தப்படுவீர்கள் .
குர்ஆன் (30 : 19)
நம் மூதாதையர்கள் இந்த மண்ணில் தான் மறைந்து போய் இருக்கிறார்கள் .இந்த மண்ணில்தான் இரும்பு போன்ற கனிமப் பொருட்களும் மறைந்து இருக்கிறது .மனிதனுக்கு பயன்படும் இந்த மண்ணில் புதைந்த இரும்பில் கூட மனிதம் மறைந்திருக்கிறதா .... என்றால் இரும்பில் கூட மனிதம் மறைந்து இருக்கிறது என்கிறது குர்ஆன் .
" (நபியே ) நீங்கள் கூறுங்கள் : நீங்கள் (உக்கி , மக்கி மண்ணாவது என்ன ? ) கல்லாகவோ இரும்பாகவோ ஆகி விடுங்கள் .அல்லது மிகப் பெரிதென உங்கள் மனதில் தோன்றும் பொருளாகவாகிலும் ஆகிவிடுங்கள் .
குர்ஆன் ( 17 : 50, 51 )
இப்போது சொல்லுங்கள் கல்லும் , மண்ணும் மற்ற பொருட்களிலும் மனிதம் மறைந்திருக்கிறதா ? . இதனால் இறைவன்
" ( மரணித்தவர்களை மூடிக் கொண்டிருக்கும் ) பூமி பிளந்து அவர்கள் வேகமாக வெளியே வரும் நாளையும் அவர்களை ஒன்று சேர்ப்பதையும் நமக்கு மிக்க எளிதானதே "
குர்ஆன் (50: 44)
கல், இரும்பு மற்ற எல்லா பொருட்களிலும் மனிதம் மறைந்திருக்கிறது . இது நம் கண்களுக்குத் தெரியவில்லை . ஆனால் பனீ இஸ்ரவேயரில் ஒருவனுக்கு நன்கு தெரிந்திருக்கிறது .
இதனால்தான் சாமிரீ என்பவன் தான் செய்த தங்க கன்று சிலைக்கு உயிர் கொடுக்க யாரும் பார்க்காததை அவன் பார்த்தான் ஜிப்ரயீல் (அலை) காலடி மண்ணை எடுத்து சிலைக்குள் வைத்தான் .அதற்கு உயிர் வந்தது .சப்தமும் இருந்தது "
குர்ஆன் (20 : 96 )

சாமிரீ தங்கத்தில் கன்று செய்து மண்ணைக் கொண்டு உயிர்ப்பித்தான் என்றால் நபி ஈஸா (அலை) அவர்கள் "உங்களுக்காக களிமண்ணிலிருந்து பறவையைப் (வௌவால்) செய்து அதில் நான் ஊதுவேன் .
அல்லாஹ்வின் அனுமதியைக் கொண்டு அது பறக்கும் பறவையாகிவிடும் . குர்ஆன் ( 3 : 49)
ஆக மண்ணில் உயிர் இருக்கிறது. ஒத்துக் கொள்கிறீர்களா ?
மண் திடப்பொருள்தானே இதில் சந்தேகம் இல்லையே ? ஆனால் தண்ணீர் மாதிரி திரவப் பொருளாகவும் மாறும் .
" நீங்கள் நோயாளிகளாக இருந்தோ அல்லது பயணத்தில் இருந்தோ அல்லது எவரும் மலஜல பாதைக்குச் சென்று வந்திருந்தோ அல்லது நீங்கள் பெண்களைத் தீண்டியிருந்தோ தண்ணீரை நீங்கள் பெறவில்லை எனில் (தயம்மும் செய்து கொள்ளுங்கள் ) அதாவது சுத்தமான மண்ணைக் கொண்டு உங்கள் முகங்களையும் . கைகளையும் துடைத்துக் கொள்ளுங்கள்" குர்ஆன் ( 5 : 06 )
மண் ஓர் ஆயுதமாகவும் இருக்கிறது .
எதிரிகளின் கண்களை கட்டிக் கொள்ளும் ஒரு திரையாகவும் இருக்கிறது .
" (நபியே எதிரிகளின் மீது) நீங்கள் மண்ணை எறிந்த போது அதனை நீங்கள் எறியவில்லை . அல்லாஹ்தான் அதனை எறிந்தான் . குர்ஆன் ( 8 : 16)
மண் குளியல் பற்றி மருத்துவம் நிறைய பேசுகிறது .உடல் வலிகளைப் போக்குகிறது இரத்த ஓட்டத்தை மேம்படுத்துகிறது சதை இறுக்கத்தை போக்கிறது .இதனால் மனம் சஞ்லப்படுவதில் இருந்தும் காக்கிறது
அலீ (ரலி) அவர்கள் தம் மனைவி பாத்திமா (ரலி) அவர்களிடம் ஏற்பட்ட சின்ன மனஸ்தாபத்தின் காரணமாக மதியம் மனைவியுடன் ஓய்வு எடுக்காமல் பள்ளி வாசலில் போய் படுத்தார்கள் .
படுக்கும் போது அலீ (ரலி) அவர்களின் மேல் துண்டு கீழே விழுந்து கிடக்க , உடம்பில் மண் படிந்த நிலையில் ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள் .
அப்போது நபி (ஸல்) அவர்கள் , அந்த மண்ணை அவர்களின் உடம்பிலிருந்து துடைத்துக் கொண்டே .
"அபுத்துராப்"
(மண்ணின் தந்தையே) எழுங்கள் ,
அபுத்துராப் எழுங்கள் " என்று இரண்டு முறை கூறினார்கள் .( முஸ்லீம் 4784 )
ஒரு முறை யுத்த களத்தில் நபித் தோழர்களுக்கு பலத்த காயங்கள் ஏற்பட்டு மதீனா வந்தபோது , மதீனாவின் ஒரு ஓடையில் உள்ள மண்ணை எடுத்து மருந்தாக பயன்படுத்தச் சொன்னார்கள்
மண்ணின் மூலச்சத்தை சிலிக்கான் என்கிறது விஞ்ஞானம் சிலிக்கானிலிருந்த மின்னணு சில்கள் உலகிலேயே அதிகமாக அமெரிக்க கலிபோர்னியா மாகாணத்தில் சான் பிரான்சிஸ்கோ பகுதியில் தயாரிக்கப்படுகிறது இதனை "உலகின் சிலிக்கான் பள்ளத்தாக்கு " என்கிறார்கள் .
இங்குதான் ஆப்பிள் -இன்டெல் - கூகுள்- யாகூ - பேஸ் புக் - ஐ.பி.எம் போன்றவற்றின் தலையகம் உள்ளது. அன்றாட நவீன வாழ்வில் பயன்படுத்தும் கம்ப்யூட்டர், டெலி கம்யூனிகேஷன் தகவல் பரிமாற்றம் உள்ளிட்ட உயர் தொழில் நுட்பங்கள் ஒவ்வொரு நாளும் புதுப்புது யுக்திகளை கண்டுபிடித்த வண்ணம் இருக்கின்றனர் .
இந்த யுக்திகளால் யாருமே கேட்க மாட்டார்கள் பார்க்க மாட்டார்கள் என்ற நினைப்பில் விட்ட ஜொள்ளுகள் , உலகில் கோடிக்கணக்கானோர்கள் கேட்க பார்க்க செய்துவிடுகிறது இந்த மண்ணின் மூலம் சத்தான சிலிக்கான் .
இத்தனை மாண்புற்ற மண்ணிலிருந்து
"(உங்கள் முதல் தந்தையாகிய ஆதமை) உருவப்படுத்தி மலக்குகளை நோக்கி "ஆதமுக்கு சிரம் பணியுங்கள் எனக் கட்டளையிட்டோம் இப்லீஸைதி தவிர மற்ற மலக்குகள் அனைவரும் சிரம் பணிந்தார்கள் . இப்லீஸ் யை நோக்கி " நீ சிரம் பணியாதிருக்க உன்னை தடை செய்தது எது ? " நீ என்னை நெருப்பில் படைத்தாய் அவரை களிமண்ணில் படைத்திருக்கிறாய்.( களிமண்ணை விட நெருப்பு உயர்ந்தது ) " என்று கூறினான்
குர்ஆன் (7 : 11 , 12)
இத்தனை விபரங்கள் தெரியாத முட்டாள் இப்லீஸ்

**rahmath Rajakumaran**
வானம் ஏறி இறைவனைப் பார்க்க ஃபிர்அவன் ,ஹாமானிடம் செய்ய சொன்ன யுக்தி , களி மண்ணில் செங்கல் செய்து அந்த சூளைக்கு நெருப்பு வைத்து சுட்ட செங்கற்களால் மாளிகை கட்டி அதில் ஏறி மூஸாவுடைய இறைவனை பார்க்க எத்தனித்தான் .
குர்ஆன் (28 : 38)
ஆக இறைவனைப் பார்க்க மனிதனின் முயற்சிக்கு மண் கூட தேவையாக இருந்தது

பசி



பசி வந்தால் காதை ஏன் அடைக்கிறது ?
நம்முடைய ரத்தத்தில் சாதாரணமாக 80 லிருந்து 120 மில்லிகிராம் 'க்ளுக்கோஸ்' இருக்க வேண்டும் இந்த க்ளுக்கோஸ்தான் உடலில் பல பாகங்களுக்குச் சக்தி கொடுப்பது
சாப்பிட்ட கையோடு ரத்த க்ளுக்கோஸைப் பார்த்தால் 180 வரை எகிறும் ஒன்றறை மணி நேரத்தில் க்ளுக்கோஸ் உடம்பின் பாகங்களுக்கு சீராக பரவியதும் இப்போது டெஸ்ட் எடுத்தால் சரியான அளவு காட்டும் தேவைக்கு அதிகமாக 120 க்கு மேல் உள்ளதை சிறுநீரில் கலந்துவிடும் 2 லட்சம் பில்டர் கொண்ட கிட்னி கொஞ்சம் கொஞ்சமாக பாதிப்படையும்
ரத்தத்தில் க்ளுக்கோஸ் அளவு 90 ,80 என்று குறைந்தால் பசி ஏற்படும்
எப்படி ? க்ளுக்கோஸ் உடம்பு வேலைக்கு தக்கவாறு குறைய குறைய வயிற்றில் அமிலச் சுரப்பு அதிகமாகும் 'காஸ்ட்ரின்' என்று ஒரு ஹார்மோன் உண்டாகி இதெல்லாம் ஒட்டுமொத்தமாச் சேர்ந்து வயிற்றில் ஏற்படும் அவஸ்தைதான் பசி
க்ளுக்கோஸ் குறைந்த ரத்தம் மூளைக்குச் செல்லும் போது 'என்னப்பா இவ்வளவு அடாஸா ரத்தம் அனுப்பிச்சிருக்கிங்க ?' என்று எதிர்ப்புத் தெரிவிக்கிறது எப்போதுமே அதற்கு ஒஸ்தியான ரத்தம் வேண்டும் மூளை தெரிவிக்கும் இந்த எதிர்ப்புத்தான் லேசான மயக்கம் , காதை அடைக்கிறது . . . கண் பஞ்சடைவது ,போதாக் குறைக்கு ஒரு எட்டு , பத்து மணி நேரம் சாப்பிடவில்லை, தண்ணீர் கூட குடிக்கவில்லை என்றால் டீஹைட்ரேஷன் ஆரம்பித்து அதனால் இன்னும் கொஞ்சம் மயக்கமும் காதடைப்பும் ஏற்படும்
" அகழ் யுத்தத்திற்காக மதீனாவின் பிரதான வாயிலில் பெரிய பள்ளம் தோண்டப்பட்டது நபிஸல் அவர்களுடன் நபித்தோழர்களும் இப்பணி செய்தனர் உணவுப் பொருட்கள் தீர்ந்து போனது இருப்பினும் அகழ் தோண்டுதல் தொடர்ந்தது இன்னும் சொற்ப மணி நேரத்தில் எதிர்கள் மதீனாவிற்குள் நுழைய இருப்பதாக உளவு செய்தி அவசரப்படுத்தியது ஒரு பிடி அன்னமின்றி ஒட்டிய வயிறுடன் இருப்பதால் குறுக்கு வளைந்து விடக்கூடாது என்பதற்காக வயிற்றில் கற்களைக் கட்டிக்கொண்டு பணி தொடர்ந்தது
ஒரு நபித்தோழர் நபிஸல் அவர்களிடம் வந்து தம் மேலங்கியை விலக்கி வயிற்றைக் காட்டினார் அதிலே ஒரு கல் வைத்துக் கட்டப்பட்டிருந்தது அதைக் கண்டதும் நபிஸல் அவர்கள் தங்களின் வயிற்றைக் காட்டினார்கள் என்ன ஆச்சரியம் ! மக்களின் அதிபதி மாநபியின் வயிற்றிலே இரண்டு கற்கள் கட்டப்பட்டிருந்தது உணவு வைக்கப்பட வேண்டிய இடத்தில் கற்கள் வைக்கப்பட்டிருந்தன "
"நம்பிக்கையாளர்களே ! பயம் பசி மேலும் பொருட்கள் உயிர்கள் கனிவர்க்கங்கள் ஆகியவற்றைக் கொண்டு நிச்சயமாக நாம் உங்களைச் சோதிப்போம் நபியே இச்சோதனைகளால் ஏற்படும் கஷ்டங்களைச் சகித்துக் கொண்டிருப்பவர்களுக்கு நீங்கள் நற்செய்தி கூறுங்கள்
குர்ஆன் 2 : 155

வியப்பான வேகங்கள்.







SPINNING BALLS

gravitational acceleration $= \frac{GM}{r^2}$

centrifugal acceleration $= wr^2$

A tennis ball weighs 60g
and is 6.5cm in diameter
The gravitational acceleration
at its surface is $9.5x10^{-8}$ m/s$^2$
If the ball spins once per second
the maximum centrifugal acceleration
at its surface is 2.6 m/s$^2$
The centrifugal acceleration
is 27 million times greater
than the gravitational acceleration.
So the water flies off.

The Earth weighs $6x10^{24}$kg
and is 12700km in diameter
The gravitational acceleration
at its surface is 9.8 m/s$^2$
The Earth spins once per day
so the maximum centrifugal acceleration
at its surface is 0.03 m/s$^2$
The centrifugal acceleration
is 330 times less
than the gravitational acceleration.
So the water stays on the surface.




நீங்கள் நல்ல உறங்கும் போதும் கூட மணிக்கு 1674 கிலோ மீட்டர் வேகத்தில் ஒரு நாளைக்கு 40185 கிமீ தூரத்தை அடைகிறீர்கள் . வருடத்திற்கு 14709807 கிமீ நீள்வட்டப் பாதையில் இப்பிரபஞ்சவெளியில் பயணிக்கிறீர்கள் என்றால் நம்புவீர்களா ?

நம்பித்தான் ஆக வேண்டும் . காரணம் நம் பூமி இப்பிரபஞ்ச வெளியில் இயங்கும் வேகத்தை சொன்னேன் . ஆகாயகங்கை என்னும் பால் வீதியில் தூய தமிழ் தெரியாத ஆங்கில விஞ்ஞானிகள் இதனை "மெட்டா காலக்ஸி " என்றழைக்கிறார்கள். இந்த பால் வீதியில் சூரியன் நொடிக்கு 20 கி.மீ மணிக்கு 72,000 கிமீ வேகத்தில் தன் மொத்த குடும்பத்தையும் அழைத்துக் கொண்டு "பெர்சியஸ் ஓரியன்"என்ற ராசிக் கூட்டத்தில் இருந்து "ஹெர்குலிஸ் " என்னும் நட்சத்திரக் கூட்டத்தை நோக்கி விரைகிறது.

அதே நேரத்தில் நமது சூரியன் அதன் பக்கத்திலுள்ள மற்ற சூரியன்களோடு சேர்ந்து ஒரு விநாடிக்கு 220 கிமீ, மணிக்கு 7,92,000 கி.மீ வேகத்தில் "கைனக்ஸ் " என்கிற நட்சத்திர ராசிக் கூட்டத்தை நோக்கி விரைகின்றன . இத்தனை வேகங்களுக்குள்ளும் நீங்கள் நானும் உட்பட்டே இருக்கிறோம். என்னா வேகம் ..

"சூரியனையும் , சந்திரனையும், நட்சத்திரங்களையும் (படைத்தான் .இவை அனைத்தும்) அவனது கட்டளைக்கு உட்பட்டவைகளே.'

திருக்குர்ஆன் (7 : 54 )

இன்னும் சில வேகங்களைச் சொல்றேன்

பூமி உருண்டையான தன் தென் வடலான சுழல் அச்சை நடுவாகக் கொண்டு சுழலுவதால் ஓரிடத்தில் சூரியன் உச்சியில் இருக்கும் பொழுது பூமி உருண்டையின் மறுபுறம் இருளாக இருக்கும் .

உதாரணமாக , நீங்கள் விளாதிவஸ்தோக் நகரிலிருந்து காலை 8 மணிக்கு 1000 கி.மீ வேகத்தில் விமானத்தில் பறந்து 9000 கி.மீ தூரத்தில் உள்ள மாஸ்கோவில் இறங்கி அங்குள்ள கடிகாரத்தில் மணியைப் பார்த்தால் அதே தினத்தில் அதே காலை 8.00 மணிதான் . அட , இதென்ன மாயம் ?

அடுத்து, இயங்கு சார்பியல் கோட்பாட்டின்படி ஒன்றைச் சார்ந்து ஒன்று இயங்குகிறது .

சூரியனை நம் பூமி சுற்றிக் கொண்டிருக்கிறது. ஒரு பேச்சிக்கு சூரியன் இரண்டாய்ப் பிளந்து இரு நட்சத்திரங்களாகி விடுவதாக வைத்துக் கொள்வோம் , அதனைச் சார்ந்த பூமியின் இயக்கமும் இயற்கையாகவே மாற்றம் அடையவே செய்யும். சரிதானா ?
சூரியன் பிளந்ததும் அந்த உடனே பூமி தனது இயக்கத்தை மாற்றிக் கொண்டு விடும் என்றே நீங்களும் நானும் முடிவு செய்வோம் .அப்படியில்லை .
காரணம் சூரியனிடமிருந்து ஒளி நொடிக்கு 3 லட்சம் கி.மீ வேகத்தில் பூமியை அடைய 8 நிமிடம் ஆகிறது. எனவே சூரியன் பிளந்தாலும் பூமிக்கு, " உங்க பாஸ் இரண்டாக பிளந்துட்டாருன்னு " சேதி 8 நிமிடம் கழித்தே வரும் . அதுவரை பூமி செக்கு மாடு மாதிரி சுற்றிக் கொண்டே இருக்கும் . இப்படி விஞ்ஞானம் சொல்கிறது , அப்போ, அல்லாஹ்வின் அர்ஷிலிருந்து சேதி பூமிக்கு வந்து சேர லேட்டாகுமோ ? அப்படின்னு தப்புக்கணக்கு யாரும் போட்டு விடாதீர்கள் ,
" உலக முடிவு இமைகொட்டி விழிப்பதுப் போல் அல்லது அதைவிட விரைவாக முடிந்துவிடும் . குர்ஆன் ( 16 : 77 )
இமை கொட்டும் நேரம்ன்ன எவ்வளவு ?
ஒரு விநாடியை ஒரு லட்சம் கோடியாக பிரித்தால் கிடைப்பது ஒரு "பிக்கோ செகண்ட் " மேலே உள்ள வசனத்தில் ' "இதைவிட குறைவான நேரம் " வேகம்ன்னா அப்படி ஒரு வேகம்.
அடுத்து , சூரிய மண்டலத்தில் நமக்கு இரு வகை இயக்கங்கள் உள்ளன. சூரியனைச் சுற்றுகிறோம் : அதே நேரத்தில் பூமியின் அச்சை மையமாகக் கொண்டும் சுழல்கிறோம் .இவ்விரு இயக்கங்களும் சேர்வதன் விளைவாக நாம் வெளிச்சமான பகல் பகுதியை விட இருளான இரவுப் பகுதியில் வேகமாக செல்கிறோம் . எவ்வளவு வேகம் ?
பூமியின் மத்திய ரேகை உள்ள எந்த இடமும் விநாடிக்கு அரை கி.மீ நகர்கிறோம் . நடுப்பகல் வேகத்திற்கும் நடு இரவு வேகத்திற்கும் உள்ள வித்தியாசம் விநாடிக்கு ஒரு முழு கிலோ மீட்டர் கிடைக்கிறது . அதனால்தான் நபி (ஸல்) அவர்கள் "பகலை விட இரவுப் பயணத்தில் பூமி சுருக்கி கொடுக்கப்பட்டுள்ளது" பார்க்க படம்
அடுத்து , 1944 ஆம் ஆண்டு அமெரிக்க ஜப்பான் தலைநகர் டோக்கியோ மீது வான்வெளித் தாக்கல் செய்ய பி-29 ரக விமானத்தில் 10 கி.மீ உயரத்தில் பறந்த போது (அன்றைக்கு 10 கி.மீ உயரம் புது விஷயம்) திடீரென எல்லா விமானங்களும் தூக்கி வீசப்பட்டன ஆய்வு செய்த போது கிடைத்தது வானத்தில் பெரிய காற்றோடை இருப்பது தெரிய வந்தது அதாவது 10 கி.மீ உயரத்தில் இருந்து 13 கி.மீ உயரம் வரை . அகலம் 200 முதல் 400 கிமீ உள்ள காற்று நதி வீசிக் கொண்டே இருக்கிறது . காற்றின் வேகம் 400 கி.மீ இருந்து 600 கி.மீ இந்த காற்றோடையில்தான் அமெரிக்க விமானங்கள் சிக்கி விட்டன.
இந்த காற்றோடையைத்தான் நபி சுலைமான் (அலை) அவர்கள் பயன்படுத்தி இருப்பார்களோ ?
" சுலைமானுக்கு காற்றை வசப்படுத்தித் தந்தோம் . அதன் காலைப் பயணம் ஒரு மாத தூரமும் அதன் மாலைப் பயணம் ஒரு மாத தூரமும் இருந்தது "
குர்ஆன் (34 : 12)
இந்த தகவலை மையமாகக் கொண்டு அராபிய 1000 இரவுகள் கதையில் " பறக்கும் கம்பளக் கதை சொல்லப்பட்டிருக்கிறது
அடுத்து நபி (ஸல்) அவர்கள் மிஹ்ராஜ் என்னும் விண்வெளி பயணத்தில் புராக் என்னும் வாகனத்தில் (கழுதை விட பெரியது கோவேறு கழுதை விட சிறியதுமான ) பயணம் செய்தார்கள் . அவர்களை ஜிப்ரயில் (அலை) அவர்கள் கூட்டிக் சென்றார்கள்.
மலக்குகள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள் . அவர்கள் பயன்படுத்தும் புராக் வாகனமும் ஒளியினால் படைக்கப்பட்டது.
ஒளியின் வேகம் ஒரு விநாடிக்கு 3 லட்சம் கி.மீ அதனால்தான் அது பார்வை எட்டுகிற தூரத்தில் தனது கால் குளம்பை எடுத்து எட்டு வைக்கும் என்பதாக முஸ்லீம் 259 ல் குறிப்பிடப்படுகிறது
இந்த தகவலை மையமாக வைத்து கிரேக்க காவியங்களில் பறக்கும் குதிரை பெகாசசு (pagasus ) கற்பனை உயிரினமாக தூய வெள்ளை நிறம் கொண்ட பறவைப் போல் சிறகுகள் கொண்ட உயிரினமாக வர்ணிக்கிறார்கள்.

قَالَ الَّذِي عِنْدَهُ عِلْمٌ مِنَ الْكِتَابِ أَنَا آتِيكَ بِهِ قَبْلَ أَنْ يَرْتَدَّ إِلَيْكَ طَرْفُكَ ۚ فَلَمَّا رَآهُ مُسْتَقِرًّا عِنْدَهُ قَالَ هَٰذَا مِنْ فَضْلِ رَبِّي لِيَبْلُوَنِي أَأَشْكُرُ أَمْ أَكْفُرُ ۖ وَمَنْ شَكَرَ فَإِنَّمَا يَشْكُرُ لِنَفْسِهِ ۖ وَمَنْ كَفَرَ فَإِنَّ رَبِّي غَنِيٌّ كَرِيمٌ
(Jan Trust Foundation)
இறைவேதத்தின் ஞானத்தைப் பெற்றிருந்த ஒருவர்: "உங்களுடைய கண்ணை மூடித்திறப்பதற்குள், அதை உங்களிடம் கொண்டு வந்து விடுகிறேன்" என்று கூறினார்; (அவர் சொன்னவாறே) அது தம்மிடம் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டதும்; "இது என்னுடைய இறைவனின் அருட் கொடையாகும் நான் நன்றியறிதலுடன் இருக்கின்றேனா, அல்லது மாறு செய்கிறேனா என்று (இறைவன்) என்னைச் சோதிப்பதற்காகவும்; எவன் ஒருவன் (இறைவனுக்கு) நன்றி செலுத்துகின்றானோ அவன் நன்றி செலுத்துவது அவனுக்கே (நன்மை)யாவும்; மேலும், எவன் (நன்றி மறந்து) மாறு செய்கிறானோ (அது அவனுக்கே இழப்பாகும்;

ஏனெனில்) என் இறைவன், (எவரிடத்தும்) தேவைப் படாதவனாகவும், மிகவும் கண்ணியம் மிக்கவனாகவும் இருக்கின்றான்" என்று (ஸுலைமான்) கூறினார்.
-Sura An-Naml, Ayah 40

பதப்படுத்தப்படாத மம்மியும் ,



பாதிப்படையாத ஷஹீதுகளும்
பண்டை எகிப்து நாகரிகத்தில் அரசர்கள் இறந்தவுடன் மறு உலகிற்கு செல்வதாகவும், அவ்வுலகில் வாழ அவர்களுக்கு இப்பூவுலக உடல் தேவைப்படுவதாகவும் இறந்த அரசர்களின் சடலங்களை பாதுகாப்பது எனப்பட்டதால் மம்மி தொழில் நுட்பம் எகிப்தில் வளர ஆரம்பித்தது .
சடலத்தில் இருந்து நுரையீரல், கல்லீரல் .குடல் மற்றும் மூளை ஆகியவற்றை நீக்கி விடுவார்கள். மூக்கு வழியாக சிறிய குழலை மண்டை வரை செலுத்தி மூளையை உறிஞ்சி எடுத்து விடுவார்கள். இவ்வாறு அழுகும் இவ்வுறுப்புகள் வெளியே எடுப்பதால் மொத்த உடலும் அழுகாமல் பாதுகாக்கப்படுகிறது
பின் உடலுக்குள்ளும் வெளியேயும் நேட்ரான் (Natron) என்னும் வேதியல் பொருளால் தடவப்பட்டு ஒரு அலங்காரமான பேழையில் சடலம் பாதுகாக்கப்படுகிறது.
அட, சொல்ல மறந்து விட்டேனே , உடலிலிருந்து இதயம் மட்டும் வெளியே எடுப்பதில்லை .காரணம் அதுதான் அம்மனிதன் மனம் ,சிந்தனை , ஞாபகம் , காதல் , இயக்கம் போன்றவை இருப்பதாக அவர்கள் நம்பினார்கள் .இதெல்லாம் மூளையின் செயல் என்று அவர்களுக்கு தெரிந்திக்கவில்லை.
கி.மு 1224 முஹர்ரம் பிறை 10 ல் ஃபிர்அவ்ன் என்ற இரண்டாம் ரம்ஈஸஸ் பற்றி பைபிள்
" தண்ணீர்கள் திரும்பி வந்து , இரதங்களையும், குதிரைக்காரர்களையும் , அவர்கள் பிறகாலே சமுத்திரத்துக்குள் பிரவேசித் திருந்த பார்வோனின் இராணுவம் அனைத்தையும் மூடிப் போட்டது . அவர்களில் ஒருவனாவது மீதியான தில்லை (மோஸே 2 , ஆகமம் 14 : 28)
ஃபிர்அவ்னின் உடல் பாதுகாக்கப்படுவதாக திருக்குர்ஆனைத் தவிர வேறு எந்த வேதங்களிலும் சொல்லப்படவில்லை என்பதுதான் வேத ஆய்வாளர்களின் வியப்பான கூற்று .
கி.பி 1886 ஜூன்1 எகிப்தில் "பாபுல் முல்க் என்ற பள்ளத்தாக்கில் "லவட் " என்பவரால் மம்மி ஒன்றை கண்டெடுக்கப்பட்டது .மாஸ்பிரோ என்பவரால் அந்தச் சடலத்தைச் சுற்றி மூடப்பட்டிருந்த துணியைப் பிரித்துப் பார்த்த போது அதன் ஒரு பகுதியில் அழியாத மையினால் சித்திர லிபியில்
" ஃ பிர்அவ்ன் " என்று எழுதப்பட்டிருந்தது (ஆதாரம் : எஸ்.யு அப்துல் ஹை எழுதிய "வழிகாட்டும் வான்மறை) மிக முக்கிய மம்மிகளின் உடலிலிருந்து எடுக்கப்படும் உள்ளுறுப்புகள் போல் ஃபிர்அவ்னின் உடலிலிருந்து எந்த உள்ளுறுப்புகளும் எடுக்கப்படவில்லை இந்த மம்மி மம்மியாக பக்குவப்படுத்தப்படவில்லை என்பதுதான் விஞ்ஞானத்திற்கு இன்னும் பிடிபடாத ஆச்சர்யம்.
" உனக்குப் பின்னுள்ளவர்களுக்கு ஓர் அத்தாட்சியாவதற்காக உன்னுடைய தேகத்தை அழியாமல் நாம் இன்றைய தினம் பாதுகாத்துக் கொள்வோம். எனினும் நிச்சயமாக மனிதர்களில் அநேகர் நம்முடைய இத்தகைய சான்றுகளைப் பற்றிப் பாராமுகமாக இருக்கின்றனர் "
திருக்குர்ஆன் (10 : 92 )
ஃபிர்அவன் உடல் ஒரு வேளை நபி (ஸல்) அவர்களின் காலத்தில் கண்டெடுக்கப்பட்டால் உடலை பாதுகாக்கும் மிகக் குறைந்த வெப்ப நிலையை உருவாக்கும் விஞ்ஞான யுக்தி இல்லாத காலம். எனவேதான் விஞ்ஞானம் வளர்ந்த காலத்தில் வெளிப்படுத்தி உள்ளான்.
இதே மாதிரி விஞ்ஞானம் வளர வளர வேறு என்னென்ன இறை அத்தாட்சிகள் வெளிபட இருக்கிறதோ ? அல்லாஹ்வே அறிவான்.
ஹிஜ்ரி 1350 துல் ஹஜ் மாதம் 1932 ஏப்ரல் மாதம் ஈராக் நகரில் நபித்தோழர்களான ஹுதைபா (ரலி) , ஜாபிர் (ரலி) அவர்களின் புனித உடல்கள் தோண்டி எடுக்கப்படுகிறது .
காரணம் மண்ணறையில் தஜ்லா நதி வெள்ளம் உட்புகுவதாக முதலாம் பைசல் மன்னர் கனவிலும் தலைமை முஃப்தீ கனவிலும் நபித்தோழர்கள் சொன்னதாக இருவரும் கூற 1400 வருடத்திற்கு முந்தைய கபர்களை

தோண்டிய பொழுது அவ்வுடல்கள் சற்று முன் அடக்கப்பட்டதாக இருந்தது அவ்விருவரையும் பாக்தாத்தி லிருந்து 40 மைல் தொலைவில் ஸல்மான் ஃபார்ஸி (ரலி) அவர்களின் அடக்கஸ்தலத்திற்கு பக்கத்தில் மீண்டும் நல்லடக்கம் செய்யப்பட்டது .இந்த நிகழ்ச்சியை 5 லட்சம் பேர் பார்த்தாக மஆரிஃப் மாத இதழ் ஜன 79 ஆஜம்கட் உ . பி

இப்போது யூதர்களின் கைக்கூலியாக சில நவீனத்துவக் கொள்கைக்காரர்களால் நபித் தோழர்களான ஸஹாபிகளின் கபறுகளை தரைமட்டமாக்க துணிந்தனர் .

அப்படி நபித்தோழர்களின் மண்ணறை உடைத்தபோது , அந்த கபுறுகளில் துயில் கொண்டிருப்பதை காணமுடிந்தது

1) sahabi e Rasool a.s - Hajr bin Adi (R.a) grave and body distry by Yazzdi Fores

(ஹஜ்ரத் ஹஜ்ர் பின் அதீத் (ரலி) அவர்கள்

2) Hazarat Zubair bin Qais (RA) சுபைர் பின் கைஸ் (ரலி) அவர்கள்

இவ்விருவர்களின் மக்ஃபூ ராவை உடைத்து அவர்களின் உடலை சேதப்படுத்தியதை மேற்கண்ட வலைதளத்தில் பார்க்கவும்

இது பற்றி குர்ஆனில் அல்லாஹ் ,

"அல்லாஹ்வின் பாதையில் போரிட்டு கொல்லப்பட்டவர்களை இறந்தவர்கள் என நீங்கள் ஒரு போதும் எண்ண வேண்டாம் .அவர்தம் இறைவனிடத்தில் நிச்சயமாக உயிரோடு இருக்கின்றார்கள் .அன்றி அவர்களுக்கு உணவும் அளிக்கப்படுகிறது. தன் அருள் கொடையிலிருந்து அல்லாஹ் அவர்களுக்கு அளித்ததைக் கொண்டு அவர்கள் ஆனந்தத்துடன் இருக்கிறார்கள்"

திருக்குர்ஆன் ( 3:169, 170 )

நபித் தோழர்கள் மட்டுமல்ல மிகச் சாதாரணமாக வாழ்ந்த அல்லாஹ்வின் நல்லடியார்களின் உடலை மண் தின்னாமல் பாதுகாக்கிறான் என்பதற்கு சாட்சியாக

வங்கதேசத்தில் ரங்க்பூர் மாவட்டம் கஷ்மார்கா என்ற கிராமத்தைச் சேர்ந்த பாட்டி ஆயிஷா காத்தூன் 1997 ஆம் ஆண்டில் 106 வயதில் இறந்தார் 6 வருடம் கழித்து தன் 3 மகன்களின் கனவில் தனித்தனியாக தோன்றி , " ஆற்றில் வெள்ளம் வரும் போது நான் இருக்கும் இடத்தில் தண்ணீர் புகுந்து ஓடுகிறது எனவே என்னை இடம் மாற்று " என்று சொல்ல , மகன்கள் தத்தம் கனவில் தாயார் சொல்ல , ஊர் ஜமாத்தார்கள் முன்னிலையில் தாயார் அவர்களின் புனித உடலை மேட்டுப்பாஙகான இடத்தில் மாற்றியமைக்கப்பட்டது .ஆதாரம் : தினமலர் 4.9. 2003.

" ( வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர் , இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா ? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய தீய செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன "

திருக்குர்ஆன் ( 6 : 122 )

முதல் படம் .ஃபிர்அவ்ன் மற்ற படங்கள் நபித்தோழர்கள்

**"சபிக்கப்பட்ட சமுதாயங்கள் "**
**வரலாற்றுத் தொடர் இன்ஷா அல்லாஹ் sep 2017**

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 1
(ஆது)




நபி நூஹ் (அலை) அவர்களின் மகன் ஸாமின் மகன் இரம்மின் மகன் "உஸ்" என்பவருக்கு எட்டு ஆண் .அவர்களின் ஒருவரின் பெயர் "ஆது "அவரின் வழி வந்தவர்கள்தாம் ஆது மக்கள்

இவர்கள் பிடிவாதக்கார முரடர்கள்
குர்ஆன் ( 11 : 59 )
இவர்கள் 3 பிரிவினராக பிரிந்து யமன் நாட்டில் வாழ்ந்தனர் என்று வரலாற்று ஆங்கில ஆய்வாளர் வெல்லஸ்ட் ஜேம்ஸ் என்பவர் தன் ஆய்வில் குறிப்பிடுகிறார்
ஆதுக்கள் பெரும் பெரும் பாறைகளை எளிதாகத் தூக்கி எதிரிகளின் மீது போட்டு அவர்களை அழிப்பார்கள் .நாம பந்தை எறிந்து விளையாடுவதைப் போல சாதாரணமாக பெரிய பெரிய மரங்களை பிடுங்கி தாக்குவார்கள்
"நீங்கள் எவரையும் பிடித்தால் ஈவிரக்கமின்றி கொடுமையாக நடந்துகின்றீர்கள் " குர்ஆன் (20 : 129)
ஆதுக்கள் வாழ்ந்த இடம் நீங்கள் போய்ப் பார்த்தல் தெரியும் சமதளமாக இல்லை மணற் குன்றுகள் நிறைந்த பகுதி . குர்ஆன் "அஹ்காஃப் " என்று குறிப்பிடுகிறது .இப்பகுதியில் வாழ்ந்தவர்களை "கௌமுல் அஹ்காஃப்" என்றழைக்கிறது பள்ளத்தாக்குகளில் மிகவும் கெட்டவை அஹ்காஃப் பள்ளத்தாக்கு (பள்ளத்தாக்குகளில் சிறப்பானது கஃபா இருக்கக் கூடிய பாரான் பள்ளத்தாக்கு )
மலைகளைக் குடைந்து மண்டபம் செய்து அதனை அங்கரித்து (படம் )அதில் உல்லாசமாக வாழ்ந்தனர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஒட்டகத்தை அறுத்து சுட்டு உண்ணக் கூடியவர்கள் இதனால் இறைவன் பெருகும் ஒட்டகை மந்தைகளையும் , பேரீச்ச மரங்களில் செழிப்பையும் ஏற்படுத்தி இருந்தான். இதனைக் குறித்தே இறைவன் குர்ஆனில் ....
"உங்கள் உடலில் பலத்தை அதிகமாக்கியதை நினைவு கூறுங்கள்" குர்ஆன் (7 : 69 )
ராஸிகா ( உணவு அளிக்கக்கூடியது)
ஹாஃபிதா (பிரயாண பாதுகாப்பு அளிக்கக் கூடியது )
ஸாபிதா (மழை பொழியச் செய்வது)
ஆகிய 3 கற்சிலைகளை செதுக்கி வழிபட்டனர் .இறைவன் தொடர்ந்து 700 வருடங்களாக அம்மக்களுக்கு இறப்பை கொடுக்கவில்லை .இதனால் நமக்கு இறப்பு என்பது இல்லை நம் வலிமையைக் கொண்டுதான் இவ்வாறு இருக்கிறோம் என்று நம்பினர்.
"நீங்கள் ஒவ்வோர் உயரமான இடத்திலும் வீணாக சின்னங்களை நிர்மாணிக்கின்றீர்களா ?
நீங்கள் அழியாது என்றென்றும் இருப்பவர்களைப் போன்று (உயர்ந்த மாளிகைகளில் உயர்ந்த வேலைபாடுகளையும் அமைக்கின்றீர்கள்"
குர்ஆன் (26 : 128 ,129) குறிப்பிடுகிறது
ஓரிறைக் கொள்கையை ஹூது (அலை) அவர்கள் எடுத்துக் கூற , அவர்களை மன்னன் ஜல்ஜான் தலைமையில் படு மோசமாக தாக்கினர் . இதனால் நபியவர்கள் கையேந்தி துஆ கேட்டார்கள் ஜனாதத் இப்னுல் அஸம் , மஸீத் இப்னு ஷஹீத் , நுகைப் இப்னு கலீ இப்படியாக 4000 பேர்கள் ஏகத்துவத்தை ஏற்றுக் கொண்டனர் .
ஒரு ஷவ்வால் பிறை இறுதி புதன் அதிகாலையில் காற்று வீசத் தொடங்கியது பின் வேகம் வேகமாக கூடிக் கொண்டே போய் அது சூராவளியாக மாறியது மறு புதன் வரை காற்று தொடர்ந்து அடித்தது
(இதன் அடிப்படையில்தான் ஒடுக்கத்துப் புதன் ஏற்பட்டது என்றும் கூறுவர்.)
"அவர்கள் மீது ஏழு இரவுகளும் எட்டு பகல்களும் தொடர்ச்சியாக வீசச் செய்தான். நிச்சயமாக அவர்கள் வேருடன் வீழ்ந்த பேரீச்ச மரங்களின் அடித்தூர்களைப் போன்று அதில் அடித்து வீழ்ந்து கிடப்பவர்களாய் அக்கூட்டத்தினரை நீர் காண்பீர் " குர்ஆன் (69 : 07)
(நீங்கள் போய் வரக்கூடிய வழியில்தான் ஏமன் ) அவர்கள் இருந்த இடங்கள் உங்களுக்கு நன்றாகவே தென்படுகின்றன "
குர்ஆன் (89 : 08)

**Muhammad Thaj Muhyideen**
"ஆத்இனத்தார் தூதராக ஹூத் நபிகள் வந்தார்கள் " - (7:65)
ஆணவத்தால் உண்மைதனை அவ்வினத்தார் மறுத்தார்கள்
ஹூத்நபியைப் பின்பற்றி உயிருடனே பிழைத்திருக்க உடன்மறுத்தோர் கல்மழையால் ஒன்றிலாது அழிந்தார்கள்"
(7: 83-84)
- 2016 டிசம்பர் கொழும்பு உலக இஸ்லாமிய தமிழ் இலக்கிய மாநாட்டில் வெளியிட்ட 'திருக்குர்ஆன் கருத்துக் கோவை' நூலில் 2ஆம் பகுதி இறைத் தூதர் வரவாறு பகுதியில்
உள்ள வரிகள்.

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 2




(ஸபா மக்களும் மஆரிப் அணைக்கட்டும்)
ஏமன் தேசத்தில் ஸபா என்றொரு மாநிலம் இரண்டு மலைகளுக்கு இடையே பெரிய அணையைக் கட்டி நீரைத் தேக்கி காய்கனிகளை உற்பத்தி செய்து மிகவும் செழிப்பாக இருந்தனர். அந்த அணையின் பெயர் மஆரிப்
ஸபாவில் வீசும் காற்றுக்கு விசேஷ தன்மை இருந்தது . அக்காற்றால் விஷ ஜந்துக்களால் உயிருடன் இருக்க முடியாது இதனால் பூக்களை உதிர்க்கும் எந்த ஜந்தும் இல்லாததால் அத்தனை பூக்களுமே காயாகி கனியாகி விடும் .
"ஸபாவாசிகள் வசித்திருந்த இடத்தில் அவர்களுக்கு நல்லதோர் அத்தாட்சி இருந்தது. அதன் வழியே செல்பவர்களுக்கு வலப்புறமாகவும் . இடப்புறமாகவும் இரு சோலைகள் இருந்தன " . குர்ஆன் (34 : 15 )
அவ்வூரிலுள்ள பெண்கள் தங்கள் பக்கத்து வீட்டுக்குச் செல்லும் போது தலையில் வெறுங் கூடையை வைத்துக் கொண்டு பழத் தோட்டத்தின் ஊடே சென்றால் பழங்கள் உதிர்ந்து கூடை நிறைந்து விடும். அத்தனை செழிப்பு .
இப்பழங்களைக் கொண்டு மிகப் பெரிய அளவில் வியாபாரம் பெருக ஸபாவைச் சுற்றி ஆங்காங்கே சிறிய பெரிய ஊர்கள் உருவாகின .
"அவர்களுடைய ஊருக்கும் நாம் அருள் புரிந்த ஊர்களுக்கும் இடையில் தொடர்ச்சியாக பல கிராமங்களையும் உண்டு பண்ணி, அவைகளில் பாதைகளையும் அமைத்து .இரவு பகல் எந்த நேரத்திலும் அச்சமற்றவர்களாக அதில் பிராயணம் செய்யுங்கள் " (என்று கூறினோம் ) குர்ஆன் ( 34 : 18 )
ஏமன் தேசத்தில் 13 ஊர்களில் 13 நபிமார்களை இறைவன் அனுப்பி வைத்து . இறைவனின் அருட்கொடையை அவர்களுக்கு நினவூட்டினார்கள். அதற்கு அவர்கள் " எவ்வித அருட்கொடையும் எங்கள் மீது இருப்பதாக நாங்களறியவில்லை. ஆகவே உங்களது இறைவனுக்கு இயலுமானால் அந்த அருட்கொடைகளை விலக்கிக் கொள்ள செய்யுங்கள்" என்று கூறினார்கள் என்பதாக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள் .
மேலும்........
" எங்கள் ஊரைத் தொடர்ந்து பல ஊர்கள் இருப்பது எங்கள் பயணத்திறகு இன்பம் அளிக்கவில்லை. "எங்கள் இறைவனே ... எங்கள் பயணங்கள் நெடுந்தூரமாகும்படி செய்வதற்கு மத்தியில் தொடர்ச்சியாக உள்ள இக்கிராமங்களை அழித்து விடுவாயாக " என்று பிரார்த்தித்துத் தமக்கு தாமே தீங்கிழைத்துக் கொண்டனர் .ஆகவே (அவர்களையும் , அவர்களுடைய நகரங்களையும் அழித்து ) பல இடங்களுக்குச் சிதறடித்துப் பலரும் (இழிவாகப் பேசக்கூடிய கதைகளாக்கி விட்டோம் )
குர்ஆன் ( 34 : 19 )
அவர்கள் கட்டிய மஆரிப் அணைக்கட்டியின் கீழே பெரிய பெரிய எலிகளைக் கொண்டு துவாரமிடச் செய்து , தொடர்ந்து பெரும் மழை பொழிந்தது அதனால் மஆரிப் ஆணை நிரம்பி தத்தளித்தது .
" (ஆகவே அவர்கள் கட்டியிருந்த மகத்தானதொர் அணைக்கட்டை உடைக்கக்கூடிய ) பெரும் வெள்ளத்தை அவர்களுக்குக் கேடாக அனுப்பி வைத்தோம் . அவர்களுடைய (உன்னதமான கனிகளையுடைய ) இரு சோலைகளைக் கசப்பும் புளிப்புமுள்ள காய்களையுடைய மரங்களையும் .சில இலந்தை மரங்களையும் கொண்ட தோப்புகளாக மாற்றி விட்டோம்.
குர்ஆன் (34 : 16 )

**Rahmath Rajakumaran**
ஸபா நாட்டில் ஸபஅ கோத்திரத்தார்கள் வசித்த இடத்தில் உள்ள இரு சோலைகள் அமைந்திருந்த இடத்தில் இஸ்ரேலிய வேளாண் விஞ்ஞானிகள் சுவையுடைய கனி
மரங்கள் செடிகளை நட்டினார்கள் . அதற்கு சொட்டுநீர் பாசனம் கொடுத்து வளர்த்தனர்
மரம் செடிகள் வளர்ந்தன பூ பூத்து காயும் போட்டது பழமும் பழுத்தது. ஆனால் தித்திப்பான பழம் கூட புளிப்பும் கசப்பும் கொண்ட பழங்களாக இருந்தது .

சோதித்ததில் அவ்விடத்தின் மண்ணின் மரபணுவே மாற்றப்பட்டிருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.
இது விஷயம் லைப்ரரியில் ஒரு விஞ்ஞான ஜோர்னலில் படித்ததாக ஞாபகம் .

**Rahmath Rajakumaran**
நண்பர் போன் செய்து ஆதார நூல்களையும் சொல்ல வேண்டியது தானே என்கிறார் .
கொடுக்கலாம் . ஒரு கட்டுரைக்கு குறைந்த பட்சம் 4 நூல்களையாவது படிக்க வேண்டும் .அப்புறமா வலைதளச் செய்தியின் நம்பகத்தன்மையை சோதிக்க வேண்டும் .
இந்த பதிவுகளெல்லாம் நேற்று முந்தாநாளில் ஆய்வு செய்து இன்று பதித்தது அல்ல ஏறக்குறைய ஒரு மாதத்திறகு முன்னாடி சிறுகச் சிறுக தகவல்களை சேர்த்துக் கொண்டே வர வேண்டும் . நேற்றைய இரவு காற்றின் அழுத்தங்களைப் பற்றி விஞ்ஞான ஆய்வு செய்து இன்று அதிகாலை ஏற்கனவே ஆய்வு செய்து வைத்திருந்த வரலாற்றுப் பதிவை எழுதுகிறேன் . இதனால் அவ்வப்போது ஆதாரங்களையும் கொடுக்கின்றேன் . சில சமயம் உடல் சடைவுனால் கொடுக்க முடியாமல் போகிறதே தவிர கொடுக்க கூடாது என்ற எண்ணம் இல்லை

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 3
( ஸமூது மக்கள் )






நீங்கள் சிரியாவிலிருந்து என்னைக் கூட்டிக் கொண்டு மதீனா நோக்கி பயணப்பட்டால் , ஹிஜ்ர் நகரத்தை நான் காண்பிப்பேன் . ஹிஜ்ர் என்றால் பாறை குர்ஆனில் 15வது அத்தியாயம் ஹிஜ்ர் (கவனிக்கவும் மலைப்பாறை)
ஆரம்ப காலங்களில் இந்நகரை " செலா" என்றழைத்தனர் . செலா என்றால் பாறை நவீன காலத்தில் கிரேக்கர் இந்நகரை பெட்ரா (petra) என்றனர் பெட்ரா என்றாலும் பாறை . ஆக குர்ஆன் சொன்ன ஹிஜ்ர் யை மாற்றி மாற்றி பாறையின் பொருள்பட எல்லோரும் பெயரிட்டனர் . (கவனிக்கவும் பாறை)

இந்தகரை கி.மு 312 ல் ஹூது (அலை) சமூத்தவரான ஆது மக்கள் (எடோனாமட்ஸ் ) வடிவமைத்தனர் .பின் ஸாலிஹ் (அலை) சமூகத்தவர்களான ஸமூது மக்களால் (நபாட்டியன்கள் )கலை அம்சத்தோடு பொலிவு பெற்றது ஹிஜ்ர் நகர். இதையே குர்ஆன்
"ஆது மக்களுக்குப் பின்னர் அவர்களுடைய பூமியில் உங்களைச் குடியேறச் செய்து ...... அதன் சமவெளியில் மாளிகைகளைக் கட்டியும் , மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்துக் கொள்கின்றீர்கள் ."
குர்ஆன் ( 7 : 74)
ஸமூது மக்கள் சுமார் 600 வருடங்கள் ஹிஜ்ர் யை ஆட்சி செய்து ,தங்கள் வாழ்க்கைமுழுவதும் பாறையாலும் ஒட்டகைகளாலும் சூழப்பட்டது .
அயல் நாட்டு வணிகர்களிடம் நுழைவு வரி , வியாபார வரி (உலகில் வியாபார வரி முதன்முதலாக ) .விதித்து அதன் மூலம் வருமானத்தை பெருக்கி உள்ளனர்
ஸமூது மக்களின் வாழ்க்கையை ஆய்வு செய்தால், பெண் , பாறை , ஒட்டகம் , பேரீச்சம் பழம் , நீர் (நீரின் சுவை அலாதியானது) கிரேக்க சரித்திர ஆய்வாளர்கள் தாஸ்டட் வரிஸ் ,
இஸ்ட்ராபூ போன்றவர்கள் பாறையின் சிற்பங்களை வியந்தாலும் மேAற் சொல்லப்பட்ட இந்த ஐந்து விஷயங்களின் ஸமூதுகளின் வாழ்க்கை உயர்ந்தையும் , அதன் மூலமாகவே தாழ்ந்தையும் குறிப்பிடுகின்றனர் .
ஹிஜ்ரை சுற்றி பலமான மலைகள் தக்க பாதுகாப்போடு இயற்கையாகவே அமையப் பெற்றதால் , எதிரிகளைப் பற்றி பயப்படவே இல்லை.
அழகிய சிற்பங்களை செய்து அதனை வணங்கினர் தலைமை பூசாரி காபூக் பின் உபைது . அவரது கனவில் " ஸமூது மக்களின் அழிவு நெருங்கி விட்டது காபூக்கின் மகனார் ஸாலிஹ் யால் மக்கள் நேர்வழி பெறுவர் "என்பதை அவர் கனவாக கண்டார் .
விடியலில் கோயிலுக்குப் போனார் சிலைகள் யாவும் தலைக்குப்புற வீழ்ந்து கிடக்க பூசாரி தூய்மையற்ற செயலை கோவிலுக்குள் செய்திருப்பார் எனவே அவருக்கு மரண தண்டனையை மன்னர் வழங்க , காபூக் இறைவனை வேண்ட , ஒரு மலைப் பாறையினுள் யாருக்கும் தெரியாமல் 40 வருடம் மறைத்தான் , (கவனிக்கவும் மலைப் பாறை) பின் வெளியே வரும் போது அந்த மன்னர் போய் வேறு மன்னர் இருந்தார் . பின் ஸாலிஹ் நபியைப் பெற்றார் .
ஏகத்துவ கொள்கையை மக்களிடம் நபி ஸாலிஹ் (அலை) எடுத்துரைக்க இவருக்கும் மரண தண்டனை , இறைவன் இவர்களையும் ஒரு மலைப்பாறையில் 40 வருடம் உறங்க வைத்தான் (கவனிக்கவும் மலைப்பாறை) .
மீண்டும் பிரச்சாரத்தை தொடங்க , மன்னன் ஜுன்தாஹ் ,
" ஸாலிஹே ......அதோ உயர்ந்த
அல்காத்திபா மலைப்பாறையில் இருந்து (கவனிக்கவும் மலை பாறை) சூல் கொண்ட நிறைமாத ஒட்டகம் வெளிவர வேண்டும் . வந்ததும் கன்றை ஈன வேண்டும் .அப்படி நீர் செய்தால் சொல்வதை கேட்போம் .
" அதெப்படி உயிரற்ற மலைப் பாறை உயிருள்ள ஒட்டகத்தை எப்படி ஈனும் ? சரி, வெளிவந்த ஒட்டகம் ஆண் துணை இல்லாமல் எப்படி கன்றை ஈனும் ? ஸாலிஹ் அதிர்ச்சியுற்றார்கள் .
இறைவன், "ஸாலிஹே .... 4000 வருடங்களுக்கு முன்பே அப்படி ஒரு ஒட்டகத்தை அந்த அல்காத்திபா மலைப்பாறையில் மறைத்து வைத்துள்ளேன் " என்று கூற மலைப்பாறை முணுமுணுக்க , பாறை பிளந்து ஒட்டகம் ஓடோடி வந்து இவர்களின் கண் முன்னே கன்றையும் ஈன்றது . (கவனிக்கவும் மலைப்பாறை)
இறைவனின் ஒட்டகத்தின் மேய்ச்சல் இடத்தையும் , கிணற்று தண்ணீர் பங்கீட்டுப் பற்றியும் முறை செய்யப்பட்டது இது பற்றி குர்ஆன் (54 : 28 ) வர்ணிக்கிறது .
இறைவனின் ஒட்டகத்தை கொல்லக் கூடியவன் இம்மாதம் பிறப்பதாக ஸாலிஹ் நபிக்கு வஹி வந்தது .
உடனே ஸமூது மக்களிடம் கூற , இம்மாதம் பிறந்த 9 ஆண் மக்களை ஸமூது கொன்றனர் 10 வது பிறந்த " குதார்" (இவன் விபச்சாரத்தில் பிறந்தவன் ) என்பவனின் தகப்பனார் ஸாலூஃப் ஸமூதுகளின் தலைவர் எனவே அவனை கொல்லவில்லை . பிரச்சனை ஆரம்பம்
குதார் எந்த பிரச்சனை இல்லாமல் நன்கு வளர்ந்தான் . இப்படிதானே தம் மகன்களும் வளர்ந்திருப்பார்கள் என்று 9 பெற்றோர்கள் குமுற நபி ஸாலிஹை கொல்வதற்கு மலைப்பாறையில் மறைந்திருக்க (கவனிக்க மலைப்பாறை)
அந்த மலைப்பாறை இடிந்து 9 பேர்களும் மாண்டனர் .
ஸாலிஹ் நபி குனியக்காரர் எனவேதான் ஸமூது 9 பேர்கள் இறந்தனர் மேலும் இவர் சூனியத்தால் மலைப்பாறையில் இருந்தது வெளிவந்த ஒட்டகமும் சூனியம் தான் எனவே அதனையும் அதன் கன்றையும் கொல்ல முடிவு எடுத்தனர் .
"உனைஷா " என்ற பெரும் பணக்காரி யின் ஒட்டகங்களுக்கு மேய்ச்சல் கிடைக்காமல் ஸாலிஹ் ஒட்டகம் இருந்ததால் , அந்த ஒட்டகத்தை கொல்ல வாலிபனாக இருந்த குதாருக்கு தன் இரு மகள்களில் ஒருத்தியை தாரை வார்த்தாள்.

"ஸ்தூப் " என்ற பேரழகி தன் கணவரை ஸாலிஹ் நபி தன் மதத்திலிருந்து பிரித்து அவர் ஏகத்துவத்தை ஏற்றுக் கொள்ள செய்ததால், ஸாலிஹ் நபியை கொல்வதற்கு , பெரும் செல்வத்தையும் அதற்கு முன் பெண்சுகமாக தன்னையும் தருவதாக "மஸ்தஹ் " என்பவனை அவள் ஏற்பாடு செய்து , தன்னை அவனுக்கு விருந்தாக்கினாள் .
ரபியுல் ஆகிர் 16 ஆம் நாள் புதன்கிழமை உலக வரலாற்றில் துர்க்குறியான நாள் . குதாரும் , மஸ்தஹும் மேலும் ஸமூதுகளில் கீழ்த்தரமான 7 பேர்களையும் சேர்த்துக் கொண்டு மது அருந்தி விட்டு , ஒட்டகம் நீரருந்தி விட்டு திரும்பும் வழியில் காத்திருந்தனர் ஆக இந்த ஒன்பது பேரை குர்ஆன் (27 : 48 ) விவரிக்கிறது ,
குதார் ஒரு மலைப் பாறையின் அடியிலும் மஸ்தஹ் அதற்கு எதிர்பாறையின் அடியிலும் மறைந்திருந்தனர் (கவனிக்கவும் மலைப்பாறை)
மஸ்தஹ் வின் அருகில் ஒட்டகம் வந்ததும் அவன் அம்பு எய்தான் அது ஒட்டகத்தின் கால் தசையிதுள்ள நரம்பை துண்டித்தது .
உடனே உனைஷா தன் மகள்களுக்கு கட்டளைப் பிறப்பிக்க அந்த கும்பல்களுக்கு தங்களது முகத்தை திறந்து காட்டினார்கள் . எப்பா என்ன அழகு ...
உடனே குதார் தனது வாளால் ஒட்டகத்தின் பின்னங் காலை பலமாக தாக்கினான் . தாய் ஒட்டகம் மிகப் பெரிய மூன்று பேரொலியை எழுப்பி தரையில் சாய்ந்தது அதன் கன்று அதே அல்காத்திபா மலைப்பாறையினுள் சென்று மறைந்தது (கவனிக்கவும் மலைப்பாறை). இந்த ஒட்டகக் கன்று தான் கியாமத் நாளின் போது வெளியாகும் அதுதான் "தாப்பத்துல் அர்ளு " என்று சொல்லப்படுகிறது .
பின் அந்த ஒன்பது பேர் கும்பல் நபியவர்களை கொல்ல திட்டம் தீட்டி குர்ஆன் (27 : 49,50 ) மலைப்பாறையினுள் பதுங்கினார்கள் அந்த மலைப்பாறையும் சரிந்து (கவனிக்கவும் மலைப்பாறை ) அவர்களுடைய சமூகத்தினர் அழிவதற்கு முன்பே இந்த 9 பேர்களும் மாண்டனர்,
ஒட்டகம் 3 பேரொளியை எழுப்பியதால் 3 நாட்கள் கெடு ஆரம்பமானது ஸமூது மக்கள் மரணத்திலிருந்து தப்பிக்க மலைப் பாறையின் அடியில் சுரங்கம் தோண்டி (கவனிக்கவும் மலைப்பாறை) காதில் பஞ்சை வைத்து அடைத்துக் கொண்டு பதுங்கி இருந்தனர்
நான்காம் காலை பொழுது புலர்ந்தது ஒரே ஒரு இடி சப்தம்தான் .
"அவர்கள் செய்து கொண்டிருந்த அநியாயங்களின் காரணமாக அழிந்து போன அவர்களுடைய வீடுகள் இதோ பாழடைந்து கிடக்கின்றன . அறியக்கூடிய மக்களுக்கு நிச்சயமாக இதில் ஒரு நல்ல படிப்பினை இருக்கிறது "
குர்ஆன் (27 : 52)
ஸமூத் மக்களைப் பற்றி குர்ஆனின் 15 வது அத்தியாயத்தில் குறிப்பிடுகிறது பெயர் " அல் ஹிஜ்ர் "
ஹிஜ்ர் என்றால் மலைப்பாறை , (கவனிக்கவும் மலைப்பாறை)

**Rahmath Rajakumaran**
இப்போது நீங்கள்
குர்ஆனில் 15 வயது அத்தியாயத்தை ஓதிப்பாருங்கள் ஓதும்போது உங்கள் கண் முன் செம் மலைப்பாறையும் செந்நிற ஒட்டகமும் வந்து போகுதா ?
வந்து போகும்
வந்து போகும்

**Rahmath Rajakumaran**
ஸமூது மக்கள் கல்லிருந்து மிகவும் தத்துரூபமாக உயிரற்ற உருவங்களைத்தான் செய்ய இயலும் ஆனால் அல்லாஹ் அதே கல்லிலிருந்து உயிருள்ள ஜீவனை படைக்க இயலும் என்பதை உணர்த்தவே இத்தகைய அற்புதத்தை செய்து காட்டினான் போலும்

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 4
லூத் நபி மக்கள்




இனி ஆண் - பெண் திருமணங்களைப் போலவே ஆண் - ஆண் திருமணங்களும் பெண் - பெண் திருமணங்களும் செய்து கொள்ளலாம் . பிரான்ஸ் ஓரினப் புணர்ச்சியாளர்களின் கடும்போராட்டங் களுக்கு பிறகு பாராளுமன்றத்தில் ஓரின புணர்ச்சியாளர்களுக்கு ஆதரவாக 331 ஓட்டுகளும் எதிராக 225 ஓட்டுகளும் பெற்று ஓரினப் புணர்ச்சியாளர்களுக்கு திருமண அனுமதி சட்ட மசோதா நிறைவேற்றப்பட்டது . ஒரு மனதாக நிறைவேற்றப்பட்டது .
இதனைத் தொடர்ந்து அமெரிக்கா கொலராடோ மாகாணத்தில் ஓ.பு திருமணத்திற்கு உரிமம் வழங்கப்படுகிறது .
ஜப்பான் தலைநகர் டோக்கியோவில் ஓரினப் புணர்ச்சியாளர்கள் வெட்கமே இல்லாமல் இணைந்து புனைந்து வாழ உரிமம் கேட்டு முத்தமிட்டபடியும் கட்டிப்பிடித்தப்படியும் ஊர்வலம் போய் போராடி வருகிறார்கள் .
இந்த மானக்கேடான செய்தி 5000 வருடங்களுக்கு முன் வாழ்ந்த இப்ராஹீம் (அலை) அவர்களின் மனைவி சாரா அவர்களுக்கு சிரிப்பை வரவழைத்ததாக குர்ஆன் (11 : 71 ) ல்...
"அச்சமயம் அங்கு நின்று கொண்டிருந்த அவருடைய கிழ மனைவி லூத் நபியின் மக்கள் செய்யும் தீய மானக்கேடான இக் காரியங்களை செவியுற்று சிரித்தாள் "
சுமார் கி.மு 2061 முதல் கி.மு 1919 முஹர்ரம் பிறை 10 வெள்ளிக்கிழமை வரையுள்ள ஜோர்டான் நாட்டின் வரலாற்றை திருப்பிப் பார்ப்போம்.
"முதஃபகாத் " என்பது ஜோர்டான் நதி தீரத்திலுள்ள ஸதூம் . ஆமோரா , ஆதாம் , ஸ்போயின் , ஸுனுக்கு என்னும் 5 நகரங்களைக் கொண்ட ஒரு நாடு . முதஃபகாத் தலைநகர் ஸ்தூம் , நபி லூத் (அலை) அவர்கள் நபியாக அனுப்பப்பட்டார்கள் . 37 வருட காலமாக ஏகத்துவத்தையும் , சுய ஒழுக்கத்தையும் போதித்தார்கள் இவர்கள் நபி இப்ராஹிம் (அலை) அவர்களின் தம்பி .
முதஃபகாத் செழிப்பான பூமி எனவே வறுமையுள்ள பக்கத்து நாட்டு மக்கள் தர்மம் கேட்டு வந்தனர். முதஃபாகத் மக்களும் வாரி வாரி வழங்கினர்.
நாளடைவில் இரவு பகல் பராது தர்மம் கேட்க , இது பெரும் தொல்லையாக விட்டது. இப்லீஸ் வயோதிக கோலத்தில் வந்து , "பிச்சை கேட்கும் ஆடவர்களைப் பிடித்து புணர்ந்தால் .இத்தொல்லை தீரும் என கூற முதலில் மறுத்த முத ஃபகாத் மக்கள் பிறகு , " செய்தால் என்ன ?"
செய்தார்கள் . பிடித்து பிடித்துப் புணர்ந்தார்கள் .புணர்ததற்கு பிறகு 3 திர்ஹம் அன்பளிப்பும் செய்தார்கள் . இதுவே பெரும் போட்டியாகி விட்டது .
இதை சமரசமாக தீர்த்துக் கொள்ள முதஃபகாத் பணக்காரர்கள் பாத்திரத்தில் சிறு கற்களை போட்டு (கவனிக்க கற்கள் ) ஊருக்கு வரும் பிச்சைக்காரர்கள் மீது வீசி எறிவர் யாருடைய கல் எவர் மீது படுகிறதோ அந்த பிச்சைக்காரர் இவருடைய உடமை என்று பெயர் வைத்துப் பிரித்தார்கள் (கவனிக்க பெயர் ) பிச்சைக் காரர்களை கட்டாயப்படுத்தி புணர்ந்தார்கள் .ஒளி மறைவு இல்லாமல் வெட்ட வெளியில் கூச்சமே இல்லாமல் இராப்பகலாக புணர்ந்தார்கள்.
நாளடைவில் பிச்சைக்காரர்கள் வரத்து நின்று போனது .தம் நகர ஆண்களையே விலை பேசி புணர ஆரம்பித்தனர் . ஓரினப் புணர்ச்சியில் திளைத்த இம் மக்களால் பெண்கள் மீதான பாலுணர்வு இல்லாமல் போனது .பெண்கள் பெண்களையே புணர்ந்து கொள்ள காமப் பிரச்சனை மரபுவழி மாறி போனது .

எனவே இப் பதிவிலுள்ள முதல் பாரா வில் சொல்லப்பட்டது போல் இதற்கென்று சட்டம் ஏற்றி சடங்கு சம்பிரதாயம் பார்த்து சங்கு ஊதினார்கள் .
இந்த ஒ.பு மக்களின் கொடுமைகளை அதிகரிக்கவே இறைவன் ஜிப்ரயீல் (அலை) .மீக்காயீல் (அலை), இஸ்ராஃபீல் (அலை) ஆகிய 3 வானவர்களை இறைவன் அழகான கவர்ச்சிகரமான முகம் கொண்ட இளைஞர்கள் உருவில் (சில வரலாற்று ஆசிரியர்கள் திரு நங்கை கோலமாக இருக்கலாம் என்கிறார்கள் அல்லாஹ்தான் அறிவான் ) முதஃபகாத்தின் தலைநகர் ஸதூமிற்கு அனுப்பி வைத்தான்.
நபி லூத் (அலை) அவர்கள் அழகிய கோலமுடைய தன் விருந்தினர்களைக் கண்டு பதறினார்கள். அதே சமயம் அவர்களின் மனைவி (பெயர் : ஹல்ஸகா என்றும், வைலா என்றும் .ஹாயிலா என்றும் , வாலிஹா என்றும் ஹிபலா என்றும் பலவிதமாக கூறப்படுகிறது சரி , ஏதோ ஒரு " லா" ) க்கு கொண்டாட்டம் .
விருந்தினர்களுக்கு உணவு சமைக்க உப்பு வாங்கி வருவதாக (கவனிக்க உப்பு) வீட்டின் பின்புறமாக போய் தன் கூட்டத்தினருக்கு சேதி சொல்ல , உடனே ஒ.பு மக்கள் நபியின் வீட்டை அடைந்தேறினார்கள் .
நபியவர்கள் " விருந்தாளிகள் முன் என்னை கேவப்படுத்தி விடாதீர்கள் .என் பெண் மக்களை நீங்கள் திருமணம் செய்து கொள்ளுங்கள் என்று கூற "உங்களுடைய பெண் மக்களிடம் எங்களுக்கு யாதொரு தேவையும் இல்லை .நாங்கள் விரும்புவது என்ன என்பதை நிச்சயமாக நீங்கள் அறிவீர்கள்" என்று அவர்கள் கூற " உங்களை தடுததுவிடக் கூடிய பலமான ஆதரவை நான் அடைய வேண்டாமா ? உடனே விருந்தாளிகள் நபியை நோக்கி , "லூத்தே நாங்கள் இறைவனால் அனுப்பப்பட்ட தூதர்களாகிய வானவர்கள் . இவர்கள் நிச்சயமாக உங்களை வந்தடைய முடியாது என்று கூறினர் .. நம்முடைய கட்டளையின் நேரம் வந்ததும் அவர்களுடைய ஊரை மேல் கீழாக கவிழ்த்து விட்டோம் அன்றி அதற்கு முன்னர் அவர்கள் மீது சுடப்பட்ட செங்கற்கள் மழையைப் போல் பொழியச் செய்தோம். எறியப்பட்ட செங்கல் ஒவ்வொன்றிலும் உங்கள் இறைவனால் அடையாளம் (பெயர்) இடப்பட்டிருந்தது புரட்டப்பட்ட அவ்வூர் வெகு தூரமுமல்ல . விரும்பினால் அதனை நேரில் சென்று பார்க்கலாம் .
குர்ஆன் (11: 78 - 83)
அன்று ஒ.பு மக்கள் பொடி கற்களை எறிந்து அக்கல் பட்டவருக்கு தன் பெயரை சூட்டி புணர்ந்தார்கள் அதனால் தானோ பெயர் அடையாளமிட்ட கற்களைக் கொண்டு அந்தந்த ஒ.பு காரர்களை கொன்றொழித்தானோ ?
சரி "அவங்க ஊரை மேல் கீழாக கவிழ்த்திப் புரட்டிப் போட்டது " ஒ பு காரன் எதிர் ஆணை புணரும் போது கவிழ்த்திப் புரட்டி தானே.... புரிந்தது புரிந்தது
அந்த செழிப்பான 5 நகரங்களைக் கொண்ட முதஃபகாத் இன்று சாக்கடலாக மற்ற கடலின் உப்பை விட அதிகமாக
34 . 2 சதவீதம் உள்ளது
ஏன் இத்தனை உப்பு ?
அன்றைக்கு நபி லூத்தின் மனைவி உப்பு வாங்கி வருவதாக பொய் சொல்லியதால் 5 நகரங்களும் உப்பால் சூழப்பட்ட செத்தக் கடலாக மாறியது .
கிழக்கு ஜோர்டானுக்கும் , பாலஸ்தீனத்துக்கும் இடையில் வடக்கிலிருந்து தெற்கு வரை 67 கி.மீ நீளத்திலும் 18 கி.மீ அகலத்திலும் , கடல் மட்டத்திலிருந்து 1400 அடி தாழ்வாக உள்ளது . சாக்கடலின் ஆழம் 1000 அடியிலிருந்து 2400 அடி வரை உள்ளது .இந்த 2400 அடி ஆழம் உள்ள சாக்கடலின் தெற்கு பகுதியில்தான் ஸதூம் தலைநகர் புதைந்து உள்ளது .
இச் சாக்கடலின் அடி ஆழத்தில் கண்டெடுக்கப்பட்ட பொருட்கள் எல்லாமே தலைகீழாக உள்ளது .
இக் கடலில் பொட்டாஷ் என்ற சாம்பல் உப்பு அதிகமாக எடுக்கப்பட்டு , ... உரம் தயாரிக்கும் ஆலைகள் அதிகம் உள்ளது .
உரம் தயாரிக்க யூரியா அவசியம் ஒ.பு புணர்ந்து வெளிப்படுத்தும் விந்தில் (சிறுநீரிலுள்ள ) யூரியா அதிகமாக இருக்கிறது.
நபி (ஸல்) அவர்கள் மிஹ்ராஜ் என்கிற விண்வெளி பயணத்தின்போது வானவெளியில் குடம் அளவிற்கு கற்கள் குவிக்கப்பட்டிருப்பதைக் கண்டு , வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் விபரம் கேட்டார்கள் . "அதைப் பற்றி இப்போது வினவ வேண்டாம் " என்றார் ஜிப்ரயீல் (அலை) அவர்கள்
பின்னர் மிஹ்ராஜ் முடித்து வரும் போது அவ்விடம் வந்த போது நபியவர்கள் வினவ, "இவை லூத்துடைய கூட்டத்தினர் மீது எறியப்பட்டது போக எஞ்சி இருப்பவை.தங்களின் சமூகத்திலுள்ள கூட்டத்தினரான அநியாயக்காரர்கள் இந்த தவற்றை செய்யும்போது இந்தக் குடக் கற்கள் மழையாய் பொழியும் " என்றார்கள் .
பிரான்ஸ் பாராளுமன்றத்தில் ஒ.பு காரரகளுக்கு ஆதாரவாக வாக்களித்த 331 பேர்களின் பெயர்கள் அந்தக் குடக்கற்களில் பொறிக்குப்பட்டிருக்கும்.
ஞாபகத்தில் இருக்கட்டும் தலைக்கு மேலே குடக்கற்கள் .

**Badru Deen**
நபி லூத்தின் பிரச்சாரத்தில் கோபமுற்ற மக்கள் இனி நபி லூத் அலைஹிவஸ்ஸல்லம் அவர்கள் வீட்டிற்கு எந்த உறவினர்கள் வந்தாலும் தகவல் தரவேண்டும் இல்லையேல் குடும்பத்திற்கு அச்சுறுத்தல் ஏற்படும் என கூறி எச்சரித்திருந்தனர், இதனால்

நபி லூத் அவர்களுக்கு பெரும் சிரமம் ஏற்பட்டது, வீட்டிற்கு வரும் உறவினர்கள் குறித்த செய்தியை அவர் மனைவியே துப்புக்கொடுத்தார், எனவே அல்லாஹ் வானவர்களை நபி இப்ராஹீம் அலைஹிவஸ்ஸல்லம் வீட்டிற்கு அனுப்பினான் நபி இஸ்ஹாக்கின் பிறப்பை அறிவித்துவிட்டு நபி லூத்தை தேடி சென்றனர் நபி லூத் அவர்கள் வானவர்களை மனிதர்கள் என நினைத்து ஊரை பற்றி வானவர்களிடம் வாக்குமூலம் கொடுத்துவிட்டார் இதனால் நபி வாயால் மக்களை பற்றி அறிந்த பின்னர் மேற்கூறிய சம்பவங்கள் நடந்தது.

**எம்.ஏ ஷகி**
இத்தகைய பாவம் புரிந்து கொண்டிருந்த சமூகத்திற்கு அனுப்பப்பட்ட நபியின் பெயர் லூத் (அலை) அவர்கள். இவர்கள் இப்ராஹிம் (அலை) அவர்களின் காலத்தவர் ஆவார்கள்.
லூத் (அலை) அவர்களின் கூட்டத்தினர் பெண்ணை விவாகஞ் செய்து இன்பம் அனுபவிப்பதை வெறுத்து ஆணுடன் இன்பம் அனுபவிப்பதையே விரும்பினர். இது இயற்கைக்கு விரோதமானது, கொடிய பாவத்திற்குரியது. எனவே இவ்வாறு செய்யாதீர்கள்! என லூத் (அலை) அவர்கள் அம்மக்களுக்கு உபதேசம் செய்தார்கள் அதை அம்மக்கள் உதாசீனம் செய்தனர். அல்லாஹ்வின் தண்டனை இவ்வுலகிலேயே அவர்களுக்குக் கிடைத்தது. இதை அல்லாஹ் நமக்கு எடுத்துக்காட்டி நீங்களும் அவர்களைப் போன்று "ஆண் புணர்ச்சி" செய்து என் கோபத்திற்குள்ளாக வேண்டாம்! என அறிவுறுத்தியுள்ளான். (15:72-77)
நம்முடைய கட்டளை(யின் நேரம்) வந்ததும் அவர்களுடைய ஊரை மேல் கீழாகக் கவிழ்த்து விட்டோம். (அதற்கு முன்னர்) அவர்கள் மீது சுடப்பட்ட செங்கற்களை (மழையைப் போல்) பொழியச் செய்தோம். (எறியப்பட்ட செங்கல் ஒவ்வொன்றிலும்) உம் இறைவனால் அடையாளம் இடப்பட்டிருந்தது. (புரட்டப்பட்ட) அவ்வூர் (மக்காவில் வாழும்) இந்த அக்கிரமக்காரர்களுக்கு வெகுதூரமுமல்ல (விரும்பினால் அதனை அவர்கள் நேரில் பார்த்துக் கொள்ளலாம்). (11:82,83)
(தீய காரியத்திற்காக) அகிலத்தாரில் ஆடவர்களிடம் வருகின்றீர்களா? உங்கள் இரட்சகன் உங்களின் மனைவிகளிலிருந்து உங்களுக்கெனப் படைத்ததையும் நீங்கள் விட்டுவிடுகிறீர்கள். இல்லை! நீங்கள் (அல்லாஹ்வின்) வரம்பைக் கடந்த சமூகத்தவர்கள் (என்றும் கூறினார்) (26:165,166)
லூத்தையும் (நபியாக்கி) அவருக்கு ஞானத்தையும், கல்வியையும் கொடுத்து, தீயகாரியங்களைச் செய்து கொண்டிருந்த ஊரிலிருந்தும் நாம் அவரை இரட்சித்துக் கொண்டோம். நிச்சயமாக அவ்வூரார் (மனிதர்களில்) மிகக் கெட்ட ஜனங்களாகவும், பெரும் பாவிகளாகவும் இருந்தனர். (21:74)
லூத் நபியின் கூட்டத்தினர் செய்த கொடிய (ஆண் புணர்ச்சி) எனும் பாவத்தைச் செய்பவர்களைக் கண்டால் இருவரையும் கொலை செய்யுங்கள் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் (அபூதாவூத், திர்மிதி, இப்னுமாஜா)
ஆணுடைய அல்லது பெண்ணுடைய பின் துவாரத்தில் புணர்ந்தவனை அல்லாஹ் மறுமையில் கருணைக் கண்கொண்டு பார்க்கமாட்டான் எனவும் நபி அவர்கள் கூறினார்கள். (திர்மிதி, நஸயீ, இப்னுஹிப்பான்)
இக்கொடிய பெரும் பாவத்திலிருந்து அல்லாஹ் நம் அனைவரையும் காப்பாற்றுவானாக!

**Mashook Rahman**
தகவல் கட்டுறுதியானதாக உள்ளது.. சதூம் என்ற சொல்லை Sodome என்று ஆங்கிலத்தில் சொல்கிறார்கள்.. இச்சொல் லத்தீன் கிரேக்கம் மற்றும் ஹீப்ரூ மூலமொழிகளிளிருந்து பெறப்பட்டுள்ளது.. மேலும் அனைத்து வகையான தகாத உறவுகளையும் குறிப்பதாக இச்சொல் உள்ளது

## சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 5




(குரங்குகளாக மாற்றப்பட்ட அய்லா வாசிகள்)
நீங்கள் எகிப்தில் மக்காவை நோக்கி செல்லும் போது பழைய நகரமான அய்லா வைப் பார்க்கலாம்
"அய்லா "அகபா வளைகுடாவின் வட கோடியிலுள்ள துறைமுக நகர் .
நபி தாவூத் (அலை) - கி.மு1024 - கி.மு 963
சமூகத்தினர்களுக்கு இறைவன் சனிக்கிழமை ஜூம்மாவுடைய நாள் அன்றைக்கு ஓய்வுக்குரிய நாளாக அறிவிக்கப்பட்டு .மீன் பிடித் தொழில் செய்பவர்கள் ஜும்மா தக்க ஏற்பாடு செய்ய வேண்டுமே தவிர ,கடலில் "ஐலேசா " வேண்டாம் என்று கட்டளை இடப்பட்டது .

"சனிக்கிழமையன்று (மீன் வேட்டையாடி)க் கொண்டித்தார்கள் .ஏனென்றால் , சனிக்கிழமையன்று (அக்கடலில் உள்ள) மீன்கள் அவர்கள் முன் வந்து ( நீர் மட்டத்திற்குத்) தலைகளை நீட்டிக் கொன்டிருந்தன . சனிக்கிழமை அல்லாத மற்ற நாட்களில் அவர்களிடம் வருவதில்லை .அவர்கள் பாவம் செய்து கொண்டிருந்தன் காரணமாக அவர்களை இவ்வாறு மிகக் கடினமான சோதனைக்கு உள்ளாக்கினோம்."
குர்ஆன் ( 7 : 163)
சனிக்கிழமை மீன்கள் பெருமளவுத் துள்ளி குதிப்பதால் கடற்கரை ஒட்டி சிறு சிறு குட்டைகள் வெட்டி அதில் கடல் நீரைத் தேக்கினால் சனிக்கிழமை அதிகமான மீன்கள் இக்குட்டைகளில் வந்து விழும் அதை மறுநாள் ஞாயிற்றுகிழமை வந்து எடுத்தால் இறை சாபம் தம் மீது ஏற்படாது என்று மீனவர்கள் என் எண்ணினர் .
அய்லாவில் மொத்தம் 70 ஆயிரம் பேர்கள் இருந்தனர் இதில் 12 ஆயிரம் பேர்கள் மீன் பிடித் தொழில் செய்து வந்தனர் .இறைக்கட்டளை இறங்கி 40 வருஷம் ஆகி விட்டது . சனிக்கிழமை குட்டைகளில் தேக்கி ஞாயிறு எடுத்து வந்தது விற்று பெரும் பணக்காரர்களாக வலம் வந்தனர் அய்லா செம்படவர்கள் .
எந்த இறை வேதனையும் வராததால் "தங்களுக்கு சனிக்கிழமையிலும் மீன் பிடிக்க அல்லாஹ் ஆகுமானதாக்கிவிட்டான் " என்று எண்ணினர்.
திடீரென்று ஓர் இரவுப் பொழுது இவர்களை குரங்குகளாக மாற்றி விட்டான்.
மனிதர்களின் பெருவிரல்களைக் காட்டிலும் குரங்குகளின் பெருவிரல்கள் வலு குறைந்தது . கொஞ்சம் பின்னந் தள்ளி இருக்கும்
மரக்கிளையைப் பிடிக்க . பொட்டுக்கடலையைப் பொறுக்கி எடுக்க பக்கத்து குரங்குகளுக்கு பேன் பார்க்க இது மாதிரியான வேலைக்கு குரங்குகள் பெருவிரலைப் பயன்படுத்துகின்றன . இதனால் குரங்குகளாக மாறிய அய்லா வாசிகளால் பின்னந் தள்ளி இருக்கும் பெரு விரலைக் கொண்டு தங்கள் வீட்டின் கதவு தாழ்ப்பாளை திறக்க முடியாமல் கூச்சலிட்டனர்.
மற்றவர்கள் சுவர் ஏறி குதித்து அவர்களைப் பார்த்த போது . அத்தனை பேர்களும் பாதி மனிதர்களாகவும் மீதி குரங்குகளாகவும் உருமாறி பின் கொஞ்ச நேரத்தில் முழு குரங்குகளாகவே உருமாறி விட்டனர். இப்படி 3 நாட்கள் உணவு உண்ணாமலும் தண்ணீர் குடிக்காமலும் , .இனச் சேர்க்கை எதுவும் செய்யாமலும் இறந்து போயினர்
இவர்கள் இறக்கும் வரை உருவத்தில் தான் குரங்குகளாக மாறி இருந்தனரைத் தவிர ,அறிவிலும் , விளக்கத்திலும் அதாவது நாம் குரங்குகளாக மாற்றப் பட்டிப்பதை நன்கு அறிந்தே இருந்தனர் .
குரங்குக்குகளுக்கு பறித்து தின்னக் கூடிய புத்தி உண்டு பனீ இஸ்ரவேலர்களுக்கு சனிக்கிழமை அன்று கடலிலுள்ள மீன் செல்வங்களை பறித்தால்தான் குரங்குகளாக மாற்றப்பட்டார்களா ? அவர்களில் வயோதிகர்கள் பன்றிகளாக மாற்றப்பட்டதற்கு அசுத்தங்களை உணவாக கூடியது பன்றி எனவே ஹாரமான உணவை தங்கள் வயோதிகர்களுக்கு கொடுத்தமையால் பன்றிகளாக மாற்றப்பட்டிருக்கலாமா ? தெரியவில்லை.
சிம்பன்ஸி குரங்கு அமெரிக்காவில் சைகை பாஷைக் கற்றுக் கொடுத்து சுமார் 200 வார்த்தைகள் அதனுடன் ஜோக் அடித்துக் கொண்டு பேசிக் காட்டி இருக்கிறார்கள் .மனிதர்களைப்போல் புத்திக் கூர்மையானது பாப் சங்கீதத்தை விட ஜாஸ் ரொம்ப பிடிக்குமாம் . குரங்குகளைப் பற்றிய வீடியோ அதிகம் பார்த்து ரசிக்குமாம்.
கொரில்லா வகை குரங்கு சற்றே உள்ளடங்கிய " நுங்கு "மாதிரி மூக்கு .மனிதர்களைப்போல் கைகளைக் கொண்டது .ஆறு அடி உயரம் கறுப்பு உருவம் .275 கிலோ. வீச்சு வீச்சென்று குரல் எழுப்பும் .தனல் தாழ்த்தி நட்புணர்வுடன் ஒரு பார்வை . உற்சாகம், மற்றும் சோக சமயங்களில் படபடவென்று தன் மார்பை இரண்டு கைகளாலும் தட்டிக் கொள்ளும்.
மனிதர்களுக்கு 23 + 23 =46 குரோமோஸோம்கள் . குரங்களுக்கு
24 +24 =48 குரோமோஸோம்கள்.
குரோமோஸோம்களில் 2-வது குரோமோஸோம் பெரியது இந்த குரோமோஸோமுடன் இன்னொரு இணைந்து "ஏப்" என்னும் பெரிய மனித குரங்கு .
குரங்குகளின் மூளையில் 'ஹிப்போகாம்பல் " என்ற ஒரு சின்ன பாகம் இல்லை . குரங்களில் உராங்குட்டானின் மூளையின் அமைப்பு மனித முளைப் போல் இருந்தாலும் ஹிப்போகாம்பல் இல்லை . ஆனால் ஹிப் போகாம்பல் நம் மூளையில் பெரும் பங்காற்றிக் கொண்டிருக்கிறது எனவே சார்லஸ் டார்வினின் குரங்கிலிருந்து மனிதன் படைக்கப்பட்டான் என்ற தத்துவம் மறுக்கப்பட்டுள்ளது.
"அய்லா" வாசிகளுக்கு இவை அத்தனையும் ஒரே ஒரு இரவில் மாற்றம் செய்யப்பட்டு ,குரங்குகளாகவே மாற்றப்பட்டனர் .

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 6






மத்யன் வாசிகளும், அய்க்கா வாசிகளும்
பாலஸ்தீனுக்குத் தெற்கே செங்கடலுக்கும் , அகாபா வளைகுடாவுககும் நடுவில் உள்ள பிராந்தியத்தில் வாணிகப் போக்குவரத்துப் பாதையில் அமைந்திருக்கிறது "மத்யன்" இங்குள்ளவர்களை மத்யன் வாசிகள் என்றழைக்கப்படுகிறது .
மத்யன் இட நெருக்கடியின் காரணமாக பக்கத்து ஈச்சந்தோப்புகள் நிறைந்த காட்டில் உருவாக்கப்பட்டது "அய்க்கா " நகர் . இங்குள்ளவர்களை "அய்க்காவாசிகள் " என்றழைக்கப்படுகிறது .பின் அய்க்கா .பதா, அஸ், வஃபா ஆகிய ஊர்களாக விரிவுபடுத்தப்பட்டது .
அய்க்காவாசிகள் மரங்களை தெய்வாக வணங்கினர்.
இவர்களின் அரசர்களாக அபுஜத் , (இவரின் பெயரை வைத்தே அப்ஜத் கணக்கு முறை வகுக்கபபட்டது) ஹவ்வஸ் , ஹுத்தி, கலிமன், (இவரின் காலத்தில் தான் நபி ஷுஐப் (அலை) தோன்றினர்கள் )
ஸஅஃப்ஸ் .குர்ஷத் ஆகிய மன்னர்கள் அய்க்காவை ஆண்டனர்
"அய்க்கா" என்றாலே, தோப்புகள் என்று பொருள்படும் "அஸ்ஹாபுல்அய்க்கா"
(தோப்பு வாசிகள் )என்றேழைக்கிறது குர்ஆன் (15 : 78)
அய்க்காவாசிகள் சுங்கம் வசூலிப்பது (மாமூல் வசூலிப்பது) . பதுங்கிருந்து வழிப்பறி , உணவுப் பொருட்களை பதுக்கி பஞ்சத்தை ஏற்படுத்தி அநியாய விலைக்கு விற்பது .தங்க .வெள்ளிக் காசுகளின் ஓரங்களை வெட்டி எடுப்பது ..
நபி ஷுஐப் (அலை) அவர்கள் இவர்களுக்கு நபியாக அனுப்பப்பட்டார்கள் . நபி லூத் (அலை) அவர்களின் மகள் 'ரீத்' மத்யன் என்பவரை மணந்து இத்தம்பதிகளின் கொள்ளுபேரன் நபி ஷுஐப் (அலை) .இவர்கள் மிகச் சிறந்த சொற்பொழிவாளர் இதனால் இவர்களை "கத்தீபுல் அன்பியா" (நபிமார்களின் சொற்பொழிவாளர் ) என்ற பட்டம்
அய்க்கா வாசிகள் நபியை பொய்யர் என்று கேலி செய்தனர் , மாறு செய்தனர்.
" நீங்கள் கூறுபனவற்றை எங்களால் விளங்கிக் கொள்ள முடியவில்லை . உங்களை பலவீனராக காண்கிறோம் .உங்கள் இனத்தார் இல்லாவிடில் உங்களை கல் எறிந்தே கொன்றிருப்போம் " குர்ஆன் ( 11 : 94)
நபி ஷுஐப் (அலை) அவர்களின் இறை வல்லமையைப் பற்றிய கம்பீரான சொற்பொழிவைக் கேட்டு ....
நீங்கள் உண்மை சொல்பவராக இருந்தால் வானத்திலிருந்து ஒரு சில துண்டுகளை நம் மீது எறியுங்கள் " என்று கேட்டனர் ...குர்ஆன் (26:187 )
உடனேயே 7 நாட்கள் அய்க்கா வெப்பம் தணலாக கொதிக்க குளம், குட்டை , கிணறு எல்லாமே வரண்டது. மக்கள் தவித்து வீட்டை விட்டு வெளியேறி காடுகளின் மர நிழல்களின் தங்க , அந்த வெப்பம் நரகத்திலிருந்து சிறிதளவு அவர்கள் கேட்டதற்கு இணங்க கொடுக்கப்பட்டது .
ஒரு புதன் அதிகாலை ஒரு கரு மேகம். தோன்றியது .அத்தோடு ஜிலு ஜிலு வென்று தென்றலும் வீசியது ,. உடனே அய்க்காக்கள் மகிழ்ச்சியால்
மலர்ந்திருக்க ... திடீரென அந்த கருமேகத்திலிருந்து பெரிய தீச்சுவாலை அனைவரையும் பொசுக்கி வெறும் சாம்பலாக்கியது .
"ஷுஐபை பொய்யாக்கியவர்கள் தங்கள் ஊர்களில் ஒருக்காலத்திலுமே வசித்திரா தவர்களைப் போல் யாதொரு அடையாமுமின்றி அழித்து விட்டனர் "
குர்ஆன் ( 7 : 92 )
மத்யன் வாசிகள் , அளவையிலும், நிறுவையிலும் மோசடி செய்தனர்..
விவசாய வியாபார பொருட்களை வாங்கும் போது அதிகமாக அளவிலுள்ள அலகுகள் அளந்து எடுத்துக் கொண்டு விற்பனை செய்யும் சிறிய அலகுகளைக் கொண்டு அளந்து கொடுப்பார்கள் .
இறை வஹி நபியவர்களை ஊரை விட்டு வெளியேறச் சொன்னது . தம்மைப் பின்பற்றிய 1700 பேர்களை அழைத்துக் கொண்டு வெளியேறி மூன்று கோஸ் தொலைவில் குடியேறியதும் ஒரு புதன் அதிகாலை மத்யன்

வாசிகள் புரண்டு படுத்துக் கொண்டிருக்க ஒரு பயங்கர பேரொலியும் அதனைத் தொடர்ந்து நில நடுக்கம் ஏற்பட்டது.
"விடியற்காலை நேரத்தில் இடி முழக்கம் பிடித்துக் கொண்டது. . அவர்கள் தங்கள் வீடுகளில் இருந்தவாறே இறந்து கிடந்தனர் " குர்ஆன் ( 11 : 94)
நபி ஷுஐப் (அலை) அவர்கள் அழுது அழுது அவர்களின் கண் பார்வை இழந்தது . அதன் பின்பு 12 ஆண்டுகள் மத்யனிலேயே தங்கி இருக்க அப்பொழுதுதான் நபி மூஸா (அலை) அவர்கள் அங்கு வந்து ஷுஐப் நபியவர்களின் மகள் சபூராவை மணந்தார்கள் .
நபி ஷுஐப் (அலை) ஹஜ்ஜு சென்று அங்கு நெடுங்காலம் வாழ்ந்து 180 வயதில் இவ்வுலகை நீத்தார்கள் . மக்காவில் சபா , மர்வா மலைகளுக்கிடையில் நல்லடக்கம் செய்யப்பட்டது .

**Rahmath Rajakumaran**

நபி ஷுஐப் (அலை) அவர்கள் தன் கண்ணொளி திரும்ப பெறுவதற்கு இறைவனிடம் ' " என் இறைவனே ..... இப்ராஹீமுல் கலீல், இஸ்மாயீலுத் தபீஹ் , இஸ்ஹாக்குஸ் ஸபீய்யி . யஃகூபுல் கலீம் , யூசுஃபுஸ் ஸீத்தீக் ஆகியவர்களின் பொருட்டால் எனக்கு உடல் தென்பையும் , கண்ணொளியையும் அருள்வாயாக! " என்று இறைஞ்ச மூஸா (அலை) பின்னிருந்து "ஆமீன்" கூறினார்கள் . அல்லாஹ்வின் அருளால் திடீரென ஷுஐப் (அலை) அவர்களின் கண்கள் ஒளி பெற்று மின்னின

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 7



(மாட்டை வணங்கிய பனீ இஸ்ரவேலர்கள்)
உத்திர பிரதேசத்தில் பச்சேந்திரா கிராமத்தில் மனித முகத்துடன் ஒரு கன்று குட்டி பிறந்து , உடனே இறந்து விட்டது. . அங்குள்ள மக்கள் அதை மஹாவிஷ்ணுவின் அவதாரம் , புனித பசுவின் மைந்தன் . நிச்சயமாக மஹாவிஷ்ணுவின் அவதாரமே என்று கன்றுக் குட்டிக்கு மாலையெல்லாம் போட்டு கோவில் கட்டி கும்பாபிஷேஹம் செய்ய திட்டம் தீட்டப்பட்டது.
இதற்கிடையில் விலங்கியல் ஆர்வலர் அஜய் தேஷ்முக் , பத்திரிக்கையாளர்களிடம் இது மஹாவிஷ்ணுவின் அவதாரம் இல்லை என்றும் .பசுவின் கர்ப்பத்தில் ஏற்பட்ட சில கோளாறு காரணமாக முகத்தின் வளர்ச்சியின் போது சில பாகங்கள் சரியாக வளராததால் இது போல் தோற்றமளிக்கிறது என
தெரிவித்து .கன்று குட்டியை புதைக்கப்பட்டு கோவில் கட்டுவதை தடுக்கப்பட்டது. (மனித முக கன்று குட்டியின் படத்தைப் பார்க்கவும்.)
நபி மூஸா (அலை) அவர்கள் தவ்ராத் வேதத்தை வாங்கி வருவதாக தூர் ஸீனா மலைக்குப் போய் 40 நாட்கள் ஆகி விட்டபடியால் பனீ இஸ்ரவேலர்களின் கூட்டத்தில் "சாமீரி " என்பவன் பனீ இஸ்ரவேலர்களிடமிருந்து நகைகளை வாங்கி தீயில் இட்டு ....
" அவன் ஒரு காளை கன்றின் சிலையை மக்கள் முன் வெளியாக்கினான் . அதற்கு (க் காளைமாட்டின் சப்தத்தைப் போன்று அர்த்தமற்ற )சப்தமும் இருந்தது (இதைக் கண்ட ) சிலர் இது தான் உங்களுக்கும் மூஸாவுக்கும் இறைவனாகவும் (இதனை) மறந்து விட்டு ( மூஸா மலைக்குச் சென்று) விட்டார் என்று கூறினார்கள் . குர்ஆன் ( 20 : 88)
கன்றை தங்க சிலையாகச் செய்து அதனுள் ஜிப்ரயீல் (அலை) அவர்களின் காலடி மண்ணை அதன் வாயில் போட்டதும் உர் .. உர் .. என்று சப்தம் எழுப்பியது இது விஷயமாக
குர் ஆன் 20 : 96 விவரிக்கிறது .
இச்சிலையையும் பனீ இஸ்ரவேலர்கள் கடவுளாக வணங்கினார்கள் . நபி மூஸா (அலை) அவர்கள் சாமீரி கண்டிக்கும் போது , .....
"காளைக் கன்றை தெய்வமாக வணங்கி வரம்பு மீறியவர்களை நீங்கள் கொன்று விடுங்கள் . இதுதான் உங்களை படைத்தவனிடம் உங்களுக்கு நன்மை தரும் "

என்ற இறை குர்ஆன் வசனம்
( 2 : 54 )இறங்கியது
பலர் இறை தீர்ப்புக்குத் தலை தாழ்த்தினர் . பலர் எதிர்த்தனர் "நாங்கள் காளை மாட்டை வணங்காத போது எங்களுக்கும் ஏன் அந்தத் தண்டனை ?
உடனே மூஸா (அலை) அவர்கள் இறையாணைப்படி பற்றி எரியும் ஒரு வித மூலிகை புல்லைக் கொண்டு வந்து போட்டு அக்காளைச் சிலையை அவர்களின் கண்ணெதிரேயே எரித்துச் சாம்பலாக்கி அதனை நீரில் கரைத்து அந்நீரை அவர்கள் அனைவரும் குடிக்கச் செய்ய, சற்று நேரத்தில் காளைமாட்டைக் கடவுளென வணங்கினார்களோ அவர்களின் முகங்களெல்லாம் மஞ்சளாயின . அவர்களின் நாவின் நுனி பொன்னிறமாயிற்று.
காளை மாட்டை வணங்காத 12,000 பேர்கள் , வணங்கிய பேர்களை ஈவிரக்கமின்றி வெட்டி வீழ்த்த வேண்டுமென இறையாணை வந்தது .
ஒரு குறிப்பிட்ட நாளில் வெட்ட வெளியில் தங்கள் மனைவி பிள்ளைகளிடம் இறுதி விடைபெற்று வந்தார்கள் . முழந்தாளிட்டு அமர்ந்தார்கள் " அவர்களில் எவராவது தங்களை வெட்டுகின்றவர்களை ஏறிட்டுப் பார்த்தாலோ, வெட்டும் வாளை தடுத்தாலோ இறை கோபத்திறகு மீண்டும் ஆளாக வேண்டி வரும் " . என்று ஸ்பெஷல் இறையாணை வந்தது
வெட்டுகின்றவர்களுக்கும் , வெட்டுப்படுப வர்களுக்கும் இடையே இரத்த பாசம் குறுக்கிட்டது. என்ன செய்வது ?.....
தந்தை மகனையும், மகன் தந்தையையும், தமயன் தம்பியையும் .தம்பி தமையனையும் எவ்வாறு வெட்டிக் கொல்வது ?
அப்பொழுது கருமேகம் தோன்றி எங்கும் இருள் ஒருவர் முகத்தை ஒருவர் காண இயலாவண்ணம் கண்களில் இருள் திரையிட்டது . "இப்போ வெட்டுங்கடா "
தலை வெட்டி சீவும் வேலை தொடங்கியது அவர்கள் வெட்டினார்கள் வெட்டினார்கள் காலையில் இருந்து மாலை வரை வெட்டினார்கள் கை நோவும் வரை வெட்டினார்கள் . இரத்த ஆறு கரைபுரண்டோடியது. வெட்டப்பட்டவர்களின் எண்ணிக்கை எழுபதாயிரத்தையும் தாண்டியது .
இஸ்ரவேலர்களில் வயோதிகர்களும் மூஸா(அலை) அவர்களின் தம்பி நபி ஹாரூன் (அலை) அவர்களும் இறைவனிடம் பிழை பொறுத்தருள வேண்டிய போது கருமேகம் விலகியது வெட்டப்படல் நின்றது.
நபி மூஸா (அலை) அவர்களின் கண்களில் இரத்தம் வருமளவுக்கு கதறியழுதார்கள் " மூஸாவே ....... வெட்டியவர்களும் . வெட்டப்பட்டவர்களும் சுவனம் செல்வதை நீர் விரும்பவில்லையா ? " என்று இறைவன் கேட்டான் . பின்னர் அத்தனை பேரின் பாவமும் இறைவன் மன்னித்தான்.

**Rahmath Rajakumaran**

இச்சம்பவத்தை விவிலியம் பழைய ஏற்பாட்டில் "அவர் அவர்களை நோக்கி "உங்களின் ஒவ்வொருவனும் தன் பட்டயத்தைத் தன் அரையிலே கட்டிக் கொண்டு பாளையமெங்கும் உள்ளும் புறமும் வாசலுக்கு வாசல் போய் , ஒவ்வொருவனும் தன் தன் சகோதரனையும், சிநேகிதனையும் .அயலானையும் கொன்று போடக் கடவன் என்று இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் சொல்லுகிறார் " என்றார்
யாத்திராகமம் : 32 : 27

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 8

(40 வருடம் சுற்றி சுற்றியே தட்டழிந்து கெட்டலைந்த பனீ இஸ்ரவேலர்கள் )





சென்னை கடற்கரையில் குதிரை சவாரிக்கு என்று சில குதிரைகள் உண்டு ஐம்பது ரூபாய் வாங்கிக் கொண்டு உங்களை குதிரையில் ஏற்றி விடுவார்கள் . குதிரை ஓடும் ஓடிக்கொண்டே இருக்கும் திடீரென்று பிரேக் போட்டு நின்று திரும்பி வந்துவிடும் .இதை சினிமாவில் வடிவேல் காமெடியாக காட்டி "வரும் , ஆனா வராது" குதிரை திரும்பி வரும்போது "வராது ஆனா வரும் " இதையும் நீங்கள் பார்த்திருப்பீர்கள்.
அதே மாதிரி ஊட்டி, கொடைக்கானல் போன்ற உல்லாச நகரங்களிலும் இம்மாதிரி "வரும் வராத குதிரைகள் " உண்டு.
ஆறு லட்சம் பனீ இஸ்ரவேலர்கள் ஆறு மைல் சதுர பரப்பளவு கொண்ட "தீஹ்" என்ற பாலைவன பிதேசத்தை தினம் தினம் ஆறு காத மைல் தூரம் நடையோ நடை என்று நடப்பார்கள் .அதுவும் பெட்டி படுக்கை குடும்ப குட்டிகளோடு நடப்பார்கள் பொழுது விடியும் போது பார்த்தால் புறப்பட்ட அந்த பழைய இடத்திலேயே இருப்பார்கள் .... இப்படி ஒரு சாபத்தை இறைவன் இவர்களுக்குக் கொடுத்தான் .காரணம் .... அப்புறமா,
1982ல் சென்னையில் இன்டர்வியூக்குப் போய் இருந்தேன் . இன்டர்வியூ டைம் காலை 10 மணி . நான் 9.40 மணிக்கு அண்ணாசாலை வந்திறங்கி . ஆட்டோ டிரைவரிடம் அட்ரஸ்தான் கேட்டேன் , "தம்பி நடந்து போன முக்கால் மணி நேரமாகுமே ஆனால் ஆட்டோ 10 நிமிடம் . ரூபாய் எவ்வளவு 10 ( 1982ல் 10 ரூபாய் ) ரொம்ப மனக் கஷ்டத்தோடு சம்மதித்து ஏற , டிரைவர் ரூபாயை வாங்கிக் கொண்டு சிட்டா பறந்து அந்த சந்து ,இந்த சந்து என்று சுற்றி கடைசியில் இன்டர்வியூ ஆபீஸ் வாசலில் இறக்கினார் நானும் இன்டர்வியூக்கு போயிட்டு மதியம் 1 மணிக்கு வெளியே வந்து பார்த்த போது தான் தெரிந்தது . காலையில் ஒரே ஒரு எலக்ட்ரிக் போஸ்ட் தூரமுள்ள இடைவெளியே ஆட்டோவில் என்னை சந்து சந்தாக சுற்றி... ரொம்பவும் வருத்தப்பட்டேன் .
திரும்ப அதே ஆட்டோ டிரைவர் என்னைப் பார்த்து "தம்பி ஆட்டோ வேணுங்களா , போலாமா ? "
சுற்றும் முற்றும் பார்த்தேன் ஏதாவது கல்லு கிடக்குறான்னு எறிவதற்கு.
மேற்கண்ட நிகழ்வை படிக்கும் பொழுதெல்லாம் இந்த நிகழ்வு என் ஞாபகத்திற்கு வரும் .
சரி...பனீ இஸ்ரவேலர்களை எங்கே விட்டோம் ? தீஹ் பாலைவனத்தில் ,
எகிப்தில் இருந்து வெளியேறி
ஃ பிர்அவ்னிடமிருந்து தப்பி கடலிலிருந்து கடந்து தீஹ் என்ற பாலைப் பிரதேசத்தில் நுழைந்தார்கள் . பின் இறைவன் ஜெரு லேத்திற்குள் நுழைய அவர்களுக்கு உத்திர விட்டான். ஜெருலேத்தை கொடுங்கோல அமாலிக்கா கூட்டத்தார்கள் ஆண்டனர் . அவர்களை எதிர்த்து யுத்தம் செய்யுங்கள் நீங்கள் புறமுதுகாட்டித் திரும்பாதீர்கள் பனீ இஸ்ரவேலர்களுக்கு கட்டளை இட்டான் . குர்ஆன் ( 5 : 21)
அதற்கு பனீ இஸ்ரவேலர்கள் ."மூஸாவே நிச்சயமாக அதில் மிக பலசாலிகளான (அமாலிக்கா) கூட்டர்தார்கள் இருக்கின்றனர் .அவர்கள் அதை விட்டு வெளியேறும் வரையில் நாங்கள் அதனுள் நுழையவே மாட்டோம் ". குர்ஆன் (5 : 22 )
இவ்வாறு பயந்தவர்களில் ( ஜோஷுவ, காலெப் என்ற ) இருவர் மீது அல்லாஹ் அருள் புரிந்தான். அவர்கள் மற்றவர்களை நோக்கி நீங்கள் (அவர்கள் பலத்தைப் பற்றி பயப்பட வேண்டாம் ) அவர்களை எதிர்த்து அந்நகரத்தின் வாயில் வரையில் சென்று விடுங்கள். அதில் நீங்கள் நுழைந்த மாத்திரத்தில் நிச்சயமாக நீங்கள்தான் வெற்றி பெறுவீர்கள் .நீங்கள் உண்மை நம்பிக்கையாளராக இருந்தால் அல்லாஹ்வையே நம்புங்கள் " என்று கூறினார்கள் . குர்ஆன் ( 5 : 23 )
(இதன் பிறகும் அவர்கள் மூஸாவை நோக்கி ) "மூஸாவே .....(அமாலிக்கா) கூட்டத்தார் அங்கு இருக்கும் வரையில் நாங்கள் ஒருங்காலும் அங்கு நுழைய மாட்டோம் . நீங்களும் , உங்களுடைய இறைவனும் அங்கு

சென்று அவர்களுடன் போர் புரியுங்கள் நிச்சயமாக நாங்கள் இங்கேயே (தீஹ் பாலைவனத்திலேயே ) உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருப்போம்" என்று கூறினார்கள் . குர்ஆன் ( 5 : 24 )
( அதற்கு மூஸா ) "என் இறைவனே.. பாவிகளாகிய இந்த மக்களிலிருந்து நீ எங்களைப் பிரித்து விடுவாயாக! " என்று பிரார்த்தித்துக் கூறினார்.
குர்ஆன் ( 5 : 25 )
( அதற்கு இறைவன் "அவ்வாறாயின் அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட ) "அந்த (தீஹ் பாலைவன) இடம் நாற்பது வருடங்கள் வரையில் அவர்களுக்கு நிச்சயமாக தடுக்கப்பட்டு விட்டது. (அதுவரையில்) அவர்கள் அந்த பூமியில் தட்டழி (ந்து கெட்டலை ) வார்கள் . இந்த பாவிகளான மக்களைப் பற்றி நீங்கள் ஒன்றும் கவலை கொள்ளாதீர்கள் " என்று (மூஸாவுக்குக் இறைவன் ) கூறினான்.
6 லட்சம் பனீ இஸ்ரவேலர்கள் ஆறு மைல் சதுரபரப்பை கடப்பதற்கு இரவில் நடப்பார்கள் . பகலில் பார்த்தால் புறப்பட்ட இடத்திலேயே இருப்பார்கள். இது எப்படி ?
தீஹ் பாலைவனம் இரவில் நீண்டு பகலில் மடங்கிக் கொள்கிறதா ? இருக்கலாம் . காரணம்
அட்லாண்டிக் கடலிலுள்ள இரண்டரை லட்சம் பரப்பளவு கொண்ட பெர்மிடா முக்கோணப் பகுதியின் வானத்தில் ஒரு தடவை விமானம் ஒன்று 9 ஆயிரம் கிமீ தூரத்தை கடப்பதற்கு எரிபொருள் நிரப்பப்பட்டு பயணித்தது .
விமானம் பெர்மிடா முக்கோணப் பரப்பில் நுழைந்ததும் ஏதோ ஒரு குகைக்குள் நுழைகிற மாதிரி இருந்ததாம் .அந்த குகையை விட்டு வெளியேறியதும் விமானம் சென்றடைய வேண்டிய இடம் வந்தது . விமானம் தரை இறங்கி பார்த்த போது வெறும் 1500 கி.மீ மட்டுமே பயணம் செய்திருந்தது . இதற்குரிய எரிபொருள் மட்டுமே செலவாகி இருந்தது ஆனால் புறப்பட்ட இடத்திலிருந்து தரை இறங்கிய தூரம் 9000 கிமீ. இது எப்படி சாத்தியம் ?
விஞ்ஞானிகள், வானவெளியில் நீண்டு சுருங்கும் வெட்ட வெளி இருக்கிறது .உதாரணமாக ஒரு பேப்பரின் இரு முனைகளை ஒன்று சேர மடித்தால் இரு எதிர் முனைகள் ஒன்றாகி இடைவெளி இல்லாமல் ஆகிவிடுகிறது . அதே மடித்தப் பேப்பரை விரித்தால் பேப்பரின் இரு முனைகளுக்கிடையே இடைவெளி மீண்டும் ஏற்படுகிறது . ..... இது மாதிரி தீஹ் பாலைவனம் நீண்டு சுருங்குகிறதா ? தெரியவில்லை.
பறவைகள் , விலங்குகள் , மீன்கள் போன்றவைகள் வலசை (migration) போவதற்கு கண்டம் விட்டு கண்டம் தாண்டி போய் இனப்பெருக்கம் செய்து விட்டு தன் குஞ்சுகளோடு திரும்பவும் தாயகம் வருவதற்கு 4 மாதம் முதல் 5 மாதம் வரை எடுத்துக் கொள்கிறது . ஆனால் .....
பனீ இஸ்ரவேலர்கள் வெறும் ஆறு மைல் சதுர பரப்பளவை 40 வருடங்களாக நடந்து நடந்து மீண்டும் புறப்பட்ட இடத்திற்கே திரும்பி இருக்கிறீர்கள் என்றால் , இறை சாபத்தின் உச்சத்தைக் கவனித்தீர்களா ?
அவர்கள் தானே சொன்னார்கள் "மூஸாவே நீங்கள் உங்கள் இறைவனும் அவர்களுடன் யுத்தம் செய்யுங்கள் நாங்கள் இங்கேயே உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருப்போம் " உட்கார்ந்தார்கள் அப்படியே 40 வருட காலம் உட்கார்ந்தார்கள் .
இந்த 40 வருட காலத்தில் பலர் இறந்தாலும் , இறந்த தொகையினருக்குச் சரியாக அதே எண்ணிக்கையில் குழந்தை பிறந்து அதே ஆறு லட்சம் சமமாகிவிடும்

**Rahmath Rajakumaran**
வானத்தில் மட்டும் அல்ல . பூமியிலும் கூட நிலம் நீண்டும் ,சுருங்கும் தன்மை கொண்டதுதான்.
உதாரணமாக , ஒரு கிழவி தனக்கு நலன் விளைய வேண்டும் என்று நபி இப்ராஹீம் (அலை) அவர்களை நெருப்பில் இட்டு பொசுவதற்கு நான் கானகம் சென்று விறகு வெட்டி நெருப்புக் குண்டத்திற்கு போடுகிறேன் " என்று தம் கடவுளர்களுக்கு நேர்ச்சை நேர்ந்திருந்தாள் .
வழியில் வானவர் ஒருவர் மனித உருவில் தோன்றி விறகு வெட்ட காரணத்தை கேட்க தன் நேர்த்திக் கடனை சொன்னாள் . அது கேட்ட வானவர் "உன் வழியை எப்போதும் நீளமாக்குவானாக! " என்று கூறினார்,
இதன் காரணமாக அவள் கானகம் போய்க் கொண்டே இருக்க பாதை நீண்டு கொண்டே போனது. ஒரு கட்டத்தில் பயந்து தன் வீடுவதற்கு திரும்பினாள் அப்போதும் பாதை நீண்டு நெளிந்து கொண்டே போனது . வீடும் வந்தபாடில்லை காடை விட்டு கரையேறவும் முடியாமல் அங்கேயே அலைந்து அலைந்து இறந்தாக ஒரு வரலாறு கூறுகிறது .
எனவே வானவெட்ட வெளி சுருங்கி விரிவது பூமியின் நிலம் சுருங்கி நீள்வதும் இறைவனின் அத்தாட்சிகளில் உள்ள விஷயம் .
இது மாதிரி அநேக விஷயங்கள் ஒவ்வொரு சபிக்கப்பட்ட சமுதாயங்களின் பதிவுகளில் சொல்ல வேண்டியது இருக்கிறது. என்ன செய்வது துனியா காரியங்கள் உங்களுக்கும் எனக்கும் இருக்கிறதே .......?

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 9
(ஒரு மிடக்கு குடிநீர் )



பாலஸ்தீனத்திற்கும் ,எகிப்திற்கும் இடையிலுள்ள கடற்கரை பிரதேசத்தில் வசித்து வந்த "அமாலிக்கா " என்ற கூட்டத்தினர் "ஜாலூத் "என்ற கொடுங்கோல் மன்னன் தலைமையில் பனீ இஸ்ரவேலர்கள் மீது படையெடுத்து , அரச குடும்பத்திலுள்ள 440 ஆண்களை அடிமைகளாக்கி தங்களின் இடத்திற்கு இழுத்துச் சென்றனர்.
இந் நிலையில் அரசர் இல்லாத பனீ இஸ்ரவேலர்களுக்கு அரசாக தலைமை ஏற்க "தாலூத் "என்ற மிகப் பலம் பொருந்தியவரை அஸ்மா வீல் (அலை) என்ற நபியவர்கள் நியமித்தார்கள் .(குர்ஆனில் இவர்களின் பெயர் கூறப்படவில்லை என்றாலும் "நபி" என்று பொதுவாகக் கூறப்பட்டுள்ளது )
தாலூத் மன்னரும் அமாலிக்கா கூட்டத்தினரை வெற்றி கொள்ள நல்ல பிராயமுள்ள இளைஞர்களாக 80 ஆயிரம் பேர்களை சேர்த்து பெரும் படை அமைத்தார்.
சரியான கோடை காலம் இவர்கள் ஒரு வனாந்திரக் காட்டை கடக்க வேண்டியதிருந்தது . கொடிய தாகம் மிக அதிகமாக இருந்தது .அவர்கள் கொண்டு வந்த நீரும் காலியானது. உடனே இஸ்ரவேலர்கள் நபி அஸ்மா வீல் (அலை) அவர்களிடம் தங்களுக்கு ஒரு நதியை உண்டாக்கி தரும்படி வேண்டினர்.
இவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க நபியவர்கள் இறைவனிடம் மன்றாட , புதியதாக ஒரு நதியைப் படைத்து , "உங்களை அல்லாஹ் இந் நதியைக் கொண்டு சோதிப்பான் .அந்த நதியில் உங்கள் தாகத்திற்காக ஒரே ஒரு மிடக்குக்கு அதிகமாக தண்ணீர் அருந்தக் கூடாது .அப்படி அதிகமாக தண்ணீர் அருந்துபவர்கள் நம்மைச் சேர்ந்தவர்கள் அல்ல., " என்ற இறைக்கட்டளையைக் கூறிவிடும்படி மன்னர் தாலூத்திடம் நபியவர்கள் கூறினார்கள்.
இந்த நதி பலஸ்தீனத்திற்கும்
உர்தானுக்கும் .இடையில் இன்றும் ஓடிக்கொண்டிருக்கிறது .
"ஒரு கையளவுக்காவது தண்ணீர் கிடைக்கும் அல்லவா அது போதும் " என்றனர் பனீ இஸ்ரவேலர்கள் .
அவர்களுக்கு சோதனை ஆரம்பித்தது, சற்றுத் தொலைவில் மிகக் குளிர்ச்சியான ஒரு ஆறு ஓடிக் கொண்டிருந்தது . படை வீரர்கள்
80 ஆயிரம் பேரும் ஆற்று நீரை அள்ளி அள்ளிக் குடித்தனர் அதில் 4000 பேர் மட்டுமே ஒரு கையளவு மிடக்கு நீரை அல்லாஹ்வின் கட்டளைக்காகக் குடித்தார்கள் ,
மற்றவர்கள் அள்ளி அள்ளி குடிக்க குடிக்க அவர்களின் தாகம் மேன்மேலும் அதிகரித்துக் கொண்டே போனது. வயிறு முட்டியது . உதடுகள் கருத்து விட்டன இருப்பினும் தாகம் அடங்கவில்லை . அந்த படையுடன் ஒத்து நடந்து போக முடியாமல் திரும்ப திரும்ப அந்நதியின் நீரையைக் குடித்துக் கொண்டு ஆற்றங்கரையிலேயே படுத்துக் கொண்டனர் ,
"ஒரு கையளவுக்கு மேல் தண்ணீர் அருந்தியவர்கள் அனைவரும் "இன்றையத் தினம் ஜாலூத்துடனும் அவனுடைய பெரும் படையுடனும் போரிட எங்களுக்கு ஆற்றல் இல்லை " என்று கூறி பின்தங்கி விட்டனர் " குர்ஆன் ( 2 : 249 )

ஒரே ஒரு மிடக்கு நீரை அருந்திய 4000 பேர்கள் மட்டுமே போர்களத்திற்குள் போயினர் .ஆனால் அமாலிக்கா தலைவன் ஜாலூத்தின் பெரும்படையைப் பார்த்ததும் 4000 பேரில் அநேகர் புற முதுக் காட்டி ஓடி விட்டனர் . 80 ஆயிரம் பேரில் மிஞ்சியது வெறும் 313 பேர்கள் மட்டுமே (பத்ரு யுத்த களத்தில் சஹாபாக்கள் 313 பேர்கள் இருந்தனர் )
அந்த 313 பேரில் ஒருவர் காடுகளில் ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்ட இருந்த காட்டுவாசியும் ஒருவர் . பெயர் தாவூத் .பின்னாளில் இவரே மன்னராகவும் , சபூர்வேத்தைப் பெற்ற நபியாகவும் அல்லாஹ் தேர்ந்தெடுத்தான்.
ஜாலூத் சிதறியோடிய படையைப் பார்த்து எக்காளமாகச் சிரித்தான் . "உங்களின் சிறிய படையுடன் என் பெரும் படை மோதுவது வரலாற்றில் வெற்றியை பதிப்பது எனக்கு இழுக்காக இருக்கிறது .எனவே என்னுடன் தனித்து போரிட உங்களில் எவன் இருக்கிறான் ? என்றதும் , காட்டுவாசியான சிறுவர் தாவூத் (அலை) முன் வருகிறார் .
கையில் வாளோ , கேடயமோ ஈட்டியோ , அம்போ இல்லாமல் ஒரு பையும் அதில் ஒரு கயிறும் மூன்று கற்களும்தான் ஆயுதம் . இதைப் பார்த்த ஜாலூத்திற்கு முன்னே விட எக்காளமாக சிரித்து , "சின்னப்பயலே .... இது தான் உன் ஆயுதமா ? யுத்தத்தை நீ முதலில் தொடங்கு " என்றான்.
சிறுவர் தாவூத் (அலை) அவர்கள் தம் பையில் இருந்த கயிற்றை கவண் கயிறாக மாற்றி மூன்று கற்களையும் எடுத்து, ஒரு கல்லை "பிஸ்மி இலாஹி இப்ராஹீம் "என்று கூறி கவ்ணில் வைத்து, இரண்டாவது கல்லை "பிஸ்மி இலாஹி யாகூப்" என்று கூறி கவ்ணில் வைத்து, மூன்றாவது கல்லை " பிஸ்மி இலாஹி இஸ்ஹாக் " என்று கூறி கவ்ணில் வைத்து ஜாலூத் தம்மை நெருங்குவதற்கு முன் "பிஹம்தில் மலிக்கில் மன்னான் " என்று பெரும் சப்தத்துடன் கூறி அவன் மீது வேகமாக சுழற்றி வீசினார்கள் .
அதில் ஒன்று ஜாலூத்தின் உச்சந்தலையைத் தாக்கியது அவன் பிணமாக சாய்ந்தான் . மற்ற இரண்டு கற்களும் ஒன்றுடன் ஒன்று மோதி சிதறி சின்னா பின்னா வென்று ஜாலூத்தின் படையை தாக்கியது.
காட்டில் கற்ற கவ்ண் கல் வித்தை நாட்டுப்புறத்தார் அறியவில்லை எஞ்சிய ஜாலூத்தின் படை வீரர்கள் பின்னங்கால் பிடரியை அடிக்க காற்றாய் கரைந்துப் போயினர்.
ஏன் ஒரு மிடக்கு தண்ணீரை அல்லாஹ் குடிக்கச் செய்தான் ?
விஞ்ஞான ரீதியில் ஆய்வு செய்தால்,
மிக அதிகமாக தாகித்து இருக்கும் போது பசியைக் காட்டிலும் தாகம் மிக அதிகமாக இருக்கும் .அந்நேரத்தில் உணவைக் காட்டிலும் மனம் தண்ணீரையே நாடும் .அந்நேரத்தில் அளவுக்கு மீறி தண்ணீர் குடிக்கும் போது உடலுக்கு தெம்பூட்டக் கூடிய சோடியம் உள்ளிட்ட தாதுப் பொருட்களை தண்ணீர் நீர்க்கச் செய்து உடலின் மொத்த வீரியத்தையும் குறைத்து விடும். அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சு தானே அளவுக்கு அதிகமான குடிநீர் உடலை களப்பாக்கி சோர்வடையச் செய்து விடுகிறது . இதைத்தான் பனீ இஸ்ரவேலவர்களில் 80 ஆயிரம் பேரில் 4000 பேரைத் தவிர மற்றவர்கள் குடித்து குடித்து களைப்படைந்து ஆற்றங்கரையிலேயே தங்கி விட்டனர்,

**Rahmath Rajakumaran**
தாவூத் (அலை) அவர்களின் தனிப் பெரும் ஆற்றலையும் .சீரிப் பாயும் சிங்கத்தின் தோற்றத்தையும் . யுத்தங்களின் நுண்ணிய யுக்திகளும் ஒருங்கே பெற்றவர்களாக நபி தாவூத் (அலை) திகழ்ந்தால் , ரொம்பவும் இலகுவாக அரசராக முடி சூடிக் கொண்டார்கள் ,
மூதாதையர்களிடம் கண்ணியம் , தேனிசை குழலான குரலோசை இவைகளின் பொருட்டாலும் அஸ்மா வீல் .(அலை) அவர்களின் தனிப்பட்ட பிரத்யேக துஆ வாலும் முர்ஸீலான நபியாகவும் தேர்வு பெற்றார்கள்

**Rahmath Rajakumaran**
பனீ இஸ்ரவேலர்கள் நாம் அமாலிக்கா கூட்டத்தாரை விட மிகைத்திருக்கிறோம் இதனால் யுத்தத்தின் சன்மானமான கனிமத்து பொருட்கள் அதிகம் கிடைக்கும் என்ற பேரரசை கொண்ட எண்ணத்தில் வந்தனர் .அவர்களின் பேராசையே நதிநீரை அள்ளிக் குடிக்கச் செய்தது .
மிஞ்சிய 4000 பேர்களில் 313 பேரைத் தவிர மற்றவர்கள் இறையச்சத்தின் மீது இறை ஆதரவு மீதும் சந்தேகம் கொண்டனர் இதனால் அமாலிக்கா கூட்டத்தினரைக் கண்டு அச்சமடைந்தவர்களாக புறமுதுகு காட்டி கூடினார்கள்
மீதி இருக்கும் 313 பேர்கள் இறைவன் மீதும் அவனின் பேராற்றல் மீதும் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டனர் . எனவே யுத்த களத்தில் உறுதி பட நிற்க முடிந்தது .
இந்த 313 பேர்களின் மன உறுதிதான் பிற்காலத்தில் பத்ரு சஹாபாக்களிடம் இருந்தது மட்டும் அல்லாமல் , நபி (ஸல்) அவர்களுக்கு , எண்ணிக்கை 313 என்றதும் வெற்றி உறுதி என்பதையும் மனசீகமாக இறைவன் உணரத்தினான் என்பதாக அறிய முடிகிறது

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 10
( மரணித்திறகுப் பயந்த பனீ இஸ்ரவேலர்கள்



வாஸித்தைச் சேர்ந்த தாவர்தான் என்னும் கிராமத்தில் அம்மை நோய் உண்டாயிற்று - வாந்திபேதி என்பதாகவும் சிலர் கூறுவர்
அங்குள்ளவர்களில் செல்வந்தர்களாகவும், பிரபலமானவர்களும் இருந்தார்கள். மரணத்திற்கு பயந்து அவ்வூரை விட்டுச் சென்றனர் . .. என்பதாக. (இப்னு கஸீர், தப்ஸீர் ஹமீதியா போன்ற கிதாபுகளில் மேற்கண்ட குறிப்பு காணப்படுகிறது )
ஆனால்... மற்றும் ஒரு குறிப்பில்..
ஹஜ்ரத் தாவூத் (அலை) அவர்கள் காலத்திற்கு முன்னர் பாலஸ்தீனத்தைச் சேர்ந்த இவர் பனீ இஸ்ரவேலர்கள் மீது படையெடுத்து வந்தனர் . அவ் எதிரிகளை திருப்பித் தாக்குமாறு இஸ்ரவேல் மக்களின் மன்னரால் கட்டளையிடப்பட்டது .
இதில் ஆயிரக்கணக்கானோர் யுத்த மரணத்திற்குப் பயந்து அவ்வூரை விட்டு குடிபெயர்ந்தனர். இதனால் இஸ்ரவேலரின் மன்னர் இவ்வாறு சதி செய்த அவர்களைப் பற்றி இறைவனிடம் முறையிட்டார் (என்று காஜின், தன்தாவீ கிதாபுகளில் காணக் கிடக்கிறது )
எது எப்படியோ நோயுக்காகவோ , யுத்தத்திற்காகவோ பயந்து ஊரை காலி செய்தனர் .அவ்வளவே. பணக்காரர்களும் , பிரபலமானவர்களும் ஊரை விட்டு போனதும் அங்கு தங்கியிருந்தவர்களை நோய் தாக்கியது என்றும் அல்லது எதிரிகள் தாக்கினார்கள் என்றும் சொல்லப்படுகிறது.
நோயோ அல்லது எதிரிகளோ அந்த ஊரை விட்டு விலகியதும் மரணத்திற்குப் பயந்து தப்பியவர்கள் மீண்டும் அவ்வூருககுத் திருப்பினர் , இதைக் கண்ணுற்ற பாதிக்கப்பட்டு தங்கி இருந்தவர்கள் இனியொரு முறை இந்நிகழ்வு நமதூருகக மீண்டும் வருமாயின் நாமும் அவர்களைப் போல் ஊரை விட்டு வெளியேறி விட வேண்டுமென்று முடிவு செய்தனர்.
அடுத்த வருடத்தில் அதே நிகழ்வு (நோய் அல்லது எதிரியின் தாக்குதல்) நிகழ்ந்த போது, மொத்த மக்களும் வெருண்டோடி ஓர் அகன்ற பள்ளத்தாக்குப் பகுதியின் இருபுறங்கிலும் குடியேறினர் .
இறைக் கட்டளைப்படி அவர்களுக்கு மேல்புறம் ஒரு மலக்கும் . கீழ்புறம் ஒரு மலக்கும் நின்று விநோதமான கடுமையான ஓர் ஓசையை எழுப்பினர் .அவர்களில் ஒருவர் கூட பாக்கி இல்லாமல் அனைவரும் இறந்தனர் . இம் மக்கள் 8000 பேர்கள் என்றும் 6000 பேர்கள் என்றும் இரு குறிப்பு காணப்படுகிறது .அந்தப் பள்ளத்தாக்கில் பல குழிகளில் அவர்களை ஒன்றாக போட்டு , அவ்விடத்தைச் சுற்றி சுவர்களும் எழுப்பட்டன .அவர்கள் அழிந்து மண்ணோடு மண்ணாக மக்கிப் போயினர்.
கொஞ்ச காலத்திற்குப் பிறகு
( 25 வருடம் அல்லது அதை விட அதிகமான வருடம் ) ஹஜ்ரத் ஹஸ்கீல் (அலை) இந் நபியை "எசேக்கியல் " என்று விவிலியம் பழைய ஏற்பாடு கூறுகிறது . இஸ்ரவேலர்களுக்கு அனுப்பப்பட்ட நபி .இவருக்கு இன்னொரு பெயர் :
"துல் கிஃப்ல் (அலை) கி.மு (593 - 571)
நபியவர்கள் இறைவனிடம் மன்றாடி அவர்களை மீண்டும் தம் கண் முன்னே உயிர்ப்பிக்கும்படி வேண்டினார். இறைவனும் நபியின் கண் முன்னே ஒவ்வொரு நபரின் எலும்புகளும் அவரவர் எலும்புகளுடனும் நரம்புகள் தசைகள் தோல்கள் ஒவ்வொன்றும் இணைந்ததை நபியவர்கள் நேரடியாகவே பார்த்தார்கள்.
" (நபியே) மரணத்திற்குப் பயந்து தங்கள் வீடுகளை விட்டு ஆயிரக்கணக்கில் வெளியேறியவர்களை நீங்கள் கவனித்தீர்களா ? அல்லாஹ் அவர்களை இறக்கும் படிச் செய்து பின்னர் அவர்களை உயிர்ப்பித்தான் ."
குர்ஆன் ( 2 : 243 )
உயிர் பெற்றவர்கள் "நாயனே! உன்னையே நாங்கள் வணங்குகிறோம் : துதிக்கிறோம் . உன்னைத் தவிர வேறு நாயன் இல்லை " என்று மொழிந்தவர்களாக உயிர் பெற்றனர்.

மக்கள் உயிருடனிருப்பதும், மரணிப்பதும் அவனின் கட்டளையே இன்றி நோயோ, யுத்தங்களோ அல்ல
.ஒருவர் மரணத்திறகுப் பயந்து எங்கு சென்றாலும் மரணம் அவரை அது விடாது.
உலகத்தில் வாழ வேண்டிய காலம் எஞ்சி இருக்கும் போது அவர்களுக்கு எந்த அபாயமும் சம்பவிக்காது என்பதை உணர்த்தி, "ஜிஹாது" என்னும் மார்க்க யுத்தம் புரிவதற்காக மக்களை தூண்டுவதும் , மார்க்க யுத்தத்தில் உயிர்த் தியாயகம் செய்து " ஷஹாதத் " என்னும் பேறு பெறும்படியும் தூண்டுவதற்காகவே இந்தச் சம்பவத்தை இறைவன் இங்கு சுட்டி காட்டுகிறான் .
என்பதாக அநேக குர் ஆன் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர் .
மேற்கண்ட பனீ இஸ்ரவேலர்கள் எத்தனை வயதில் மரணித்தார்களோ அதே அதே வயதில் உயிர் பெற்று எழுந்து அவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட வயது வரை வாழ்ந்தார்கள் . பின்பு மரணித்தார்கள் .
அதெப்படி மரணித்த காலம் கணக்கில் கொள்ளப்படவில்லையா ? என்று நீங்கள் கேட்கலாம் .
உதாரணத்திற்கு உஜைர் நபி 25 வயதில் மரணித்து 100 வருடம் கழித்து அதே 25 வயதிலேயே உயிர்த்தெழுந்தார்கள் . குர்ஆன் ( 2 : 259)
அடுத்து குகைத் தோழர்கள் 25 வயதில் குகையில் 300 வருடங்கள் தூங்கி அதே 25 வயதிலேயே விழித்தெழுந்தனர்
குர்ஆன் ( 18 : 25 )
எனவே வாஸித்ததைச் சேர்ந்த தாவர்தான் கிராமத்திலுள்ள பனீ இஸ்ரவேலர்கள் .இறக்கும் காலத்தின் வயதிலேயே மீண்டும் எழுப்பப்பட்டார்கள் .அவர்கள் இறந்த காலத்தை கணக்கில் கொள்ளப்படவில்லை .
மாபெரும் விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டைனின் தத்துவத்தின்படி
"சம்பவமே இல்லை என்றால் அவர்களுக்கு காலமும் இல்லை"
என்கிற நிரூபிக்கப்பட்ட விஞ்ஞானத் தத்துவம் மீண்டும் நிரூபிக்கப்பட்டுள்ளது .

**Rahmath Rajakumaran**

" அவர்கள் வேறு ஒரு மரணத்தை அனுபவிப்பதில்லை" என்று தான் கூறப்பட்டிருக்கிறதே தவிர இறைவனுக்கு அவ்வாறு சக்தி இல்லை" எனக் கூறப்படவில்லை.
மேலும் தன் நபிமார்களில் யாராவது ஒருவர் மூலம் வெளிப்படுத்தும் போது இயற்கையின் நியதிகள் மீறப்படும். . அப்படி மீறப்பட்டால் தானே முஃஜிஸாவாக ஆக முடியும்.
நபியவர்கள் முஃஜிஸா செய்யப்படும் போது .அதை இறைவனே தான் செய்கிறான்.
மேற்கண்ட வாழ்வின் இரு மரணங்கள் என்பது தன் வல்லமையை பறைசாற்றவே இறைவன் செய்தது ,
" ஆரம்பத்தில் மண்ணிலிருந்து பின்னர் இந்திரியத்தின் ஒரு துளியிலிருந்து படைக்கிறான்"
குர்ஆன் 18 : 37
இப்படிச் சொன்னவன் தான் நபி ஈஸா (அலை) அவர்களை படைக்கும் போது ஆண் துணை இல்லாமல் . இனச் சேர்க்கை இல்லாமல் படைக்கப்படுகிறார்கள் .
சரி ஈஸா (அலை) அவர்களைப் படைக்க ஆண் துணை இல்லை
ஈஸா (அலை) அவர்கள் களிமண்ணைக் கொண்டு படைத்த வௌவாலுக்கு தாய் தந்தை யாரு ?
நபி ஸாலிஹ் (அலை) அவர்களின் ஒட்டகத்திறகு தாய் தந்தை யாரு ?
அது ஈன்ற கன்றுக்கு தந்தை யாரு ?
இதெல்லாம் இறைவனின் வல்லமையைப் பறைசாற்றும் நிகழ்வுகள் இதற்கும் இயற்கையின் நியதிகளுக்கும் சம்பந்தமோ ஒப்பிடோ இல்லை.
எனவே ஒரு வாழ்வின் இரு மரணம் என்பது அவனின் வல்லமைக்குட்பட்ட விஷயம்.

**Mohamed Ansary Mamanggani**

كَيْفَ تَكْفُرُوْنَ بِاللّٰهِ وَكُنْتُمْ اَمْوَاتًا فَاَحْيَاكُمْ ثُمَّ يُمِيْتُكُمْ ثُمَّ يُحْيِيْكُمْ ثُمَّ اِلَيْهِ تُرْجَعُوْنَ
அல்லாஹ்வை நிராகரிக்கும் போக்கினை எவ்வாறு நீங்கள் மேற்கொள்கின்றீர்கள்? (உண்மை யாதெனில்) நீங்கள் உயிரற்றவர்களாய் இருந்தீர்கள். அவனே உங்களுக்கு உயிரூட்டினான். பின்னர் அவனே உங்களை மரிக்கச் செய்வான். பின்னர் (மீண்டும்) அவனே உங்களுக்கு உயிர் கொடுப்பான். பின்னர் அவனிடமே நீங்கள் மீட்கப்படுவீர்கள்.
(அல்குர்ஆன் : 2:28)
இந்த வசனத்தில் முதலில் மையித், அடத்து ஹயாத், மீண்டும் மவ்த், அதன்பின்னும் ஹயாத் அடுத்து இறைவன் புறம் திருப்புதல் என, இரு மவ்த், இரு ஹயாத், ஒரு திருப்புதல் என ஐந்து நிலைகள் கூறப்படுகிறது. இறைவன் புறம் திரும்பும் வரை இவை தொடர் நிகழ்வு. அதன் பின் சுவனம் அல்லது நரகம் சென்ற பின் மரணம் இல்லை என விளங்குகிறது.
இதற்கிடையில் உள்ள வாழ்க்கைக்கு மேற்கூறப்பட்ட நிலைகள் நியதியாகும். நியதி நிலை கொள்வதும் சில நேரம் மாறுவதும் அல்லாஹ் வின் தனி விருப்பம். அதுவே
خرق العادة
எனும் மரபு மீறல் அதாவது முஃஜிஸா எனுப்படும். வல்லாஹு அஃலம்.

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 11

(இறைவனை நேரில் பார்க்க அடம் பிடித்த பனீ இஸ்ரவேலர்கள்)





நபி மூஸா (அலை) அவர்கள் தூர்ஸீனா மலைக்குச் சென்று தவ்ராத் வேதத்தை வாங்கி வந்த போது , பனீஇஸ்ரவேலர்கள்
மாட்டின் சிலையை இறைவனாக வணங்கிக் கொண்டிருந்தனர்.
இதை உருவாக்கிய சாமீரி என்பவனை கண்டித்து அச்சிலையை எரித்து கடலில் எறிந்தார்கள் . உடனே பனீ இஸ்ரவேலர்கள் , " நாங்கள் இணை வைத்த குற்றத்திற்காக இறைவன் எங்களை மன்னிக்காவிட்டால் நாங்கள் நஷ்டமடைந்தவர்களாக ஆகிவிடும்" என்றனர் , இறைவனும் சிலையை வணங்கியவர்களை சிலையை வணங்காதவர்கள் வெட்டிக் கொல்ல வேண்டும் என்ற நிபந்தனையோடு மன்னிப்பதாக வாக்குறுதி கொடுத்தான்.
(இத்தொடரின் 7-வது பதிவில் இது விஷயமாக சொல்லப்பட்டிருக்கிறது . )
உடனே பனீ இஸ்ரவேலர்கள் , நபி மூஸா (அலை) அவர்களிடம் , " இறைவன் உங்களிடம் பேசுவதை நாங்களும் செவியேற்க வேண்டும் " என்று அடம் பிடித்தனர். இறைவனிடம் இது விஷயமாக பேசி அவர்களை கூட்டிக் கொண்டு வந்து இறைப் பேச்சை அவர்களும் கேட்க இறைவனின் உத்தரவை நபியவர்கள் பெற்றார்கள்.
மூஸா (அலை) அவர்கள் பனீ இஸ்ரவேலர்களில் 70 பிரபலமானவர்களை தேர்ந்தெடுத்து , தூர்ஸீனா மலைக்ககுக் கூட்டிச் சென்றார்கள்
நபியவர்கள் மலையை நெருங்கியதும் மேகத்தின் தூண்கள் போன்று வெண்மேகம் அவர்கள் மீது அமர்ந்து மொத்த மலையையும் அது மூடிக் கொண்டது .
தன்னுடன் வந்த 70 பேர்களையும் படரும் மேகத்திற்குள் புகுந்துக் கொள்ள அழைத்தார்கள் .அவர்களும் பயந்த வண்ணம் நபியின் அருகிலேயே மேகத்திற்குள் நின்றனர் .
பிறகு மூஸா (அலை) அவர்கள் இறைவனிடம் பேசினார்கள் . அல்லாஹ் நபியவர்களிடம் பேசும்போதெல்லாம் நபியின் முகத்தில் இலங்கும்படியான பிரகாசத்தை 70 பேர்களால் ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. அத்தனை பிரகாசம் . அத்தனை பிரகாசம் ஆனாலும் இறைவன் நபியவர்களிடம் பேசிய பேச்சை 70 பேர்களும் செவியேற்றனர் .
உடனே பனீ இஸ்ரவேலர்கள். "இறைவனின் பேச்சைத்தான் கேட்டோம் இறைவனை நேரில் பார்க்காமல் உம்மை விசுவாசிக்க மாட்டோம் " என்று பிடிவாதமாக அடம் பிடித்தார்கள்,
வந்தது வினை .
அப்பொழுது இறைவன் "அஸ்ஸாஇகத்" என்ற கரிக்கக் கூடிய ஒரு வகை நெருப்பு. அதில் சப்தமும் இருக்கும் . வானத்திலிருந்து கீழே இறங்கி , புத்தியையும் , அறிவையும் போக்கி. மரணத்தை உண்டாக்ககூடிய பயங்கரமான ஒவ்வொன்றுக்கும் "ஸாஇகத்" என்று சொல்கிறார்கள் .
இறங்கியது அந்த நெருப்பு .
70 பேர்களும் பிணமாக கிடந்ததைப் பார்த்து நபி மூஸா (அலை ) அவர்கள் பதறியடிதது அழுதார்கள் . " இறைவா இந்த 70 பேர்களின் மரணத்திற்கு அம்மக்களிடம் நான் என்ன பதில் சொல்வேன்?"
நீ அழிக்க வேண்டும் என்று முடிவு செய்திருந்தால் , காளை மாட்டுக்காரர்களுடன் சேர்த்து அன்றைக்கே அழித்திருக்கலாமே .. நான் கூட்டிக் கொண்டு வந்த பிறகு நீ அவர்களை மரணிக்கச் செய்ததால் வீண்

சந்தேகமும் கொலை பலியும் என் மீது அல்லவா ஏற்படும் என்று இறைவனிடம் அழுதார்கள் . அவர்களை நீ உயிர்ப்பித்து தர வேண்டும். மன்றாடினார்கள்
இறைவனும் நபியவர்களுக்காக அந்த 70 பேர்களையும் மீண்டும் உயிர்ப்பித்துக் கொடுத்தான் .
" அன்றி நீங்கள் மூஸாவை நோக்கி "நாங்கள் அல்லாஹ்வைக் கண்கூடாகக் காணும் வரையில் உங்களை நம்ப மாட்டோம் " என்று கூறிய போது நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே உங்களை பெரும் சப்தம் பீடித்துக் கொண்டது " குர்ஆன் ( 2 : 55 )
பனீ இஸ்ரவேலர்கள் அல்லாஹ்வின் மீது பிரியத்தால் கேட்கவில்லை . விஷயத்தை தெரிந்து நேர்வழி பெற்று விட வேண்டும் என்ற நோக்கத்திலும் கேட்கவுமில்லை , நபியின் மீது சந்தேகம் , நபியைப் பொய்ப் பிக்குவதற்காகவும் அதனால் வேண்டுமென்ற வம்புக்காக கேட்டனர் என்பதாக குர்ஆன் ஆய்வாளர்கள் கருத்து தெரிவிக்கின்றனர்

**Rahmath Rajakumaran**
பனீ இஸ்ரவேலர்கள் இறைவனை நேரில் கண்கூடாக பார்க்க வேண்டினால் என்ன நடக்கும் என்பது பற்றி மூஸா (அலை) அவர்களுக்கு நன்றாக தெரியும். முன்பு ஒரு தடவை நபி மூஸா (அலை) அவர்கள்
"என் இறைவனே.....¡ நான் உன்னை (என் கண்களால்) நேரடியாக பார்க்க (விரும்புகிறேன்) நீ உன்னை எனக்கு காண்பி" என்றார்
(அதற்கு இறைவன் "நேரடியாக ) என்னைக் காண உங்களால் ஒருக்காலும் முடியாது .எனினும் இம்மலையை நீங்கள் நோக்குங்கள் .அது தன்னுடைய இடத்தில் நிலைத்திருந்தால், பின்னர் நீங்கள் என்னைக் காண்பீர்கள்" என்று கூறினான் . அவருடைய இறைவன் .(கவனிக்க அவருடைய இறைவன்) அம்மலை மீது தோற்றமளிக்கவே அது தவிடு பொடியாயிற்று மூஸா திடுக்கிட்டு (மூர்ச்சையாகி கீழே விழுந்தார்)
குர்ஆன் ( 7 : 143 )

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 12
வானத்திலிருந்து உணவுத் தட்டை நபி ஈஸாவிடம் கேட்ட பனீ இஸ்ரவேலர்கள்
(கவனிக்கவும் கிறிஸ்தவர்கள் அல்ல .)




நபி ஈஸா (அலை) அவர்கள் காலத்தில் கிறிஸ்தவ மதம் தோன்றவே இல்லை . நபி ஈஸா (அலை) அவர்களும் பனீ இஸ்ரவேலர்களுக்காக வந்த நபி என்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்திக் கொள்கிறேன் .
"மர்யமுடைய மகன் ஈஸாவே.. உங்களுடைய இறைவன் வானத்திலிருந்து எங்களுக்காக ஓர் உணவு (ப் பொருள்கள் நிரம்பிய ) தட்டை இறக்கி வைக்க முடியுமா ? "
குர்ஆன் ( 5 : 112 )
என்று " நெருங்கிய நண்பர்கள் " என்பதை குறிக்க மூலச் சொல்லில்
" அல் ஹவாரிய்யூன் " எனும் சொல் பயன்படுததப்படுகிறது . இப்படி கேட்க, இவ்வாறெல்லாம் கேட்காதீர்கள் : அப்படிக் கேட்டால் அதுவே உங்களுக்கு ஒரு சோதனையாக மாறிவிடலாம் .எனவே, நீங்கள் இறைநம்பிக்கையாளர்கள் என்றால் வாழ்வாதாரத்தைத் தேடும் முயற்சியில் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வையுங்கள்" என்று நபி ஈஸா (அலை) அவர்கள் கூறினார்கள்
"அதற்கவர்கள் அதிலிருந்து நாங்கள் புசித்து எங்கள் உள்ளங்கள் திருப்தியடையவும் . அன்றி நீங்கள் (உங்களுடைய தூதுவத்தைப் பற்றி ) மெய்யாகவே உண்மை கூறினீர்கள் என்று நாங்கள் அறிந்து கொண்டு அதற்கு நாங்களும் சாட்சியாக இருக்கவுமே விரும்புகின்றோம்" என்று கூறினார்கள் . குர்ஆன் ( 5 : 113 )
அவர்களே வாங்கிக் கட்டிக் கொண்ட சோதனை ஆரம்பமானது . விதி யாரை விட்டது ?
ஈஸா (அலை) அவர்கள் குளித்து, உலுச் செய்து . கம்பளி உடையணிந்து , இரண்டு ரக்கஅத்துதொழுது , தலைகவிழ்ந்திருந்து

முஷாஹறதாச் செய்து துஆக் கேட்டார்கள் .
உடனே அவரது சமூகத்தார் பார்த்திருக்க ,. இரண்டு மேகங்கிடையே சிவப்பு நிறமுள்ள ஒரு ஸுப்ரா (உணவுப் பதார்த்தங்கள் வைக்கப்பட்டுள்ள தட்டு) வானில் இருந்து இறங்கியது .
நபி ஈஸா (அலை) அவர்கள் அந்த தட்டை மூடியிருந்த துணியை " பிஸ்மில்லாஹி கைரிர் ராஜ்க்கீன்" என்று சொல்லி திறந்தார்கள் .
அதில் ஏழு ரொட்டிகளும் , ஏழு மீன்களும் இருந்தன. (நூல் : தஃப்ஸீர் தபரீ , இப்னு அபீ ஹாத்திம்)
அந்த தட்டில் ஒரு மீன் இருந்தது அதில் எவ்வித முள்ளுமில்லை . செதிலுமில்லை
கொளுப்பு வடிந்து கொண்டிருந்தது .அம்மீனின் தலையில் உப்பும் , வாலில் சிர்க்காவும் (காடி) , அதனைச் சுற்றிப் பலவிதமான கீரை களும் வைக்கப்பட்டிருந்தன .
அந்த தட்டில் ஒரு மீனும் , 5 ரொட்டிகளும் இருந்தன. ஒரு ரொட்டில் ஜைத்தூன் எண்ணெய்யும் , ஒன்றில் தேனும் , மற்றொன்றில் நெய்யும் , இன்னொன்றில் திரட்டுப்பாலும் , மற்றொன்றில் சுட்ட இறைச்சியும் இருந்தன.
இப்படி பல கிதாபுகளில் காணக் கிடக்கிறது அல்மாயிதா உணவுத் தட்டு
ஹவாரிய்யூன்களுக்கு தலைவரான ஷம்ஊன் என்பவர் , நபியவர்களிடத்தில் "இது இம்மையிலுள்ள உணவுப் பதார்த்தங்களைச் சேர்ந்ததா ? அல்லது மறுமையிலுள்ள உணவுப் பதார்த்தங்களைச் சேர்ந்ததா ? என்று கேட்டார் .
அதற்கு நபியவர்கள் . "அங்குள்ளதும் அல்ல : இங்குள்ளதும் அல்ல . அல்லாஹ் நூதனமாக உண்டாக்கினான் " என்று கூறி,உணவைச் சாப்பிடச் சொன்னார்கள்
அதற்கு அவர்கள், இந்த உணவில் நீங்களும் ஓர் அத்தாட்சி காண்பிக்க வேண்டும்" என்றனர்
அதற்கு, நபியவர் அம்மீனை நோக்கி, "அல்லாஹ்வின் உத்தரவுப்படி நீ உயிர் பெற்று எழு" என்றார்கள் .
உடனே அம்மீன் உயிர் பெற்று துளும் பிற்று . மீண்டும் அதனை நோக்கி, " நீ உயிரில்லாமல் ஆகிவிடு" என்றார்கள் உடனே அந்த மீன் முன் போல் சுடப்பட்ட மீனாகி விட்டது .
அந்த உணவுத் தட்டு ஒரு நாள் முழுவதும் அப்படியே இருந்தது. அதிலிருந்து உணவு உண்ண பிரியமுள்ளவர்கள் எல்லாம் உண்டார்கள் அவர்களுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் உண்ண மட்டுமே அனுமதி அளிக்கப்பட்டது .அதிலிருந்து எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளக் கூடாது என்றும் கண்டிப்பான உத்தரவிடப்பட்டிருந்தது.
இதுதான் அவர்களுக்குரிய சோதனை என்பதை அறியாமல் பனீ இஸ்ரவேலர்கள் ........
ஒவ்வொருவரும் சாப்பிட சாப்பிட உணவு குறையாமல் அப்படியே அந்தத் தட்டில் உணவு இருந்து கொண்டே இருந்தது .
ஆச்சரியமும் அதன் வாசனையும் அவர்களின் மனதைத் தூண்டியது .
அதிகம் எடுத்தாலும் குறைவாக ஆகாத உணவு .அப்போ கொஞ்சம் எடுத்தால் தெரியவா போய்கிறது ? எடுத்து கட்டிக்கோ .
நேரம் ஆக ஆக கொஞ்சம் கொஞ்சமாக யாருக்கும் தெரியாமல் உணவை திருடி பத்திரப்படுத்த ஆரம்பித்தார்கள் பனீ இஸ்ரவேலர்கள் .
மறுநாள் திருடிய உணவை சாப்பிட்டு இரவில் படுத்து எழுந்திருக்கும் போது குரங்குகளாகவும், பன்றிகளாகவும் உருவம் மாற்றபட்டனர். "அட என் கேடே "
இவ்வாறு உருவம் மாற்றப்பட்டவர்கள் மொத்தம் 5000 பேர்கள் என்றும் அவர்கள் எல்லோரும் பாதைகளிலும், குப்பை மேடுகளிலும் பன்றிகளைப் போல் மலத்தை தின்று கொண்டிருந்தனர் .
நபி ஈஸா (அலை) அவர்களைக் கண்டவுடன் சுற்றிச் சுற்றி அழுது கொண்டிருந்தனர் , இவ்வாறு மூன்று நாட்கள் வரை இருந்து அத்தனை பேரும் மரணித்தனர் .
இந்த சம்பவம் குறித்து புதிய ஏற்பாடான பைபிளில் எங்குமே காணப்படவில்லை .இப்படிக்கு சம்பவம் குறித்து திருக்குர்ஆன் ஒரு அத்தியாயத்தை (அல்மாயிதா - உணவுத் தட்டு 5 வது அத்தியாயம் )
இறக்கியருளப்பட்டிருக்கிறது .இந்த சம்பவத்தை குர்ஆனிலிருந்தே கிறிஸ்துவர்கள் தெரிந்து கொண்டனர் .
இதிலிருந்து இறுதி இறை வேதமான
குர்ஆன் உண்மைகள் எதையும் மறைக்கவில்லை என்பது தெளிவாகிறது .

**rahmath Rajakumaran**
"உணவு தட்டை இறக்கி வைக்கும் நாளை பெருநாளாக இருக்கும் .
குர்ஆன் 5 : 114
உணவுத் தட்டு ஞாயிற்று கிழமை அதிகாலை இறங்கியது . எனவே ஞாயிற்றுகிழமை பெருநாளாக கிறிஸ்துவர்கள் கொண்டாடுகின்றனர்

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 13
(சாபத்தில் இருந்து மீட்கப்பட்டவர்கள் )






யூனுஸ் (அலை) பழைய ஏற்பாட்டில் "யோனா " (Jonah ) (கி.மு 800 முதல் கி.மு 784 ) இராக்கில் நீனவா எனும் பகுதிக்கு நபியாக அனுப்பப்பட்டார்கள் .
நீனவா மக்கள் அஸ்ஸீரியர்கள் .நபி யூனுஸ் (அலை) அவர்கள் பனீ இஸ்ரவேலர் . அப்பொழுது இஸ்ரவேலர்களின் நபியாக "அஷ் இயா (அலை) அவர்கள் இருந்தார்கள் .
"ஹஸ்கியா" என்பவர் இஸ்ரவேலர்களின் அரசராக இருந்தார் .
நீனவா நகரில் நூறாயிரத்திற்கும் அதிகமான மக்களால் நிரம்பப் பெற்றிருந்தது (குர்ஆன் 37 : 147 )
நீனவா மக்களான அஸ்ஸீரியர்கள்
பனீ இஸ்ரவேலர்கள் மீது படை எடுத்து பலரை சிறைப் பிடித்து அடிமைகளாக்கினார்கள்
அவர்கள் மீது ஹங்கியா மன்னர் நீனவா மீது படையெடுத்தால் , சிறைப்பிடித்த பனீ இஸ்ரவேலர்களை கொன்றொழித்து விடுவார்கள் என்ற பயத்தில் நபி
அஷ்இயா (அலை) அவர்களிடத்தில் மன்னர் ஹங்கியா ஆலோசனை செய்ய ,
நபியவர்கள் " உங்கள் ஆட்சியில் ஐந்து நபிமார்கள் உள்ளனர் அவர்களில் "யூனுஸ் பின் மத்தா " என்பவரை நீனவாவுக்கு அனுப்பி அவர்களுக்கு நேர்வழி காட்டி பின் கைதிகளை அஸ்ஸீரியாக்கள் விடுவிக்கச் செய்யக் கூடும்" என்றார்கள்
"அஷ்இயா (அலை) அவர்கள் என்னை இறை ஆணைப்படி நீனவா செல்லக் கூறியிருப்பின் எவ்வித மறுப்பின்றி நான் அங்கு செல்கிறேன்" என்று யூனுஸ் (அலை) செல்கிறார் நீனவாவுக்கு .
நீனவா ஆண்டு வந்த "முப்இப் இப்னுல் இர்ஷா ". என்ற மன்னனை அணுகி , "
"நான் இறைவனின் திருநபி யூனுஸ் . பனீ இஸ்ரவேலர்களை அன்புகூர்ந்து விடுதலை செய் " என்று கூறினார்கள் . மூன்று நாட்களாக தொடர்ந்து அவனோடு பேச்சுவார்த்தை நடத்தி தோல்வியில் முடிந்தது .
அதன் பின் ஓரிறை கொள்கை நீனவா நகர் முழுவதும் யூனுஸ் (அலை) அவர்கள் பரப்ப நீனவா மக்களும் மன்னனும் நபியவர்களை பெரிதாக தாக்கினர்கள்
அதற்கு யூனுஸ் (அலை) அவர்கள் "இன்னும் எண்ணி நாற்பது நாட்களில் இறை வேதனை உங்களை வந்தடையும் ".
"அப்படி உம் இறை வேதனை வரவில்லை என்றால் பொய் சொன்ன குற்றத்திற்காக உம்மை சிரசேதம் செய்யப்படும் இது அஸ்ஸீரியர்களின் சட்டம் என்பது உங்களுக்கு நன்கு தெரியுமல்லவா ?"
நாற்பதாவது நாள் முஹர்ரம் பிறை பத்தாம் நாள் வியாழன் அதிகாலை மென்காற்று வீசியது நீனவா மக்கள் உள்ளம் குளிர்ந்தது.
சோதனையின் கவுணட் டவுன் ஆரம்பித்த விபரம் தெரியவில்லை
நீனவாக்களுக்கு .
நேரம் ஆக ஆக அனற் காற்று வீச வீச நெருப்பு பொறி தெறித்தது . ஆங்காங்கே பற்றி எரிந்தது .மன்னன் உட்பட மக்கள் நபி யூனுஸ் (அலை) அவர்களைத் தேடி மன்னிக்க வேண்டினர் . தேடினர் தேடினர் நீனவா எல்லை வரை தேடினர்.
கிடைக்கவில்லை .
நபியவர்கள் அவர்களின் கண்ணுக்குத் தெரியாமல் ஊரை விட்டு காணாமல் போயிருந்தார்கள் .
நீனவா நகரில் ஓர் இறைநேசர் இருந்தார் அவரிடம் போய் , இறை மன்னிப்புக்கு வழி கேட்டனர் .அவர்கள்,
"யா ஹய்யு ஹீன லாஹய்யு
யா ஹய்யு ஹீன துஹ்யில் மௌத்தா
லா இலாஹ இல்லா அன்த "
(இறைவனே.. எல்லாப் பொருள்களும் உயிரற்ற நிலையில் இருந்த பொழுது உயிரோடிருந்தவனே! இறந்தவர்கள் உயிர்பிக்கப்படும் பொழுதும் உயிரோடுள்ளவனே .உன்னைத் தவிர வணக்கத்திறகுரியவன் எவனுமில்லை) என்று அழுதழுது இறைஞ்ச சொன்னார்கள் .

மக்களும் மன்னனும் பாவமன்னிப்பு வேண்டி மேற்கண்ட திக்ரை மொழிந்து கொண்டடே இருக்க .....
நெருப்பு மழைக்காற்று நீனவானவை விட்டு நீங்கியது . இறை நேசரின் உதவியால் இறை சாபம் நீங்கியது .இதை அறியாமல் நபி யூனுஸ் (அலை) அவர்களை சைத்தான் திசை திருப்பி விட்டான்.
"(மக்களால்) நிறைந்த கப்பலின் பக்கம் அவர் தப்பியோடிய சமயத்தில் (அதில் ஏறிக் கொண்டார் .
அ(க் கப்பலுள்ள)வர்கள் (திருவுளச்) சீட்டுப் போட்டதில் இவர் (கடலில்) எறியப்பட வேண்டியவரானார் .
(அவ்வாறு அவர்கள் இவரை கடலில் எறியவே ) மீன் அவரை விழுங்கி விட்டது. அச்சமயம் அவர் தன்னைத்தானே நிந்தித்துக் கொண்டிருந்தார் .
நிச்சயமாக அவர் நம்மைத் துதி செய்பவர்களில் ஒருவராக இல்லாதிருந்தால் ,
(" லாஇலாஹ இல்லா அன்த
ஸுப்ஹானக இன்னீகுன்து
மினழ்ழாலீமீன் )
(மறுமையில்) எழுப்பப்படும் நாள் வரும் வரையில் அவர் அதன் வயிற்றில் தங்கி இருந்திருப்பார்.
(அவர் துதி செய்ததன் காரணமாக) வெட்ட வெளியான பூமியில் (மீன் வயிற்றிலிருந்து ) அவரை நாம் எறியச் செய்தோம் .அச்சமயம் அவரோ மிக களைப்புடனும், சோர்வுடனும் இருந்தார்.
குர்ஆன் (37 : 140 - 145)
ஸ்பெயின் நாட்டைச் சேர்ந்த மீனவர்
லுயிகி மார்கியூஸ் (வயது 56) கடலில் மோசமான வானிலை காரணமாக கடலில் மாயமானார் . கடற்கரை பாதுகாப்பு படையினர் கடலில் தேடி கிடைக்கவில்லை .
மூன்று நாளைக்குப் பிறகு கரையில் ராட்ச திமிங்கிலத்தின் கழிவில் மயங்கிய நிலையில் மீட்டனர் . அதுவும் உயிருடன்.
மீன் விழுங்கியது பற்றி விசாரித்த போது , நல்ல குளிர்ந்த இருட்டில் இருந்தேன் எனது வாட்டர் புரூப் வாட்சின் ஒளியில் திமிங்கலத்தின் உண்ட கழிவில் உள்ளதை உண்டேன் .ஆனாலும் நான் கடவுளை வேண்டிக்கொண்டே இருந்தேன் . கடவுள் என்னை கைவிடவில்லை "
"ஆகவே யூனுஸுக்கு (நிழலிடுவதற்காக) ஒரு சுரைச் செடியை முளைப்பித்தோம்.
அவர்கள் அனைவரும் நம்பிக்கைக் கொண்டார்கள் . ஆதலால் நாமும் அவர்களை ஒரு (நீண்ட) காலம் வரையில் சுகமாக வாழ வைத்தோம்
குர்ஆன் ( 37 : 146 - 148)

**Rahmath Rajakumaran**
நபி யூனுஸ் (அலை) அவர்களைப் பற்றி குர்ஆனில் அல்லாஹ்
" நீர் உம் இறைவனின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து பொறுமையை மேற்கொள்ளும்.
அந்த மீன்காரரைப் போன்று நீர் ஆகிவிட வேண்டாம் ." என்று குத்தலாக
(குர்ஆன் 68 : 48 ) ல் அல்லாஹ் குறிப்பிடுகிறான்
"துன்னூன் " (மீனையுடையவர் ) என்றும் "சாஹிபுல் ஹூத் (மீன்காரர்) என்றும்
குர்ஆன் ( 10 : 87) இறைவன் குறிப்பிடுகிறான்.

**Rahmath Rajakumaran**
நீர்வாழ் , நில வாழ் உயிர்கள் அனைத்துடனும் ஒப்பிடுகையில் மிகப் பெரிய உயிரினம் நீலத் திமிங்கிலம் (Blue Whale) இது 100 அடி நீளம் .( எங்க வீட்டின் நீளம் 114 அடி) அதன் நாக்கில் 50 பேர்கள் உட்காரலாம் எடை 150 டன் (1,50,000 கிலோ) .மிக சாதுவான மீன் என்றே அழைக்கிறோம். ஆனால் மீன் வகையில் பெரிய விலங்கு . மீன்கள் செதில்களால் சுவாசிக்கிறது .
ஆனால் நீலத் திமிங்கலம் நுரையீரலால் சுவாசிக்கிறது .இதனால் நீர் மட்டத்திறகு மேலே வந்து வெளிக் காற்றை உள்வாங்கிக் கொண்டு அசராமல் 7000 அடி ( 7 கி.மீ) கடல் ஆழத்திற்கும் கீழே நீந்தி உணவுகளை வேட்டையாடும்
ஒரு முறை உள்ளிழுக்கும் மூச்சிக் காற்றில் உள்ளே இருப்பவர்களுக்கு புயல் காற்று வீசுவதாக இருக்கும்
நாம் காற்றை 15% சதவீதம்தான் நம் நுரையீரலில் நிரப்புகிறோம் நீலத் திமிங்கிலம் 90% காற்றை நுரையீரலில் நிரப்பிக் கொள்ளும் .இதற்கு மூக்கு தலைகது மேற்புறம் இருக்கும் .30 அடிக்கு உயரமாக கடல்நீரை பீச்சியடிக்கும் .
சுவாசிப்பதற்கு கடலின் மேற்புறம் வரும் போது. ஒரு வகையான பாடலை பாடிக் கொண்டு பெரும் சப்தத்துடன் மேலே எழும்பும் .இது சங்கீதம் அல்ல .மற்ற திமிங்கலத்தோடு பேசும் மொழி .
மொழியின் அலைவரிசை சுமார் 500 கி.மீ வரை பரவுகிறது
மீன்கள் முட்டையிட்டு .குஞ்சி, பொறிக்கும் .இது குட்டிப் போட்டு பால் கொடுக்கும் .
ஒரு நாளைக்கு 15,000 கிலோ உணவை உட்கொள்கிறது .

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 14 02-10-2017










(இஸ்லாத்தின் மறுமலர்ச்சி பத்ரு )
மக்கா விட்டு மதீனாவிற்கு நபி (ஸல்) அவர்களும் மற்றும் நபித்தோழர்களும் இடம் பெயர்ந்த நிகழ்வை ஹிஜ்ரத் என்று அழைக்கப்படுகிறது .
மதீனாவில் இஸ்லாம் தனிப் பெரும் அரசாக வளர்ந்து வருவதை மக்கா எதிரிகளால் விரும்பவில்லை .
இஸ்லாத்தின் வளர்ச்சி முழு அரபு உலகத்தையும் இஸ்லாம் ஆட்கொண்டால் மக்காவின் இறை மறுப்பாளர்களின் இயல்பு நிலை வாழ்க்கை பாதிக்கப்படும் என்று அஞ்சினர்.
அடுத்து, மதீனாவில் பலமான ஆட்சி நபி (ஸல்) அவர்கள் நிறுவினால்
மக்காவிலிருந்து சிரியாவை நோக்கிச் செல்லும் குறைஷி வணிகர்களைத் தடுத்து நிறுத்தி மக்காவாசிகளின் பொருளாதாரப் பலத்தை அழித்து விடுவார் என்ற என்றும் அஞ்சினர் .
( மேப் படத்தைப் பார்க்கவும் )
அடுத்து, நபி (ஸல்) அவர்கள் மக்காவை விட்டு வெளியேறும் போது கூட கஃபாவைப் பார்த்து அழுததை எதிரிகளால் மறக்க முடியவில்லை இதனால் நபி(ஸல்)அவர்கள் மதீனாவில்
தங்கள் போர் படை மற்றும் பொருளாதாரத்தை ஸ்திரப்படுத்திக் கொண்டு மக்கா குறைஷிகளை தாக்கலாம் என்றும் அஞ்சினர் .
இப்படி போர் ஒன்றுக்கான சூழ்நிலை உருவாகி வந்த போது அபூசுபியான் (இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்) 50 ஆயிரம் தினார் பெறுமதியான வர்த்தகப் பண்டங்களோடு சிரியாவிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தார் .தன்னைத் தாக்கி வியாபார பொருட்களை மதீனா முஸ்லீம்கள் கொள்ளை அடிக்கலாம் என்று மக்காவுக்கு இது பற்றிய செய்தி அனுப்பினார்.
மக்கா பெரும் செல்வந்தர்கள் தங்களது சொத்துக்களும் அபூசுபியானிடம் இருப்பதால், பெரும் தலைவர்களை ஒன்றிணைத்து மதீனா மீது படையெடுத்து முஸ்லீம்களை தாக்க வேண்டும் என்று உத்பா ரபீஆ தலைமையில் பெரும் படையுடன் மதீனாவை நோக்கி பத்ரு என்ற இடத்தில் பாளையம் இறங்கியது .
பத்ரு, மதீனாவின் தென் மேற்கே 130கி.மீ
பத்ரு யுத்தம் கி.பி 624 , மார்ச் 17 -
ஹிஜ்ரி 2 ரமலான் பிறை 17 வெள்ளிக்கிழமை நடைபெற்றது.
மதீனா படைகளின் தலைவர்களாக ,
1) நபி (ஸல்) , 2) ஹம்சா இப்னு அப்துல் முத்தலிப் . 3) அலி இப்னு அபீதாலிப்
மக்கா படையின் தலைவர்களாக,
1) அபூ ஜஹீல் 2) உத்பா இப்னு ரபீஆ
3) உமையா இப்னு கலஃப்
மதீனா படையின் பலம்
313 பேர்கள் 2 குதிரைகள் , 70 ஒட்டகங்கள்
( மக்கா படை போர் வீரர்களை விட 1000 பேர்கள் குறைவு )
மக்கா படையின் பலம்
1300 பேர்கள் , 100 குதிரைகள் 170 ஒட்டகங்கள் .
"நீங்கள் எதிரிகளை விட ஆயுதத்திலும் எண்ணிக்கையிலும் குறைந்தவர்களாக இருந்தீர்கள்." குர்ஆன் (3 : 123)
நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வே இக் கூட்டத்தை இன்றும் அழித்து விட்டால் உன்னை வணங்குவதற்கு இப்பூமியில் யாருமேஇருக்கமாட்டார்கள் ."
இறைவனிடம் கையேந்தினார்கள்.

" உங்களைப் பாதுகாக்குமாறு நீங்கள் உங்கள் இறைவனிடம் வேண்டிய போது, அணியணியாக உங்களைப் பின்பற்றி வரக்கூடிய ஆயிரம் வானவர்களைக் கொண்டு நிச்சயமாக நான் உங்களுக்கு உதவி செய்வேன்"
குர்ஆன் 8 : 9
( குறைவான 1000 வீரர்களுக்கு 1000 மலக்குகள் கொடுக்கபட்டு கணக்கு சரி செய்யப்பட்டது .இப்போ யுத்தம் செய்யுங்கள்)
" இதோ ஜிப்ரீல் குதிரையின் கடிவாளத்தை இழுத்து வருகிறார் அவர் உடம்பில் புழுதி படிந்திருந்தது " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
நபி(ஸல்) அவர்கள் போர் தொடங்கு முன்
எங்களிடம் சில குறிப்பிட்ட இடங்களில் கை வைத்து இந்த இடத்தில் இவர் கொல்லப்படுவார் அந்த இடத்தில் அவர் கொல்லப்படுவார் என்று பெயர் குறித்துக் காட்டினார்கள் .
எதிரிகளில் கொல்லபட்டவர்கள் எவரும் நபி (ஸல்) அவர்கள் கை வைத்துக் காட்டிய இடத்தை விட்டு கொஞ்சம் கூட கடக்கவில்லை .
(முஸ்லீம் . மிஸ்காத் பக்கம் 531 )
அன்றைய போர் முறைப்படி எல்லோரும் ஒரே நேரத்தில் மோதுவதில்லை. போரின் ஆரம்பத்தில் சிலர் சிலருடன் மோதிக் கொண்டு யுத்த வெறியை கூட்டுவர்.
இதன் அடிப்படையில் மக்கா குறைஷிகள் சார்பாக மூன்று பேர் வந்தனர் . முஸ்லீம்கள் சார்பாக மதீனா அன்சாரிகள் மூவரை நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள்
"எங்களுக்கு நிகராக உங்கள் குறைஷிகளையே அனுப்புங்கள்" என்றனர் . உடனே
ஹம்ஸா (ரலி) X உத்பா
உபைதா (ரலி) X வலீத்
அலி (ரலி) X ஷைபா
முஸ்லீம் வீரர்களின் வாட்கள் மக்கா குறைஷிகளின் தலைகளை தரையில் உருட்டினர். குறைஷிகளுக்கு பெரிய தலைவர்களின் தலை துண்டிக்கப்பட்டதும் நிலை குலைந்துப் போனார்கள்.
இந்த நேரத்தில் நபி (ஸல்) அவர்கள் போரின் இறுதிக் கட்டத்தை அறிவிக்க, போர் உக்கிரமானது. பலரும் பலருடன் மோதினர் .
மலக்குமார்கள் ஆயிரம் பேர்கள் யுத்த களத்தில் இறங்க ...... , சுராகா வேடத்தில் இருந்த இப்லீஸ் மலக்குமார்களைக் கண்ட பொழுது பின்னங்கால் பிடறியில் அடிக்க ஓடினான் .
"சுராகாவே ... எங்கே ஓடுகிறீர்கள் ?"
"நீங்கள் காணாததை நான் கண்டேன் ." என்றான் இப்லீஸ்
குர்ஆன் (8 : 48)
கடலில் குதித்து மறைந்து போனான் .
அப்போது அப்பாஸ் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்கவில்லை . அன்சாரிகளில் ஒருவர் அவரை கைது செய்து நபி (ஸல்) அவர்கள் முன் கொண்டு வந்த போது . அப்பாஸ் (ரலி)
"அல்லாஹ்வின் மீது ஆணையாக . நிச்சயமாக இவர் என்னை கைது செய்யவில்லை அழகிய முகமுடைய தலையில் முடி இல்லாத ஒருவர் கருப்பும் வெள்ளை கலந்த நிறத்துடைய குதிரையில் வந்து என்னை கைது செய்தார் ஆனால் அவரை இந்த கூட்டத்தில் நான் பார்க்கவில்லை! " என்று கூறினார்.
அதற்கு அன்சாரித் தோழரே ... l நீர் அமைதியாக இரும், கண்ணியமிக்க வானவர் இவரை உன் கையில் பிடித்து தந்துள்ளார் , " என்றார்கள்
அபூஜஹ்லை இரண்டு அன்சாரி சிறுவர்களான முஆத் இப்னு அம்ர் இப்னு ஜமூஹ் (ரலி) , முஅவ்வித் இப்னு அப்பரா (ரலி) இருவரும் வெட்டிக் கொன்றனர்
முஸ்லீம்களில் 14 பேர் ஷஹீதானார்கள் .மக்கத்து குறைஷிகளில் 70 பேர் கொல்லப்பட்டனர் 70 பேர் கைது செய்யப்பட்டனர் .
மக்கத்து குறைஷிகளின் முக்கியமான 24 தலைவர்கள் யுத்தத்தில் மரணமடைந்தனர். இது மக்கத்து குறைஷிகளுக்கு பெரும் இழப்பு .
"அதி சீக்கிரத்தில் இந்தக் கூட்டம் சிதறடிக்கப்படும் . மேலும் இவர்கள் புறங்காட்டி ஓட்டுவார்கள் "
குர்ஆன் ( 54 : 45 )
ஆமாம் . ஓடினார்கள் பத்ரு களத்தை விட்டே பதறியடித்து ஓடினார்கள் . விரட்டி விரட்டி பிடித்து கைது செய்யப்பட்டார்கள் .
இஸ்லாம் பத்ரு யுத்தத்திற்குப் பிறகு மறுமலர்ச்சி அடைந்தது .

**Rahmath Rajakumaran**

பத்ரு யுத்தத்தின் போது மக்கா குறைஷி ஒருவரை முஸ்லீம் அன்சாரி போர் வீரர் விரட்டிக் கொண்டிருந்த போது . தமக்கு மேலே சாட்டையைச் சுழற்றி அடிக்கும் சப்தத்தையும் , ஒருகுதிரை வீரர், "ஹைஸூம்.. முன்னேறிச் செல்" என்று கூறியதையும் செவியுற்றார் .

உடனே தனக்கு முன் சென்ற மக்கா குறைஷி மல்லாந்து வீழ்ந்து கிடப்பதைக் கண்டார் . அவரது மூக்கில் காயம் ஏற்பட்டிருப்பதையும் . சாட்டையால் அடிபட்டது போல் அவனது முகம் கிழித்து முகமெல்லாம் இரத்தம் கன்றிப் போய் இருப்பதையும் கண்டார்.
உடனே அந்த அன்சாரி . நபி (ஸல்) அவர்களிடம் இதுபற்றி தெரிவித்த போது , "நீர் சொன்னது உண்மையே இது 3-வது வானிலிருந்து இறங்கிய வானவர்களின் உதவி"
( முஸ்லிம் 3621 )

**Rahmath Rajakumaran**
அபூஜஹ்லின் மகன் இக்ரிமா (ரலி) அவர்கள் ஸஹாபிகளில் ஒருவர் . அவர் பத்ரு யுத்தம் பற்றி கூறும் போது "அன்றைய தினத்தில் ஒருவரின் தலை துண்டிக்கப்பட்டு கீழே விழும் .ஆனால் அவரை வெட்டியவர் யாரென்று தெரியாது.
(இப்னு ஸஅது )

**Rahmath Rajakumaran**
அபூதாவூது அல்மாஸினி (ரலி) அவர்கள் " நான் ஒரு எதிரியை வெட்டுவதற்காக அவனை பின் தொடர்ந்த போது என் வாள் அவன் மீது படுவதற்கு முன்னதாகவே அவனது தலை கீழே விழுந்தது .எனவே வேறு யாரோ அவனை வெட்டினார்கள் என்று நான் அறிந்து கொண்டேன் .





ஈராக் நாட்டில் ஜபர்தஸ் மன்னன் ஆண்டு வந்தான் .அவனும் அவனது குடிமக்களும் " வத்து, சுவாஉ , யஃகூஸ் , யஊக் , நஸ்ர் போன்ற சிலைகளை வணங்கி வந்தனர்
இறைத்தூதர் நூஹ் (அலை) அவர்களை நோவா (Nova ) என்றும் அழைக்கிறார்கள் . ஆதம் (அலை) அவர்கள் இப்பூமியில் இறங்கி 1642 வருடம் கழித்து நபி நூஹ் (அலை) பிறக்கிறார்கள்
நபி நூஹ் (அலை) அவர்கள்
கி.மு ( 2948 -1958 )
வயது 950 - குர்ஆன் (29 : 14 )
இவர்களது இயற்பெயர் அப்துல் கஃபார் அல்லது அப்துல் கபூர் என்றழைக்கப்படுகிறது இவர்கள் நபி இத்ரீஸ் (அலை) அவர்களின் பேரரும்
லாமக் என்பவரின் மகனும் ஆவார் இவர்களை "இரண்டாம் ஆதம் " என்று வரலாறு குறிப்பிடுகிறது .
ஆதம் (அலை) அவர்கள் காலம் முதல் நூஹ் (அலை) காலம் வரை 10 தலைமுறையினர் வாழ்ந்தனர் அவர்கள் அனைவருமே முஸ்லீம்களாகவே இருந்தனர் .அதன் பின்னரை நூஹ் (அலை) காலத்து சற்று முந்திய கால மக்கள்தான் முதன் முதலில் மேற்கண்ட சிலை வணக்கத்தை துவங்கினர் .
" என் மக்களே... நீங்கள் அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள் ( மாறு செய்தால் ) உங்களுக்கு (வரக்கூடிய) மகத்தானதொரு நாளின் வேதனையை நினைத்து நான் பயப்படுகிறேன்."
குர்ஆன் ( 7 : 59 )
"நூஹே.... நிச்சயமாக நிச்சயமாக எங்களுடன் அதிகமாகவே தர்க்கம் செய்கிறீர்கள் ( இனி தர்க்கத்தை விட்டொழித்து வேதனை வரும் என்று கூறுவதில்) நீங்கள் மெய்யாகவே உண்மை சொல்பவராக இருந்தால், நீங்கள் அச்சமுறுத்தும் அந்த வேதனை நம்மிடம் கொண்டு வாருங்கள்"
குர்ஆன் ( 11 : 32 )
"முன்னர் நம்பிக்கைக் கொண்டவர்களைத் தவிர இனி உங்களுடைய மக்களில் ஒருவரும் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள் . ஆதலால் அவர்களுடைய செயலைப் பற்றி நீங்கள் விசாரப்படாதீர்கள் (கவலைப்படாதீர்கள்) "
குர்ஆன் ( 11 : 36 )
"என் இறைவனே .. பூமியில் இந் நிராகரிப்பாளர்களை ஒருவரையும் நீ வசித்திருக்க விட்டு வைக்காதே "
குர்ஆன் ( 71 : 26 )

"என் வேதனை இறங்கும் முன் கப்பலை கட்டிக் கொள்ளுங்கள் " என்ற கூற.
நபியவர்களுக்கு " கப்பல் "என்ற வாகனம் பற்றி தெரியவில்லை . "அது ஒரு பறவையே போன்று அமைக்கப்பட வேண்டும் என்றும், அதனுடைய தலை மயிலின் தலை போன்றும் . கண்கள் கழுகின் கண்கள் போன்றும் . நெஞ்சு புறாவின் நெஞ்சு போன்றும் , வால் சேவலின் வால் போன்றும் இருக்கும் என்றும் கூறப்பட்டது கப்பல் கட்டப்பட்டது .
"பலகைகள் மற்றும் ஆணிகள் உடைய (கப்பல்) ஒன்றில் அவரை ஏற்றினோம் . அது நமது கண்காணிப்பில் ஓடியது "
குர்ஆன் ( 29 : 15 )
நூஹ் (அலை) அவர்கள் உயிரினங்களில் ஒவ்வொரு ஜோடிகளையும் தம்மைச் சார்ந்தவர்களையும் ஏற்றிக் கொண்டு பரிவாரத்தோடு ரஜப் மாதம் 10 ஆம் நாள் வெள்ளிக்கிழமை கூபாவில் இருந்து (சிலர்இந்தியாவிலிருந்து ) கப்பல் புறப்பட்டது .
கப்பலில் நபியின் முஸ்லீம் மனைவியும் அவருடைய மக்களான ஹாம், ஸாம் , யஃபித் மற்றும் மனிதர்களும் ஏறிக் கொண்டனர்.
முஸ்லீமாக இருந்து பின் நிராகரிப்பாளர்களோடு சேர்ந்து கொண்ட முன்னாள் மனைவியான வாஇலா வும் அவளுக்கு பிறந்த கன்ஆன்னும் கப்பலில் ஏறவில்லை.
துல்கஃதா மாதம் 10 ஆம் நாள் தரை தட்டி நின்றது .
1969 ஆகஸ்ட் 2 ந் தேதி ரஷ்ய எல்லையை ஒட்டி அமைந்துள்ள அராரத் மலை தொடரில் ஒரு கப்பலின் சில மரப் பகுதிகளை அமெரிக்கத் தொல்பொருள் விஞ்ஞான ஆய்வுக் குழு கண்டு பிடித்தது இம்மலையின் மேற்பகுதியில் பதினான்காயிரம் அடி உயரத்தில் பனியால் மூடப்பட்ட பாறைகளுக்கிடையில் 20 மீட்டர் ஆழத்தில் புதையுண்டு கிடந்தன.
"அக் கப்பலை அகிலத்தாருக்கோர் அத்தாட்சியாக ஆக்கினோம் "
குர்ஆன் ( 29 : 15 )
" ஸலாமுன் அலா நூஹூ " அகிலங்கள் எங்கும் நூஹூ மீது ஸலாம் உண்டாவதாக " குர்ஆன் ( 37 : 79 )

**Rahmath Rajakumaran**
நபி நூஹ் (அலை) அவர்கள் சிரியாவில் "கர்க் " என்னும் இடத்தில் அடக்கப்பட்டுள்ளார்
என்றும் மக்காவில் அடக்கப்பட்டுள்ளார்
என்றும் ஆய்வில் கிடைக்கப்பெறுகிறது

**Rahmath Rajakumaran**
கப்பல் "தூபான் " என்னும் வெள்ளத்தில் மிதந்து கப்பல்
7 முறை கஃபாவை வலம் சுற்றியது
**Rahmath Rajakumaran**
பாபிலோனிய மரபுகளில் இது கில்காமோஸ்
ஐஉட்ன பிசிதம் எனும் கடவுள் இது போன்ற உழிப் பெருவெள்ளத்தில் இருந்து காப்பாற்றுவது பற்றி பேசப்படுகிறது .
இந்து புராணங்களில் மன்னன் மனுவை மச்சாவதாரம் பெருவெள்ளத்தில் இருந்து காப்பாற்றுவதாக மச்ச புராணம் குறிப்பிடப்படுகிறது.
**rahmath Rajakumaran**
நீண்ட நாட்கள் பகலிலும் இருள் இருந்ததால் இருட்டிலிருந்து வெளிவந்ததும் கண்கள் கூச ஆரம்பித்தன . கண்களில் கூச்சம் தெளிவடையவும் , கண்களில் பார்வை சக்தி பெறவும் நபி நூஹ் (அலை) அவர்கள் உலகின் முதன் முதலில் கண்களில் சுர்மா இட்டார்கள் .
**rahmath Rajakumaran**
நூஹ் (அலை) கப்பலில் புறப்பட்டபோது வயது 600 . இரவு - பகல் பாராது தொடர்ந்து மழை பொழிந்து கொண்டே இருந்ததால்
பொங்கும் கடலுக்கும் பூமிக்கும் வித்தியாசம் தெரியாமல் போய்விட்டது எது தரை எது கடல் எது மலை என்று தெரியாததால் ஜூதி மலையில் தரை தட்டியதும் இறங்கி விட்டார்கள்

**Rahmath Rajakumaran**
நபி நூஹ் (அலை) அவர்களுக்கு
ஷெய்குல் முர்ஸலீன் ( முர்ஸலான நபிமார்களின் முதியவர் )
கபீருல் அன்பியா (நபிமார்களில் மூத்தவர் )
நஜீயுல்லாஹ் (இறைவனால் விமோசனம் பெற்றவர் )
அபூ அன்பியா (நபிமார்களின் தந்தை

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 16





(பூலோகத்தில் சொர்க்கம் கட்டிய ஷத்தாத்தும் அவனது சமூகமும் )

இப் பதிவு படிக்கும் முன் முதல் பதிவான "ஆது'' சமூகத்தைப் பற்றி தெரிந்து கொண்டால், இப் பதிவுக்கு தேவையான முதல் 3 பாராக்களை எழுத வேண்டியது இருக்காது .

முதல் பதிவை படித்து விட்டீர்களா ?

ஆது மக்களின் அரசனாக ஷத்தாத் முடிசூடிக் கொண்டான் . உருவச்சிலைகளை வணங்கும். அவனிடம் ஹூத் (அலை) ஏகத்துவத்தை போதித்தார்கள் .

"உங்களது உருவமற்ற இறைவனை வணங்கினால் என்ன கிடைக்கும் ? "

"சொர்க்கம் "

"எப்படி இருக்கும் சொர்க்கம் ?"

"தங்கத்தாலும் மணி முத்துக்களாலும் வைர வைடூரியங்களாலும் உருவாக்கப்பட்டது."

"அந்த சொர்க்கத்தை பூலோகத்திலேயே நானே உருவாக்கிக் கொள்கிறேன்" என்று தன் கீழ் உள்ள சிற்றரசர்கள் அத்தனை பேரிடமும் மேற்கண்ட தங்கம் போன்றவற்றை உடனடியாக கொண்டு வரச் சொன்னான் .

பூலோக சொர்க்கம் தன்னுடைய 600 வயதில் உருவாக்கப்பட்டு 900 வயதில் கட்டி முடிக்கப்பட்டது . இதற்கு "இறமதாத்தில் இமாத்" என்ற பெயரும் சூட்டப்பட்டது.

இறைவன் கூட " இதைப் போன்று ஒரு நகரம் இம்மண்ணில் உருவாக்கப்படவே இல்லை" என்று குர்ஆனில் (89 : 8 ) குறிப்பிடுகிறான் .

திறப்பு விழா . தன் சமூக மக்கள் புடை சூழ ஷத்தாத் அங்கு வந்தான் . அந்த இடத்தில் பொன் நிற மான் ஒன்று மேயக் கண்டான். ஏற்கனவே மயில்கள் குயில்கள் அன்னப்பறவைகள் முயல்கள் போன்றவற்றை கொண்டு அழகுப்படுத்தப்பட்ட பூலோக சொர்க்கத்தில் பொன் மான் மேய்ந்தால் இன்னும் அழகாக இருக்குமே...

பொன்மானை பிடிக்க விரட்டினான் ஷத்தாத் , கூடவே அவன் சமூகமும் விரட்டியது . அது இறக்கை கொண்டு பறக்க ஆரம்பித்தது . அந்த இடத்தில் பார்க்க அச்சமுற தோற்றத்தில் ஒரு ஆள்,
"பூலோகத்தில் சொர்க்கம் கட்டினால் இறப்பு வராது என்ற நினைப்போ ? "
"நீ யார் ?"
"இஸ்ராயீல் "
" இங்கு என்ன செய்ய வந்தீர் ?"
"உயிரை வாங்க "
ஒரே ஒரு சப்தம் ஷத்தாத் உட்பட அத்தனை பேரும் மாண்டனர் ... இப்படி ஒரு வரலாறு பேசுகிறது
இறமதாத்தில் இமாத் என்ற பூலோக சொர்க்த்தை திறக்க அதன் தலைவாயிலுக்கு வந்து ஷத்தாத் வலது காலை முன்வைத்து இடது காலை தூக்கும் அந்த இடவெளி நேரத்தில் அவன் உயிர் வாங்கப்பட்டது. இப்படி ஒரு வரலாறும் பேசுகிறது.
காலச் சக்கரம் சுழன்றது .
இறைவன் . "இஸ்ராயீலே , நீர் எப்போதாவது எவர் மீதாவது இரக்கம் கொண்டிருக்கிறீரா ?"
"ஆம் இறை பெரியோனே ....ஒரு தடவை நடுக் கடலில் கப்பல் ஒன்று புயல் காற்றில் அலைக்கழித்து கவிழ்ந்து அத்தனை பேரின் உயிரும் வாங்கப்பட்டது. அத்தருணத்தில் ,ஒரு கர்ப்பிணி ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்து மிதக்கும் சிறிய மரத்துண்டில் வைத்து நீந்தினாள் . அந்த சமயம் அவள் உயிரையும் வாங்க ஒரு மீன் அவளை கடித்து குதறி விழுங்கியது .இந்த நிகழ்வு என்னை இரக்கப்பட வைத்தது " என்றார் இஸ்ராயீல் (அலை) அவர்கள்.
"அடுத்து ?" என்று கேட்டான் இறைவன்
ஷத்தாத், பூலோக சொர்க்கத்தை சுகிச்சு சுகிச்சி கட்டினான் . அத்தனை வருடம் கட்டிய சொர்க்கத்தை ஒரு தடவையாவது அவன் முழுமையாக உள்ளே போய் பார்ப்பதற்குள் அவன் உயிர் வாங்கியது எனக்கு ரொம்பவும் இரக்கமாக இருந்தது " என்றார் இஸ்ராயீல் (அலை) அவர்கள் .
"தாயில்லாமல் அன்று கடலில் தத்தளித்த அந்த ஆண் குழந்தைதான்
இந்த ஷத்தாத் " - என்றான் இறைவன்
உயிர் வாங்கும் இஸ்ராயீல் (அலை) அதிர்ந்து விட்டார்கள் .

See full details 2020
முதன் முதலாக விண்ணுலக சொர்க்கத்தை மண்ணுலகில் உருவாக்கிய மன்னன்   27-07-2020

சபிக்கப்பட்ட சமுதாயம் 17




(நபியவர்களை கொன்ற ரஸ்ஸு சமுதாயம் )
"ரஸ்ஸு " என்பது சுற்றுச்சுவர் கட்டப்படாத தரைக் கிணறு என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது .
ஷுஐபு (அலை) அவர்களும் அவர்களது சமூக மக்களும் மத்யன் தேசத்தை விட்டு வெளியேறி ஏடன் தேசத்தில் காட்டில் ஒரு கிணற்று பக்கம் குடியேறி,பெருகினர்கள் இதனால் இச் சமூகத்தினரை ரஸ்ஸு வாசிகள் (கிணறு வாசிகள்) என்று அழைக்கப்படுகிறார்கள்.
ஷுஐபு (அலை) அவர்களுக்குப் பிறகு
ரஸ்ஸு வாசிகள் சிலைகளை ஆராதித்து வணங்க ஆரம்பித்தனர் .
இவர்களை நேர்வழிப்படுத்த நபி "ஹன்ளலத் இப்னு ஸஃப்வான்" என்ற நபியை ஏடனுக்கு அனுப்பி வைத்தான் இறைவன் .
நபியவர்கள் ஏகத்துவத்தைப் போதிக்கும் போது அவர்கள் எதிர்த்தனர்.

இறைவனும் இவர்களுக்கு சோதனையாக ஒரு நீண்ட கழுத்துடைய பறவையை அனுப்பி குழந்தைகளை தூக்கிக் கொண்டு மேற்கு திசையை நோக்கி செல்வது வழக்கம் . இதனால் இப்பறவைக்கு "அன்காஉ மஃரிபு (மேற்கத்திய அன்கா பறவை) என்று பெயர். ஒரு நாள் பெரிய குமரிப் பெண்ணை தூக்கிக் கொண்டு பறந்தது அம்மக்கள் நபியிடம் வந்து ."இப்பறவை யிடம் இருந்து எங்களை பாதுகாத்தால் நாங்கள் ஈமான் கொள்கிறோம் " என்றார்கள். நபியவர்கள் துஆ செய்தார்கள் . அப்பறவை வரவே இல்லை .மக்களும் வழக்கம் போல் ஈமான் கொள்ளவே இல்லை .
நபி ஹன்ளலத் இப்னு ஸஃப்வான் (அலை) அவர்கள் இச் சமூகத்திற்கு நபியாக அனுப்பப்படுவதற்கு முன்பே இந்த ரஸ்ஸு சமுதாயத்தை "உலைஸ் " என்ற நீதிமான் அரசன் ஆண்டார் . இவர் இறந்த பிறகு மீண்டும் வருவேன் " என்று தன்னை மம்மியாக்கி அதற்கென்று ஒரு வகைத் தைலத்தை தயார் செய்து தன் உடலில் பூசச் செய்தார் . இதனால் இம் மன்னரின் உடல் அழியாமல் இருந்தது .
இறந்த மன்னர் நம்மிடம் பேசினால் நிறைய பிரச்சனைக்கு தீர்வு காண முடியும் . எனவே மன்னரை பேசச் செய்வதற்கு பூஜை ஏற்பாடுகள் செய்யப்பட்டன .
இறந்த மன்னர் பேசினார் .அதாவது,
இந்த தருணத்தைப் பயன்படுத்தி ஷைத்தான் இம்மன்னரின் உடலில் புகுந்து , "மக்களே நான் இறக்கவில்லை. எனக்குப் பிறகு நீங்கள் எப்படி நடந்து கொள்கிறீர்கள் என்பதை அறியவே நான் மறைந்து இருக்கிறேன் " என்று மன்னர் மூலம் ஷைத்தான் அவர்களிடம் பேசினான் .
நபியவர்கள் ஷைத்தானின் திட்டத்தை மக்களுக்கு தெரிவித்தார் . "முதலில் நீங்கள் சிலைகளையும் பின்பு இறந்த உடலையும் உயிருடன் இருப்பதாக இறைவனாக வணங்குகிறீர்கள் இதனால் உங்களுக்கு இறைவனிடமிருந்து சாபம் உண்டாகும் " என்ற எச்சரிக்கை செய்ய ...
நபியவர்களை ரஸ்ஸு சமுதாயத்தினர் பட்டப்பகலில் கடைத்தெருவில் வைத்து கொலை செய்து அந்தக் கிணற்றிலேயே தூக்கிப் போட்டு மேலும் ஒரு பெரிய பாறாங்கல்லையும் இலவசமாக சேர்த்துப் போட்டனர்.
"நூஹுவுடைய சமூகத்தினரும் " ரஸ்ஸு (கிணற்று ) வாசினர்களும், தமூது (கூட்டத்தினரும் தங்களது நபிமார்களை ) பொய்ப்பித்தனர் . குர்ஆன் (50 : 12 )
இதனால் இறை சாபம் ஏற்பட்டு செழிப்பை தந்த கிணறு வற்றி வறுமை ஏற்பட்டது . அவர்களது தோட்டங்களும் துறவுகளும் தண்ணீர் இல்லாமல் பாழடைந்து போயின. இதனால் பஞ்சம் ஏற்பட்டு அழிய ஆரம்பித்தனர் இது சம்பந்தமாக குர் ஆன் (25 : 38) குறிப்பிடுகிறது
கிணற்றில் கொலை செய்து போடப்பட்ட நபியவர்களுக்கு தினமும் மலையில் விறகு பொறுக்கி விற்று அந்த பணத்தில் உணவு வாங்கி பாறாங்கல்லின் இடுக்கு வழியாக உணவை போடுவது என்று வழக்கமாக கொண்டிருந்தார் நபியவர்களை ஈமான் கொண்ட கறுப்பு நிறமான அடிமை மனிதர் .
இதைக் கண்ட ரஸ்ஸு கோத்திரத்தார்கள்
அவரிடம் "நபிதான் இறந்து போனார்களே உணவு எதற்கு ?" என்று கேட்டனர்.
"இறந்த அரசர் இன்னும் உயிரோடு இருந்து உங்களிடம் பேசிக் கொண்டு இருக்கும் போது, கொலை செய்யப்பட்ட எங்கள் நபியும் உணவு உட்கொண்டுதான் இருக்கிறார்கள்" என்றார் அந்த கறுப்பு நிற அடிமை மனிதர்.
அந்த கறுப்பு அடிமை மனிதர் சொன்னது ஒரு வேளை உண்மையாக இருக்குமோ என்று பலர் கிணற்றில் இறங்கி பாறாங்கல்லை புரட்ட ,
நீண்ட காலமாக கிணற்றில் போடப்பட்ட நபியவர்களின் தலையிலிருந்து இரத்தம் வழிந்து கொண்டிருந்தது . நபியவர்கள் ஷஹீதாக்கப்பட்ட நிலையில் தனது வலது கரத்தை கொண்டு காயத்தை மூடியதும் இரத்தம் நின்றது . வந்தவர்கள் நபியவர்களின் கையை எடுத்ததும் இரத்தம் கொப்பளித்தது மீண்டும் நபியவர்கள் தனது கரத்தால் காயத்தை மூட இரத்தம் நின்றது.
"சுவர்க்கத்தில் முதலாவது மனிதன் ஒரு கருத்த அடிமை" என்று ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது. அந்த கருத்த அடிமை இவராக இருக்கலாம் - என்று அலிய்யுப்னுல் ஹுஸைனிப்னி அலிய்யின் ஜைனுல் ஆபிதீன் (ரஹ்) கூறியிருக்கிறார்கள்.
இந்த பதிவின் ஆதாரங்கள்
1) தப்ஸீருல் ஹமீத் பாகம் 11 ,
2) அதே பாகம் 17
3) அன்வாறுல் குர்ஆன் பாகம் 5

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 18   10-10-2017



நபி நூஹ் (அலை) அவர்களின் சாபத்திற்கு ஆளான மகன் ஹாமின் வழி வந்தவன் , ஹாமின் மகன் குஷ் ஸெமிராமிஸ் என்ற அழகு மங்கையை மணமுடித்து அடுத்த நாள் அதிகாலையிலே மரணித்தான் .
கருவுற்ற அவள் கி.மு 2275 டிசம்பர் 24 பின்னேரம் டிச 25 தேதி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள் அவனே நம்ரூத் .
தான் கன்னியாக இருந்ததாகவும் ஆண் தொடர்பு இல்லாமல் அவனை ஈன்றெடுத்ததாகவும் தன் மகன் தெய்வப் பிறவி என்றும் அவள் கூறினாள் . ( எங்கேயோ கேட்ட மாதிரியான தகவலாக இருக்கிறதா ? )
வயதேறப் பெற்றதும் மகனின் அழகில் மயங்கி அவள் அவனையே "கணவன் மாதிரி " ஆக்கிக் கொண்டாள் . ( அதற்கு மேல் உள்ள தகவல்கள் பொது தளத்திற்கு தேவை இல்லாதது )
"பாபல்" நகரை தலைநகராகக் கொண்டு நம்ரூத் என்பவன் தன்னையே இறைவனாகப் பாவித்து மக்களை ஆண்டான்.மக்களும் நிறைய சிலைகளையும் கூட நம்ரூத்தையும் வணங்கி வந்தனர்.
திருவிழா ஆரம்பித்தது .அனைத்து மக்களும் பாபல் நகரை அடுத்துள்ள பிரதான வெளியில் கூடி திருவிழா நடத்தினர். பாபலில் ஒரே ஓர் இளைஞரைத் தவிர யாருமே இல்லை. அந்த இளைஞர் தலைமைப் பூசாரியின் மகன் "இப்ராஹீம் " ஆவார் . இவர்களே நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் ஆவார்கள்
திருவிழா முடிந்து கோவிலை திறந்த போது சின்ன சின்ன சிலைகள் உடைபட்டு பெரிய சிலை மட்டும் அதுவும் கையில் உடைத்த தடியுடன் தனியாக நின்றது. இது பற்றி ஊரில் தனியாக இருந்த இப்ராஹிம் (அலை) அவர்களிடம்
விசாரிக்க .
" அவற்றை எவர் உடைத்தாரென அதோ நிற்கும் உங்களின் பெரிய கடவுளைக் கேளுங்கள் . அல்லது உடைபட்டு கிடக்கும் சின்ன சின்ன சிலைகளிடம் கேளுங்கள் "என்றார்கள் (அதைப் பற்றி பெரிய கடவுளான இறைவனிடம் கேட்டுக் கொள்ளுங்கள் என்ற ரீதியில் பதில் சொன்னார்கள்)
" (அதற்கு அவர்கள் பதில் கூற வகையறியாது கோபம் கொண்டு) " "இவருக்காக பெரியதொரு நெருப்புக் கிடங்கை அமைத்து . அந்நெருப்பில் அவரை எறிந்து விடுங்கள்" என்று கூறினார்கள்." குர்ஆன் ( 37 : 97 )
நம்ரூத் குற்றவாளிகளை தண்டிக்க ஒரு சிறு நெருப்புக் குண்டம் அவனிடம் இருந்தது . அதில் இப்ராஹீம் (அலை) அவர்களை கால் கைகளைக் கட்டி தூக்கிப் போட நெருப்பு அணைந்தது . "இதென்ன மந்திரம் செய்தாரோ நெருப்பு துவர்ந்து போக "
பாரசீகத்தைச் சேர்ந்த " அல்ஹைஜன் " என்பவன் , வித்தியாசமான முறையில் நெருப்பில் இட நம்ருத்திற்கு ஆலோசனை கூறினான் .
"கூஸா என்னும் மலைச் சாரலில் உள்ள "அம்வலா பனீ அனா " என்ற இடத்தில் 60 முழ நீளமும் 40 முழ அகலமும் உள்ள நிலத்தில் 70 முழ உயரத்தில் சுவர் எழுப்பி அதிலே தன்னுடைய குடிமக்கள் ஒவ்வொருவரும் தங்கள் கடவுளர்கள் மீது உண்மை பக்தியுடையவர்களாக இருப்பின் ஒரு கழுதை சுமை விறகைக் கொண்டு வர ஆணையிடவும் கூறினான் .
அரசு ஆணை ஏற்று , மக்களும் இரவு பகலாக 40 நாட்கள் வண்டி வண்டியாக விறகு நிரப்பட்டது .குடம் குடமாக எண்ணெய் கொட்டப்பட்டது . நெருப்பு மூட்டப்பட்டது .
நெருப்பு மூட்டியதும் அந்த மலை காட்டு தீ எங்கும் பரவி ,அதன் வெப்ப பத்தால் 2000 பேர் அந்த உடனேயே கருகினார்கள்.

எனவே கவண் கல்லை கட்டி வீசுவது போன்று இயந்திரம் தயார் செய்யப்பட்டு, குண்டு கட்டாக தூக்கி ஏறிய ஆவணம் செய்த போது இயந்திரம் பழுதாகி நின்றது ." இதென்ன மாய மந்திரமோ" என்று நம்ரூத் ஆலோசனை செய்ய ." இது வானவர்களின் ரகசிய வேலை என்று கண்டறியப்பட்டது ."சரி அவர்களை விரட்ட என்ன செய்ய ?"
" அழகான பருவப் பெண்கள் பலரை நிர்வாணமாக்கி இங்கு கொண்டு வந்தால்,வானவர்கள் பறந்தோடி விடுவார்கள். அதற்கும் ஆவணம் செய்யப்பட்டு நிர்வாண நடனம் அரங்கேற்றபட்டது .இப்போது தூக்கி எறியும் கவ்ண் இயந்திரம் இயங்க .....
நபியவர்களை நெருப்பினுள் எறியப்பட்டது .
"ஹஸ்பியல்லாஹூ நிஃமல் வகீல் " என்பதை நபியவர்கள் ஒத
" நெருப்பே .நீ இப்ராஹிமுக்கு சுகம் தரும் விதத்தில் குளிர்ந்து விடு" என்று நாம் கூறினோம் ." குர்ஆன் ( 21 : 69 )
ஏழு நாட்களுக்குப் பிறகு நபி இப்ராஹீம் நெருப்பு கிடங்கில் இருந்து வெளி வர
நம்ரூத்திற்கு என்ன செய்ய வேண்டும் என்பதே தெரியவில்லை .
"இப்ராஹீமே , உன்னுடைய இறைவனோடு யுத்தம் செய்ய வரச் சொல்லும் . நானும் 60 லட்சம் வீரர்களோடு காத்திருக்கிறேன் " என்றான் நம்ரூத் .
இறைவன் காஃப் மலையிலுள்ள எல்லா கொசுக்களையும் திறந்தால் உலகமே கொசுக்களுக்கு பற்றாமல் அழிந்துவிடும் என்பதால் எனவே 60 லட்சம் கொசுக்களை மட்டும் திறந்து விட வானவர்களுக்கு உத்திரவு விட , அக் கொசுக்கள் ஒவ்வொருவரின் இரத்தத்தையும் தசையையும் எலும்பையும் தின்று தீர்த்தது .
கொசுக்களின் ராணி நம்ரூத்தின் மூக்கினுள் நுழைந்து மூளையை தின்ன ஆரம்பித்தது . நம்ரூத் தன்னைச் சேர்ந்தவர்களிடம் கால் மிதியடிகளைக் கொண்டு தன் தலையை அடிக்க அடிக்க தலைவலி குறைவதாகச் சொன்னான்.
அடிப்பது நிறுத்தினால் தலைவலி கூடுவதால் எந்நேரமும் மிதியடி கொண்டு அடித்து தலையே பிளந்தது .பிளந்த தலையிலிருந்து ராணி கொசு பிறந்த குஞ்சுகளோடு வெளிவந்தது.
நம்ரூதும் அவனது 60 லட்சம் படை வீரர்களும் மாண்டனர்.

**Rahmath Rajakumaran**
கூஸா மலைச் சாரலில் அம்வலா பனீ அனா என்ற இடத்தில் இன்றும் அப் பெரு நெருப்பு பற்றிய தடயங்கள் காணப் பெறுகின்றன .
R**ahmath Rajakumaran**
21 : 69 வசனத்தில் "ஸலாமா " என்ற சொல்லை இறைவன் பயன்படுத்தாமல் இருப்பின் இப்ராஹீம் (அலை) அவர்கள் குளிரிலேயே விறைத்திருப்பார்கள் என்றும் உலகில் " நெருப்பு " என்ற ஒரு சக்தியே இல்லாமல் போயிருக்கும் என்றும் , அச்சொல்லை பயன்படுத்தியதால் உலகில் இருந்த நெருப்பின் சூடே பொதுவாக குறைந்திருந்தது என்றும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்
**Rahmath Rajakumaran**
நெருப்பு குண்டத்தின் தீயை அணைக்க தவளை தன்னால் முடிந்தளவு நீர் தெளித்ததென்றும் எனவே அதனைக் கொல்ல வேண்டாமென்றும் அனஸ் (ரலி) கூறியுள்ளார்கள் .
தவளையை விட அதிகமாக இறைவனைத் துதிப்பது வேறொன்றுமில்லை "
- ஸுப்யான் (ரஹ்)
**Rahmath Rajakumaran**
"இப்ராஹீமே .. உம்முடன் நெருப்பில் ஒருவர் இருக்கக் கண்டேனே அவர் யார் ? என்றான் நம்ரூத்
"அவர் நிழலுக்கான வானவர் "
"உங்களைச் சூழ பலர் இருக்கக் கண்டேனே அவர்கள் யார் ?"
"அவர்களும் எனக்கு நன்மாராயம் சொல்ல வந்த வானவர்கள் "
என்றார்கள் நபியவர்கள் .
சூரிய நெருப்பினுள் கரும்புள்ளிகள் தோன்றி மறைகின்றன அவற்றின் எண்ணிக்கை 11 வருஷத்திற்கு கூடி பின் 11 வருடத்திற்குள் குறைவுகிறது (50 புள்ளிகளிலிருந்து 200 புள்ளி. வருஷம் 1959 )என்பதை ஹென்றி சாம்யுவெல் ஷ்வாபே (Hendri Samuel schwabe ) என்ற ஜெர்மானிய வானவியிலார் கண்டுபிடித்துள்ளனர்.
இந்த சூரியனின் கரும்புள்ளிகள் கூட வானவர்களாக இருக்குமோ ?
சூரியனில் வானவர்களின் மாநாடு நடைபெறுகிறதா என்னே ?

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 19 12-10-2017



"நான் மறைக்கப்பட்ட புதையலாக இருந்தேன் அதன் பின் நான் அறியப்பட வேண்டும் (நான் என்னைப் பார்க்க வேண்டும் ) என்று விரும்பினேன் எனவே படைப்பினங்களைப் படைத்தேன் " - இறைவன்
"அல்லாஹ் படைத்தவற்றில் முதலாவது என்னுடைய பேரொளியாகும் " -நபி (ஸல்) அவர்கள்
" அவன் வானத்தைப் படைக்க கருதினான் அது ஒரு புகையாக
இருந்தது . அந்தப் புகை இரண்டு நாளில் ஏழு வானங்களாகப் படைத்தான்
குர்ஆன் : ( 41 : 11 )
புகை அகற்றப்பட்டு தெளிந்த ஒளியுடைய ஒரு வகை நெருப்பு போன்ற ஒளியானால் மலக்குகளைப் படைத்தான் .
அடுத்து நெருப்பும் காற்றும் கலந்த புகை சூழ்ந்த நெருப்பினால் ஜின்களைப் படைத்தான் . ஜின்களின் ஆதி தந்தை தார்னூஷ் என்ற ஜானைப் படைத்தான் அஸாஸீல் என்ற பெயரோடு 1,20,000 வருடங்கள் இறைவனை வணங்கினான். இறைவனின் சாபத்திறகு ஆளான போது இப்லீஸ் ஆகி அவனது கண்கள் மார்பில் இறங்கி அவ லட்சணமாக மாறினான்.
இவன் ஆதம் (அலை) மாதிரி எந்த தாயின் கர்ப்பப்பையிலும் சூழ் கொள்ளாமல் நேரடியாக நெருப்பிலிருந்து படைக்கப்பட்டான் .
பெண்களின் கர்ப்பப்பையில் இந்திரியத் துளி விழுவதால் மனித உற்பத்தி உண்டாகுவது போல் , பெண் ஜின்களின் கர்ப்பப்பையில் ஆண் ஜின்கள் காற்றை விடுவதால் , நம்மை மாதிரி ஜின்களும் குழந்தை பிறக்கின்றன.
ஷாபான் பிறை 10 பூமியிலிருந்து மண் மலக்குகள் மூலம் எடுத்து வரப்பட்டு சுவனத்தின் நதியான தஸ்னீம் நீரால் குழைக்கப்பட்டு ஆதம் (அலை) அவர்களை 60 அடி உயர மனிதராக படைக்கப்படுகிறர்கள்.
ஒரு வெள்ளிக்கிழமை இறை நினைவில் இருக்க வேண்டிய ஆதம் (அலை) அவர்கள் துயிலுரும் போது விலா எலும்பு பிடுங்கப்பட்டு ஹவ்வா (அலை) படைக்கப்படுகிறார்கள் .
"ஆதமுக்கு எல்லாப் பொருட்களின் பெயரையும் அவற்றின் தன்மைகளையும் கற்றுக் கொடுத்து அவைகளை அந்த மலக்குகளுக்கு முன்பாக்கி சொல்லச் சொல்கிறான் .பின்னர் நாம் "ஆதமுக்கு நீங்கள் பணிந்து ஸுஜூது செய்யுங்கள் எனக் கூறிய பொழுது இப்லீஸைத் தவிர அனைவரும் செய்தார்கள். அவனோ பெருமை கொண்டு விலகி நம்முடைய கட்டளை நிராகரிப்பவனாகி விட்டான் "
குர்ஆன் ( 2 : 31 - 34 )
ஆதமும் ஹவ்வாவும் சுவனத்தில் இன்புற்று இருக்கையில் , இறைவன் "நீங்கள் இருவரும் சுவனத்தின் பழங்கள் அனைத்துமே உண்டு மகிழ்ந்திருங்கள் ஒரே ஒரு மரத்தைத் தவிர "
அந்த அற்புதமான மரம் கோதுமைச் செடி என்றும் துரியான் மரம் என்றும் கூறப்படுகிறது .
தம்பதியர் இருவரும் இறை ஆணைக்கு கட்டுப்பட்டிருந்தனர் .
சைத்தானான இப்லீஸ் அவர்களை கெடுக்க எண்ணி அவர்களை நெருங்க சுவனத்து மயிலிடம் இஸ்முல் அஃலத்தை சொல்லித் தருவதாக ஆசை கூறி சுவனத்திற்குள் அழைத்துச் செல்ல வேண்டினான். அதற்கு என்னால் முடியாது ஆனால் ஏழு தலை பாம்புவால் முடியும் என்று பாம்பை அழைத்து வந்தது.
ஏழு தலை பாம்பிறகு ஒட்டகம் போன்ற கால்களும் கூரிய நகங்களும் இருந்தன.
பாம்பு இப்லீஸை தன் பல் இடுக்கில் வைத்து சுவனத்திற்குள் சென்றது .
"சைத்தான் தம்பதியரின் மனதில் ஊசலாட்டத்தை உண்டு பண்ண "ஆதமே நிரந்தர வாழ்க்கைக்குரிய மரத்தையும் , அழிவில்லாத அரசாங்தையும் நான் உங்களுக்கு அறிவிக்கவா?"
குர்ஆன் ( 20 : 120 )

"இறைவன் தடுத்து வைத்த மரத்தை நெருங்க வைத்து அதில் உள்ள பழத்தை தின்ன வைத்தான்
"பழத்தை சுவைத்ததும் அவ்விருவரின் மர்ம உறுப்புகளும் அவர்களுக்குத் தெரிந்து அச்சோலையின் இலைகளைக் கொண்டு மூடிக் கொள்ள முயற்சித்தனர் "
குர்ஆன் 7: 22
" இதிலிருந்து நீங்கள் வெளியேறி விடுங்கள் உங்களில் ஒருவர் மற்றவருக்கு எதிரியாகி விடுவீர்கள் குர்ஆன் 7 : 24
ஆதம் (அலை) அவர்களின் தம்பதியருடன் காட்டிக் கொடுத்த மயில் இப்லீஸை உள்ளே தூக்கி சென்ற பாம்பு இவர்களுடன் சைத்தானும் பூமியில் இறங்கி ஒருவருக்கொருவர் எதிரியாகி ....
நீங்களும் நானும் அவைகளுடன் யுத்தம் செய்கிறோம் .

**Rahmath Rajakumaran**
என்னை திரள் திரளாக மலக்குகள் என்னை கண்டு பூரிப்படைகிறார்கள் ரப்பே ... அது ஏன்?
"நூரே முஹம்மதியா " எனும் பேரொளி யைக் கண்டு "என்றான் இறைவன்
"அதை நானும் காணவேண்டுமே ரப்பே"
ஆதமின் இரு பெரு விரல்களில் மிளிரச் செய்தான் .
அதனால் பாங்கு சொல்லும் போது நபி (ஸல்) திருநாமம் சொல்லும் போது
"மர்ஹபன் பி ஹபீபி வகுர்ரத்த அய்னி முஹம்மதிப்னு அப்துல்லாஹ் (ஸல்) என்று கூறி இருபெருவிரல்களில் ஊதி கண் இமைகளில் ஒததிக் கொள்ள வேண்டும்.
வலக்கை ஆட்காட்டி விரலின் (கலிமா) விரலின் நகத்திலும் ஒளிரச் செய்து ஆதம் (அலை) பார்த்தார்கள் .
தொழுகையில் அத்தயாத்தில் நாம் நம் கலிமா விரலின் நகத்தைப் பார்க்கிறோம்

**Rahmath Rajakumaran**
"நான் ஆதத்திற்கு ஸுஜுது செய்ய மறுத்தது பொறாமையின் காரணமாக இருக்கலாம் இருந்தாலும் உன் மீதுள்ள என் அன்பின் முதர்ச்சியால்தானே அந்த பொறாமையும் ஏற்பட்டது .தன் நண்பனுக்குத் தன்னை விட நெருங்கியவனாக ஆகிவிடுவானோ என்ற அச்சத்தின் காரணமாக ஏற்பட்ட தவிர என் அகம்பாவத்தால் அல்ல. என்பதை நீ அறிவாய் என் ரப்பே " என்று கூறினான் ஷைத்தான்

சபிக்கப்பட்ட சமுதாயங்கள் 20

ஃபிர்அவ்ன் நபி மூஸா (அலை) அவர்கள் குறித்து தன் மக்களிடம் , "இந்த எகிப்து நாட்டின் ஆட்சி என்னுடையதல்லவா .இதில் ஓடும் ஆறுகள் என் ஆணைக்குட்பட்டு ஓடுவதை நீங்கள் காணவில்லையா ? நான் மேலானவனா அல்லது இந்த இழிந்த மனிதர் மேலானவரா ? அவருக்கு என் போன்று பொற்காப்புகள் அணிவிக்கப்பட்டிருக்கிறதா ? அல்லது வானவர்கள் புடைசூழ வர வேண்டாமா ? அவரால் தெளிவாகக் கூட பேசத் தெரியவில்லையே " _ என்று மிகக் கீழத்தரமாகவும் கேவலமாகவும் பேசினான் .
நபியவர்களின் மனம் மிகவும் வேதனைப்பட்டது
இறைவன் ஃபிர்அவ்னுக்கு ஒன்றன் பின் ஒன்றாக ஒன்பது திருஷ்டாந்தங்கள் காட்டப்பட்டது.
1) நைல் நதி இரத்தமாக மாறுதல்
2) தொட்ட இடமெல்லாம் தவளை
3) பேன்கள்
4 ) ஈக்கள்
5) கால்நடை நோயில் மரணம்
6) உடலில் கொப்புளம்
7) இடி மின்னலுடன் கடும் புயல்
8 ) வெட்டுக்கிளி
9) ஒவ்வொரு கிப்திகளின் (ஃபிர் அவ்னின் சமுதாய மக்கள் ) வீட்டிலும் தலைக் குழந்தை சாவுதல்

இது பற்றி குர் ஆன் ( 17:101) கூறுகிறது
ஒவ்வொரு திருஷ்டாந்தங்கள் காட்டபட்ட பொழுதும் ஃபிர்அவ்ன் மூஸா (அலை) அவர்களின் .இறைவனை , தன் இறைவனாக ஏற்றுக் கொண்டதாக கூறுவான் . பின் தன் மந்திரி ஹாமானிடம் ஆலோசனை நடத்துவான் .
அதற்கு , ஹாமான் " தாங்கள் பிறர் வணங்கும் இறைவனாக இருந்தது போக , மூஸாவின் நாயகனைப் போய் இறைவனெனத் தொழுவதா ? அவர் கூறுவதெல்லாம் மாயமும் சூனியமும் இன்றி வேறில்லை " என்றான் .
இது ஃபிர்அவ்னுக்கு மேலும் ஊக்கத்தைக் கொடுத்தது.
"அதற்கு ஃபிர்அவ்ன் (தன் மக்களிலுள்ள தலைவர்களை நோக்கி ,) " தலைவர்களே ... என்னைத் தவிர வேறொரு இறைவன் உங்களுக்கு இருப்பதாக நான் அறியவில்லை . ஹாமோனே..... களிமண் (ணால் செய்த செங்கல் ) சூளைக்கு நெருப்பு மூட்டு . (அச் செங்கவைக் கொண்டு வானளாவ ) மாளிகை நீ கட்டு (அதில் ஏறி ) மூஸாவினுடைய இறைவனை நான் பார்க்க வேண்டும் (அவர் தனக்கு வேறு இறைவன் இருப்பதாகக் கூறுகிறாரே ) இவ்விஷயத்தில் நிச்சயமாக அவர் பொய் சொல்வதாகவே நான் எண்ணுகிறேன்" என்று கூறினான் . குர்ஆன் ( 28 : 38)
உடனே ஹாமான் பல்லாயிரக்கணக்கான இஸ்ரவேலர்களைக் குடும்பத்தோடு கொடுமைப்படுத்தி , செங்கல் அறுக்கச் செய்து ஏழாண்டுகள் வேலை செய்து , ஏழாயிரம் முழம் உயரமும் மூவாயிரம் முழம் அகலமும் கொண்ட கோபுரத்தை எழுப்பினான் .
ஃபிர்அவ்ன் அதில் ஏறி தன் அம்பறாத் துணிலிருந்து அம்புகளை ஒன்றன் பின் ஒன்றாக எடுத்து விண்ணை நோக்கி
எய்தான் அவைகள் இரத்தத்தில் தோய்ந்து கீழே விழுந்தன . அது கண்டு ஃபிர்அவ்ன் " நான் மூஸாவின் இறைவனைக் கொன்று விட்டேன்." என்று தன் தலைவர்களிடம் கூறினான்.
கொஞ்ச நாளில் விண்ணை முட்டும் கோபுரம் பேரொலியுடன் கீழே விழுந்தது
அதன் ஒரு துண்டு இலட்சக் கணக்கான படை வீரர்களை கொன்றது
இன்னொரு துண்டு மனப்பூர்வமாக கோபுரத்திற்கு உதவிய கிப்தியாக்கள் ஒருவரையும் உயிரோடு விடவில்லை

**Rahmath Rajakumaran**
"சபிக்கப்பட்ட சமுதாயங்கள்" பதிவுகள் இத்துடன் நிறைவு பெறுகிறது .
"குர்ஆனின் குணாதிசயங்கள் " -என்கிற 20 தொடர் பதிவுகள் இன்ஷா அல்லாஹ் நாளை ஆரம்பிக்கிறேன் 15-10-2017

குர்ஆனின் குணாதியங்கள் 1
(மாற்றாரும் மயங்கும் மாமறை ) 16-10-2017



அறநெறி வழுவா தவத் துறை வேந்தராம், அண்ணலெம் பெருமானார் ரஸுலே கரீம் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தூது (நுபுவ்வத்து)க்கு உண்மைச் சான்றாக மாபெரும் வல்லோனாம் இறைவனின் மகத்தான ஆற்றுலுக்கோர் எடுத்துக்காட்டாக , இஸ்லாமிய அறநெறிகளுக்கோர் ஆதாரமாக , எம்பெருமானார் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மா தூய வாழ்வுக்கும் .மனித சமுதாய மறுமலர்ச்சிக்கும் சத்தான வித்தாக நின்றிலங்கும் எல்லா துறை தத்துவங்களும் கோர்க்கப்பட்ட முத்தாரமாக ஒளிரும் மாமறை நூல் அல்குர்ஆன் .
இன்று நேற்றல்ல ஆயிரத்து நானூறு ஆண்டுகளாக .....

ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் வீடு மக்காவில் மக்கள் அதிகமாக புழங்கும் ஒரு வீதியோரம் இருந்தது. அவர்கள் தங்கள் வீட்டின் முன் புறத்தில் அமர்ந்து ,உரத்த குரலில் குர்ஆன் ஓதுவதைக் கேட்டதும் மக்கள் மெய்மறந்து விடுவார்கள். இதை ஆட்சேபித்த மக்கத்து குறைஷிகள், அபூபக்ரு அவர்களை அணுகி , " பெண்கள் . குழந்தைகளும் கூட நீங்கள் ஓதும் குர்ஆனைக் கேட்டு மெய்மறந்து விடுகிறார்கள் . ஆகவே நீங்கள் மக்கத்தில் தங்கி இருக்க வேண்டுமானால்.உரத்து குர்ஆன் ஓதுவதை விட வேண்டும்" என்ற நிபந்தனை விதித்தார்கள் .

"மக்காவில் குழப்பம் ஏற்படுத்தி வரும் முஹம்மதை வெட்டி வீழ்த்தப் போகிறேன்" என்று சூளுரைத்து வெளிவந்த உமறு , வழியில் தம் சகோதரியும் , அவர் கணவருங் கூட முஸ்லீம்களாக மாறி விட்டார்கள் என்ற சேதி கேட்டு "முதலில் அவ்விருவரையும் தீர்த்துக் கட்டப்போகிறேன் " என்று அவர்கள் வீட்டுக்கு விரைகிறார்கள் .ஆங்கு தூய மாமறையின் 20 ஆம் அத்தியாயமான ஸூரத்து தாஹாவைச் செவியேற்றதும் அவர்களின் உள்ளம் ஏதோ ஓர் அற்புத மாறுதலடைகிறது .

உமறு தம்மைக் கொல்ல வருகிறார் என்று ஏற்கனவே தகவல் தெரிந்திருந்திருந்த பெருமானார் , வாளோடு வரும் அந்த வீரரை எதிர்நோக்கி நிற்கிறார்கள் ஆனால் .... வந்த உமறு அவர்களின் சிரத்தைக் கொய்யவில்லை : தம் கரத்தை பெருமானாரிடம் கொடுத்து " லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதரஸூல்லாஹ் " என்று கூறி இஸ்லாத்தில் இணைகிறார்கள் .

"... முன்னர் மனிதர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்த தூதர்களைப் போல் இவரும் ஒரு தூதரே !
தீவிரமாக வரவேண்டிய (உலக முடிவு ) காலம் நெருங்கி விட்டது
அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அதனைத் தடுக்க முடியாது .
இதனைப் பற்றி நீங்கள் ஆச்சரியப்படுகின்றீர்களா ?
(இதனைப் பற்றி ) நீங்கள் சிரிக்கின்றீர்களே ? அழ வேண்டாமா ?
( இதனைப் பற்றி ) நீங்கள் கவலையற்று இருக்கின்றீர்களே ...
(அவ்வாறு இருக்காமல்) அல்லாஹ்வுக்குச் சிரம் பணிந்து அவனையே வணங்குவீர்களாக ... "
குர்ஆன் ( 53 : 56 - 62 )

அல்லாஹ்வுக்குச் சிரம் பணிந்து (ஸஜ்தா செய்து) அவனை வணங்குங்கள் " என்னும் கடைசி வாக்கியம் கணீரென்று ஒலிக்கிறது , முஸ்லீம்களும், முஸ்லீம்களை எதிர்த்து வந்தோரும் அப்படியே நிலத்திலே நெற்றியை வைத்து இறைவனின் கட்டளையை நிறைவேற்றுகிறார்கள் ." உமய்யா இப்னு கலப் " என்னும் ஒருவனைத் தவிர.

"முஹம்மதிற்கு பைசாசம் பிடித்திருக்கிறது" என்று கேள்விப்பட்ட "லம்மாதிப்னு ஸஅலபத்துல் அஜ்தீ " என்ற ஏமன் நாட்டு பேய் ஓட்டும் மந்திரவாதி மக்காவிற்கு நகருக்கு வந்தார் லம்மாத் .
நபி(ஸல்) லம்மாத்தின் முன் குர்ஆனின் சில வசனங்களை ஓதியதும் .
பைசாசம் ஓட்ட வந்த லம்மாதை , அதுவரை அவரைப் பிடித்திருந்த
"குஃபிர் எனும் பைசாசத்தை ஓட்டிப் புதுமனிதராக அனுப்பினார்கள் பெருமானார் அவர்கள் .

துமாமத் இப்னு உஃஸால் இஸ்லாமியரை பலரை ஈவிரக்கமின்றி படுகொலை செய்த மாபாதகர் இவரை கைது செய்யப்பட்டு மஸ்ஜிதுன்னபவீ பள்ளிவாசல் தூணில் கட்டி வைத்தார்கள் .
நபி (ஸல்) அவர்கள் விசாரித்த போது, " எனக்கு நீங்கள் மரண தண்டனையைத் தான் விதிப்பீர்கள் அது நியாயமானதே . ஏனெனில் நான் ரத்த வெறி பிடித்த கொலைகாரன்தான் . என்னை விடுதலை செய்தால் நன்றியுள்ள ஒருவனை விடுதலை செய்தாக இருக்கும் " என்றார்
ஆனாலும் தான் செய்த கொலைகளுக்கு மனம் வருந்தி மன்னிப்பு கேட்டு விடுதலை செய்யுமாறு வேண்டிக் கொள்ளாததால் அவர் விடுதலை செய்யப்படவில்லை .
மூன்று தினங்கள் கட்டிப்போட்டு இருந்த அவரை நபி (ஸல்) அவர்கள் விடுதலை செய்ததும் , கிணற்றடிக்குச் சென்று நன்றாக குளித்து விட்டு வந்து கோமான் நபிகளின் கரம் பற்றி கலிமா மொழிந்து முஸ்லிமானார் அந்த துமாமத் .
துமாமத் ரலியல்லாஹ் அன்ஹூ வாக ஆனார்கள்
குர்ஆன் . மாற்றாரும் மயங்கும் மாமறைதான்

**Rahmath Rajakumaran**
நபி (ஸல்) அவர்கள் "நஜ்ம்" அத்தியாயத்தை ஓதி ஸஜ்தாச் செய்தார்கள் அவர்களுடன் இருந்த முஸ்லீம்கள் , இணைவைப்பவர்களும், ஏனைய மக்களும் , ஜின்களும் ஸஜ்தா செய்தனர்
இப்னு அப்பாஸ் (ரலி)
புகாரி 1071

குர்ஆனின் குணாதியசங்கள் -2




(மாமறையும் மனித மனமும்)
"The scientific Edge" - Narlikar J.v எழுதிய புத்தகத்தில் விஞ்ஞானத்தின் விண்ணை முட்டும் விந்தைகள் விலாவரியாக விவரிக்கப்படுகிறது.
"The Ascent of man" - Bronowski எழுதிய புத்தகத்தில் ஆதிகால மனிதர்கள் தொட்டு மனிதகுல பூர்வாசிரம் பற்றி வரலாறு பக்கத்திற்கு பக்கம் மனிதர்கள் ... மனிதர்கள் ...... என்று பேசப்படுகிறது.
இதே மாதிரி .......

**1) wonders of the world - charles walkar**

**2) The Big Book of stars and planets - Robin Kerrod**

**3) Life in the oceans - Heather Angel ......**

இத்தனை நூலாசிரியர்களும் தத்தம் தலைப்பில் காட்டைப் பற்றியும் .நடசத்திரத்திரங்கள் கிரகங்கள் பற்றியும் ,கடலைப் பற்றியும் புத்தகம் முழுவதும் தாங்கள் எடுத்துக் கொண்ட விஷயத்தை பல கோணங்களில் அலசி அலசி ஆராய்கிறார்கள் .இப்படிதான் உலகில் மனிதர்கள் எழுதும் எல்லா புத்தகங்கள் இருக்க இதே கண்ணோட்டத்தில் .......
குர் ஆனை எடுத்துப் படித்தால் ,
" அவன்தான் இரு கடல்களை ஒன்று சேர்த்திருக்கின்றான் . ஒன்றுமிக்க இன்பமும் மதுரமுமான தண்ணீர் மற்றொன்று உப்பும் கசப்புமான தண்ணீர் இவ்விரண்டுக்கும் இடையில் திரையையும் மீற முடியாத ஒரு தடையையும் ஏற்படுத்தி இருக்கிறான்
குர்ஆன் ( 25 : 53 )
" இவ்விரண்டு (கடலுககும்) வேற்றுமை இருந்த போதிலும் இவ்விரண்டில் இருந்து மே புத்தம் புதிய (மீன்) மாமிசத்தைப் புசிக்கிறீர்கள் குர்ஆன் ( 35 : 12 )
இதற்கு அடுத்த வசனம் பாருங்கள்
" அவன்தான் ஒரு துளி தண்ணீரிலிருந்து மனிதனை உற்பத்தி செய்கிறான் .பின்னர் அவனுக்குச் சந்ததிகளையும் சம்பந்திகளையும் ஆக்குகின்றான் " குர்ஆன் ( 25 : 54 )
மேற்கண்ட இரு வசனங்களில் ( 25 : 53 ) ( 25 : 54) இரு வெவ்வேறு கடல்கள் ; அவற்றிற்கு இடையே தடை , இரண்டிலுமே வெவ்வேறு மீன்கள் அதுவும் தண்ணீர் சேராமல் இருந்ததால் உயிர் வாழ்க்கை ,
அடுத்த வசனம் ஆணின் விந்தும் பெண்ணின் இந்திரியமும் ஆக இரண்டு தண்ணீர் சேர்ந்தால் உயிர் வாழ்க்கை. எவ்வளவு அழகான சீரிய கருத்துகளின் கோர்வை அதுவும் வெவ்வேறாக ....
அடுத்து ,
" அல்லாஹ்தான் உங்களுக்குப் பூமியை நீங்கள் வசித்திருக்கும் இடமாகவும், வானத்தை ஒருமுகடாகவும் அமைத்து , உங்களைச் சித்தரித்து அழகான கோலத்திலும் உங்களை அமைத்தான் . அன்றி அவனே உங்களுக்கு மேலான உணவுகளையும் அளிக்கின்றான்.
குர்ஆன் (40 : 64 )
வசிக்கத் தக்க பூமி , பாதுகாப்பான வானம் , மனிதர்களின் அழகான கோலம் , அவர்களுக்கு மேலான உணவு ..... இப்படி பூமி , வானம் ,கோலம் , உணவு என்று அடுத்தடுத்து வெவ்வேறு விஷயங்களைப் பற்றி உடனுக்குடன் தெரிவிக்கின்றான் .
பூமியைப் பற்றி மனம் சிந்திப்பதற்குள் வானம் , கோலம், உணவு என்று வேறு வேறு துறைகள் சொல்லும் வேகம் அட்டா அளப்பரிய வேகம்.
குர்ஆன் வசனத்தின் வேகம் எவ்வளவாக இருக்கும் ?
இயற்கையில் வேகம் மாறாதது ஒளியும் புவி ஈர்ப்பு விசையும் . இரண்டுமே ஒரு விநாடிக்கு 3 லட்சம் கி.மீ
குர்ஆன் ஒளிமயமான ஓர் இடத்தில் உருவாகி, ஒளியால் படைக்கப்பட்ட வானவர் ஜிப்ரயீல் (அலை) மூலமாக புவியிலுள்ள நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்டது.

ஆல்பர்ட் ஐன்ஸ்டின் தத்துவப்படி
E = M C (square)
E = சக்தி M =பொருண்மை ,C = ஒளியின் மடங்கு வேகம்
இதைப் போல்
உள்ளம் = உடல் X மனோ வேகத்தின் மடங்கு
இப்படித்தான் மாமறையின் வசனங்கள் மனித மனத்திற்கு 3 லட்சம் கி.மீ வேகத்தில் அருளப்பட்டிருக்கிறது.
இது மனிதர்கள் எழுதும் புத்தகங்களைப் போல் ஒரே விஷயத்தையே மையப்படுத்துவது போல் இல்லை .
மனித கற்பனைக்கும் அப்பாற்பட்ட இறை ஒருவனால் மட்டுமே அன்றி வேறு எந்த ஆத்மாவாலும் குர்ஆனைப் போன்று ஒரு பத்து வசனங்களைக் கூட கொண்டு வர முடியவே முடியாது .

**Rahmath Rajakumaran**
குர்ஆனின் குணாதியங்கள் முழுக்க முழுக்க வரலாற்று ரீதியாலேயே எழுத நினைத்தேன் .
என்னுள்ளே உள்ள விஞ்ஞான அறிவு என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே புகுந்து கொண்டது . கூடுமானவரை தவிர்க்கப் பார்க்கிறேன் விஞ்ஞானம் தவிர்க்கப் பார்க்கிறேன் .

**Shamsuyousuff Yousuff**
புவி ஈர்ப்பு விசை பற்றி
இஸ்ரோ தலைவர்
மாதவன் நாயர் கூறியது -
சந்திரயானுக்கு கூட, ஆர்யபட்டாவின் சமன்பாடு பயன்படுத்தப்பட்டு உள்ளது. புவி ஈர்ப்பு விசை (குறித்த அறிவு) கூட 1,500 வருடங்களுக்கு பின்புதான் நியூட்டன கண்டுபிடித்துள்ளார். அது குறித்த அறிவு நம்மிடம் உள்ளது (நமது புனித நூல்களில்) என கூறியுள்ளார்

குர்ஆனின் குணாதிசயங்கள் -3




(குர்ஆன் சிறிது சிறிதாக அருளப்படக் காரணம் )
குர்ஆனை ஒப்புக் கொள்ள மனமில்லாத இறை மறுப்பாளர்கள் " முந்தைய வேதங்களான ஸபூர் , தவ்ராத் , இன்ஜீல் போன்ற வேதங்களைப் போல மொத்தமாக அருளப்படாமல் ஏன் சிறிது சிறிதாக அருளப்பட வேண்டும் ? " என்று கேள்வி கேட்டனர் ,
இதற்கு இறைவன் "இந்த வேதம் 23 ஆண்டுகளாக சூழ்நிலைகளுக்கும் , சம்பவங்களுக்கும் தேவையான விதிகளுக்கும் ஏற்ப சிறிது சிறிதாக அருளப்பெற்றது. காரணம்,
இறைநம்பிக்கையாளர்களின் உள்ளங்கள் பலப்படவும் ஞாபகங்களைத் திடப்படுத்துவதற்காகவும் இந்த வேதம் முழுவதும் ஒரே தடவையில் இறக்கப்படாமல் கொஞ்சம் கொஞ்சமாக இறக்கி வரிசைமுறைப்படி ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கிறது என்பதாக குர் ஆன் (25 : 32) ல் இறைவன் விவரிக்கின்றான் .
இதே மாதிரி குர்ஆன் அடுத்தடுத்த வசனத்தில் பல துறைகளைச் சார்ந்த சேதிகளைப் பற்றி விவரிக்கும். (உ-ம்)
"(நபியே! இந்திராகரிப்பவர்கள் தங்களிடமுள்ள ) ஒட்டகத்தையேனும் அவர்கள் கவனிக்க வேண்டாமா? அது எவ்வாறு படைக்கப்பட்டுள்ளது ?
(அவர்களுக்கு மேல் உள்ள) வானத்தையும், அவர்கள் கவனிக்க வேண்டாமா ? அது எவ்வாறு உயர்த்தப்பட்டுள்ளது ?
(அவர்கள் கண் முன் தோன்றும்) மலைகளையும் அவர்கள் (கவனிக்க வேண்டாமா ?) அவை எவ்வாறு நட்டப்பட்டுள்ளன ?
(அவர்கள் வசிக்கும்) பூமியையும் (அவர்கள் கவனிக்க வேண்டாமா ? ) அது எவ்வாறு விரிக்கப்பட்டுள்ளது ?

குர்ஆன் ( 88 : 17-20 )
இப்படி பல வேறுபட்ட துறைச் செய்திகளை உடனுக்குடன் அடுத்து சொல்வதன் அவசியம் ஏன் ?
நம் மூளையின் செயல்கள் 90 நிமிட சுழற்சியில் இயங்குகின்றன. அதாவது ஒவ்வொரு 90 நிமிடத்திற்கு ஒரு முறை "மூடு " மாறுகிறோம் .
அதே மாதிரி ஒவ்வொரு 45 நிமிடம் வரை மட்டுமே ஒரு பாடத்தை அதிகமாக கவனம் செலுத்த முடியும் . காரணம் அதற்கு மேல் மூளை அதற்குள் சோர்வடைந்து விடும் .
தினப்படி நம் நாடித்துடிப்பு , ரத்த அழுத்தம் , ரத்த சர்க்கரை , உடல் உஷ்ணம் .சுரப்பிகள், என்ஸைம் அளவுகள்..... இது மாதிரி 40 உடல் செயல்பாடுகள் நேரப்படி உயர்ந்து தணிகின்றன. இதற்கும் தினப்படி சூரிய, சந்திர கதிக்கும் சம்பந்தம் இருப்பதாக இன்னொரு விஞ்ஞான ஆய்வு சொல்கிறது .( இது பற்றி பிற்பாடு பார்ப்போம் )
எழுத்தாளர் சுஜாதா ஒரு பேட்டியின் போது கேட்கப்பட்ட கேள்வி ,
" ஒரு நாளைக்கு தாங்கள் எவ்வளவு நேரம் படிக்கின்றீர்கள் ?"
"எந்த ஒரு சப்ஜெட்டையும் தொடர்ந்து படிப்பதில்லை . தொடர்ந்து அப்படியே ஒரே சப்ஜெட்டை படித்தால் மூளை சேர்வடைந்து தூங்கி விடுவேன் . எனவே என்னுடைய மேஜையில் ." இந்தியன் பினல் கோடு" என்ற சட்டப் புத்தகமும் , "நாட்டுப்புற பாடல்கள்" ," ஜென்ரல் மெடிசன்" ,"தொல்காப்பியம் " போன்ற பல்வேறு மாறுபட்ட தகவல்களைக் கொண்ட புத்தகங்கள் இருக்கும் முதல் அரை மணி நேரத்திற்கு தொல்காப்பியம் என்றால் அடுத்த அரை மணிக்கு நாட்டுப்புற பாடல்...
இப்படி படிக்கும் போது , மூளை சோர்வடையாமல் புதுப்புது தகவல்களால் முளைத் தன்னைத்தானே புதுப்பித்துக் கொண்டு உற்சாகமடைகிறது. மேலும் தகவல்கள் ஒன்றுக்கொன்று
வேறுபட்டிருப்பதால் மூளையின் வெவ்வேறு தளங்களில் தகவல் பரவலாக பதிவாகி, மூளையின் ஞாபகப் பகுதிகள் வீஸ்திரணம் அடைகிறது . இதனால்தான்
" (நபியே ...) நிச்சயமாக நாம் இந்தக் குர்ஆனைச் சிறிது சிறிதாகவே உங்கள் மீது இறக்கி வைக்கின்றோம் .

**Rahmath Rajakumaran**
"சங்க கால இலக்கிய கோர்வை" என்ற சின்ன குட்டி தலையணை புத்தகத்தை யார் படித்தாலும், நாலாவது பக்கத்திலேயே படுத்து உறங்கி விடுவார்கள் காரணம் மூளைச் சோர்வு
**Shamsuyousuff Yousuff**
மூளை உட்கொள்ளும் திறன்
கற்றல் கற்பித்தல் செயற்பாட்டில் முக்கியமானதொரு பிரச்சினையாக விளங்குவது கற்பிக்கப்படுவதை விளங்கிக் கொள்ளச் செய்வதும் கிரகிக்கச் செய்வதுமாகும். மனப்பாடம் செய்த விடயங்கள் மறந்து விடுகின்றன. ஆனால் தெளிவான கிரகிப்புடன் கற்றவை நீண்ட காலம் நினைவில் நிற்கும். இந்த வகையில் கிரகித்தலுடன் விளங்கிக் கொள்வதும் அதனை நினைவார்த்தலுடன் மீட்பதும் கற்றல் செயற்பாட்டில் முக்கியத்துவம் பெறுகிறது. இதற்காகக் கற்றல் கற்பித்தல் செயற்பாட்டில் பல்வேறு உத்திகள் பயன்படுத்தப்படுகின்றன.
**Rahmath Rajakumaran**
இந்த மாதிரி மூளைச் சோர்வடைவதை
"டிஹ்யூமனைசேஷன்
(Dehumanisation ) என்கிறார்கள்
இதனால்தான் குர்ஆன் முழுவதும் ஒவ்வொரு வசனங்களும் அல்லது ஒரே வசனத்தில் பல்வேறுபட்ட செய்திகளை மின்னல் வேகத்தில் வரிக்கு வரி தெரிவிப்பதால் , மூளை சோர்வடைவதில்லை மாறுபட்ட செய்திகளால் மூளையின் திசுக்கள் அவ்வப்போது புதுப்பிக்கப்படுகிறது குர்ஆனின் தகவல்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருப்பதால், மூளையின் வெவ்வேறு தளங்களில் தகவல்கள் பதிவாகி மூளையின் ஞாபகப் பரப்பளவு அதிகமாகிறது
**Rahmath Rajakumaran**
பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் ஒவ்வொரு பாடமும் 40 நிமிடம் (ஒரு பிரியர்டு period ) வைப்பதற்குக் காரணம் இதுவாகக் கூட இருக்கலாம்

குர்ஆனின் குணாதிசியங்கள் 4
(முழு குர்ஆனின் மொத்த விளக்கம்




அகிலங்களையெல்லாம் படைத்து பரிபாலனம் செய்கின்ற பரம்பொருள் ஒருவன் உண்டு .அவனே அல்லாஹ், உருவமோ ,ஒப்புமைகளோ இல்லாதவன் : ஆணோ பெண்ணோ பிறப்போ இறப்போ இல்லாதவன்; ஆனாலும் அன்பும் அருளும் மிக்கவன்: நீதியும் நேர்மையும் நிறைந்தவன் : தன் ஆட்சியின் கீழ் அனைத்தையும் நீக்கமற அறிந்தவன் : இக்கொள்கைகளையெல்லாம் ஈராறு பனிரெண்டு எழுத்துக்களைக் கொண்ட நான்கே சொற்களில் அமைத்து தந்தவன் அதுவே " லாயிலாஹ இல்லல்லாஹ் " என்ற திரு கலிமா .
லா = இல்லை :
இலாஹ = வணங்குதற்குரியோர்
இல்லா = தவிர
அல்லாஹ் = அல்லாஹ்வை
"கலிமா " என்பதற்குச் சொல், வாக்கு, மொழி, பொன்மொழி, நீதிமொழி, செல்வாக்கு , சிற்றறிக்கை , ஆணை , ஆதிக்கம், கனம் , ஏற்றம் .... (இன்னும் உண்டு) பல அர்த்தங்கள் இருந்தாலும் இங்கு சொல், வாக்கு என்னும் பொருளையேத் தருகிறது .
இக் கலிமாவை இறைவன் தன் திருமறையில் ,
கலிமத்தன் தையிபத்தன்" (தூய்மையான சொல்) என்றும் ,
"கவ்லுத் தாபித்" (நிலையான சொல்) என்றும் ,
"கலிமத்துத் தக்வா " (பக்தியின் சொல்) என்றும் குறிப்பிடுகின்றான் .
ஞானக் கடல் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் இதனை
"உர்வத்துல் உக்ஸா" (பலமுள்ள கயிறு) என்றும்,
"தஃவத்துல் ஹக் " (சத்திய அழைப்பு ) என்றும் ,
"தமனுல் ஜன்னத் " (சுவனத்தின் விலை) என்றும் அழைக்கிறார்கள்
இக்லாஸ் எனப்படும் கலப்பற்ற தூய தன்மையை இதயத்திற்கு வழங்க இதை விடச் சிறந்ததோர் மருந்தில்லை யாதலால், "ஜலாவுல் குலூப்" என்றும் இக் கலிமா அழைக்கின்றனர்
ஏழு வானத்தையும் ஏழு பூமியையும் ஒரு தட்டில் வைத்தாலும் இக் கலிமாவிற்கு நிகராது என நபி மூஸா(அலை) அவர்களுக்கு இறைவன் எடுத்துரைத்துள்ளான்.
"லா " என்பது வறியவர்களின் மொழி : அதை கலிமாவில் மட்டுமே பயன்படுத்தல் ஆகும்" என்னும் வழக்குத் தொடர் உண்டு
உலகிலேயே மிக உயர்ந்த "உலூஹியத் " எனப்படும் தெய்வத்துவத்தை இதயத்தில் வைப்பதற்கு முன் இதயத்தில் படிந்துள்ள 3 வகைஅழுக்குகளான ,
1) பயனற்ற பொருட்களை குறிக்கும் "அந்நீய்யா"
2) அயலார்பற்றிய பொருட்களைக் குறிக்கும் " கைரிய்யா"
3 ) தன்னைப் பற்றிய அகந்தையைக் குறிக்கும் "அனாநிய்யா"
இம்மூன்றையும் "லா" என்னும் ஒற்றைச் சொல்லால் அகற்றி விடுகின்றோம்.
அடுத்து, "இலாஹ்" இதற்கும் 3 வகையான அழுக்குகள் உண்டு
1) ஜின், சைத்தான், போன்ற புலனுக்குப் புலப்படாத அழிந்து போகும் தெய்வங்களை " இலாஹன் பாத்தில் " எனப்படும்
2) சூரியன், சந்திரன் , நீர், நெருப்பு , சிலை போன்ற கண்ணுக்குத் தெரியக்கூடிய தெய்வங்களை "இலாஹன் முகையது " எனப்படும்
3) அரசன் ,பெற்றேர் , ஆசிரியர் போன்றவர்களை தெய்வங்களாக கருதுவதை " இலாஹுன் ஹக் " எனப்படும்

ஆக இத்தகைய மூவகை இலாஹுகளையும் விலக்கி, எத்தகைய வருணனைக்கும் அடங்காமல் ஏகப் பரம்பொருளாகிய அல்லாஹ்வின் "உலூஹிய்யத் " என்னும் தெய்வத்துவத்தை - நிலைபெறச் செய்வதே கலிமாவின் குறிக்கோளாகும்

இந்த குறிக்கோளாகிய திருப்பணியை செவ்வன செயலாற்ற வேண்டி திருக்குர்ஆன் முழுவதும் ஏகப்பட்ட வரலாறுகள், படிப்பினைகள், சிந்திக்கும் அறிவுரைகள் , அச்சுறுத்தல்கள் , மீறியவர்களுக்கு தண்டனை, மேற்கொண்டவர்களுக்குச் சுபச் செய்தி..... என்று கலந்துக் கட்டி 114 அத்தியாயங்களில் 6666 திருவசனங்களை உள்ளடக்கிய மாபெரும் மறை தித்திக்கும் திருக்குர்ஆன் ஆகும்.

ஆதம் (அலை) படைப்பதற்கு முன்பே அர்ஷிலும், லவ்ஹுல் மஹ்ஃபூல் என்னும் விதிப் பலகையிலும் எழுதப்பட்டிருந்தது

ஆதம் (அலை) அவர்கள் கண் விழித்த பார்த்த போது சுவன வாயில் எழுதப்பட்டிருப்பதைக் கண்டார்கள்

இக் கலிமா குர்ஆனில் "நபியே கலிமா என்னும் நல்ல வாக்கியத்திற்கு அல்லாஹ் எவ்வாறு உதாரணத்தைக் கூறுகிறான் என்பதை நீர் கவனிக்கவில்லையா ?

அவ் வாக்கியம் வானத்தை அனாவிய கிளைகளையும் (பூமியில்) ஆழப் பதிந்த வேரையும் உடைய ஒரு நல்ல மரத்திற்கு இருக்கிறது. அது (பருவ காலத்தில் மட்டுமின்றி இறைவனின் அருளைக் கொண்டு எக்காலத்திலும் கனிகளைக் கொடுத்துக் கொண்டே இருக்கிறது. மனிதர்கள் நல்லுணர்ச்சி பெறும் பொருட்டு அல்லாஹ் உதாரணங்களாக்கின்றான்"

குர்ஆன் 14 : 24 , 25

இப் பதிவில் 4 வார்த்தைகளுக்கு மட்டுமே மிக மிக குறைவான விளக்கம் கொடுத்துள்ளேன் .

"முஹம்மதரஸூல்லாஹ் " என்று மீதி வார்த்தையும் சேர்த்து மொத்த கலிமா விற்குரிய விளக்கம் கொடுத்தால், இன்னும் தனியாக 20 பதிவுகளுக்கும் மேல் ஆகிவிடும்.

அடுத்த பதிவில் குறைந்த விளக்கத்துடன் "முஹம்மதரஸூல்லாஹ் " வையும் சேர்த்து பதிவு போடுகிறேன் ° இன்ஷா அல்லாஹ்.

**Rahmath Rajakumaran**

கலிமாவின் பொருள் பொதிந்த "மாமின் இலாஹின் கைருஹு (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை என்பது பொருள் )

"லா நஃபுது இல்லல்லாஹ்"

(அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் வணங்க மாட்டோம்" என்று பொருள்)

..... இப்படி 80 அதிகமான வசனத் தொடர்கள் குர்ஆனில் இருந்தாலும் மகுடம் வைத்தாற் போல் திகழ்வது "லாயிலாஹ இல்லல்லாஹ்" மட்டுமே

**Rahmath Rajakumaran**

" ஸலாஹ்" என்ற வணக்கம் வார்த்தையை இறைவன் இக் கலிமாவில் வைக்க வில்லை

"வணக்கம் "என்பது இறைவனைத் தவிர்த்து வேறு எந்த ஒரு படைப்புக்கும் இல்லாதது ."இலாஹ " என்று உச்சரிக்கும் போதே நம் பகுத்தறிவுக்கும் அப்பாற்பட்ட நம் ஆன்மா "வணக்கத்திற்குரிய " என்று பொருள்படவுள்ள விளக்கத்தை மொழிபெயர்த்துக் கொள்கிறது .

"உன்னையே வணங்குகின்றோம்" என்று சூரத்துல் பாத்திஹா வில் இறைவன் நம்மிடம் சொல்வது போல் இருந்தாலும் நம் ஆன்மா உன்னையே (இறைவனையே ) வணங்குகின்றோம் என்று மொழியாக்கம் செய்வது போல கலிமாவிலும் (வணக்கத்திற்குரிய வார்த்தையும் மானசீகமாக ) உள்ளது

**Rahmath Rajakumaran**

அரபிச் சொற்களில் புள்ளி ( நுக்தா ) உள்ள எழுத்துக்கள் விரவி வரும் ஆனால் இதயத்தின் புள்ளிகளைப் போக்கும் மாமருந்தாகி இக்கலிமா தொடரில் புள்ளியுள்ள எழுத்துக்களே இல்லாத ஒளிமயமான நூறானிய்யத்துவமான எழுத்துக்களே இடம் பெற்றுகிறது .

இதனால் நாவினால் நவில்கின்ற போது உதடுகளை குவிக்கோ மூடவோ தேவை இல்லை.

உதட்டு இதழ்கள் இயங்காத மரண வேளையில் கூட இக் கலிமாவை மொழிவதற்கு ஏற்ற வழியில் இறைவன் அருளினானோ ?

**Mujeeb Rahman**

லா இலாஹ இல்லல்லாஹு

அல்லாஹ்வைத்தவிர வேறு எந்த இலாஹுமே இல்லை

என்ற உயர் ஞானத்தை மனிதர்களின் அறிவின் தராதரம் பார்க்காமல் நபிகளார் மலைமீதேறி பொதுவாகத்தான் பிரகடனம் செய்தார்கள்.

மறுத்தவன் மறுத்தான். ஏற்றவர் ஏற்றனர்.

லா இலாஹ இல்லல்லாஹு

அல்லாஹ்வைத்தவிர வேறு எந்த இலாஹுமே இல்லை

என்பனால் விளங்கப்படும் கருத்து

“எல்லா இலாஹும் அல்லாஹ்தானானது” என்பதாகும்.

அவ்வாறுதான் மக்காவாசிகள் அன்று புரிந்தனர் என்பதற்கு ஆதாரம் கலிமாவை செவியுற்றதும் அவர்கள் என்ன சொல்லி ஆச்சரியப்பட்டனர் என்று இறைவன் திருமறையில் குறிப்பிட்ட வசனம்தான்.

اَجَعَلَ الْاٰلِهَةَ اِلٰهًا وَّاحِدًا ۖۚ اِنَّ هٰذَا لَشَىْءٌ عُجَابٌ

“இவர் எல்லாத்தெய்வங்களையும் ஒரே நாயனாக ஆக்கிவிட்டாரா? நிச்சயமாக இது ஓர் ஆச்சரியமான விஷயமே! (என்றும் கூறினர்)
உதாரணத்திற்கு
தங்கம் தவிர வேறு எந்த ஆபரணமும் இல்லை
என்றால்
எல்லா ஆபரணமும் தங்கமே
என்ற மொழிநடையின் பாணி.
There is no any jewels other than gold
=> All jewels are gold
..
லா இலாஹ இல்லல்லாஹ்
லா இலாஹ ஙெய்ருல்லாஹ்
அல்லாஹ்வுக்கு வேறாக எந்த வித இலாஹுமே இல்லை.
இதன் ضد உடைய அர்த்தம்=>
எல்லா இலாஹும் அல்லாஹ் தானானதே (ஐனிய்யத் ஹகீகீ)
இதனைத்தான் அன்று நபிகளார்
கலிமாவைச்சொன்னதும்
மக்காவாசி நேரடியாக விளங்கினான்.
அறபு மொழி நடை அறிந்தவர்களுக்கு இந்த கலிமாவின் மொழி நடை இலகுவாக புரியும்.

குர்ஆனின் குணாதிசயங்கள்-5



(உலகை கட்டி ஆளும் கலிமாவின் அட்சரங்கள் )
"லாஇலாஹ இல்லல்லாஹ்
முஹம்மதரஸூல்லாஹ் '
அரபி எழுத்துக்களில்
லா இலாஹ இல்லல்லாஹ் - 12 எழுத்துக்கள்
முஹம்மதரஸூல்லாஹ் - 12 எழுத்துக்கள்
ஆக மொத்தம் 24 எழுத்துக்கள்
இந்த 24 எழுத்துக்களில் ஒவ்வொரு எழுத்தும் பூமியின் ஒவ்வொரு மணி நேரத்திற்கு அதன் தாக்கத்தை பூமியின் மீது வெளிப்படுத்துகிறது .
சூரிய உதய நேரத்தில் முதல் எழுத்து தன் ஆதிக்கத்தை செயல்படுத்துகிறது இப்படியாக " லா இலாஹ இல்லல்லாஹ்" வின் 12 எழுத்துக்களும் 12 மணி நேரம் அதாவது சூரிய அஸ்தமனம் வரை தங்களின் ஆதிக்கத்தை செலுத்தி விட்டு ,
சூரிய அஸ்தமனத்திலிருந்து மறுநாள் காலை சூரிய உதயம் வரை " "முஹம்மதரஸூல்லாஹ்" வின் 12 எழுத்துக்களின் ஆதிக்கம் இரவுப் பொழுது முழுவதும் தங்களின் ஆதிக்கத்தை இப்பூமியின் மீது செலுத்துகிறது.
அதனால்தானோ
"போர்வை போர்த்திக்கொண்டிருப்பவரே
(நபியே) இரலில் நீங்கள் (தொழுகைக்காக எழுந்து) நில்லுங்கள் . சொற்ப பாகம்.
அதில் பாதி .அதில் நீங்கள் சிறிது குறைத்தும் கொள்ளலாம் .
அல்லது அதில் சிறிது கூட்டியும் கொள்ளலாம் . அதில் இந்தக் குர்ஆனை நன்கு திருத்தமாக ஒதுங்கள்.
(இதனால்தான் சில காலங்கள் பகல் பொழுது அதிகமாகவும் இரவுப் பொழுது குறைவாகவும் இருக்கும். அதன் பின் சில காலம் பகல் பொழுது குறைவாகவும் இரவுப் பொழுது அதிகமாகவும் இருக்கும் .)
நிச்சயமாக நாம் அதிசீக்கிரத்தில் , மிக உறுதியான ஒரு வார்த்தையை உங்கள் மீது இறக்கி வைப்போம்.

நிச்சயமாக இரவில் எழுந்திருப்பது (ஆத்மா) மிக அதிகம் பழக்கி , ( அடக்கி வைப்பதுடன் ) எதனையும் உள்ளமும் நாவும் ஒத்துக் கூறும்படியும் செய்கிறது .
குர்ஆன் ( 73 : 1 லிருந்து 6 வரை )
" தெளிவான இவ்வேதத்தின் மீது சத்தியமாக .....
குர்ஆன் அனைத்துலகத்தாருக்கும் பாக்கியமுள்ள ஓர் இரவில்தான் நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்டது (அந்த இரவு லைலத்துல் கத்ரு என்ற பாக்கியமான இரவு)
உறுதியான எல்லா காரியங்களும் அதில் தான் நம்முடைய கட்டளையின்படி நிர்மாணிக்கப்பட்டு பிரித்துக் கொடுக்கப்படுகின்றன.
(நபியே) நிச்சயமாக நாம் ( உங்களை அவர்களிடம் நம்முடைய தூதராக ) அனுப்புகின்றோம் .
குர்ஆன் ( 44 : 02 -05 )
முதன் முதலில் திருக் குர்ஆனை இறைவன் "லவ்ஹுல் மஹ்பூல் " எனப்படும் பாதுகாக்கப்பட்ட பலகையில் எழுதி வைக்கப்பட்டது .
மிஹ்ராஜ் என்கிற இறை சந்திப்புக்கான விண்வெளி பயணமும் ரஜப் மாதம் 27 ந் நாள் ஓர் இரவுப் பொழுதில் நடந்தது. குர்ஆன் ( 17 : 01)
" உலகத்தாருக்கு ஓர் அருளாகவேயன்றி நாம் உம்மை அனுப்பவில்லை "
குர்ஆன் ( 21 : 107)
இப் பதிவு முழுவதும் இறைநேசர் ஒருவரால் எனக்குச் சொல்லப்பட்டது .
இப்பதிவில் சொல்லப்பட்ட அநேக விஷயத்தைச் சொல்லாமல் தவிர்த்து அதை தொடர்புப்படுத்தாமல் மழுப்பியும் இருக்கிறேன் என்பதை படிக்கும் உங்களுக்கு அநேகமாக தெரிந்திருக்கும் .
மேற்கொண்டு இப் பதிவுப் பற்றி எதுவும் என்னிடம் கேட்க வேண்டாம் . ஒன்றுக்கு மூன்று தடவை படித்தால் உங்களுக்கு நான் தவிர்த்த விஷயமும் மழுப்பலும் தெரிய வரும் அதுவும் அல்லாஹ் நாடினால் .

**Vaitiyar Malick**
கலிமாவில் மொத்தம் 24 அச்சாரங்கள் அதாவது எழுத்துக்கள் உள்ளன . .
அதற்கு உள்ள படிகளும் 24 ஒவ்ஒரு படியையும் நாம் ஏரிச்செல்ல வேண்டும்
, பெரும்பாலோர் கலிமாவை சொல்வதோட சரி, அதை ஆராய்வது இல்லை . . .
இங்கு நாம் சுருக்கமாக பார்போம் . தாத்தும் சிபத்துதான் கலிமா . . .
இன்னும் கொஞ்சம் சுருக்கமாக பார்போம் . . எப்படி சருக்கமாக பார்பது என்றால் .
. இன்சானிலேதான் பார்கவேண்டும் . . கலிமா என்ற முத்தொன்று இழங்குது பார் " காணும் இன்சானுக்குள்ளே "
அதை க்கண்டவர்கள் மூமின்கள் தேகம் மண் தீன்றுதல் ஹராம் என்றது வேதம் . . .
இப்படித்தான் நாம் கலிமாவை பார்க வேண்டும் . .
இதுவே முதல் stage பின்பு அதை பார்க்க பார்க்க பாதை தெறிந்து கொண்டே போகும் . .

V**aitiyar Malick**

இவைகளை அறிவதற்குதான் அவசியம் ஞானகுரு வேண்டும் . . .

ஒரு கோடி நூல்கள் படித்தாலும் இந்த பறம ரகசியம் விழங்காது . .
இன்னும் ஒரு பரம ரகசியமும் உன்டு . . . அது என்னவென்றால் நாம் விடும் சுவாஸத்தை பந்தனம் பன்னவேண்டும் .
. நாள் ஒன்றுக்கு மனிதன் 24,0000 மூச்சை வீன் விறயமாக்கி கொண்டு இருக்கிறோம் . . .
அதை வீனாகாமல் "பந்தனம்" செய்ய வேண்டும் . . . இது பாஸ் அன் பாஸ் அல்ல பந்தனம் செய்வதின் முக்கியதுவத்தை பற்றி ஞான மேதை மஹான் தக்கலை பீர் முஹம்மது ஒலியுல்லாஹ் அவர்கள் மெத்தவும் சொல்கிறார்கள் . .
பந்தனம் செய்வோருக்கு நாஸியைவிட்டு மூச்சுவெளியாகாது . . .
நாசி நுனியே சென்று நாசமாய் போகாமல் வாசி வழி நின்று வாழ்வது எக்காலம் என்று குணம்குடி மஸ்தான் சாகிப் ஒலியுல்லாஹ் கூருகிறார்கள் . . அல்ஹம்துலில்லாஹ்

**Shamsuyousuff Yousuff**
தாயிப் நகரத்திற்கு தன்னுடைய புதிய மார்க்கத்தைப் பற்றி மக்களிடையே பிரச்சாரம் செய்யச் சென்ற முஹம்மது நபி, தாயிப் நகரவாசிகளின் ஏளனச் சொற்களால் தாக்குதலுக்குள்ளானார். முயற்சி தோல்வியடைந்த மனவேதனையுடன் கஅபாவில் படுத்திருந்தவர், இரவில் எல்லோரும் உறங்கியவுடன் யாரும் அறியாமல் எழுந்து உம் ஹனியின் வீட்டிற்குச் சென்றார். இது முஹம்மது நபியுடைய மனைவி கதீஜா மற்றும் பெரிய தகப்பனார் அபூ தாலிப் ஆகியோரது மரணத்திற்குப் பின் நிகழ்ந்த சம்பவம்.
கஅபாவில் படுத்திருந்த முஹம்மது நபியயை காணவில்லை என மக்கள் தேடிய பொழுது அவர் உம் ஹனியின் வீட்டிலிருந்து வெளியே வந்தவர், மக்காவின் கஅபாவில் இருந்து ஜெருசலேமில் உள்ள மஸ்ஜிதுல் அக்ஸா (பைத்துல் முகத்தஸ்) என்ற புனிதமான பள்ளிவாசல் வரை வான்வெளி பயணம் மேற்கொண்டு, அங்கு மற்ற நபிமார்களுடன் தொழுகையில் ஈடுபட்டு, அதன் பிறகு அங்கிருந்து அல்லாஹ்வை சந்திக்க, ஏழாம் வானம் வரை சென்ற தனது விண்வெளி பயணத்தைப் பற்றி மக்களிடம் கூறுகிறார். முஹம்மது நபியின் விண்வெளிப்பயணத்தை குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது,

தன்னுடைய அடியாரை ஓரிரவில் மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து மஸ்ஜிதுல் அக்ஸா வரை இரவுப் பயணம் செய்வித்த ஒருவன் மகாப் பரிசுத்தமானவன்...
(குர் ஆன் 17:1)
புகாரி ஹதீஸ் 3207
**Vaitiyar Malick**
லா இலாஹ இல்லல்லாஹ்வுக்கு அதன் அர்த்தம் அல்லாத வேறு ஒன்றை அர்த்தமாக நம்பிக்கொண்டிருப்பதால் முஸ்லிம் என்ற வட்டத்துக்குள்ளேயே வரமுடியாதல்லவா?
3) லா இலாஹ இல்லல்லாஹ் என்ற வசனத்தில்,
"லா" – இல்லை,
"இலாஹ" – தெய்வம் / சாமி / கடவுள்
"இல்லா" – தவிர / அல்லாத / வேறான
அல்லாஹ்" – அல்லாஹ்.
இதுதான் இச்சொற்களின் நேரடி அர்த்தம். இச்சொற்களுக்கிடையே "வணக்கத்துக்குரிய" என்ற சொல் எங்கே இருக்கிறது ?
(لا) லா – (ஹர்புன் நபிஃ) (deny – மறுதலிக்கும் உருபு),
(إله) இலாஹ – (இஸ்ம்-முப்ததா) (எழுவாய்,)
(إلا) இல்லா – (இஸ்தித்னா) பயனிலை (ஹபர்),
(الله) அல்லாஹ் – நீக்கம் செய்யப்பட்ட செயப்படு பொருள் (முஸ்தித்னா),
இச்சொற்களுக்கிடையே "வணக்கத்துக்குரிய" (முஸ்தஹிக்குன் லில் இபாதத்தி) என்ற பெயர் உரிச்சொல் (adjective) எங்கே இருக்கிறது ?
இல்லாத சொல்லை என்ன ஆதாரத்தின் அடிப்படையில் இடைப் புகுத்திச் சொல்கின்றீர்கள்.!
4) திருக்கலிமாவானது அல்லாஹ்வுக்கு "எந்தவிதத்திலும்" கூட்டு இல்லவே இல்லை Absolute negation என்று பறை சாற்ற வந்ததா?
அல்லது ஒரு சில விடயங்களில் மட்டும் தான் கூட்டு இல்லை அதாவது "வணக்கத்துக்குரியவன்" என்பதில் மட்டும் தான் கூட்டு இல்லை என்று மட்டும் பறை சாற்றவந்ததா?
5) உங்களுக்கும் தெரியும் "லா ஷரீக்க லஹூ" எனும் வசனம்
"அவனுக்கு எந்தவொரு கூட்டும் இல்லவே இல்லை" என்பதைக் குறிக்கிறது.
"வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத்தவிர வேறு நாயன் இல்லை" என்பது இஸ்லாமிய தத்துவங்களில் ஒன்று. அது லா இலாஹ இல்லல்லாஹ் எனும் கலிமாவின் அர்த்தமல்ல.
நீங்கள் சொல்லும் கலிமாவின் அர்த்தப்படி "வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத்தவிர வேறு நாயன் இல்லை" என்று வைத்துக் கொண்டால், வணக்கத்துக்குரியவன் என்ற விடயத்தில்தான் அல்லாஹுவுடன் கூட்டு இல்லை. வேறு விடயங்களில் கூட்டு இருக்கலாம் என்ற இணைகற்பிக்கும் கருத்து உங்கள் கலிமாவின் அர்த்தத்தில் இருப்பதை காணலாம். இதை பூரண தவ்ஹீத் (ஒருமைப்படுத்தல்) என்று எவ்வாறு சொல்ல முடியும்!!
"வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை" என்பதுதான் கலிமாவின் அர்த்தம் என்று பார்த்தால், உணவளிப்பதற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் உண்டு!!! பாதுகாவல் வழங்குவதற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் உண்டு! ஆக்குவதற்குரியவன், அழிப்பதற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் உண்டு!! போன்ற அர்த்தங்கள் நீங்கள் கலிமாவுக்குக் கூறும் கருத்தில் தொக்கி நிற்கும் விபரீதத்தை உணரவில்லையா?.....
**Vaitiyar Malick**
கலிமா குவ் என்றும் மீம் என்றும் கும் என்றும் முப்பொருளால் ஆனதாகும்.குவ் என்பது தாத்தாகவும் மீம் என்பது முஹமதின் சிபாத்தாகவும் ஆனது.குவ்வையும் மீமையும் ஒன்று சேர்த்தால் கும் என்றாகும்.இது இன்சானாகிய மனிதனை குறிக்கிறது.கலிமாவில் கலி என்பது குவ்வாலும் மா என்பது மீமாலும் ஆனது.கலி என்பது ஆண்,மா என்பது பெண் ஆகும் இரண்டும் சேர்த்து கும் ஆகி கலிமாவானது.கலிமா ஒன்பது பிரிவாக பிரிக்கப்பட்டுள்ளது.
முதற்பிரிவு- அஹதியத்,வஹ்தத்,வாஹிதியத்
இரண்டாம் பிரிவு- மூன்றெழுத்து- அலிப்,லாம்,மீம்- அல்லாஹ்,அஹ்மத்,ஆதம்.
மூன்றாம் பிரிவு-முச்சுடர்-முதல்,நடு,கடைசி
நான்காம் பிரிவு- அருட்பால்,பொருட்பால்,காமத்துப்பால்
ஐந்தாம் பிரிவு-உந்திக்கமலம்,இருதயகமலம்,முண்டக்கமலம்
ஆறாம் பிரிவு- நாட்டம்,பொருத்தம்,அமைதல்
ஏழாம்பிரிவு- தாய்,தந்தை,குழந்தை
எட்டாம் பிரிவு - யா,ஹு,மீம் என்ற திக்று எழுத்துக்கள்
ஒன்பதாம் பிரிவு- ஹ,ஹி,ஹு என்ற உயிர் எழுத்துக்கள்.
**aitiyar Malick**
6) வணக்கத்துக்குத் தகுதியான நாயன் அல்லாஹ்வைத்தவிர வேறு நாயன் இல்லை என்றால் வணக்கத்துக்கு தகுதியில்லாத நாயன் அல்லாஹ்வைத் தவிர இருக்கின்றது என்ற கருத்து அதற்குள் இருப்பதை அவதானித்தீரா! இப்படி சொல்வது எங்கணம் பூரண தவ்ஹீத் ஆகும்? இரண்டு உண்டு என்னும் "கூட்டு / இணை" எங்கணம் தவ்ஹீத் ஆகும்!
7) இதனை இன்னும் இலகுவாக விளங்கிக் கொள்ள "லா ரஜுல பித்தாரி" வீட்டிலே எந்த மனிதனும் இல்லை என்ற வசனத்தை எடுத்து நோக்குங்கள்.
'லா ரஜுல பித்தாரி" என்றால் எந்த ஒரு மனிதனுமே வீட்டில் இல்லை என்ற கலிமாவின் Format இல்தான் இவ்வசனம் உள்ளது. இவ்வசனத்திற்கு,
கை உடைந்த மனிதனைத் தவிர மற்ற மனிதன் வீட்டில் இல்லை என அர்த்தம் கற்பிக்கலாமா?

குள்ளமான மனிதனைத் தவிர மற்ற மனிதன் வீட்டில் இல்லை என அர்த்தம் கற்பிக்கலாமா?
கறுப்பான மனிதனைத் தவிர மற்ற மனிதன் வீட்டில் இல்லை என அர்த்தம் கற்பிக்கலாமா?
ஆனால் நீங்கள் சொல்லும் கலிமாவின் கருத்து அப்படித்தானே இருக்கிறது. இது எவ்வளவு பிழையான அர்த்தம்!!!
😎 கலிமாவில் "இலாஹ" என்ற சொல் "இலாஹ" என்று (மன்ஸூப் ஆக) வந்துள்ளதை அவதானித்திருப்பீர். இலாஹ என்பது "நகிரா"வா "மஃரிபா"வா?
"மஃரிபா" என்றால் குறிப்பான ஒன்று (eg : The God,The Man (muzammil) ,The furniture (table), வணக்கத்துக்குரியவன் .
"நகிரா" என்றால் பொதுப்படையாக அனைத்தையும் குறிக்கும் ஒன்று (eg: God, Man, Creature, Furniture,எது எதுவெல்லாம் வணங்கப்படுமோ அவையாவும்)
ஆகவே கலிமாவில் இலாஹுன் (அந்த ஒரு தெய்வம் The deity) என்று குறிப்பிட்டு பிரயோகிக்கப்படாமல், "இலாஹ" என்று ( எது எதுவெல்லாம் வணங்க, வழிபடப்படுகின்றதோ) அந்த இனம் யாவற்றையுமே ஒட்டுமொத்தமாக குறிப்பிடும் பாணியில் வந்திருக்கிறது.
அப்படியிருக்க "இலாஹ" என்பதை மஃரிபாவாக – குறிப்பிட்ட ஒன்றாக கட்டுப்படுத்தும் வகையில், வணக்கத்துக்குரிய தெய்வம் என்று எப்படி அர்த்தம் வைப்பீர்? இது குர்ஆனிய மொழியியலில் இல்லாத விடயமாயிற்றே.!
9) "லா" வுக்குப்பின்னால் ஒரு "இஸ்ம்" வந்தால் அந்த இஸ்ம் Common noun- பொது இனப் பெயர்ச்சொல் – பொதுப்படையாக அனைத்தையும் உள்ளடக்கிக் குறிக்கும் ஒருசொல் என்பது அறபு இலக்கணவிதி,

குர்ஆனின் குணாதிசயங்கள் 6


(குர்ஆனின் சவால்)
நபி (ஸல்) அவர்களுக்குத் திருமறை அருளப்பட்ட நேரத்தில் பகைவர்கள் அதனைப் பலவாறாக குறை கூறத் தொடங்கினர் . இக் குர்ஆன் கற்பனையின் வெளிபாடே என்றும் , பித்தரின் பிதற்றலென்றும் , களியாட்டென்றும் , கவிஞரின் கூற்றென்றும், சூனியக்காரரின் சொல்லென்றும் குற்றஞ்சாட்டினர் .மறை வழங்கிய மாபெரியோன் அவர்களுக்கோர் அறைகூவல் (சவால்) விடுத்தான்.
" (நம்முடைய தூதர்) இதனை பொய்யாகக் கற்பனை செய்து கொண்டார் என அவர்கள் கூறுகின்றனரா? அவ்வாறாயின் .நீங்கள் கூறுங்கள் இதைப் போன்று பத்து அத்தியாயங்களையேனும் நீங்கள் கற்பனை செய்து கொண்டு வாருங்கள் . அல்லாஹ்வையன்றி உங்களுக்குச் சாத்தியமான அனைத்தையும் ( கம்ப்யூட்டர் உட்பட) இதற்காக அழைத்து உங்களுக்குத் துணையாகக் கொள்ளுங்கள் மெய்யாகவே நீங்கள் உண்மை சொல்பவர்களாக இருந்தால் (இவ்வாறு செய்யலாமே )
குர்ஆன் (11: 13)
அடுத்து
"நாம் நம் அடியாருக்கு அருளியதில் நீங்கள் ஐயங்கொண்டு நீங்கள் உண்மையாளர்களாகவும் இருந்தால் - அல்லாஹ்வைத் தவிர - உங்கள் உதவியாளர்களையும் நீங்கள் துணைக்கு அழைத்துக் கொண்டு இதைப் போன்ற ஓர் அத்தியாயத்தை (அமைத்துக்) கொண்டு வாருங்கள் குர்ஆன்( 2 : 23 )
இந்த சவாலை ஏற்கும் முறையில் சில சில சலசலப்புகள் ஏற்பட்டன.
"வன்னாசி ஆத்தி கர்கன் " எனத் தொடங்கும் 79 -வது குர்ஆன் அத்தியாயத்திற்குப் போட்டியாக "வத்தாஹினாத்தி தஹ்னன் , வல் ஆஜினாத்தி அஜ்னன் , வல் ஹாபிஸாத்தி ஹுபஸ்ன் " என்பதாக குரல் எழுந்தது . பின் அதன் கருத்துக்கள் முரண்பட்டன.
குர்ஆனின் 109 வது அத்தியாயத்திற்குப் போட்டியாக . " அல்ஃபீலு .மல்ஃபீலு , வ மா அத்றாக மல்ஃபீலு " என்பது போன்ற தொடர் அமைக்க முயன்று பின் மக்களின் நகைப்பிற்குரியதாக கேலியும் கிண்டலும் செய்யப்பட்டது .
நபி (ஸல் ) அவர்கள் காலத்திலேயே யமாமா பிரதேசத்து " முஸைலமா " என்பவன் தன்னை நபி என்றும் வாதிட்டான். " அல் கவ்ஸர் " என்ற குர்ஆன் அத்தியாயத்தைப் போன்று சில சொற்றொடர் ஒன்றை இட்டிக் கட்டினான் .அது பொய்யானது என்று நிரூபிக்கப்பட்டது.

அன்றைய அரபுலகத்தில் மிகச் சிறந்த 7 கவிஞர்களின் கவிதைகள் மட்டுமே கஃபாவின் வாசலில் தொங்கவிடப்படும் இவர்கனின் கவிதைகளை " ஏழு தொங்கல்" (ஸப்அ முஅல்லகாத்) என்று அழைப்பார்கள் இவர்களில் மிகச்சிறந்த கவிஞரான "லபீத்" தன் கவிதையை தொங்க விட வரும்போது . கஃபாவின் வாசவில் முஸ்லீம் ஒருவரால் குர்ஆனின் ஒரு அத்தியாத்தை ஏற்கனவே தொங்க விட்டிருப்பதைப் படித்துப் பார்த்ததும் அதுவரை இஸ்லாத்தை ஏற்காத லபீத் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார் ,
பின்னர் உமர் (ரலி) அவர்கள் கவிதை ஒன்றை லபித் (ரலி) அவர்களிடம் புனைய கேட்க , " அல்-பகரா, ஆல இம்ரான் போன்ற அத்தியாயங்கள் எனக்கு பெரும் கவிதையாக வழங்கப்பட்டிருக்க இதை விட அழகான கவிதையை என்னால் கற்பனையிலும் கூட சிந்திக்க முடியாது" என்றார்
(Mohamed the Holy Prophet By H.G SARWAR P 448)
"இப்னு முகஃப்பஉ " என்ற பெருங் கவிஞர் குர்ஆனை பக்கத்தில் வைத்துக் கொண்டே வேறு ஒரு கவிதை தொடர் எழுத எத்தனித்து எத்தனித்து தாள்களை கிழித்து குவித்ததுதான் மிச்சமே தவிர ஒரு வரி கூட அவரால் எழுத முடியவில்லை .
(Mohamed His Life And Doctrines - By Wollaton P 143)
"எம்மாது அஜதி " என்ற பெரும் இலக்கியவாதி நபி (ஸல்) அவர்கள் குர்ஆனின் வசனங்களை ஓதியதைக் கேட்டதும் "நான் அல்லாஹ்வின் ஆணையாக ஜோதிடர்களின் அடுக்கு சொற்களையும், மந்திரவாதிகளின் ராகம் மிகுந்த மந்திரங்களையும் , பெரும் கவிஞர்களின் கருத்துப் பாடல்களையும் கேட்டிருக்கின்றேன் .ஆனால் குர்ஆனின் வார்த்தைகள் தனித்தன்மை வாய்ந்தது " என்று கூறியுள்ளார்
பிற்காலத்தில் ஆங்கிலப் பாதிரியார் வில்லியம் மூர் கூட முயற்சித்து தோல்வியை ஒத்துக் கொண்டு "இது இறைவனின் சொல்லேயன்றி மனிதனின் வார்த்தை அல்ல" என்றார்
1400 வருடங்களாக குர்ஆனின் சவால் உலக இலக்கியவாதிகளின் முன் அறைகூவலாக விடப்பட்டிருக்கிறது . நவீன கால ஆற்றல் மிகு கம்யூட்டர்கள், இணையதளங்கள் எல்லாம் இருக்க ஒரு பத்து வசனத்தையாவது இதுவரை உலகம் உருவாக்க முடியவில்லை.
" மனிதர்களும், ஜின்களும் ஒன்று சேர்ந்து இதைப் போன்ற ஒரு குர்ஆனை உண்டாக்க முயன்றாலும் , அவ்வாறு உண்டாக்கவே முடியாது. அவர்களில் சிலர் சிலருக்கு உதவி செய்த போதிலும் சரியே " குர்ஆன் (17 : 88)

குர்ஆனின் குணாதிசயங்கள் 7



(அல்குர்ஆனும் அரபி மொழியும் )
குர்ஆன் எழுதப்பட்டுள்ள அரபி மொழியே ஓர் அற்புதம்தான்... ஒரு மொழி 500 ஆண்டுகளுக்கு மேலாக அதே வடிவத்தில் தொடர்ந்திருக்க முடியாது என்னும் வரலாற்று விதிக்கு அரபி மொழி வியப்பூட்டும் விதிவிலக்கு . ஒவ்வொரு 500 ஆண்டுகள் காலப்போக்கில் ஒரு மொழி கடும் மாற்றம் அடைகிறது. வருங்காலத் தலைமுறையினர் தங்கள் தொல் பழங்கால முன்னோர்களின் நூல்களைப் புரிந்து கொள்வதில்சிரமப்படுகிறார்கள்...
ஆனால் அரபி மொழியின் வரலாறு மிகவும் மாறுபட்டு விளங்குகிறது. அது 1500 ஆண்டுகள் காலத்தின் சோதனைக்கு ஈடு கொடுத்து இன்றும் நிலைத்து நிற்கிறது.
நம்முடைய தமிழ் மொழியின் 1400 வருடங்களுக்கு முன்னால் உள்ள தமிழ் நூற்களை இன்றைய தலைமுறையினரால் வாசிக்க முடியுமா ? சற்று யோசித்துப் பாருங்கள் .
இதே நிலைதான் உலகில் உள்ள அனைத்து மொழிகளுக்கும் அரபியைத் தவிர.
அரபி மொழி சொல்லைப் பயன்படுத்தும் முறையிலும் நடையிலும் சில வளர்ச்சிகள் ஏற்பட்டுள்ளன என்பது உண்மையே .ஆனால் சொற்கள் தங்கள் பொருளை இழந்து விடும் அளவிற்கு அல்ல..!
அரபி மொழி மீது அல்குர்ஆன் ஒரு தெய்வீக முத்திரையை இட்டு உலக முடிவு நாள் வரை அது புரியக்கூடிய மொழியாகவே இருக்க வேண்டும் என்று தன் போக்கின் பக்கம் கவனத்தை ஈர்ந்துள்ளது .
இது பற்றி குர்ஆனில் அல்லாஹ் :

"ரூஹுல் அமீன் இதனை உமது இருதயத்தில் இறக்கி வைத்தார் . நீர் அச்சமூட்டி எச்சரிக்கை செல்வதற்காகத் தெளிவான அராமொழியில் "
குர்ஆன் ( 26 : 193 - 195)
"நீங்கள் நன்கறிந்து கொள்ளும் பொருட்டுக் குர்ஆன் என்னும் இவ்வேதத்தை நிச்சயமாக நாமே அரபி மொழியில் இறக்கி வைத்தோம்."
குர்ஆன் (39 : 28)
"அன்றி அவர்கள் பயந்து கொள்ளும் பொருட்டு எத்தகைய கோணலுமற்ற இக்குர்ஆனை அரபி மொழியில் இறக்கி வைத்தோம் " -குர்ஆன் (39 : 28 )
அரபியர்கள் தாங்கள் மட்டுமே பேசத் தெரிந்தவர்கள் என்னும் பொருளில் தங்கள் மொழியினை " அரபி " என்று குறித்தனர் . அரபி மொழி பேசத் தெரியாதவர்களை "அஜமி
( ஊமையர்கள்) என்றழைத்தனர் .
அரபியர்கள் மொழிப் பற்றுமிக்கவர்கள். தூய்மையான அரபி மொழியைப் பேசுவதில் அரபியர்கள் மிகுந்த கருத்துச் செலுத்தினர்.
" றே " என்னும் எழுத்தை சரியாக உச்சரிக்கத் தெரியாத தன் அழகான செல்வ செழிப்பான மனைவியை ஒருவர் மணவிலக்கு செய்திருக்கிறார். கேட்டதற்கு அம்மனைவி வழியாகப் பிறக்கும் குழந்தைகளையும் அக் குறை பீடித்து விடுமெனக் கருதி அதனால் எம் அரபி மொழிக்கு என் தலைமுறையால் களங்கம் வரக்கூடாதல்லவா ?"
அரபிகள் தங்கள் குழந்தைகள் அரபி மொழியினை தூய்மையாக பேச வேண்டும் என அதற்குரிய குழுவினரிடம் ஒப்படைத்து வளரச் செய்தனர் .
அரபி மொழித் தூய்மைக்குப் பிரசித்திப்பெற்ற ஹுனைன் பகுதியில் பனூ ஸஅத் குழுவைச் சார்ந்த அன்னை ஹலீமா அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட
அண்ணல் பெருமானார் (ஸல்) அவர்களின் சொல்லற்றல் சொல்லாமலேயே விளங்கும்.
அரபி மொழியைத் தாய்மொழியாகக் கொண்டோர் பத்து கோடிப் பேரே என்றாலும், 80 கோடி மக்களின் நாவில் தவழும் மொழியாக அரபி இலங்குகின்றது.
இதனால்தான் உலகப் பொதுமறையான திருக்குர்ஆன் அரபி மொழியில் அருளப்பட்டிருக்கிறது.

குர்ஆனின் குணாதிசயங்கள் 8



MULTI MEANING WORDS

(அரபி மொழியின் சொல்வளம்)
ஒரு பொருளின் பல நிலைகளையும், பருவங்களையும் குறிப்பதற்கும் அரபு மொழியில் தனித்தனிச்சொற்கள் உள்ளன. உதாரணமாக தமிழில் பெண்களின் ஏழு பருவங்களைக் குறிக்க பேதை, பெதும்பை, மங்கை. மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்பது போல ..
மானின் எட்டு பருவங்களைக் குறிக்க அரபியில் எட்டு சொற்கள் உள்ளன. மான்குட்டி பிறந்தவுடன் "தலா "என்றும் ஒரு நாள் சென்றதும் "கிஷ் ஃப்" என்றும் தலையில் கொம்பு முளை கிளம்பியதும் "ஷாதின்" என்றும் பால் குடி மறந்த பின் "ரஷ்அ " என்றும் ஒரு மாதம் ஆனதும் "ஷஃபர் " என்றும் , ஆறு மாதங்களானதும் "ஜதி " என்றும், ஓராண்டு நிறைந்ததும் "ஜித்அ" என்றும் இரண்டு ஆண்டிற்கும் அதற்கு மேற்பட்டும் "தன்" என்றும் அழைக்கப்படுகிறது.
இதைப் போன்றே ஒட்டகத்திறகும் ஒற்றைத் திமில் இரட்டைத் திமில் மற்றும் அதன் பருவத்திற்கும் உடல் அமைப்பைக்கும் என்று நூற்றுக்கும் அதிகமான சொற்றொடர்கள் உண்டு .
சூரியோதயத்திலிருந்து அஸ்தமனம் வரையில் பகல் ஒவ்வொரு மணி நேரத்திற்கும் ஒவ்வொரு சொல் அமைந்துள்ளது.

புகூர், ஷுருக், இஸ்ராக், கஸாலா, ளுஹா, மஷா, ஹாஜிரா, அஸீல், அஸ்ரு , ஸபூப் , ஹதுர், குரூப், என்று ஆக 12 சொற்கள்.
இவ்வாறே சந்திரன் தோன்றும் ஒவ்வொரு இரவுக்கும், ஒவ்வொரு சொல் உள்ளது. ( 28 தினங்கள் குறித்து லிஸ்ட் இட இடமில்லை)
அட, நம் கையிலுள்ள ஐந்து விரல்களுக்கும் பொருள் பொதிந்த ஐந்து பெயர்கள் , கின்ஸர், பின்ஸர், உஸ்தா, ஸப்பாப், இப்ஹாம்
கண் பார்வையின் ஏழு நிலைகளைக் குறிக்க ஏழு சொற்கள் .
காது மந்தமான தன்மையைக் குறிக்க வகர் (காற் செவிடு) .ஸமம் (அரைச் செவிடு) , தறஸ் ( முக்காற் செவிடு) .
காது மந்த நிலையறிந்து அதற்கேற்றாற் போல் உரையாடுவதற்கு இச்சொற்கள் உதவுகின்றன .
தனியாக தொழுபவர் "முன் ஃ பரித்"
இமாமைத் தொடந்து தொழுபவர்
" முக்ததீ " முதல் ரக்அத்தில் இமாமை தொடர்பவர் "முத்ரிக் " - அதற்குப் பின்னர் ரக்அத்தில் இமாமைத் தொடர்பவர் " மஸ்பூக்"
ஊரை விட்டு மறைந்து விட்டவர் "மஸ்கூத்" . பயணத்தில் இருப்பவர் "முஸாஃபிர் "- ஊரிலேயே இருப்பவர் "முகீம் " சொந்த ஊரிலேயே இருப்பவர் "முஸ்தவ்தின்"
உளுச் செய்யும் செயல் "உளு"
உளுச் செய்யும் தண்ணீர் "வளு"
உளுச் செய்யும் பாத்திரம் "விளு"
ஒரே சொல் அதன் எதிர்மறைப் பொருளையும் சேர்த்து ஒரே வார்த்தையில் குறிப்பதற்கு அரபியில் "ளித் " எனப்படும் "கிதாபுல் அள்தாத்" என்னும் பெயரில் இது பற்றித் தனி நூல்களே உள்ளன. அத்தகைய சொற்கள் 400 க்கும் அதிகமான சொற்கள் உண்டு
உதாரணமாக ,
"கஅத" உட்காருதல் .எழுந்தித்தல் இரண்டையும் குறிக்கும் .
"ஷமில " பிரித்தல் , சேர்த்தல்
"அஃப்ஸத " விரைதல், தாமதித்தல்
"தாப " உறைதல் , உருகுதல்
"பாஅ" வாங்குதல், விற்றல் இரண்டனையும் குறிக்கும்
இப்படி நேர்மறைக்கும் , எதிர்மறைக்கும் ஒரே ஒரு சொல் . இந்த வார்த்தைகளை பயன்படுத்துவோருக்கு அரபி மொழியில் எவ்வளவு பாண்டித்துவம் பெற்றிருக்க வேண்டும் ?
இப்படி அரபியில் சொல்வளம் குவிந்துள்ளது இதனால்தான்
"நீங்கள் நன்கறிந்து கொள்ளும் பொருட்டுக் குர்ஆன் என்னும் இவ்வேதத்தை நிச்சயமாக நாமே அரபி மொழியில் இறக்கி வைத்தோம் "
குர்ஆன் (12 : O2)

**Rahmath Rajakumaran**

ஒட்டகம் , வாள் ,மேகம் , மழை, கிணறு, நீர், பாம்பு, சிங்கம் போன்ற வற்றை குறிக்க நூற்றுக்கணக்கான சொற்கள் உள்ளன .
மூன்று பொருளைத் தரும் 300 சொற்களும் ,
நான்கு பொருளைத் தரும் 400 சொற்களும் , இருபது பொருளைத் தரும் 200 சொற்களும் உள்ளன.
"சூரா அலக் " இந்த "அலக்"கிற்கு மட்டுமே 400 அர்த்தங்கள் உள்ளன .இரத்தக் கட்டி ,தொங்குதல் போன்ற அர்த்தங்களும் உண்டு
ஹான்ஸ் வெஹ்ர் என்பவர் வெளியிட்டுள்ள அரபி - ஜெர்மன் அகராதியில் 50 ஆயிரம் சொற்களைப் பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

**Rahmath Rajakumaran**

கரீம் - வள்ளல்
அக்ரம் - மாபெரும் வள்ளல் இதற்கு
" இஸ்முத் தஃப்ளீஸ்" என்று பெயர்
றஜுல் - மனிதர்
றுஜைல் - மிகச் சிறிய மனிதர். இதற்கு
"இஸ்முத் தஸ்கீர் " என்று பெயர்



۞ أَوَعَجِبْتُمْ
أَن جَآءَكُمْ ذِكْرٌ مِّن رَّبِّكُمْ عَلَىٰ رَجُلٍ مِّنكُمْ لِيُنذِرَكُمْ
وَاذْكُرُوٓا إِذْ جَعَلَكُمْ خُلَفَآءَ مِنۢ بَعْدِ قَوْمِ نُوحٍ وَزَادَكُمْ
فِى ٱلْخَلْقِ بَصْطَةً فَٱذْكُرُوٓا ءَالَآءَ ٱللَّهِ لَعَلَّكُمْ تُفْلِحُونَ

Photocopy from the Tashkent Quran.

குர்ஆனைப் பாதுகாக்கும் உள் பூட்டுகள் ( Interlock system of the Quran )
பாக்.அதிபர் ஜியாவுல் ஹக் அடிக்கடி
குர்ஆன் ஓதும் பழக்கமுடையவர். இதனால் சின்னஞ் சிறிய குர்ஆனை உள் கோர்ட்டின் உள்புற பாக்கெட்டில் எப்போதும் வைத்திருப்பார் . அவருடைய எதிரிகள் ஆப்பிள் பழ கூடையின் அடியில் டைம் பார்ம் வைத்து அவர் பயணிக்கும் சிறு விமானத்தைத் தகர்த்து, அவரை சல்லடையாக்கி கொன்ற போது அவருடைய பாக்கெட்டிலுள்ள சிறிய குர்ஆன் எவ்வித பாதிப்படையாமல் கோர்ட்டு துணியால் பொதிந்த நிலையில் தனியாக கிடந்தது.
அன்றைய எல்லா பத்திரிக்கை செய்திகளும் கீழ்க்கண்ட குர்ஆன் வசனத்தைக் குறிப்பிட்டிருந்தன.
" நிச்சயமாக நாம்தான் இவ்வேதத்தை இறக்கி வைத்தோம் .ஆகவே அதில் எத்தகைய மாறுதலும் அழிவும் ஏற்படாதவாறு நிச்சயமாக நாமே அதனை பாதுகாத்துக் கொள்வோம் "
(குர்ஆன் 15 : 09 )
.. ஆனால் இறைவன் குறிப்பிடும் பாதுகாப்பு என்பது முந்தைய இறை வேதங்களைப் பாதுகாக்கும் பொறுப்பை கட்டளையாக அந்த வேதக்காரர்களிடமே அல்லாஹ் ஒப்படைத்ததாக குர்ஆன்
(5 : 44) வசனத்தில் தெரிவிக்கின்றான். ஆனால் அம் மக்கள் பாதுகாக்க தவறியதோடு மட்டும் அல்லாமல் தங்கள் மன இச்சைக்கு சாதகமாக வேதங்களை மாற்றி அமைத்து எழுதிக் கொண்டனர்.
எனவே அல்லாஹ் அம்மாதிரியான மனிதக் கையாடல்கள் குர்ஆனில் எந்த இடத்திலும் நுழைந்து அதை மாற்றியமைக்க முடியாதவாறு
வார்த்தைகளின் எண்ணிக்கையாலும் அந்த வார்த்தையின் எதிர் சொல்லின் அதே எண்ணிக்கையாலும் குர்ஆன் வடிவமைத்துப் பாதுகாக்கப்படுகிறது . இதனால் குர்ஆனில் எந்த ஒரு வார்த்தையை எடுத்தாலோ அல்லது சேர்த்தாலோ அந்தக் குற்றத்தை குர்ஆன் காட்டிக் கொடுத்து விடும் . அப்படி சில வார்த்தைகள் .
ஏழு வானங்கள் - ஸப்அ ஸமாவாத் - 7 தடவை
மாதம் - ஷஹ்ரு - 12 தடவை
நாள் - யவ்மு - 365 தடவை இச்சொல்லின் பன்மை முதலிய பிற வடிவங்கள் ஒரு மாதத்தின் நாட் களுக்கு ஒப்ப 30 எண்ணிக்கையில் உள்ளது.
வானவர்கள் - 68 x சைத்தான் 68
இப்லீஸ் _11 x இறை உதவி 11
செயல் (ஃபஅல) - 108 X கூலி (அஜ்ரு) 108
குர்ஆன் 70, இஸ்லாம் 70 , வஹ்யீ 70
துன்பம் (ஷித்தத்) 102 X பொறுமை (ஸப்ரு) 102
ரஹ்மான் (கருணை) 57 x ரஹீம் (அன்பு) 114 = 57 x 2 கருணை விட இறை அன்பு இரு மடங்கு
நஃபா ( பயன்படும் தன்மை) 50 X ஃபசாத் ( குழப்பம் ) 50
ஹர் (வெப்பம்) 14 X பர்த் (தட்பம் ) 14
துன்யா 115 X மறுமை 115
களிமண் (தீன்) 12 X இந்திரியம்
(நுத்பா) 12
தீயவர்கள் (புஜ்ஜார்) 3 x நல்லோர் (அப்ரார்) 6 ( 3 x 2 ) தீயவரைக் காட்டிலும் நல்லோர் இரு மடங்கு
வாழ்வு (ஹயாத்) 145 X இறப்பு (மௌத்) 145
நன்மை (ஸாலிஹாத்) 167 X தீமை (ஸய்யீஅத் ) 167
துன்பம் (முஸீபத் ) 75 X நன்றி ( ஷுக்ரு) 75

பகிரங்கம் (ஜஹ்ரு) 16 X இரகசியம்
(ஸிர்ரு) 32 ( 16 X2) பகிரங்கத்தைக் காட்டிலும் இரகசியம் இரு மடங்கு
முஹம்மது - சிராஜ் - பரிசுத்த ஆத்மா ஆகியவை 4 இடங்களில் வருகிறது
நாமார்களுக்கு அருளப்பெற்ற
வேதங்கள் 4 . சிற்சில சட்டங்கள் அடங்கிய சுஹ்புகள் - 110
ஆக மொத்தம் 114.
நபிமார்களுக்கு அருளப்பெற்ற இவை அனைத்தும் 114 அத்தியாயங்களைக் கொண்ட குர்ஆனில் அடக்கம்.
..... இப்படி நிறைய வார்த்தைகள் இருந்தாலும் அவற்றின் எண்ணிக்கைக்கும் வார்த்தைகளின் பொதுப் பண்புகளுக்கும் ஏதோ ஒரு தொடர்பு உள்ளது என்பதை நம்மால் அறிய முடியாது . அது என்ன என்பதுதான் இதுவரை யாராலும் சொல்ல முடியவில்லை .
"அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா ?
குர்ஆன் (47: 24)
குர்ஆனின் குணாதிசயங்கள் 10




("பத்தொன்பது " என்ற எண்ணை உள்பூட்டாக கொண்டு குர்ஆன் பாதுகாத்தல்) - பகுதி 1
முந்தின பதிவில் குர்ஆன் , வார்த்தைகளைக் கொண்டும் அதன் எதிர் வார்த்தைக் கொண்டும் சமமான எண்ணிக்கையின் அடிப்படையில் பாதுகாப்புப் பற்றி பார்த்தோம்.
இந்த பதிவில் 19 என்கிற எண்ணிக்கையை அடிப்படைக் கொண்டும் குர்ஆன் பாதுகாப்பதுப் பற்றி ஆய்வோம்.
மொத்த முழுக் குர்ஆனின் கணக்கீட்டின்படி
"பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்" தொடரில் 19 எழுத்துக்களைக் கொண்டது. மேலும் 4 சொற்களைக் கொண்டது .இஸ்ம், அல்லாஹ், ரஹ்மான், ரஹீம் என்பன
இஸ்ம் 19 x 1 = 19 தடவை இடம் பெற்றுள்ளது
அல்லாஹ் 19x 142 = 2698 தடவை
ரஹ்மான் 19 x 3 = 57 தடவை
ரஹீம் 19 x 6 = 144 தடவை இடம் பெற்றிருக்கிறது
ரஹ்மான் (அருளாளன்) 57 தடவை ஆனால்ரஹீம் (அன்புடையோன்)
114 (57 x 2 ) அருளைக் காட்டிலும் இரு மடங்கு அன்பு .
பிஸ்மியின் அப்ஜத் கணக்கின்படி 786.
குர்ஆனிலுள்ள சூராக்களின் எண்ணிக்கை 114 இவ்விரண்டையும் பெருக்கினால் 786 x 114 = 89604
இதுவும் 19 இன் பெருக்கமாகவே உள்ளது அதாவது 19 x 4716 = 89604
குர்ஆனின் மொத்த அத்தியாயங்கள் 114 அதாவது 19 X 6 = 114
அடுத்து "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் " என்னும் காப்புத் தொடர் , குர்ஆனில் 9 வது அத்தியாயமான "அத் தவ்பா " வின் தலைப்பில் இடம் பெறவில்லை. அதனால் மொத்த எண்ணிக்கையில் ஏற்படும் குறையினை "நம்ல் " எனப்படும் 27வது அத்தியாயத்தில் 30-வது வசனத்தில் விடுபட்ட "பிஸ்மி"யை சேர்த்து எண்ணிக்கையை சரிபடுத்தி உள்ளான் .
குர்ஆனில் முதன்முதலாக அருளப்பட்டது சூரா "அலக் " அத்தியாயம் .குர்ஆனின் இறுதி சூரா " நாஸ்" இருந்து மேனோக்கி எண்ணிச் செல்கின்ற போது "அலக்" அத்தியாயம் 19வது இடத்தைப் பெறுகின்றது.
முதன் முதலாக அருளப்பட்ட சூரா அலக் என்ற 96 வது அத்தியாயத்தில் முதல் ஐந்து வசனங்கள்தான் நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்டது . இந்த 5 வசனங்களில் இடம்பெற்றுள்ள சொற்களின் எண்ணிக்கை 19 இந்த 19 சொற்களில் பயன்படுத்தப்பட்டிருக்கும் எழுத்துகளின் எண்ணிக்கை 76 அதுவும் கூட 19 ன் பெருக்கம் ( 19 x 4 =76)
மேற்கண்ட சூரா " அலக் "கில் ஐந்து வசனங்கள் மட்டுமே அருளி, பின் கொஞ்ச மாதங்கள் கழித்து அதே அலக் சூராவின் பிற்பகுதி 14 வசனங்கள் வெளியாகி " அலக்' அத்தியாயம் மொத்தம் 19 வசனங்களுடன் நிறைவு பெறுகிறது.

இந்த 19 வசனத்தில் இடம் பெற்றுள்ள மொத்த எழுத்து 285 அதாவது
19 x 15 = 285.
அதென்ன 19 என்கிற எண் ?
" ஆகவே " இது (குர்ஆன்) மயக்கக் கூடிய சூனியமேயன்றி வேறில்லை" என்றும்
"இது மனிதர்களுடைய சொல்லேயன்றி வேறில்லை" என்றும் கூறினான்
ஆகவே நாம் அவனை நரகத்தில் எறிவோம்.
(நபியே) அந்த நரகம் என்னவென்று நீங்கள் அறிவீர்களா ?
அது எவரையும் மிச்சம் வைக்காது . விடவுமாட்டாது
அது (எரித்து) மனிதனுடைய கோலத்தையே மாற்றி விடும்.
(அவனை வேதனை செய்ய ) அதில் பத்தொன்பது பேர்கள் இருக்கின்றனர் .
குர்ஆன் (74 : 24 -30)
"குர்ஆனில் எழுத்துப்பிழை " உள்ளது என்று விவாதம் பேசி விதண்டாவாதம் செய்பவர்கள் சற்று யோசிக்க வேண்டும் எரிநரகின் 19 வேதனை செய்யும் மலக்குகளைப் பற்றி சிந்திக்க வேண்டும் .
(இன்னும் 19 ன் சாகஸங்கள் தொடரும்)

**Mujeeb Rahman**

பத்தொன்பது எண்ணின் மகத்துவம் குறித்து 400 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த தக்கலை பீர்முகமது அப்பா ரஹிமஹுல்லா அவர்கள் தமது மெஞ்ஞானப்பாடல்களில் நிறைய எழுதியுள்ளார்.எண்கள் குறித்தும் அம்ஜத் கணக்கு பற்றியும் மனித உடலை அரபு எழுத்துக்களால் வர்ணிக்கும் இல்முல் ஹர்ப் குறித்தும் நிறைய சூபியாக்கள் சொல்லியிருக்கிறார்கள்

**Rahmath Rajakumaran**

நபி (ஸல்) அவர்கள் இரவில் மிஹ்ராஜ் என்ற விண்ணுலக போய் வந்ததை மக்களிடம் சொல்லிக் கொண்டு இருக்கும் போது , அபூஜஹ்ல் நம்பாமல் நபியவர்கள் பொய் சொல்லி விட்டதாக நபித்தோழர்களே நம்பும்படி செய்தான் .ஆனால் நபியின் உற்ற நண்பர் அபூபக்கர் (ரலி) அவர்கள் அதுசமயம் ஊரில் இல்லாததால் , அவர்களிடம் சொல்வதற்காக
ஊரின் எல்லையில் அமர்ந்து , வந்ததும்
" ஒரு ஆள் இரவில் பயணம் செய்து , "பைத்துல் முகத்தஸ் போய் அங்கிருந்து வான் ஏகி இறைவனை சந்தித்து விட்டு இரவோடு இரவாக ஊர் திரும்பினேன் என்று சொல்லும் நபர் பைத்தியக் காரர்தானே " என்று கேட்க
"ஆமாம் பைத்தியக் காரர்தான் அது சரி அப்படி சொன்னவர் யார் ?"
"உம் நண்பர் முஹம்மது "
"அப்படி என்றால் அது உண்மைதான் " என்றார்கள்
இதிலிருந்து நாம் அறிவது
சொல்கிறவன் இறை மறுப்பாளானவே இருந்தாலும் , சொல்லப்படும் சேதி யாரைப் பற்றியது ? என்பதுதான் முக்கியம் .
குர்ஆனைப் பற்றிய கருத்து உண்மையாக இருக்கும் பட்சத்தில் அவன் எவனாக இருந்தால் நமக்கு என்ன ?
கருத்தை ஏற்றுக் கொள்வோம் அந்த ஆளை விட்டு விடுவோம்
மிஹ்ராஜ் போய் வந்தது குறித்து அபூபக்கர் (ரலி) அவர்கள் நபியவர்களிடம் கேட்டதே இல்லை .
உண்மை ஹதீஸ்க்கும் ராவி கேட்பவர்கள் இது விஷயம் சற்று சிந்திக்க வேண்டும்

குர்ஆனின் குணாதிசயங்கள் 11
(Complex Inter lock System of 19 )




அரபி எழுத்துக்கள் மொத்தம் 28 . அதில் நேர் பாதி 14 எழுத்துக்களை இறைவன் 29 அத்தியாயங்களின் தலைப்புகளில் தனித்தனியாக ஓத வேண்டிய சங்கேத எழுத்துக்களைப் பயன்படுத்தியுள்ளான் .
அவற்றை அரபு மொழியில் "ஹுருபுல் முகத்தஆத் "எனக் குறிப்பிடுவர்

உலகில் வேறு எந்த மொழியிலும் , எந்த நூலிலும் காண இயலாத தனிச் சிறப்புடையது இந்த ஹுருபுல் முகத்தஆத் எழுத்துக்கள் .
வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களுக்குக் கூட விளங்காமலிருந்த சங்கேத எழுத்துக்களின் பொருளை நபி (ஸல்) அவர்கள் அறிந்திருந்தார்கள் என்பது "காப் , ஹா,யா, அய்ன், ஸாத் எனத் தொடங்கும் சூரா வெளிப்பட்ட நேரத்தில் ஒவ்வொரு எழுத்தையும் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் சொல்லச் சொல்ல "தெரிந்து கொண்டேன் , தெரிந்து கொண்டேன், என்று ஐந்து தடவை சொன்னார்கள்.
அப்போது ஜிப்ரயீல் (அலை) அவர்கள் "யா ரசூல்லாஹ்.... இந்த எழுத்திற்குரிய பொருளை நான் அறியாமல் இருக்கும் போது தாங்கள் எவ்வாறு அறிந்தீர்கள் ? என்று கேட்டதாக கிதாபு கபரில் கூறப்பட்டிருக்கிறது .
ஒவ்வொரு வேதத்திலும் ஒரு இரகசியம் உண்டு. இந்தக் குர்ஆனில் இதன் அத்தியாயங்களின் சிலவற்றின் ஆரம்பத்தில் அந்த இரகசியம் பொதிந்திருக்கிறது என்கிறார்கள் .
சங்கேத எழுத்துக்களைச் "சொற்களின் சுரங்க " மென்றும் ."பேச்சு மொழியின் தொடக்க " மென்றும் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றனர் .
இன்றைய ஆராய்ச்சியாளர்கள் இந்த எழுத்துக்கள் குர்ஆனின் காவல் சின்னங்கள் என்கின்றனர். ஒரு குறிப்பிட்ட அத்தியாயத்திற்குள் குறிப்பிட்ட எழுத்துக்கள் எத்தனை அடங்கியுள்ளன என்பதை அதிகாரத் தலைப்புகளிலுள்ள அந்த எழுத்துக்கள் வெளிக்காட்டுகின்றன .இந்த எழுத்துக் களும் 19 - ன் அடிப்படையில் அமைந்துள்ளது என்பது நம்மை மேலும் வியப்படையச் செய்கிறது.
இதைத் தவிர வேறு பல விஷயங்களையும் சொல்ல வரலாம் என்பது நாளைய கணணி செயல்பாட்டின் வெளிச்சத்தில் வெளிவரலாம் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.
சங்கேத எழுத்துக்கள் மொத்தம் 14
இவைகளைக் கொண்டு 14 வகையான இணைப்புகளை 29 சூராக்களின் தலைப்பில் இடம்பெற்றுள்ளன. இம் மூன்று கூட்டுத் தொகை 14 +14 +29 = 57
( 57 = 19 x 3)
குர்ஆன் என்னும் சொல்லின் முதல் எழுத்து " காஃப்"
கடைசி எழுத்து "நூன்". - "நூன்" எனத் தொடங்கும் சூரா 68-ல் நூன்களின் எண்ணிக்கை 133 அதாவது 19 x 7 = 133
"காஃப்" எனத் தொடங்கும் 50-வது அத்தியாயம் 57 காஃப்களைப் பெற்றுள்ளது .ஆதாவது 19 x 3 = 57
ஹாமீம், ஐன், ஸீன், காஃப் எனத் தொடங்கும் 42 -வது சூராவில் 57 காஃப்கள் இருக்கின்றன (19x 3 = 57)
50-வது அத்தியாயத்திலும் ,42 -வது அத்தியாத்திலும் உள்ள மொத்த காஃப் 114 அதாவது (19x6 = 114) அதாவது குர்ஆனின் மொத்த சூராக்களுக்கு (114) இஷாராவாகவும் அமைகின்றது .
லூத் நபியின் கூட்டத்தினரைக் குறிப்பதற்கு குர்ஆன் முழுவதும் 12 இடங்களில் "கவ்மு லூத் " ( லூத்தின் குழு) என்னும் சொல் பயன்படுத்தப்பட்டி ருக்க, ஒரே ஒரு இடத்தில் மட்டும் "இக்வானு லூத் "( லூத்தின் சகோதரர்கள் ) என்னும் வார்த்தையை குர்ஆன் (57:13) வசனத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது .
காரணம் "கவ்மு லூத் " என்ற வார்த்தைப் பயன்படுத்தினால் "காஃப்" எண்ணிக்கையில் ஒன்று அதிகமாகி 19ன் பெருக்கமான எழுத்துக் கட்டுப்பாட்டையே அது சிதைத்து விடும் .

குர்ஆனின் குணாதிசயங்கள் 12




19 என்கிற எண்ணைக் கொண்டும் குர்ஆனை பாதுகாக்க இறைவன் ஏன் அதை தேர்ந்தெடுத்தான் ?
எண்களின் உலகமே எண்ணற்ற புதுமைகளைக் கொண்டது. எல்லா எண்களுக்கும் அடிப்படையாக அமைந்தது, 1 முதல் 9 வரையிலுள்ள எண்களே .
எண்களில் சிறியது 1 . பெரியது 9.
ஒன்று என்றும் வினைச் சொல்லுக்கு ஒன்றுதல், இணைதல், சேர்தல் என்பது பொருள். (அடிமை 1, ஆண்டான் 9)
மூத்த எண்ணாகிய ஒன்பதோ முதிர்ச்சியின் காரணமாகப் பல பட்டறிவுகளைப் பெற்றது. பிற எண்களுடன் கூடிக் குலவிய போதிலும், தன் இயல்பில் மாறாது.
எந்தப் பெரிய எண்ணுடன் 9 யைக் கொண்டு பெருக்கினால் அதன் கூட்டல் தொகை ஒன்பதாகவே முடியும்.

3745 X 9 = 33705 , ( 3 + 3 + 7 +0 + 5 = 18 = 1 + 8 = 9)
மேலும் எந்த எண்ணையும் ஒன்பதுடன் கூட்டினால் , தன்னோடு சேர்ந்த எண்ணைப் பிரித்துக் காட்டும் ஆற்றல் 9 க்கு உண்டு.
8 + 9= 17 ' (1 + 7 = 8 )
எந்தத் தொகையையும் திருப்பி எழுதிப் பெரிய தொகையிலிருந்து கழித்தால் அதன் கூட்டுத் தொகை ஒன்பதாகவே வரும் 8463 - 3648 =4815 (4+8+ 1+5 = 18 : 1+8 =9)
வேறு எந்த எண்ணாலும் வென்று விட முடியாத, வகுத்துவிட முடியாத ஒற்றைப்படை எண் 19.
காலத்தை 19 என்ற எண்ணினால்தான் கணிக்கப்படுகிறது. வாரத்தின் (7) நாட் களையும் , வருடத்தின் மாதத்தின் எண்ணிக்கை (12) கூட்டினால் 19
மனிதன் பெற்றுள்ள தத்துவங்கள் 19 .
ஐம்புலன்களால் பெறும் அறிவு 5 ,
அக அறிவு 5, ஆசையும், கோபமும் 2 , தனித்தல், கழித்தல், ஊர்தல் , வளர்தல் , ஈர்த்தல், கவர்தல், இனத்தைப் பெருக்கல் ஆகிய ஆற்றல் 7 . ஆக மொத்தம் 19.
மனிதன் உறுதி கொள்ள வேண்டிய நம்பிக்கை 19 என்று ஞானிகள் கூறுகிறார்கள் .
இறைவன், வேதங்கள்,நபிமார்கள், வானவர்கள், உலக அழிவு, இறுதித் தீர்ப்பு நாள் , நரகம், சுவர்க்கம் , தக்தீர் ஆகியவற்றில் கொள்ள வேண்டிய நம்பிக்கை 9, இஸ்லாமிய கடமைகள் மீது கொள்ள வேண்டிய நம்பிக்கை 5 தவிர்க்க வேண்டிய பஞ்சமாப் பாதங்கள் 5 ஆக மொத்தம் 19
ஏழு வானங்கள் (7) , அர்ஸ், குர்சீ, மண், தண்ணீர். காற்று , நெருப்பு, ஜீவ, தாவர, தாது இனங்கள் ஆகியவற்றின் அதிபதியாகிய மலக்குகள் 16 உயரினத்தில் சிறந்த மனிதனின் ஈரல், இருதயம், மூளை ஆகியவற்றிற்கு அதிபதிகளாக நியமிக்கப்பட்டுள்ள மலக்குகள் 3. ஆக மொத்தம் 19.
19 எண்ணின் சிறப்பு " மடங்கு மடங்காக கணக்கிட்டால் சொல்லி மாளாத அதிசயம் அது. அதனால் மடங்கு பற்றிய படம் மட்டுமே கொடுத்துள்ளேன் .
"அதன் மீது பத்தொன்பது "
குர்ஆன் (74:30 )
அரபியில் பத்தொன்பதை எழுதினால் அதன் வரிவடிவம் , அனைத்திறகும் அடிப்படையான அலிஃபானது, மீமை அணைத்திருப்பதைப் போன்றதொரு தோற்றத்தைத் தருவதும் சிந்தைக்கு விருந்தாக அமைகிறது.

குர்ஆனின் குணாதிசயங்கள்.13




அலிப், லாம், மீம், ஸாத் எனத் தொடங்கும் 7 வது அத்தியாயத்தில் ஸாதின் எண்ணிக்கைக் கட்டுப்பாட்டை காணலாம்.
இந்த அத்தியாயத்தின் 69 - வது வசனத்தில் "பஸ்ததன்" என்னும் சொல்லில் ஸாதுக்கு மேலாக ஒரு ஸீன் பொறிக்கப்பட்டிருக்கிறது. எழுத்து ஸாதாக இருந்தாலும் உச்சரிப்பு ஸீனாக இருந்தால் மட்டுமே அதற்குரிய பொருள் வெளிப்படும்.
வடிவடிவில் இந்த எழுத்து இப்படித்தான் அமைந்திருக்க வேண்டுமென நபி (ஸல்) அவரகளுக்கு தனியாக எடுத்துரைக்கப்பட்டதாம். அந்த இடத்தில் ஸாத் அமையாவிடில் அந்த அத்தியாயத்தில் இருக்க வேண்டிய ஸாதின் எண்ணிக்கையில் ஒன்று குறைபடும்.
ஸாதின் கட்டுப்பாட்டைப் பாருங்கள்
சூரா 7 உள்ள ஸாத் 68
சூரா 19 உள்ள ஸாத் 26
சூரா 38 உள்ள ஸாத் 28

———
152
152 = 19 x 8 ( 19 இன் பெருக்கமாக அமைகிறது )
அலிப், லாம், மீம், ஸாத் எனத் தொடங்கும் 7-வது அத்தியாயத்தில்
அலிப் 2572
லாம் 1523
மீம் 1165
ஸாத் 98
———
5358
5358 = 19 x 282 ( 19-ன் பெருக்கமாகவே அமைகிறது)
காஃப், ஹா ,யா, அய்ன், ஸாத் எனத் தொடங்கும் 19-வது அத்தியாயத்தில்
காஃப் 137
ஹா 168
யா 345
அய்ன் 122
ஸாத் 26
———
798
798 = 19 x 42 ( 19 ன் பெருக்கமாகவே அமைகிறது. )

குர்ஆனின் குணாதிசயங்கள் 14

அலிப் , லாம், மீம் எனத் தொடங்கும் 8 சூராக்களில் இம் மூன்று எழுத்துகளும் முறையே
சூரா அலிப் லாம் மீம்
2 4592 3204 2195
3 2578 1885 1251
7 2572 1523 1165
13 625. 479 260

29 784 554 347
30 545 396 318
31 348 298 177
32 268 154 158

---

12 ,312 + 8493 + 5871 = 26,676
26,676 / 19 = 1404
(1404 X 19 )
சூரா 110 ல் அடங்கியுள்ள சொற்கள் 19 .கீழிலிருந்து மேலாக சூராக்களை கணக்கிட்டால் சூரா " அலக் " 19 வது இடத்தில் அமைகிறது
பிஸ்மில்லாஹ் இடம் பெறாத 9 வது சூரா தௌபாவிலிருந்து கணக்கிடும் போது பிஸ்மில்லாஹ் இருமுறை இடம் பெறுகின்ற சூரா "நம்ல் " இடம்பெற்றுள்ள இடம் 19 இதிலுள்ள இரு பிஸ்மில்லாஹ் க்கு இடையில் உள்ள சொற்களின் எண்ணிக்கை 19 -ன் பெருக்கமாக 342 ( 19 X 18 = 342)
19 சம்பந்தப்பட்ட பதிவுகளின் ஆதார நூற்கள்
1) Al-Quran - The ultimate miracle
by- Ahamed Deedat
2) " இனிக்கும் இறை மொழி பேராசிரியர்
கா. அப்துல் கபூர்
3) mathematical Miracle of the Quran website : Info@submisstion.org

**Rahmath Rajakumaran**
குர்ஆனில் 29 சூராக்களின் தலைப்பில் இடம்பெற்றுள்ள இந்த சங்கேத எழுத்துக்கள் அடங்கிய சூராக்களில் 13 மட்டுமே இதுவரை ஆய்வு செய்யப்பட்டுள்ளது .
மீதமுள்ள 16 சூராக்கள் 19 எண்களுக்குள் சிலது அமைந்தும் சிலது அமையாலும் இருப்பதால் வேறு ஏதேனும் யுக்திகள் பயன்படுத்தப்பட்டிருக் கிறதா என்று ஆய்வு தொடர்கிறது .
நாம் 0 - 9 வரையிலுள்ள எண்கள் வரிசையை பயன்படுத்துகிறோம்
ஆனால் மாயன் சமுதாய மக்கள்
0 - 19 வரையுள்ள எண்கள் வரிசை பயன் படுத்துவார்கள் .
அந்த வகையில் ஆய்வுகள் ஜெர்மனியில் நடப்பதாக சொல்லப்படுகிறது
அல்லாஹ்வே மிக அறிந்தவன்

மாயன் எண் வரிசை 0-19

குர்ஆனின் குணாதிசயங்கள்15






(அலிப், லாம், மீம் விஞ்ஞான விளக்கம்)
ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் என்கிற மாபெரும் விஞ்ஞானிக்கு "பொருள் எப்படி அழிவு பெறக் கூடும் ? புதிதாகச் சக்தி எப்படி தோன்றக் கூடும் என்ற எண்ணத்தில் ஆய்வு செய்த போது, உலகம் வியக்கும் ஓர் அதிசயமான சமன்பாட்டை கண்டார்.

2
E = MC
இதில் E -என்பது அளப்பரிக்கும் ஆற்றல் (Energy )
M_ பொருளின் எடை பொருண்மை (Mass)
C - ஒளியின் வேகம் (Velocity of Light )
பொருளும் சக்தியும் பின்னிப் பிணைந்தவைகள், அதாவது பொருள் அழியும் போது சக்தி பெறப்படும்.
மொத்த சக்தியும் ஒன்றாக பரிணமிக்கும் போது பொருள் திரளலாம்; பொருள் சக்தியாக , சக்தி பெருளாக மாறும் .
இதனிடையே ஒளியின் வேகம் இதில் ஏன் புகுந்தது ?
பொருளை அழித்து சக்தியாக மாற்றும் போது, பெறப்படும் சக்தியின் வேகம் ஒளியின் வேகம் அதாவது 1 நொடிக்கு
( 1 விநாடிக்கு ) | ,86, 282 மைல் வேகம் அல்லது 3 லட்சம் கிமீ வேகம் .
ஒளியின் வேகம் எதன் பொருட்டும் மாறாத தன்மை. எனவே பொருள் அழியும் போதெல்லாம் இந்த மாபெரும் வேகம் சக்திக்கு துணை நின்று அதை இயக்குகிறது.
2
E= MC அதாவது பொருளைக் சக்தியாக மாற்றும் போது கிடைக்கும் சக்தியின் அளவு பொருண்மையை ஒளியின் வேகத்தால் ஒரு முறை பெருக்கி மீண்டும் அவ்வேகத்தில் பெருக்கிய போது, கிடைக்கும் பெருக்கல் பலனாக இருக்கும் .
அணுவின் உள்ளே பூட்டி வைத்திருக்கும் சக்தியின் அளவு நம்பவே முடியாதபடி அவ்வளவு அதிகமானது.
அணுவின் எடையைப் போல் ஒன்பது கோடி மடங்காக உள்ளது.
வெறும் இரண்டு பவுண்ட் எடையுள்ள மாசுள் முழுவதும் சக்தியாக மாற்றப்படக் கூடுமானால் , அந்த பொருள் 2200 கோடி கிலோ வாட் சக்தியை அளிக்கும். இது அமெரிக்கா முழுவதும் ஏறக்குறைய இரண்டு மாதத்திற்குத் தேவையான மின்சார சகதியை அளிக்கும் .
2
E=mc இது, மொத்த பிரபஞ்சத்தின் சூட்சம ஒழுங்கு. இந்த மூன்று எழுத்துகளைக் கொண்டு " மொத்த பிரபஞ்சத்தின் சூட்சம ஒழுங்கு " என்று விஞ்ஞான உலகம் நிரூபித்து பிரகடனம் செய்யும்போது . வல்ல ரஹ்மான் நிச்சயமாக குர் ஆனில் இந்த மூன்று எழுத்தையும் சொல்லி இருப்பான் .
பொருள் , ஒளியின் வேகம் இவைகளால் உண்டாகும் அளப்பரிக்கும் ஆற்றல் குர்ஆனில் எங்கே இவைகள் ஒளிந்திருக்கிறது ? தேடுவோம்.
E = ( அலிப்) என்பது அல்லாஹுத்தஆலா அருளிய குர்ஆனின் ஆற்றலை குறிக்கலாம் .
M = ( லாம்) ஜிப்ரயீல் (அலை) என்ற வானவர் அவர்கள் மூலமாக கொண்டு வந்த குர்ஆனைக் குறிக்கலாம்
C = (மீம்) முஹம்மது நபி (ஸல்) அவர்களை குறிக்கலாம் மேலும்
நபி (ஸல் ) அவர்கள் , ஒளியின்சொரூபத்தில் படைக்கப்பட்டவர்கள் .அவரகளுக்கு நிழல் விழாது. ஒளிக்கு ஏது நிழல்?
அலிப், லாம், மீம் என்ற வசனம் குர்ஆனில் (2 : 01 ) குறிப்பிடப்படுகிறது.
சரி , குர்ஆனின் ஆற்றல்தான் என்ன இறைவா ?
"(நபியே) நீங்கள் கூறுங்கள் : கடல் நீர் அனைத்தும் மையாக இருந்து என் இறைவனின் வாக்கியங்களை (குர்ஆன்) எழுத ஆரம்பித்தால், என் இறைவனின் வாக்கியங்கள் முடிவதற்கு முன்னதாகவே இந்தக் கடல் மை அனைத்தும் செலவாகிவிடும் . அதைப் போல் இன்னொரு பங்கு (கடலைச்) சேர்த்துக் கொண்ட போதிலும் கூட "
திருக்குர்ஆன் ( 18 : 109 )
" பூமியிலுள்ள மரங்கள் அனைத்தும் எழுதுகோலாகவும், கடல்நீரை மையாகவும் வைத்து (அது தீர்ந்து) பின்னும் ஏழு கடல் நீரையும் மையாக வைத்து எழுதிய போதிலும் அல்லாஹ்வுடைய வசனங்கள் (எழுதி) முடிவு பெறாது. நிச்சயமாக அல்லாஹ் (அனைத்தையும் ) மிகைத்தவனும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான் .
திருக்குர்ஆன் ( 31 : 27 )
அணு தன் எடையைப் போல் ஒன்பது கோடி மடங்கு அளப்பரிய சக்தியை ஒளியின்(மின்னல்) வேகத்தில் வெளிப்படுத்தும் .
அட , போங்க .... அருளப்பட்ட குர்ஆனுக்கு அளவிட முடியாத அளப்பரிய ஆற்றலை எதன் மூலம் அளவிட முடியும் ?
" அலிப் , லாம் , மீம்"
முழு குர்ஆனையும் ஒரு குதிரையின் மீது ஏறி முடிப்பதற்குள் ஓதி முடிக்க முடியுமா ?
என்று நபி ( ஸல்) போட்டி வைக்க,
அலீ (ரலி) அவர்கள் , " அலிப், லாம், மீம்
இந்த 3 எழுத்தை சப்தமாக ஓதி முழு குர்ஆனை ஓதியதாக நபி (ஸல்) அவர்கள் வெற்றியை அறிவிக்கிறார்கள்

**Rahmath Rajakumaran**
இந்த விஞ்ஞானத்திற்கே பயந்தால் எப்படி "computing system of Quran in the universe " என்ற அதி நவீன என் விஞ்ஞான ஆய்வை எப்படி நீங்கள் தெரிந்து கொள்ள முடியும் ?
**Rahmath Rajakumaran**
நண்பர்களுக்கு விஞ்ஞானம் புரியவில்லை என்றால் பக்கத்து வீட்டில் M sc physics படிக்கும் மாணவ | மாணவி களிடம் கேட்கவும் .
போனில் விளக்கமளிக்க தயவுசெய்து என்னால் இயலாது.

குர்ஆனின் குணாதிசயங்கள் 16



(காப், ஹா, யா அய்ன், ஸாத்)
சூரா 19 மரியம். இதன் முதல் வசனம் மேற்கண்ட 5 எழுத்துக்களைக் கொண்டு துவங்குகிறது . இந்த சங்கேத எழுத்துக்களுக்கு சிலர் நீர் ,நிலம், நெருப்பு, ஆகாயம்,காற்று என்று 5 பஞ்ச பூதங்களைக் குறிப்பிடுகிறார்கள் சிலர் மெய், வாய், கண், மூக்கு, செவி என்று மனித உடல் உறுப்புகளைப் பற்றி சொல்கிறது என்கின்றனர். இந்த சூராவை அடிக்கடி ஆய்வு செய்ததில் , இரு நபிமார்களின் பிறப்பின் அதிசயத்தை குறிப்பிடுவதால் .பிறப்பின் ரகசியத்தை சூசகமாக சொல்ல வருவதாக எனக்குப் படுகிறது.
படைப்பின் பிறப்புகளை 5 வகையாக பிரிக்கப்படுகிறது.
1) வித்துக்களிலிருந்து புற்பூண்டு , பாசி, செடி, கொடி, மரம் போன்ற அனைத்து தாவரங்களும் பிறக்கின்றன.
2) முட்டையிலிருந்து பறவையினங்கள் பிறக்கின்றன.
3) சினையிலிருந்து மீன் வர்க்கங்கள் பிறக்கின்றன.
4) மக்கிப் போன பொருட்களின் வெப்பத்திலிருந்து புழுக்களும், பூச்சிகளும், கிருமிகளும் பிறக்கின்றன.
5) கருப்பப்பையிலிருந்து மனிதனும், மிருகங்களும் பிறக்கின்றன,
மேற்கண்ட சூராவின் ஆரம்ப எழுத்துக்கள் 5
உயிர்கள் உருவாகுதலில் உடல் உறுப்புகளில் பழுது மற்றும் குறைபாடுகள் இருந்தால் ஜீவராசிகள் தங்களின் சந்ததிகளை உருவாக்க முடியாமல் போகலாம்.
"இறைவா ! நிச்சயமாக என் எலும்புகள் பலவீனமாகி விட்டன. என் தலையும் நரைத்து விட்டது. என்னுடைய மனைவியோ மலடாகி விட்டாள் .நானோ முதுமையின் கடைசி பாகத்தை அடைந்து விட்டேன் .எனக்கு எப்படி சந்ததி
ஏற்படும் ? "
குர்ஆன் (19 : 4---8 )
என்று நபி ஜக்கரிய்யா (அலை) அவர்கள் கேட்க இறைவன் அவருக்கு " யஹ்யா "வை தந்தோம் என்று வாக்குறுதி கொடுக்கும் போது தன் 99-வயதில் தன் உடல் குறைகளைச் சுட்டிக் காட்டினார்கள் நபியவர்கள்.
பொதுவாக ஆண்களுக்கு 50 வயதிற்கு மேல் "டெஸ்டோஸ்டிரான் " என்ற ஹார்மோன் கொஞ்சம் கொஞ்சமாக குறைகிறது. இதனால்
1 ) பசி குறைதல்
2) எடை குறைதல்
3 ) உடல் சோர்வுடைதல்
4 ) ஞாபகக் கவனம் குறைதல்
5) வீரிய ஆற்றல் குறைகிறது.
மேற்கண்ட சூராவின் ஆரம்ப எழுத்துக்கள் 5
நபியவர்கள் குறிப்பிடும் போது எனது ஈஷாஉ ( 98 வயது) மனைவியோ மலடி என்கிறார்கள்
ஒரு பெண் கரு உண்டாகமல் போவதற்கு
1 ) பெண்ணின் சினைமுட்டை உற்பத்தி திறனில் குறைவு
2) மாதவிடாய் கோளாறுகள்
3) கருவகத்தின் குறைபாடுகள்

4) பெலோபிப்யன். டியூப் சிதைத்தோ அல்லது அடைப்போ இருத்தல்
5 ) கருப்பை குறைபாடுகள்
மேற்கண்ட சூராவின் ஆரம்ப எழுத்துக்கள் 5
நபியின் மனைவிக்கு இதில் எந்த மாதிரி குறைபாடுகள் இருந்தன என்பதை அல்லாஹ்வே அறிவான்.
இருந்தாலும் ஜக்கரிய்யா (அலை) அவர்களுக்கு நபி யஹ்யா (அலை) பிறந்தார்கள்.
அடுத்து ஒரு பெண் கர்ப்பம் அடைவதற்கு குறைந்தது 5 தகுதிகள் கண்டிப்பாக இருந்தாக வேண்டும் .
1) பெண் பருவமடைந்து தாய்மைக்கு தயாராக இருக்க வேண்டும்
2) அவளுடன் இணையும் ஆணுக்கு மேற்கண்ட தகுதி இருந்தாக வேண்டும்.
3) மாதவிலக்குப் பிறகு இணைய வேண்டும்
4) ஆணின் விந்தில் போதிய அளவு உயிரணுக்கள் இருந்தாக வேண்டும்
5) பெண்ணின் சினைமுட்டை தகுதியானதாகவும் விந்தை கிறகித்துக் கொள்ளக் கூடியதாகவும் இருக்க வேண்டும் .
மேற்கண்ட சூராவின் ஆரம்ப எழுத்து 5
அன்னை மர்யம் (அலை) அவர்கள் ஆண் துணை இன்றி ஆண் குழந்தை நபி ஈஸா (அலை) அவர்களை பெற்றெடுத்தார்கள்.
நபி யஹ்யா (அலை) அவர்களின் பிறப்பு மருத்துவத்தில் அதிசயம் என்றால்,
நபி ஈஸா (அலை) அவர்களின் பிறப்பு ஆன்மீகத்தில் அதிசயம்.
இந்த இரண்டு நபிமார்களின் பிறப்பு இவைகளையெல்லாம் மீறி தன் வல்லமையை மனித குலத்திற்கு காட்டுவதற்காக இறைவன் நடத்தாட்டுகின்றான்.
இதனை சூசகமாக உணர்த்தவே
( காப் , ஹா ,யா, அய்ன்,ஸாத் )என்று சூராவின் ஆரம்பத்தில் வைத்தானோ என்னவோ ?
அல்லாஹ்வே அறிவான் .இது சிறியோனின் சிற்றறிவுக்கு எட்டிய சிந்தனை .
வல்ல ரஹ்மான் மன்னிக்கட்டும்

குர்ஆனின் குணாதிசயங்கள் 17 04-11-2017



(புனித குர்ஆனும் . நவீன கம்ப்யூட்டரும்)
"ஆல்வின் டாப்ளர் " என்பவரைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். அதுதான் " ப்யூச்சர் ஷாக் " (வருங்கால அதிர்ச்சி) என்ற ஒரு புத்தகத்தை எழுதி, எல்லோரையும் ஒரு வித அதிர்ச்சிக்குள்ளாக்கிப் பணம் பண்ணிக்கொண்டு போனாரே. அவரேதான். அதன் பின் "தர்ட் வேவ் " என்ற புத்தகம் எழுதி இதுவும் விற்பனையில் கோடி கோடியாய் அள்ளிக் கொண்டு போனார் .
" தர்ட் வேவ் " புத்தகத்தில் அவர் மனித சரித்திரத்தில் 3 புரட்சிகளைப் பற்றி சொல்கிறார். விவசாயப் புரட்சி, தொழிற் புரட்சி, அப்புறமா இப்போ நடந்து கொண்டிருக்கிற எலக்ட்ரானிக்ஸ் புரட்சி அதாவது கம்ப்யூட்டர் , செல்போனில் கம்ப்யூட்டர் இந்த புரட்சிக்கு விஞ்ஞானிகள் வைத்த பெயர் "சிலிக்கன் புரட்சி"
இப்போ அமெரிக்காவில் ஒரு தனிமத்தின் அல்லது ரசாயனப் பொருட்களின் ஆதார அடையாளம் மாலிக்யூல். இந்த மாலிக்யூல் அளவுக்கு கம்ப்யூட்டர் பண்ண முடியுமா ? யோசிக்கிறது. அவ்வளவு நுணுக்கமான கம்ப்யூட்டர்கள் செய்ய .

மாலிக்யூல் அளவுக்கு கம்ப்யூட்டர் வந்தால், கான்ஸ்ரா...? கவலையே வேண்டாம் .கான்ஸர் செல்களின் ஆதார இயற்கையை மாற்ற மாலிக்யூல் கம்ப்யூட்டரை உள்ளே அனுப்பி கேன்ஸரின் பொல்லாத தனத்தையெல்லாம் நீக்கி விட்டு வருமாறு வெளியில் இருந்தே ஆணை பிறப்பிக்கலாம்.
அதே நேரத்தில் மனித மூளை மாதிரி ஒரு கம்ப்யூட்டர் மாடல் செய்து , மனிதன் மூளையில் உள்ள அத்தனை ஞாபகங்களையும் திருடி, இந்த மாடலுக்கு மாற்றி விட்டு அந்த மனிதனை வீசின கையும் வெறுங்கையுமா அலையவிடலாம்.
இவ்வளவு மிகச் சிறியதா ஓர் உன்னதமான செயல்பாட்டுடன் மனித சமுதாயத்திற்கு நன்மை பயக்கக் கூடிய மாலிக்யூல் கம்ப்யூட்டர் இதைத் தவிர வேறென்ன இருக்க முடியும் என்று விஞ்ஞானிகள் மார்த்தட்டுகிறார்கள்.
ஏன் திருக்குர்ஆன் இத்தனையும் செய்யாதா ? செய்யும் இதற்கு மேலேயும் செய்யும் .
மனித குல மேன்மைக்கு, உதாரணமாக சூரா யாஸீனை முறைப்படி ஓதி வந்தால் ஜீவனக் கஷ்டம் நீக்குகிறது.
காலையில் பீங்கானில் எழுதிக் கரைத்துக் குடித்தால் ஞாபக சக்தி அதிகரிக்கும். மனம் பரிசுத்தம் அடையும்.
மாலிக்கியுல் கம்ப் செய்யுமா ?
லுஹர் தொழுகைக்கு பின் 41 சூரா
அல்- பத்ஹூ தடவை ஓதினால் எதிரி மீது வெற்றி கொள்ளலாம். மாலிக்கியுல் கம்ப் செய்யுமா ?
அர்-ரஹ்மான் சூராவை மிளகு அல்லது உணவில் ஓதிக் கொடுத்தால் வியாதியிலிருந்து குணம் அடையலாம்.
தண்ணீரில் ஓதி வீட்டின் மூளையில் தெரித்தால் விஷ ஜந்துகள் அணுகாது.
சூரா அல்-வாகிஆ இரவில் ஓதினால் வறுமை நெருங்காது.
சூரா அல்-முல்க் ஓதுபவருக்கு கபரில் கஷ்டம் இருக்காது.
அல்-ஜின்னு சூராவை கைதி ஒதினால் அவன் விரைவில் விடுதலை பெறுவான் .
இதெல்லாம் மாலிக்யுல் கம்ப்யூட்டர் செய்யுமா ? ..........செய்யுமா ?....
இப்படி 114 சூராக்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி நன்மைகள் உண்டு (பார்க்க ஔராதுத் தொகுப்பு - ஆர், பி.எம் கனி )
ஒரு மில்லி மீட்டர் என்பது ஒரு மீட்டரில் 1000 ல் ஒரு பாகம் இன்றைய ஐ.சி மைக்ரான் கணக்கில் இருக்கும் அதன் பிறகு நாம் நானோ மீட்டரில் பேச வேண்டும். ஒரு நானோ மீட்டர் என்பது ஒரு மீட்டரில் நூறு கோடியில் ஒரு பாகம் . இவ்வளவு சின்ன அளவுக்கு குர்ஆன் இயங்குமா ?
இயங்கும் . குர்ஆன் இயங்குகிற அளவுக்கு மாலிக்யுல் கம்ப்யூட்டர் இயங்குமா ? சொல்றேன்.
" கடல்நீர் அனைத்தும் மையாக இருந்து என் இறைவனின் வாக்கியங்கள் முடிவதற்கு முன்னதாகவே இந்தக் கடல் மை அனைத்தும் செவாகி விடும் அதைப் போல் இன்னொரு பங்கு சேர்த்துக் கொண்ட போதிலும் கூட " குர்ஆன் (18:109)
உலகிலுள்ள கடல்கள் அனைத்திலும் உள்ள நீரெல்லாம் மையாக கொண்டு எழுதப்படும் குர்ஆனின் விளக்கம் எவ்வளவு பெரியதாக இருக்கும். இருப்பினும் விளக்கம் முடிவுறாத நிலையில் கடல் நீரெல்லாம் வற்றிவிடும் இருப்பினும் இன்னொரு உலகத்து கடல்களின் நீரையும் மையாகக் கொண்டு தொடர்ந்தாலும் .....
ஒரு பேச்சுக்கு கற்பனை செய்து பாருங்கள் அப்படி விளக்கம் எழுதப்படும் குர்ஆனின் நீளம், அகலம் விஸ்தாரணத்தை உங்களால் கணிக்க முடிகிறதா ? கற்பனை செய்யக்கூட முடியாது. இருந்த போதிலும் அத்தனை பெரிய குர்ஆனை சுருக்கி மிக மிக சுருக்கி இந்த நானோ அளவையும் விட குறைவாக 6666 வசனங்கள் அடங்கிய குர்ஆனை நமக்கு அளித்த இறைவனை எப்படி புகழ்வது ?
மாலிக்கியுல் கம்ப்யூட்டர் இம்மைக்கு உதவுவதாக இருந்தாலும் மறுமைக்கு உதவ முடியுமா ?
குர்ஆன் உதவும். இம்மை, மறுமை ஏன் கபறில் கூட அதை ஓதிய பலனுக்காக நண்பனாய் " பதறாதே நானிருக்கிறேன் " என்று சொல்லும் . மாலிக்யுல் கம்ப்யூட்டர் செய்யுமா ?

**Rahmath Rajakumaran**

"நிச்சயமாக குர்ஆனா கிய இது, உண்மையானதுதான் என்று அவர்களுக்கு தெளிவாகும் வரையில் , நம்முடை அத்தாட்சிகளை உலகத்தின் பல பாகங்களிலும், அவர்களுக்குள்ளாகவும், அதி சீக்கிரத்தில் நாம் அவர்களுக்குக் காண்பிப்போம்.
நபியே..! உமது இறைவன் நிச்சயமாக யாவையும் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பது உமக்கு திருப்தி அளிக்கவில்லையா ?"
குர்ஆன் ( 42.53 )

**Abdur Raheem Muhammad Jaufer**

Alhamdulillah always... இந்தப்பதிவைப் பார்க்கும்போது தற்கலை அப்பா கூறிய ஒரு கூற்றுதான் என் ஞாபகத்துக்கு வருகிறது. "ரப்பு, அந்த நபியைத் தந்து எம்மில் இஸ்லாத்தைத் தந்து அருள்பாலித்மாயே, அதற்கு என் வாழ்நாள் எல்லாம் தலையை கீழே குத்தி, என் கால்களை உயர்த்திப் புகழ்ந்தாலும் போதாது... போதாது"

18. குர்ஆனின் குணாதிசயங்கள்

(இது ஏன் என்று தெரியவில்லை)
திருப்பித் திருப்பி ஓதப்படும் ஏழு வசனங்கள் ( ஸப்அன் மினல் மதானி) என்னும் சிறப்பினைப் பெற்ற "பாத்திஹா " அத்தியாத்திலே , அரபி நெடுங்கணக்கில் இருளெழுத்துக்கள் என்று குறிக்கப்படுகின்ற ஏழு எழுத்துக்களும் (ஃதே ,ஜீம், கே, ஸே, ஷீன்,ளே, ஃபே ) தவிர்க்கப்பட்டுள்ளன.
இது ஏன் என்று தெரியவில்லை.
யாஸீன் சூராவில் "அல்லாஹ்" மூன்று முறையும், "ரஹ்மான் " நான்கு முறையும் இடம்பெற்றுள்ளது . அதே அளவில் அவ்விரு சொற்களும் முல்க் சூராவிலும் இடம்பெற்றுள்ளது .
இது ஏன் என்று தெரியவில்லை
22 வசனங்களைக் கொண்ட முஜாதலா சூராவில் ."அல்லாஹ்" 40 முறை இடம் பெற்றுள்ளது. ஆனால் கமர், ரஹ்மான் , வாதிஆ ஆகிய சூராக்களிலே அச்சொல் ஒரு முறை கூட இடம் பெறவில்லை.
இது ஏன் என்று தெரியவில்லை
"முஹம்மத் " சூராவில் இரண்டைத் தவிர எஞ்சிய 36 வசனங்களும் "மீமில் " முடிவடைகின்றன.
இது ஏன் என்று தெரியவில்லை.
" ஹூத் "சூராவில் ஒரே ஒரு வசனமான ( 11: 48 ) இல் 16 மீம்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.
இது ஏன் என்று தெரியவில்லை
குர்ஆன் என்னும் சொல்லில் உங்கள் முதல் எழுத்தாகிய "காப்", திருமறையின் நான்கு வசனங்களில் வசனத்திற்கு பத்தாக நாற்பது இடம்பெற்றுள்ளது .
இதுவும் ஏன் என்று தெரியவில்லை .
இன்னும் ஏன் என்று தெரியாமல் நிறைய விஷயம் இருக்கிறது .
"அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா ? அல்லது அவர்களுடைய உள்ளங்கள் மீது பூட்டுப் போடப்பட்டுள்ளதா ?
குர்ஆன் ( 47 : 24 )
குர்ஆனின் குணாதிசயங்கள்.19



(pallindrome & Pangram )
ஒரு சொல்லையோ, ஒரு தொடரையோ இடமிருந்து வலமாகப் படித்தாலும், வலமிருந்து இடமாகப் படித்தாலும் ஒரே நிலையில் அமையும் இதனை தமிழில் "மாலை மாற்று " என்றும் ஆங்கிலத்தில் "pallindrome" என்று கூறுவர்
1 )" MADAM IM ADAM "
2) மாடு ஓடுமா
3) விகடகவி
இதே மாதிரி குர்ஆனில் 74 அத்தியாயத்தியமான அல் முத்தஸ்ஸிர்
3-வது வசனத்தில்
" ரப்பக ஃபகப் பபிர்
ربَّكَ فكَبِّر
என்னும் தொடரை எப்படிப் படித்தாலும அப்படியே அமைந்திருக்க காணலாம்
யாஸீன் சூராவின் 40-வது வசனத்தில் அமைந்துள்ள
" குல்லுன் ஃபீ ஃபலக் "
كلّ في فلك
(" சூரியன் சந்திரனை அணுக முடியாது. இரவு பகலை முந்த முடியாது. ஒவ்வொன்றும் தன்னுடைய வட்டவரைக்குள் சுழன்று வருகின்றன" )
குர்ஆன் ( 36 : 40 )

"குல்லுன் ஃபீ ஃபலக் "என்ற சொற்டொரும் சுழல்வதை காணமுடிகிறதா ?
விகடகவி , மாடு ஓடுமா , போன்ற விகடத்திற்காகக் கூறப்படாமல் மிக ஆழ்ந்த பொருளுடன் சூரியனும், சந்திரனும் சுழல்வதையே அதைச் சுட்டிக் காட்டும் குர்ஆன் வார்த்தையும் சுழல்வதாக அமைக்கப்பட்டிருப்பது உங்கள் சிந்தனைக்கு விருந்தாகும் .
இவ்வாறே ஒரு மொழியின் எல்லா எழுத்துக்களையும் ஒரு சொற்றொடரில் அமைத்து காட்டுவதை "pangram " என்பர்
தட்டச்சுப் பயிற்சி பெறுவோருக்கு எல்லா எழுத்துக்களையும் ஒரே சொற்றொடரில் அமைப்பர்.(உ-ம்)
1) " The quick brown fox Jumps over a lazy dog "
2) John quickly extemporizes five wooden boxes
3) The Job required extra pluck and Zeal from every wage owner
இது மாதிரி குர்ஆனில் இரண்டு இடத்தில் அரபி எழுத்துக்கள் 28 ம் பயன்படுத்தப்பட்டுள்ளது.
1) ஆல இம்ரான் அத்தியாயத்தில் "தும்ம அன்ஸல " எனத் தொடங்கும் 154 வது வசனமும் .
2) பத்ஹ் அத்தியாயத்தின் இறுதியில் "முஹம்மதுன் ரஸூலுல்லாஹி " எனத் தொடங்கும் 29 -வது வசனமும் அரபி மொழியின் எழுத்துக்கள் அனைத்தும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

குர்ஆனின் குணாதிசயங்கள் 20



குர்ஆன் உலகில் எப்போதுமே ஓதப்பட்டு கொண்டே இருக்கிறது. உலகில் வேறு எந்த வேதமும் இப்படி எப்போதுமே ஒலித்துக் கொண்டே இருப்பதில்லை.

தொடர்ந்து குர்ஆன் ஒதப்பட்டுக் கொண்டே இருப்பது எப்படி ?

ஒவ்வொரு முஸ்லீமும் சுபுஹு , லுஹர், அஸர், மஃரிப், இஷா என ஐந்து வேளை தினமும் தொழுகிறார்கள் .

விடிவதற்கு முன்பாக தொழுவது சுபுஹு ,

உச்சி வெயில் மேற்கே சாய்ந்ததும் லுஹர் ,

ஒரு பொருளின் (ஈட்டி) நிழல் உருவம் அதனளவு நீளமான பிறகு அஸர்,

சூரியன் அஸ்தமித்த பிறகு மஃக்ரிப்,

கிழக்கு வானத்தின் சிவப்பு முழுமையாக மறைந்த பிறகு இஷா,

ஐவேளை தொழுக்கைக்கான நேரங்கள் . இவற்றை நிமிடக்கணக்கில் சொல்வதானால் இப்படி கூறலாம்

சுபுஹு தொழுகைக்கு 420 நிமிடங்களுக்குப் பின் லுஹர் ,

லுஹர் தொழுகைக்கு 180 நிமிடங்களுக்குப் பின் அஸர்.

அஸர் தொழுகைக்கு 150 நிமிடங்களுக்குப் பின் மஃக்ரிப்

மஃக்ரிப் தொழுகையிலிருந்து 60 நிமிடங்களுக்குப் பின் இஷா.

"தங்கள் தொழுகைகளையும் (காலா காலத்தில் தவறாது) கடைபிடித்து தொழுது வருவார்கள்.

குர்ஆன் ( 23 : 09)

இப்படி ஐவேளை தொழுகைகளும் வெவ்வேறு நேரங்களில் நடக்கின்றன .என்றாலும் உலகை ஒட்டு மொத்தமாகப் பார்க்கும் போது ஐந்து வேளைத் தொழுகையும் அதற்கான பாங்கு அழைப்பும் ஒரே நேரத்தில் நடக்கும் ஆச்சரியமும் மறைமுகமாக நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றது .

இப்போது பூமியின் அமைப்பைச் சற்று உற்று நோக்கிப் பாருங்கள்.அட்ச ரேகை (Latitude ) , தீர்க்க ரேகை (Longitiude ) பிரிக்கப்பட்டிருக்கும் . இந்த பூமியில் தீர்க்க ரேகையில் ஒரு டிகிரி கிழக்கே முன்னேறினால் 4 நிமிடம் கூடுகின்றது. ஒரு டிகிரிமேற்கே முன்னேறினால் 4 நிமிடம் குறைகின்றது.

இதனடிப்படையில் பார்த்தால் இலங்கையில் நண்பர் தீரன்

R.M. Nowsaath

மஃரிப் தொழுகை நடத்திக் கொண்டு இருந்தால் தீர்க்க ரேகைக்கு 25 டிகிரிக்கு மேற்கே உள்ளவர்கள் அஸர் தொழுகைக்காகத் தயராகிக் கொண்டிருக்கிறார்கள்

இதுதான் தொழுகையின் அதி அற்புதம்

மக்காவில் இரவு 9.00 மணிக்கு ஏனைய நாடுகளின் நேரம் பற்றிய அட்டவணை

பிலிப்பைன்ஸ், ஹாங்காங்

மாலை 3.20அஸர்

நியூஸிலாந்து மாலை 6. 50 மஃரிப்

அல் ஜஸாயிர் , ஸன்டோர்க்

மாலை 7.50 இஷா

தஸ்மானியா , விக்டோரியா

காலை 5.22 சுபுஹு

மத்திய பிரேஸில், சிலீ

பகல் 12 . 20 லுஹர்

மக்காவில் இரவு 9.00 மணி என்றால் மேற்கண்ட நாடுகளில் மற்ற வஃக்து தொழுகை நடைபெறுகிறது ,

ஒவ்வொரு தொழுகையிலும் குர்ஆன் ஓதப்படுகிறது

ரஷ்யா நாடு கிழக்கிலிருந்து மேற்காக அமைந்திருப்பதால் அந்நாட்டில் ஐவேளை தொழுகையும் ஒரே நாட்டில் எப்போதும் நடைபெறுகிறது. இது ஒரு அற்புதம்

. குர்ஆனின் குணாதிசயங்கள் . 21

குர்ஆனில் 47 வது அத்தியாயமான "முஹம்மது "சூராவில் இரண்டைத் தவிர எஞ்சிய 36 வசனங்களும் மீமில் முடிவடைகின்றன . இது ஏன் என்று தெரியவில்லை.
இருந்தாலும் "மீம்" என்ற எழுத்துக்கும் பெருமானார் நபி (ஸல் ) அவர்களுக்கும் நிறைய தொடர்பு உண்டு.
"அப்ஜத் " என்கிற அரபி கணக்கிட்டின்படி "மீமின் "எண் நாற்பது. நபி (ஸல்) அவர்களுக்கு நாற்பதாவது வது வயதில் நபிப் பட்டம் அருளப்பட்டது. நாற்பது நிறைவினை தருவது ; நாற்பது புகழ் பொதிந்தது .
அருள்மறையின் தொடக்கமே " அல்ஹம்து .ஹம்து - இறை புகழ் .
மத்ஹு - பிற புகழ் அஹமது - புகழ்பவர்.
அதன் வழித்தோன்றி அண்ணலார் அவர்களைக் குறிப்பன.
ஹாமிது, மஹ்மூது, நபி (ஸல்) அவர்களின் சிறப்புப் பெயர்கள்

முஸ்தபா, முர்தளா, முஜ்தபா, முக்தார், முஸ்த்திக் முதலியன.
முஹம்மது என்னும் திருப்பெயரில் "மீம்" இரட்டிக்கும் .அண்ணலாரைப் பெற்றெடுத்தவர் ஆமீனா . அணைத்து வளர்த்த மதனியார் உம்முல் ஐமன், பாலூட்டி வளர்த்த செவிலித்தாய் ஹலிமா, ஸஃதிய்யா,
அண்ணல் அவர்கள் பிறந்த மாநகர் மக்கா . மறைந்த மாநகர் மதீனா .அவர்கள் விளக்கிய நெறி இஸ்லாம், அறநெறியைப் பின்பற்றுபவர் முஸ்லீம் .நம்பிக்கை மிக்கவர் முஃமின் .
அவர் வணங்குமிடம் மஸ்ஜித் , அங்கு தொழுகைக்கு அழைப்பு விடுப்பவர் "முஅத்தின் ". தொழுகை முன்னின்று நடத்துபவர் " இமாம்" அவர் நிற்கும்மிடம் மிஃராப்
வெள்ளிக்கிழமை சிறப்புத் தொழுகை ஜும்ஆ . அப்போது உரையாற்றும் இடம் மிம்பர் .
ஹிஜ்ரி ஆண்டின் தொடக்கம் முஹர்ரம் .வேதம் இறங்கிய மாதம் ரமலான் .
அண்ணலார் அவர்களின் விண்வெளிப் பயணம்" மிஹ்ராஜ் "
அண்ணலாரை அன்பொழுக இறைவன் அழைக்கும் தொடர்கள் . முஸ்ஸம்மில், முத்ததிர் இவ்வாறாக இச் சொற்களில் இடம்பெற்றுள்ள மகரச் சிறப்பிற்கு எல்லையே இல்லை.
இந்த மாதிரியான மீம்களால் சிறப்புப் பெற்ற அண்ணலம் பெருமானாரின் சூரா முஹம்மதில் 36 மீம்களை இடம் பெறச் செய்தானோ ? யாரறிவர் அவனை அன்றி.

குர்ஆனின் குணாதிசயங்கள் " தொடர் பதிவு 21 உடன் நிறைவு செய்து விட்டு அடுத்த தொடரா அல்லது தனித்தனி பதிவா .... என்ற சிந்தனையில் உள்ளேன்
தொடர்கள் 10-11-2017
1) அண்ணலாரும் அறிவியலும்
2 ) குர் ஆன் கூறும் மலைகள் , நீர் நிலைகள் , காடுகள் போன்ற சுற்றுப்புறச் சூழல் (வரலாறு கலந்த அறிவியல் )
3) ஆன்மீக தொடர்கள்

அண்ணலாரும் அறிவிலும் -1




இறைவன் தன் அடியார்களுக்கு 4 விதமான வேதங்களை தன்னுடைய நபிமார்களுக்கு அனுப்பி வைத்து போதிக்கச் செய்தான்.
இந்த வேதங்கள் அந்தந்த காலகட்டத்தில் மக்கள் எதில் திளைத்திருந்தார்களோ அதன் அடிப்படையில் வேதங்கள் அந்தந்த நபிமார்களுக்கு அனுப்பி வைத்தான்
நபி தாவூத் (அலை) அவர்களின் காலத்தில் இசை மோனோக்கி இருந்தது.. எனவே சபூர் வேதத்தை இசை வடிவில் அருளப்பட்டது. அதனை தாவூத் (அலை ) அவர்கள் ஓதிக் காட்டும் போது அந்த இசைக்கு ஆட்பட்டு மலைகளும் , பறவைகளும் துதி செய்தனஎன்பதாக குர் ஆனில் (21.79) குறிப்பிடுகின்றான்.
நபி மூஸா (அலை) அவர்களின் காலத்தில் மாந்திரீகம் மேனோக்கி இருந்தது .எனவேதான் பிர்அவ்ன் மாந்திரிகர்களை அழைத்து வந்து நபி மூஸா (அலை) அவர்களுடன் போட்டியிடச் செய்தான் .
நபி ஈஸா (அலை) அவர்களின் காலத்தில் மருந்துவம் மேனோக்கி இருந்தது. மக்களில் நிறைய பேர் மருத்துவர்களாக இருந்தனர் ஆனாலும் வெண்குஷ்டம் , முடவர்கள், குருடர்கள் இவர்களை குணப்படுத்த முடியவில்லை. நபி ஈஸா (அலை) அவர்கள் குணப்படுத்திக் காட்டினார்கள்.
நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றும் கூட்டத்தார்கள் அறிவியலில் மேனோக்கி இருக்கிற இக்காலக் கட்டத்தில் அறிவியலின் உச்சமான செயல்பாட்டை எழுந்து படிக்கத் தெரியாத உம்மி நபியவர்களிடம் செய்து காட்டச்

சொன்னார்கள். சந்திரனை பிளக்கக் கேட்டார்கள் நபியவர்களும் சந்திரனை பிளந்து காட்டினர்கள்
சந்திரனும் பிளந்து விட்டது .குர்ஆன் (54 : 01)
நபியவர்களை விண்வெளிக்கு இறைவன் அழைத்து வரச் செய்து , பல அற்புதங்களை காட்டினான்.
குர்ஆன் 17 : 01
அதே சமயம் நபியவர்களின் மக்களை நோக்கி , "மனித, ஜின் கூட்டத்தார்களே..! நீங்கள் வானங்கள் .பூமியின் எல்லையைக் கடந்து சென்று விட உங்களால் கூடுமாயின் அவ்வாறு சென்று விடுங்கள் ஆயினும் மிகப் பெரும் தக்க பலத்தைக் கொண்டே தவிர நீங்கள்செல்லமுடியாது".
குர்ஆன். ( 55 : 33)
விண்வெளிக்கு பறந்து செல்லவும் அதே சமயம் தக்க பலத்தைக் குறித்து அறிவுறுத்தமும் செய்கிறான்.
விஞ்ஞானிகள் வியாழன் கிரகத்திற்கு பயோனியர் (pioneer ) விண்கலத்தை அனுப்பினார்கள்
சந்திரனில் மனிதன் காலடியைப் பதித்தான் .சந்திரயேன் விண்கலத்தைக் கொண்டு சந்திரனில் தண்ணீரைக் கண்டான்.செவ்வாய் கிரகத்திற்கு மாங்கல்யானை அனுப்பி வைத்தான்.
மற்றும் செயற்கை கோள்களை விண்ணில் அனுப்பி பூமியை உள்ளங்கையிலும் , பூமியின் எல்லை புறங்களை விரல் நுனியிலும் அதி
நவீன விஞ்ஞானத்தால் வருடச் செய்தான் .
அதே அதி நவீன விஞ்ஞானத்தால் மனிதன் மருத்துவத்தில் மாற்றம் கொண்டு வந்தான் .
தகவல்தொடர்பு முதல் கணனி உட்பட அத்தனையிலும் அகல கால் பதித்தான் பறவையை விடவும் பல ஆயிரம் தூரங்களை பறந்து களிப்புற்றான் .
இப்படி எத்தனையோ அருள்களை மனிதன் சுகிப்பதற்கு அதி நவீன விஞ்ஞானத்தை சாதகமாக்கினான்.
அத்தனை விஞ்ஞான துறையும் அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களுடைய சமுதாயத்திற்கு வழங்கினான் .
"நபியே ... உங்களை உலகத்தாருக்கு ஓர் அருளாகவேயன்றி நாம் அனுப்பவில்லை குர்ஆன் (21 : 107)
அருள் என்பதில் கூட மனிதன் சுகிக்கும் அத்தனை விஞ்ஞான சாதனங்களின் பயன்பாட்டையும் சேர்த்துதான்

**Rahmath Rajakumaran**
நபி (ஸல்) அவர்களின் மிஹ்ராஜ் என்னும் விண்வெளிப் பயணம் மனிதகுலத்தின் விஞ்ஞானிகளுக்கு வானை ஏறிட்டுப் பார்க்க வைத்தது.
மற்ற நபிமார்களின் சமுதாயத்தவர்களைக் காட்டிலும் நபி (ஸல்) அவர்களின் சமுதாயத்தவர்களே அதிகமாக விண்வெளியை பயன்படுத்த ஆரம்பித்திருக்கிறார்கள் இதற்கெல்லாம் முன்னோடியான சம்பவம் மிஹ்ராஜ் மட்டுமே என்பதை விஞ்ஞானிகள் ஏற்றுக் கொண்டார்கள் என்பதற்குரிய அத்தாட்சி இதுவரை உலகின் எந்த விஞ்ஞானியும் மிஹ்ராஜ் பயணத்தைப் பற்றி சந்தேகித்து ஒரு வார்த்தைக்கூட சொன்னதில்லை .இது எவ்வளவு பெரிய அற்புதம்

**Rahmath Rajakumaran**
இறைவன் நபி (ஸல்) அவர்களை அறிமுகப்படுத்தும் போது " எழுதப் படிக்கத் தெரியாத உம்மி நபி" என்கிறான்.
நபி (ஸல்) அவர்கள் தன்னை அறிமுகம் படுத்தும் போது, "நான் அறிவின் பட்டணமாக இருக்கிறேன் என்கிறார்கள்
இரண்டையும் உங்களால் உள்வாங்கி சிந்திக்க முடிகிறதா ?

அண்ணலாரும் அறிவியலும் 2
(வருஷிக்கப்பட்ட இன்னொரு பூமி)



இப்பிரபஞ்சத்தில் பூமியும் நம்மைத் தவிர வேற்று கிரகதத்தில் உயிரினங்களோ மனிதர்களோ இருக்கிறார்களா ?அவ்வாறு இருந்தால் நம்மை அவர்கள் பார்த்திருக்கிறார்களா ? நாம்தான் அவர்களைப் பார்க்க முடியுமா ?
... இப்படி எண்ணற்ற கேள்விகள் நவீன விஞ்ஞானத்தின் வளர்ச்சியால் கேட்கவும், தேடவும் செய்கிறோம்.

பறக்கும் தட்டுகள் (U. F. O ) வேற்று கிரகங்களில் இருந்து பூமிக்கு வந்து போனதாகவும், பல நாடுகளில் இச்செய்திகள் பலமாக பதியப்பட்டுள்ளது.
வேற்று கிரக வாசிகள் பூமியில் எதற்காக வரவேண்டும் ? அவர்களின் நோக்கம் என்ன என்பது பற்றி நிறைய பேர்கள் புத்தகம் புத்தகமாக எழுதி இருக்கிறார்களேத் தவிர ஆனால் இதுவரை "இதோ வேற்று கிரக வாசி இவர்தான் "என்று யாருமே நிரூபிக்கவில்லை . என்றாலும் அவர்களின் பல போட்டோக்கள் போலியானது என்று ஒதுக்கினாலும் சில போட்டோக்கள் தேர்ந்த விஞ்ஞானிகளையும் . கேமரா நிபுணர்களையும் தலை சுற்ற வைக்கிறது.
குர்ஆனில் சில வசனங்கள் சூசகமாக இது பற்றி விவரிக்க மாதிரியான நிறைய வசனங்கள் இருக்கின்றன.
"பூமிக்குள் பதிகின்றவைகளும் , அதில் இருந்து வெளிப்படும் இவைகளையும், வானத்தில் இருந்து இறங்குபவைகளையும் , அதன் பக்கம் ஏறுகின்றவைகளையும் அவன் நன்கறிவான். " குர்ஆன் (34 : 02)
இது விஷயமாக நபி (ஸல்) அவர்கள்
" நீங்கள் அறியாததையும் அவன் சிருஷ்டிப்பான் " குர்ஆன் ( 16 : 08) என்ற குர்ஆன் வசனத்திற்கு விளக்கமளிக்கையில் " இவ்வுலகைப் பார்க்கிலும் 30 மடங்கு பெரியதாக உள்ள வெண்மையான பூமியை அல்லாஹ் சிருஷ்டித்துள்ளான் .நம் பூமியில் பச்சை நிறமும் நீல நிறமும் அதிகமாக இருப்பது போல் அக்கிரகம் வெண்மை நிரம்பி இருக்கிறது.அதில் இறைவனது சிருஷ்டிகளான மக்கள் நிரம்பி இருக்கின்றனர் .அக்கிரக மக்கள் அல்லாஹுத்தலாவுக்கு ஒரு கணப்பொழுதேனும் மாறு செய்வதே இல்லை" என்று கூறினார்கள் .
அப்பொழுது நபித்தோழர்கள்
"அம்மக்கள் ஆதமுடைய மக்களைச் சேர்ந்தவர்களா-...?"
"ஆதமை அல்லாஹ் படைத்திருக்கிறான் என்பதை அவர்கள் அறிய மாட்டார்கள் என்றார்கள் நபிகளார் (ஸல்) அவர்கள்.
"அவர்களில் இப்லீஸ் எங்கே...? என்று கேட்டனர் .
"அல்லாஹ் இப்பீஸ் - யை சிருஷ்டித்திருக்கிறான் என்பதையும் அம்மக்கள் அறிய மாட்டார்கள். என்றார்கள்.
ஆதாரம் : அல் புஸ்தான்
பூமிக்கு மிக அருகிலேயே பூமியை விட 30 மடங்கு பெரிய புதிய பூமி இருப்பதாக அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.
கலிபோர்னியா பல்கலைக்கழக விஞ்ஞானி , ஸ்டீவன் வாட் கூறுகையில் தண்ணீர், காற்று கொண்ட மற்றொரு பூமி இருக்கிறது. அதி நவீன தொலை நோக்கியில் பார்த்ததில் வளி மண்டலத்தில் சிறிய நட்சத்திரம் போல் அது சுற்றி வருவது கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் அருகில் சென்றால் நம் பூமியை விட 30 மடங்கு பெரியதாக இருக்கும்.
அதில் உயிரினங்கள் வசிக்க 100 சதவீகித வாய்ப்பு இருக்கிறது என்றார்.
கலிபோர்னியா பல்கலைக்கழக வாஷிங்டன் கார்னிஜி ஆராய்ச்சி கழக விஞ்ஞானிகள் இது தொடர்பான ஆராய்ச்சியில் தொடர்ந்து ஈடுபட்டுள்ளனர்
ஆதாரம் :கலைக்கதிர் ஜூலை 2012 பக்கம் 55
("மனிதர்களே...! இவ்வாறு நாம் உங்களை மட்டுமா படைத்திருக்கிறோம்.?) நிச்சயமாக உங்களுக்கு மேலுள்ள ஏழு வானங்களையும் நாமே படைத்தோம். (அவை ஒவ்வொன்றிலும் உங்களைப் போன்று எத்தனையோ படைப்புகள் இருக்கின்றன. இவைகளைப் படைத்து இருப்பதுடன்) இப் படைப்புக(ளுக்கு வேண்டியவைக )ளைப் பற்றி நாம் பராமுகமாகவும் இருக்கவில்லை.
குர்ஆன் (23 : 17) ஆ கா அப்துல் ஹமீது பாகவி மொழி பெயர்ப்பு

அண்ணலாரும் அறிவியலும் 3

மூன்று வினாக்கள்



அப்துல்லாஹ் பின் ஸலாம் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதற்கு முன்பாக மதீனாவிலுள்ள யூதர்களின் தலைவராக இருந்தார்.
நபி மூஸா (அலை) அவர்களுக்கு அருளப்பெற்ற தவ்ராத் வேதத்தைக் கற்றுணர்ந்த மாபெரும் வேத அறிஞராகவும், மேதையாகவும் இருந்தார்.
இவர் மனதில் தோன்றிய மூன்று வினாக்களுக்கு தவ்ராத்தில் தேடியும் பதில் கிடைக்காமல் அவ்வினாக்களுக்கு அவரின் மனதில் துருத்திக் கொண்டே இருந்தது.
நபி (ஸல்) அவர்கள் மதீனா வந்ததும் அநேகர் இஸ்லாத்தை தழுவினாலும் இவர் தனக்குள்ள 3 கேள்விகளுக்கு நபியவர்கள் பதில் சொல்லாத வரை இஸ்லாத்தை ஏற்க இயலாது என்ற உறுதியுடன் இருந்தார்.
நபியவர்களைச் சந்தித்தித்து .. .
1) உலகம் அழிவதற்கு முதல் அடையாளம் எது ?
2) உலகில் பிறக்கும் குழந்தைகளில் சிலர் தந்தையைப் போலவும் , சிலர் தாயைப் போலவும் உருவாவதற்கு என்ன காரணம் ?
3) சுவனவாசிகளுக்கு முதல் உணவு எது கொடுக்கப்படும் ?
நபி (ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள்
1 ) உலகம் அழிவதற்கு முதல் அடையாளம் கீழைநாட்டில் தோன்றுகின்ற நெருப்பு மேல் நாடு வரை பரவி பின் உலகம் முழுவதும் பரவி உலகம் அழியும்.
( விஞ்ஞான விளக்கம் அடுத்த பதிவில்)
2)சில குழந்தைகள் தந்தையைப் போலவும், சில குழந்தைகள் தாயைப் போலவும் உருவாவதற்குக் காரணம் கணவன் மனைவி உடலுறவின் போது கணவனின் விந்து மனைவியின் கர்ப்பப்பையில் முந்திச் சென்றால் குழந்தை தந்தையைப் போலவும் , மனைவியின் இந்திரியம் முந்திச் சென்றால் குழந்தை தாயைப் போலவும் பிறக்கும் என்றார்கள் நபி (ஸல்) அவர்கள்
(விஞ்ஞான விளக்கம் அடுத்த பதிவில் )
3) சுவனவாசிகளுக்கு கொடுக்கப்படும் முதல் உணவு மீனின் சினை என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் .
( விஞ்ஞான விளக்கம் அடுத்தப் பதிவில்)
இத்தனை தெளிவான பதிலால் உடனே அப்துல்லாஹ் பின் ஸலாம் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றார்கள்.
நபி (ஸல்) அவர்களின் பதிலில் உள்ள விஞ்ஞானத்தை இன்ஷா அல்லாஹ் அடுத்த பதிவில் சற்று விளக்கமாக தருகிறேன்.

**Rahmath Rajakumaran**

இஸ்லாம் ஆன்மீகத்தின் அடிப்படையில் மட்டுமே கட்டி எழுப்பிய கோட்டை அல்ல , அது அறிவியல் விதிகளின் அடிப்படையிலும் ஆழமாக அடித்தளமிட்டு
உருவாக்கிய கோட்டை
அதை செவ்வனேவே செயலாற்ற வந்த
நபிதான் அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் .
அறிவியலுக்காக ஒரு நபி வந்திருக்கிறார்கள் என்றால் அது நபி (ஸல் ) அவர்தாம்
எப்படி நபி மூஸா (அலை) செய்ததெல்லாம் நைல் நதி இரத்தமானது
தொட்ட இடமெல்லாம் வெட்டுக்கிளி அப்புறமாக தவளை , பேன் .. என்று அடுக்காக செய்ததெல்லாம் பிர்அவ்னால் மாந்திரீகமாகவே மதிக்கப்பட்டு இறுதியில் செங்கடலை பிளந்ததும் அவனுக்கு மாந்திரீகமாகவே

பட்டது.
அதைப் போலவே நபி ( ஸல்) அவர்கள் செய்ததும் , செய்யச் சொன்ன அத்தனை காரியங்களில் ஆன்மிகத்தைக் காட்டிலும் அறிவியல் இருந்தது
சிறுநீர் கழித்த பின் டேலாக்கட்டி பிடிக்கச் சொன்னதிலும். சாப்பிட்ட பின் விரல்களைச் சூப்பச் சொன்னது , வலது புறத்தை முற்படுத்த சொன்னதிலும் .... இப்படி செய்யச் சொன்ன எத்தனையோ காரியங்களில் ஆன்மீகத்தைக் காட்டிலும் அறிவியல் மிகைத்திருந்தது
ஆகையால்தான் நபிகளாருக்கு இறக்கியருளப்பட்ட குர்ஆனில் 700 வசனங்களுக்கும் மேலே நேரடியான விஞ்ஞானத்தையும் 500 வசனங்களுக்கும் மேலே மறைமுகமான விஞ்ஞானத்தையும் (மறைமுக விஞ்ஞானம் என்பது இதுவரை விஞ்ஞானம் எட்டாத குர்ஆன் கூறும் விஞ்ஞான கருக்கோள்கள்)ஆக 6666 வசனங்களில் 1200 வசனங்களுக்கும் மேலாக குர்ஆன் விஞ்ஞானத்தையே போதிக்கிறது.
இதுவரை அருளப்பட்ட வேதங்களில் அதிகமான விஞ்ஞானத்தை குர்ஆன் மட்டுமே போதிக்கிறது
ஆகையால் அண்ணலாருக்கும் அறிவியலுக்கும் எப்போதுமே தொடர்பு உண்டு
போனில் விளக்கம் கேட்ட நண்பருக்காக.

அண்ணலாரும் அறிவியலும்
( 3-வது பதிவின் தொடர் )




1) உலகம் அழிவதற்கு முதல் அடையாளம் எது?
"கீழை நாட்டில் தோன்கிற நெருப்பு மேல் நாடு வரை பரவி பின் உலகம் அழியும் "
- நபி (ஸல்) அவர்கள்
தொழிற்சாலைகளில் ஏராளமான கரியை எரித்து கார்பன் டை ஆக்சைடை அதிகப்படுத்தினோம்.
கச்சா எண்ணெய்களை லாரி கார்களில் ஊற்றி கார்பன் டை ஆக்சைடை உருவாக்கி வானுக்கு அனுப்பினோம்.
நாமும் நம் உணவும் ஏஸியில் குளிரினோம் அதிலிருந்து வெளியேறிய வாயுக்களால் வானத்து போர்வையான ஓஸோன் படலத்தை கிழித்தோம்
இவைகளால் மழை மறுத்தது இளவேனிற் கொதித்தது . நீர் வற்றி, நிலம் நகர்ந்து , கடல் உள்வாங்கி, பனி உருகி, நதியில் வெள்ளம் பெருகி, கடல் மட்டம் உயர்ந்து, நிலம் தாழ்ந்து , நீர் உயர்ந்து உலகம் அழிய நாமே காரணமானோம்.
"மனிதர்களின் கைகள் தேடிக் கொண்டதன் காரணமாகக் கடலிலும் தரையிலும் அழிவு வேலைகள் அதிகம் பரவி விட்டன" குர்ஆன் (30 : 41)
2) சில குழந்தைகள் தந்தையைப் போலவும் சில தாயைப் போலவும் உருவாவதற்குக் காரணம் கணவன் மனைவி உடலுறவின் போது யாருடைய விந்து, இந்திரியம் முந்துதோ அவர்களின் சாயலில் குழந்தை பிறக்கும்.
நபி(ஸல் ) அவர்கள்
கணவன் வெளிப்படுத்தும் விந்துவில் அவனின் அங்க அடையாள குறிப்பும் அவனுடைய தாய் தந்தையர் மூதாதையரின் அங்க அடையாள குறிப்பும் இடம் பெற்றிருக்கும். இதையைப் போல மனைவி வெளிப்படுத்தும் இந்திரியத்திலும் அவளுடைய மற்றும் அவளின் மூதாதையரின் அங்க அடையாளக் குறிப்பும் இருக்கும்.
உதாரணமாக மனைவியின் கண் சாம்பல் நிறத்தில் இருந்தால் பிறக்கும் குழந்தையின் கண் சாம்பல் நிறத்தில் இருக்கலாம் .அல்லது இல்லாது போனால் பிறந்த குழந்தையின் மரபணுவில் "கண் நிறம் சாம்பல்

"என்ற செய்தி கண்டிப்பாக பதிவாகி இருக்கும் . இரண்டு தலைமுறை தாண்டி அவளின் பேரக்குழந்தையின் கண் சாம்பல் நிறத்தில் இருக்கலாம் .
இதை விஞ்ஞானம் ஏற்கப்பட்ட மரபணு , நிராகரிக்கப்பட்ட மரபணு என்று குறிப்பிடுகிறது இதைதான் நபி (ஸல்) ரொம்ப எளிமையான யாருடைய விந்தணு முந்துதோ அவர்களின் சாயலில் குழந்தை பிறக்கும்
"நாம்தாம் அவர்களைப் படைத்தோம். நாம்தாம் அவர்களுடைய அமைப்பையும் உறுதிப்படுத்தினோம் . ....."
குர்ஆன் ( 76 : 28)
3) சுவனத்தின் முதல் உணவு மீனின் சினை . நபி(ஸல்) அவர்கள்
காரணம் மீனின் சினையில் ஒமேகா-3 என்ற கொழுப்பு அமிலம் மற்றும் டொகோசா ஹெக்சானிக் போன்ற அமிலங்கள் உள்ளன.
இவைகள் ஞாபக சக்தியை அதிகமாக்கும் மதிநுட்பமான விஷயங்களில் மிகத் தெளிவு ஏற்படும் என்பதை லண்டன் பல்கலை கழகத்தினர் கண்டுள்ளனர்
சுவனவாசிகளுக்கு மீன் சினை கொடுப்பதற்கு காரணம் மரணிப்பதற்கு முன் அவர்கள் உலகில் வாழ்ந்த வாழ்க்கை மறந்து போகிறது மீன் சினையிலுள்ள ஒமேகா-3 போன்ற அமிலங்கள் நினைவூட்டலாம் உதாரணமாக
"நூறு ஆண்டுகள் வரையில் மாணத்திருக்கச் செய்து பின்னர் உஜைரை உயிர்ப்பித்து, " இந் நிலையில் நீங்கள் எவ்வளவு காலம் இருந்தீர்கள் எனக் கேட்க, அவர். "ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் இருந்தேன் "
குர்ஆன் (2 : 259)
"விசாரணைக் காலம் நிலைபெறும் நாளில் குற்றவாளிகள் தாங்கள் இவ்வுலகில் ஒரு நாழிகையைத் தவிர அதிக நாட்கள் தங்கி இருக்கவில்லை" என்று சத்தியம் செய்வார்கள்
குர்ஆன் ( 30 : 55)
சுவனவாசிகளானாலும் சரி, நரகவாசிகளானாலும் சரி அவர்களின் பூலோக வாழ்க்கை மரணத்திற்குப் பிறகு மறந்தே போகிறது. அதனை ஞாபகமூட்டவே மீன் சினை சுவனத்தில் கொடுக்கப்படலாம் .

**Rahmath Rajakumaran**

"அண்ணலாரும் அறிவியலும்" தொடர் உங்களுக்குப் பிடித்திருக்கிறதா ?
அடுத்தடுத்து சொல்லப் போகும் விஞ்ஞான தத்துவங்கள் அதிநவீன விஞ்ஞானத்தின் அடிப்படைத் தத்துவங்கள் இதை எப்படி பேஸ்புக்கில் சொல்லப் போகிறோம் என்கிற அகற்ச்சியாக உள்ளது . பைபர் ஆப்டிகல்ஸ் , ஆப்டிகல் இல்லுஷன் . டைம் டிராவல் , நான்கு ஐந்து பரிமாணங்கள் (4 and 5 டைமன்ஷன் ) போன்ற அதி நவீன விஞ்ஞானத்தின் அடிப்படைத் தத்துவத்தை மிக எளிதாக அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் செய்து காட்டுகிறார்கள் .
கல்லூரி மாணவர்கள் மத்தியில் பேச எனக்கு
இலவாக இருந்தது கை தட்டினார்கள் பாராட்டினார்கள் ஆனால் அதைக் கேட்ட ஆலீம்கள் ஹதீஸ்களை இப்படியெல்லாம் கூட ஆய்வு செய்யலாமா ... என்ற கேட்ட கேள்வியில் உள்ளுர எனக்கு பயமும் இருந்தது.
அப்புறம் என்ன....... ஆய்வுக் கட்டுரை எழுதி முட்டை கட்டி மூலையில் வைத்ததை இப்போ FB சொல்லாமா என்ற சந்தேக எண்ணத்துடன் நாளை முதல் இன்ஷா அல்லாஹ் தொடர்கிறேன் என் ஆய்வு எப்போதுமே குர்ஆனுக்கும் சுன்னாமுறைக்கும் உட்பட்டே இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை



அல்குர்ஆனின் அறிவியல் அத்தாட்சிகள்

குர்ஆனின் குணாதியசங்கள்

(மாமறையும் மனித மனமும்)

ரஹ்மத் ராஜகுமாரன்
செல் 944 344 6903

"The Scientific Edge"-Narlikar J.V. எழுதிய புத்தகத்தில் விஞ்ஞானத்தின் விண்ணை முட்டும் வித்தைகள் விவரமாக விளக்கப்படுகிறது.

"The Ascent of man"-Bronowski எழுதிய புத்தகத்தில் ஆதிகால மனிதர்கள் தொட்டு மனிதகுல பூர்வாசிரம் பற்றிய வரலாறு பக்கத்திற்கு பக்கம் மனிதர்கள்...மனிதர்கள்... என்று பேசப்படுகிறது.

இதே மாதிரி.........

(குர்ஆன் : 35 : 12)

"அவன்தான் ஒரு துளி தண்ணீரிலிருந்து மனிதனை உற்பத்தி செய்கிறான். பின்னர் அவருக்குச் சந்ததிகளையும் சம்பந்திகளையும் ஆக்குகின்றான்." (குர்ஆன் : 25 : 54)

மேற்கண்ட இரு வசனங்களில் (25 : 53), (25 : 54) இரு வெவ்வேறு கடல்கள்; அவற்றிற்கு இடையே ...

நவம்பர் 2017 19 ரஹ்மத்

**Rahmath Rajakumaran** போன மாத ரஹ்மத் மாத இதழில் வெளிவந்த "குர்ஆனின் குணாதிசயங்கள் " கட்டுரையில் எல்லா பின்னூட்டத்தையும் சேர்த்தே பதிவு செய்திருக்கிறார்கள்

அதில் அஸ்ரஃப் தேவா வின் பின்னூட்டம் அதிகம்

.அண்ணலாரும் அறிவியலும் 5




(என்னைத் தெரியுமா ?)
இன்றிலிருந்து 40 வருடத்திற்கு முன்பாக இரும்புக்கை மாயாவி என்கிற முத்து காமிக்ஸ் புக் விரும்பிப் படிப்பேன். அதில் மாயாவி தன் ஒற்றை இரும்புக் கரத்தால் மின்சாரத்தைத் தொட்டதும் இரும்புக்கையைத் தவிர உடலெல்லாம் மறைந்து போகிறது . இது என் 17 வயதில் இந்த சாகஸத்தை நினைத்து நினைத்துப் பார்ப்பேன் .
2000 ல் Hallow man என்கிற ஆங்கில சினிமா , பயத்தோடு பல கற்பனையை துவக்கி விட்டது எனக்கு .
அமெரிக்க - ஜெர்மன் அறிவியல் புனைக்கதையின் புதிய சாகஸம் இந்த சினிமா படம் .
மேலேயுள்ள Hallow man சினிமாவுக்கு ஊற்றுக்கண்ணாக கற்பனைக் கதை களம் வகுத்துக் கொடுத்த Ralph Ellison எழுதிய" invisible man " என்ற 1952 ல் வெளியான நாவல் . ரொம்பவும் அருமையான நாவல் .
ஆக, மனிதன் தன்னை மறைத்துக் கொள்வதில் ஆர்வப்படுகிறான் .இதில் அவனுக்குப் பல சௌகரியங்கள் இருப்பதாகக் நிறைய கற்பனையும் செய்கிறான்.
இப்படி மறைத்துக் கொள்ள வேண்டி , பல விஞ்ஞான துறைகளும் தங்கள் துறை வளர்ச்சிக்கு " மறைதல் " என்பது அத்தியாசிமாக அவசியப்படுகிறது. இதனால் மறைதல் விஷயத்தில் விஞ்ஞானம் முனைப்புடன் ஆய்வு செய்தது.
இதன் தேவையை முன்னிறுத்தி டோக்கியோ பல்கலைகழகத்தைச் சார்ந்த "சுசுமா" என்ற ஜப்பானியர் ஒருவிதமான அங்கியைக் கண்டு பிடித்துள்ளார் .அந்த அங்கியை அணிந்ததும் உடம்பு மறைந்து விடுகிற மாதிரி ஒரு மாயத் தோற்றத்தை ஏற்படுத்துகிறது. இதற்கு optical illusion என்கிற விஞ்ஞான யுக்தியைப் பயன்படுத்துகிறார்.
அதாவது காரின் வியூ ஃபைன்டர் என்ற கண்ணாடி உதவியுடன் இதை சாதித்திருக்கிறார் .இந்த மாய அங்கி அணிந்ததும் அணிந்திருப்பவரின் உடல் மறைந்து விடுகிறது .இதன் வழியாக பின்புறம் இருக்கும் காட்சிகள் முன்புறம் இருந்து பார்பவர்களுக்குத் தெரிகிறது .
இந்த ஆப்டிக்கல் இல்லியூஷனைப் பயன்படுத்தி மருத்துவ துறையில் பெரும் மாற்றம் வர இருக்கிறது.
ஆப்ரேஷன் செய்யும்போது சர்ஜியன்களுக்கு அவர்கள் செய்யும் ஆப்ரேஷனை அவர்களது கைகளே மறைத்து விடுகின்றன . இதனால் ஆப்ரேஷனில் முழு திருப்தி ஏற்படுவதில்லை. தங்கள் கைகள், கருவிகள் எல்லாம் மறைந்து போய் விட்டால் ஆப்ரேஷன் செய்கிற இடம் தெளிவாக தெரிந்தால், எவ்வளவு நல்லதாக இருக்கும்.
அடுத்து , விமானம் அவசர அவசர தரையிறங்க "லேண்டிங் " செய்ய முயலும் போது .விமானிகளுக்கு "காக்பிட் "டின் கீழ் பகுதி கண்ணாடிபோல் இருந்தால் வசதியாக இருக்கும் .காக்பிட் சரியாக தெரியாததால்தான் லேண்டிங் செய்யும் போது நிறைய விமானம் விபத்துக்குள்ளாகிறது . எனவே ஏரோனாட்டிக் துறை மறைதல் விஷயத்தை விரும்புகிறது .
போதும் விஞ்ஞானம் .
" அழியட்டும் அபூலஹபின் இரு கரங்களும் அவனுமே நாசமாகஅழியட்டும் " குர்ஆன் (111 : 1 - 5)
என்ற வசனம் இறங்கியதும் மக்கமா நகர் பரப்பரப்பாகியது. அபூலஹபின் மனைவி "உம்முல் ஜமீலுக்கு " விஷயம் தெரிய வருகிறது .உடனே இவள் கூர்மையான கல்லை எடுத்துக் கொண்டு கஃபாவிற்குள் வருகிறாள் .அங்கே ரசூல் (ஸல்) அவர்களும் அபூபக்கர் ( ரலி) பக்கத்தில் பக்கத்தில் இருக்கிறார்கள்.
அபூபக்கர் (ரலி) அவர்கள் :
"யா ரசூல்லாஹ் .... இதோ உம்மு ஜமீல் கையில் கூர்மையாக கல்லைக் கொண்டு வருகிறாளே ... தங்களைப் பார்த்து விடப் போகிறாள். " என்று கூறிய போது , என்னை அவளால் காண முடியாது என்று கூறி,

"நபியே... நீர் குர்ஆனை ஓத ஆரம்பித்தால் , உங்களுக்கும் , மறுமையை நம்பாதவர்களுக்கும் இடையில் தடுத்துக் கொள்ளக் கூடிய ஒரு திரையை நாம் ஆக்கி விடுவோம் "
குர்ஆன் ( 17 : 45) என்ற வசனத்தை நபியவர்கள் ஓதுகிறார்கள் .
"எங்கே உமது தோழர் முஹம்மது ?" என்று அவள் கேட்க, "அபூ குஹாபா மகன் அபூபக்கரைக் காட்டிலும் அல்லாஹ்வே அவர்களைப் பார்த்த வண்ணம் இருக்கிறான் " என்றார்கள் அபூபக்கர் (ரலி) அவர்கள்
"நான் கோபத்துடன் தாக்க வந்ததை அவரிடம் சொல்லி வையும் " என்றாள் உம்மு ஜமீல் .
அபூபக்கர் (ரலி) அவர்களின் கண்களுக்கு நபி (ஸல்) அவர்கள் தெரிந்தாலும் உம்மு ஜமீல் கண்களுக்குத் தெரியவில்லை.
ஆப்டிக்கல் இல்லியூஷன் உடலை மறைத்து ஒளி ஊடுருவி அப்புறமாக உள்ள காட்சி தெரிகிறது . இந்த இளந் துறை இன்னும் வளர்ச்சி அடைந்து, இரும்புக்கை மாயாவி மாதிரியோ , Hallow man மாதிரியோ, Invisible man மாதிரியோ மறைந்தாலும் , நபி (ஸல் ) அவர்கள் மாதிரி முழுமையாக எப்போதுமே மறைய முடியாது.
அறிவியலுக்குக் கூட அழகிய முன்மாதிரி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா (ஸல்) அவர்களிடம் மட்டுமே உள்ளது.

அண்ணலாரும் அறிவியலும் 6



( பிறைநிலா....... அது பிளந்த நிலா )
1969 - ஜூலை 21 பூமியில் அமெரிக்க ஹூஸ்டன் விண்வெளி நிலையத்தில் எல்லா விஞ்ஞானிகளும் பரபரப்புடன் இருக்க,
அங்கே, பூமியிலிருந்து 2, 38, 855 மைல் தூரத்திலுள்ள சந்திரனின் மிக அருகில் கொலம்பியா விண்வெளிக்கலம் சுற்றி சுற்றி வர அந்த விண்வெளிக்கலத்தில் இருந்து "ஈகிள் " என்னும் சிறு விண்வெளிக் கப்பல் வெளிப்பட்டு சந்திரனின் தரையைத் தொட்டு நிற்கிறது .
அதிலிருந்து விண்வெளி வீரர் நீல் ஆம்ஸ்ட்ராங் வெளிப்பட்டு .நிலவில் தன் காலடியைப் பதித்து, "எனக்கு இது ஓர் அடி எடுத்து வைத்த சம்பவம் தான் , ஆனால் மனித குலத்திற்கோ மாபெரும் முன்னேற்றம் " என்று சொல்லி திகைக்கச் செய்தார். உலக மக்கள் அல்லோலப்பட்டு ஆர்ப்பரித்து சந்தோஷத்தை கொண்டாடினார்கள்
சந்தேகப்பட்டு, "இதெல்லாம் இப்படியெல்லாம் நடந்திருக்குமா ? என்று அப்போலோ விண்வெளிக் கப்பலுக்கு இன்ஜின் தயாரித்துக் கொடுத்த கம்பனியில் வேலை பார்த்த 72 வயசான
பில்கேஸிங் நம்ப மறுக்கிறார் . அமெரிக்க விண்வெளி விஞ்ஞானிகள் "பில்கேஸிங் வீட்டிலே கூட அடிக்கடி சந்தேகப்படும் ஆளு" என்று கிண்டலடித்தனர்.
நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத் செய்வதற்கு 5 ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் ..
அபுஜஹில் , அல் ஆசிப், வலீது இப்னு முஹைரா, அஸ்வத் இப்னு முத்தாப், நழ்ர் இப்னு ஹாரிஸ் இவர்கள் அத்தனை பேரும் நபி (ஸல்) அவர்களின் அற்புதங்களைப் பற்றி, வேதங்கள் தெரிந்த ஒரு யூதனிடம் வினவுகின்றனர்.
அவன் , "முஹம்மதுடைய மாயங்கள், சித்து விளையாட்டுகள் மண்ணில்தான் பலிக்கும் . விண்ணில் முடியாது.
உடனே அபுஜஹில் தலைமையில் இக் கூட்டம் " மினா "" என்ற இடத்தில்
நபி (ஸல்) அவர்களை சந்தித்து . "இன்று முழு பௌர்ணமி நீங்கள் அல்லாஹ்வின் தூதர் என்றால் இந்த முழு நிலவை இரண்டாக பிளக்க வேண்டும்.
நபி (ஸல்) அவர்கள் தங்கள் ஆள்காட்டி விரலினால் சந்திரனை இரண்டாகப் பிளக்கச் செய்தார்கள் .இதற்கு சாட்சியாக நீங்கள் இருங்கள் என்று நபித் தோழர்களான அனஸ் இப்னு மாலிக் (ரலி), அப்துல்லாஹ் இப்னு மசூது (ரலி),
அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) ஆகியோர்களைப் பார்த்து சொன்னார்கள்

சந்திரன் இரண்டாக பிளந்தது .பின் நபி (ஸல்) அவர்கள் அதே ஆள்காட்டி விரலாலேயே பிளந்த சந்திரனையும் சேர்த்தும் வைத்தார்கள்
உடனே அவர்கள் மண்ணையும் தாண்டிய அற்புத சூனியம் என்றும் , நாங்கள் இன்னும் சந்தேகத்தில்தான் இருக்கிறோம் என்று பில்கேஸிங் என்ற விஞ்ஞானி சந்தேகப்பட்ட மாதிரி சந்தேகப்பட்டார்கள்.
அமெரிக்க விண்வெளி ஆய்வு நிலையமான நாஸா அப்போல்லோ 10, மற்றும் அப்போல்லோ 11 விண்கலம் அனுப்பிய புகைப்படத்தில் சந்திரனின் முகத்தில் ஆங்காங்கே அம்மன் தழும்பு மாதிரி பள்ளங்கள் தெரிந்தாலும் கவனத்தை மிக ஈர்த்தது சந்திரனைச் சுற்றி ஒரு வட்ட வடிவ பள்ளமான தடயம் தான். இந்த வடிவ பள்ளத்தை "Racky Belt" என்றழைக்கிறது. (இந்த பெயரில் வலைதளத்தில் தேடவும்)
இதுவரை நாம் பார்த்துக் கொண்டிருக்கும் வட்ட நிலா கொஞ்ச காலத்திற்கு முன் இரண்டாகப் பிளந்து மறுபடியும் சேர்க்கப்பட்டுள்ளதாக தெரிகிறது .
யார் பிளந்தது என்று நாஸா தேட ஆரம்பித்தது .நிலவின் இந்த வட்ட வடிவ பள்ள ஆராய்ச்சிக்காக ரிக்கா $ 100,000,000,000 டாலர் செலவழிக்க உள்ளது
எகிப்து நாட்டு நில இயல் வல்லுநர் Dr ஜக்லோவுல் அன்னாஜர் தொலைக்காட்சியின் பேட்டியின் போது 1400 வருடங்களுக்கு முன்பு நடந்த சம்பவத்தைச் சொல்லி,
"மறுமை நாள் நெருங்கி விட்டது. (அதனை அறிவிக்க சந்திரனும் பிளந்து விட்டது. குர்ஆன் ( 54 : 1-3) என்ற வசனத்தை ஓதிக் காட்டினார்
இன்னும் கூட அநேகர் சந்திரன் பிளந்து விட்டதா என்ற சந்தேகம் இருக்கிறது..
நபி (ஸல்) அவர்களின் ஆட்காட்டி விரலின் பதிவுகளைக் கூட அவர்களைக் கௌரவப்படுத்துவதற்காக பரிசுத்தமாக விண்வெளியில் அதுவும் சந்திரனில் பாதுகாக்கின்றான் போலும்.
நீங்கள் நன்றாக உற்று நோக்குங்கள் .. நபி (ஸல்) அவர்களின் ஆள்காட்டி விரலின் ரேகையைக் கூட இன்ஷா அல்லாஹ் நாளைய விஞ்ஞானம் தேடிக் கண்டு பிடிக்கலாம் .

அண்ணலாரும் அறிவியலும் 7




(மறைந்து போன "அந்த" வான சாஸ்திரம் )
( ஜோதிடத்திற்கு எதிரான சிந்தனை. நான் ஜோதிடத்தை ஏற்றுக் கொள்பவனும் அல்ல . முழுமையாக படித்தப் பின் முடிவு எடுங்கள்)
தொடு குறி சாஸ்திரம், கிளி ஜோஸ்யம், பங்கஜா லாட்ஜ் பாமிஸ்ட் , "கிரகம் பாடாய் படுத்தும் " என்று சொல்லும் "பாலத்து ஜோஸ்யர்கள் " போன்ற வியாபார காரர்களை எல்லாம் ஒரு புறம் ஒதுக்கிவிட்டு, இந்த சாஸ்திரத்தின் அடிப்படைச் சிந்தனையை யோசித்து பார்த்தால் , வசீகரமாகத்தான் இருக்கிறது.
அந்த சிந்தனை என்ன?
ஒரு குழந்தை பிறக்கும் போது, அதன் முதல் மூச்சு, வடிவம் பெற்று அது உலகத்தில் ஓர் உயிராய் பிரவேசிக்கும் போது, இந்த பிரபஞ்சவெளியிலும் ஒரு பிரத்தியேகமான நிகழ்ச்சி நிகழ்கிறது என்கிறார்கள்.
ஏதோ ஒரு நட்சத்திரம் ஒரு குறிப்பிட்ட நிலையில் உச்சம் பெறுகிறது. இந்த நட்சத்திரம் மற்றும் கிரகங்களின் நிலை இதெல்லாம் பிறந்த உயிருக்கு தொடர்புபடுத்தி நிறைய நிறைய கணிக்கிறார்கள் .
இதெல்லாம் நிஜமாலுமா ... என்று நீங்கள் கேட்பது புரிகிறது . தொடர்ந்து படியுங்கள் .அவசரப்படாதீர்கள் நட்சத்திரங்களாலதான் நம் வாழ்வு பிரகாசிக்கிறது எனவே அதனை

"ஷிஃரா " என்னும் நட்சத்திரத்தை கடவுளாக்கி வழிபட்டதாக "ஆது" மக்களைப் பற்றி குர்ஆன் (53 : 49,50) குறிப்பிடுகிறது.
ஷிஃரா 10 ஒளியாண்டு தூரத்தில் உள்ளது. டெலஸ்கோப் மூலம்தான் பார்க்க முடிகிற நட்சத்திரத்தை வெறுங் கண்ணால் "ஆது மக்கள் "எப்படி பார்த்தார்களோ. ? இது குர்ஆன் கூற்று .
''நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் நட்சத்திரங்களை கூர்ந்துப் பார்த்தார் " குர்ஆன் (37 : 88) " இலா "என்ற பதம் பயன்படுத்தப்பட்டிருந்தால் "கூர்ந்து " என்று அர்த்தம் வரும். எனவே நட்சத்திரக் கலையை பயின்றார்.
மேற்கண்ட வசனத்தைத் தொடர்ந்து இப்ராஹிம் (அலை) அவர்கள்
" பின்னர் நட்சத்திரங்களைக் கூர்ந்து பார்த்து . நிச்சயமாக எனக்கு ஒரு நோய் ஏற்படும் போல் இருக்கின்றது " என்று கூறவே குர்ஆன் (37 : 88,89)
"எந்த நபியுடைய ஜென்ம நட்சத்திரம் விண்ணில் அவர் பிறப்பதற்கு முன் தோன்றாமல் இருந்ததில்லை " இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்
நபி மூஸா (அலை) அவர்கள் பிறப்பதற்கு முன்னதாக பிர்அவ்னின் அரண்மனையில் உள்ள வான சாஸ்திரிகள் வானில் ஜென்ம நட்சத்திகம் தோன்றி விட்டது இது ஓர் அவதாரப் புருஷன் பனி இஸ்ரவேலர்களில் பிறந்தற்குரிய அறிகுறி என்று கணித்ததும் ஒரு லட்சத்திறகும் அதிகமான பிறந்த ஆண் குழந்தைகளின் தலை சீவப்பட்டதா என்ன? அக்கால வான இயல் வல்லுநர் கணித்ததில் தவறெதும் உண்டா ? குர்ஆன் ( 20 : 39 ) ( 28 : 07 )
இது போன்றே நபி ஈஸா (அலை) அவர்கள் பிறக்கும் போது 3 வான இயல் வல்லுநர்கள் ஜென்ம நட்சத்திரம் வானில் தோன்றியதை கண்டு பைத்துல் முகத்தஸ் வந்து சேர்ந்து இஸ்ரவேலர்களின் அரசர் பிறந்து விட்டாரா என்று ஐரதூஸ் மன்னனிடம் கேட்க பின் விசாரித்தில் மாட்டுத் தொழுவத்தில் மாநபி ஈஸா (அலை) அவர்கள் பிறந்தது உண்மைதானே.?
"பதினோரு நட்சத்திரங்களும் . சூரியனும், சந்திரனும் எனக்கு தலை வணங்கக் கண்டேன்" குர்ஆன் (12 : 04) என்று சிறுவர் நபி யூசுப் (அலை) கனவில் கண்ட நட்சத்திரங்கள் தன்னுடைய சகோதரர்கள் என்பதை தந்தை நபி
யாகூப் (அலை) அவர்கள் அறிவிக்க வில்லையா ?
ரோமபுரி ஹெர்குலிஸ் மன்னர் "இன்றிரவு நான் நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்தபோது, "விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களின் மன்னர் தோன்றிவிட்டதாக ஜென்ம நட்சத்திரத்தின் மூலம் அறிந்தேன்" என்று கூறி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா (ஸல்) அவர்களின் பிறப்பை பதிவு செய்யவில்லையா ?
புகாரி பாகம் 1 - ஹதீஸ் 07
மனிதர்களின் பிறப்புகளுக்கும் வான நட்சத்திரங்கள் கிரகங்களுக்கும் அப்படி ஒரு தொடர்பை அக்கால வான இயல் வல்லுநர்களால் எப்படி வகுக்க முடிந்தது ? அந்த வான சாஸ்திரம் இப்போ எங்கே மறைந்து போனது ?

**Rahmath Rajakumaran**
எல்லா அறிவையும் "உடலுக்கு உள் " "உடலுக்கு வெளியே " என்று " பிரித்து விடுகிறது விஞ்ஞானம் .ஆனால் வான சாஸ்திரம் அப்படிச் செய்யவதில்லை .நம் உடலும் அதற்குள் நிகழும் நிகழ்ச்சிகளும் ,இந்த பிரபஞ்சவெளியின் அங்கங்களாக சேர்த்துக் கொள்கிறது .
உயிர் வாழ்வுக்கு ஒரு விதமான பிரபஞ்சத்தனம் கொடுப்பதுதான் இந்த வாதத்தில் என்னை கவர்கிறது .

அண்ணலாரும் அறிவியலும்.8



(சாமுத்ரிகா சாஸ்திரம் )
"கலக்கல் இன்ஸான அலா சூரத்திஹி " _ மனிதனை அவன் தன் எண்ணத்தில் உண்டான உருவில் படைத்தான்.

மனிதனுடைய பொதுவான தோற்றம், பொதுவான உடலமைப்பு தெய்வம்சத் தொடர்புடையவை என்று சமுத்ரிகா சாஸ்திரம் சொல்வதிலும் அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது.
அங்க அவயங்கள் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு விதமாக முற்றிலும் வேறுபட்டு காணப்படுவது மட்டுமே ஆச்சரியமல்ல; இந்த வேறுபட்ட அவயவ அமைப்பு ஒவ்வொன்றுக்கும் தனித்தனி ஆழமான அர்த்தமும் இருக்கிறது என்கிறது சாமுத்ரிகா சாஸ்திரம் .
அவயவ அமைப்பு ஒரு மனிதனுடைய தோற்றத்துக்கு எழில் கூட்டுவது மட்டுமல்ல : அவனுடைய உள் உணர்வுகளுக்கும் விளக்கம் தருவதாக இருக்கிறது என்ற பிரமிப்பூட்டும் அறிவியல் உண்மைகளையும் போட்டு உடைக்கிறது இந்தசாமுத்ரிகா சாஸ்திரம்.
இந்த சாஸ்திரத்தை தூசி தட்டி வெளியே எடுத்து மன இயல் வல்லுநர்களும் , துப்பறியும் தடயவியல் துறையினரும் நிறைய நிறைய ஆய்வு செய்து ஆதிகால அறிவியலை நவீன விஞ்ஞானமாக மாற்றி இருக்கிறார்கள்.
அதுவும் நவீன கால கம்ப்யூட்டர் இந்த பணியை வெகு சிறப்பாக செய்து முடிக்கிறது .
சாமுத்ரிகா சாஸ்திரம் நபி (ஸல்) அவர்கள் காலத்தில் இருந்துள்ளது
அதையும் நபி (ஸல்) அவர்களும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் . உதாரணமாக
ஸைத் பின் ஹாரிஸ்யை அவர்கள் நபி (ஸல்) அவர்களின் வளர்ப்பு மகனாவார். அவருடைய மகன் உஸாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் மீது நபியவர்கள் அதிக அன்பு வைத்திருந்தார்கள் இதனால் உஸாமாவை "ஹுப்பு ரசூலில்லாஹ் " அல்லாஹ்வின் தூதருடைய செல்லப் பிள்ளை என்று நபித்தோழர்கள் கூறுவார்கள்.
உஸாமாவின் தாயார் உம்மு அய்மன் (ரலி) அவர்கள் அபிசீனிய கருப்பினத்தைச் சேர்ந்தவராவார். கணவர் ஸைத் வெண்ணிறமுள்ளவராகவும் இருந்தார் இருவருக்குப் பிறந்த உஸாமா கருப்பு நிறத்தவராக இருந்தார் .
இந்த நிற வித்தியாசத்தை வைத்து தந்தை - மகன் உறவில் களங்கம் கற்பிக்க, அன்றைய அறியாமைக் காலத்து மக்களில் சிலர் முயன்றனர். இது நபி (ஸல்) அவர்களுக்கு கவலையளித்தது.
இந் நிலையில் ஒரு நாள் தந்தையும் மகனும் ஒரே போர்வையில் படுத்திருக்க, இருவரின் கால்கள் மட்டுமே வெளியே நீட்டிக் கொண்டிருந்தன.
அவ்வழியாகச் சென்ற , இருவரின் சாயலை வைத்து உறவு முறையை கணித்து விடும் ஆற்றலுடைய "முத்லிஜீ" என்பார் இருவரின் கால்களையும் பார்த்து விட்டு , " இந்தக் கால்கள் ஒன்று மற்றொன்றிலிருந்து தோன்றியவை" என்று குறிப்பிட்டார் .
அதாவது தந்தை மற்றும் மகனின் கால்கள் என்றார். இதையறிந்த நபி (ஸல்) அவர்கள் பேரானந்தம் அடைந்தார்கள் .
உஸாமா மற்றும் ஸைத் பற்றிப் பொய்யர்கள் கூறி வந்த அவதூறு இதன் மூலம் முறியடிக்கப்பட்டது.
ஆதாரம் : புகாரி 3555

**Rahmath Rajakumaran**
இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்கள் சாமுத்ரிகாவில் மிகவும் தேர்ச்சிப் பெற்றிருந்தார்கள்
மஸ்ஜில் இரவில் இருக்கும் போது ஒரு நபர் வேகமாக வந்து அங்கு படுத்திருந்தவர்களை உற்றுப் பார்த்து தேடிக் கொண்டிருந்தார் .
இமாமவர்கள் அவரை அழைத்து
"உங்களது அடிமை உங்களை விட்டு தப்பிட்டாரா ?"
'ஆம்''
"அந்த அடிமையின் வலது கண் ஊனமா ?"
"ஆம் . அந்த அடிமையை நீங்கள் பார்த்திருக்கிறர்களா?"
"இல்லை . ஆனால் அந்த அடிமை இந்த ஊர் சிறைச்சாலையில் இருக்கிறார் "
"அப்படியா ?"
சிறையிலிருந்து அந்த அடிமையை மீட்டி விட்டு இமாம் அவர்களிடம் எப்படி என்று விபரம் கேட்டார் .
"நீங்கள் வந்த
பரபரப்பில் தெரிந்து கொண்டேன் ஏதோ காணாமல் போய்விட்டது என்று. அலட்சியமாக தேடும் போது கண்டு கொண்டேன் காணமல் போனது தப்பியோடிய அடிமை என்று ... நீங்கள் தேடும் ஒவ்வொரின் வலது கண்ணை உற்று நோக்கும் போது தெரிந்து கொண்டேன், அந்த அடிமைக்கு வலது கண் ஊனம் என்று ....."
"சிறைச்சாலையில் இருக்கிறார் என்று எப்படிச் சொன்னீர்கள் ?"
" பொதுவாக அடிமை தப்பும் போது அவரிடம் பணம் இருக்காது .எனவே செலவுக்கு பணம் தேவை அதனால் திருடுவார்கள் திருடும் போது திருடர்கள் மாதிரி பொறுமையாக இருந்து திருடாமல் அவசர அவசரமாக திருடுவார்கள் எனவே மாட்டிக் கொள்வார்கள். திருடர்கள் பிடிபட்டால் சிறைச்சாலையில் தானே அடைக்கப்படுவார்கள்.? "
**Rahmath Rajakumaran**
சாமுத்ரிகா சாஸ்திரத்தின் தந்தையாக மகா கவி காளிதாஸ் ரை அழைக்கின்றனர்
ரகுவம்சம், மேகதூதம் போன்ற பெரிய இலக்கியத்தை தந்தவர்
இவரிடம் ஒரு நீளமான முடியை கொடுத்து அரசன் சாமுத்ரிகா கேட்டார் .
அவர் இந்த முடிக்குரிய பெண்ணின் இலட்சணத்தை அப்படியே வர்ணித்தார் .அத்தோடு அவரை விட்டிருக்கலாம் .

மேலும் விபரம் கேட்க ." "இடது உள் தொடையின் உச்சத்தில் சிவந்த மச்சம் சிறப்பாக இருக்கும் என்றார்.
கொடுத்த முடி ராணியின் முடி
இந்த சாஸ்திரக் கலையை இவரது உயிரை குடித்தது.

அண்ணலாரும் அறிவியலும் 9
(சாமுத்ரிகா தொடர் 2 )



நபி (ஸல்) அவர்களிடம் "நீங்கள் இறந்த பிறகு உங்களை எங்களில் யார் முதலில் சந்திப்போம் ? என்று மனைவிமார்கள் கேட்க, அதற்கு நபிகளார் ."உங்களில் யாருடைய கை நீளமாக இருக்கிறதோ அவர்கள் என்றார்கள்" .
உடனே ஒவ்வொரும் ஒரு குச்சியை எடுத்து தங்களின் கை நீளத்தை அளக்க, சௌதா (ரலி) என்ற மனைவியின் கைதான் நீளமானதாக இருந்தது. ஆனால் முதலில் இறந்தது ஜைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) என்ற மனைவிதான் .அதன் பின்னர்தான் "நீளமான கை" என்பது தான தர்மம் அதிகமாகச் செய்பவரை குறிக்கிறது என்பதை மற்ற மனைவிமார்கள் புரிந்து கொண்டனர். (புகாரி 1420)
இப்பொழுது சாமுத்ரிகா சாஸ்திரப்படி நீளமான கைகளை உடையவர்கள் அரச போகத்தை அனுபவிப்பார்கள் .இவர்கள் மனதில் பட்டதை யாருக்கும் அஞ்சாமல் வெளிப்படையாகச் சொல்லிவிடுவதும், குற்றம் குறைகள் யாரிடம் அமைந்தாலும் நேருக்கு நேர் கண்டதும் கண்டனம் தெரிவிப்பது இயல்பாக இருக்கும்.
அன்னை சௌதா (ரலி) அவர்கள் மிகவும் உயரமான வளர்ச்சி உடையவர்கள் .இவர்களின் கை விரல்கள் , கால் விரல்கள் நீளமாக அமைந்திருக்கும். நகைச்சுவை குணமுடையவர்கள் .இவர்களது உருவத் தோற்றம் நபிகளாரை குதூகலத்தில் ஆழ்த்தி சிரிப்பை வரவழைக்கும் .மிக எளிதில் உணர்ச்சி வசப்படுவார்கள் .
பத்ரு போரில் பிடிபட்ட எதிரிகளில் அன்னை சௌதா (ரலி) அவர்களின் முதல் கணவரின் சகோதரர் சுஹைல் பின் அமர் அவர்களும் ஒருவராக இருந்தார். எதிரிகளை மதீனாவிற்கு அழைத்து வரும் போது இவர் தப்பியோடி விட்டார் . மீண்டும் கைது செய்து .அவரது கைகளை கட்டி, அதனை கழுத்துடன் பிணைத்து இழுத்து வந்தார்கள்.
இதனைக் கண்ட சௌதா (ரலி) அவர்கள் உடனே உணர்ச்சிவசப்பட்டவர்களாக ." இந்த இழிநிலையைப் பார்த்துக் கொண்டு உயிர் வாழ்வதைக் காட்டிலும் கண்ணியமான முறையில் இறந்திருக்க வேண்டும் ., அவமானம் அவமானம் என்று கூறியதை நபிகளார் கேட்டு விட்டார்கள்.
"நீங்கள் வார்த்தை சொல்லி விட்டீர்கள் நீங்கள் கூறிய இந்த வார்த்தை அல்லாஹ்வின் எதிரியான இவர்களை உசுப்பேத்தி விடக் கூடியதாக இருக்கின்றதே! அல்லாஹ்வையும் , அவனது தூதரையும் எதிர்த்துப் போர் புரிகின்ற எதிரிகள் எவ்வாறு கண்ணியமான முறையில் மரணமடைய முடியும் ? என்றார்கள்.
நபிகளாரின் இந்தக் கேள்வி சௌதா (ரலி) அவர்களை வெட்கப்படச் செய்தது உடனே உணர்ச்சி வசப்படும் இந்த செயலுக்காக வருத்தம் தெரிவித்து மன்னிப்புக் கோரினார்கள் .
இது சாமுத்ரிகா சாஸ்திரப்படி நீளமான கரங்களை பெற்ற பெண்களின் இயல்பைக் குறிக்கிறது .
அடுத்து , கை சற்று நீளம் குறைவாக இருப்பவர்கள் வறியோருக்கு வாரி வாரி வழங்கும் வள்ளலாக, மற்றவர்கள் பசித்திருக்க இவர்கள் வாழப் பொறுக்க மாட்டார்கள் .மற்றும் முற்போக்கு சிந்தனை , கடும் உழைப்பாளிகளாகவும் இருப்பார்கள் என்கிறது சாமுத்ரிகா
ஜைனப் (ரலி) அவர்களை நபி(ல்) அவர்களின் வளர்ப்பு மகனான ஸைத் பின் ஹாரிதா (ரலி) மணமுடித்து கருத்து வேறுபாடு ஏற்பட்ட மணவிலக்கு பெற்று பின் நபி (ஸல்) அவர்கள் மணமுடித்தார்கள் .
தான தர்மங்கள் தேவை உள்ளவர் களுககு தேடிப் போய் உதவி செய்தல், உள்ளச்சத்துடன் தொழுகை இனங்களில் சிறந்து விளங்கினார்கள் . கடின உழைப்பாளி அல்லாஹ் வின் நெருக்கத்தை பெற இவர்களின் தான தர்மத்தை அளவிட முடியாது என்பதாக அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

உமர் (ரலி ) ஆட்சி காலத்தில் நபியவர்களின் மனைவியருக்கு வருடத்திற்கு 12,000 திர்ஹம் உதவி தொகை வழங்கப்பட்டது இவையனைத்தும் தான தர்மம் செய்ததோடு இப் பணம் சோதனைக்குரியது என்றார்கள் ஜைனப் (ரலி) அவர்கள் இறக்கும்போது ஒரு தினார் கூட மீதம் வைக்காமல் அனைத்தையும் தானம் செய்திருந்தார்கள் . இவர்களின் மரணச் செய்தி மதீனாவிலுள்ள ஏழைகள் கண்ணீர் வடித்தனர்

அண்ணலாரும் அறிவியலும் 10
(யுனிக்கோடின் யுக்தி)




"சுயா அயவா சயதயமர அயசய ெ" -
இந்த வார்த்தையை எத்தனை முறை படித்தாலும் விவரம் புரியவில்லையா ? சரி சொல்றேன்
இப்போது நான் இந்த கட்டுரையை தமிழில் அடித்துக் கொண்டிருக்கிறேன். கணிப்பொறி திரையில் தமிழ் எழுத்துக்கள் அழகாக விழுந்து கொண்டிருக்கின்றன மறந்து போய் "ரஹ்மத் ராஜகுமாரன்" என்று எழுத நினைத்து, ஆங்கிலத்தில் " RAHMATH RAJAKUMARAN " என்று அடித்து விட்டு கம்ப். திரையைப் பார்க்கிறேன் "சுயா அயவா சயதயமர அயசய ெ" என்றிருக்கிறது உடனே யூனிக்கோட்டை மாற்றி விட்டதும் "RAHMATH RAJAKUMARAN " வந்து விடுகிறது.
கம்ப்யூட்டரில் யுனிக்கோடு என்று ஒன்று உண்டு அதாவது "மொழி மாற்றி " ( சொல்றதை கொஞ்சம் விவரமாக கேட்கணும் அதிநவீன விஞ்ஞானம் )
யுனிக்கோட்டில் ஆங்கிலம் பயன்படுத்தும் "லாட்டின் " எழுத்துக்கள் ,ரஷ்ய மொழி பயன்படுத்தும் "ஸிரில்லிக்" எழுத்துக்கள் , கொரியா "ஹங்கள் "எழுத்துக்கள் . ஜப்பானிய "கானா" எழுத்துக்கள் , சீனா "போப் போமோஃபோ" எழுத்துக்கள் இந்திய "ஹிந்தி "எழுத்துக்கள் கிரேக்க, ஹீப்ரு , அராபிக் . ஐரோப்பிய மொழிகள் ,ஆப்பிரிக்க மொழிகள் ,ஆசிய மொழிகள் ... என்று உலகின் அத்தனை மொழிகளையும் உள்ளடக்கி 65,000 பிட்ஸ் தொண்டு கம்ப்யூட்டர் வார்த்தைகளின் தளத்தை உருவாக்கி அந்த இடங்களில் குறியீடு இட்டு 29,000 இடங்களை மட்டும் பயன்படுத்தாமல் எதிர்காலத்திற்கு விட்டு வைத்து மொழி மாற்றி என்னும் யுனிக்கோடு உருவாக்கி இருக்கிறார்கள்.
இத்தனை மொழிகளுக்கும் இடம் கொடுக்காவிட்டால் அமெரிக்க கம்ப்யூட்டர் ஆப்பிரிக்காவில் விற்குமா? விற்றாலும் இயங்குமா ?
இப்போ , யூனிக்கோடு பற்றி கொஞ்சம் தெரிந்திருப்பீர்கள் .
குர்ஆன் கூறும் சில வசனங்களைப் பாருங்கள் .
" உங்களுடைய மொழிகளும், நிறங்களும் வெவ்வேறாக இருப்பதும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளவையாகும் ."குர்ஆன் ( 30 : 22)
" நபியே...ஒவ்வொரு தூதரும் தன் மக்களுக்குத் தெளிவாக விவரித்துக் கூறும் பொருட்டு , அந்தந்த மக்களின் மொழியைக் கொண்டே போதனை புரியுமாறு நாம் தூதர்களை அனுப்பி வைத்தோம் " .குர்ஆன் (4 : 04)
இனி இப்புனித குர்ஆன் நபி (ஸல் ) அவர்களுக்கு அருளப்பட்ட விதத்தைப் பார்ப்போம்.
ஹாரிஸ் பின் ஹிஷாம் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் , "அல்லாஹ்வின் தூதரே.... தங்களுக்கு இறைச் செய்தி எவ்வாறு வருகிறது? என்று கேட்டபோது,

"சில வேளைகளில் குர்ஆன் மணி ஓசையைப் போன்று என்னிடம் வரும். அவ்வாறு வரும் போது எனக்கு மிகக் கடினமாக இருக்கும். அவ்வானவர் கூறியதை நான் நினைவுப்படுத்திக் கொண்டு இருக்கும் போதே அவர் என்னை விட்டுப் பிரிந்து விடுவார்
மேலும் ஆயிஷா ( (ரலி) அறிவிக்கிறார்கள். " கடுங்குளிரான நாட்களில் நபி(ஸல்) அவர்களுக்கு வஹீ இறங்குவதைக் கண்டேன், அவ்வானவர் நபி (ஸல்) அவர்களை விட்டு விலகிச் செல்லும் போது அந்தக் குளிரிலும் அவர்களின் நெற்றியிலிருந்து வியர்வை சொட்டும் .புகாரி 1 ஹதீஸ் 2
வஹீ சில நேரங்களில் தேனீ ரீங்காரம் செய்வது போலவும் இறங்கியுள்ளது
மணியோசையிலோ, தேனீ ஈ ரிங்காரத்திலோ எழுத்துக்கள் அடங்கிய வார்த்தைகள் இருப்பதாக நமக்குத் தெரியவில்லை. ஆனால் எழுதப் படிக்கத் தெரியாத "உம்மி நபி" என்று குர்ஆன் வர்ணிக்கும் (7 : 158) நபி (ஸல்) அவர்களுக்கு அவைகளிலிருந்து வார்த்தைப் பிரித்து திருக்குர்ஆன் வேத வசனங்களாக கொடுத்துள்ளார்கள் என்றால் கம்ப்யூட்டர் விஞ்ஞானிகளும் மொழியியல் வல்லுநர்களும் இணைந்து உருவாக்கிய யுனிக்கோடை விட சிறப்பான செயலை அல்லவா நபி (ஸல்) அவர்கள் செய்து இருக்கிறார்கள்

**Rahmath Rajakumaran**
விஞ்ஞானத்திற்கு சப்த ஓசைகளை மொழிபெயர்க்க வேண்டிய கட்டாயம் உள்ளது தேனீ ரிங்காரத்தில் உள்ள மொழிபெயர்ப்பு கிடைத்தால் தேன் சுலபமாக கிடைக்க வழி கிடைக்கலாம் .
பூகம்பத்திறகு முன் பூமியின் பரிபாஷைகள் இசைக்கருவி பறையொலி போல ஓசை எழுப்புவதை ஊர்வனங்கள் மிருகங்கள் கேட்டு பூகம்ப மையங்கொண்டுள்ள திசைக்கு எதிராக ஓடி தப்பி விடுகின்றன. பூமியின் பரிபாஷை தெரியாத மனிதன் மாட்டிக் கொள்கிறான்
பூகம்பத்திற்கு முன் பூமி வெளிப்படுத்தும் பரிபாஷைகளை நாம் எந்த யூனிக்கோடைக் கொண்டு எப்போது கண்டு கொள்ளப் போகிறோம் ?
**Rahmath Rajakumaran**
கடலில் டால்ஃபின் மீன்களுக்கென்று தனி பாஷை இருக்கிறது அவைகள் 32 வகையான இசை ஒலிகளை எழுப்பி கோரஸாக பாடுவதைக் கண்ட விஞ்ஞானம் அந்த பரிபாஷை விளங்கிக் கொண்டால் கடலுக்குள் இருக்கும் ரகசியம் கரைக்கு வந்து சேரும் என எதிர்ப்பார்க்கப்படுகிறது இதை எந்த யுனிக்கோட்டைக் கொண்டு எப்போது கண்டுபிடிக்கப் போகிறோம்?
**Rahmath Rajakumaran**
"எங்களுக்கு பறவைகளின் மொழி கற்பிக்கப்பட்டிருக்கிறது என்று
குர்ஆன் (27 : 18, 19) வசனம் கூறுகிறது அதே சுலைமான் (அலை) ஓடைக் கரை பெண் எறும்பு " எறும்புகளே நீங்கள் உங்கள் வீடுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள் .சுலைமானும் அவருடைய ராணுவம் உங்களை மிதித்து விடவேண்டாம்." என்று கூறியதைக் கேட்டு நபி சுலைமான் சிரித்தவராக புன்னகை பூத்தார் குர்ஆன் (27 : 18 '19 )
சுலைமான் நபியவர்களுக்கு எந்த யுனிக்கோடால் கற்றுக் கொடுக்கப்பட்டி ருக்கிறது ?
**Rahmath Rajakumaran**
புரியவில்லையே சார் இன்னும் கொஞ்சம் விவரமாக சொல்லுங்களேன்.
26 எழுத்துக்களைக் கொண்ட ஆங்கில எழுத்துக்களை கம்ப்யூட்டரில் குறிப்பிட" ஆஸ்க்கி " என்னும் குறியீடு உள்ளது இதற்கு 7 பிட் கொண்டது ஒரு பிட் 0, 1 என்ற இரு பைனரி ஆங்கில மொழிக்கு 7 பிட் போதும் இதன் மூலம் 128 எழுத்துக்களை குறிப்பிட முடியும்
தமிழுக்கு 216 எழுத்துக்கள்.
சீனா (ஏறக்குறைய1200 எழுத்துக்கள் ) , தென் கொரியா (சுமார் 1800 எழுத்துக்கள் ) ஜப்பான் போன்ற மொழிகளுக்கு ஆயிரக்கணக்கான எழுத்துக்கள் .அடேயங்கப்பா என்ன செய்யறது ?
உலகிலுள்ள அத்தனை மொழிக்காரர்களின் எழுத்துக்களுக்கும் இடமளிக்க கணிப்பொறி இயலாளர்கள் .மொழியியல் வல்லுநர்கள் கூட்டு சேர்ந்து யுனிக்கோடு என்னும் ஓர் அமைப்பை உருவாக்கினார்கள் .
மொத்தம் 16 பிட்கள் மூலம் 65,000 க்கும் மேற்பட்ட எண்ணிகையுள்ள எழுத்துக்களை குறிக்க முடியும்.
மேலும் விபரங்களுக்கு பக்கத்து வீட்டில் Msc கம்ப்யூட்டர் சைன்ஸ் படித்த பாப்பாவோ, பாப்பியோ இருக்கும் . கேட்டு தெரிந்து கொள்ளவும்

அண்ணலாரும் அறிவியலும் 11
(நான்காம் பரிமாணம்)





(ரொம்பவும் நிதானமாக படிக்கவும்)
ஒரு புள்ளி ஓர் இடத்தில் நிலையாக இருக்குமெனில் அது ஒற்றைப் பரிணாமத்தில் இருக்கிறது . கணித ரீதியாகச் சொன்னால் " dot (புள்ளி).
இதே புள்ளி நகர்ந்தாலும் ஒற்றைப் பரிமாணத்தில் உள்ள நேர்கோடு (Stright line) என்கிறார்கள்.
இந்த கட்டுரை ஆய்வு பேப்பர் நீளம் அகலம் கொண்ட இரு பரிமாணங்களைக் கொண்டது. புரிகிறதா ?
என்னுடைய டேபிள் நீளம், அகலம், உயரம் கொண்ட முப்பரிமாணம் .அதே மாதிரி டேபிள் மேல் இருக்கும் புத்தகம் Einstein : The life and Times , Ronald W. Clark என்ற புத்தகம் 7 அங்குல நீளமும் , 5 அங்குல அகலமும் , 2 அங்குல உயரமும் கொண்ட முப்பரிமாணங்களைக் கொண்டது சரியா ?
தமக்குத் தெரிந்து நம்மால் புரிந்து கொள்ளக் கூடிய பிரபஞ்சவெளியையும் முப்பரிமாண வெளி என்கிறோம் .இந்த 3 அளவீடுகளையே நம் மூளையின் புலன்களால் அறிய முடிகிறது.
சற்று கவனமாக படியுங்கள் , நீளத்தை அகலம் குழப்புவதோ அல்லது உயரத்தை நீளம் சிதைப்பதோ இல்லை .நீளம் நீளமாகவும், அகலம் அகலமாகவும் .உயரம் உயரமாகவும் தொடர் நிகழ்ச்சியாகத் தொடர்ந்து கொண்டே இருக்கிறது என்பதை உங்கள் மனக்கண்ணால் உணர முடியும்.
இப்போது நான்காம் பரிமாணம் பற்றி சொல்றேன் . இன்னும் கொஞ்சம் கவனம் தேவை.
நீங்களும் நானும் ஹஜ்ஜுக்குப் பயணப் படுகிறோம். சவூதி ஜித்தா வந்தாச்சி விமானம் பறந்து கொண்டிருக்கும் இடம் : 30 டிகிரி மேற்கு தீர்க்க ரேகையிலும் , 40 டிகிரி வடக்கு அட்ச ரேகையிலும் கடல் மட்டத்தில் இருந்து 13,000 அடி உயரம் என்ற மூன்று அளவுகளை மாத்திரம் குறிப்பிட்டால் விமானத்தின் இயக்கத்தை அறிந்து கொள்ளும் அதிகாரிக்கு அக் குறிப்புகள் வெறும் அர்த்தமற்றவையாக தெரியும் . அத்தோடு அந்த இடத்தில் பறந்து கொண்டிருக்கும் நேரம் இத்தனை மணி என்று குறிப்பிடும் போது பூர்த்தியாகிறது .அதாவது நான்காம் பரிமாணம் காலமாக இருக்கிறது.
பிரபஞ்சத்தின் எல்லா இடங்களிலும் , ஒவ்வொரு புள்ளியிலும் பல பரிணாமத்தின் நிலைகள் ஊடறுத்துக் கொண்டு செல்கின்றன. ஒவ்வொரு புள்ளியிலும் பல பரிமாணங்களினால் சூழப்பட்டு காணப்படுகின்றன .
சரி எத்தனை பரிமாணங்கள்தான் பிரபஞ்சத்தில் இருக்கிறது?
சுமார் 16 பரிமாணங்களவரை இருக்கலாம்.
சில பரிமாணங்கள் உங்கள் வீட்டுக்குள்ளே புகுந்து வெளிப்புறம் வழியாக சென்று இரண்டாவது வானத்தை அடையலாம். உங்களுக்குத் தெரிவது இல்லை .
முப்பரிணாமத்தைக் கொண்டு வாழும் நாம், நாம் இருக்கும் இதே தெருக்களில் அதே திசையில் இன்னொரு பரிணாமத்தின் சொந்த வீடுகள், அவர்களுடைய உயிரினங்கள் கூட இருக்கலாம் .அது இருப்பதும் உங்களுக்கும் எனக்கும் தெரிவதில்லை .
நபி (ஸல்) அவர்கள் முப்பரிமாணத்திற்கும் அப்பாற்பட்ட வேறொரு பரிமாணத்திலுள்ள வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களைக் கண்டதாக குர் ஆனில்
"நிச்சயமாக ஜிப்ரயீல் தெளிவான வானத்தின் கடைக்கோடியில் மெய்யாகவே கண்டார்"
குர்ஆன் (81 : 23)
அதே ஜிப்ரயீல் (அலை) மூன்றாம் பரிணாமத்திற்கு வந்து "யா ரசூல்லாஹ் , இஸ்லாம் என்றால் என்ன ? கேள்வி கேட்டு விட்டு ஜிப்ரயீல் போன பிறகு சுற்றி இருந்த நபித்தோழர்களிடம் " வந்தது யார் தெரியுமா என்று கேட்க அவர்கள் தெரியாது என்றதும் வந்தவர் வானவர் ஜிப்ரயீல் (அலை)என்கிறார்கள் நபியவர்கள் .

நபி ஸாலிஹ் (அலை) அவர்களின் ஒட்டகம் கொலை செய்யப்பட்டதும் அதன் கன்று தன் தாய் ஒட்டகம் எந்த மலையிலிருந்து வெளிப்பட்டதோ அதே மலையின் உள்ளே போய் மறைந்தது அந்த கன்று கியாமத் நாளின் போது தாபித்துல் அர்ளு என்ற கால்நடையாக வெளிவரும் . (ஹமீதிய்யா தப்ஸீர் )
" இறுதி நாள் அவர்களை நெருங்கிய சமயத்தில், அவர்களுக்காகப் பூமியில் இருந்து ஒரு கால்நடையை நாம் வெளிப்படுத்துவோம். அது அந்தெந்த மனிதர்கள் நம்முடைய வசனங்களை நம்பிக்கை கொள்ளவில்லை என்பதை அவர்களுக்குச் சொல்லிக் காண்பிக்கும் " குர்ஆன் (27 : 82 )
அந்த கால்நடை எந்த பரிமாணத்தில் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது ?
கியாமத் நாளின் போது ஒற்றைக் கண் தஜ்ஜால் வெளிப்படுவான் நெற்றில் 'காபிர் " என்று எழுதப்பட்டிருக்கும் தன்னை இறைவன் என்பான் அவன் மழை பொழியச் சொல்வான் மழையும் பொழியும் -ஹதீஸ்
நபி (ஸல்) அவர்கள் காலத்தில் நபிகளார் சொல்லிய அடையாளத்தை உடையவனை நபித் தோழர் ஒருவர் பார்த்து , நபியிடம் சொன்னபோது . நபிகளார் ," நீங்கள் பார்த்தது தஜ்ஜாலேதான் " என்று உறுதி அளித்துள்ளார்கள். அந்த தஜ்ஜால் கியாமத் நாள் வரை எங்கே இருக்கிறான் ?
எந்த பரிமாணத்தில் அவன் ஒளிந்து இருக்கிறான் ?
நபி சுலைமான் (அலை) அவர்கள் கேட்கும் சிம்மாசனத்தை இறை நேசர் ஆஸிப் இப்னு பாக்கியா (ரஹ்) கொண்டு வந்து வைக்கிறார்கள் .. என்பதாக
குர்ஆன்.... ( 27 : 38 - 40) வர்ணிக்கிறது
இதெல்லாம் எந்த பரிமாணத்தில் செயல்படுத்த முடிந்தது.
ஜூனைதுல் பாக்தாதி (ரஹ்) அவர்களின் சீடர் தஜ்லா நதியில் சுபுஹ் பாங்குக்கும் இகாமத் திற்கும் இடைப்பட்ட நேரத்தில் குளித்துக் கொண்டு கடைசி ஒரு முங்கு போடுகிறார் வேறு ஒரு உலகத்து நதியில் வெளிப்படுகிறார் .முதல் உலகம் மறந்து போகிறது .இரண்டாம் உலகத்தில் வாழ்கிறார் அங்கு ஒருநாள் அங்குள்ள நதியில் குளித்து கடைசியாக முங்கு போடுகிறார் . மீண்டும் இந்த உலகத்து அதே தஜ்லா நதியில் அதே நாளின் அதே சுபுஹ் பாங்கும் இகாமத்திற்கும் இடைப்பட்ட நேரத்தில் வெளிப்படுகிறார். ( முதல் படம் "புழுத்துளை " படத்தைப் பார்க்கவும் )
இது எந்த பரிமாணத்தில் நடைபெற்றது ?
தெரியவில்லை,

**Rahmath Rajakumaran**
யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டம் துல்கர்னன் (அலை) காலத்தில் வெளிப்பட்டார்கள் குர்ஆன் (18 : 94) அவர்கள் கியாமத் நாளின் போது மீண்டும் வெளிப்படுவார்கள் என்பது உண்மை.
அக்கூட்டத்தார இவ்வுலகில் எந்த தடுப்புச்சுவருக்கு பின்னாடி இன்னும் இருக்கிறார்கள் ?
அவர்கள் வேறு ஒரு பரிமாணத்தில் இன்னும் இருக்கிறார்கள் .

அண்ணலாரும் அறிவியலும் .14






(இன்று புறப்பட்டு நேற்று சேரும் பயணம் ) பதிவு 1
சார்லஸ் டன்னின் "Experiments with time " படித்திருக்கிறீர்களா ?சென்ற நூற்றாண்டு புத்தகம் காலப்பரிசோதனைகளைப் பற்றி மிக அற்புதமாக விவரிக்கும் புத்தகம் . இந்த புத்தகத்தின் விஞ்ஞான சேதிகளை உள்வாங்கி திரு சுஜாதா அவர்கள் காலத்தின் முன் பின் பயணம் செய்யும் "கால யந்திரம்" என்ற அறிவியல் புனைக்கதை எழுதியுள்ளார் .அவருக்குரிய சுவை குன்றாத அதே சுவராசியத்தில்.

கால யந்திரத்தை இயக்க ஒரு வகை ரிமோட் கண்ட்ரோல் கழித்தல் குறி .கூட்டல் குறி . டிராவல்பட்டன், ரிட்டன் பட்டன். இது போக 0 லிருந்து 9 வரை எண்கள் . பயணம் ரெடி
2017 இன்றிலிருந்து - 1000 வருடத்திற்கு முன் பயணிக்க " 1017 " என்று கதாநாயகன் பட்டனை அமுக்க , 1017 ஆம் வருடம் ஆட்சி செய்த முடி நாகா மாறன் ஆட்சி காலத்தில் பிரவேசிக்கிறான் கதாநாயகன்.
ஈட்டி , வேலும் கொண்டு கதாநாயகனை விரட்ட ,தப்பித்தால் போதும் என்று கண்ட்ரோலில் + 3017 அழுத்த ..... பெரிய பெரிய வானள கட்டிடங்கள் மொட்டி மாடியில் நின்று கொண்டு, செல்போன் எதுவுமே இல்லாமல் காற்று வெளியிலே பேசினாள் .அது தூரத்திலுள்ள வட்டத்தட்டிற்கும் கேட்டிருக்கும் போல , " என் மகனை வியாழன் கிரக துணை கோளான யூரப்பாவிலுள்ள ஸ்கூலில் விட்டு விடுங்கள் அவங்க அப்பா சனிக்கிரகத்தின் துணைக்கோளான டைட்டானிலிருந்து ஆபீஸ் முடிந்து அவனைக் கூட்டிக் கொண்டு வருவார்"
கதாநாயகன்அவசரத்தில் ரிட்டன்பட்டனை அழுத்த மறுபடியும் முடி நாகா மாறன் . " பிடி அவனை விடாதே பெரிய மாயக்காரனாக இருப்பான் போல...." அதே ஈட்டி அதே வேல். ஒரே ஓட்டம் ...ஓர் இருட்டறை தன்னை ஆவேசப் படுத்திக் கொண்டு மிகத் துள்ளியமாக ரிமோட்டில் " 2017 " என்று அழுத்த புறப்பட்ட அதே இடம் வருகிறான் கதாநாயகன் . உஸ்..அப்பாடா ,
இந்தக் கதை அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் "மிஹ்ராஜ் " என்ற விண்வெளிப் பயணத்தை நாளைக்கு உங்களுக்கு விவரிக்க தோதுவாக இருக்கும் என்ற நம்பிக்கையில் தந்துள்ளேன் .
இது சம்பந்தமாக உங்க விஞ்ஞான கற்பனையை நீங்கள் பதிவு செய்யுங்கள்.
நபி (ஸல்) அவர்களின் பயணம் தெளிவான உண்மையான கற்பனைக்கும் அப்பாற்பட்ட விண்வெளி பயணம் . இந்த பயணத்திலும் "காலம் " பற்றிப் பேச வேண்டியது உள்ளது. எனவே கால யந்திரக் கதை காலங் காலத்தாலே உங்களிடம் சொல்லி இருக்கிறேன்.
ரஹ்மத் ராஜகுமாரன்

**Rahmath Rajakumaran**
சில நண்பர்கள் குர்ஆனுக்கு இந்த மாதிரியான விஞ்ஞான விளக்கங்கள் சொல்லலாமா ? என்று அடிக்கடி செல்போனில் கேட்டுக் கொண்டே இருக்கிறார்கள் .
தினம் தினம் ஓதும் திருமறையின் திரு வசனங்களுக்கு ஒரு மாற்று சிந்தனை தான் இந்த விஞ்ஞான கோட்பாடுகள் .இவைகள் குர்ஆனுக்கே சுன்னா முறைக்கோ மாற்றமாக இல்லாத போது நமக்குள் ஏன் வீண் தர்க்கம் ?
நபி (ஸல்) அவர்கள் காலத்தில் பள்ளிவாசலுக்கு மினரா வைத்து கட்டியது இல்லை . இன்றைக்கு பள்ளிவாசலை விட மினராக்கள் தவிர்க்கப்படாமல் அழகுப்படுத்தப்படுகிறது. இது தப்பில்லை. நவீன காலத்தில் மினராக்கள் பள்ளிவாசலின் அடையாளங்கள் . அது மாதிரிதான் இந்த விஞ்ஞான சிந்தனைகளும் விளக்கங்களும் .
முடிந்தால் படியுங்கள் . பதிவுகளை நன்கு விளங்கிக் கொள்ளுங்கள். அப்புறமாக அவசியப்பட்டால் மட்டுமே போனில் விளக்கம் கேளுங்கள்.. தயவு செய்து அறிவுரை மட்டும் வேண்டாம் .
" இல்லை இதெல்லாம் தப்புத்தான்
போப்பா ர ரா...... ".என்று அடுத்தவர் பதிவுக்கு தாவுங்கள் எனக்கு வருத்தமே இல்லை.
என் பதிவுகளை ஒரு சமயம் நீங்கள் தவிர்க்கலாம் . நாளைக்கு உங்க சந்ததியே என் பதிவுகளைத் தேடும் இன்ஷா அல்லாஹ்

## அண்ணலாரும் அறிவியலும்15




(இன்று புறப்பட்டு நேற்று சேரும் பயணத்தின் இரண்டாம் பகுதி)

முந்தைய பதிவை ஒரு தடவை படித்து விட்டு இந்தப் பதிவை படிக்கவும்.
"ரஜப்" என்றால் கண்ணியம் , "ரஜபுல் முரஜ்ஜப் "என்றால் மஹா மரியாதைக்குரியது. இம்மாதத்தில் பண்டைய அரபுகள் சண்டை நிறுத்தம் செய்வார்கள்.
"ரஜப் மாதத்தில் வாழ்ந்து பார் ; நிறைய ஆச்சரியங்களை மகிழ்ந்து பார் " என்ற பழமொழி அரபுகளின் வழக்கத்தில் உள்ளது . அதனால்தானோ என்னவோ நபி (ஸல்) அவர்களை 'ரஜப்' மாதத்தில் இறைவன்

விண்ணுலக பயணமான மிஹ்ராஜுக்கு அழைத்துச் சென்றான் .இது பற்றி குர்ஆனில் குறிப்பிடும் போது அல்லாஹ் "சுபஹானல்லதி " என்று ஆச்சரியம் கலந்த வசனத்தை இறக்கி அருளியுள்ளான் .
"அல்லாஹ் மிகப் பரிசுத்தமானவன். அவன் (முஹம்மது நபி (ஸல்) என்னும்) தன் அடியாரை(க் கஅபா கிய ) சிறப்புற்ற பள்ளியிலிருந்து (வெகு தூரத்தில் இருக்கும் பைத்துல் முகத்தஸிலுள்ள) மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு ஒரே இரவில் அழைத்துச் சென்றான் (அவ்வாறு அழைத்துச் சென்ற) நாம் அவரை அதனைச் சூழவுள்ளவை சிறப்புற்று ஓங்க அபிவிருத்தி அடைய செய்திருக்கிறோம் . நம்முடைய அத்தாட்சிகளை அவருக்குக் காண்பிப்பதற்காகவே (அங்கு அழைத்துச் சென்றோம் ) நிச்சயமாக உங்களது இறைவன் செவியுறுபவனாகவும், உற்று நோக்கியவனாகவும் இருக்கின்றான்"
குர்ஆன் ( 17 : 01)
நபி (ஸல்) அவர்களை மக்கா ஹரம் சரீபிலிருந்து மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு அழைத்துச் சென்றான் .இந்த பயணத்தை " அல் இஸ்ரா" என்றும் அக்ஸாவிலிருந்து விண்வெளிக்கு சென்றதை மிஹ்ராஜ் என்றும் குறிப்பிடப்படுகிறது
அல் இஸ்ரா என்கிற இப் பயணம் பூமியிலிருந்து செங்குத்தாக வானவெளிக்குப் பயணம் செய்வது அல்ல , தரைக்கு இணையாக கிடைமட்டப் பயணம் .பூமியிலிருந்து சுமார் 10 அல்லது 12 அடி உயரத்தில் பூமியின் தரையைப் பார்த்தவாறே ஒரு பயணம் .
இந்த அல்- இஸ்ரா பயணம் முன்னோக்கிய பயணம் அல்ல., பின்னோக்கிய பயணம் .அதாவது இன்று புறப்பட்டு நேற்று சேர்கின்ற பயணம் . கடந்தகாலத்திற்குள் பிரவேசிக்கும் பயணம் .
அதனால்தான் நபி(ஸல்) அவர்கள் "அல் அஸ்ரக் பள்ளத்தாக்கை கடந்து சென்ற போது, நபி மூஸா (அலை) அவர்கள், உரத்த குரலில் ' தல்பியா' சொல்லிக் கொண்டு இந்த மலைக் குன்றிலிருந்து இறங்கி வந்து கொண்டிருப்பதை "இப்போதும் " நான் காண்பதைப் போன்று உள்ளது . ( சுமார் 1000 வருடத்திற்கு முன்னுள்ள கடந்தகாலத்தை இப்போதுள்ள நிகழ்காலத்தின் நிகழ்ச்சியாக நபிகளார் கண்டார்கள் )
நபி மூஸா (அலை) அவர்கள் யமனியர்களான "ஷனூஆ" குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று மாநிறமுடையவர்கள். உயரமானவர்கள் . சுருள் முடியுடையவர்கள்.
பிறகு ஹர்ஷா மலைக்குன்றின் அருகே நபியூனுஸ் (அலை) அவர்களைக் கண்டேன் .அவர்கள், கம்பளி நீளங்கி அணிந்தவர்களாகக் கட்டுடல் கொண்ட சிவப்பு ஒட்டகம் ஒன்றின் மீது ' தல்பியா' சொல்லிக் கொண்டிருப்பதை நான் இப்போதும் காண்பதைப் போன்று உள்ளது . அவர்களது ஒட்டகத்தின் கடிவாளம், ஈச்ச மர நாரிளானது " என்று கூறினார்கள்
இப்பயணத்தில் மர்யமின் மைந்தர் நபி ஈஸா (அலை) அவர்களையும் கண்டேன் அவர்கள் நடுத்தர உயரமும், சிவப்பும் வெண்மையும் கலந்த மிதமான சரும அமைப்புக் கொண்டவர்களாகவும், படிந்த தொங்கலான தலைமுடி உடையவர்களாகவும் இருந்தார்கள்
இவையெல்லாம் அல்லாஹ் எனக்குக் காண்பித்த அவனுடைய சான்றுகளில் உள்ளவை .
" நீங்கள் அவரைச் சந்தித்ததில் சந்தேகம் ஏதும் கொள்ள வேண்டாம் "
குர்ஆன் (32 : 23)
ஆதாரம் : முஸ்லீம் தமிழ் பதிப்பு 267, 268 பக்கம் 205
**Rahmath Rajakumaran**
அல் இஸ்ரா பயணம் என்பது விமானம் ஓடுதளத்தில் ஓடிக்கொண்டே முதல் டேக் அப் பில் பறக்குமே அதே மாதிரி பயணம் அல்- இஸ்ரா என்கிற நபி (ஸல்) அவர்களின் மிஹ்ராஜ் பயணத்தின் முந்தயை பயணம்

அண்ணலாரும் அறிவியலும் 16
(இதயமும் , விண்வெளிப் பயணமும் )




ஓர் இரவு நபி (ஸல்) அவர்கள் கஃபா பள்ளியில் உறங்கிக் கொண்டிருந்தனர். அப்போது 3 வானவர்கள் வந்தனர் .அங்குப் படுத்திருந்த ஹம்ஸா (ரலி) , முஹம்மது (ஸல்) , ஜஅஃபர் (ரலி) ஆகியோரை நோக்கி ." இவர்களில் அவர் (முஹம்மது (ஸல்) ) யார் ? என்று முதல் வானவர் கேட்க,
"இவர்களில் நடுவில் படுத்திருக்கும் இவரே சிறந்தவர் " என்று இரண்டாம் வானவர் கூற,
"இவர்களில் சிறந்தவரை விண்வெளிப் பயணத்திற்காக எடுத்து வாருங்கள்" என்று மூன்றாம் வானவர் சொல்ல,
தூங்கிக் கொண்டிருந்த நபி (ஸல்) அவர்களை தூக்கிக் கொண்டு
"ஸம் ஸம்" கிணற்றின் அருகே கொண்டு வந்தனர் .அவர்களிடமிருந்து வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் பெற்றுக் கொண்டனர் .
ஜிப்ரயீல் (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் புஜத்தின் காறை எலும்பில் இருந்து நெஞ்சின் நடுப்பகுதி வரை பிளந்து, நெஞ்சில் இருந்தவற்றையும் , வயிற்றில் இருந்தவற்றையும் அகற்றினர் .பின்னர் தமது கையால் நபியவர்களின் இதயத்தை தனியே வெளியே எடுத்து .ஸம் ஸம் நீரால் கழுவி, அவர்களது வயிற்றைச் சுத்தப்படுத்தினார்.
பிறகு தங்கத் தட்டு ஒன்று கொண்டு வரப்பட்டது. அதில் தங்கக் கோப்பை ஒன்று இருந்தது. அது இறைநம்பிக்கையாலும், ஞானத்தாலும் நிரப்பப்பட்டிருந்தது.
அதை நபியவர்களின் இருதயத்திலும், தொண்டை நாளங்களிலும் இட்டு நிரப்பினார் ஜிப்ரயீல் . பின்னர் இருதயத்தை உள்ளே வைத்து மூடிவிட்டார் .
ஆதாரம் : இப்னு கஸீர் பாகம் 5 பக் 151
விஞ்ஞானப் பார்வையில். பூமியின் ஒரு நிமிடத்திற்கு 72 தடவை துடிக்கும் இதயத்தை , விண்வெளியின் கால வெளியின் காலத்திற்கு தக்கவாறு மாற்றி அமைக்க வேண்டிய கட்டாயம் உள்ளதாக "The High Fronter" ( "மேல் எல்லை " ) என்ற நூலில் விண்வெளி விஞ்ஞானி ஜெரால்டு ஓ . நீல் என்பவர் குறிப்பிடுகிறார்.
இதயம் என்ன வேலை செய்கிறது ?
நாம் என்ன வேலை செய்தாலும் அதற்குரிய ஆக்ஸிஜன் செலவாகிறது . காற்றில் உள்ள ஆக்ஸிஜனை ரத்தத்தில் கலக்க 'பம்ப்' செய்வது இதயத்தின் வேலை.
நாம் சாதாரணமாக நிற்க வேண்டும் என்றால் ஒரு மெட் ஆக்ஸிஜன் தேவை.
நடப்பது, குளிப்பது (2 - 5 ) மெட்
ஓடுதல்,முத்தமிடல் (மனைவியை) (6 - 7)
செக்ஸ் உறவு (8_9) மெட்
80 பவுண்ட் எடையை தூக்குவது அல்லது 24 பவுண்ட் எடையை கொண்டு படிக்கட்டு ஏறுவது (9 மெட் க்கு மேலே )
நபி(ஸல்) அவர்களின் விண்வெளிப் பயணம் ஒளியின் வேகத்தில் 1விநாடிக்கு
3 லட்சம் கி.மீ அதற்குப் பயன்படுததப்பட்ட புராக் என்ற ஜீவன் கோவேறு கழுதையை விடச் சிறியதும், கழுதையை விடப் பெரியதுமான வெள்ளை நிறத்தில் அமைந்த புராக் என்னும் மின்னல் வேக ஜீவன் , அது பார்வை எட்டுகிற தூரத்திற்குத் தனது தனது கால் குளம்பை எடுத்து (எட்டு) வைக்கும் .அதில் ஏறி நான் பைத்துல் மக்திஸ் ( ஜெருசேலம்) இறை ஆலயம் வரை சென்றேன் . முஸ்லீம் 259
மின்னல் வேகத்தில் பயணிப்பதால் அதற்கு எத்தனை மெட் ஆக்ஸிஜன் தேவை ? தெரியவில்லை
காற்று மண்டலம் தாண்டியதும் ஆக்ஸிஜன் தொடர்பு இல்லாத போது இதயம் எப்படி வேலை செய்தது ?
கதிர்வீச்சை எப்படி சம்மாளிப்பது ? .... தெரியவில்லை
இது மாதிரி நிறைய பதில் தெரியாத கேள்விகள் உங்களுக்கும் எனக்கும் கேட்கத் தோன்றும்.
ஆமா,கேள்வியை யாரிடம் கேட்பது ?

**Rahmath Rajakumaran**
இருதய அறுவை சிகிச்சை நபி (ஸல் ) அவர்களுக்கு 4 முறை நடந்துள்ளது
1) 3 அல்லது 4 வயதில் ஹலீமா(ரலி) அவர்களிடம் வளர்ந்த வந்த சமயம்
2) பத்தாவது வயதில்
3) நபித்துவம் வழங்கப்பட்ட போது ஹிரா குகையில்
4) மிஃராஜ் விண்வெளி பயணத்தின்போது
ஆதாரம் முஸ்லீம் 161

அண்ணலரும் அறிவியலும்.17 30-11-2017
(கொள்ளுப் பேரரின் கொள்ளுப் பேரர்)










நபி (ஸல்) அவர்கள் புராக் வாகனத்தின் மூலமாக கஃபாவிலிருந்து புறப்பட்டு பைத்துல் மக்திசிஸ் இருக்கிற ஜெருசலம் வந்து சேர்ந்தார்கள் .
"இறைத்தூதர்கள் தமது வாகனத்தைக் கட்டி வைக்கும் வளையத்தில் எனது புராக்கை கட்டி வைத்து அந்த இறையாலயத்திற்குள் நுழைந்தேன் இரண்டு ரக்அத்கள் தொழுதேன் "
முஸ்லீம் (259)
(மிஹ்ராஜிற்குப் பிறகு தானே தொழுகை கடமையாக்கப்பட்டது அப்போ இந்த இரண்டு ரக்அத் தொழுகை ...? நண்பர்கள் விளக்குவார்கள்)
நபியவர்கள் பைத்துல் மக்திசில் இறங்கினார்கள். அவர்களுடன் அனைத்து நபிமார்களும் இறங்கினார்கள் .நபியவர்கள் தலைமையேற்று தொழுகை நடத்தினார்கள் .மற்ற நபிமார்கள் பின் தொடர்ந்து தொழுதார்கள்.
இப்னு கஸீர் பாகம் 5 பக் 184.
ஆதி பிதா ஆதம் (அலை) அவர்கள் முதல் அனைத்து நபிமார்களும் பின் தொடர்ந்து தொழுதார்கள் . ஆதம் (அலை) அவர்கள் நினைத்திருக்கலாம் "நமது கொள்ளுப் பேரரின் கொள்ளுப் பேரர் இந்த நபி (ஸல்) அவர்கள் " என்று

சந்தோஷப்பட்டிருக்கலாம்.
இதெல்லாம் சாத்தியமா ? அதெப்படி காலம் கடந்த உறவுகள் அதுவும் உயிருடன் எப்படி சந்திக்க முடியும் ? என்றெல்லாம் உங்களுக்கு கேள்வி எழும் . அதை தீர்த்து வைக்க கொஞ்சம் விஞ்ஞானக் கதை பேசுவோம் . என்றாவது ஒரு நாள் உங்கள் வீட்டின் கதவு தட்டப்பட்டு, 'யார் வந்தது என்று நீங்கள் கதவைத் திறந்துப் பார்த்தால் , ஒரு சிறுவன் நின்று கொண்டு, "நான் உங்களின் கொள்ளுப் பேரரின் கொள்ளுப் பேரன் '' என்று சொன்னால், உடனே கதவை டமா ரென்று மூடி விடாதீர்கள் .அவன் கூறுவது முற்றிலும் உண்மையாக இருக்கலாம் . ஆயிரம் ஆண்டுகளுக்கு அப்பாலிருந்து கால யந்திரம் எனப்படும் " Time machine" துணையோடு உங்களை காண வந்தவனாக இருக்கலாம் .இது போன்ற அறிவியல் புனைக்கதையை 1895 - ல்லேயே " Time machine " என்ற பெயரில் H.G WELLS விஞ்ஞான புனைக்கதை எழுதியுள்ளார் . ரொம்பவும் சுவராசியமாக இருக்கிறது.
ஆரம்பத்தில் ஸ்டீபன் ஹாக்கிங் போன்றவர்கள் இந்த விஞ்ஞானக் கோட்பாட்டை எள்ளி நகையாடினார்கள் இப்போது இது மாதிரி நிச்சயம் நடக்கும் என்பதாக "WELCOME TIME TRAVELLERS " என்று பெரிதாக எழுதி வைத்து அதையும் விழா எடுத்து கொண்டாடி , தன் கொள்ளுப் பேரனின் கொள்ளுப் பேரனுக்காக காத்திருக்கிறார் இந்த நவீன விஞ்ஞானி ஸ்டீபன் ஹாக்கிங்
இந்த காலப் பயணக் கோட்பாடு 1400 வருடத்திற்கு முன்பே நபி (ஸல்) அவர்கள் மூலமாக அல்லாஹ் செய்து காட்டி, இந்த பூமியிலேயே ஆதி பிதா ஆதம் (அலை) அவர்களையும் அவர்களின் கொள்ளுப் பேரரின் கொள்ளுப்பேரரான நபி (ஸல்) அவர்களையும் சந்திக்க வைத்தான்.
பைத்துல் முகத்திஸ் பள்ளியில்
நபி ( ஸல்) அவர்கள் இமமாக தலைமையேற்று நின்ற இடம் அப்போதைய நிகழ்காலம் , அதற்கு பின் மூன்று அடி பின்னால் நின்ற ஆதம் (அலை) அவர்கள் முதல் காலம் கடந்த மற்ற நபிமார்கள் நின்ற இடம் கடந்த காலத்தின் எல்லை .இப்போது தொழுகை நடைபெறுகிறது .
இது பற்றி குர்ஆர்னிலும் ஒரு சம்பவத்தை அல்லாஹ் குறிப்பிடுகின்றான்
"ஒரு கிராமத்தின் பக்கமாகச் சென்றவரைப் போல் - அந்த கிராமத்தின் உள்ள வீடுகளின் முகடுகளெல்லாம் இடிந்து விழுந்து பாழடைந்து கிடந்தன.இதைப் பார்த்த உஜைர்
" இவ்வூர் இவ்வாறு அழிந்து மரித்தப் பின் இதனை அல்லாஹ் எப்படி உயிர்ப்பிப்பான்...? என்று வியந்து கூறினார்.
ஆகவே அல்லாஹ் அவரை நூறாண்டுகள் வரை இறந்து போகும் படிச் செய்தான் .பின்னர் அவரை உயிர் பெற்றெழும்படிச் செய்து, "எவ்வளவு காலம் இந்நிலையில் இருந்தீர்..? என்று அவரைக் கேட்டான். அதற்கவர், "ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறு பகுதியில் இவ்வாறு இருந்தேன்" என்று கூறினார். "இல்லை நீர் இந்நிலையில் நூறு ஆண்டுகள் இருந்தீர் - இதோ பாரும் உம்முடைய உணவையும் உம்முடைய பானத்தையும் அவை எந்த விதத்திலும் கெட்டுப் போகாமையினால் மாறுதல் அடையவில்லை .ஆனால் உம்முடைய கழுதையைப் பாரும் : அது செத்து, மக்கி எலும்பாகக் கிடக்கின்றது .....
குர்ஆன் (2 : 259)
உணவுக்கு ஒரு நாளின் சிறிது பாகம்தான் காலம்தான் கடந்திருக்கிறது அதனால் அவ்வுணவு கெட்டுப் போகவில்லை அதே மூன்று அல்லது நாலே அடி தூரத்திலுள்ள உஜைர் நபிக்கும் கழுதைக்கும் 100 வருடங்கள் கடந்து போகிறது.
இதுதான் காலத்தின் விநோதம்

**Mohammed Thaha**

இடம் ,பொருள்,காலம் ,விசை,அணு இன்னும் பல பரிமாணங்களும் அவனே என்பது தங்கள் விளக்கும் அல்குர்ஆனின் விஞ்ஞானத்திலிருந்து ஆய்வுகள் மூலம் நீரூபணமாகிக்கொண்டிருக்கிறது .அதை நம் மெய்ஞான கண்களால் உணரக்கூடிய பார்க்கக்கூடிய ஆற்றலையும் பாக்கியத்தையும் நம் ஷைகுமார்களின் துணையை கொண்டு எல்லா பரிமாணங்களாக இருந்துகொண்டிருக்கக்கூடிய அல்லாஹ் தந்தருள்வானாக ஆமீன்!

**Rahmath Rajakumaran**

அதுவும் மிஹ்ராஜ் பயணத்தில்தான் அளவு கடந்த அதி நவீன விஞ்ஞான கோட்பாடுகள் நிரூபிக்கப்பட்டிருக்கிறது
நபி (ஸல்) அவர்களின் வாழ்வை விஞ்ஞான உலகம் திரும்பி பார்க்கும் காலமும் அதி சீக்கிரத்தில் வரும் . இன்ஷா அல்லாஹ்



(இடமும், உணவும் )
நபி (ஸல்) அவர்கள் ஏழு வானம் தாண்டி '"சித்ரத்துல் முன்தஹா " என்ற வான எல்லையை அடைகிறார்கள். ஜிப்ரயீல் (அலை) மற்றும் வானவர்கள் இருக்கும் தளம் . சொல்லப்போனால் இது ஒரு வேற்று கிரகம் மாதிரி.
"என்னிடம் இரண்டு பாத்திரங்கள் கொண்டு வரப்பட்டன .ஒன்றில் மதுவும், மற்றொன்றில் பாலும் இருந்தது. நான் பாலைத் தேர்ந்தெடுத்தேன். அப்போது "இயற்கை நெறியையே நீங்கள் பெற்றுள்ளீர்கள். இறைவன் உங்கள் மூலம் இயற்கை நலனையே நாடியுள்ளான். உங்கள் சமுதாயத்தாரும் அந்த இயற்கை நெறிலேயே உள்ளனர்" என்று கூறப்பட்டது.
விஞ்ஞான ஆய்வின்படி மனிதன் வானவெளியிலுள்ள மற்ற கிரகங்களில் வாழ்வதற்கு இரண்டு வழிமுறைகள் உண்டு .
1) அந்தக் கிரகங்களில் வாழ்வதற்கு நம்மைப் பழக்கிக் கொள்ள வேண்டும் . இந்த முறையை "பான்ட்ரோபி' (Pantropy)
என்கின்றார்கள்
2) டெர்ரா ஃபார்மிங் (Terra Forming) அந்த வானவெளி இடத்தில் மனிதன் பறக்கவோ . நீரில் முழ்கி வாழவோ, சுவாசிக்க ஆக்ஸிஜனுக்குப் பதில் நைட்ரஜனையோ, சுவாசிக்கப் பழகுதல் .
இதற்கு ரொம்ப சிம்பிள் அந்த கிரகத்தில் கிடைக்கக்கூடிய உணவை உட்கொண்டதும் . உடம்பு அந்த இடத்திற்கு தக்கவாறு மாறிக் கொள்ளும்
எனவே நபி (ஸல்) அவர்கள் வான எல்லையான சித்ரத்துல் முன்தஹாவை அடைந்ததும் அவர்களுக்கு பாலும் மதுவும் கொடுக்கப்பட்டததில் அவர்கள் பாலைத் தேர்வு செய்து குடித்தார்கள் இப்போது அவர்களின் உடம்பு அந்த சிரத்துல் முன்தஹா என்ற கிரகத்தின் சூழ் நிலைக்கு தக்கவாறு தகவமைத்துக் கொண்டது.
இதே மாதிரி வானவர்கள் பூமிக்கு வந்தால் இங்குள்ள உணவுகளை அவர்கள் உண்பதில்லை.
ஒரு சமயம் வானவர்கள் பூமிக்கு மனித உருவில் வந்து நபி இப்ராஹீம் (அலை) சந்தித்த போது விருந்தாளிகளுக்காக இளங் கன்றை பொறித்து உணவு பரிமாறப்பட்ட போது அவர்கள் அந்த உணவை உண்ணவில்லை என்பதாக
குர்ஆன் (51 : 27) மூலம் விளங்க முடிகிறது .

ஒரு குட்டி லைப்ரரி 06-12-2017



சொந்தமாக உங்கள் வீட்டில் ஒரு லைப்ரரி ஆரம்பித்தால் என்ன ? இதற்காக நீங்கள் நிறைய செலவழிக்க வேண்டாம்
மாதம் இருநூறு எடுத்துக்கொண்டு பழைய புத்தகக் கடையில் உள்ள உங்களுக்கு எந்த புக் பிடிக்கிறேதோ அதை வாங்குங்கள் 3 புக் வாங்கி இருப்பீர்கள் மொத்தத்தில் 60 ரூபாய் வரும் கொஞ்சம் குறைத்து விலையை போடுங்கள் என்று பேப்பர் வியாபாரியிடம் சொன்னதும் சரி ரூபாய் அறுபதுதான் இலவசமாக இந்த சின்ன புக என்று " எய்ட்ஸ் நோயும் அதன் தடுப்பு முறைகளும் " எடுத்து தருவார் முகம் சுழிக்காமல் வாங்கிக்கொண்டு (3 புக் +1 புக் ) வரும் போது அடுத்து
லைப்ரரிக்குள் போனால் ஒரு நபர் 3 புக் வரை எடுக்கலாம் மூன்றில் ஒரு புக் நமக்கு சொந்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று நீங்கள் விரும்பினால் உடனே ஜெராக்ஸ் புக் ஜெராக்ஸ் உங்களுக்கு சொந்தம் " மறுபிறப்பு பற்றிய ஆச்சரியமான தகவல்கள் " - "எஸ் குருபாதம் " விலை ரூபாய் 250 என்ன செய்வது ? சரி மொத்த பக்கம் 370
பக்கம் ஜெராக்ஸ் கடை " இந்த புக்கை அட்டை டு அட்டை ஜெராக்ஸ் பிளஸ் ஸ்பைரல் பைண்டிங் எவ்வளவு ? புக் விரிச்சி இரண்டு பக்கத்தை ஒரே பக்கமாக்கி பக்கத்திற்கு 40 பைசா 370 பக்கம் 185 பக்கமாகி ஒரு பக்கத்திற்கு 40 பைசா ரூபாய் 74 ஸ்பைரல் 15 ரூபாய் மொத்தம் 90 ரூபாய் இப்போது மறுபிறப்பு உங்கள் புத்தகம்
ஆக பழைய புக் 3 க்கு 60 ரூபாய் xerox புக்கிற்கு 90 ரூபாய் கொண்டு வந்த ரூபாய் 200 இன்னும் 50 ரூபாய் இருக்கு அடுத்து
புதுசாக புத்தகக் கடையில் ரூபாய் 50க்குள் ஒரு புக் என்ன வாங்கலாம் அதோ ஒரு சின்ன புக் எடுங்கள் . . . .
" உங்களை அருமையானவராக்கும் ஞான வரிகள் ." . - பரமஹம்ஸ் நித்யானந்தர்
அட , நம்ம நித்தி
இப்போ ரூபாய் 200 க்கு 5 புக் உங்கள் குட்டி லைப்ரரியை அலங்கரிக்கும் இப்படியே மாதம் 5 அல்லது 7 புக் ஒரு வருடத்தில் 85 புக் அடுத்த வருடம் இன்னும் கொஞ்சம் அதிகமாக . .ஒரு சின்ன உறுதி உங்களுக்குள்ளே நீங்கள் செய்து கொள்ளுங்கள் . . . . . அவ்வளவுதான் லைப்ரரி ரெடி
அடுத்து எப்படி நேரம் ஒதுக்கி படிப்பது ?
இன்ஷா அல்லாஹ் நாளை . . . . .
ரஹ்மத் ராஜகுமாரன்

மறைவான ஞானமும், தெளிவான முன்னறிவிப்புகளும் DEC 2017
( கஃபாவின் சாவி )





எதிர்காலத்தில் நடக்கப் போவதை முன்கூட்டியே சொல்வது மனித சரித்திரத்தில் ஒரு வசீகரமான அம்சமாக இருந்து வருகிறது.
"நாஸ்ட்ராடமஸ் " பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். தெற்கு பிரான்ஸில் ரெமி என்னும் நகரில் 1503 ல் யூதராக பிறந்து பின் கத்தோலிக்க கிருஸ்துவராக மாறியவர்.
தின வாழ்வில் மூலிகை வைத்தியர். இருந்தாலும் சுமார் ஆயிரம் எதிர்காலச் சம்பவங்கள் நடக்கும் என்று அவர் குறி சொல்லி இருக்கும் " நூற்றாண்டுகள் " புத்தகம் உலகில் பிரபலம் . புத்தகம் முழுக்க கவிதையில் ஒரு மாதிரியான ஸ்டைலில் இப்படியும் இல்லாமல் அப்படியும் இல்லாமல் அயோமயமாக எதிர்காலங்கள் குறித்து எழுதி உள்ளார் .
பிரஞ்சுப் புரட்சி, நெப்போலியன் வாழ்வும் தாழ்வும், ஹிட்லர் இரண்டு உலகப் போர்கள் , இரான் - இராக் சண்டை அட, அமெரிக்க இரட்டை கோபுரத் தாக்குதல் உட்பட எல்லாமே இருக்கிறது .கவிதை வடிவில் .
ஏன் ர.ரா வீட்டு பூனை இரண்டு குட்டி போட்டது கூட ஒரு கவிதையை வரியில் சொல்லப்பட்டிருக்கிறது அந்த கவிதையை ர.ரா மொழி பெயர்த்து சந்தோஷப்பட்டுக் கொள்ள
வேண்டியதுதான்.
நீங்கள் எப்படி வேண்டுமானாலும் அர்த்தம் வைத்துக் கொண்டு பார்த்தால் நீங்கள் நாளைக்கு வாங்கப் போற பைக்கு கூட பதிவு செய்யப்பட்டிருக்கிறது . நெற்றிப் பொட்டில் அடித்தாற்போல் எந்த செய்தியும் தெளிவாக இல்லை உங்கள் மனம் போல் நீங்களே விளங்கிக் கொள்ள வேண்டும்.
இது என்ன முன்னறிவிப்பு ?
ஆனால் நபி (ஸல்) அவர்கள் கூறியது கல்லில் எழுதிய தெளிவான நிகழ்வுகள்.
நபி (ஸல்) அவர்கள் தொழுவதற்காக
கஃபா சென்றார்கள். கஃ பாவின் சாவி அப்போது உஸ்மான் இப்னு தல்ஹா என்பவரிடம் இருந்தது. அவரோ இஸ்லாமை ஏற்றுக் கொள்ளாதவர். அவரிடம் சென்று சாவியைத் தரும்படி நபி (ஸல்) அவர்கள் கேட்ட போது தர மறுத்து விட்டார்.
"ஒரு நாள் இதே சாவி என் கைகளில் வந்து சேரும். அப்போது நான் யாருக்கு நாடுவேனோ அவரிடம் அதை ஒப்படைப்பேன்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்
"அன்றைக்கு என்ன குறைஷிகள் எல்லாம் ஒழிந்து விடுவார்களோ ?" என்று உஸ்மான் எகத்தாளமாகக் கேட்டார் .
"இல்லை ... அன்றைய தினம் குறைஷிகளுக்கு பெருமைக்குரிய நாளாக இருக்கும் " என்று நபி (ஸல் ) கூறினார்கள்
ஆண்டுகள் பலவாயின , மக்கா முஸ்லீம்களால் வெற்றி கொள்ளப்பட்டது .அதே உஸ்மான் கஃபாவின் சாவியைப் பணிவோடு கைகளில் ஏந்திய வண்ணம் இறைத்தூதர் (ஸல் ) முன் தலை குனிந்து நின்றார் .
பழைய சம்பவத்தை நபி (ஸல்) எல்லோர் முன்னிலையும் ஞாகப்படுத்தினார்கள்.
உஸ்மான் அவர்களால் தாள முடியவில்லை. "நீங்கள் இறைவனின் தூதரேதான் எனப் பெருங்குரலெடுத்துக் கத்தினார் .
சாவியைப் பெற்றுக் கொண்டு நபி (ஸல்) அவர்கள், அந்த சாவியை திருப்பி உஸ்மானிடமே கொடுத்து " கியாமத் - இறுதி தீர்ப்பு நாள் வரை உங்களிடமிருந்து (உங்கள் வம்சத்தைச் சார்ந்தோரிடமிருந்து ) யாரும் சாவியை பெற முடியாது" என்றும் கூறினார்கள் .
இன்னும் அந்த சாவி உஸ்மான் இப்னு தல்ஹா (ரலி) அவர்களுடைய பரம்பரையினரிடமே இருந்து வருகிறது கியாமத் நாள் வரை அவர் சந்ததியினரிடமே இருந்து வரும். இன்ஷா அல்லாஹ்
நபி (ஸல்) அவர்களின் முன்னறிப்பில் இன்னொரு மகத்தான சேதி உஸ்மான் இப்னு.
தல்ஹா (ரலி) அவர்களின் சந்ததி தொடர் கியாமத் நாள் வரையிலும் தொடரும் என்பது தான்

Rahmath Rajakumaran

**Ahamed Jinnahsherifudeen**

இதுபோல் பல உதாரணங்கள் உண்டு எனது பதினோராவது காவியம் "அன்னை கதீஜாவும் அஹ்லுல்பைத்துகளும்" அதில் பொருத்தமான சிலவற்றைப் பதிவு செய்துள்ளேன். ஒன்று ஹஸன் (ரலி) பற்றியது. சுருக்கமாக, ஒரு முறை அவரைக் காட்டி இவர் எனது மகன் பின்னொரு காலத்தில் இஸ்லாமியர்களுக்கிடையில் பிளவு ஏற்படும்போது இவரால் அது தவிர்க்கப்படும் என்றார்கள். அது நடந்தது. முஆவியா (ரலி) அவர்களுக்கும் அவருக்கும் இடையில் நடைபெற்ற அதிகாரச் சிக்கலில் முஸ்லிம்களிடையே பிளவு தோன்றக் கூடாது என்பதற்காக மாபெரும் சாம்ராஜ்யத்தை முஆவியா (ரலி) அவர்களுக்கு விட்டுக்கெடுத்து அவர் ஆட்சியில் ஒரு சாதாரண பிரஜையாக வாழ்ந்தார்கள் என்பது

மறைவான ஞானமும் , தெளிவான முன்னறிவிப்புகளும்
(கிழித்த கடிதம் போல் கிழிந்த குரூஸ் )







ஹுதைபிய்யா உடன்படிக்கைப் பிறகு பல நாட்டு மன்னர்களுக்கு இஸ்லாமை ஏற்றுக்கொள்ளும் அழைப்போலைகளை நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள்
பாரசீகத்தை ஆண்ட மன்னர்கள் "கிஸ்ரா" அல்லது "குஸ்ரூ" (Khosrau) என்றழைக்கப்பட்டனர் .பாரசீகம் அரசு ஈரானை தலைநகராக கொண்டு ஆண்ட மன்னர் குஸ்ரூ பர்வேஸுக்கும் அழைப்போலையை அனுப்பி வைக்கப்பட்டது.
" வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வையன்றி வேறு இறைவன் என யாரும் கிடையாது. நான் அவனால் அனுப்பட்ட தூதராவேன் . இவ்வுலகில் வசிக்கும் ஒவ்வொருவரிடமும் இறை வேதனையைச் சுட்டிக்காட்டி எச்சரிக்க வேண் டும் என்பதற்காகவே முழு உலகிற்கும் தூதராக அவன் என்னை அனுப்பி உள்ளான்"
இஸ்லாமை ஏற்றுக் கொள்ளுங்கள் அமைதியோடு வாழ்வீர்கள் இல்லையெனில் மஜூஸிகள் அனைவருடைய (பாவ) சுமையையும் நீங்கள் சுமக்க நேரிடும்
இத்திருவோலையைப் படித்தவுடன் பர்வேஸுக்கு ஏற்பட்ட கோபம் கொஞ்ச நஞ்சமல்ல ." என்னுடைய அடிமையாக இருந்து கொண்டு எனக்கு ஒலை அனுப்புகிறான் என்றால் என்ன நெஞ்சழுத்தம் இருக்க வேண்டும்" என்றவாறு பற்களை நற நறவென்று கடித்தான் .கடிதத்தைச் சுக்குநூறாகக் கிழித்தெறிந்தான் .
ஹீஜாஸுக்கு ஆள் அனுப்பி இறைத்தூதர் என்று உளறிக் கொண்டிருப்பவனைக் கைது செய்து தன் முன்னால் கொண்டு வந்து நிறுத்துமாறு யமன் மாகாண ஆளுநர் பாஸானுக்கு உத்தரவு பிறப்பித்தான் .
அவ்விதமே மதீனாவுக்கு இரண்டு அதிகாரிகளை பாஸான் அனுப்பி வைத்தான். அவ்விருவரும் மதீனா சென்று நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள்
"உலகாளும் பேரரசர் உங்களை வரச் சொல்லி உள்ளார். சந்திக்க வரவில்லையென்றால் நீங்களும் உங்களுடைய நாடும் பேராபத்துக்களைச் சந்திக்க வேண்டியதிருக்கும்.
"நீங்கள் இருவரும் திரும்பிச் செல்லுங்கள் கிஸ்ரா ஆட்சியின் ஆணிவேர்களையும் இஸ்லாம் ஒரு நாள் அடைத்து விடும். என்று சொல்லுங்கள்" என்று நபி (ஸல்) மறுமொழி கூறினார்கள் .
வந்தவர்கள் நபிகளாரைவற்புறுத்தி அழைக்க . "உங்கள் குஸ்ரூ இப்போது இல்லை . போங்கள் என்று கிஸ்ரா குஸ்ரூ கொலை செய்யப்பட்டுள்ளார் என்ற தகவலையும் தெரிவித்தார்கள்.
தூதர்கள் யமனுக்குத் திரும்பினார்கள். பர்வேஸ் தன்னுடைய மகன் ஷீர்தியாவால் கொலை செய்யப்பட்டு கிழித்த கடிதம் போல் கிழித்தெறிய்ப்பட்டான். என்ற தகவலும் யமனை வந்தடைந்தது.
நபி (ஸல்) கிஸ்ராவின் தூதர்கள் சந்தித்த அதே தினம் தான் கிஸ்ரா கொலை செய்யப்பட்டிருக்கிறான்
பிற்காலத்தில் சஅத் இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்கள் ஈரானை வென்ற போது பாரசீக சாம்ராஜ்யம்முழுமையாக கவிழ்ந்தது இஸ்லாம் அங்கு மலர்ந்தது.

குறிப்பெடுத்து புத்தகங்கள் படிப்பது




புத்தகங்கள் படிக்கும் போது ஒரே புத்தகத்தை எடுத்து படிக்கும் போது புத்தகத்தின் நாலாவது பக்கத்திலே தூக்கம் வந்து விடும் எனவே நீங்கள் படிக்க வேண்டிய புத்தகங்கள் குறைந்தது நாலு புத்தகங்கள் எடுத்துக் கொள்ளவும் அதுவும் நான்கு விதமான தலைப்புகளில் தேர்வு செய்யுங்கள்
முதல் புத்தகம் தூக்கம் வருகிற இருந்தால் அடுத்த புத்தகம் அதுவும் தூக்கத்தை வரவழைத்தால் அடுத்து . . .இப்படி
இலக்கிய படைப்புகள் சிறுகதைகள் கவிதைகள் நாடகம் நாவல் . போன்றவற்றில் சொல்லப்படும் விஷயங்கள் நம் வாழ்வியல் நிகழ்வுகளுடன் ஒத்துப் போகும் போது ஒரு முறை படித்தாலே நம் மனதில் பதிந்துவிடும்
கல்லூரி பாடப்புத்தகங்கள் போட்டி தேர்வுகள் ஹதீஸ்கள் விஞ்ஞான புத்தகங்களில் கொட்டி கிடக்கும் ஏராளமான தகவல்களை நினைவில் வைத்துக் கொள்வது கடினம் அப்போது முக்கிய குறிப்புகள் கோட்பாடுகள் பொன்மொழிகள் போன்றவற்றை வெவ்வேறு வண்ண மைகளால் கோடிடுவது ரிவிஷன் செய்தல் போதுமானது
சிறிய பாக்கெட் டயரியில் குறிப்பெடுவது எளிதில் மறக்காது
முக்கியமான தகவல்களை சித்தரவடிவில் படம் வரைதல் மிகச் சிறந்த வழி
உதாரணமாக எரிசக்தி குறித்த பாடத்தில் அதில் வரும் சூரியன் காற்றாலை காய்கறி கழிவுகள் நிலக்கரி அணுமின் உலை உள்ளவற்றின் மூலம் மின்சாரத்தை உற்பத்தி மூலங்கள் என்று சின்னதா படம் வரைதல் இது தேர்வு எழுதம் போது பயான் செய்யும் போது ரொம்பவும் பயன்படும்
லேப் - டாப் மற்றும் இணையத்தில் படிக்கும் போது அப்படியே அதில் குறிப்பெடுக்க Word pad போன்றவற்றை பயன்படுத்தலாம்
எடுத்த குறிப்பெடுகளில் இருந்து கட்டுரை எழுதலாம் பயான் செய்லாம் கலந்துரையாடல் செய்யலாம் தகவல்களை உங்களுக்கு தெரிந்த விஷயங்களோடு ஒப்பிட்டு ஞாபகத்தில் வைத்தால் பயான் செய்யும் போது குறிப்பெடு பார்க்கமலே தொடர்ந்து பயான் செய்ய முடியும்
உதாரணமாக பைக் சாவியை எப்போது வைக்கும் இடத்தில் வைக்காமல் ஹெல்மேட்டில் போட்டு வைத்தால் ஜங்ஷன் வேலை ஞாபகத்திற்கு வரும்
செருப்பை இரவில் மாற்றி போட்டால் காலையில் செருப்பை காலில் போது அட நம்ப காஜா வீட்டில் புதுமனையில் பால் காய்ப்பு . . . . . . . இப்படி செய்கிற வேலையை ஞாபகத்தில் வைக்கிற மாதிரி காரூனைப் பற்றி சொல்லும் போது சூரியனை அவன் கும்மிட்டான் சின்னதா சூரியபடம்
பனீ இஸ்ரவேலர்கள் பற்றி சொல்லும் காளை மாடு வானம் வரைந்து மன்னு - ஸல்வா கீழே விழுற மாதிரி கடல் வரைந்து இரண்டா பிளக்கிற மாதிரி அந்தப் படங்களில் சிவப்பு கலரில் அந்தந்த குர்ஆன் வசனங்கள் அதை மாதிரி கை விரல் கணுக்களின் இடது கையில் குர்ஆன் அத்தியாயம் வலது கையில் கணுக்களில் குர்ஆன் வசன எண் குறித்து ஞாபகத்தில் வைக்கலாம் . . . அதற்காக பேனா வைத்து கையில் எழுதக் கூடாது இந்த சம்பவம் பேசும் போது இந்த விரலை மடக்க வேண்டும் என்கிற ஞாபகம் இதன் மூலம் குறிப்பெடுகள் இல்லாமல் ஒன்றறை மணி நேரம் பேச முடியும்

மறைவான ஞானமும் , தெளிவான முன்னறிவிப்புகளும் 3.
(ஷஹீதிலும் பெண்ணின் போட்டி)



இஸ்லாத்தில் வீரம் என்பது ஆண்களுக்கு என்று உரித்த குணமாக இருந்தாலும் ஆண்களை முந்திக் கொண்டு முன்னணியில் நிற்கும் எத்தனை எத்தனையோ பெண்மணிகளும் இஸ்லாமிய வரலாற்றில் காண முடியும்.
உம்மு ஹராம் என்றொரு ஸஹாபியா . நபி (ஸல் ) அவர்களுக்கு சிற்றன்னை உறவு . புகழ் பெற்ற நபித்தோழர் உபாதா இப்னு ஸாமித் (ரலி) அவர்களின் அருமை மனைவி . நபி (ஸல்) அவர்கள் அடிக்கடி ஓய்வெடுக்க இவர்களுடைய வீட்டிற்குப் போவார்கள்.
உம்மு ஹராம் இஸ்லாமிய போர் படை புறப்படும் போதெல்லாம் உடன் செல்வது வழக்கம். காயம் பட்டுக் கிடப்போருக்குப் பணிவிடைகள் புரிவது; மருத்துவ சிகிச்சை, முதலுதவி , வாய்ப்புக் கிடைத்தால் வாளையும் சுழற்றுவார்கள்.
ஒரு நாள் உம்மு ஹராமுடைய வீட்டில்
நபி (ஸல்) தலையைச் சாய்த்து உறங்கிக் கொண்டிருந்தார்கள் .உம்மு ஹராம் தலைமாட்டில் அமர்ந்து கொண்டு தலையைக் கோதிச் சிக்கெடுத்துக் கொண்டிருந்தார்கள்.
திடீரென நபி (ஸல்) அவர்கள் புன்னகை தவழ எழுந்து அமர்ந்தார்கள். " இறைத் தூதர் அவர்களே..
தங்களுடைய புன்னகைக்கு என்ன காரணம் என்பதை நான் அறிந்து கொள்ளலாமா ?" என்று உம்மு ஹராம் கேட்டார்கள்
"என் உம்மத்தைச் சேர்ந்த சிலர் அல்லாஹ்வின் பாதையில் கடல்மேல் பயணம் செய்யும் அறப்போர் வீரர்களாக அரியாசனங்களில் வீற்றிருக்கும் மன்னர்களைப் போல் கப்பல்களில் அமர்ந்து கடற்பயணம் மேற்கொள்வதைக் கனவில் கண்டேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
"இறைவனின் தூதரே.. அவர்களில்
ஒருத்தியாக நானும் இருக்க வேண்டுமென இறைவனிடம் வேண்டுகோள் வையுங்களேன்" .
உம்மு ஹராமுக்காக இறைவனிடம் பிரார்த்தனை புரிந்து விட்டு மறுபடியும் நபி (ஸல்) உறங்கி விட்டார்கள் .சற்று நேரம் கழித்து புன்னகை பூத்தவர்களாக மறுபடியும் எழுந்து அமர்ந்தார்கள் .
"இறைவனின் தூதரே... தங்களுடைய புன்னகைக்குக் காரணம் என்னவென்று தெரிந்து கொள்ளலாமா ? என்று உம்மு ஹராம் கேட்டார்கள் .
சிம்மாசனங்களை அலங்கரிக்கும் மன்னர்களைப் போன்று என் உம்மத்தினர் கப்பல்களில் அமர்ந்து அறப்போருக்காக கடற்பயணம் மேற்கொள்வதைக் கனவில் கண்டேன்"
"என்னையும் அவர்களோடு இணைத்து வைக்குமாறு இறைவனிடம் முறையிடுங்களேன்"
"நீங்கள் அவர்கள் அனைவருக்கும் முன்பாக முதலில் சென்ற கூட்டத்தாரோடு இருப்பீர்கள் "
காலம் சுழன்றது. நபி (ஸல்) அவர்கள் காலத்திற்கும் பிறகு நான்கு கலீபாக்களின் ஆட்சிக்குப் பிறகு முஆவியா (ரலி) அவர்களின் ஆட்சி காலம்.
கிப்ரஸ் என்றொரு தீவு . துருக்கிக்கு மேற்கே இருக்கின்றது. அங்கு ஓர் இஸ்லாமிய படையை உம்மு ஹராமின் கணவர் உபாதா இப்னு ஸாமித் (ரலி) தலைமையில் முஆவியா (ரலி) அனுப்பி வைத்தார்கள் தம் கணவருடன் உம்மு ஹராமும் பயணமானார்கள்.
முஜாஹிதீன்களுக்கு முன்னதாக உம்மு ஹராம் கப்பலில் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுடைய இதழ்களில் இளநகை அரும்பியது .காரணத்தைக் கூட இருந்தோர் கேட்க இந் நிகழ்வை நபி (ஸல்) அவர்களின் முன்னறிப்பு செய்ததை கூறினார்கள்.
அனைவருக்கும் முன்னதாக தான் இக் கப்பலில் நிற்பது போல ஷஹாதத் அடையும் நற்பேறு கண்டிப்பாக தனக்கு முன்னமே கிடைக்கும் என்பதை சந்தேகம் சிறிதும் இல்லாமல் உம்மு ஹராம் புரிந்து கொண்டார்கள்.
கிப்ரஸ் கரையில் முஜாஹிதீன்கள் இறங்கினார்கள் .நிலத்தில் எதிரிகளை எதிர்கொள்வதற்காக குதிரைகளின் மீதேறி மின்னலெனப் புறப்பட்டார்கள் .தனக்கென வரவழைக்கப்பட்ட குதிரையொன்றின் மீது ஏற முயற்சிக்கையில் குதிரை மிகவும் முரண்டு பிடித்ததால் நிலை தடுமாறி உம்மு ஹராம் கீழே விழுந்தார்கள் . அந்த உடனேயே உடற்கூட்டை விட்டு உயிர்ப்பறவை பறந்து விட்டது.
இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்.

கிப்ரஸ் தீவு வெற்றி கொள்ளப்பட்டது . "நற் பெண்மணியின் அடக்கஸ்தலம் " என்று அவருடைய கபுரை இன்றும் குறிப்பிட்டு வருகிறார்கள்.
ரஹ்மத் ராஜகுமாரன்.
( திருச்சி நண்பர் 877 859 5059 போன் செய்து தொடர் கட்டுரை எங்கோ திசை மாறிப் போகிறதே ஏன் என்று கவலைப்பட்டு கேட்டார் .
"அவ்வப்போது மீள் பதிவுகள் இடையில் நுழைந்து கொள்ளும் இருந்தாலும் தொடர் தினம் தினம் தொடர்ந்து வரும். இன்ஷா அல்லாஹ் "

மறைவான ஞானமும் தெளிவான முன்னறிவிப்புகளும்.4
(கைமாறும் கொடியும் கூடவே ஷஹிதும்)



சிரியாவைச் சேர்ந்த ஒரு மாகாணம் மூத்தா. மூத்தாவின் அதிபராக இருந்த ஷுர் ஜமீலுக்கு நபி (ஸல்) அவர்கள் இஸ்லாமிய அழைப்போலையை கொடுத்தனுப்பினார்கள் .
ஓலையைக் கொண்டு சென்ற தூதர் ஹாரிஸ் இப்னு உமரை, ஷுர்ஜமீல் கொன்று விட்டான். வரம்பு மீறிய அவனை அடக்கி ஒடுக்குவதற்காக படையொன்று அனுப்பப்பட்டது ." மூத்தா போர்" என்றழைக்கப்பட்ட அப்போர் வரலாற்றில் தனக்கென்று ஒரு சிறப்பிடத்தைப் பெற்றுள்ளது .காரணம் நபி (ஸல்) அவர்கள் சொன்ன முன்னறிவிப்பின்படியே நடந்தது .
முதலில் படைத் தளபதியாக ஜைத் இப்னு ஸாபித்தை இறைத்தூதர் (ஸல்) அவர்கள் நியமித்தார்கள்.
பின் படையினரைப் பார்த்து "உங்களை ஜைத் இப்னு ஸாபித் வழிநடத்திச் செல்வார். போர் களத்தில் ஜைத் ஷஹீதாகி விட்டால், ஜஅஃபர் இப்னு அபீதாலிப் படைத் தலைவர் பொறுப்பை ஏற்பார். ஜஅஃபர் ஷஹீதாகி விட்டால் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா படைத் தளபதியாக பொறுப்பை ஏற்பார். அவர் ஷஹீதாகி விட்டால் முஸ்லீம்கள் ஒன்று கூடி தங்களுடைய தளபதியைத் தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள் "
இது ஏதோ முன்னெச்சரிக்கையான திட்டமிடல் அல்ல..! அண்ணலெம் பெருமானாரின் தீர்க்கமான பேச்சு .. படை கிளம்புவதற்கு முன்னால்
நபி(ஸல்) இவ்வாறு கூறுகிறார் எனில் அதற்கு என்ன பொருள் என்று படைத் தளபதிகளும் , படை வீரர்களும் நடக்கப் போகும் உண்மையை நன்றாகவே புரிந்து கொண்டார்கள் .
நபிகளார் சொன்ன மாதிரியே படையை நடத்தி சென்ற முதல் தளபதி ஜைத் இப்னு ஸாபித் (ரலி) அவர்கள் முதலில் ஷஹீதானார்கள் .
அடுத்து தளபதி பொறுப்பேற்ற ஜஅஃபர் இப்னு அபீதாலிப் (ரலி) அவர்கள் ஷஹீதானார்கள் .
அவர்களைத் தொடர்ந்து அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்கள் ஷஹீதானார்கள்.
பின் முஸ்லீம்கள் ஒன்று கூடி நான்காவதாக காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களை தளபதியாக தேர்ந்தெடுத்தார்கள் .
அல்லாஹ் அவர் கைகளில் முத்தா வெற்றியை அள்ளிக் கொடுத்தான் ."சைபுல்லாஹ்"
(அல்லாஹ்வின் வாள் ) என்றழைக்கப்பட்ட அவர்கள் இஸ்லாமிய வரலாற்றில் மாபெரும் தொடர் வெற்றிகளை மலைபோல் குவித்தார்கள்
இறைத்தூதர் (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு கொஞ்சம் கூட மாறாமல் அப்படியே நடந்தது .இதற்கு அவர்களுக்கு மறைவான ஞானம்
கொடுக்கப்பட்டதன்றி வேறு என்னவாக இருக்க முடியும் ?

மறைவான ஞானமும், தெளிவான முன்னறிவிப்புகளும் .5

(சுரக்கா கையில் காப்பு)



மக்காவில் இனி வாழ இயலாது என்கிற அளவுக்கு நிலைமை முற்றியது. நபி (ஸல்) அவர்கள் தோழர் அபூபக்கர் ( ரலி) அவர்களுடன் மக்காவைத் துறந்து மதீனாவுக்குப் புறப்பட்டார்கள்.
நபிகளார் தப்பி விட்டதாக குறைஷித் தலைவர்களுக்கு தெரிய வருகிறது. அவசர கூட்டம் கூட்டி "முஹம்மதுவை உயிருடனோ அல்லது பிணமாகவோ பிடித்துக் கொண்டு வந்து ஒப்படைத்தால் 100 ஒட்டகங்கள் சன்மானம்" தமுக்கடிப்பவன் அறிவிப்பு செய்ய....
மக்கா நகர் பரபரப்பாகிறது. சுராகா இப்னு ஜஅஷம் என்கிற குதிரை வீரர் சிறந்த வில்லாளி உத்வேகமும் கொண்டவர். அம்பறாத் துணியை முதுகில் மாட்டிக் கொண்டு குதிரை மீதெறி பறக்கிறார்.
".... அதோ முஹம்மது " சுராகாவின் கண்கள் கண்டு கொண்டன .அம்பு எய்யும் எல்லை வந்தவுடன் , அம்பை நாணில் பூட்டியதுதான் தாமதம் .அவரின் குதிரைஅடி வயிறு பூமியை தொடும் வரை மண்ணில் புதைந்தன.
குதிரையோடு குப்புற விழுந்த சுராகா "இது புதை குழியோ .....அட, முஹம்மது தப்பி விடுவாரே ....குதிரை எழுப்பி மீண்டும் ஏறி விரட்டி , இப்போ மிகச் சரியான அம்பின் எல்லை வச்ச குறி தப்பாது " என்றெண்ணி நாணை இழுக்க.... மீண்டும் தொப்க்கடீர் குதிரை மண்ணில் அடி வயறு வரை புதைகிறது .
மூன்றாவது முறையாக மீண்டும் அம்பை நாணில் பூட்டி .... குதிரை மண்ணில் புதைந்து பாதியளவு ஆனது. நாம யாரை பிடிக்க வந்தோமோ அந்த முஹம்மது நம்மை பிடித்துக் கொண்டார். "முஹம்மதே...! என்னை மன்னித்து விடுங்கள் நீங்கள் உண்மையிலேயே இறைத்தூதரே என்னை மன்னித்து விடுங்கள் முஹம்மதே " அவரை அறியாமலேயே அவரின் வாய் கலிமாவை மொழிந்தது.
நூறு ஒட்டகத்தைப் பெறத் துடித்த சுராகா நூரே முஹம்மதிய்யா வைப் பெற்றுக் கொண்டார் .
நபிகளார் அவரை மன்னித்ததோடு "சுரகா ....என்னைக் கண்டதை யாரிடமும் சொல்ல வேண்டாம் . இதற்குரிய பகரமாக பாரசீக மன்னர் குஸ்ரூ வின் காப்பு உமக்கு அணிவிக்கப்பட்டு மிக மேலான கௌரவத்தை நீங்கள் அடையப் பெறுவீர்கள்" என்று அவருக்கு முன்னறிவிப்பு செய்தார்கள் .
காலச் சக்கரம் சுழன்று கொண்டிருந்தது. சுரகா இஸ்லாத்திற்கு வந்து மதீனாவில் சேர்ந்தார்.
தட்ப வெப்ப நிலை மாறி உடல் நிலை பாதிக்கப்படும் பொழுதெல்லாம் , "இந்த நோய் முற்றாது .எனக்கு இப்போது மரணம் இல்லை " என்று சுரகா சொல்வது வழக்கம் . காரணம் விளக்காது மக்கள் திகைப்படைவார்கள் .
உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் இஸ்லாமியப் படைத் தளபதி இணையற்ற வீரர் சஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்கள் பாரசீகத்தை முறியடித்து வெற்றி பெற்ற போது , கணக்கற்ற போர்ச் செல்வங்களை கலீஃபா உமர் (ரலி) அவர்களின் காலடியில் கொண்டு வந்து குவித்தார் .அந்த மலையளவு குவியலில் பாரசீகப் பேரரசர் பர்வேஸ் குஸ்ரூ வின் காப்பும் அதில் கிடந்தது.
உமர் (ரலி) அவர்கள் அந்தக் காப்பை எடுத்து சுரகாவின் கைகளில் அணிவித்து அழகு பார்த்த போது, "பாரசீக மன்னர் குருஸின் காப்பு உமக்கு அணிவிக்கப்பட்டு கௌரவிக்கப்படுவீர்கள்" திரு நபிகளாரின் தூய மொழிகள் சுரகா (ரலி) அவர்களின் காதில் ஒலிக்க கண்களில் கண்ணீர் பளித்தது.
"நான் சாக மாட்டேன்" என உறுதியாக பல முறை சுராகா கூறியதன் காரணத்தை .அவருடைய உறவினர்களும் , நபித்தோழர்களும் இப்போது உணர்ந்து கொண்டனர்.

மறைவான ஞானமும் 6
தெளிவான முன்னறிவிப்புகளும்
(பெயர் குறித்த இடத்தில் மரணம் )



ஒரு முறை அண்ணலார் (ஸல்) அவர்கள் கஃபாவில் ஹத்தீம் என்ற இடத்தில் தொழுது கொண்டிருந்தார்கள் . அங்கு கூடியிருந்த ' தலைவர்கள் ' நபி (ஸல்) அவர்களுக்கு தீங்கிழைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ஒட்டகையின் கழிவையும் நாற்றமான அதன் குடல்களையும் அள்ளி வைத்திருந்தனர்.
நபிகளார் தொழுகையில் "அந்நஜ்ம்" சூரா ஓதிக் கொண்டிருந்தார்கள் ஸஜ்தா திலாவத் வசனம் வந்தது .ஸஜ்தா செய்தார்கள் . ஸஜ்தாவில் இருந்த அண்ணலாரின் தலைமேல் அவற்றை அப்படியே கொட்டினர் .நபிகளாரால் சுமை தாங்க முடியாமல் எழுந்திருக்கவே முடியவில்லை.
நபித்தோழர் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) என்கிற ஆடு மேய்க்கும் இடையர் ஓடி ஓடிச் சென்று மகளார் ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் கூற அவர்கள் அழுதவாறே தன் பிஞ்சுக் கரங்களால் அக்கழிவுகளையெல்லாம் அகற்றினார்கள் .
அண்ணலார் (ஸல்) அவர்கள் மக்கத்து தலைவர்கள் உத்பா இப்னு ரபீஆ , ஷைபா இப்னு ரபீஆ, அபு ஜஹல் இப்னு ஹிஷாம் , வலீத் இப்னு உத்பா , உமய்யா இப்னு கலஃப் , உக்பா இப்னு அபீ முஐத் , உமாரா இப்னு வலீத் 7 பேர்களின் பெயர்களைகளைக் கூறி இறைவனிடம் முறையிட்டார்கள்.
மதீனத்து தலைவர்களில் ஒருவரான சஅத் இப்னு உபாதாவும் (ரலி) அவர்களும் மக்கா உமய்யாவும் நல்ல நண்பர்கள் .சஅத் மக்காவிலிருந்து இடம்பெயர்ந்த முஹாஜிரீன்களுக்கு மதீனாவில் அடைக்கலம் கொடுத்து ஆதரித்தவர்.
சஅது (ரலி) அவர்கள் தவாஃப் செய்து கொண்டிருக்கும் போது அங்கு
அபுஜஹ்ல் வந்து சேர்ந்தான்.
"எங்களின் எதிரிகளுக்கு அடைக்கலமும் கொடுத்து விட்டு கொஞ்சம் கூட பயமில்லாமல் மக்கா வந்து எங்கள் கண் முன்னாலேயே தவாஃப் வேறே செய்கிறீர்களா ? இதோ இரண்டில் ஒன்று பார்த்து விடுகிறேன்" என்று கர்ஜித்தான் அபு ஜஹ்ல் .
" என்ன... மிரட்டிப் பார்க்கிறயா
அபு ஜஹ்ல்.....? என்னைத் தொட்டுப் பார்த்தால் கூட அதன் விளைவு இதை விட மோசமானதாக இருக்கும். உங்களுடைய வியாபாரப் பாதை எங்கள் ஊர் வழியாகத்தான் போகின்றது அதை மனதில் வைத்துக் கொள்" என்றார் சஅது இப்னு உபாதா (ரலி) அவர்கள்.
பக்கத்தில் நின்ற உமய்யா, " அபு ஜஹ்லை எதிர்த்துப் பேசாதீர் இவர் மக்காவின் மதிப்பு மிக்க தலைவர் என்றான்.
" நீங்கள் ஒன்றும் பேச வேண்டாம் உமய்யா .இப்போது ஒன்று உங்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன் நீங்கள் கொலை செய்யப்படுவீர்கள் என்று எங்களது இறைத் தூதர் (ஸல்) அவர்கள் உங்களது பெயர்களைக் குறித்து எந்தெந்த இடங்களில் யார் யார் கொலை செய்யப்பட்டு மாண்டு மடிந்து கிடப்பதைக் கோடிட்டு காட்டிருக்கிறார்கள்" என்று சஅது (ரலி) அவர்கள் கூறியதும் , அங்கிருந்த அத்தனை பேரின் முகமும் பேய் அறைந்தாற் போல் பேதலித்து நின்றனர்.
உமய்யா வீட்டிற்கு சென்றதும் தன் மனைவியிடம் இதுபற்றிக் கூற . அவள் "முஹம்மது நபி (ஸல்) அவர்கள் ஒரு போதும் பொய்யே பேச மாட்டார் என்பதும் அவர் இறைவனின் தூதர்தான் என்பதும் அனைவரும் அறிந்ததே என்று எண்ணி மொத்த குடும்பமும் பயந்து நடுங்கியது.
ஆனாலும் என்ன செய்ய நபிகளாரின் முன்னறிவிப்பு முந்திக் கொண்டதே .

பத்ரு போர்க்களத்தில் நபிகளார் கோடிட்டுக் காட்டிய அந்தந்த இடத்தில் துல்லியமாக எதிரிகள் மாண்டு கிடந்தனர். அதில் உமய்யாவும் குறித்த இடத்தில் குற்றுயிருராய் கொலை செய்யப்பட்டுக் கிடந்தான்

மறைவான ஞானமும், தெளிவான முன்னறிவிப்புகளும் 7
(ஊர் நீக்கம் )



"முஹஸ்ஸப்" என்ற பள்ளத்தாக்கில் மக்கத்து தலைவர்கள் ஒன்று கூடினார்கள் .
"முஹம்மது நமது தெய்வங்களை குறை கூறுவதால் அவரையும் அவரை பாதுகாக்க முயற்சிக்கும் ஹாஷிம் மற்றும் முத்தலிப் கிளையாரிடம் திருமண உறவு, கொடுக்கல், வாங்கல், அவர்களுடன் அமர்வது , அவர்களுடன் பழகுவது, அவர்களின் வீட்டிற்குச் செல்வது, அவர்களிடம் பேசுவது, அவர்களுக்கு கருணை காட்டுவது போன்ற எந்த செயலையும் யாரும் செய்யக் கூடாது .
முஹம்மதை அவர்கள் நம்மிடம் ஒப்படைக்கும் வரை நாம் இந்த தீர்மானத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்" என்று "பகீழ் இப்னு ஆமிர் இப்னு ஹாஜிம் " என்பவன் எழுதினான் .
தீர்மானம் எழுதிய மை காய்வதற்குள் அவனின் கை சூம்பி விட்டது . இது முஹம்மதுவின் சகஜமான சூனியம் தான் என்றனர் . (ஃபத்ஹுல் பாரி)
இந்த தீர்மானங்கள் கஃபாவில் தொங்கவிடப்பட்டது .மேற்கண்ட இரு குடும்பத்தாரையும் " அபூதாலிப் கணவாயில் " ஒதுக்கி வைக்கப்பட்டனர் .
இது நபித்துவத்தின் 7ஆம் ஆண்டு முஹர்ரம் மாதம் தலைப்பிறையில் நடந்தது.
இக்காலக் கட்டத்தில் அவர்களிடம் இருப்பிலிருந்த உணவுகளும், தானியங்களும் தீர்ந்தன.
இணைவைப்பவர்கள் மக்காவுக்கு வரும் உணவுகளையெல்லாம் முந்திச் சென்று வாங்கிக் கொள்வார்கள்.
மக்காவிறகு வெளியில் உள்ள பொருட்களின் விலைகளை தார்மாறாக உயர்த்தினர்.
உண்ணுவதற்கு ஏதுமின்றி இலைகளையும், தோல்களை சுட்டும் சாப்பிட்டனர் . பசியினால் பெண்களும் சிறுவர்களும் அழும் குரல்கள் கணவாய்க்கு வெளியிலும் கேட்கும்.
"ஹிஷாம் இப்னு அம்ர் " என்பவர்தான் நடு இரவில் மறைமுகமாக அவர்களுக்கு உணவு வழங்கி வந்தார் .இப்படியே மூன்று ஆண்டுகள் உருண்டோடின.
இவரே இந்த உடன்படிக்கை தீர்மானத்தை குறைஷிகளாகிய நாம் கஃபாலிருந்து கிழித்தெறியப்பட வேண்டும் என்ற கோரிக்கையை குறைஷிகளின் கூட்டத்தில் முன்வைத்தார் . கூட்டம் தீர்மான உடன்படிக்கையை கஃபாவிலிருந்து கிழித்தறியப்பட வேண்டும் என்ற முடிவு செய்த போது ....
அபூதாலிப் " என் சகோதரனின் மகன் முஹம்மது முன்கூட்டியே என்னிடம் அல்லாஹ்வின் பெயரைத் தவிர அதில் எழுதப்பட்ட அனைத்தையும் கரையான் தின்று அழித்து விடும் " என்று கூறியுள்ளார் . அவர் கூறிய இவ்விஷயம் பொய்யாக இருந்தால் அவருக்கும் உங்களுக்குமிடையில் நாங்கள் வழிவிட்டு விடுகிறோம் .நீங்கள் அவரைப் பார்த்துக் கொள்ளுங்கள். அவர் கூறியது உண்மையாக இருந்தால், நீங்கள் எங்களுக்கு அநியாயம் செய்து உறவுகளைத் துண்டிப்பதிலிருந்தும் விலகிட வேண்டும்" என்று கூறினார்
அபூஜஹ்ல் பெரிய கூட்டத்தோடு கஃபாவிற்கு சென்று பார்த்த போது,
"பிஸ்மில்லாஹும்ம " என்று ஆரம்பத்தில் எழுதப்பட்டிருந்ததை வார்த்தையும், "அல்லாஹ்" என்று எழுதப்பட்ட வார்த்தையும் தவிர மற்ற அனைத்தையும் கரையான் அரித்து விட்டிருந்தது.
கணவாயிலிருந்து ஊர் நீக்கம் செய்யப்பட்ட இரு குடும்பத்தாரும் ஊருக்குள்ளே வந்தனர்.
நபித்துவத்தின் மிகப் பெரிய அத்தாட்சியாக கரையான் அரித்ததைப் பார்த்த அவர்களின் இதயமோ, "அவர்கள் எந்த அத்தாட்சியைக் கண்ட போதிலும் (அதனைப்) புறக்கணித்து , "இது சகஜமான சூனியம்தான் " என்று கூறுகின்றனர் ." குர்ஆன் (54 : 02)
தௌர் குகைக்குள்ளே நபியவர்கள் இல்லாத மாதிரி சிலந்திப் பூச்சி குகையின் வாயிலில் வலை பின்னியது. ஊருக்குள்ளே நபியவர்கள் இருக்க வேண்டும் என்று கரையான் பூச்சி தீர்மானத்தை தின்று தீர்த்தது .

வரலாற்று பதிவுகளைச் சுருக்கி சொல்வது மிகக் கடினமான விஷயம் இந்த பெரிய வரலாற்றை சுமார் 10 தடவைகளுக்கு மேல் படித்து எழுதியதை சுமார் 7 தடவைக்கும் மேல் சுருக்கி சுருக்கி சுவராசியம் குறையாமல் சொல்ல வேண்டும். சொல்லியும் உள்ளேன் . சுவையை நீங்கள்தான் சொல்ல வேண்டும் . இதை இன்னும் சுருக்கினால் விபரம் தெரியாமல் போகலாம் நண்பர்கள் பதிவின் விஸ்தாரனத்தை கணக்கிடு செய்ய வேண்டாம்

ஆதாரம் ? ? ?



பதிவுகளுக்கு ஆதாரம் கொடுப்பதில்லையே என்ற மனக்குறை அநேக நண்பர்களுக்கு இருக்கிறது. ஆதாரம் வேண்டுமென்றே கொடுக்கக் கூடாது என்ற எண்ணமில்லை .ஒரு பதிவுக்கு குறைந்த பட்சம் 6 லிருந்து 8 புத்தகம் வரை திருப்புகிறேன். 8 புத்தகத்தையும் நீங்கள் படித்தாலும் என் பதிவின் நிறைய தகவல்கள் அந்த புத்தகங்களில் இல்லாமல் இருக்கலாம். காரணம் வலைதளம் மற்றும் சில பெரியோர்களின் ஆடியோ பேச்சு .... இப்படி எத்தனையோ சைடிஸ்களெல்லாம் கலந்து கட்டி உங்களுக்கு தந்திருக்கிறேன். உதாரணமாக , " நபி (ஸல்) அவர்கள் மீது ஒட்டகத்தின் கழிவையும் நாற்றமடித்த குடலையும் போட்ட விஷயத்தை மகளார் பாத்திமாவிற்கு செய்தி தெரிவிக்கப்பட்டது " என்று புத்தகமும் இன்னொரு புத்தகம் நபித்தோழர் ஒருவர் தெரிவித்தார் என்கிறது மூன்றாவது புத்தகம் அவர் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் என்கிறது நாலாவது புத்தகம் ஆடு மேய்க்கும் இடையர் என்று குறிப்பிடுகிறது . (முந்தைய பதிவில் உள்ள தகவல்)

என் பதிவில் இந்த 4 செய்தியையும் ஒன்றாக்கி ஒரே ஒரு வரியில் சொல்லி இருக்கிறேன் . மேலும் Sunnah என்ற வலை தளத்தில் . இல்முல் கயிப் பக்கத்திலும் தேடி இருக்கிறேன்.

இத்தனை ஆதாரங்களையும் எப்படி கொடுக்க முடியும் .?

எல்லா புத்தகங்களிலிருந்தும் குறிப்புகள் என் டைரியில் குறிக்கப்பட்டுக் கொண்டு நீளமான சீனா பெரும் சுவர் மாதிரி இருக்கும் .அதை முழுவதும் பல தடவை படித்து சமையல் கட்டு மிக்ஸி மாதிரி கலந்தரைத்து டீ கடை டிக்காசன் பை மாதிரி வடிகட்டி எழுதுகிறேன்.

எழுதி முடித்த கையோடு மனசில தோட்டத்து கத்திரியோடு அங்காங்க பதிவில் கத்தரித்து தோட்டத்து குரோட்டன்ஸ் செடி மாதிரி அழகாக்கி தருகிறேன் .

இதிலே எந்த ஆதாரத்தை என்னால் கொடுக்க முடியும் ? கொடுக்கிற ஆதாரத்தில் மிக சிறிய தகவல்கள் எடுத்திருக்கலாம் . பெரும் பகுதி ஆடியோவிலோ நெட்டிலோ இருந்தால் என்ன செய்ய முடியும் .?

நண்பர்களுக்காக "மறைவான ஞானமும், முன்னறிவிப்புகளும் ". என்கிற இந்த தொடர் பகுதிக்கு படத்திலுள்ள இத்தனை புத்தகங்ககளும், இதன் துணை பாகங்களும் பயன்படுத்துகிறேன்.

தயவு செய்து என் நிலைமையை புரிந்து கொள்ளுங்கள் .நீங்கள் நம்புவதற்காக இப் பதிவிற்குரிய அத்தனை புத்தகங்களை மட்டும் படம் பிடித்து தந்துள்ளேன் .

இப்போ சொல்லுங்கள் ஆதாரம் என்னால் தர முடியுமா ?

ர.ரா

பூமியின் பொக்கிஷம் .




"ஹோவெர்டு பாஸ்ட் " என்ற அமெரிக்க எழுத்தாளர் "பூமியின் பொக்கிஷம்" என்ற சிறுகதை எழுதி இருக்கிறார். ரொம்பவும் சுவராசியமானது .
அதில் வேற்றுக்கிரகம் ஒன்றிலிருந்து இருவர் பூமிக்கு வருகிறார்கள் .பூமியில், மனிதர்கள் உருவாக்கியதில் மிக விசிச்சிரமானதும் விலை மதிப்பு இல்லாததுமானது எது என்று தேடி அலைகிறார்கள்
வைரம் , தங்கம், வியப்பூட்டும் விஞ்ஞானப் பொருட்களான செல்போன் ,ரோபர்ட் ,, என்று எதைக் கண்ட போதும் அதை விட சிறப்பானதாகத் தங்கள் கிரகத்தில் இருக்கிறது' என்கிறார்கள் .
முடிவில் அவர்கள் மியூஸியம் ஒன்றுக்குப் போகிறார்கள் . அங்கே ஷேக்ஸ்பியர் எழுதிய புத்தகங்களின் முதல் பிரதிகள் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன . அவைகளை இரவு பகலாக வாசிக்கின்றனர் .ஆச்சரியப்பட்டு போகிறார்கள் . எங்களது கிரகத்தில் இல்லாததும் ,பூமியில் இருப்பதில் சிறந்ததும் ஷேக்ஸ்பியரின் புத்தகங்களே இந்தப் பூமியில் உள்ள எல்லா செல்வங்களை விடவும் அற்புதமானது புத்தகங்கள் மட்டுமே " என்று ஒரு குறிப்பை எழுதி வைத்துவிட்டு தங்கள் கிரகத்துக்குப் பறந்து சென்று விடுகின்றனர் என்று கதை முடிகிறது.
மனிதர்களுடனேயே நினைவுகள் அழிந்து போவதில்லை . அவை எழுத்தில், சொல்லில் , வரிகளில் ஒளிந்து கொண்டு , தன்னை உயிர்ப்பித்துக் கொண்டே இருக்கின்றன.
புத்தகம் என்பது மூன்று கரை உள்ள ஆறு என்கிறார் கவிஞர் தேவதச்சன் . உலகின் நினைவுகளும் ,கனவுகளும் , நம்பிக்கைகளும் ஒன்று கலந்து உருவானதே புத்தகங்கள். அதுவே உலகின் ஒப்பற்ற அதிசயம் , மேற்கண்ட இரண்டு வேற்றுக் கிரகவாசிகள் பூமியில் வந்து தேடியலைந்து அதிசயமானது எது என்று தேடி அது புத்தகங்கள்தான் என்று அவர்கள் கூறும்போது .,, இதே மாதிரி ஒரு சம்பவம் குர்ஆனில் இருக்கிறதா ? என்று எண்ணியபோது என் மனதில் இந்த வசனங்கள் வந்து போயின.
"(நபியே) இந்தக் குர்ஆனைக் கேட்கும் பொருட்டு ஜின்களில் சிலரை நாம் உங்களிடம் வருமாறு செய்து , அவர்கள் வந்த சமயத்தில் , (அவர்கள் தங்கள் இன மக்களை நோக்கி ) "நீங்கள் வாய்ப் பொத்தி (இதனைக் கேட்டு கொண்டு) இருங்கள்" என்று கூறினார்கள் (இது) ஓதி முடிவு பெறவே தங்கள் இனத்தவர்களிடம் சென்று அவர் களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்ய முற்பட்டனர் .
(அவர்களை) நோக்கி " எங்களுடைய இனத்தார்களே ' ,,, நிச்சயமாக நாங்கள் ஒரு வேதத்தைச் செவியுற்றோம். அது மூஸாவுக்குப் பின்னர் அருளப்பட்டிருக்கின்றது. அது தனக்கு முன்னுள்ள வேதங்களையும் உண்மைப்படுத்துகின்றது அது சத்தியத்திலும் நேரான வழியிலும் செலுத்துகின்றது.
திருக்குர்ஆன் ( 46 : 29 , 30 )
ஜின்கள் நம்மோடு இருந்தாலும் அவைகள் தனிப்பட்ட உலகில் பிரவேசிக்கின்றன. அவைகளுக்கு குர்ஆன் மிகப் பெரிய ஆச்சரியத்தைக் கொடுத்ததாக குர்ஆன் வர்ணிக்கிறது .

மறைவான ஞானமும், 8
தெளிவான முன்னறிவிப்புகளும்
(வீட்டிலேயே ஷஹீது )



அல்லாஹ்வின் பாதையில் உயிர்த்தியாகம் புரிந்து ஷஹீதாபவர்களுக்காக அளப்பெரும் பேறுகள் காத்துக் கொண்டிருக்கின்றன. யாருக்கும் கடன்பாக்கி இல்லாமல் உயிர் துறக்கும் ஷுஹதாக்களுக்கு கேள்வி - கணக்கு விசாரணை இன்றி அல்லாஹ் சுவனத்தில் பிரவேசிக்க செய்கின்றான்.
உள்ளத்தில் ஷஹாதத் ஆசை இல்லாதவர்கள் இறை நம்பிக்கை - ஈமானில் பழுதுள்ளவர்கள் என்பதாக நபித்தோழர்கள் , மூமின்கள் எண்ணுகின்றனர்.
இறைவழியில் உயிரை அர்ப்பணிக்கும் ஆர்வத்தை நபி (ஸல்) அவர்களே பல முறை வெளிப்படுத்தி உள்ளார்கள்.
இதனால் ஷஹீதாக மரணிக்க வேண்டும் என்பதை பிரார்த்தனையாக அன்றாடத் தொழுகைகளில் தவறாமல் கேட்டு வருவது நபித்தோழர்களின் வழக்கமாக இருந்தது.
அவர்களில் சிலரோ தாம் ஷஹீதாக மரணிக்க துஆ செய்யுமாறு நபி (ஸல்) அவர்களிடம் துஆ செய்யுமாறு கேட்டு பெற்றும் கொள்வார்கள்.
மதீனாவில் உம்மு வரக்கா (ரலி) என்ற அன்ஸாரிப் பெண்மணி , இறையச்சம் உள்ளத்தில் நிரம்பப் பெற்ற அற்புதமானவர்கள்
இப் பெண்மணி குர்ஆனை ஓதும் போது, உமர் இப்னு கத்தாப் (ரலி) போன்றோர் சற்று நேரம் நின்று அவருடைய கிராஅத்தைக் கேட்பார்கள். நபி (ஸல்) அவர்கள் பெண்களின் இமாமாகவே நியமித்திருக்கிறார்கள் .
இஸ்லாமியப் போர் படை புறப்படும் ஒவ்வொரு முறையும் உம்மு வரகக்காவும் போர் பாசறைக்கு சென்று தனக்கும் ஷஹாதாத் அடையும் நற்பேற்றை இறைவன் தனக்கு அளிக்கலாமல்லவா ? என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டுக் கொண்டே இருப்பார்கள் .
"அம்மணி, நீங்கள் வீட்டிலேயே இருங்கள். வீட்டிலேயே அல்லாஹ் உங்களுக்கு ஷஹீதாகும் வாய்ப்பை வழங்குவான்' என்று கூறி நபி (ஸல்) யுத்தத்திறகு கூட்டிச் செல்லாமல் வீட்டிற்கு அனுப்பி விடுவார்கள் .ஒரு முறையல்ல இவ்வாறு பல முறை நடந்தது.
யுத்த களத்திற்குச் செல்லாமல் வீட்டிலேயே ஷஹாதத்தா ? எவ்வாறு சாத்தியம் ? மக்கள் வியப்போடு பேசிக் கொள்வார்கள்.
உம்மு வரக்காவைப் பார்க்கும் பொழுதெல்லாம் "அதோ.. ஷஹீதா வருகிறாரே " என்று இறைத்தூதர் (ஸல்) அவர்களே குறிப்பிடுவார்கள். நாளடைவில் அவர்களின் வரக்கா என்ற பெயரே மறைந்து ஷஹீதா என்றே அழைக்கப்பட்டார் .
காலம் கடந்து கொண்டிருந்தது. உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலமும் வந்தது.
உம்மு வரக்கா (ரலி) வீட்டில் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளாத ஓர் அடிமையும் ,அடிமைப் பெண்ணும் இருந்தார்கள் . "என் இறப்போடு உங்களுடைய அடிமை வாழ்வு முடிந்து, நீங்கள் இருவரும் விடுதலையாகி விடுவீர்கள்" என்று உம்மு வாக்குறுதி வழங்கியிருந்தார்கள் .
விரைவில் விடுதலையாக வேண்டும் என்ற துடிப்பு இயல்பாகவே அவர்களிடம் இருந்தது. காலம் கனியும் வரை காத்திருக்கும் பொறுமையைத் தொலைத்து விட்டார்கள் ,குறுக்கு வழியில் சதி தீட்டினார்கள் .
உம்மு வரக்கா (ரலி) அவர்கள் தூங்கிக் கொண்டிருந்த போது கழுத்தில் துண்டைப் போட்டு இறுக்கி கொன்று விட்டு வீட்டை விட்டு பறந்து போனார்கள் அந்த இரு அடிமைகளும் .
இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்.

துணை இன்றி வாழும் வயதான பெண்மணிக்கு நேர்ந்தது யாருக்கும் தெரியவில்லை.அதிகாலையில் அவ்வழியாகச் சென்ற இஸ்லாமிய ஆட்சித் தலைவர் அமீருல் முஃமினீன் உமர் கத்தாப் (ரலி ) அவர்கள் , உம்மு வரக்கா குர்ஆன் திலாவத் செய்யும் நேரமாயிற்றே என்று கேட்பதற்காக ஓரமாய் ஒதுங்கி நின்றார்கள்.
கிராஅத் சத்தம் கேட்கவே இல்லை. உமர் (ரலி) உள்ளத்தில் அச்சம் தோன்றியது. வீட்டுக் கதவை தட்டியவாறு உள்ளே நுழைந்து பார்த்த போது .உயிரைப் பிரிந்த உடல் துணித் துண்டால் இறுக்கப்பட்டு கிடந்தது.
"வீட்டிலேயே ஷஹீதாவீர்கள் என்று நபி (ஸல்) அவர்கள் உண்மையே உரைத்தார்கள்." என்று உமர் (ரலி) அவர்கள் வாய் விட்டுக் கூறினார்கள்
கொலை செய்து விட்டு தப்பியோடிய குற்றவாளிகள் தேடிப் பிடிக்கப்பட்டு தூக்குமரத்தில் ஏற்றப்பட்டார்கள் .
**அஷ்ரஃப் அலி**
இதில் இன்னொன்றை கவனித்தீர்களா!
நபி(ஸல்) அவர்கள் அந்த பெண்மணிக்கு வீட்டிலேயே அல்லாஹ் ஷஹீதாகும் வாய்ப்பை வழங்குவான் என்று கூறியவுடன்
அனைத்து சஹாபாக்களும் அவர்கள ஷஹீதா என்று கூப்பிடும் அளவுக்கு நபி(ஸல்) அவர்களின் வார்த்தைகளின் மீது களப்பற்ற ஈமான் கொண்டுள்ளனர்.
சுபஹானல்லாஹ்.
**Mohammed Anwar Ibn Abbas**
"படுக்கையில் என் உயிர் பிரிவதைவிட இறைவனின் பாதையில் கொல்லப்பட்டு பிரிவதே இலகுவானது." அலி ரழி

மறைவான ஞானமும், தெளிவான முன்னறிவிப்புகளும்.9
(வாய்மையின் பக்கம் அம்மார்)

இஸ்லாம் பிரகாசிப்பதற்காக தங்களையே தியாகத் தீபங்களாக மாற்றிக் கொண்டோரில் யாஸிர் (ரலி) அவர்களும் அவர்களுடைய மனைவி சுமைய்யா (ரலி) அவர்களும் இஸ்லாத்திற்காக ஷஹீதாக்கப்பட்டு வரலாற்றில் நீங்கா இடம் பெற்றவர்கள் .
இத் தம்பதியின் மகனார் அம்மார் அடி உதை சித்திரவதைகளைத் தாக்கிக் கொண்டு நெஞ்சுரத்தோடு நின்றார்.
ஒரு சம்பவத்தின் போது நபி (ஸல்) அவர்கள் "அம்மார் என்றும் வாய்மையின் அணியில்தாம் இருப்பார் .அப்போது குழப்பம் விளைவித்து வரம்பு மீறுவோர் கைகளால் அவர் உயிர் பறிக்கப்படும் "
என்பதாக முன்னறிவிப்பு செய்தார்கள் .
நீண்ட காலம் கழித்து இம் முன்னறிவிப்பின் உண்மையை இஸ்லாமிய உலகம் நேரில் கண்டது.
மூன்றாம் கலீஃபா உஸ்மான் (ரலி) அவர்கள் ஷஹீதாக்கப்பட்ட பின்பு ,
அலீ (ரலி) அவர்கள் ஆளுமைப் பொறுப்பில் அமர்ந்தார் .
உஸ்மான் (ரலி) அவர்கள் சிந்திய இரத்தத்திற்குப் பழிக்குப் பழி வாங்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையை ஏந்திக் கொண்டு, முஆவியா ( ரலி ) அவர்களின் தலைமையில், ஸுபைர் (ரலி) , தல்ஹா (ரலி) , ஆயிஷா (ரலி), ஆகியோர்கள் அப்பிரச்சனையை எடுத்து தற்போதைய கலீஃபா அலீ (ரலி) அவர்களுக்கு நெருக்கடி கொடுத்தனர்.
அலீ (ரலி) "தக்க தருணம் பார்த்து நிச்சயம் செயல்படலாம்" என்ற போது
அலீ (ரலி) அவர்களையே எதிர்த்து இவர்கள் யுத்தத்திற்கு துணிந்தனர்.
இதன் காரணமாக இஸ்லாமியர்களுக்குள்ளே இரு தரப்புகளாக பிரிந்து ஒட்டகப்போர்,
ஸிஃப்பீன் போர் என்று அடுத்தடுத்து இரண்டு யுத்தங்கள் நடைபெற்றது.
ஒட்டகைப் போரின் போது அலீ (ரலி) அவர்களுடைய அணியில் அம்மார் (ரலி) அவர்கள் நின்றுக் கொண்டிருப்பதை ஸுபைர் (ரலி). தல்ஹா (ரலி) மற்றும் சில நபித்தோழர்கள் கண்டதும் திடுக்கிட்டுப்

போனார்கள் . நபி(ஸல்) அவர்கள் அம்மாரைப் பற்றிய முன்னறிவிப்பு சொன்னது ஞாபகத்திற்கு வந்தது. அலீ (ரலி) அவர்களை சந்தித்து யுத்த களத்தை விட்டு வெளியேறினார்கள்
ஒட்டகைப் போரின் போது எந்த அணியிலும் சேராமல் நடுநிலை வகித்த நபித்தோழர்கள் நபி (ஸல்) அவர்கள் அம்மாரைப் பற்றிய முன்னறிப்பின் காரணமாக பலரும் அலீ (ரலி) அவர்களின் ஆதரவாளர்களாய் மாறி யுத்த களத்தில் குதித்தனர் .இதனால் முஆவியா (ரலி) அவர்களின் பக்கம் பின்னடைவு ஏற்பட்டது.
தொடர்ந்து ஸிஃப்பீன் போர் நடைபெற்றது. அப்போரிலும் அலீ (ரலி) அவர்களுடைய அணியில் அம்மார் (ரலி) அவர்கள் நின்று போரிட்டார் .இப்போரில் அம்மார் (ரலி) அவர்கள் ஷஹீதாகிக் கீழே கிடந்த போது அவர்களின் தலையை துண்டாக கொய்யப்பட்டு முஆவியா (ரலி) அவர்கள் முன் வைக்கப்பட்டது .
"நான்தான் கொய்தேன் நான்தான் எகாய் தேன் என்று இரண்டு பேர் மல்லுக்கட்டிக் கொண்டனர்.
முஆவியாவுக்கு அருகில் அம்ரு இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் நின்று கொண்டு ,
"அல்லாஹ்வின் மீது ஆணையாக... இவர்கள் இருவரும் நரகில் இடம்
பிடிக்கவே சண்டை போடுகிறார்கள்" சற்று நேரம் கழித்து " இருபது ஆண்டுகளுக்கு முன்பாகவே நான் இதையெல்லாம் பார்க்காமல் செத்துப் போயிருக்கக் கூடாதா......" என்று விசனத்தோடு கூறினார்
நபி (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு அம்ரு இப்னுல் ஆஸ்(ரலி) அவர்களுக்கு தெரியாமல் கூட இருந்திருக்கலாம்.

மறைவான ஞானமும்,10



தெளிவான முன்னறிவிப்புகளும்
(சொர்க்கத்தின் தலைவி)
அன்னை ஆயிஷா (ரலி) அறிவிக்கிறார்கள் .
இறைத்தூதர் (ஸல்) அவர்களின் இறப்புக்கு முன்னால் ஒரு நாள் நாங்கள் இருவரும் ஒன்றாக அமர்ந்திருந்தோம்.
ஃபாத்திமா (ரலி ) அன்ஹா அங்கு வருகை தந்தார்.
ஃபாத்திமா நடந்து வருவதைப் பார்த்தால் நபி (ஸல்) அவர்கள் நடந்து வருவதைப் போன்றே இருக்கும்.
ஃபாத்திமாவைக் கண்டதும் வாஞ்சையோடு வரவேற்ற இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தமது வலது பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு ஃபாத்திமாவின் காதருகே ஏதோ கூறினார்கள்.
அதைக் கேட்டதும் பொங்கி கேவி கேவி அழுலானார்.
ஃபாத்திமா அழுவதைக் கண்ட நபி (ஸல்)
அவர்கள் மறுபடியும் காதருகே சென்று ஏதோ கூறினார்கள் .அதைக் கேட்டதும் ஃபாத்திமா மலர்ந்து சிரித்தார்கள்.
இதைப் பார்த்துக் கொண்டு என்னால் இருக்க முடியவில்லை . ஃபாத்திமாவை அழைத்து, என்ன நடந்தது ? என்ன கூறினார்கள் ? என்று கேட்டேன் .
"ஒரே நேரத்தில் உங்களை அழ வைக்கும் படியாகவும் , சிரிக்க வைக்கும் படியாகவும் அப்படி என்னதான் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் ?" என்று கேட்டேன்"
"அது ரகசியம்... இப்போது அதை என்னால் சொல்ல இயலாது.. " என்று ஃபாத்திமா கூற மறுத்து விட்டார்.
சில நாட்களுக்குப் பிறகு நபி (ஸல் ) அவர்கள் இவ்வுலகை விட்டு பிரிந்து சென்று விட்டார்கள் .அதன் பின் மறுபடியும் ஒரு நாள் ஃபாத்திமாவிடம் இந்த நிகழ்ச்சியைக் குறிப்பட்டு காரணத்தைக் கேட்டேன் .
" இப்போது அருமைத் தந்தையார் சென்று விட்டார்கள். எனவே தயங்காமல் சொல்ல முடியும். முதலில் தந்தையார் என் காதில், "எப்போதும் வருடத்தில் ஒரு முறை ரமலான் மாதத்தில் என்னை ஒரு தடவை குர்ஆன் ஓதச் சொல்லி ஜிப்ரயீல் (அலை) கேட்பார்கள்.இந்த வருடம் இரண்டு தடவை ஓதச் சொல்லிக் கேட்டார்கள்

.இந்த வருடத்திற்குள் எனக்கு மௌத் வந்து விடும் .என் இறப்பைத் தொடர்ந்து என் குடும்பத்திலிருந்து முதன் முதலில் என்னைச் சந்திக்கப் போவது நீ தான்..'
அதைக் கேட்டவுடன் எனக்குத் துக்கம் வாங்கிக் கொண்டு வந்தது. தாள முடியாமல் தேம்பி தேம்பி அழலானேன் .மறுபடியும் என் காதருகே வந்து, "உலகப் பெண்களுக்கெல்லாம் சொர்க்கத்தில் தலைவியாக இருப்பதை நீ விரும்பவில்லையா? " என்று தந்தையார் கேட்டார் .அதைக் கேட்டவுடன் சந்தோஷம் தாங்காமல் சிரிக்கலானேன்.'' என்று ஃபாத்திமா (ரலி) அன்ஹா கூறினார்.
இறைத்தூதரின் இறப்பிற்கு சரியாக ஆறு மாதங்களுக்குப் பின் ஃபாத்திமா (ரலி) அன்ஹா அவர்கள் வஃபாத் ஆனார்கள்

மறைவான ஞானமும் தெளிவான முன்னறிவிப்புகளும்-11
(சிறு ஈட்டி பெரும் வலி)



" உபை இப்னு கலஃப் " என்ற நயவஞ்சகன் மக்காவில் நபி(ஸல்) அவர்களுக்கு சொல்ல முடியாத அளவிற்கு தீங்கிழைத்துக் கொண்டே இருப்பான்.
ஒரு தடவை நபி (ஸல்) அவர்களை தரக்குறைவாக இழிவுப்படுத்தும் போது
நபி (ஸல்) அவர்கள் "நானே உன்னைக் கொல்வேன்.. " என்று சூழுரைத்தார்கள். இப்படி நபிகளார் கடுகடுத்தது அவர்களது வாழ்வில் மிக மிகக் குறைவு .
உஹது யுத்தத்தில் நபி(ஸல்) அவர்கள் மலைக் கணவாயில் தங்களையும் , தோழர்களையும் பாதுகாத்துக் கொண்ட போது , "முஹம்மது எங்கே ? அவர் தப்பித்துக் கொண்டால் நான் உயிர் வாழ முடியாது" என்று அலறியவனாக நபியவர்களைத் தேடி உபை இப்னு கலஃப் அலைந்தான்.
கணவாயின் உள்ளே நபிகளாரைப் பார்த்தவுடன் கொலை வெறியுடன் அவர்களை நோக்கி பாய்ந்து வந்தான்.
நபித்தோழர்கள் , "யா ரசூலல்லாஹ்.... எங்களில் ஒருவர் சென்று அவனைத் தாக்கட்டுமா ? என்று கேட்டார்கள் .
அதற்கு நபி (ஸல்) "அவனை விட்டு விடுங்கள் . அவன் என்னருகில் வரட்டும் "
அவன் வேகமாக நபியவர்களை நோக்கி முன்னேறினான்.
நபியவர்கள் , ஹாரிஸ் இப்னு சிம்மா (ரலி) அவர்களிடமிருந்து ஈட்டிக்கு முன்பாக இணைக்கப்படும் சிறிய ஈட்டியை மட்டும் வாங்கி , நபியவர்கள் தன் உடலைச் சிலிர்த்தார்கள். எப்படி சிங்கம் தன் முடியை எதிரிகளின் முன் சிலிர்க்குமோ அப்படி சிலிர்த்தார்கள்,
எப்படி ஒட்டகம் சிலிர்க்கும் போது அதனுடைய முதுகிலிருந்து முடி பறக்குமோ அது போன்று எதிரிகள் நபி (ஸல்) அவர்களை விட்டுப் பறந்தார்கள் .
பிறகு நபி(ஸல்) அவர்கள் அவனை முன்னோக்கி , அவன் அணிந்திருந்த கவச ஆடைக்கும் தலைக்கவசத்திற்கும் இடையே தெரிந்த அவனது கழுத்தைக் குறி பார்த்து சிறு ஈட்டியை எறிந்தார்கள் .அந்த சிறு ஈட்டி அவனது கழுத்தை உராய்ந்து மட்டுமே சென்று மிக .சிறிய காயத்தை ஏற்படுத்தியது. ஆனால் அதனால் ஏற்பட்ட வலியோ மிகக் கடுமையாக இருந்தது.
அவன் ஒட்டகத்தில் அமர முடியாமல் பல முறை கீழே விழுந்து எழுந்தான். அந்த சிறிய காயத்துடன் குறைஷிகளிடம் திரும்பி, "அல்லாஹ்வின் மீது சத்தியமாக... முஹம்மது என்னைக் கொன்று விட்டார்" என்று சப்தமிட்டான் .
அதற்கு குறைஷிகள் அந்த மிக சிறிய காயத்தைப் பார்த்து விட்டு "அல்லாஹ் மீது சத்தியமாக... நீ பயந்து விட்டாய் .அல்லாஹ் மீது சத்தியமாக ... உனக்கு ஏதோ கோளாறு ஏற்பட்டுவிட்டது இல்லையென்றால் இந்த மிக சிறிய காயத்திற்குப் போய் இப்படி கூச்சல் போடுவாயா..? என்று கூறி எள்ளி நகைத்தார்கள்.

அதற்கு அவன் "முஹம்மது மக்காவில் இருக்கும் போதே நான் உன்னைக் கொல்வேன்.. என்று கூறியிருந்தார் . இதனால் இத்தனை வருஷமும் அவர் முன் வராமல் இருந்திருந்தேன். ஏதோ யுத்த வெறியால் அவரது முன்னறிப்பை மறந்து வந்து விட்டேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக ... என் மீது அவர் எச்சில் துப்பி இருந்தாலும் நான் செத்திருப்பேன்" என்று கூறி . மாடு அலறுவது போன்று அவன் அலறினான். இவனின் நடவடிக்கை குறைஷிகளுக்கு பெரும் ஆச்சரியத்தையும் கூடவே பயத்தையும் கொடுத்தது.
" என் உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக ! எனக்கு இருக்கும் இக் கொடிய வேதனையை இந்த 'தில்மஜாஸிலுள்ள " அனைவருக்கும் பிரித்துக் கொடுத்தால் அவர்கள் அனைவரும் இறந்து விடுவார்கள் " என்றான்.
அவன் வதை செய்யப்பட்டான் . இறப்புக்கு ஏங்கினான் .கொடிய வேதனை அவனை விட்டு நீங்காது அதிகரித்துக் கொண்டே இருந்தது அவனின் கதறல் மிகக் கடூரமாக இருந்தது.
மக்கா செல்லும் வழியில் "ஸரிஃப்" என்ற இடத்தில் அவன் இறந்தான் . நபிகளாரின் முன்னறிவிப்பு அவனுக்கு நடைமுறைப்படுத்தப்பட்டது.

மறைவான ஞானமும், தெளிவான முன்னறிவிப்புகளும்.-12



( முப்பெரும் வெற்றியின் முன்னறிவிப்பு )
அகழ் யுத்தம் என்பது அன்றைய காலகட்டத்தில் புதுமையான யுத்தம் இந்த யுத்தத்திற்கு பூமியை ஆழமாகவும் ( 9 அடி) அகலமாகவும் (12 அடி)தோண்டி பின் அக் குழியை மறைத்து விடுவது.
எதிரிகளுக்கு அக்குழி இருப்பது தெரியாது வேகமாக குதிரையில் பாய்ந்து வரும் போது குதிரை அக் குழிக்குள் விழுந்து விடும் எதிராளிகளும் அக்குழியில் இறங்கி ஏறி இந்தப் பக்கம் வர முடியாது இதனால் எதிரிகளை மிகச் சுலபமாக எதிர்கொள்ள முடியும்.
அகழ் தோண்டும் போது நபி (ஸல்) அவர்களும் மண்வெட்டி சுமந்தார்கள் வேலை சிரமமாக இல்லாமல் இருக்கவும், உற்சாகமூட்டவும் இறைவனையும் தங்களுக்கு வந்த நபி காரிருளை நீக்க வந்த காத்தமுன் நபி என்றெல்லாம் நபித்தோழர்கள் இசைக்கூட்டி பாடினார்கள் .
அகழ்குழியில் பெரிய பாறை குறுக்கிட்டது .அதைப் பிளக்க பலரும் முயன்று தோற்றுப் போயினர் . நபிகளாருக்கு சொல்லப்பட்டது.
ஸல்மான் பார்ஸி (ரலி ) அவர்கள் கையில் இருந்த குந்தாலி (சம்மட்டி) யை வாங்கி , அப்பாறையை ஓங்கி அடிக்க
பாறை வெடிப்புக் கண்டதுடன் அதிலிருந்து ஒரு சுடரும் வீசியது.
இதைக் கண்ட அண்ணலார், "அல்லாஹு அக்பர் " என முழங்கினார்கள். சுற்றி நின்றவர்களும் அவ்வாறே முழங்கினார்கள் இரண்டாம் முறை மூன்றாம் முறை வெட்டிய போது அவ்வாறே சுடர் வீசியது. பாறை இப்போது நன்றாக பிளந்து வழி கொடுத்தது .
முதல் அடியின் போது வெளிப்பட்ட சுடரில் சிரியாவிலுள்ள ரோமானிய மன்னரின் சிவப்பு அரண்மனையும், .
இரண்டாவது அடியின் போது வெளிப்பட்ட சுடரில் மதாயின் நகரிலுள்ள
பாரீக மன்னரின் வெள்ளை அரண்மனையும் .மணிமகுடமும் ,
மூன்றாவது அடியின் போது வெளிப்பட்ட சுடரில் ஏமன் நாட்டு தலைநகரான
ஸன்ஆவின் நுழைவாயிலும், பச்சை நிற கொலு மண்டபமும் தமக்கு காட்சியளித்தன .
இஸ்லாமிய ஆட்சி காலத்தில் இம் மூன்றும் ஆட்சிக்குட்பட்டது.

## மறைவான ஞானமும், தெளிவான முன்னறிவிப்புகளும் 13.




("அல்லாஹ் உன்னை இழிவு இழிவுப்படுத்துவானாக.")
உஹது மலை பக்கம் நடந்த யுத்தம் உஹது யுத்தம் . உஹது யுத்தம் முஸ்லீம் களுக்கு கடும் சோதனையை கொடுத்த யுத்தம் .
இந்த யுத்தத்தில் எதிரிகளால் சூழப்பட்டு கடுமையான தாக்குதலை சமாளித்துக் கொண்டிருந்த அதே வேளையில் நபியவர்களைச் சூழ்ந்திருந்த முஸ்லிம்களையும் குரைஷிகள் பலமாக தாக்கினார்கள் .
நபியவர்களை 7 அன்சாரித்தோழர்களும் 2 முஹாஜிர்த் தோழர்களும் (தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் மற்றும் ஸஅது இப்னு அபீவக்காஸ் ) இருந்தனர். ஏழு அன்சாரித்தோழர்களும் ஒருவர் பின் ஒருவராக போரிட்டு ஷஹிதாக்கப்பட்டனர்.
ஏழு அன்சாரித் தோழர்களில் இறுதியாக போரிட்டவர் உமாரா இப்னு யஜீத் (ரலி) இவர் யுத்தத்தில் கடுமையாக படுகாயம் அடைந்து கீழே விழுந்தார் . சிறிது நேரத்தில் அங்கு வந்து சேர்ந்த சில முஸ்லீம் வீரர்கள் உமாராவை எதிரிகளிடமிருந்துக் காப்பாற்றினர்கள் .ஆனாலும் அந்த அன்சாரித் தோழர் உமாரா நபியவர்களின் பாதத்தை தன் தலைக்கு தலையணையாக்கிக் கொண்டு சற்று நேரத்தில் அவர் உயிர் பிரிந்தது .அவரது கன்னம் நபியவர்களின் பாதத்தின் மீது இருந்தது.
குறைஷிகள் உடனடியாக நபியவர்கள் மீது தாக்குதல் நடத்தினார்கள் .
உத்பா இப்னு அபீ வக்காஸ் என்பவன் நபியவர்களை நோக்கி கல் எறிந்தான். இதனால் நபியவர்கள் கீழே விழுந்து விட்டார்கள் . வலது கீழ் முன் பல் தேசமடைந்து . கீழ் உதடும் காயம் அடைந்தது.
அப்துல்லா இப்னு ஷிஹாப் ஜுஹ்ரி என்பவன் நபியவர்களின் முகத்தைக் காயப்படுத்தினான். இதனால் இரத்தம் பீறிட்டது.
அப்துல்லாஹ் இப்னு கமிஆ என்பவன் நபியவர்களின் புஜத்தின் மீது வாளால் ஓட்டி வெட்டினான். நபியவர்கள் இரண்டு கவச ஆடைகள் அணிந்திருந்ததால் அந்த வெட்டுகள் நபி(ஸல்) அவர்களின் உடலில் பட வில்லை. ஆனாலும் தாக்கிய வேகத்தின் வலி ஒரு மாதம் வரை நீடித்திருந்தது பின்பு நபியவர்களின் முகத்தை நோக்கி வாளை வீசினான் .அதனால் நபியவர்கள் அணிந்திருந்த இரும்பு கவசத்தின் இரண்டு ஆணிகள் முகத்தில் குத்தின அப்போது அவன் " இதை வாங்கிக் கொள் நான்தான் இப்னு கமிஆ " என்று கொக்கரித்தான்.
அப்போது நபியவர்கள் தன் முகத்தில் இருந்து பீறிட்ட இரத்தத்தை துடைத்தவர்களாக "அக்மஅகல்லாஹு "
("அல்லாஹ் உன்னை இழிவுப்படுத்துவானாக " ) என்று கூறினார்கள்.
அல்லாஹ் நபி (ஸல்) அவர்களின் இந்தப் பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டான் .
இப்போருக்குப் பின் ஒருநாள் தன் ஆட்டு மந்தையைத் தேடி இப்னு கமிஆ புறப்பட்டான் .அவனது ஆட்டு மந்தை மலை உச்சின் மீது இருப்பது தெரியவே அவன் அங்கு சென்ற போது பெரிய கொம்புள்ள ஒரு முரட்டு ஆடு அவனை இடைவிடாமல் தாக்கி மலை உச்சியிலிருந்து கீழே தள்ளியது .பல் உடைபட்டு , முகம் சிதைந்து உடல் சிதறுண்டு செத்தான்.
நபியவர்களின் முன்னறிவிப்பு நடைமுறைப்படுத்தப்பட்டது

## மறைவான ஞானமும், தெளிவான முன்னறிவிப்புகளும் .14

(கரத்தால் நீண்டவர்)
தம் இறப்புக்கு முன்னால் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் "உம்மஹாதுல் முஃமினின் " அதாவது முஃமின்களின் அன்னையர்களிடம் , அதாவது தன் மனைவிமார்களிடம் .
" என் இறப்புக்குப் பின் உங்களில் கரத்தால் நீண்டவரே விரைந்து வந்து என்னைச் சந்திப்பார்" என்று முன்னறிவிப்பு செய்தார்கள் .
"நீண்ட கைகள்" என்றால் அளவால் நீண்ட கைகள் என்று அன்னையர்கள் தவறாக விளக்கிக் கொண்டு , தத்தமது கைகளை அளவுகோல் கொண்டு அளந்து பார்த்துக் கொண்டார்கள்.

அப்படி அளந்து பார்த்த போது, அன்னை சௌதா (ரலியல்லாஹு அன்ஹா) அவர்களின் கைகள்தான் நீண்டிருந்தது .இதனால் நபிகளாரின் முன்னறிவிப்பின்படி இவர்கள்தான் மனைவிமார்களில் முதன் முதலில் இறந்து, நபிகளாரை முதலில் சந்திப்பார்கள் என்று அன்னையர்கள் முடிவு எடுத்தனர்.
.... ஆனால் முதலில் இறந்தது கரத்தால் குறைந்த நீளமுடைய ஜைனப் (ரலியல்லாஹூ அன்ஹா) அவர்கள் தான் .கரத்தால் நீண்டவர் என்றால் என்ன பொருள்.? பிறருக்கு வாரி வாரி கணக்கு வழக்குப் பாராமல் வழங்கியதால் நீண்ட கரத்தைப் பெற்றவர் என்று பொருள் என்பதனை அப்போதுதான் எல்லோருமே விளங்கிக் கொண்டனர்.
அன்னை ஜைனப் (ரலி) அவர்கள் கால்நடைகளின் தோல்களை தம் கைகள் சுத்தம் செய்து அதனை பதனிடுவார் இதற்குக் கிடைக்கும் கிடைக்கும் கூலியை இறை உவப்பை நாடி ஏழை எளியோர்களுக்கு வழங்குவார் . ஏழை எளியோரை தேடித் தேடி அவர்களுக்கு வேண்டிய உதவி களை செய்து கொண்டே இருப்பார்கள் .
நபிகளாரின் முன்னறிவிப்பு துள்ளியமாக நடைபெற்றது

மறைவான ஞானமும் தெளிவான முன்னறிப்புகளும்.15
(உஹதே... அசையாமல் இரு..)
உஹது மலை மதீனாவில் இருந்து 3 மைல் தொலைவில் உள்ளது
அனஸ் (ரலி) அறிவிற்க்கிறார்கள் :
ஒரு முறை நபி (ஸல்) அவர்களும், அபூபக்கர் சித்தீக் (ரலி) , உமர் (ரலி) உஸ்மான் (ரலி) ஆகியோரும் உஹது மலை மீது ஏறினார்கள்.
அப்போது உஹது மலை குலுங்கி அசைந்தது.
நபி (ஸல்) அவர்கள் " உஹதே..! அசையாமல் இரு... உன் மீது ஓர் இறைத்தூதரும் (நானும்) , ஒரு சித்தீக்கும் (உண்மைப்படுத்துவோரும்),
இரண்டு ஷஹீதுகளும் (உயிர் தியாகிகளும் ) உள்ளனர் . எனவே
உஹதே ... குலுங்கி அசையாதே "
மலை அசையாமல் நின்றது.
மேற்கூறிய நபிமொழியில் இரண்டு ஷஹீதுகள் என்று உமர் (ரலி) அவர்களையும், உஸ்மான் (ரலி) இவ்விரும் ஷஹீதாக்கப்படுவார்கள் என்று பல ஆண்டுகளுக்கு முன்பே
நபி (ஸல்) அவர்கள் முன்னறிவிப்பு செய்தார்கள்
அதே சம்பவங்கள்தான் நடந்தேறியது
**Rahmath Rajakumaran**
நபியவர்கள் வயிற்றில் கல்லைக் கட்டி பசியுடனும், நெருக்கடியுடனும் இருந்த பொழுது. ஜிப்ரயீல் (அலை) அவர்கள் வந்து , "நபியே... சரி..ன்னு சொல்லுங்கள் இந்த உஹது மலையை தங்களுக்கு தங்கமாக மாற்றப்படுமே ... என்றார்கள்
நபியவர்கள் அதை விரும்பவில்லை ஆனால் "அந்தச் சொல் " உஹது மலையை தங்கமாக மாற்றி விட்டது.

ஒப்பிட்டு இலக்கியங்கள். 20-12-2017



திருக்குர்ஆனின் இலக்கிய நயமும் செந்தமிழின் இலக்கிய நயத்தோடு ஒப்பிட்டு ஓர் ஆய்வு ..
உங்களுடன் ....
குர்ஆனும் விஞ்ஞானமும் பற்றி பேசி இருக்கிறேன் . அதிலும் அதி நவீன விஞ்ஞான சற்று ஆழமாக பேசி இருக்கிறேன் . இன்னும் பேச ஆர்வமாய் இருக்கிறேன்.
குர்ஆனும் வரலாறும் பேசி இருக்கிறேன் .

குர்ஆனும் நபி மொழியும் பேசி இருக்கிறேன் .
அண்ணலாரும் அறிவியலும் பேசி இருக்கிறேன்
குர்ஆனும் அதன் ரகசியங்களையும் வெளிப்படுத்தி இருக்கிறேன்.
இசையைப் பற்றியும் அதன் வீச்சைப் பற்றியும் தொடராகப் பேசி இருக்கிறேன்
உடல் உறுப்புகளைப் பற்றியும் அதன் ரகசியங்களைப் பற்றியும் தொடராக பேசி இருக்கிறேன் .
அபொருளின் ஆச்சரியத் தொடரையும்
சூபியாக்களின் வாழ்வியல் தொடரையும் பேசி இருக்கிறேன் .
இப்படியெல்லாம் திருக்குர்ஆனை மையப்படுத்தி என் சிறு புத்திக்கு தென்பட்ட விஷயங்களை உங்களிடம் சொல்லி இன்புற்றிருக்கிறேன் . நவீன கருத்துடையவர்களால் விமர்ச்சிக்கமும் பட்டுள்ளேன் .அதை அப்போதே மறந்தும் விட்டேன் .
இப்போது அந்த வரிசையில் திருக்குர்ஆன் இலக்கிய நயத்தோடு செந்தமிழின் இலக்கிய நயத்தை ஒப்பிட்டு ஓர் ஆய்வு .
இன்ஷா அல்லாஹ் நாளை முதல் தொடர் ஆரம்பம் .

திருக்குர்ஆனும் செந்தமிழின் இலக்கியங்களும் .
(நீர் சொல்லும் நீதிகள்)



உயிர்கள் வாழ்வதற்கு நீர் அவசியம். மனிதவாழ்வு சிறக்க நீதி அவசியம்.
நீர் இருப்பதனால்தான் உயிர்கள் இருக்கின்றன . எனவேதான் பூமி என்கிற இந்தக் கிரகத்தை "உயிர்க் கோளம்" என்றழைக்கிறது விஞ்ஞானம்.
நீர் ஒரு காலத்தில் எளிதாக கிடைத்த அமிர்தமாக இருந்தது. புத்தாயிரம் ஆண்டில் நீருக்கும் விலை .
இலவச குடிக்க கிடைத்த நீர் பாட்டிலில் ஒருவர் பருகும் போது தன்மானம் இழந்து தாகம் தீர்க்க கேட்க முடியாத சந்தைப் பொருளாகி விட்டது நீர்.
நீர் உயிர்கள் வாழ மட்டும் உதவ இல்லை. நீதியோடும் , நேர்மையோடும் வாழ உதவுகிறது .
நீரைக் கொண்டு நமது சான்றோர்கள் மனித உயிரைக் காக்கும் நீதிகளை நிறையவே சொல்லி இருக்கிறார்கள். அதையெல்லாம் உற்று நோக்கி சிலவற்றை எடுத்து குர்ஆனில் இறைவன் நீரைப் பற்றி கூறும் உவமானத்தை இலக்கிய நயத்தோடும் அறிவியல் தனத்தோடும் ஒப்பிட்டுப் பார்க்கிறேன் .
ஆய்வு ஆரம்பம்.
நீர் மேல் எழுதப்படும் எழுத்து ஒரு நொடி கூட நில்லாது. ஆனால் கல்லின் மீது செதுக்கப்படும் எழுத்து காலத்தால் அழியாது.
நாம் உதவியை யாருக்கு வேண்டுமானாலும் செய்யலாம் .ஆனால் தக்கவருக்குச் செய்யும் உதவி கல்மேல் செதுக்கப்பட்ட எழுத்து போல் என்றும் இருக்கும். நீரின் மீது எழுதப்பட்ட எழுத்து எப்படி உடனே மறைந்து போகுமோ அதைப்போல் தீயவருக்கு செய்யும் உதவி ஒரு பயனும் இல்லாமல் மறைந்து போகும் என்பதாக
"நல்லார் ஒருவருக்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப் போல் காணுமே - அல்லாத ,
ஈரமில்லா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்
நீர் மேல் எழுததுக்கு நேர் "
- மூதுரை - ஔவையார்
குர்ஆனில் அல்லாஹ் , . கடல் மட்டத்திலிருந்து மிக உயரத்திலுள்ள பூமியில் அமைந்திருக்கும் ஒரு தோட்டத்தைப் போன்று, அத்தோட்டத்தில் உற்பத்தியாகும் கனிகளும், பயன்களும் உயர்தரமானவையாக இருக்கும். காரணம் எப்போதும் அவற்றில் ஈரக்காற்றும், பனித்துளிகளும் பட்டுச் செழிப்பாக உண்டாவதே ஆகும்.

அதில் பெருமழை பொழிகிறது அதனால் அத் தோட்டமானது இரட்டிப்பு மடங்கு பலனைக் கொடுக்கிறது. அதில் பெருமழை பெய்யாவிடினும் உயரத்தில் இருப்பதால், பனித்துளியும் , ஈரக்காற்றும் சதா பட்டுக் கொண்டே இருக்கும்.. இதனால் அது பலன் கொடுத்தத் தவறுவதே இல்லை.

"எவர்கள் தங்களுடைய பொருளை அல்லாஹ்வுடைய திருப் பொருத்தத்தை நாடியும் தங்களுடைய உள்ளங்களில் இறை நம்பிக்கையை உறுதிப்படுத்துவதற்காகவும் செலவு செய்கிறார்களோ அவர்களுடைய தர்மத்திற்கு உதாரணம் உயர்ந்த பூமியாகிய மலை மீதுள்ள ஒரு தோட்டத்தை ஒத்திருக்கின்றது. அதில் ஒரு பெருமழை பெய்தால், இரு மடங்கு பலனைத் தருகின்றது. பெரும் மழை பெய்யாவிட்டாலும் சிறு தூறலே அதற்குப் போதுமானது அன்றி அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை உற்று நோக்கியவானாக இருக்கின்றான். குர்ஆன் (2 : 265 )

மழை அதிகமாகவோ , குறைவாகவோ இருப்பினும் பனித்துளி மட்டும் பெய்து கொண்டிருந்த போதிலும் பூமியிலிருந்து மிக உயரத்தில் இருப்பதால், அத்தோட்டமானது பலன் கொடுத்துக் கொண்டே இருக்கும் .அது போல உண்மை விசுவாசியானவன் அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்வதில் கூடுதல், குறைவாக இருந்தாலும் "இறைவன் ஒருவனுக்காக "

என்ற தூய்மையான எண்ணமிருக்கும்

வரையில் நிச்சயமாக அந்த விசுவாசிபலன் பெற்றே தீருவான். எந்த எண்ணத்துடன் நீங்கள் செலவு செய்கின்றீர்கள் என்பதை அல்லாஹ் உற்று நோக்கியவானாக இருக்கின்றான்.

ஔவையார் தர்மம் பெறுவனின் நிலை குறித்து பேசினார்.

ஆனால் இறைவன் குர்ஆனில் தர்மம் செய்பவரின் நிலை குறித்து பேசியுள்ளான்

திருகுர்ஆனும் , தமிழ் இலக்கியங்களும் -

(நீர் சொல்லும் நீதிகள்)



ஒரு பெரிய கடலின் நீரை ஒருபடியை எவ்வளவு ஆழத்திற்கு அமிழ்த்தி முகத்தாலும் ஒரு படி நீர்தான் முகக்க முடியும்.

அது போல. . மனிதன் என்னதான் ஆசைப்பட்டாலும், திட்டமிட்டாலும் அவனுக்கு கிடைக்கும் செல்வம்தான் கிடைக்கும் .அதுபோல ஒரு பெண்ணுக்கு அமையும் கணவனும் அவள்

விதிப்படிதான் அடைவான்.

"ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல் நீர்
நாழி முகவாது நானாழி - தோழி
நிதியும் கணவனும் நேர்படினும் தம்தம்
விதியின் பயனே பயன்
மூதுரை - ஔவையார்

இதையே குர்ஆனில் ரொம்ப அழகாக நீரை ஒப்புமை செய்கிறான் .

மழை பொழிகிறது , ஓடைகளில் வெள்ளம் கரை புரண்டு ஓடுகிறது ஓடைகளின் கொள்ளளவைப் பொறுத்து அவற்றில் தண்ணீர் ஓடும்.

புது வெள்ளம் பாயும் போது, அதில் நீர்க்குமிழிகளும், நுரைகளும் ததும்புவது உண்டு. இந் நுரைகள் கரை ஒதுங்கி ஆவியாக மாறி காணாமல் போய்விடும் .

நீர் மட்டுமே ஓடையில் நிற்கும்.

அது மக்களுக்குப் பயன்படும் இவ்வாறுதான் சத்தியம் என்பது. அல்லது வான் மறை குர்ஆன் என்பது மனிதர்களின் மனங்களில் நதி நீராகப் பெருக்கெடுக்கும் அவரவர் மனங்களின் நிலையைப் பொறுத்து அதிகமாகவோ, குறைவாகவோ சத்தியம் இடம் பிடிக்கும்.

அதில் வரும் சந்தேகமும். குழப்பங்களும் நுரையைப் போன்று காணாமல் போய்விடும் இதுதான் அச்சத்தியத்தின் நிலையும் அது அழிந்து போகும். சத்தியம் மட்டுமே நிலையாகப் பயனளிக்கும்.

